இது அற்புதமான தெய்விக வாழ்வு ஒன்றை விளக்கும் அருமையான நூல்! பத்தொன்பதாம் நூற்ருண்டில் நம்மிடையே வாழ்ந்த அவதார புருஷர் ஒருவரின் வாழ்வை விளக்கும் அரிய நூல்!

கடவுள் என்பவர் கண்ணுக்கு எட்டாத தொலைவிலமர்ந்து உலகை ஆள்பவர் என்றும், சமயம் என்பது குறிப்பிட்ட ஒரு சிலருக்குத் தான் என்றும் பலவிதமான கொள்கைகள் தோன்றி பாரதத்தை உருக்குலைத்த வேளையில், அனைவரும் இறைவனைக் காணலாம்; அவருடன் பேசலாம் என்றும், சமயம் என்பது ஏழை, பணக்காரர்; பண்டிதர், பாமரர் என்ற பாகுபா டின்றி அனைவரும் பின்பற்றக் கூடிய ஒன்று என்பதையும் தெள்ளத்தெளிவாக உலகுக்குக் காட்டிய வாழ்வு ஒன்றே இந்நூலில் விரிகிறது!

எந்த மனிதரால் உருவாக்கப்பட்ட நரேந்திரர் என்னும் இளைஞர், இந்து சமயத்தின் பெருமை யை உலகெலாம் பறைசாற்றி, இன்று நாடு போற்றும் விவேகானந்தராக மலர்ந்துள்ளாரோ, அந்த மனிதரின் வரலாற்றை விரிவாகக் கூறு கிறது இந்நூல்!...

# பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்









ஸ்ரீராமகிருஷ்ண மடம்
16, ஸ்ரீராமகிருஷ்ண மடம் ரோடு;
மயிலாப்பூர், சென்னை-600 004.

26-5

# முன்னுரை

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த இணையற்ற தெய்விக புருஷர் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் புனித மான வாழ்க்கை வரலாற்றைத் தமிழன்பர்களுக்கு அளிப்பதில் பெரு மகிழ்வு அடைகிறோம்.

முதன் முதலாக ஸ்ரீராமகிருஷ்ணரின் வரலாறு வங்காள மொழியில் 'ஸ்ரீ ஸ்ரீ ராமகிருஷ்ண லீலா பிரசங்கம்' என்ற பெயரில் 1911-ஆம் ஆண்டில் வெளிவந்தது. அதனை எழுதியவர் ஸ்ரீராமகிருஷ்ணரின் நேர் சீடரான ஸ்ரீமத் சுவாமி சாரதானந்தஜி மஹராஜ் ஆவார். அதனைத் தழுவி ஆங்கிலத்தில் 'Life of Sri Ramakrishna' என்ற நூல் ஒன்றை காந்தி அடிகளின் முன்னுரையுடன் கல்கத்தா விலுள்ள அத்வைத ஆசிரமம் 1924-ஆம் ஆண்டு வெளி யிட்டது.

தமிழில் முதன் முதலாக 'ஸ்ரீராமகிருஷ்ண சரிதம்' என்னும் சிறிய நூல் ஒன்று இம் மடத்திலிருந்து 1929-ஆம் ஆண்டு வெளிவந்தது. அதனைத் தொடர்ந்து 1930-ஆம் ஆண்டு 'ஸ்ரீராமகிருஷ்ண தேவரின் திவ்விய சரிதம்' என்னும் நூல் வெளிவந்தது. அத்வைத ஆசிரமத்தினரால் வெளி யிடப்பட்ட ஆங்கில நூலின் தமிழாக்கமே இந்நூல். ஸ்ரீமத் பரமாத்மானந்த சுவாமிகளால் மொழி பெயர்க்கப்பட்ட இந்நூல் 968 பக்கங்கள் கொண்டதாகவும் பகவான் ஸ்ரீராம கிருஷ்ணரின் வரலாற்றை முழுமையாகக் கூறுவதாகவும் அமைந்தது. பின்னர் 1958-ஆம் ஆண்டு 'ஸ்ரீராமகிருஷ்ண தேவரின் திவ்விய சரிதப் பாடல்' என்னும் நூல் வெளி யிடப்பட்டது. கவிதை நடையில் அமைந்திருந்த இந்நூல் 520 பக்கங்கள் கொண்டது.

அடுத்தபடியாக 'ஸ்ரீராமகிருஷ்ணரும் அவருடைய சீடர் களும்' என்ற ஒரு நூல் 1969-ம் ஆண்டு வெளியானது. 480 பக்கங்கள் கொண்ட இந் நூல் 'கிறிஸ்டபர் ஈஷர் வுட்' எழுதிய 'Ramakrishna and his Disciples' என்ற ஆங்கிலப் புத்தகத்தைத் தழுவி சுவாமி பரமாத்மானந்தரால் எழுதப் பட்டது.

மிக ஆழ்ந்த நுட்பமான சமயத்தத்துவமும், அந்தத் தத்துவத்தை அன்றாட நடைமுறை வாழ்வில் வாழ்ந்ததுமே ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கை. அந்த வாழ்க்கையை எல்லோரும் எளிமையாகப் புரிந்து கொள்ளும் வகையில் மிகப் பெரியதாகவும் மிகச் சுருக்கமாகவும் அல்லாமல் அவர்

வாழ்வைப் பற்றிய எல்லாச் செய்திகளும் அமையும்படிப் போதிய அளவில் எழுதித் தமிழ் மக்களுக்கு அளிக்க வேண்டுமென்பது சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் தலைவர் தவத்திரு. சுவாமி தபஸ்யானந்தஜி மகராஜ் அவர்களின் பேரார்வம். அதன் விளைவாக இந்நூல் உருவாகியது. இதுவும் அத்வைத ஆசிரமத்தால் வெளியிடப்பட்ட ஆங்கில நூலின் மொழி பெயர்ப்பு. இந்த நூலின் பெரும்பாலான பகுதி முழு மொழிபெயர்ப்பாகவும் பல இடங்களில் சுருக்கமாகவும் சிற்சில இடங்களில் செய்தியின் தெளிவிற்காக சுவாமி சாரதானந்தர் எழுதிய ஒப்பற்ற வரலாற்று நூலின் 'Sri Ramakrishna The Great Master' கருத்துக்கள் சேர்க்கப்பட்டும் அமைந்து உள்ளது. மேலும், அவரது வாழ்வுடன் தொடர்புடைய படங்களும் பதினாறு பக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

ஏற்கெனவே மடத்தின் மூலம் வெளியிடப்பட்டுள்ள 'ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுத மொழிகள்' என்னும் நூலில், குறிப்பாக அதன் மூன்றும் பகுதியில் ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கையின் பல நிகழ்ச்சிகள் அவர் அக்கால வங்காளப் பெருமக்கள் பலரைச் சந்தித்த நிகழ்ச்சியும் தமது இறுதி நாட்களில் சியாம்புகூர் என்னும் இடத்திலும் காசிப்பூர் என்னும் இடத்திலும் வாழ்ந்த வாழ்க்கையும் அவர் மறைவிற்குப் பின் நடந்த நிகழ்ச்சிகளும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. எனவே இதில் அந்த நிகழ்ச்சிகள் மிகச் சுருக்கமாக் எழுதப்பட்டு உள்ளது.

இந்த நூல் 'அமுதமொழிகளின்' இணை நூலாகும் (Companion Volume). வாழ்க்கை வரலாற்றோடு உபதேசங்களைச் சேர்த்துப் படிக்கும்போது வரலாறு தெளிவுபடும்; உபதேசங்கள் மிகுந்த ஒளிபெறும். அந்தவகையில் இந்த நூல் மிகுந்த பயன்தரும் நூலாகும். மகாத்மா காந்தி தன் முன்னுரையில் கூறியுள்ளது போல் இந்த நூலைப் படிப்பவர்களுக்குக் 'கடவுள் மட்டுமே உண்மை; மற்றவையெல்லாம் பொய்' என்ற நம்பிக்கையும், கடவுளை நேருக்கு நேர் காணவேண்டும் என்றும் ஆர்வமும் தோன்றாமல் போகாது.

இந்த நூலை எளிய இனிய தமிழில் மொழி பெயர்த்துத் தந்தவர் பேராசிரியர் திரு. சுப்பிரமணியம், எம்.ஏ. அவர்கள். அவருக்கும் இப்பணியில் ஒத்துழைத்த மற்றவர்களுக்கும் இறைவன் திருவருள் புரிவாராக!

அன்பர்கள் இந்த நூலைப் படித்துப் பயன் பெறுவார்களாக!

ஸ்ரீசாரதாதேவி ஜயந்தி, பதிப்பாசிரியர்
15-12-1984.

# பொருளடக்கம்

## இந்நூலின் முதல் நூலுக்கு
## மகாத்மா காந்தி அளித்த முகவுரை

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரின் வாழ்க்கை வரலாறு, பரம் பொருளை நேராகக் காண்பதற்குரிய பயிற்சியின் வரலாறு. அவருடைய வாழ்க்கை நம்மைக் கடவுளை நேருக்கு நேராகக் காணச் செய்கிறது. அவருடைய வாழ்க்கை வரலாற்றைப் படிக்கும் எவருக்கும் கடவுள் மட்டுமே; உண்மை மற்றவையெல்லாம் பொய் என்னும் நம்பிக்கை ஏற்படாமல் போகாது. அவருடைய உபதேசங்கள் வெறும் சாஸ்திரங்களைப் படித்தவர்களின் உபதேசங்கள் அல்ல. அவை அனுபவம் என்னும் புத்தகத்தின் ஏடுகள்! அவருடைய சொந்த வாழ்க்கையின் அனுபவங்கள்! எனவே, அவைகள் படிப்பவரின் மனத்தில் அழிக்க முடியாத முத்திரையைப் பதிக்கின்றன. எதையும் சந்தேகக் கண்கொண்டு பார்க்கும் இந்தக் காலத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர், ஒளிமயமான உயிரோட்டம் ததும்பும் கடவுள் நம்பிக்கைக்கு உதாரணமாக விளங்குகிறார். அவர் இல்லையென்றால் ஆயிரக்கணக்கான ஆண்களும், பெண்களும் ஆன்மிக ஒளியின்றி வேதனையில் வாடிக் கிடப்பார்கள். ஸ்ரீராமகிருஷ்ணருடைய வாழ்க்கை அகிம்சை வாழ்வின் சிறந்த எடுத்துக் காட்டாகும். இந்த நூலில் கூறப்படும் அவருடைய வாழ்க்கையைப் படிக்கும் அனைவருக்கும் அவருடைய தெய்விக அன்பு உற்சாகத்தைத் தருவதாக!

சபர்மதி,
நவம்பர் 12-1924.

மோ. க. காந்தி

ஓம் ஸ்தாபகாய ச தர்மஸ்ய ஸர்வதர்மஸ்வரூபிணே |
அவதார வரிஷ்டாய ராமக்ருஷ்ணாய தே நம: ||

அறந்தனை நிறுவினை அனைத்தறன் வடிவினை
சிறந்தனை பிறந்தபல் பிறவியுள் இறைவ
இராமகிருஷ்ண நின் இணைப்பதம் அடியேன்
பராவுவன் யாண்டும் படிமிசைப் பரிந்தே.

பவதாரிணி (பக்கத் தோற்றம்)



அன்னை பவதாரிணி





மன ஏக்கத்தால தன் தலையையே வெட்ட
உபயோகித்த காளியின் வாள்



சுவாமி அத்வைதானந்தர்



சுவாமி விஞ்ஞானானந்தர்



சுவாமி அபேதானந்தர்



சுவாமி அத்புதானந்தர்



ாஜிதளா: இஸ்லாம் சாதனை புரிந்த இடம்



வில்வமரம்
(தந்திர சாதனைகள் புரிந்த இடம்)

தன்குடீர் (மூன்று நாட்கள் நிர்விகல்ப
சமாதியில் ஆழ்ந்திருந்த இடம்)





சுவாமி ராமகிருஷ்ணானந்தர்



சுவாமி அகண்டானந்தர்



சுவாமி துரியானந்தர்



சுவாமி நிரஞ்ஜனானந்தர்



ராமகிருஷ்ணரின் கோயில் (கமார்புகூர்)



ராமசந்திர தத்தா



கிரீஷ் சந்திர கோஷ்



பலராம் போஸ்



மகேந்திரநாத் குப்தா



சிவநாத சாஸ்திரி



நாகமகாசயர்



சுரேந்திரநாத் மித்ரா



சம்பு மல்லிக்

# 1. பெற்ருேரும் பிறப்பிடமும்

வங்காள மாநிலத்தில் கல்கத்தாவிலிருந்து சுமார் எழுபது மைல் தொலேவில், ஹூக்ளி மாவட்டத்தில் தேரேய்பூர் என்னும் கிராமம் இருக்கிறது. இன்றைக்கு இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு அந்தத் தேரேய்பூரில் பக்திமயமான ஓர் அந்தணர் குடும்பம், இந்து சமயத்தில் ஒரு வைதிகக் குடும்பம் எப்படி வாழவேண்டுமென்று சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறதோ, அப்படி பூஜை ஆசாரம் அனுஷ்டானங்களோடு, வாழ்ந்து வந்தது. புகழ்பெற்ற அந்தக் குடும்பத்திற்கு ஐம்பது ஏக்கர் வளமான நிலம் இருந்தது. இன்னும் பல வழிகளிலும் வருவாய் கிடைத்துவந்தது. வைணவர்களான இவர்களின் குலதெய்வம் இரகுவீர் என்று அழைக்கப்பட்ட ஸ்ரீராமரே, என்ருலும் சிவபெருமானேயும் இந்தக் குடும்பம் மனமுருகி வணங்கியது. பகவானிடம் மிகுந்த பக்தி கொண்டது போலவே ஏழைகளிடம் இரக்கம் கொண்டு உதவுவதிலும் இந்தக் குடும்பம் புகழ்பெற்றிருந்தது. பல தலேமுறைகளாகத் தேரேய்பூரில் புகழோடும் செழிப்போடும் வாழ்ந்துவந்த இந்தக் குடும்பத்தில் நம்முடைய வரலாறு துவங்கும் காலத்தில் மாணிக்ராம் சட்டர்ஜி என்பவர் தலேவராக இருந்தார்.

அவருக்கு 1775-ஆம் ஆண்டு ஓர் ஆண்மகவு பிறந்தது. அதற்குச் சுதிராம் என்று பெயரிட்டார். அந்தக் குழந்தை சுதிராம்தான், பின்னுளில் பெரும் மகானுகத் திகழ்ந்த பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரை மகனுகப் பெறும் பேறு பெற்றது. மாணிக்ராமிற்குச் சுதிராமையடுத்து நிதிராம், கனேராம் என்று இரண்டு பிள்ளேகளும் ராம்சிலா என்ற ஒரு பெண்ணும் பிறந்தனர்.

சுதிராம் இளமையிலிருந்தே மற்ற எல்லாரையும்விட மாறுபட்டவராக விளங்கினுர். இரகுவீரிடத்தில் அவருக்கு இருந்த பக்தி ஈடு இணேயற்றதாக இருந்தது. நாள்தோறும் தானே வழிபாட்டினேச் செய்வார். எவ்வளவு நேரமானுலும் வழிபாடு முடிந்த பிறகே நீர் கூட அருந்துவார். சிறந்த அந்தணர் ஒருவருக்கு வேண்டிய உண்மை, திருப்தி, தியாகம் போன்ற நல்லியல்புகள் அவரிடம் நிறைந்திருந்தன. இயல்பாகவே அவருக்கு உலகப் பொருள்களிலோ, இன்பங்களிலோ

ஆசைகள் இல்லை. ஆனால் தவமும் ஒழுக்கமும் எங்கும் நிறைந் திருக்க வேண்டும் என்னும் ஆவல் இருந்தது. தரு மத்தையும் ஒழுக்கத்தையும் மீறி நடப்பவர்களிடம், அவர்கள் அந்தணர்களாகவே இருந்தாலும் வெறுப்பும் வேதனையும் கொள்வார். அத்தகையவர்களோடு பேச்சு வார்த்தைகூட வைத்துக் கொள்ள மாட்டார். இப்படி சாஸ் திர தர்மங்களையும் சத்தியத்தையும் உயிருக்கும் மேலாகப் போற்றிய அந்தணர்களாலேயே, 'அந்தணர்களுக்கெல்லாம் மேலான அந்தணர்' என்று புகழும்படி வாழ்ந்தார்.

அந்தக் காலத்து அந்தண வழக்கப்படி மிகவும் இளமை யிலேயே சுதிராமிற்குத் திருமணம் நடந்தது. ஆனால் மண மகள் சிறு வயதிலேயே இறந்துபோனாள். அதன் பிறகு தம்முடைய இருபத்தைந்தாவது வயதில் 1799-ஆம் ஆண்டு சந்திரமணி தேவி எனும் பெண்ணை மணந்தார். அவளை, சந்திரா என்று சுருக்கமாக அனைவரும் அழைத்தனர். சந்திராதேவியும் மற்ற மனிதர்களிலிருந்து மாறுபட்டு மிகச் சிறந்தவராக இருந்த தம் கணவருக்கு ஏற்ற மனைவியாகத் திகழ்ந்தார். குழந்தைபோல் கள்ளங்கபடமற்ற உள்ளமும் பிறருடைய மகிழ்ச்சிக்காக பெரும் துன்பங்களையும் ஏற்கும் இயல்பும் கருணை நெஞ்சமும் அவருக்கு இருந்தது.

இவர்களுக்கு முதன் முதலில் 1805-ஆம் ஆண்டு இராம் குமார் என்னும் மகன் பிறந்தான். அதன் பிறகு ஐந்து ஆண்டுகள் கழித்து காத்யாயனி என்ற மகள் பிறந்தாள். அதன் பிறகு பதினாறு ஆண்டுகள் கழித்து இராமேஸ்வர் என்ற மற்றொரு மகனும் பிறந்தார்.

மாணிக்ராம் காலமானதும் சுதிராம் குடும்பப் பொறுப்பை ஏற்றார். மாசில்லாத ஒழுக்கத்தாலும், சளைக்காத உழைப்பாலும் குடும்பத்திற்கு மேலும் சொத்துக்கள் தேடி னார். ஏழை எளியவர்களிடம் கொண்ட அன்பாலும், பெரிய வர்களிடம் காட்டிய மரியாதையாலும் ஊர் மக்கள் புகழும் படி வாழ்ந்தார். ஆண்டுகள் சில கழிந்தன. அவர் கடைப் பிடித்துவந்த தருமம், சத்தியம் இவைகளைச் சோதனை செய் வதுபோல் வந்தது ஒரு நிகழ்ச்சி.

சுதிராம் பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அப் போது இந்தியக் கிராமங்கள் ஜமீன்தார்களின் ஆளுகையில் இருந்தன. அவர்கள் ஆங்கிலேயருக்கு மொத்தமாக நில வரியைச் செலுத்திவிட்டு, கிராமங்களைத் தங்கள் ஆட்சிக்குள் வைத்துக் கொண்டார்கள். தேரேய்பூர் கிராமம் இராமா

ணந்தராய் என்னும் ஜமீன்தாரின் ஆளுகையில் இருந்தது. கொடுமைக்கும் கொடூரத்துக்கும் பெயர் பெற்ற அவரைக் கண்டு மக்கள் நடுங்கினர். அவருக்கு அடங்கா மலோ, அவருக்குக் கோபம் வரும்படியோ யாராவது ஏதா வது செய்துவிட்டால் அவர்கள் அழிய வேண்டியதுதான். வீடு, வாசலைப் பிடுங்கிக்கொண்டு ஊரைவிட்டே துரத்தி விடுவார்.

இத்தகைய இராமானந்தருக்குத் தேரேய்பூரில் வாழ்ந்து வந்த ஒருவன் ஆராயாமல் மிகுந்த கோபம் வரும்படிச் செய்துவிட்டான். எரிமலையானார் இராமானந் தர். அவனுக்குப் பல்வேறு துன்பங்களைக் கொடுத்து இறுதி யில் அவனுடைய வீட்டையும் நிலத்தையும் பிடுங்கிக் கொண்டு ஊரைவிட்டே துரத்திவிட எண்ணி நீதி மன்றத் தில் பொய்வழக்குத் தொடுத்தார். வழக்கில் அவருக்குச் சாதகமாகத் தீர்ப்பு கிடைக்க வேண்டுமென்றால் தேரேய் பூரில் நீதிமான் என்று போற்றப்படும் ஒருவருடைய சாட்சி அவருக்குத் தேவைப்பட்டது. அப்படிப்பட்டவர் யாரென்று சிந்தித்த இராமானந்தருக்குச் சுதிராமின் நினைவு வரவே, அவரை அழைத்துத் தமக்குச் சாதகமாகச் சாட்சி சொல் லும்படிக் கேட்டுக் கொண்டார். வாழ்நாள் முழுவதும் தர்மம், சத்யம், நீதி, நேர்மை என்று வாழ்ந்த சுதிராம், ஜமீன்தாரின் பேச்சுக்கு எதிராக நடந்தால் தமக்கு என்ன நேரும் என்பதைத் தெளிவாக அறிந்திருந்தும் பொய் சாட்சி சொல்ல மறுத்துவிட்டார். வெகுண்ட இராமானந் தர் அவருக்குப் பாடம் புகட்ட எண்ணினார்.

இராமானந்தர் சுதிராமிற்குப் பலவகையான தொல்லைகள் கொடுத்தார். இறுதியில் அவர்மீது பொய் வழக்குத் தொடுத்து அவருடைய வீடு, நிலம் முதலிய எல்லாச் சொத்துக்களையும் பறித்துக் கொண்டார். சுதிராமும், அவ ருடைய முன்னோர்களும் பரம்பரை பரம்பரை, தலைமுறை தலைமுறையாக வாழ்ந்துவந்த வீடும் நிலங்களும் பறிக்கப் பட்டன. ஐம்பது ஏக்கர் நிலத்தோடு அரசர்போல் வாழ்ந்த குடும்பம் ஆண்டியாகி நடுத் தெருவில் நின்றது. சுதிராமின் நிலையைக் கண்டு ஊரில் எல்லோரும் கண்ணீர் வடித்தனர். ஆனால் யாராலும் எந்தவித உதவியும் செய்ய முடியவில்லை. அளவிட முடியாத துன்பம் என்றாலும் சுதி ராம் நிதானத்தை இழக்கவில்லை. உலகப் பொருட்களைவிட உலகைப் படைத்த இறைவனிடம் அவர் கொண்டிருந்த அளவற்ற பக்தி இப்போது அவருக்கு உதவியது. தவிர்க்க

முடியாத இந்த விபரீதத்தைத் தலைவணங்கி ஏற்றுக் கொண்டார்.

அவருடைய இரண்டு தம்பிகளும் தங்களுடைய மாமனுர் வீடுகளில் தஞ்சம் புகுந்தார்கள். இதற்குள் சுதிராமிற்கு ஏற்பட்ட துன்பத்தை அவருடைய நெருங்கிய நண்பரான சுகலால் கோசுவாமி கேள்விப்பட்டார். ஓரளவு வசதியோடு வாழ்ந்த அவர் தம்முடைய ஊரான கமார்புகூரிலிருந்து ஓடோடி வந்தார். தம் ஊருக்கு வந்து குடியேறும்படி வேண்டினுர்.

இவ்வளவு காலம் தேரேய்பூரில் பெரும் செல்வச் செழிப்போடு வாழ்ந்த சுதிராமின் குடும்பம் அனுதைகள் போல் இரண்டு சின்னஞ்சிறு குழந்தைகளேயும் அழைத்துக் கொண்டு மூட்டை முடிச்சுக்களுடன் அந்தக் கிராமத்தை விட்டுப் புறப்பட்டது.

தேரேய்பூரிலிருந்து மூன்று மைல் தொலேவில் ஹூக்ளி, பாங்குரா, மேதினிபூர் என்ற மூன்று மாவட்டங்களும் சந்திக்கும் இடத்தில் கமார்புகூர் இருக்கிறது. இம் மூன்று கிராமங்களும் முக்கோண வடிவில் அமைந்துள்ளன. அவற்றில் பெரியதும், முக்கியமானதுமான ஊர் கமார்புகூர். கமார் என்பதற்கு வங்காள மொழியில் கொல்லர்கள் என்பது பொருள். புகூர் என்ருல் குளம். ஒரு பெரிய குளத்தைச் சுற்றிக் கொல்லர்கள் அதிகமாக வாழ்ந்ததால் அந்த ஊர் கொல்லர்களின் குளம் என்று பொருள்படும் கமார்புகூர் என்ற பெயரில் அழைக்கப்பட்டது.

இன்றைக்கு நூற்று அறுபத்தாறு ஆண்டுகளுக்கு முன் ஆங்கில ஆட்சியில் நகர்ப்புறங்களில் பெரிதும் மாறுதல் ஏற்பட்டது என்ருலும், கிராமங்கள் இயற்கைத் தாயின் இனிய கோயில்களாகவே விளங்கின. வங்காள கிராமங்கள் வளம் நிறைந்தவை. கமார்புகூரும் மிகுந்த வளத்தோடு விளங்கியது. எங்குப் பார்த்தாலும் பச்சைப் பசேலென்ற பயிர்களும், நீர் நிறைந்து, தாமரையோடும், அல்லியோடும் ஆறும் குளங்களும் காட்சியளித்தன. இந்தக் குளங்களில் மிகப் பெரியது ஹல்தார்புகூர் என்னும் குளம். தாமரை மலர்ந்து மலர்க்காடாக விளங்கிய இக்குளம் ஸ்ரீராமகிருஷ்ணர் மனத்தில் மிக ஆழமாகப் பதிந்து, பிற்காலத்தில் அவருடைய உபதேசங்களில் அடிக்கடி குறிப்பிடப்படும் பேறு பெற்றது.

கமார்புகூர், விவசாயம் கைத்தொழில் இரண்டிற்கும்

பெயர்பெற்றது. வங்காளத்திலேயே மிகவும் புகழ்பெற்ற 'ஜிலேபி' என்னும் இனிப்பிற்குக் கமார்புகூர் பெயர் பெற்று விளங்கியது. வங்காளத்தில் புகை குடிக்கப் பயன் படுத்தப்படும் ஹூக்கா அமைக்கப்படும் கருங்காலி மரக் குழல்கள் இங்குதான் மிகுதியாகச் செய்யப்பட்டன. கைத் தறி நெசவிற்கும் கமார்புகூர் பெயர் பெற்று விளங்கியது. கமார்புகூரில் நெய்யப்பட்ட ஆடைகள் கல்கத்தா கடை வீதிகளில் புகழோடு விலையாயின. ஆடை நெய்யும் தொழி லாளர்களும், நெய்த ஆடைகளை நாடெங்கும் கொண்டு சென்று விற்பனை செய்யும் வணிகர்களும் கமார்புகூரில் நிறைந்திருந்தனர். நெசவும் வணிகமும் பயிர்த் தொழி லும், சுறுசுறுப்பாக நடந்து கிராமம் எப்போதும் ஆர வாரம் நிறைந்ததாகவே இருந்தது.

வடநாட்டின் மிகப் பெரிய புண்ணியத்தலமான பூரி ஜகந்நாதர் ஆலயத்துக்குச் செல்லும் பாதை அந்த ஊரின் வழியாகச் சென்றது. அந்தப் பாதையில் யாத்ரீகர்களும் சாதுக்களும் எப்போதும் பயணம் செய்துகொண்டே இருப் பார்கள். இவர்கள் தங்கிச் செல்ல அந்தப் பாதையில் சத்திரமொன்றும் இருந்தது. தெய்விகத்திற்கும் கமார்புகூர் புகழ்பெற்றிருந்தது. ஆண்டு முழுவதும் ஒன்றையடுத்து ஒன்ருக அங்கிருந்த பல கோயில்களில் திருவிழாக்கள் நடந்தபடியே இருக்கும்.

வளமான இந்தக் கிராமத்தின் சிறப்பிற்கு அங்கு வாழ்ந்துவந்த செல்வந்தர்களும், மிகுந்த அறிவாளிகளு மான நிலச்சுவான்தார்கள் பெரிதும் காரணமாக இருந் தனர். இவர்கள் அருகில் உள்ள பெரிய நகரமான பர்த்துவான் நகர அரசகுருவின் மரபில் வந்தவர்கள். கமார்புகூரிலும், அதனையடுத்த கிராமங்களிலும் இருந்த வளமான நிலங்கள் இவர்களுக்குப் பர்த்துவான் அரசரால் தானமாகக் கொடுக்கப் பட்டிருந்தன. பெரிய மாளிகை களில் மிகுந்த செல்வத்துடனும் பக்தியுடனும் கமார் புகூரில் இவர்கள் வாழ்ந்து வந்தார்கள்.

இந்தக் கிராமத்தில்தான் சுதிராம் தம் நெருங்கிய நண்பர் சுகலால் கோசுவாமியின் ஆதரவில் குடியேறினர். சுகலால் தம் வீட்டோடு சேர்ந்திருந்த சில குடிசைகளையும், வீடுகளையும் 'இலட்சுமி ஜாலா' என்று அழைக்கப்பட்ட வளமான ஒரு ஏக்கர் நிலத்தையும் சுதிராமின் பெயருக்கு எழுதி வைத்தார்.

சுதிராம் கமார்புகூர் வந்தபோது அவருக்கு வயது நாற்பது இருக்கும். பெரிய வீட்டையும், சொத்துக் களையும் விட்டுப் பிறர் ஆதரவில் குடிசைக்குள் நுழைந்த போது சுதிராம் என்னவெல்லாம் நினைத்திருப்பார் என் பதை நாம் கற்பனை செய்ய முடியாது. உலகத்தின் கொடு மையைச் சிந்தித்திருக்கலாம். சொத்துக்களும் வீடும் பறிமுதலாகி அனாதையாக்கப்பட்ட தம் நிலையை நினைத் திருக்கலாம். நிலையில்லா உலகில் சொத்து சுகங்களும் நிலை யற்றவை; அவற்றை அனுபவிக்கும் மனிதர்களும் நிலை யில்லாதவர்கள்; உலகில் எதுவுமே நிலையானதில்லை என்ற சமயநூல் கூறும் உண்மைகள் எவ்வளவு சத்தியமானவை என்றும் நினைத்திருக்கலாம். இதோடு, தமக்கு நேர்ந்த இத்தனைக் கொடுமையிலும் தம்மைக் காப்பாற்றி வீடும் நில மும் தந்த கடவுளின் எல்லையற்ற கருணையையும் அவர் நினைத்து மகிழ்ந்திருக்கலாம். கடவுளிடம் அவர் கொண்ட நம்பிக்கை ஆயிரம் மடங்காகப் பெருகியது. வைராக்கியமும் விவேகமும் நிறைந்த அவர் மனிதர்களை நம்புவதை விட்டு, கடவுளை நம்பி, கடவுளுக்காகவே வாழத் துவங்கினார். எல்லாம் அவன் செயலே என்று உணர்ந்து வழிபாடு, ஜபம், தியானம் என்று கடவுளிடமே ஒன்றிப் போனார்.

இறைவன் மீது அவருக்கிருந்த நம்பிக்கை மேலும் சிறக்கும் வண்ணம் நிகழ்ச்சி ஒன்று இவ்வேளையில் நடைபெற் றது. பக்கத்து ஊர் ஒன்றிற்குச் சென்றுவிட்டு ஊர் திரும்பும் வழியில் இளைப்பாற, ஒரு மரத்தடியில் சற்றே படுத்தார் சுதிராம். பரந்த வயல்வெளியும் சுகமாகத் தழுவிச் சென்ற இளங்காற்றும் இதமாக இருந்ததால் கண்ணயர்ந்து விட்டார் அவர். அப்போது அவர் வழிபடுதெய்வமான ஸ்ரீராமர், ஒரு சிறுவனின் உருவில் தோன்றி ஒரு குறிப்பிட்ட இடத்தைச் சுட்டி தாம் அங்குக் கவனிப்பாரின்றிக் கிடப்பதாகவும் வீட்டிற்கு எடுத்துச் செல்லுமாறும் கூறினார். கனவென்று கூற முடியாத அக்கனவினின்று விழித்த சுதிராம் சுற்றுமுற்றும் நோக்கினார். என்ன ஆச்சரியம்! கனவில் இறைவன் காட்டிய இடம் போலவே ஓரிடம் தென்பட்டது. விரைந்து அங்கே சென்றபோது அழகிய சாளக்ராமம் ஒன்று அங்கு கிடப்ப தையும் ஒரு பாம்பு தனது படத்தை விரித்து அதற்கு நிழல் கொடுத்துக்கொண்டிருப்பதையும் கண்டார்.இவர் சென்றதும் அப்பாம்பு மறைந்து விட்டது. ஸ்ரீராமரின் கருணையை எண்ணி உள்ளம் நெகிழ்ந்த அவர் கண்ணில் நீர்மல்க அதனை எடுத்துக் கொண்டு வீடுவந்து சேர்ந்தார். அதிலுள்ள அடையாளங்களைச்

சோதித்த போது அது ஸ்ரீராம சாளக்ராமம் என்பதை உணர்ந்தார். அன்று முதல் அதுவும் அவரது தினசரி வழி பாட்டில் இடம்பெற்றது.

சுதிராமின் பக்தியை விளக்கும் மற்ருெரு நிகழ்ச்சி: சுமார் நாற்பது மைல் தொலேவிலிருக்கும் மேதினிபூர் என்ற ஊரிலுள்ள தமது உறவினர் ஒருவரைக் காணச் சென்ருர் சுதிராம். அதிகாலேயில் எழுந்து சுமார் பத்து மைல் சென்று விட்டார். அது வில்வ இலேகளே இல்லாத காலம்! ஆனல் வழியில் ஓரிடத்தில் மரம் ஒன்றில் வில்வ இலேகள் ஏராளமாக இருப்பதைக் கண்ணுற்ருர். அவரது மற்ற எல்லா எண்ணங் களும் மறைந்து சிவபெருமான் மட்டுமே நெஞ்சில் நிறைந்து நின்ருர். புதிய கூடை ஒன்றை வாங்கி அதில் முழுவதும் வில்வ இலேகளே நிரப்பினர்; திரும்பி நேராக வீட்டிற்கு வந்தார். குளித்து விட்டு வில்வ இலேகளால் சிவபெருமானே மனம் நிறைந்து வழிபட்டார். அப்போதுதான் தாம் சென்ற காரியம் நினேவிற்கு வந்தது. மீண்டும் மறுநாள் காலே அவ்வுறவினரைக் காணப் புறப்பட்டார்.

ஆரம்பத்தில் . கமார்புகூரில் சுதிராமின் வாழ்க்கை மிகுந்த துன்பத்தோடுதான் கழிந்தது. சில நாட்கள் உண்ப தற்கே ஒன்றும் இருக்காது. இதைக் கண்டு குழந்தை இயல்பு கொண்ட சந்திரா தேவி மிகுந்த வேதனேயும் பதற்றமும் அடைவார். சுதிராம் பொறுமையோடு துன்பத்தை ஏற்றுக் கொண்டு சந்திரா தேவிக்கு ஆறுதல் சொல்வார். பகவான் தங்களேப் பட்டினி நோன்பிருக்கச் சொல்வதாகக் கூறித் தேற்றுவார். கடவுள் சுதிராமுக்கு இத்தகைய துன்பங்களே நெடுநாட்கள் அளிக்கவில்லே. சுகலால் தந்த நிலம் அள விற்கும் அதிகமாக விளேயத் துவங்கியது. அந்த நெல் சுதிராம் குடும்பத்தின் உணவுத் தேவையை மட்டுமல்லாது உடை முதலிய மற்றத் தேவைகளேயும் நிறைவேற்றித் தங்களே நாடி வரும் ஏழைகளுக்கு உணவளிக்கவும் மிச்சமாகியது. அறு வடை முடிந்ததும் சுதிராம் கூலி ஏர்களே வைத்து நிலத்தை உழுவார். நடுவதற்கு நிலம் தயாரானதும் முதல் நாற்றைத் தம் கைகளால் இரகுவீரரின் பெயரை உரக்கச் சொல்லி நடுவார். பிறகு கூலி ஆட்கள் எல்லாவற்றையும் கவனித் துக் கொள்வார்கள்.

இப்படியே இரண்டு மூன்று ஆண்டுகள் கழிந்தன. கடவுளின் திருவடியில் எல்லாப் பொறுப்புகளேயும் விட்டு

வாழ்க்கையை நடத்தி வந்தார் சுதிராம். மனம் முழுவதையும் பகவானிடம் திருப்பி எந்த நேரமும் அவரையே நினைத்துத் தவ வாழ்வில் மூழ்கினர். நாள்தோறும் விடியற்காலையில் எழுந்து கொள்வார். பூஜைக்கான மலர் பறித்து வழி பாட்டில் அமர்வார். பக்தி மேலீட்டால் தம்மை மறந்து கண்கள் குளமாக இரகுவீரரை நினைத்து வழிபாட்டில் நெடுநேரம் செலவழிப்பார். இது போலவே மாலையிலும் பூஜையில் ஈடுபடுவார். ஆழ்ந்த உணர்வோடும், மன ஒருமைப்பாட்டோடும் காயத்திரி மந்திரத்தை ஜபம் செய்வார். அவர் மனம் எப்போதும் உலகை மறந்து மிக உயர்ந்த தெய்விக நிலையிலேயே இருக்கும். அதிகாலையில்அவர் வழிபாட்டிற்காகப் பூப்பறிக்கச் செல்லும்போது, அவரால் அன்றுடம் வழிபடப் பெறும் சீதளா தேவியே எட்டு வயதுக் குழந்தைபோல் வந்து அவருடன் பேசி, களித்து மகிழ்வதும் பூக்களைப் பறித்துக் கொடுப்பதும், அவர் பறிக்கக் கிளைகளை வளைத்துக் கொடுப்பதும் தினமும் நடக்கும் ஒரு நிகழ்ச்சியாகும்.

இத்தகைய தெய்விகக் காட்சிகளால் அவர் முகத்தில் அளவற்ற அமைதியும் ஆனந்தமும் குடி கொண்டன. சுதி ராமின் இத்தகைய தோற்றத்தையும் வாழ்க்கையையும் கண்ட கமார்புகூர் மக்கள் அவரைப் பெரிய மகானுகப் போற்றினர். அவர் தெரு வழியே நடந்து வருவதைக் கண்டால் வீட்டுத் திண்ணையில் அமர்ந்து பேசிக் கொண்டிருப்பவர்களும் கடைகளில் வியாபாரம் செய்து கொண்டிருப்பவர்களும் கூடத் தங்களுடைய வேலையையும் பேச்சையும் மறந்து எழுந்து நின்று வணக்கம் செய்வார்கள்; அவர் குளிப்பதற் காகக் குளத்தில் இறங்கினுல், குளித்துக் கரையேறும் வரை குளத்தில் இறங்காமல் பயபக்தியோடு கரையிலேயே நின்று கொண்டிருப்பார்கள்.

சுதிராம் ஊர் மக்களிடம் இத்தகைய மரியாதையைப் பெற்றதைப் போலவே சந்திரா தேவியும் தம்முடைய கருணைமயமான மனத்தாலும், தாயன்பாலும் தன்னுடைய அண்டைவீட்டாரின் மதிப்பையும் அன்பையும் பெற்றிருந் தார். அந்தக் கிராமத்துப் பெண்கள் அவரைச் சொந்தத் தாய்போல் எண்ணி அடிக்கடி அவரிடம் வந்து தங்கள் இன்ப துன்பங்களைச் சொல்லி ஆறுதலும் மகிழ்ச்சியும் அடை வார்கள். ஏழை மக்கள் அவரிடம் சென்று ஒரு பிடி சோறுவது பெறுமல் திரும்பியதே இல்லை. தாம் பட்டினி யாக இருந்தும் தம் வீட்டை நாடிவரும் ஏழைகள், சாதுக்கள் முதலிய அனைவருடைய பசியையும் அவர் எப்போதும் தீர்ப்

பார். தங்கள் தாயிடம் பிடிவாதம் செய்து தின்பதற்கு ஏதாவது வாங்கிச் செல்வதுபோல், கிராமத்துக் குழந்தைகள் சந்திரா தேவியிடமும் உரிமையோடு வாங்கிச் செல்லும். இவ்வாறு சந்திரா தேவியும் கமார்புகூர் குழந்தைகளுக்குத் தாயாகவும், ஆடவர் பெண்டிர்களுக்கு அன்புச் சகோதரியாகவும், பசித்து வருபவர்களுக்குப் பசி தீர்க்கும் அன்னபூரணியாகவும் திகழ்ந்துவந்தார்.

இத்தகைய பெற்றேர்களைப் பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் பிற்காலத்தில் தம் சீடர்களிடமும் பக்தர்களிடமும் கூறுவது வழக்கம்.

''என் தாய் அன்பு, நேர்மை, சத்தியம் இவைகளின் திருவுருவாக விளங்கினுர். மிகுந்த கடவுள் பக்தி உடையவர். உலக விவகாரங்கள் பற்றி ஏதும் அறியாதவர். எதை நினைக்கிருரோ அதை அப்படியே ஒளிவு மறைவின்றிப் பேசிவிடுவார். அவருடைய இந்த வெகுளி மனப்பான்மையைக் கண்டு கிராம மக்கள் அவரிடம் பெரிதும் அன்பு பாராட்டினர்.

''என் தந்தை, யாரிடமிருந்தும் எந்தப் பொருளையும் இனமாகப் பெற்றதில்லை. தம்மைத் தேடிவந்து கொடுத்தாலும் ஒழுக்கமற்றவர்களிடமிருந்து எதையும் வாங்கவே மாட்டார். பெரும்பொழுது பூஜை, ஜபம், தியானம் என்று கழியும். அன்ருடம் காயத்ரி ஜபம் செய்யும்போது தெய்வ ஒளி அவரிடம் வீசும். மார்பு புடைத்து செக்கச் செவேலென்று காணப்படும். கன்னங்களில் தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்தோடும். பூஜை, ஜபம், யாவும் முடிந்து ஓய்வாக இருக்கும்போது இரகுவீரருக்கு அழகான மாலைகள் கட்டுவார். தம் வாழ்நாளின் ஒவ்வொரு விநாடியையும் கடவுள் சேவையிலேயே கழித்து வந்தார். பொய் சாட்சி கூற அஞ்சி முன்னேர்கள் தொன்றுதொட்டு வாழ்ந்து வந்த வீட்டையும் கிராமத்தையும் விட்டு நீங்கினுர். கமார்புகூர் மக்கள் அவரைப் பெரிய மகாநைக மதித்து வணங்கினுர்கள்.''

கமார்புகூரில் சுதிராமின் குடும்பம் குடியேறி ஆறு ஆண்டுகள் ஆயின. மகன் இராம்குமாருக்கும் மகளுக்கும் திருமணம் முடிந்தது. பக்கத்து ஊரிலிருந்த சம்ஸ்கிருதப்பள்ளியில் படித்து வந்த இராம்குமார் படிப்பில் தேர்ச்சி பெற்றவுடன் பூஜை செய்வது, சோதிடம் பார்ப்பது முதலிய தொழில்களில் மிகுந்த தேர்ச்சி பெற்று, தந்தைக்

குப் பேருதவியாக இருந்தார். தாமே சம்பாதிக்கத் துவங்கினார். அதனால் சுதிராமிற்குக் குடும்பச் சுமை வெகுவாகக் குறைந்தது. ஓரளவிற்குச் சுதிராமின் குடும்பமும் செல்வம் மிக்கதாக விளங்கியது.

சமய விழாக்களில் கருத்து வேற்றுமை எழும் போதெல்லாம் பிணக்கினைப் போக்கி உண்மை காணு மாறு செய்யும் ஆற்றல் இராம்குமாரிடம் இருந்தது. சில குறிப்பிட்ட சமயச் சடங்குகளையும் நடத்திக் கொடுப் பதுண்டு. இதன் மூலம் அவருக்கு மிகுந்த வருமானம் வரத் துவங்கியது. அவரிடம் தெய்விகச் சக்திகள் இருப்பதாகக் கிராம மக்கள் நம்பினர். அவருடைய சோதிடத்திலும் அளவற்ற நம்பிக்கை கொண்டனர். காளியை வழிபடு கடவுளாகக் கொண்டு அவர் தீட்சை பெற்றார். ஒரு நாள் தெய்விகக் காட்சி ஒன்றில் காளியே அவர்முன் தோன்றி அவர் நாக்கில் ஏதோ எழுதினாள். அதன்பின் சோதிடத்தில் அபாரமான ஞானம் அவருக்கு உண்டாயிற்று. நோயாளி யின் முகத்தைப் பார்த்த அளவிலேயே அவன் பிழைப் பானா மாட்டானா என்பதைச் சொல்லி விடுவார்; அது அப்படியே பலிக்கவும் செய்யும். இராம்குமாரின் தம்பி மகனாகிய சிவராம் என்பவர் தம் பெரியப்பாவின் இந்த அதிசய சக்தியைப் பற்றிய நிகழ்ச்சி ஒன்றைக் கூறி யுள்ளார்.

ஒரு சமயம் வேலைநிமித்தம் கல்கத்தா சென்ற இராம்குமார் குளிப்பதற்காக கங்கைக்குச் சென்றார். அப்போது கங்கைப் படித்துறையில் செல்வந்தர் ஒருவர் தம் இளம் மனைவியோடு குளிப்பதற்கு வந்திருந் தார். அந்தக் காலத்தில் வங்காளத்தில் வாழ்ந்த பணக் காரக் குடும்பங்கள் பர்தா முறையை மிகத் தீவிரமாகப் பின்பற்றி வந்தன. வீட்டுப் பெண்களைப் பிறர் பார்க்கக்கூட அனுமதிக்க மாட்டார்கள். நான்கு பக்கமும் திரைகள் இடப் பட்ட பல்லக்கு ஒன்றில் அமர்ந்து இந்தச் செல்வந்தரின் மனைவி நீரருகே அழைத்துச் செல்லப் பட்டாள். வழியில் நின்று கொண்டிருந்த இராம்குமார் தற்செயலாக அந்தப் பெண்ணின் அழகிய முகத்தைப் பார்த்தார். உடனே பெருமூச்சுவிட்டபடி, 'பிறர் பார்க்கக் கூடாது என்பதற் காக இப்போது இவ்வளவு ஜாக்கிரதையாக மறைக்கப்படு கின்ற இந்தப் பெண்ணின் உடல் நாளை காலையில் பிண மாகிப் பலரின் முன்னிலையில் நீராட்டப்பட்டு எரியுண்ணப் போகிறதே!' என்று வருந்திக் கூறினார். இவ்வார்த்தைகள்

அருகில் நின்று கொண்டிருந்த அப் பெண்ணின் கணவர் காதில் விழுந்ததும் அவர் வியப்படைந்தார். ஏனெனில் அவர் மனைவி நல்ல உடல் வலிமையோடும் இளமையோடும் இருந்தாள். அவள் நாளை இறந்து போவாள் என்பதை அவரால் நம்ப முடியவில்லை. இராம்குமார் வேண்டு மென்றே கூறுவதாக நினைத்துப் பெரிதும் கோபம் கொண்டு, அப்படிக் கூறியதற்கு அவரைத் தண்டிக்க வேண்டும் என்று கருதி மறுநாள் காலைவரையில் தங்கள் வீட்டில் தங்கியிருக்கும்படி மேலுக்கு அன்பு வார்த்தைகள் பேசி இராம்குமாரை அழைத்துச் சென்ருர். ஆனல் கேட்டவர் அதிசயிக்கும்படி மறுநாள் காலை அந்தப் பெண் இறந்து போனுள்.

மற்றொரு முறை இராம்குமார் தம் மனைவியைப் பற்றிக் கூறிய சோதிடமும் அப்படியே பலித்தது. அவருடைய மனைவி பலவகையான அதிர்ஷ்ட ரேகைகள் உடையவளா யிருந்தாள். அவள் மருமகளாக வந்த நாளிலிருந்து சுதிராமின் குடும்பத்தில் செல்வமும் மகிழ்ச்சியும் பெருகத் துவங்கின. குடும்பத்தில் அனைவரும் அவளிடம் மிகவும் அன்பு பாராட்டினுர்கள். இந்நிலையில் ஒரு நாள் இராம்குமார் மிகுந்த வேதனையோடு எல்லோரையும் பார்த்துத் தம் மனைவியின் அதிர்ஷ்டத்தால் எல்லோரும் மகிழ்ச்சியாகவும் வளமாகவும் வாழ்ந்தாலும் முதல் குழந்தை பிறந்ததும் அவள் இறந்து போவாள் என்று கூறினுர். நெடுங் காலம் அவள் கருத்தரிக்காமல் இருந்தது இராம்குமாருக் குப் பெரிய ஆறுதலாக இருந்தது. ஆனல் 1849-ஆம் ஆண்டில் தன் முப்பத்தைந்தாவது வயதில் கருத்தரித்த வள் அட்சய் என்னும் ஓர் அழகான ஆண் குழந்தையைப் பெற்றதும் காலமானுள்.

இராம்குமார் குடும்பப்பொறுப்பை ஏற்றதும் சுதிராமிற்கு ஓய்வு நேரம் மிகுதியாகக் கிடைத்தது. நேரம் முழுவதையும் தியானத்திலும், பூஜையிலும், சமய சொற்பொழிவுகளைக் கேட்பதிலும் கழித்துவந்தார். இவைகளில் மனம் ஆழ்ந்து உலகில் மனிதன் அடைய வேண்டிய ஒரே புகலிடம் இறைவனின் பாத கமலங்களே பக்தி பூணுத லேயாகும் என்பது தெளிவாக விளங்கியது. இறைவன் தன்னை வெளிப்படுத்திக் கொண்டதாகப் புராணங்கள் போற்றும் புண்ணியத் தலங்களுக்குச் செல்ல விரும்பினுர். முனிவர்களும் துறவிகளும் அடிக்கடிச் சென்று புனிதப்படுத்தும்

புண்ணியத் தலங்களுக்கெல்லாம் யாத்திரை செய்ய வேண்டும் என்ற விருப்பம் அவருள்ளத்தே எழுந்தது.

1824-ஆம் ஆண்டு இந்தியாவின் தென் கோடியில் உள்ள, இந்துக்களால் மிகவும் போற்றப்படும், தம் குல தெய்வமான ஸ்ரீராமரின் வரலாற்றோடு தொடர்புடைய புண்ணியத்தலமாகிய இராமேஸ்வரத்திற்குப் புறப்பட்டார். கமார்புகூரிலிருந்து இராமேஸ்வரத்திற்கு ஆயிரத்து ஐநூறு மைல்கள் இருந்தன. வழியில் பல்வேறு புண்ணியத் தலங்களையும் தரிசித்தபடியே நடந்து சென்றார். இந்தப் பயணம் முடிய அவருக்கு ஓராண்டுக்காலம் பிடித்தது. திரும்பி வரும்போது பாணலிங்கம் ஒன்றைக் கொண்டுவந்து தமது தினசரி வழிபாட்டில் சேர்த்துக்கொண்டார். ஓராண்டிற்குப் பின்னர் அவருக்கு 1826-இல் இரண்டாவது மகன் பிறந்தான். இராமேஸ்வரம் சென்று வந்ததன் நினைவாக அவனுக்கு இராமேஸ்வர் என்று பெயர் வைத்தார்.

அதன் பிறகு சுதிராமின் வாழ்க்கையில் பதினொரு ஆண்டுகள் மகிழ்ச்சியோடும் அமைதியோடும் கழிந்தன. பிறகு முன்போலவே புண்ணியத் தலங்களுக்குச் செல்ல வேண்டும் என்னும் ஆழ்ந்த ஆசை அவருக்குத் தோன்றியது. இப்போது அவர் காசிக்கு அருகே உள்ள கயாவிற்குச் செல்ல விரும்பினார். மிகவும் வயதானவராக இருந்த போதிலும் இந்து சாஸ்திரங்களின்படி வாழ்க்கையை நடத்தியவராதலால் மறைந்த தம் முன்னோர்களுக்கு அவசியம் செய்ய வேண்டிய காரியமான, கயாவில் உள்ள விஷ்ணுவின் பாதங்களில் பிண்டம் இட்டு வழிபாடு செய்வதற்கு நினைத்தார். வயதாகி உடம்பு வலிமை குன்றியிருந்தபோதிலும் கயாவுக்கும் கமார்புகூருக்கும் இருந்த இருநூறு மைல்கள் கொண்ட கடும்பயணம் அவருக்குப் பெரியதாகத் தோன்றவில்லை. 1835-ஆம் ஆண்டு ஆரம்பத்தில் யாத்திரையாகப் புறப்பட்டு மார்ச் மாதத்தில் கயாவை அடைந்தார்.

## 2. பிறப்பு

சுதிராம் ஒரு மாத காலம் கயாவில் தங்கி சாஸ்திர முறைப்படி பல்வேறு சடங்குகளைச் செய்தார். இறந்து பட்ட தம் முன்னோர்களுக்குப் பிண்டம் இடுவதற்கான திதி வந்தது. கதாதரர் என்றழைக்கப்பட்ட விஷ்ணு கோயிலுக்குச் சென்றார். திருமாலின் பாத கமலங்களை வணங்கிவிட்டுப் பிண்டமிட்டார். மறைந்த தம் பெற்றோருக்கு ஒரு மகன் செய்ய வேண்டிய மிகவும் புண்ணியக் கடமையாகக் கயாவில் பிண்டமிடுவதை சாஸ்திரங்கள் குறிப்பிடுகின்றன. சாஸ்திரங்கள் கூறியபடியே வாழ்க்கை நடத்தும் சுதிராம் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். தாம் இட்ட பிண்டத்தால் தன் முன்னோர்கள் பேரின்ப உலகை அடைந்து விட்டதாகவும் கருதினார். இத்தகைய புண்ணிய காரியத்தைச் செய்யும் வாய்ப்பை அளித்த இறைவனை நன்றிப் பெருக்குடன் பலமுறை வணங்கினார்.

பொழுது மறைந்தது. உறங்குவதற்காகப் படுத்தவர் தூக்கத்தில் ஆச்சரியகரமான கனவொன்று கண்டார். அந்தக் கனவில் அவர் கதாதரரின் கோயிலில் இருந்தார். புனிதமான உணர்வுகளும் தெய்விகச் சூழலும் நிறைந்த அந்த இடத்தில் முன்னோர்கள் தாம் இட்ட பிண்டத்தை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்வதைக் கண்டார். அப்போது திடீரென்று ஒரு தெய்விக ஒளி தோன்றி கோயில் முழுதும் பரவியது. ஆச்சரியத்தோடு அந்த ஒளியைக் கவனித்த சுதிராம் கோயிலின் நடுவே ஓர் ஆசனத்தில் ஒளி மிக்க தெய்வ வடிவம் அமர்ந்திருப்பதையும் தம் முன்னோர்கள் அவ்வடிவை மிகுந்த பக்தியோடு வணங்குவதையும் கண்டார். அந்தத் தெய்விக வடிவம் சுதிராமைத் தம் அருகில் அழைத்தது. அருகில் சென்ற சுதிராம் அளவற்ற பக்தியோடு அந்த வடிவத்தை வணங்கினார். அந்த வடிவம் இனிமையான குரலில் சுதிராமைப் பார்த்து, ''சுதிராம், உன் பக்தியைக் கண்டு மிகவும் மகிழ்ந்தேன். நல்லோர்களைக் காக்கவும் தீயோர்களை அழிக்கவும் நான் மீண்டும் மீண்டும் பூமியில் பிறக்கிறேன். இந்த முறை உன் குடிசையில் பிறந்து உன்னைத் தந்தையாக ஏற்றுக் கொள்கிறேன்' என்று கூறியது.

ஆனந்தம் மேலிட பேசும் சக்தி இழந்தவராய் நின்றார் சுதிராம். பின்னர் ஒருவாறு தேறி, ''வேண்டாம், வேண்டாம் பிரபு, நான் அத்தகைய பெரும் பாக்கியத்திற்கு ஏற்றவன் அல்ல. இதுவரைக்கும் நீங்கள் என் தகுதிக்கு மீறி அருள் செய்திருக்கிறீர்கள். நான் மிகவும் ஏழை, நீங்கள் எனக்கு மகனாகப் பிறந்தால் நான் சரியானபடி உங்களுக்குச் சேவை செய்ய முடியாதே'' என்றார். இறைவன் அவருக்கு ஆறுதல் கூறி அவரைத் தெளிவித்து மறைந்தார்.

கனவு கலைந்தது. சுதிராம் மகிழ்ச்சிப் பெருக்கில் தள்ளாடினார். கதாதரராகிய திருமால் தம் வீட்டில் குழந்தையாகப் பிறந்து தமக்கு அருள் செய்யப் போகிறார் என்பதை உறுதியாக நம்பினார். ஆனால் இந்தக் கனவு நிகழ்ச்சியை யாரிடமும் சொல்லக்கூடாது என்று முடிவு செய்து, ஏப்ரல் மாத இறுதியில் தம் ஊர் திரும்பினார்.

இதற்கிடையில் சந்திரா தேவியும் விசித்திரமான தெய்விகக் காட்சிகளைக் காண ஆரம்பித்தார். ஒருநாள் இரவு கனவில் தம் கணவரைப் போலவே தோற்றமளித்த ஒளிமயமான வடிவம் ஒன்று தம் பக்கத்தில் இருப்பதைக் கண்டார். விழித்துக்கொண்ட பிறகும்கூட அந்த வடிவம் தம் பக்கத்திலேயே இருப்பதுபோல் அவருக்குத் தோன்றியது. யாரோ தம் அறையின் தாழ்ப்பாளை உடைத்துவிட்டு உள்ளே நுழைந்திருக்கிறார்கள் என்றும், அவன் நடந்து வந்த காலடி ஓசையே தமக்குக் கனவை உண்டாக்கியிருக்கிறதென்றும் நிச்சயித்தார். திடுக்கிட்டுப் படுக்கையிலிருந்து எழுந்து விளக்கைக் கொளுத்தினார். யாரும் இல்லை. அறையின் தாழ்ப்பாள் போட்டது போட்டபடியே இருந்தது. என்றாலும் அவருக்கு அளவற்ற பயம் உண்டாகிவிட்டது. இரவு முழுவதும் தூங்கவே இல்லை.

பொழுது விடிந்தது. உடனே தம் இரு நெருங்கிய தோழிகளான தர்மதாஸ் லாஹாவின் மகள் பிரசன்னமயியையும், கொல்லர் மகளான தனியையும் வரவழைத்தார். இரவு நடந்ததை மிகுந்த பயத்தோடு கூறினார். சந்திரா தேவியின் குழந்தைத்தனமான குணத்தைக் கண்டு இருவரும் சிரித்து, ''இதையெல்லாம் யாராவது கேட்டால் சிரிப்பார்கள். ஒன்றுமில்லை பயப்படாதே'' என்று தைரியம் கூறினார்கள்.

மற்றொரு நாள் அவர்கள் வீட்டிற்கு அருகே இருந்த சிவன் கோயிலின் எதிரே சந்திரா தேவி தம் தோழி தனியோடு நின்று கொண்டிருந்தார். எதேச்சையாகக் கோயிலுக்

குள் பார்த்தபோது சிவலிங்கத்திலிருந்து கண்ணைப் பறிக்கும் ஒளிப்பிழம்பு எழுந்து கோயில் முழுவதையும் நிறைத்துக் கொண்டுப் பிறகு தம்மை நோக்கி வேகமாக வருவதைக் கண்டாள். உடனே அதைப் பற்றி தனியிடம் சொல்ல வாய் திறப்பதற்குள் அந்த ஒளி அவரை மூழ்கடித்து அவர் வயிற்றுக்குள் சென்று தங்கியது. அவர் நினைவிழந்து கீழே விழுந்து மூர்ச்சையானார். தனி, தண்ணீர் தெளித்தும் விசிறியும் மயக்கத்தை நீக்கினாள். மயக்கம் தெளிந்த சந்திராதேவி தாம் கண்டகாட்சியை தனியிடம் கூறினார். முதலில் ஆச்சரியம் அடைந்த தனி,'' அதெல்லாம் ஒன்றுமில்லை. உனக்கு நரம்புக் கோளாறு. அதனால்தான் மயக்கம் வந்தது'' என்றார். ஆனால் சந்திரா தேவி அந்த ஒளி தன் வயிற்றுக்குள்நுழைந்து அதன் காரணமாகத் தாம் நிச்சயமாகக் கருவுற்றிருப்பதாக உணர்ந்தார்.

வீடு வந்து சேர்ந்தார் சுதிராம். முதலில் அவர் பார்வையில் பட்டது சந்திரா தேவியிடம் காணப்பட்ட அற்புதமான அழகும் அவர் குணத்தில் ஏற்பட்டிருந்த மாறுதல்களுமேயாம். இயல்பாகவே அழகாக இருக்கும் சந்திரா தேவி இப்போது மிகுந்த அழகோடு காணப்பட்டார். எப்போதும் தம் அக்கம்பக்கத்தில் உள்ளவர்களுக்கும், தம்மை நாடி வரும் ஏழைகளுக்கும் உதவி செய்துவந்த அவர், இப்போது கருணையே ஒரு பெண் வடிவம் கொண்டது போல, தாம் பட்டினியாகக் கிடந்தாலும் அடுத்தவர் துயரையும், தம்மை நாடி வருபவர்களின் துன்பத்தையும் தீர்ப்பதைத் தம் கடமையாகக் கருதினார். உணவில்லாத நேரத்தில் அரிசி, பருப்பு முதலியவைகளையெல்லாம்கூட பிறருக்கு வழங்கி விடுவதையும் கண்டார் சுதிராம்.

சுதிராமிடம் சந்திரா தேவி தாம் கண்ட கனவுக் காட்சியையும் சிவன் கோவிலில் நிகழ்ந்த நிகழ்ச்சியையும் கூறி, தான் கருவுற்றிருப்பதுபோல் தோன்றுவதாகவும் கூறினார். சுதிராம் உடனே கயாவில் தாம் கண்ட கனவை நினைத்துக் கொண்டார். சந்திரா தேவியிடம் அதுபற்றிக் கூறி, இந்த நிகழ்ச்சிகளால் தங்களுக்கு ஒரு தெய்விகக் குழந்தை பிறக்கப் போகிறது என்று உறுதிப்படுத்தினார். ஆனால் இதுபற்றி யாரிடமும் பேச வேண்டாம் என்றும் அறிவுரை கூறினார். கணவரின் வார்த்தைகளால் சந்திரா தேவி எல்லாம் தங்கள் குலதெய்வமான இரகுவீரரின் விருப்பம் என்று நிம்மதியடைந்தார்.

கல்கத்தாவில் இன்றும் வாழ்ந்துவரும் சுதிராம் குடும்

பத்தைச் சேர்ந்தவர்கள் சந்திரா தேவி தினமும் பல்வேறு தெய்விகக் காட்சிகளைக் கண்டு வந்ததாகக் கூறுகிறார்கள். சில நேரங்களில் தேவர்கள் அவர்முன் தோன்றினர். சில நேரங்களில் குரல்கள் மட்டும் கேட்டன. ஒரு நாள் குழந்தை காலில் அணியும் சதங்கையின் ஓசையைக் கேட்டுத் திடீரென்று விழித்துக் கொண்டார். சிலவேளைகளில் பிறர் கண்ணுக்குத் தெரியாத வடிவங்களோடு தாழ்ந்த குரலில் அவர் பேசிக் கொண்டிருப்பார். இந்தக் காட்சிகள் எல்லாம் தியானத்தின்போதோ, வழிபாட்டின்போதோ தோன்றாமல், சாதாரண நிலையில் கண்களைத் திறந்து கொண்டிருக்கும் போதே அவருக்குத் தோன்றின. இவற்றையெல்லாம் அவர் தம் கணவரிடம் கூறினார்.

இத்தகைய நிகழ்ச்சிகள் குறித்து நாங்கள் விளக்கம் தரப்போவதில்லை. ஆயினும் இதுபோன்ற விசித்திரமான நிகழ்ச்சிகள் உலகில் இதற்குமுன் அவதார புருஷர்களும், மகான்களும் தோன்றும்போது நடந்துள்ளன என்பதை மட்டும் சுட்டிக் காட்ட விரும்புகிறோம். ஆனால் மேற்கூறிய நிகழ்ச்சிகள் யாவும் கேள்விவாயிலாக அறிந்து கூறப்படுவன அல்ல. ஆதாரபூர்வமான வழிகளில் சேகரிக்கப்பட்டவை யாகும்.

நாட்கள் மாதங்களாயின. கடுங்குளிரும் முன்பனிக் காலமும் முடிந்து வசந்த காலம் தோன்றியது. இதுவரை எங்குமில்லாத இனிமையையும் மென்மையையும் எங்கும் காண நேர்ந்தது. மரம், செடி, கொடிகள் எல்லாம் பச்சைப் பசேலென்று காட்சியளித்தன. எல்லா உயிர்களிடத்திலும் உற்சாகமும் மகிழ்ச்சியும் பெருக்கெடுத்தன. வளம் மிகுந்த கமார்புகூர் பச்சைப் பசும் சோலையாகத் திகழ்ந்தது. ஏதோ ஒரு மகானின் வரவை எதிர்நோக்கி ஊரே அலங்கரிக்கப் பட்டதுபோல் வசந்தம் ஊரை அலங்கரித்தது. உலகிற்கு உன்னதமான தத்துவங்களை உபதேசிக்கப் போகும் மகான் பிறக்கப் போவதைக் குறித்து இயற்கையே அளவற்ற மகிழ்ச்சி அடைந்தாற்போல் தோன்றியது.

சந்திரா தேவியும் சுதிராமும் ஆவலோடு காத்திருந்தநாள் வந்தது. 1836-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 17-ஆம்தேதி புதன் கிழமை சூரியன் உதிப்பதற்குச் சரியாகப் பன்னிரண்டு நிமிடங்கள் இருக்கும்போது தனி மருத்துவச்சியாகத் துணைசெய்ய, சந்திரா தேவி ஓர் அழகான ஆண்மகவைப் பெற்றெடுத்தார். பிற்காலத்தில் மகானாகத் திகழப்போகும் அந்தக் குழந்தை நெல் அவிக்கும் அடுப்பும், நெல் குத்தும் இயந்திரமும்

இருந்த சிறியதொரு கூரை வீட்டின் அறையில் பிறந்தது.

தாய்க்கு வேண்டிய உதவிகளைச் செய்துவிட்டு, தனி பக்கத்தில் கிடத்தப்பட்ட குழந்தையைப் பார்த்தாள். குழந்தை அங்கே இல்லை. திடுக்கிட்டவளாக விளக்கை எடுத்துக் கொண்டு சுற்றிலும் தேடினுள். அவள் கண்கள் அருகில் இருந்த அடுப்பிற்குள் ஏதோ கிடப்பதைக் கண்டன. அருகில் சென்றுள். எப்படியோ அடுப்பிற்குள் சென்று கிடந்த குழந்தையின் உடம்பு முழுவதும் சாம்பல் திருநீருகப் படிந்து கிடந்தது. குழந்தையைத் தூக்கிக் கொண்டாள். அது ஆறு மாதக் குழந்தைபோல் பெரியதாகவும் கனமாகவும் இருந்தது. பிறந்து இவ்வளவு நேரமாகியும் குழந்தை அழவில்லை.

செய்தி அறிந்த சுதிராம் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தார். உற்றுர் உறவினர்கள் மகிழ்ந்தனர். சங்கு ஊதி, குழந்தை பிறந்ததை உலகிற்குத் தெரிவித்தனர். பிறந்த வேளையைக் குறித்துக் கொண்டு சுதிராம் நண்பர்களுடன் திறமை வாய்ந்த சோதிடரிடம் காட்டினர். குழந்தை புகழ் மிக்கவனுகவும் எல்லோராலும் வணங்கப்படுபவனுகவும் திகழ்வான் என்று சோதிடர் கூறக் கேட்டதும் அனைவரும் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தனர். சுதிராம் தாம் கயாவில் கண்ட கனவு நனவாகி விட்டதை எண்ணி மகிழ்ந்தார்.

குழந்தைக்குத் தாம் கண்ட கனவின் நினைவாகக் கதாதரன் என்று பெயர் சூட்டினர்.

# 3. இளமை

கதாதரன் பிறந்ததிலிருந்தே அவன் பெற்றோர்களையும், உறவினர்களையும் மட்டுமல்லாமல், கிராமத்து மக்கள் அனை வரையுமே தன்பால் கவர்ந்திழுக்கும் மோகன சக்தி படைத்த வனாக விளங்கினான். அவன் பிறந்த நாளிலிருந்தே அந்தக் குடும் பம் நல்ல நிலையை அடைய ஆரம்பித்தது. இராம்குமார் சோதிடத் தொழிலிலும், பூஜை, புனஸ்காரங்களிலும், சமயச் சடங்குகளிலும் செயலாற்றும் திறம் மிகுதியாகப் பெற்று விளங்கினார். ஆதலால் அவரைத் தேடி மக்கள் நாட்டின் மூலைமுடுக்குகளிலெல்லாம் இருந்து வரத் துவங் கினார்கள். இதனால் வருமானம் மேலும் அதிகரித்தது. குழந் தைக்கு ஆன புதிய செலவிற்கு நிறையப் பணம் கிடைத்தது. சுதிராமின் தங்கை மகன் இராமச்சந்திரர் நகரத்தில் வசதி யோடு வாழ்ந்ததால், குழந்தை பிறந்ததை அறிந்ததும் மாதந் தோறும் குடும்பச் செலவிற்காக முன்னர் அனுப்பிக்கொண் டிருந்த பதினைந்து ரூபாய்களுடன் கறவைப் பசு ஒன்றையும் கன்றோடு அனுப்பி வைத்தார்.

குழந்தை பிறந்து ஆறு மாதங்கள் சென்றன. விழாக் களும் சடங்குகளும் நிறைந்த வைதிக அந்தணர் குடும் பத்தில் குழந்தைக்கு முதல் விழாவான அன்னம் அளிக் கும் விழா வந்தது. சுதிராம் முதலில் தம் நெருங்கிய சுற் றத்தினர் சிலரைமட்டும் அழைத்து எளியமுறையில் ஆடம்பர மின்றிச் சடங்கினைக் கொண்டாட எண்ணினார். ஆனால் அவ ருடைய பெரிய பணக்கார நண்பரான தர்மதாஸ் லாஹாவின் இரகசியத் தூண்டுதலால், அந்த ஊரில் இருந்த அந்தணர் கள் பலரும் சுதிராமிடம் வந்து சடங்கினை விமரிசையாகக் கொண்டாட வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். இது போன்ற கொண்டாட்டங்களில் அந்தணர்களின் வேண்டு கோளை நிறைவேற்ற வேண்டும் என்பது சாஸ்திர விதி. தட்ட முடியாத சுதிராம் அவர்கள் வேண்டுகோளுக்கு இசைந் தார். மிகப் பெரிய அளவில் விழாவை நடத்த வேண்டு மானால் பெரும் பொருள் வேண்டும். யாரிடமும் எதற்கும், எந்தப் பொருளும் கேட்க விரும்பாத, வலியுறுத்திக் கொடுத் தாலும் வாங்க மறுக்கும் சுதிராம், மிகுந்த தயக்கத் தோடு தம் நண்பர் தர்மதாஸிடம் சென்று நிலைமையைக்

கூறினர். குழந்தை கதாதரனிடம் கொண்ட மிகுந்த அன்பால் அவன் சோறூட்டும் விழாவைத் தம் செலவில் மிகச் சிறப்பாக நடத்த விரும்பிய தர்மதாஸ், தாமே அந்த விழாவை நடத்த முன்வந்தால், சுதிராம் மறுத்து விடுவார் என்றே அந்த ஊர் அந்தணர்களைத் தூண்டி விட்டார். இப்போது அவரே வந்து கூறியதும் தம் சொந்தச் செலவில் மிகச் சிறப்பாக விழாவை நடத்தினர். கதாதரன் முதன்முதலாக அன்னம் சுவைத்த அந்நாளில் நூற்றுக் கணக்கில் செல்வந்தர்களும் ஏழைகளும் விருந்துண்டு மகிழ்ந்தனர்.

இதற்கிடையே குழந்தை பிறந்த நாளிலிருந்தே பல்வேறு அதிசய நிகழ்ச்சிகள் நிகழலாயின. இவற்றைக் கண்டு சந்திரா தேவி பெரிதும் அஞ்சினர். இந்த அதிசய நிகழ்ச்சிகளைக் காணும்போது சில நேரங்களில் தெய்வமே தம் குழந்தையாகப் பிறந்திருப்பதால்தான் இவை நிகழ்கின்றன என்று நினைத்து நிம்மதியடைந்தாலும், தாய்ப் பாசத்தின் காரணமாக பேய் பிசாசுகள்தாம் இப்படிச் செய்கின்றன என்று நினைத்து, குழந்தைக்கு இவற்றால் ஏதேனும் பின்னாளில் ஆபத்து வருமோ என்று அஞ்சுவார். சில சமயங்களில் குழந்தை தூக்க முடியாதபடி கனக்கும். பயந்துபோய்த் தம் கணவரைத் துணைக்குக் கூப்பிடுவாள். மறுகணமே கதாதரன் கனம் குறைந்து முன்பு போலவே இருப்பான். இதுபோன்ற சம்பவங்கள் அடிக்கடி நடக்கத் துவங்கின. சந்திரா தேவி மிகவும் கலக்கமடைவார். ஆனால் சுதிராமோ கதாதரன் தெய்விகக் குழந்தையாதலால் இப்படி அடிக்கடி நடப்பது சாதாரணம் என்றும் ஏதாவது அப்படி ஆபத்து வந்தால் தங்கள் குலதெய்வமான இரகுவீரர் குழந்தையை நிச்சயம் காப்பாற்றுவார் என்றும் உரைத்தார். இதனாலெல்லாம் சந்திரா தேவியின் மனம் அமைதியை அடையவில்லை. எந்த நேரமும் பயந்து கொண்டு தம் மகனைக் காப்பாற்றும்படி எல்லாக் கடவுள்களையும் வேண்டிக் கொண்டார்.

மூன்றாண்டுகள் கழிந்தன. 1839-ஆம் ஆண்டு சந்திரா தேவி ஒரு பெண் குழந்தையை ஈன்றெடுத்தாள். சர்வமங்களா என்று அம்மகவிற்குப் பெயர் சூட்டினர்.

கதாதரனுக்கு வயது ஐந்தாகியது. ஆரோக்கியமான உடலும் மிகுந்த அழகும் கொண்ட சிறுவனாக விளங்கினான். இந்தச் சிறுவயதிலேயே அவனிடம் இருந்த வயதிற்கு மீறிய அதிசயமான நினைவாற்றலையும் கூரிய அறிவையும் கண்டு சுதிராம் வியப்படைந்தார். சுதிராம் தங்கள் முன்னோர்களின் பெயர்ப்பட்டியலை அவனுக்குச் சொல்லித்

தருவார். பிரார்த்தனைப் பாடல்களையும் புராணக் கதைகளையும் சொல்லுவார். ஒரு முறை கேட்டால் போதும், உடனே தந்தை கூறியதில் ஒரு வார்த்தைகூட மாறாமல் கதாதரன் அப்படியே திருப்பிச் சொல்வான். அப்படியே மனத்தில் பதிந்துவிடும். எத்தனை நாட்களானாலும் தவறில்லாமல் அவற்றை ஒப்பிப்பான். அந்தச் சின்ன வயதிலேயே சிலவற்றை அவன் மிகவும் வெறுத்தான். கணிதம் அவனுக்குப் பிடிக்காத ஒன்று. ஒன்று, இரண்டு என்னும் எண்ணிக்கையையும், அந்தக் காலக் கிராமத்தில் வழங்கிய வாய்பாடுகளையும் கூறினால் வெறுப்போடு பார்ப்பான்; மனத்தில் வாங்கிக் கொள்ளவே மாட்டான். திருப்பியும் சொல்ல மாட்டான். எதற்கும் அடங்காத - யாராலும் அதிகாரம் செய்து கட்டுப் படுத்த முடியாத அவனைச் சுதிராம் பள்ளியில் சேர்த்தார். சிறிது காலத்திற்குள் பள்ளியில் ஆசிரியராலும் மாணவர்களாலும் மிகவும் விரும்பக் கூடிய மாணவனாகி விட்டான். லாஹா குடும்பத்தினர்களுக்குச் சொந்தமான ஒரு பெரிய பங்களாவில் காலையிலும் பிற்பகலிலும் பள்ளிக் கூடம் நடைபெற்றது.

கதாதரன் பிறப்பதற்கு முன்னே சுதிராம் கண்ட அபூர்வமான காட்சிகள் அவன் எதிர்காலத்தில் மகோன்னதமாக விளங்கப் போகிறான் என்ற நம்பிக்கையை அளித்திருந்தன. எனவே அவர் கதாதரனைத் தனிப்பட்ட முறையில் நடத்தலானார். மற்றக் குழந்தைகள் செய்தால் எந்தத் தந்தையும் தண்டிக்கக் கூடிய தவறுகளைக் கதாதரன் செய்த போதும்கூட, சுதிராம் அவனைத் தண்டிக்கவில்லை. யாருக்கும் அடங்காத அவன் குணத்தையும் குறும்புகளையும் மன்னித்து விட்டார். ஆனால் ஒன்று. மற்றக் குழந்தைகள் செய்யும் குறும்புகளுக்கும் கதாதரன் செய்யும் குறும்புகளுக்கும் பெரிய வித்தியாசம் இருந்தது. சிறுவர்கள் பொதுவாகவே ஏதாவது குறும்பு செய்து பிடிபட்டால் அதை மறைக்க முயல்வார்கள்; தண்டனைக்கு அஞ்சி மீண்டும் செய்வதற்குத் தயங்குவார்கள். கதாதரனோ வேறு வகையாக இருந்தான். தவறு செய்யும் போது பிடிபட்டுவிட்டால் தான் செய்த தவற்றை ஒப்புக் கொள்வான். ஆனால் மீண்டும் அதையே செய்வான். யாரும் அவனைத் தடுக்க முடியாது. ஆனால் அன்பான அறிவுரைகளும் அவன் செய்யும் அந்தக் காரியம் தவறானது என்பதைக் காரண காரியங்களோடு அவனுக்குப் புரியும்படிச் சொல்வது மட்டுமே அவனை அந்தக் காரியங்களைச் செய்யாமல் தடுத்தன. ஒரு முறை தவறு என்று தெரிந்து கொண்டால் மறுபடியும் அதைச் செய்யமாட்டான். ஆனால் பிற

ருக்குத் துன்பம் செய்வது என்பது இனிய இயல்பு கொண்ட அவனிடம் இல்லவே இல்லை.

பள்ளிப் படிப்பில் கதாதரன் நன்கு முன்னேறி வந்தான். படிக்கவும் எழுதவும் கற்றுக் கொண்டான். ஆனால் கணக்கின் மீதிருந்த வெறுப்பு மட்டும் மாறவே இல்லை. அவனுடைய கருத்தெல்லாம் ஆன்மிகப் பெரியோர்களின் வாழ்க்கையினையும் அவர்தம் பண்புகளையும் படிப்பதில் தான் பதிந்திருந்தது. இவற்றையே இடைவிடாது படித்து வந்ததால் உலகைப் பற்றிய எண்ணம் மறந்து பலமணி நேரம் தியானத்தில் ஆழ்ந்துவிடுவான். அந்தக் காலத்தில் வங்காளத்தில் கிராமம் கிராமமாகச் சென்று இராமாயணம், மஹாபாரதம் முதலிய புராண இதிகாசக் கதைகளை நாடகங்களாக நடத்திக் காட்டும் நாடகக் குழுக்கள் நிறைய இருந்தன. மேடை, பந்தல், திரை என்று எதுவுமின்றி இந்த நாடகக்காரர்கள் நாடகம் நடத்துவார்கள். இத்தகைய நாடகக்காரர்கள் கமார்புகூருக்கு அடிக்கடி வந்து பல்வேறு நாடகங்களை நடத்திக் காட்டுவார்கள்.

இந்த நாடகங்களைக் காண்பதில் கதாதரன் மிகுந்த ஆர்வம் காட்டினான். உள்ளூரில் மட்டுமின்றிப் பக்கத்து ஊர்களில் நாடகம் நடந்தாலும் தவறாமல் போய்விடுவான். நாடகத்தில் வரும் பாட்டுக்களையும், அதில் மக்கள் நடிப்பதையும் மெய்மறந்து கவனிப்பான். பாட்டுக்களும் உரையாடல்களும் எவ்வளவு நீளமானதாக இருந்தாலும் ஒரு வரிகூடத் தப்பில்லாமல் பின்னர் அப்படியே பாடி நடித்துக் காட்டுவான். கிராமத்தில் வாழ்ந்துவந்த குயவர்களிடமிருந்து கடவுள் திருவுருவங்களைப் பொம்மைகளாகச் செய்யும் கலையைக் கற்றுக் கொண்டான். வீட்டில் தன் நண்பர்களுடன் அழகான பொம்மைகள் செய்வதில் நீண்ட நேரத்தைச் செலவழிக்கத் துவங்கினான். ஓவியம் வரைபவர்களிடம் ஓவியமும் கற்று அதிலும் மிகச் சிறந்து விளங்கினான். ஓவியம் வரைவதும், பொம்மை செய்வதும் அவனுடைய பொழுது போக்குகள்.

இவ்வாறு, எந்தப் படிப்பைப் படிக்க வேண்டிப் பள்ளிக்குச் சென்றானோ அதை மறந்து, எந்தப் படிப்பைப் படித்தால் பிற்கால வாழ்வில் காசு பணம் கிடைக்குமென்று எல்லா மனிதர்களும் நினைக்கிறார்களோ, அந்தப் படிப்பை விட்டுவிட்டு தன் ஆற்றல் முழுவதையும் புராண இதிகாசங்களைக் கற்பதிலும், இறை உருவங்களை ஓவியமாக வரைவதிலும், பொம்மைகளாகச் செய்யக் கற்றுக் கொள்வதிலுமே கழித்தான். தன்னை மறந்து அவைகளில் ஈடுபடும்போது பல மணி நேரங்கள்

உலகையே மறந்து ஆழ்ந்த தியானத்தில் அவன் மூழ்கிவிடுவான். அவன் பெரியவனுக வளர வளர தெய்விக உணர்வுகள் அவன் மனத்தில் பொங்கத் தொடங்கின. அக்காலங்களில் அடிக்கடிப் பரவசத்தில் ஆழ்ந்து விடுவான். தெய்விக உணர்வுகள் மனத்தில் அதிகமாகப் பொங்கும்போது மயங்கிக் கீழே விழுந்து விடவும் செய்வான். புராண, இதிகாசக் கதைகள் மட்டுமின்றி, நாட்டுப் பாடல்களிலும் கதாதரன் அளவற்ற ஆர்வம் கொண்டான். சில சமயம் அந்தப் பாடல்களை எழுதி வைத்துக் கொள்வான். (இன்னும் இவைகளில் சில கல்கத்தாவில் உள்ள பேலூர் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் வைக்கப்பட்டுள்ளன.)

கதாதரன் வளர வளர மற்றும் பல மேன்மையான குணங்கள் அவனிடம் தென்படலாயின. அவனிடம் பயம் என்பதே இல்லாமல் இருந்தது. நல்ல தைரியசாலியாக விளங்கினுன். பேய் பிசாசுகள் உலாவும் இடங்கள் என்று பெரியவர்கள்கூட போக அஞ்சும் இடங்களுக்கெல்லாம் தனியாகவே தைரியமாகப் போவான். சட்டர்ஜி குடும்பத்தினர் அனைவருக்கு தெய்வ ஆவேசம் வருவதுண்டு. சுதிராமின் தங்கையான ராம்சிலாவுக்கு தெய்வ ஆவேசம் வரும்போது அவள் அருகில் போகப் பெரியவர்கள் கூட அஞ்சுவார்கள். கதாதரன் அச்சம் சிறிதுமின்றி அருகில் போய் நின்று கொண்டு கூர்ந்து கவனிப்பான். பிறகு சிரித்துக்கொண்டே ''அத்தையின் மேல் வரும் தெய்வ ஆவேசம் என் மேல் வந்தால் எவ்வளவு நன்ருக இருக்கும்!'' என்று கூறுவான்.

கதாதரனுடைய மற்ளெரு முக்கியமான குணம் ஏற்கனவே கூறியது போன்று பழகும் யாரையும் விரைவில் வசப்படுத்திவிடுவதே. கிராமத்துச் சிறுவர்கள் உண்ணும் நேரம், உறங்கும் நேரம் போக மீதி நேரங்களில் அவனேடுதான் இருப்பார்கள். சிறிது நேரம் காணவில்லையென்ருலும் தவித்துப் போவார்கள். கிராமத்தில் உள்ள பெண்களும் பக்கத்துக் கிராமங்களில் உள்ள உறவினர்களும் பழங்களையோ மிட்டாய்களையோ வாங்கிக் கொண்டு அவனைக் காண ஏதேனும் ஒரு காரணத்தைச் சொல்லிக்கொண்டு அடிக்கடி வந்துகொண்டிருப்பார்கள். இந்த அற்புதமான கவர்ச்சி அவனுடைய வாழ்நாள் முழுவதும் தொடர்ந்து இருந்தது. ஒரு முறை அவனைப் பார்த்தவர்களால் அடிக்கடி அவனை வந்து பார்க்காமல் இருக்க முடியாது.

கமார்புகூரில் வசித்துவந்த மாணிக்ராம் என்னும் செல்வந்தர் சுதிராமின் நெருங்கிய நண்பர். அடிக்கடி சுதி

ராமைத் தம் வீட்டிற்கு அழைத்துப் பேசிக் கொண்டிருப்பார். ஆறு வயதுச் சிறுவனான கதாதரனும் ஒரு நாள் தந்தையுடன் மாணிக்ராம் வீட்டிற்குச் சென்றான். கதாதரனைக் கண்ட மாணிக்ராம், ''சுதிராம்! கதாதரன் சாதாரணக் குழந்தை அல்ல. அவன் உடலில் அபூர்வமான அடையாளங்கள் இருக்கின்றன. அவனைப் பார்க்கும்போது எனக்கு அளவில்லாத மகிழ்ச்சி உண்டாகிறது. நீ வரும்போதெல்லாம் அவனையும் அழைத்துக் கொண்டுவா'' என்றார். அதன் பிறகு சுதிராம் மாணிக்ராம் வீட்டிற்குப் போகும் போதெல்லாம் தவறாமல் கதாதரனையும் அழைத்துச் செல்வார். சில நாட்கள் அவரால் அங்கே போக முடியாமல் போனால் கதாதரனை அழைத்துவரும்படி மாணிக்ராம் யாரையாவது அனுப்பி விடுவார். மாணிக்ராம் வீடு செல்லும் கதாதரன் நாள் முழுவதும் அவரோடு இருப்பான். பிறகு மாலையில் பலவகையான பரிசுகளோடு திரும்புவான்.

கதாதரன் மனத்தில் இதிகாச புராண நூல்கள் எந்த அளவிற்கு ஆழமாகப் பதிந்திருந்தன என்பதை முன்பே கண்டோம். கிராமத்தவர்களுக்கு அவைகளைப் படித்துக் காட்டும்போது, தன்னையே மறந்து அதில் வரும் பாத்திரமாகவே மாறிவிடுவான். நிகழ்ச்சிகளுக்கு ஏற்ப அழுவதும், ஆடுவதும், பாடுவதுமாக அப்படியே நடித்துக் காட்டுவான். சில நேரங்களில் அதிலேயே ஒன்றி விடுவான். இதைக் கண்டு கிராம மக்கள் ஆச்சரியத்தால் வாயடைத்துப் போய், தங்களை மறந்து பார்த்துக் கொண்டிருப்பார்கள். ஆனால் சிறிது நேரத்திற்கெல்லாம் பழைய நிலையை அடைந்து விடுவான். ஆனால் நாளாக நாளாக அவனுக்கு இந்த நிலை அடிக்கடி ஏற்பட்டது. அதோடு நெடுநேரம் நீடிக்கவும் துவங்கியது. இதைக் கண்ட அவன் பெற்றோர்கள் அவனுக்கு வலிப்பு நோய் வந்துவிட்டதாகக் கருதிப் பயந்தார்கள்.

கொஞ்ச காலம் கழிந்ததும் புராணங்களைப் படிக்கும் நேரங்களில் மட்டுமல்லாமல் அழகான இய்ற்கைக் காட்சிகளைக் காணும்போதும் கதாதரன் இப்படிப் பரவச நிலை எய்த ஆரம்பித்தான். ஒரு நாள் இப்படி அவனுக்கு ஏற்பட்ட பரவச நிலை அவன் பெற்றோர்களுக்கும் மற்றவர்களுக்கும் மிகுந்த பயத்தையும் கவலையையும் உண்டாக்கியது. பிற்காலத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் இந்த நிகழ்ச்சியை ஒரு கவிதையைப் போன்று தம் பக்தர்களுக்குக் கூறியுள்ளார். அதை இங்குக் காண்போம்.

''அந்தக் கிராமப்புறங்களில் (கமார்புகூரில்) சிறுவர் களுக்கு மாலே வேளேகளில் சாப்பிடப் பொரி தரு வார்கள். வசதியுள்ள சிறுவர்கள் சிறு கூடைகளிலும், ஏழைச் சிறுவர்கள் துணியிலும் முடிந்து கொண்டு தின்றபடியே தெருக்களிலும் கழனிகளிலும் போய் விளேயாடுவார்கள். ஒரு நாள் ஜூன் அல்லது ஜூலே மாதம் என்று நினேக்கிறேன். அப்போது எனக்கு ஆறு அல்லது ஏழு வயதுதான் இருக்கும். கூடையில் இருந்த பொரியைத்தின்றபடியே வயல்களின் நடுவே குறுகலான வரப்பின்மீது நடந்து கொண்டிருந்தேன். சட் டென்று மேலே நிமிர்ந்து பார்த்தபோது வானத்தில் அழகான மழைக்காலக் கரிய பெரிய மேகக் கூட்டங்கள் செல்வதைக் கண்டேன். கொஞ்ச நேரத்திற்குள் அது வேகமாகப் பரவி, வானம் முழுவதையும் மூடிக்கொண்டது. அப்போது பால் போல் வெள்ளே வெளேரென்ற கொக்குகள் என் தலேக்கு மேல் வரிசை வரிசையாகக் கண்ணுக் கெட்டிய தூரம்வரை பறந்து சென்றன. மேலே கறுப்பு மேகம்; கீழே வெண்ணிறக் கொக்குகள். இந்த அற்புதமான, ஒன்றுக்கொன்று முரண் பட்ட அழகைக் கண்டதும் என் மனம் என்னேவிட்டு எங்கோ மேலே மேலே தொலே தூரத்திற்குப் பறந்து செல்ல ஆரம் பித்தது. நினேவிழந்து கீழே விழுந்துவிட்டேன். என் கையி லிருந்த கூடை கீழே விழுந்து அதிலிருந்த பொரி எல்லாப் பக்கங்களிலும் சிதறியது. நான் மயங்கிக் கிடப்பதைக் கண்ட யாரோ ஒருவர் என்னேத் தூக்கிகொண்டு போய் என் வீட்டில் சேர்த்தார்.''

நினேவு திரும்பியதும் கதாதரன் முன்போலவே நலத் தோடும் உற்சாகத்தோடும் விளங்கினன். அவன் பெற்ருேர்கள் மிகவும் பயந்துவிட்டனர். மறுபடியும் இந்த இளம் வயதில் கதாதரனுக்கு இப்படி மயக்கம் வந்தால் அவன் உடல் நலம் மிகவும் பாதிக்கப்படுமென்று அஞ்சி முன் எச்சரிக்கையாக அது வராமல் இருக்க மருத்துவம் செய்ய சுதிராம் முடிவு செய்தார். கதாதரனுக்கு மயக்கத்தின் போது புறவுலகநினேவு நீங்கியதே தவிர, உள்ளுணர்வு நல்லபடி இருந்தது. அந்த நிலேயில் வார்த்தைகளால் விளக்க முடி யாத பேரின்பத்தைத் தான் அனுபவித்ததாகவும் தன் உடம் பிற்கு ஒன்றும் நேரவில்லே என்றும் கூறியபோது யாரும் அவன் வார்த்தையை நம்பவில்லே. சந்திரா தேவி மிகுந்த பயத் தோடு மருத்துவம் செய்ய ஆரம்பித்தார். பல நாட்கள் அவனே வீட்டைவிட்டு வெளியே அனுப்பவில்லே. பள்ளிக் கூடத்திற்கே அனுப்பாமல் வீட்டிலேயே வைத்துக் கொண்டார்.

# 4. வளரும் கதாதரன்

கதாதரனுக்கு இப்போது வயது ஏழு. இந்த நேரத்தில் எளிமையும் அமைதியும் நிறைந்திருந்த சட்டர்ஜி குடும்பத்தில் திடீரென்று ஒரு துன்ப நிகழ்ச்சி புயல்போல் வீசி கதாதரனின் வாழ்வில் பெரியதொரு மாற்றத்தைத் தோற்றுவித்தது.

1843-ஆம் ஆண்டில் சுதிராமிற்கு வயிற்றுப் போக்கு ஏற்பட்டு மிக விரைவில் அது பயங்கரமான வயிற்றுளைச்சல் நோயாக மாறியது. வலிமையான அவர் உடல் இந்த நோயினால் மெலிந்தது. அறுபத்தெட்டு வயதான அவரால் அந்த நோயின் கொடுமையைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. மிகவும் துன்பப்பட்டார். இந்த நிலையில் குளிர் காலம் வந்தது. வங்காளத்திலேயே மிகச் சிறந்த விழாவான துர்க்காபூஜை நடக்கும் காலம் அது. ஒவ்வோர் ஆண்டும் சுதிராம் தம் தங்கை மகன் இராமச்சந்திரர் மிகச் சிறப்புடன் கொண்டாடும் துர்க்கா பூஜையில் கலந்து கொள்ள, அவர் இருப்பிடமான சேலம்பூர் செல்வார். இந்த ஆண்டு நோயால் மிகவும் தளர்ந்திருந்த அவர் விழாவிற்குச் செல்ல முதலில் மிகவும் தயங்கினார். பிறகு ஒருவாறு மனத்தைத் தேற்றிக்கொண்டு மூத்த மகன் இராம்குமாரைத் துணைக்கு அழைத்துக்கொண்டு சேலம்பூர் சென்றார்.

அங்குச் சென்ற சில நாட்களுக்கெல்லாம் அவருடைய உடல்நிலை மிகவும் மோசமாகி விட்டது. துர்க்காபூஜையின் நான்காவது நாளன்று நினைவை இழந்துவிட்டார். மாமனின் நிலைகண்டு மிகுந்த கலக்கமடைந்த இராமச்சந்திரர் சிறந்த சிகிச்சைகளைச் செய்தார். ஒன்றும் பலனளிக்கவில்லை. அவருடைய இறுதி நெருங்கிவிட்டதை அறிந்ததும் இராமச்சந்திரர் நினைவிழந்திருந்த சுதிராமின் காதுகளில் இரகுவீரரின் பெயரை ஓதினார். இரகுவீரரின் பெயரைக் கேட்டதும் சுதிராம் நினைவுபெற்றுக் கண் விழித்தார். படுத்துக் கிடந்தவர் தம்மைத் தூக்கி உட்கார வைக்கும்படிக் கூறினார். உட்காரவைப்பதற்குள் இரகுவீரரின் பெயரை மூன்றுமுறை அவர் வாய் உச்சரித்தது. உயிர் அவர் உடலைவிட்டுப் பிரிந்தது. சுதிராமின் மரணத்தைக் கண்டு இராமச்சந்திரர்

குடும்பம் மிகுந்த வேதனையுற்றது. அந்த ஊரின் ஆற்றங் கரைக்கு அவர் உடல் எடுத்துச் செல்லப்பட்டு, முறைப்படி சடங்குகள் செய்து தகனம் செய்யப்பட்டது.

இந்தச் சோகமான செய்தி கமார்புகூருக்கு எட்டியது. மகிழ்ச்சி மயமான குடும்பம் ஆறாத துயரத்தில் மூழ்கியது. ஓர் இந்து மனைவிக்குக் கணவன்தான் கண்கண்ட தெய்வம். ஒவ்வொரு இந்து மனைவியும் கணவனுக்கு முன்னால் தான் இறந்து போகவே விரும்புவாள். சந்திரா தேவியும் அதையே விரும்பினார். ஆனால் விதி அவருக்கு வேறுவிதமாக அமைந்து விட்டது. சந்திரா தேவி இப்போது ஒரு நடைப்பிணமாகவே மாறிவிட்டார். வாழ்க்கையில் அவருக்கு இருந்த கொஞ்ச நஞ்சப் பற்றுக்களும் போய்விட்டன. பிள்ளைகளுக்காக உயிர் வாழ்ந்த அவர் இரவிலும் பகலிலும் எந்த நேரமும் அழுவதும், புலம்புவதும், இரகுவீரரிடம் பிரார்த்திப்பதும், தியானம் செய்வதுமாக இருந்தார்.

சுதிராமின் மரணம் இராம்குமாரையும் மிகவும் பாதித்தது. ஏனென்றால் குடும்பப் பொறுப்பு முழுவதும் இப்போது அவர்மீதே விழுந்துவிட்டது. விதவையாகி இரவும் பகலும் அழுது புலம்பும் தாயையும், இரண்டு சிறிய தம்பிகளின் படிப்பையும் கவனித்துக்கொண்டு குடும்பத்தையும் அதற்குரிய பெருமையோடு அவர் இப்போது நடத்திச் செல்ல வேண்டும்.

இவர்கள் இருவரைப் போலவே சுதிராமின் மரணத்தால் மிகவும் தாக்கப் பட்டவன் கதாதரன்தான். தந்தையின் மரணம் அவனுடைய இளம் நெஞ்சில் மிகவும் பயங்கரமான வேதனையையும் அதிர்ச்சியையும் உண்டாக்கியது. நாளுக்கு நாள் தந்தையின் மறைவை மிக அதிகமாக உணர்ந்து, தனிமையிலும் தாயோடு சேர்ந்தும் அவன் அழுதான். கிராமமே வெறுமையாகப் போய்விட்டதுபோல அவனுக்குத் தோன்றியது. இயல்பாகவே மிக ஆழ்ந்து சிந்திக்கும் அவன், இப்போது மேலும் மேலும் சிந்தனையில் ஆழ்ந்து போனான். மேலுக்கு மகிழ்ச்சியாகத் தோன்றினாலும் மறைந்து போன தந்தையை நினைத்துத் தனக்குள் எப்போதும் அழுத வண்ணமாகவே இருந்தான். தன்னந் தனிமையில் ஊருக்கு வெளியே இருக்கும் மாந்தோப்பிலும் சுடுகாட்டிலும் சிந்தனையும் சோகமும் நிறைந்த முகத்தோடு, ஊரார் கண்களுக்குப் படாமல் அவன் உலவி வந்தான். அவன் எப்போதும் மகிழ்ச்சியோடு ஈடுபடும் புராணக் கதைகளைப் படிப்பதிலும்

கடவுளர்களின் பொம்மைகள் செய்வதிலும்கூட அவன் மனம் பதியவில்லை.

இதோடு அவன் தன் தாயிடம் பழகும் முறையிலும் மிகுந்த மாறுதல் ஏற்பட்டது. தான் அருகில் இருக்கும்போது அதிகம் அழாமல் அமைதியாகத் தன் தாய் இருப்பதைக் கண்ட கதாதரன், பெரும்பாலான நேரம் தாயுடன் இருக்கவும், வீட்டு வேலைகளிலும் பூஜை வேலையிலும் அவருக்கு உதவி செய்யவும் ஆரம்பித்தான். முன்புபோல் எதையும் கேட்டு அவரைத் தொந்தரவு செய்யாமல், தன்னால் தாயின் மனம் துன்பப்படாதபடி நடந்து கொள்வதில் கவனமாக இருந்தான்.

கமார்புகூர், பூரிக்குச் செல்லும் பாதையில் இருந்ததை முன்பே கண்டோம். இரயில் பாதைகள் மிகக் குறைவாக இருந்த அந்தக் காலத்தில் பூரி செல்ல வேறு பாதைகளோ வண்டிகளோ இல்லாததால் பூரி செல்லும் சாதுக்களும், பயணிகளும் பெரும் எண்ணிக்கையில் கமார்புகூர் வழியாக நடந்தே சென்றார்கள். இவர்கள் தங்கிச் செல்வதற்காக லாஹா குடும்பத்தினர் அந்தப் பாதையில் ஒரு சத்திரம் கட்டி வைத்திருந்தனர். அங்கே துறவிகள் சில நாட்கள் தங்கிச் செல்வார்கள். கதாதரன் இப்போது இந்தத் துறவிகளோடு இருப்பதிலும், அவர்கள் பல இடங்களைப் பற்றிக் கூறும் கதைகளையம் பிரார்த்தனைகளையும் கேட்பதிலும் ஆர்வம் கொண்டான். எதைப்பற்றியும் கவலைப்படாமல், உடம்பிற்கு வரும் நோயைப்பற்றியோ, சுகத்தைப் பற்றியோ நினைக்காமல் கடவுளையே பற்றாகக் கொண்டு எப்போதும் அவரையே நினைத்து வாழும் அவர்களின் வாழ்வைப் பற்றி முன்பே அவன் அறிந்திருந்தான். இப்போது தன் தந்தையின் திடீர் மரணத்தால் இந்த உலகத்தின் நிலையாமையும், துயரமும் அவன் மனத்தை மிகவும் வருத்தியதால், அந்தத் துறவிகளின் வாழ்க்கை புதியதொரு மகிழ்ச்சியையும் ஆர்வத்தையும் அவனிடம் தோற்றுவித்தது. அவர்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டான். நெடு நேரம் அவர்களுடன் தங்கி, அவர்கள் நடத்தும் சமய வாதங்களைக் கேட்டுக்கொண்டும் பக்திப்பாடல்களைக் கற்றுக்கொண்டும் அவர்கள் பிச்சையெடுத்து வரும் உணவைச் சாப்பிட்டுக் கொண்டும், அவர்களுக்கு வேண்டிய தண்ணீர் விறகு முதலியவற்றைக் கொண்டு வந்து கொடுத்து உதவிக்கொண்டும் இருந்தான். அங்குத் தங்கிய சாதுக்கள் அனைவரும் அவனிடம் மிகுந்த அன்பும் ஆர்வமும் கொண்டனர்.

சந்திரா தேவி முதலில் இதைத் தடுக்கவில்லை. அதற்குப் பதில் அவன் அவர்களுக்கு உதவுவதும் அவர்களோடு வாழ்வதும் அவனுக்கு நல்லதையே தரும் என்று நினைத்தார். ஆனால் ஒரு நாள் அத் துறவிகளிடமிருந்து வந்த தன் மகன் உடம்பு முழுவதும் திருநீறு பூசியவனாகவும். இடுப்பில் கட்டியிருந்த துணியைக் கிழித்துக் கோவணம் கட்டியவனாகவும் வந்ததைப் பார்த்து மிகுந்த அதிர்ச்சி அடைந்தார். சத்திரத்துத் துறவியர் அவனை அந்தக் கோலத்தில் அனுப்பி யிருந்தார்கள். தாயை நெருங்கிய கதாதரன், ''அம்மா! இங்கே பார். நான் துறவியாகி விட்டேன்'' என்றான். இதைக் கேட்டு மேலும் வேதனை அடைந்த சந்திரா தேவி, அந்தத் துறவிகள் ஆசை காட்டி, யாருக்கும் தெரியாமல் கதாதரனைத் தங்களுடன் அழைத்துக் கொண்டு போய் விடுவார்களோ என்று பயந்தார். அதனால் துறவிகள் இருந்த இடத்துக்குப் போகவே வேண்டாம் என்று தடுத்தார். கதாதரன் எவ்வளவு சமாதானம் சொல்லியும் சந்திரா தேவி கேட்கவில்லை. தாயின் வார்த்தைக்குக் கட்டுப்பட்ட கதாதரன் இறுதியாக அவர்களிடம் விடைபெற்று வரச் சென்றான். கதாதரன் கூறியதைக் கேட்ட அவர்கள் நேராக சந்திரா தேவியிடம் வந்து தாங்கள் அப்படியெல்லாம் செய்யக் கூடியவர்கள் அல்லவென்று அவர் பயத்தைப் போக்கினார்கள். சந்திரா தேவியும் பயம் நீங்கியவராய், கதாதரனை முன்பு போல் அவர்களிடம் சென்று வர அனுமதித்தார்.

இத்தகைய சாதுக்களோடு கொண்ட தொடர்பும், அவர்கள் படித்த சாஸ்திரங்களைக் கேட்டதும், இயல்பாகவே ஆழ்ந்த தியானத்தில் ஈடுபடும் கதாதரனை மேலும் மேலும் ஆழ்ந்த தியானத்தில் ஆழ்த்தின. பிற்காலத்தில் தட்சிணேசுவரக் காளி கோயிலில் மிகவும் கடுமையான தவத்தில் ஈடுபடப் போகும் அவன், அதற்கான ஆற்றலை அந்தச் சிறுவயதிலேயே பெற ஆரம்பித்துவிட்டான். கீழ்வரும் நிகழ்ச்சி அவன் எவ்வளவு தூரம் கடவுள் நினைவில் ஆழ்ந்திருந்தான் என்பதைக் காட்டுகிறது.

கமார்புகூர் அருகே ஆனூர் என்ற கிராமம் இருக்கிறது. அங்குள்ள விசாலாட்சி என்னும் தெய்வம் மிகவும் சக்தி வாய்ந்தது. அந்த ஊரிலும், அக்கம் பக்கத்து ஊர்களிலுமுள்ள மக்கள் மிகுந்த பயபக்தியோடு விசாலாட்சியை வணங்கி வந்தனர். மிகவும் புகழ்பெற்ற இந்தத் தெய்வத்தை வணங்கி வருவதற்காக ஒரு நாள் கமார்புகூரிலிருந்து பக்திக்கும் தூய்

மைக்கும் பெயர் பெற்ற தர்மதாஸ் லாஹாவின் மகள் பிரசன்னமயி உட்படப் பெண்கள் கூட்டம் ஒன்று புறப் பட்டது. கதாதரனையும் வரும்படி எல்லோரும் வற்புறுத்தவே அவனும் உடன் சென்றான்.

பாட்டும் கதையும் சிரிப்புமாகப் பயணம் துவங்கியது. கதாதரன் மகிழ்ச்சியோடு பக்திப் பாடல்களைப் பாடிய படியே வந்தான். பாதித் தூரம் வந்திருப்பார்கள். பாடிக் கொண்டே வந்தவன் திடீரென்று அப்படியே நின்று விட்டான்; பாட்டும் நின்றது. கண்கள் நிலைக்குத்தி நின்று விட்டன. மயங் கிக் கீழே சாய்ந்து விட்டான். பெண்கள் கூட்டம் இதைக் கண்டு கூச்சலிடத் துவங்கியது. பக்கத்தில் இருந்த குளத்திற்கு ஓடிப் போய்த் தண்ணீர் கொண்டு வந்து அவன் முகத்தில் தெளித்தார்கள்; விசிறினார்கள். வெயிலால் மயங்கி விழுந்து விட்டானே என்று எண்ணிய 'கதாய்! கதாய்!' என்று கூப் பிட்டார்கள். ஒன்றும் பயனில்லை. மயக்கம் தெளியவே இல்லை.

அந்தக் கூட்டத்தில் இருந்த தர்மதாஸ் லாஹாவின் விதவைச் சகோதரி பிரசன்னமயி ஆழ்ந்த பக்தியும் தெய்விக நிலைகளைப் பற்றிய அறிவும் உடையவர். கதாதரன் தெய்விகமானவன் என்பதை முதன் முதலில் தெரிந்துகொண்ட மிகச் சிலரில் அவரும் ஒருவர். அவருக்குக் கதாதரனின் இந்த மயக்கம், சிறுவர்களிடம் மிகுந்த அன்பு கொண்ட விசாலாட்சி அன்னை அவன்மீது இறங்கி யதால் ஏற்பட்டிருக்குமோ என்று தோன்றியது. உடனே எல்லாப் பெண்களையும் அன்னை விசாலாட்சியிடம் பிரார்த்தனை செய்யும்படிக் கூறினார். விசாலாட்சி என்ற பெயர் கதாதரனின் காதில் விழத் துவங்கியதும் அவனிடம் உணர்வு திரும்புவதற்கான அடையாளங்கள் தோன்றின. சிறிது நேரத்தில் மயக்கம் தெளிந்து மெல்லக் கண் விழித்தான். பிறகு எழுந்து உட்கார்ந்தான். உடம்புக்கு ஒன்றுமே இல்லை. நடந்து வந்த களைப்புக் கூட இல்லை. உடல் மயங்கி அவன் கீழே விழுந்த நிலையிலும் அவன் மனம் மயங்கவில்லை. அப்போது நல்ல விழிப்பு நிலையில் சொற்களால் வெளிப் படுத்த முடியாத ஒரு பேரானந்தத்தை அவன் அனுபவித்துக் கொண்டிருந்தான். கதாதரனின் மயக்கம் தெளிந்ததும் பயணம் மேலே தொடர்ந்தது.

கதாதரனுக்கு இப்போது ஒன்பதாவது வயது நடந்து கொண்டிருந்தது. பூணூல் போடவேண்டும். ஓர் அந்தணச் சிறுவன் வாழ்வில் உபநயனம் என்பது மிக முக்கிய

மான நிகழ்ச்சியாகும். பூணூல் போடாதவரை சாஸ்திரப் படி அவன் சூத்திரனுகவே கருதப்படுகிருன். அதன் பிறகே அவன் அந்தணனுகிருன்; மந்திரங்களைச் சொல்லும் உரிமை யும், பூஜை செய்யும் உரிமையும் பெறுகிருன். பூணூல் போட்ட பிறகே அவன் தூய்மையும் தியாகமும் சத்தியமும் நிறைந்த வாழ்வில் நுழைவதாகக் கருதப்படுகிருன். இதனு லேயே அந்தணர்கள் இரு பிறப்பாளர்கள் என்று கூறப்படு கிருர்கள். பூணூல் அணிவதற்குமுன் ஒரு பிறப்பும் பூணூல் அணிந்த பிறகு மற்ருெரு பிறப்பும் அவர்களுக்கு அமைகிறது. பூணுல் அணிந்த பிறகு உணவு முதலிய பலவற்றில் மிகுந்த கட்டுப்பாட்டை மேற்கொள்ள வேண்டும். இல்லையென்ருல் அதனுல் ஏற்படும் பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்ய வேண்டும். இப்படியெல்லாம் சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஒவ்வோர் அந்தணச் சிறுவனும் அந்த மகத்தான நிகழ்ச் சியைப் பெரிதும் ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருப்பான். கதாதரனும் இதற்கு விதிவிலக்காக இல்லை.

கதாதரனின் பூணூல் விழாவின்போது விசித்திரமான ஒரு நிகழ்ச்சி நடந்தது. பூணூல் அணிந்து முடிந்த பிறகு சாஸ்திர விதிப்படி அந்தணச் சிறுவன் முதன்முதலில் தங்கள் உறவினரிடமோ அல்லது தங்களுக்குச் சமமான வேறு ஒருவ ரிடமோ பிட்சை ஏற்க வேண்டும். ஆனுல் பல நாட்களுக்கு முன்பாகவே தனி, கதாதரனிடம் மிகுந்த தாயன்போடு தன்னிடம் முதல் பிட்சை வாங்க வேண்டுமென்று வேண்டி னுள். அவளுடைய தூய்மையான அன்பினைக் கண்டு மனம் உருகி, கதாதரன் அப்படியே செய்வதாக வாக்களித்தான். தனியும் அந்த நாளை எதிர்பார்த்துப் பெரிதும் ஆவலோடு காத்திருந்தாள்.

இப்போது பூணூல் அணிந்து முடிந்ததும் கதாதரன் தன் அண்ணன் இராம்குமாரிடம் தனிக்குத் தான் கொடுத்த வாக்குறுதியைக் கூறி அவளிடமிருந்து முதல் பிட்சை ஏற்க வேண்டுமென்ருன். அப்படிச் செய்தால் களங்கம் ஏற்பட்டு விடும் என்று சொல்லி உடனே எதிர்ப்புகள் எழுந் தன. சாஸ்திரத்திற்கும் நடைமுறை வழக்கத்திற்கும் முரணு னது என்று பலரும் எதிர்த்தனர். ஆனுல் கதாதரனே தன் வாக்கைக் காப்பாற்றியே தீர வேண்டும் என்று பிடிவாதமாக நின்ருன். யார் யாரோ என்னென்னவோ சொல்லிப் பார்த் தார்கள்; கெஞ்சினுர்கள்; மிரட்டினுர்கள். ஒன்றும் பலிக்க வில்லை. இறுதியில் கதாதரன் தனியிடமே முதல் பிட்சையை ஏற்ருன்.

மேற்கண்ட நிகழ்ச்சியை மனத்தில் கொண்டு பார்க்கும் போது சிறுவயதிலேயே கதாதரனைப் பற்றிய சில எண்ணங்கள் மனத்தில் தோன்றுகின்றன. ஒன்று சத்தியத்தின்மீது அவனுக்குள்ள பற்றும், மற்றொன்று என்ன நேர்ந்தாலும் தான் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற வேண்டும் என்னும் உறுதியுமாகும்.

பூணூல் அணிந்து முடிந்த பிறகு கதாதரன் வாழ்வில் மற்றொரு குறிப்பிடத் தக்க நிகழ்ச்சி நடந்தது.

அப்போது கதாதரனுக்குப் பத்து வயது இருக்கும். தர்மதாஸ் லாஹாவின் வீட்டில் ஒருவர் இறந்து போனார். அவருக்காகச் சில நாட்கள் கழித்ததும் காரியம் என்று சொல்லப்படும் இறுதி நிகழ்ச்சி மிகப் பெரிய அளவில் நடந்தது. நன்கு படித்த பிராமணர்கள் பலர் அதில் கலந்து கொண்டனர். இதுபோன்ற நிகழ்ச்சிகளில் வங்காளத்தில் அந்தக் காலத்தில் பொதுவாக நடப்பதுபோல், பிராமணர்கள் அனைவரும் சில நுட்பமான ஆன்மிக விஷயம் குறித்து விவர்திக்கத் துவங்கினார்கள். சற்று நேரம் சென்றது. விவாதம் சூடு பிடித்தது. ஒவ்வொருவரும் தாம் சொல்வதே சரியானது என்று பேசத் துவங்கினார்கள். பேச்சு, கூச்சலாக மாறியது; ஆத்திரத்தோடும் கோபத்தோடும் பேசத் துவங்கினார்கள். இவர்களின் கூச்சலைக் கேட்டுத் தெருவில் இருந்தவர்கள் எல்லாம் அவர்கள் அருகே வந்து அவர்கள் பேசுவதைக் கேட்க ஆரம்பித்தார்கள். கதாதரனும் அவன் நண்பர்களும் இந்தக் கூட்டத்தோடு கூட்டமாக அமர்ந்து கொண்டார்கள். மற்றப் பிள்ளைகள் தங்களுக்குள் பேசிக் கொண்டும், கூட்டத்தில் பேசுபவர்களைப் பார்த்துச் சிரித்துக்கொண்டும் இருந்தபோது, கதாதரன் அவர்கள் பேசுவதைக் கூர்ந்து கவனித்து வந்தான். இறுதியில் தன் அருகில் அமர்ந்திருந்த பிராமணரிடம், "இவர்கள் சண்டையிட்டுக் கொள்கிறார்களே, அதற்கு இது சரியான விடையல்லவா?" என்று ஒரு பதிலைச் சொன்னான். அதைக் கேட்டு ஆச்சரியப்பட்ட அந்தப் பிராமணர் உடனே கூச்சலிட்டுக் கொண்டிருந்த பிராமணர்களை அமைதிப்படுத்தி அந்தப் பதிலைச் சொன்னார். அதைக் கேட்ட எல்லோரும், "அதுவே சரியான விடை" என்று ஏற்றுக் கொண்டார்கள். பத்து வயது நிரம்பிய சிறுவனிடமிருந்து அந்தப் பதில் வந்தது என்பதை அறிந்ததும் அவர்கள் அனைவரும் மிகுந்த ஆச்சரியம் அடைந்தார்கள்.

பூணூல் அணிந்த பிறகு கதாதரன் தங்கள் குலதெய்வமான இரகுவீரரை வழிபட அனுமதிக்கப்பட்டான். இது

அவனுக்கு அளவற்ற மகிழ்ச்சியைத் தந்தது. தன் தந்தை இரகுவீரரை எவ்வளவு பக்தியோடு பூஜித்தார் என்பதை அவன் நேரில் கண்டிருக்கிறுன். அது அவருக்குக் கற்சிலை யாகத் தோன்றவில்லை. உயிருள்ள இராமராகவே தோன்றி யது. அவனும் அத்தகைய ஆழ்ந்த பக்தியோடு வழிபடத் தொடங்கினுன். தன்னை மறந்து நேரத்தையும் மறந்து, இரகு வீரரின் வழிபாட்டில் அவன் நாளுக்கு நாள் மிக அதிகமாக மூழ்கிப் போனுன். இதன் காரணமாக அவனுடைய மனம் சாதாரண நிலையிலிருந்து மிக உயர்ந்த நிலைக்குச் சென்றது; குறிப்பிடத் தக்க அற்புதமான கடவுள் காட்சிகளையும் அவன் காணத் துவங்கினுன்.

அன்று சிவராத்திரி. கமார்புகூர் சிவன் கோயிலில் சிறப்பாகத் திருவிழா நடந்தது. இரவு நாடகத்திற்கு ஏற் பாடு செய்திருந்தார்கள்.

சிவராத்திரியன்று நாள் முழுதும் எல்லோரும் பட்டினி இருப்பார்கள். அதோடு இரவு முழுதும் கண்விழித்து நான்கு ஜாமத்திலும் சிவபெருமானுக்கு நான்கு முறை பூஜைகள் செய்வார்கள். சிறுவன் கதாதரனும் பகல் முழுவதும் பட்டினி நோன்பிருந்தான். இரவு கண்விழித்து நான்கு ஜாமங்களிலும் பூஜை செய்ய முடிவு செய்தான். முதல் ஜாமம் முடிந்து, அவன் வழிபாட்டை முடித்ததும், கயா விஷ்ணு முதலான அவன் நண்பர்களும் கிராமத்தில் பெரிய வர்களும் அவன் வீட்டிற்கு வந்தார்கள். நாடகத்தில் சிவன் வேடம் போட இருந்தவனுக்குத் திடீரென்று உடல் நலமில்லா மல் போய்விட்டதென்றும் இதனுல் நாடகத்தையே நிறுத்த வேண்டிய நிலையில் இருப்பதால் கதாதரன் சிவன் வேடம் போட வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டனர். இரவு மற்ற மூன்று ஜாமங்களிலும் சிவ வழிபாடு செய்ய வேண்டுமென்ப தால் முதலில் கதாதரன் மறுத்தான். சிவ வேடம் போடுவ தும் ஒரு சிவ வழிபாடே என்று அனைவரும் வற்புறுத்தியதும் சம்மதித்தான்.

வேடம் புனையும் இடத்திற்குக் கதாதரன் வந்தான். அவன் நண்பர்களும் நாடகக்காரர்களும் அவனுக்குச் சிவன் வேடம் போடத் துவங்கினுர்கள். உடம்பு முழுவதும் வெண் ணீறு. தலையில் ஜடாமுடி, கழுத்தில் ருத்திராட்ச மாலை, கையில் சூலம், இடுப்பில் புலித்தோல். இவ்வாறு உலகம் அனைத்தையும் மறந்து எப்போதும் தியானத்தில் ஆழ்ந்திருக் கும் சிவபெருமான் வேடம் புனையத் தொடங்கியதும், கதா தரன் மனம் அவர் நினைவிலேயே மூழ்கிவிட்டது. நாடகத்தில்

சிவபெருமான் வர வேண்டிய காட்சி. சிவ வேடம் தாங்கிய கதாதரன் மெல்ல அடியெடுத்து வைத்து மேடைக்கு வந்தான். சிவபெருமான் போலவே காட்சியளித்த அவனைக் கண்ட நாடகம் பார்க்கும் கூட்டம் வியப்பிலும் பக்தியிலும் ஆழ்ந்தது.

நாடகத்தில் பேசி நடிக்க வேண்டிய கதாதரன் இப்போது நின்ற இடத்தில் அப்படியே நின்று கொண்டிருந்தான். தன்னை மறந்து, உலகை மறந்து சிவபெருமான் நினைவில் ஆழ்ந்து, சமாதிநிலையை அடைந்து விட்டான். முதலில் இதை யாரும் கவனிக்கவில்லை. நெடுநேரம் அவன் அப்படியே நிற்பதைக் கண்டு நாடகக்காரர்கள் அவன் அருகே சென்றார்கள். அவன் நிலையைக் கண்டு பயந்து போனார்கள். ஒருவேளை இறந்து விட்டானோ என்றுகூட நினைத்தார்கள். அவன் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. செய்தி தெரிந்ததும் கூட்டத்தில் பெரிய ஆரவாரமும் அமளியும் எழுந்தன. கதாதரன் வீட்டிற்குத் தூக்கிச் செல்லப்பட்டான். மறுநாள் காலைவரை அவனுக்கு நினைவு திரும்பவேயில்லை.

இதுபோன்ற தெய்விகப் பரவசமும் சமாதியும் கதாதரனுக்கு அடிக்கடி வர ஆரம்பித்தன. தியானம் செய்யும் போதும், பக்திப் பாடல்களைக் கேட்கும்போதும் நினைவிழந்து விடுவான். இதுபற்றி அவனைக் கேட்டபோது ஏதாவது ஒரு குறிப்பிட்ட கடவுள்மீது தியானம் செய்தால் அந்தக் கடவுளைப் பற்றிய உணர்ச்சி தன் மனத்தில் பொங்கி எழுந்து, தனக்கு உலக நினைவே நீங்கி விடுவதாகக் கூறினான். முதலில் இதைக் கண்ட அவன் தாயும் சகோதரர்களும் மிகுந்த கவலைப்பட்டனர். இதனால் அவன் உடல் நிலையோ மன நிலையோ எந்த வகையிலும் பாதிக்காதது கண்டு ஆறுதல் அடைந்தனர். நாள்தோறும் இத்தகைய பரவசநிலை அவனுக்கு ஏற்பட்டாலும், அவற்றைக் கட்டுப்படுத்திக்கொண்டு அன்றாட வேலைகள் அனைத்தையும் செய்துவந்தான். கிராமத்தில் நடக்கும் எல்லாத் திருவிழாக்களிலும் கலந்து கொண்டான். ஆடினான்; பாடினான்; எல்லாக் கடவுளர்களையும் வேற்றுமையின்றி வணங்கினான். அந்தக் காலத்தில் சைவர்கள், வைணவர்கள், சக்தி வழிபாடு செய்பவர்களுக்குள் தங்கள் கடவுள் மட்டுமே உயர்ந்தவர் என்று இருந்த மனப்பான்மை அவனிடம் சிறிதும் இருக்கவே யில்லை. இந்த மனநிலையே அவனைப் பிற்காலத்தில் எல்லாக் கடவுள்களையும், சமயங்களையும் ஒன்றாகக் காணவும் அவைகள் அனைத்திற்கும் பின்

ஞல் இருப்பது ஒரு கடவுளே என்று உணரவும் பெரிதும் துணையாக இருந்தது.

கமார்புகூரில் இருந்த மிகுந்த அதிர்ஷ்டசாலிகளான சிலர் அப்போதே கதாதரனின் பெருமையை அறிந்து கடவுளாகவே வழிபட்டனர். அவர்களில் ஒருவர் வளையல் வியாபாரியான ஸ்ரீநிவாசன். ஸ்ரீராமகிருஷ்ணர் பிற்காலத்தில் இவருடைய பக்தியையும் கடவுள் நம்பிக்கையையும் பற்றி மிக உயர்வாக அடிக்கடிப் பேசியிருக்கிருர். சிறுவஞன கதாதரனை அவர் மிகவும் நேசித்தார். அவனேடு இருப்பதில் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். அடிக்கடி கதாதரனேடு பாகவதம் பற்றி ஆர்வத்தோடு பேசிக் கொண்டிருப்பார்.

ஒரு நாள் அவர் மலர்களால் மாலைகட்டிக் கொண்டிருந்தார். கதாதரன் அங்கே வந்தான். உடனே ஸ்ரீநிவாசன் கதாதரனை அங்கேயே இருக்கச் சொல்லிவிட்டு, அருகில் இருந்த கடைக்குச் சென்று இனிப்புகள் வாங்கி வந்தார். பிறகு கதாதரனைத் தனியாக ஓர் இடத்திற்கு அழைத்துச் சென்ருர். யாரும் தங்களைக் கவனிக்கவில்லை என்று உறுதி செய்து கொண்டதும் கையிலிருந்த மாலையைக் கதாதரன் கழுத்தில் போட்டு இனிப்புக்களை நைவேத்தியமாக அவனுக்குப் படைத்துப் பூஜை செய்து வணங்கிஞர். பிறகு தழுதழுத்த குரலில், ''எனக்கு வயதாகிவிட்டது. என் முடிவு காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. பிற்காலத்தில் நீ செய்யப்போகும் அற்புதங்களையெல்லாம் பார்க்க எனக்குக் கொடுத்துவைக்கவில்லை. உன்னை வணங்குவதற்குத் தகுதியில்லாத இந்த ஏழை அடிமையிடம் எப்போதும் கருணை காட்ட வேண்டும்'' என்று வேண்டினர்.

கதாதரன் கிராமத்துச் சிறுவர்களோடு எவ்வளவு அன்பாகப் பழகி வந்தான் என்பதை முன்பே கண்டோம். அவர்கள் பகல் முழுவதும் பள்ளிக்கூடத்திற்குக்கூடப் போகாமல் அவனுடனேயே கழித்தனர். அவர்களுக்கு மிகவும் பிடித்தமான இடம் ஊருக்கு வெளியே இருந்த மாணிக்ராஜா மாந்தோப்பு தான். பள்ளிக்குப் போகாமல் எல்லாச் சிறுவர்களும் அங்கே போவார்கள். வீட்டிலிருந்து கொண்டு வந்த பொரியைத் தின்பார்கள். பிறகு கதாதரன் அவர்களில் நன்ருகப் பாடவும் நடிக்கவும் கூடிய சிறுவர்களைத் தேர்ந்தெடுப்பான். நாடகம் துவங்கிவிடும். அவனே முக்கிய பாத்திரங்களில் நடிப்பான். கிராமத்தில் அவர்கள் பார்த்த இராமாயணம், மகாபாரதம் முதலிய நாடகங்களை நடிக்கத் துவங்கிவிடுவார்கள். நாடகத்தில் பாடப்பட்ட பாட்டுக்கள்

அனைத்தையும் ஒரு வரிகூட விடாமல் அப்படியே பாடி நடிப்பான் கதாதரன். அவனுக்கு மிகவும் பிடித்த நாடகம் பிருந்தாவனத்தில் கிருஷ்ணன் மாடு மேய்க்கும் சிறுவர்களோடும் கோபியர்களோடும் ஆடிப்பாடும் நாடகம்தான். கிருஷ்ணனின் திருவிளையாடல்களைப் பற்றிய நாடோடிப் பாடல்களை ஆழ்ந்த குரலில் அவன் பாடும்போதும், கிருஷ்ணனைப் பிரிந்த ராதையின் மனம் உருகும் துயரத்தைப் பாடும்போதும் கேட்பவர்கள் உருகிப் போவார்கள்; கதாதரனும் உணர்ச்சி மயமாகிப் பரவசமடைந்து விடுவான்.

மற்றும் சில நேரங்களில் எல்லாச் சிறுவர்களும் சேர்ந்து நாம சங்கீர்த்தனம் செய்வார்கள். மாந்தோப்பு முழுவதும் அவர்கள் பாட்டு எதிரொலிக்கும். பிள்ளைகளில் பலர் பள்ளிக்கு வராமல் இப்படி மாந்தோப்பிற்குப் போய் ஆடிப் பாடுவதை ஒருநாள் ஆசிரியர் கண்டுபிடித்து விட்டார். உடனே அங்கு போய் எல்லோரையும் பள்ளிக்கு அழைத்து வந்தார். பயந்து வாய் புதைத்து, பள்ளிக்குள் நுழைந்த சிறுவர்களிடம் அவர்களுக்குத் தலைவன் யார் என்று கேட்டார். எல்லாச் சிறுவர்களும் கதாதரனைச் சுட்டிக் காட்டினார்கள். ஆசிரியர் கோபத்தோடு மாந்தோப்பில் பாடிய பாடலைப் பாடும்படிக் கூறினார். உடனே கதாதரன் சிறிதும் பயமோ தயக்கமோ இல்லாமல் தன் இனிமையான குரலில் பாடத் துவங்கினான். துவங்கியவன் நிறுத்தாமல் பாடிக்கொண்டே இருந்தான். அவன் குரல் இனிமையிலும் உருக்கத்திலும் ஆசிரியர் உருகிப் போனார். அவனைத் தண்டிக்க நினைத்தவர் அன்றிலிருந்து பள்ளி முடிந்து சிறுவர்கள் போனதும் கதாதரனை மட்டும் தனியாக இருக்கச் சொல்லி, இரகசியமாகப் பாடச் சொல்லி மகிழத் துவங்கினார்.

கிராமத்துச் சிறுவர்கள் அனைவரும் கதாதரனின் இனிய நண்பர்கள்தாம் என்றாலும் கயா விஷ்ணுவே அனைவரிலும் சிறந்த நண்பனாக விளங்கினான். எப்போதும் தன் நண்பர்களை கதாதரன் மிகவும் விரும்பினான். கிராமத்துப் பெண்கள் தனக்குத் தனியாக எந்த இனிப்புகளோ, பழங்களோ, கொடுத்தாலும் அதை நண்பர்களோடு உண்பானே தவிரத் தனியாகச் சாப்பிடமாட்டான்.

எந்தவித மாற்றங்களும் இல்லாமல் சென்று கொண்டிருந்த, கதாதரன் குடும்பத்தில் சில சுவையான முக்கிய நிகழ்ச்சிகளும் நடந்தன. அவைகளில் ஒன்று, கதாதரன் வாழ்க்கையில் பெரிய மாற்றத்தை உண்டாக்கியது. கதாதரனின் அண்ணன் இராமேஸ்வரும், தங்கை சர்வமங்களாவும்

திருமண வயதை அடைந்தார்கள். இருவருடைய திருமண மும் நடந்து முடிந்தது. இதற்கிடையே இராம்குமாரின் மனைவி கருவுற்றாள். இதை அறிந்ததும், இயல்பாக மகிழ வேண்டிய குடும்பம் இதனால் பிற்காலத்தில் விளைய இருக்கும் பேராபத்தை எண்ணிக் கலங்கியது. இராம்குமாருக்குத் திருமணமாகிப் பல ஆண்டுகள் கழிந்தும் அவர் மனைவிக்குக் குழந்தை பிறக்கவில்லை. தம் அபூர்வ ஆற்றலால் குழந்தை பிறந்ததும் அவள் இறந்து போவாள் என்பதைஅவர் அறிந்திருந்தார். நெடுநாட்கள் அவள் கருவுறாமல் இருந்தது எல்லோருக்கும் ஆறுதலாக இருந்தது. இப்போது அவள் கருவுற்றது எல்லோருக்கும் அச்சத்தை உண்டாக்கியது. கருவுற்ற நாள்முதல் அவள் பக்திமயமான அவர்கள் குடும்ப வழக்கத்திற்கு மாறான, விசித்திரமான காரியங்களைச் செய்யத் துவங்கினாள். அந்தக் குடும்பத்தில் இரகு வீரருக்குப் பூஜை முடித்து நைவேத்தியம் படைத்தபிறகே எல்லோரும் உணவு உட்கொள்வார்கள். இது காலங்கால மாகப் பின்பற்றப்பட்டுவரும் முறை. அதற்கு மாறாக இராம் குமாரின் மனைவி பூஜைக்கு முன்பே சாப்பிடத் துவங்கினாள். கணவரோ மாமியாரோ இதைப்பற்றிக் கேட்டால் அவர் களோடு சண்டையிட்டுச் சச்சரவு செய்ய ஆரம்பித்தாள். இப்படியே இருந்தவள் 1894-ஆம் ஆண்டு ஆண் குழந்தை யொன்றைப் பெற்றெடுத்து உயிர் துறந்தாள். இராம்குமார் கணித்துச் சொன்ன சோதிடம் பலித்துவிட்டது. குழந்தைக்கு அட்சயன் என்று பெயர் வைத்தார்கள்.

இந்தப் பெரிய துயர நிகழ்ச்சி நேர்ந்ததிலிருந்து அந்தக் குடும்பத்திற்குத் துன்பங்கள் ஒவ்வொன்றாக வர ஆரம்பித் தன. வருமானம் குறைந்தது; வறுமை சூழத் துவங்கியது. பூஜை, சடங்குகள் செய்வதில் இராமேஸ்வர் திறமைசாலி யாக இருந்தும் பணம் சம்பாதிப்பதில் திறமையில்லாதவராக இருந்தார். இராம்குமாருக்கு இதுவரை வழக்கமாக வந்து கொண்டிருந்த பூஜை, சோதிடம் பார்ப்பது முதலான வேலை களும் திடீரென்று நின்று, வருமானமே இல்லாமல் போய் விட்டது. வயதாகிவிட்ட அவரால் நெடுநாட்களாகப் பார்த்து வந்த இந்த வேலைகளைத் தவிர வேறு வேலை எதை யும் செய்ய முடியவில்லை. அதோடு முப்பது ஆண்டுகள் தம் மோடு வாழ்ந்த, தம்முடைய அன்புக்குரிய மனைவி இறந்த பெருந்துன்பத்தை அவரால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. இந்த வேதனையோடு, வறுமையும் சூழ்ந்து கொண்டது. தாயற்ற குழந்தையான அட்சயனை வளர்க்கவும், அதற்காக

ஆகின்ற செலவுகளும் மிகவும் கடுமையாக இருந்தன. கடன் வாங்குவது தவிர வழியில்லாமல் போயிற்று. கடன் வாங்கத் துவங்கினர். நாட்கள் நகர்ந்தன. வருமானம் ஒன்றும் இல்லை. வாங்கிய கடனை அடைக்காததோடு மேலும் மேலும் கடன் வாங்கும் நிலையே ஏற்பட்டது. கமார்புகூரில் எதுவும் செய்ய முடியாத நிலை தோன்றவே நண்பர்கள் சிலரின் அறிவுரைப்படிக் கல்கத்தா சென்று அங்கே சம்ஸ்கிருதப் பள்ளி வைத்தும், பூஜைகள் செய்தும் பணம் சம்பாதிக்க முடிவு செய்தார். ஒரு நாள் புறப்பட்டும் விட்டார்.

# 5. வாலிபப் பருவம்

குடும்பத்தில் ஏற்பட்ட இந்த வேதனையான மாற்றங்கள், உணர்வு மயமான கதாதரன் மனத்தில் ஆழமாகப் பதிந்தன. அண்ணியின் மரணமும் அதைத் தொடர்ந்த வறுமையும் உலக இன்பங்களின் நிலையற்ற தன்மையை அவனுக்குத் தெளிவாக உணர்த்தின. இந்த இளம்வயதிலேயே உலக வாழ்வின் நிலையாமை பற்றிய மிக உறுதியான நம்பிக்கை அவனுக்கு ஏற்பட்டுவிட்டது. படிப்பின்மீது அளவற்ற வெறுப்பு ஏற்பட்டது. கற்ற அனைவருமே அந்தப் படிப்பைக் கொண்டு பொருளையும் பணத்தையும் புகழையுமே தேடு வதற்குப் பயன்படுத்துவதைக் கண்டான். எனவே தன் நேரம் முழுவதையும் பிரார்த்தனையிலும் தியானத்திலுமே கழிக்க முடிவு செய்தான். அன்றுடம் துணையில்லாத தன் தாய்க்கு உதவி செய்யும் நேரம் போக மற்ற நேரத்தையெல் லாம் தியானத்திலும் பிரார்த்தனையிலும் இரகுவீரர் பூஜை யிலும் பாகவதம் இராமாயணம் முதலிய நூல்களைப் படிப் பதிலுமே கழிக்கத் துவங்கினான்.

கதாதரன் வீட்டு அக்கம்பக்கத்துப் பெண்கள் எல்லாம் கதாதரனின் மனங்கவரும் பண்பால் கவரப்பட்டதை முன்பே கண்டோம். இராம்குமார் கல்கத்தாவிற்குப் போன பிறகு கதாதரன் வீட்டு வேலைகளிலும் பூஜையிலும் மூழ்கியபடி எப்போதும் வீட்டிலேயே இருந்தான். இது அந்தப் பெண் களுக்குப் பெரிய வாய்ப்பாக அமைந்தது. தங்கள் வீட்டு வேலைகள் முடிந்ததும் எல்லோரும் சந்திரா தேவியின் வீட் டிற்கு வந்து கதாதரனைப் பாடும்படியும் கதைகள் சொல்லும் படியும் வேண்டினர். கதைகளையும் கீர்த்தனங்களையும் கேட்ப தில் அந்தப் பெண்கள் அளவற்ற ஆர்வம் காட்டியதால், கதாதரனுக்கு பாகவதம் படிப்பதும் பாடுவதுமே தினந் தோறும் ஒரு நிலையான வேலையாகி விட்டது. அந்தக் காலத் தில் வைணவர்கள் கமார்புகூரில் நிறைய வாழ்ந்தார்கள். கதாதரன் அவர்கள் பாடும் பஜனைப் பாடல்களையெல்லாம் மனப்பாடம் செய்துகொண்டு தன் வீட்டிற்கு வருபவர்களிடம் பாடிக் காட்டுவான். கிராமத்தில் அடிக்கடி நடக்கும் நாட கங்களைக் கண்ட அவன், அந்த நாடகங்களையும் தான் ஒரு வனே நான்கைந்து வேடங்கள் 'தாங்கி, நான்கைந்து குரலில்

பேசியும் பாடியும் நடித்தும் காட்டி எல்லோரையும் ஆச்சரியப்பட வைத்தான். தன் தாயோ அல்லது மற்றப்பெண் களோ வருத்தத்தோடு இருப்பதைக் கண்டுவிட்டால் தன் னுடைய இந்த விளையாட்டுக்களைக் காட்டி அவர்களைச் சிரிக் கச் செய்துவிடுவான். தன் கண்முன்னல் யாரும் துயரப் படவோ 'உம்'மென்று இருக்கவோ அவன் விடுவதில்லை.

இத்தகைய செயல்களால் கதாதரனுக்கும் அந்த ஊரில் உள்ள பெண்களுக்கும் இடையே மிகுந்த அன்பும் பாசமும் தோன்றின. கதாதரன் பிறப்பதற்கு முன்பு அவன் பிறப்புப் பற்றிய ஆச்சரியமான நிகழ்ச்சிகளையெல்லாம் அவர்கள் அறிந் திருந்தனர். இப்போது அவனிடம் காணப்பட்ட கள்ளங் கபடமற்ற தன்மையையும், குழந்தையின் எளிமையையும், நேர்மையையும், அளவில்லாத பக்தியையும் கண்டு அவனிடம் மிகுந்த பக்தியும் அன்பும் கொண்டனர். பிரசன்னமயி முதலான வயதான பெண்கள் அவனைப் பாலகோபாலனுகவே கருதினர். அவனைப் போன்ற சிறுவர்களோ அவனைக் கிருஷ்ணனுகவே நினைத்தனர். குழந்தை போன்ற அவன் இயல்பும், எல்லோ ரிடமும் எந்த வேற்றுமையும் பார்க்காமல் ஒட்டி உறவாடும் தன்மையும் எல்லோரையும் ஒருங்கே கவர்ந்தன. ஊரில் ஆண் பெண் என்ற வித்தியாசமில்லாமல் அனைவரையும் அவன் பேரின்ப வெள்ளத்தில் ஆழ்த்துவான். எல்லோரும் அவ னிடம் பிறரிடம் கூற முடியாத தங்கள் இரகசியங்களை யெல்லாம்கூடச் சொல்லுவார்கள். இந்தக் காலத்தில் கதாதரன் இயல்பு ஆச்சரியப்படும் வகையில் பெண் போலவே மாறிவிட்டது. இதற்குக் காரணம் வைணவ சம்பந்தமான நாடகங்களையும், பிருந்தாவனத்தில் கிருஷ்ணன் கோபியர் பற்றிய நாடகங்களையும் அவன் பார்த்ததும், அது போலவே நடித்துப் பிறருக்குக் காட்டியதுமாகும்.

கோபியர்கள் தங்கள் மனம் கவர்ந்த கிருஷ்ணனிடம் கொண்ட தெய்விகக்காதலின் உருக்கமும், அவனிடம் கொண்ட கொழுந்து விட்டெரியும் தெய்விக அன்பால் அவர்கள் எரிக் கப்பட்டதும், அவனைப் பிரிந்து அவர்கள் பட்ட சொல்ல முடியாத வேதனையும், அவர்கள் கண்ணனைச் சந்தித்தபோது அடைந்த பேரின்பமும், அதோடு இந்தக் கதைகளின் பின்னணி யாக அமைந்த மிகப் பெரிய தத்துவமும் அவன் மனத்தில் ஆழப் பதிந்தன. அடிக்கடிக் கிருஷ்ணனைக் காணவேண்டும் என்ற நினைப்பில் அவன் தன்னையே மறந்து போவான்.

கமார்புகூரில் இருந்த வைணவக் குடும்பத்தைச் சேர்ந்த இளம் பெண்கள் அனைவரும் அவனுக்குக் கோபியர்களாகத்

தோன்றினார்கள். எனவே எப்போதும் அவர்களுடனே இருப்பான். கோபியர் கிருஷ்ணனைக் கணவனாக அடைந்து பேரின்பம் பெறக் காரணம் அவர்கள் பெண்களாக இருந்ததே என்பதை அறிந்த அவன், தானும் கண்ணனை அடையப் பெண்ணாகப் பிறக்காமல் ஆணாகப் பிறந்ததற்காக மிகவும் வருந்தினான். அடுத்த பிறவி எடுத்தால் ஒரு பிராமணக் குடும்பத்தில் பிறந்து, சிறு வயதிலேயே விதவையாகி கிருஷ்ணனையே கணவனாக நினைத்து வாழவேண்டும் என்றும், உயிர் வாழ்வதற்குத் தன்னிடம் பால் கறக்கும் பசு ஒன்றும், நூல் நூற்கும் இராட்டினமும், உயிர் வாழப் போதுமானதாகவும் குடிசை கட்டிக் கொள்ளவும் தோட்டம் போடவும் கொஞ்சம் நிலமும் தனக்குத் துணையாக ஒரு வயதான பெண்மணியும் இருக்க வேண்டுமென்றும், தன்னுடைய பசுவின் பாலிலிருந்து தயிர், வெண்ணெய் மற்றும் பல இனிப்புப் பண்டங்களைச் செய்து பத்திரமாகக் கண்ணனுக்கு வைக்க வேண்டுமென்றும், மாலை நேரத்தில் இராட்டினத்தருகே அமர்ந்து அதைச் சுழற்றிக் கொண்டே ஆனந்தப் பரவசத்தில் கிருஷ்ணனைப் பற்றிய ஏக்கப் பாடல்களில் மூழ்கி உலகை மறந்துவிட வேண்டும் என்றும் அப்போது கண்ணனின் இனிமையே உருவான குழலோசை காதில் விழ வேண்டுமென்றும், அதைத் தொடர்ந்து கிருஷ்ணன் திருட்டுத்தனமாக மாடு மேய்க்கும் சிறுவன்போல் தன் வீட்டில் நுழைந்து பால், தயிர், வெண்ணெய் இவைகளை உண்ண வேண்டும் என்றும் பலவாறாக அவன் கற்பனை பறந்தபடியே இருக்கும்.

கதாதரனின் இந்த ஆசை மயமான கற்பனை நடக்கவில்லை என்றாலும் பிற்காலத்தில் தன் மனத்திற்கு இனிய கிருஷ்ணனை நேராகக் கண்டான்; அதை நாம் பிறகு காண்போம். பெண்ணாக அவன் நடிக்கும்போது பெண்போல் உடுத்துக்கொண்டு, பெண்போலவே பேசுவான். அவனுடைய உடையும் குரலும் பெண்போலவே இருக்கும். அடிக்கடி வேடிக்கையாகப் பெண்ணைப்போல் உடை அணிந்துகொண்டு ஹல்தார்புகூர் குளத்திலிருந்து தண்ணீர் கொண்டு வர குடத்தை இடுப்பில் வைத்துக்கொண்டு அந்தக் கிராமத்துப் பெண் போலவே போவான். பிறந்தது முதல் அவனை நன்றாகத் தெரிந்து வைத்திருக்கும் பெண்களோடு பேசிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் போவான். ஆனால் யாராலும் அவனைக் கதாதரன் என்று கண்டு பிடிக்கவே முடியாது.

கதாதரன் வீட்டிற்கு அருகே சீதாநாத் பைன் என்னும்

பெரிய பணக்காரரின் வீடு இருந்தது. அவருக்கு ஏழு ஆண் பிள்ளைகளும் எட்டுப் பெண் பிள்ளைகளும் இருந்தனர். திருமணமான பிறகும்கூட அந்தப் பெண்களில் பலர் தந்தையின் வீட்டிலேயே வசித்து வந்தார்கள்; இந்தக் குடும்பம் சந்திரா தேவியிடம் மிகுந்த அன்பு கொண்டிருந்தது. கதாதரன் இந்த வீட்டில் பாடிக்கொண்டும், பாகவதம் சொல்லிக் கொண்டும் இருப்பான். அந்த வீட்டுப் பெண்களும் அக்கம் பக்கத்து வீட்டுப் பெண்களும் கூடி கதாதரனின் பாட்டையும் கதையையும் கேட்டு மகிழ்வார்கள். சீதாநாத் பைனின் பக்கத்து வீடு கிராமத்தில் மற்றொரு பணக்காரரான துர்க்காதாஸ் பைனின் வீடாகும். அந்தக் காலத்து வங்காள வழக்கப்படி பெண்களுக்குக் கடுமையான பர்தா முறை இருந்தது. தங்கள் குடும்பத்து ஆண்கள் தவிர வேறு யாரும் பெண்களைப் பார்க்க முடியாது. வீட்டில் பெண்கள் தனியாக யாருடைய கண்களிலும் படாமல் இருப்பதற்கே உள்புறத்தில் தனியான ஒரு பகுதி கட்டப்பட்டிருக்கும். மற்ற ஆண்கள் தங்கள் வீட்டுப் பெண்களைச்சிறிதும் பார்க்காமல் இருப்பதைச் சிலர் ஒரு பெரிய பெருமையாகவே நினைத்தார்கள். துர்க்காதாஸ் பைனும் அப்படிப்பட்டவர். வயது வந்த வாலிபரான கதாதரன் சீதாநாத் பைனின் வீட்டிற்குச் சென்று பெண்களுக்குப் பாட்டும் கதையும் சொல்லிவருவதைக் கண்டு அவர் வெறுப்படைந்தார். ஒருநாள் இதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்ட கதாதரன் படிப்பும் கடவுள் பக்தியுமே பெண்களைக் கற்புள்ளவர்களாக இருக்க உதவுமென்றும், இப்படி யாரும் பார்க்காமல் அவர் அடைத்து வைத்திருப்பது பயன் தராது என்றும் கூறினான். அதோடு அவரைப் பார்த்து, 'நான் விரும்பினால் சுலபமாக உங்கள் வீட்டில் உள்ள பெண்களைக் கண்டு பேசுவேன்' என்றான். அதைக் கேட்ட துர்க்காதாஸ் மிகுந்த ஆத்திரத்தோடு, 'முடியுமா? உன்னால் முடியுமா? பார்க்கலாம்' என்று சவால் விட்டார். கதாதரனும், 'ஓ! நிச்சயம் பார்க்கலாம்' என்றான்.

ஒரு நாள் மாலை இருட்டும் நேரம். துர்க்காதாஸ் தம் வீட்டுத் திண்ணையில் அமர்ந்து நண்பர்களோடு பேசிக்கொண்டிருந்தார். அப்போது கதாதரன் ஓர் ஏழை நெசவாளிப் பெண்போல உடையணிந்து முக்காடிட்டுக் கொண்டு இடுப்பில் கூடையுடன் அவர் அருகே வந்து நின்றான். தன் குரலைப் பெண்ணைப் போல் மாற்றிக்கொண்டு தான் பக்கத்து ஊர் நெசவாளிப் பெண் என்றும், நூல் கண்டுகளை விற்பதற்காகக் கமார்புகூருக்கு வந்ததாகவும், உடன் வந்த பெண்கள் தன்

னைத் தனியே விட்டுவிட்டுப் போய்விட்டதால் இந்த இருட்டும் நேரத்தில் நெடுந்தொலைவுள்ள ஊருக்குப் போகப் பயமாக இருக்கிறது என்றும் இரவுமட்டும் அவர் வீட்டில் தங்க அனுமதி அளித்தால் காலையில் போய்விடுவதாகவும் மிகுந்த உருக்கத்தோடும் வேதனையோடும் கூறினான். அவள் யார், எப்போது வந்தாள், எங்கிருக்கிறாள், என்பதை யெல்லாம் துர்க்காதாஸ் விசாரித்த பிறகு வீட்டில் அன்று இரவு தங்கிச் செல்ல அனுமதியளித்து வீட்டுக்குள் அனுப்பினார்.

அவருக்கு நன்றி சொல்லிவிட்டு உள்ளே நுழைந்த கதா தரன் பெண்களோடு பெண்ணாக அமர்ந்து, சுவையாகப் பேச ஆரம்பித்தான். அவர்கள் அளித்த உணவையும் உண் டான். இதனிடையே அவர்களோடு பேசியபடியே வீட் டில் உள்ள ஒவ்வோர் அறைக்கும் சென்று அதன் அடை யாளங்களையெல்லாம் நன்றாகப் பார்த்துக் கொண்டான். இதற்குள் நெடுநேரம் ஆகிவிட்டது. கதாதரன் இன்னும் வீடு திரும்பாததைக் கண்டு கலவரம் அடைந்த சந்திரா தேவி கதாதரனைத் தேடி அழைத்து வரும்படி இராமேஸ்வரை அனுப்பினார். ஊரில் பல இடங்களில் தேடியும் கதாதரன் கிடைக்காததால் இராமேஸ்வர் தெரு முழுதும், ''கதாயீ! கதாயீ!'' என்று உரக்க அழைத்துக் கொண்டே வந்தார். துர்க்காதாஸ் வீட்டுப் பின்கட்டில் பெண்களோடு பெண் வேடத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்த கதா தரன் காதில் அண்ணன் குரல் விழுந்தது. அவ்வளவுதான்; தான் எங்கே இருக்கிறோம், எந்த உடையில் இருக்கிறோம் என்பதையெல்லாம் மறந்து தன் இயல்பான குரலில், ''வந்து விட்டேன் அண்ணா!'' என்று சொல்லிக்கொண்டே எழுந்து வெளியே ஓடினான். உடன் அமர்ந்திருந்த பெண்கள் திடுக் கிட்டார்கள். பிறகு அது கதாதரன் என்று அறிந்ததும் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தார்கள். இதை துர்க்காதாஸ் அறிந்ததும் தான் ஒரு சிறு பையனிடம் தோற்றுவிட்டதை எண்ணி முதலில் கோபம் அடைந்தார். பிறகு அவன் வேடத் தையும் பக்குவமாகப் பெண்ணைப் போலத் தம்மிடமே பேசித் தம் அனுமதியுடன் தம் எதிரிலேயே வீட்டில் நுழைந் ததையும் எண்ணிப் பார்த்து, கதாதரனின் திறமையில் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தார்; அன்றிலிருந்து அவனைத் தம் வீட்டிற்குள் தாராளமாகச் சென்றுவரவும் அனுமதித்தார். துர்க்காதாஸ் வீட்டுப் பெண்கள் அவன் வருகையால் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தனர். பக்தியில் சிறந்த வைஷ்ண வர்களான அவர்கள் அவன் பாடும் கீர்த்தனங்களையும் சொல் லும் பாகவதக் கதைகளையும் கேட்டுப் பரவசமடைந்தார்கள்.

கதாதரன் கிராமத்தில் உள்ள பெண்களிடம் மட்டும் இத்தகைய உணர்வை உண்டாக்கவில்லை. தன் இனிய இயல்பாலும் குணத்தாலும் ஆண்களிடமும் இதே உணர்வை உண்டாக்கினான். மாலை நேரத்தில் ஊரில் உள்ள ஆண்கள் ஒன்றுகூடி சங்கீர்த்தனம் செய்யும்போதும், பாகவதமோ வேறு புராணங்களோ படிக்கும்போதும் உடனிருந்து பாடவும் படிக்கவும் செய்வான். கமார்புகூரில் மாலை நேரத்தில் பல இடங்களில் கூட்டமாக ஆடவர்கள் சேர்ந்து இப்படிச் சங்கீர்த்தனமும் புராணச் சொற்பொழிவும் கேட்பார்கள். அந்த ஊரில் கதாதரனைப்போல யாரும் பாடவோ புராணக் கதைகளைச் சொல்லவோ மாட்டார்கள். எனவே எல்லோரும் இவனையே அழைப்பார்கள். அவனுடைய அற்புதமான குரலையும், நடிப்பையும், தெய்விக உணர்வையும் அவன் அடிக்கடிப் பரவசத்தில் மூழ்கியபடி அழகாக ஆடுவதையும் கண்டு கிராமத்து ஆண்கள் அனைவரும் அவனைக் கண்டாலே மகிழ்ச்சி அடைவார்கள்.

கதாதரன் அளவுக்கு மீறிய சுறுசுறுப்பும் வேகமும் வேடிக்கை விளையாட்டும் கொண்டவனாக இருப்பதை மட்டும் கிராம மக்கள் காணவில்லை. இவைகளையெல்லாம் மீறிய வகையில் ஆச்சரியகரமான அறிவும், ஆழ்ந்த உள்ளுணர்வும் நிறைந்தவனாக அவன் இருப்பதை அறிந்தனர். பலமுறை அவனது அறிவுக் கூர்மையைக் கண்டு வியந்து நின்றிருக்கிறார்கள். அவன் கிராமத்தில் நடக்கும் ஒவ்வொரு சாதாரண நிகழ்ச்சியையும்கூட மிகவும் மாறுபட்ட ஆழ்ந்த நோக்கோடு காணும் திறன் பெற்றிருந்தான். கிராமத்தில் ஏற்படும் பல பிரச்சினைகளை வயதும் அனுபவமும் நிறைந்த கிராமப் பெரியவர்களே தீர்க்க முடியாது என்று திணறும்போது, மிகச் சுலபமாக எல்லோரும் ஏற்றுக் கொள்ளும் வகையில் கதாதரன் தீர்த்து வைப்பான்.

அவன் யாரைக் கண்டும் எதற்காகவும் பயப்பட மாட்டான். யாரைப் பற்றி என்ன நினைக்கிறானோ அதை அப்படியே சிறிதும் தயங்காமல் சொல்வான். இதனால் ஏமாற்றுக்காரர்களும், நல்லவர்கள் போல் நடிக்கும் வஞ்சகர்களும் அவன் எதிரில் வருவதையே விட்டு விட்டார்கள். ஆயிரத்துக்கு மேற்பட்டவர்கள் இருந்த அந்த ஊரில் கதாதரனின் தெய்விக ஆற்றலைப் புரிந்து கொள்ளும் திறன் படைத்தவர்கள் மிகச் சிலரே இருந்தனர். எதிர்காலத்தில் அவன் எப்படிப்பட்ட வாழ்வைத் தேர்ந்தெடுப்பான் என்பதை அவர்கள் அறியாவிட்டாலும் அவன் தேர்ந்

தெடுக்கும் எந்தத் துறையிலும் மிகச் சிறந்தவனாக இருப்பான் என்று பாராட்டினார்கள். இப்படிப்பட்ட பாராட்டை நாம் முன்பே ஸ்ரீநிவாசன் மூலம் கண்டோம்.

இந்தக் காலத்தில்தான் கதாதரன் மனத்தில் தாம் மிகப் பெரிய காரியம் ஒன்றைச் செய்வதற்காக இந்த உலகத்தில் பிறந்திருக்கிறோம் என்ற எண்ணம் தோன்றியதாகத் தெரிகிறது. அது என்ன காரியம் என்பது அவனுக்குத் தெரியாவிட்டாலும் கடவுளைக் காண்பது ஒன்றே வாழ்வின் இலட்சியம் என்பது மட்டும் அவனுக்குத் தெளிவாகப் புரிந்திருந்தது..இந்தக் காலத்தில் துறவு நெறியில் அவனுக்கு அளவற்ற ஈடுபாடு ஏற்பட்டது. துறவியாகிக் காவியுடுத்தி, பிச்சைப் பாத்திரம் ஏந்திக் கடவுளைத் தேடி ஊர் ஊராகச் செல்லப் பெரிதும் விரும்பினான். ஆனால் தாயின் கதறலும், சகோதரர்களின் வேதனையும் அவன் கண்முன் தோன்றி அதைத் தடுத்துவிட்டது. சில நேரங்களில் தன் தந்தையைப் போல் திருமணம் செய்துகொண்டு இல்லறத்தில் இருந்தவாறே இறைவனிடம் அளவற்ற பக்தி கொண்டு ஜபம், தியானம் என்று வாழ விரும்பினான். ஆனால் இந்த இரண்டு வாழ்க்கையில் எந்த வாழ்க்கையைத் தேர்ந்தெடுப்பது என்பதை எவ்வளவு முயன்றும் தெரியாமல், அதைத் தேர்ந்தெடுக்கும் முடிவை இரகுவீரரிடம் விட்டு விட்டு அவர் காட்டும் வழியில் செல்லத் தீர்மானித்தான்.

பள்ளிக்குச் செல்வதில் நாளுக்கு நாள் வெறுப்பு அதிகமாகிக்கொண்டே வந்து இறுதியில் பள்ளிக்குப் போகாமலே நின்றுவிட முடிவு செய்தான். ஆனால் பள்ளியில் உள்ள தன் நண்பர்களுக்காக, குறிப்பாகக் கயா விஷ்ணுவிற்காகப் பள்ளிக்குப் போய் வந்து கொண்டிருந்தான். இதற்கிடையே அவன் பள்ளிக்குப் போகாமல் நின்று விடுவதற்கான வாய்ப்புத் தானாகவே வந்தது.

கிராமத்தில் ஒரு நாடகக் குழு உருவாக்கப்பட்டது. கதாநாயகன் வேடம் ஏற்றுக் கொள்ளும்படி அந்தக் குழு கதாதரனைக் கேட்டுக் கொண்டது. கதாதரன் மகிழ்வோடு இசைந்து நாடகக் கம்பெனியில் சேர்ந்து கொண்டான். நாடகத்தின் ஒத்திகைகள் கிராமத்தில் இருந்த மாணிக்ராஜா மாந்தோப்பில் நடந்தன. ஒரே நேரத்தில் கதாதரனால் பள்ளிக்கும் நாடக ஒத்திகைக்கும் போக முடியவில்லை. எனவே மனத்திற்குப் பிடித்த நாடகத்தைப் பிடித்துக் கொண்டு, பிடிக்காத பள்ளிப் படிப்பை விட்டு விட்டான். நாடகத்தில் நடிக்கும் மற்றவர்களுக்குப் பாடமும் நடிப்பும்

சொல்லித் தரும் ஆசிரியனுகவும் ஆகிவிட்டான். அந்த நாடகத்தில் இராமாயணம், பாகவதம் முதலான கதைகள் நடிக்கப்பட்டன. ஆரம்பத்திலிருந்தே இவர்களின் நாடகங்களுக்கு மிகுந்த வரவேற்பு இருந்தது. கதாதரன் இந்தக் குழுவின் முக்கியத் தலைவனுக விளங்கினுன். அவன் நடித்த இராமர், கிருஷ்ணர் முதலான வேடங்களின் சிறப்புப் பற்றியும் அப்போது அவனுக்கு அடிக்கடி உண்டாகும் பரவசம் பற்றியும் நெடுநாட்கள்வரை மக்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

இந்தக் காலத்தில் கதாதரன் ஓவியம் வரைவதிலும் களிமண்ணுல் கடவுள்களின் பொம்மைகள் செய்வதிலும், அவைகளுக்கு வண்ணம் தீட்டுவதிலும் மிகுந்த ஆற்றல் பெற்று விளங்கினுன். இந்தக் கலைகளை யாருமே அவனுக்குக் கற்றுக் கொடுக்கவில்லை. அவனுக்கு இயல்பாகவே அந்தக் கலைகளில் ஆற்றல் இருந்தது. மற்றவர்கள் செய்வதைப் பார்த்தே மிகுந்த தேர்ச்சி பெற்ருன். அவனுடைய வலிமையான மன ஒருமைப்பாடும், உள்ளுணர்வில் தோன்றிய தெய்விகமும் இதற்குப் பெருந்துணை செய்தன. நெடுங்காலமாகப் பொம்மை செய்வதையே தொழிலாகக் கொண்டிருந்தவர்களும், கடவுளரின் கண்களின் அமைப்பு முதலியவற்றை அவனிடமிருந்து கற்றுக் கொண்டனர்.

இப்போது கதாதரனுக்குப் பதினேழு வயது. கல்கத்தாவில் சம்ஸ்கிருதப் பள்ளி துவக்கிய இராம்குமார் பள்ளி வேலையையும், அங்குப் புதிதாக மேற்கொண்ட பூசாரி வேலையையும் தாம் ஒருவரே கவனிக்க முடியாமல் மிகவும் துன்பப் பட்டார். அவருக்கு ஒரு துணை தேவைப் பட்டது. ஒரு முறை அவர் கமார்புகூருக்கு வந்தபோது அங்கே கதாதரன் பள்ளிக்குப் போவதையே விட்டுவிட்டு நாடகக் குழுவில் சேர்ந்து நண்பர்களோடு ஊர் சுற்றுவதை அறிந்ததும் தாயுடனும் தம்பியுடனும் கலந்தாலோசித்துத் தமக்குத் துணையாக இருக்கவும், தம்மிடம் கல்வி பயிலவும் அவனைக் கல்கத்தா அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்தார். அவனும் மகிழ்ச்சியோடு ஒப்புக்கொண்டான். ஒரு நல்ல நாளில் இரகுவீரரையும் தன் தாயையும் வணங்கி, இராம்குமாருடன் கல்கத்தா புறப்பட்டான்.

கமார்புகூரை விட்டு அவன் புறப்பட்டபோது பதினேழு ஆண்டுகள் மிகுந்த மகிழ்ச்சியோடு அந்த ஊரில் சுற்றி விளையாடிய நிகழ்ச்சிகள் யாவும் அவன் நினைவிற்கு வந்து அவனைப் பெரிதும் துக்கத்தில் ஆழ்த்தின. தன்

இளமைக்கால நண்பர்களையும், தன்னிடம் பேரன்பு செலுத்திவரும் கிராமத்து மக்களையும் விட்டு நெடுந் தொலைவில் உள்ள, இதுவரை காணாத கல்கத்தாவிற்குச் செல்வது அவனுக்குப் பெரும் வேதனையாக இருந்தது. துன்பத்தைச் சுமந்தவாறே கமார்புகூரைத் திரும்பித் திரும்பிப் பார்த்தபடி அண்ணனோடு நடந்தான்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கையாகிய பெரிய காவியத்தின் நான்கு பகுதிகளில் ஒரு பகுதி இப்போது முடிவடைந்தது. உலக வாழ்வு எனும் துன்பத் தீயில் வெந்துழலும் எண்ணிறந்த மாந்தருக்கு இன்பமும் அமைதியும் அளித்து, இணையில்லாத கற்பகமாய் அருள் பொழியப் போகும் அவரது வாழ்வின் இரண்டாம் பகுதி கல்கத்தாவில்—தட்சிணேசுவரத்தில் ஆரம்பமாகியது.

# 6. 'சோற்றைத் தேடும் படிப்பு'

கல்கத்தா வந்த கதாதரன் தன் அண்ணன் இராம்குமாரின் வேலைகளில் உதவியாக இருந்தான். இந்த வேலைகளுக்கு இடையே இராம்குமார் அவருக்குச் சோதிடமும் சாஸ் திரங்களும் சொல்லித் தர ஆரம்பித்தார். பள்ளியில் அதிக வருமானம் ஒன்றும் இல்லை. இராம்குமார் வீடுகளில் செய்துவந்த பூஜையின் மூலம் சிறிது வருமானம் வந்தது. பள்ளி வேலைகளால் இராம்குமார் பூஜைகளில் அதிக நேரத் தைச் செலுத்த முடியவில்லை. இப்போது கதாதரன் வந்ததும் அந்த வேலைகளை அவனிடம் ஒப்படைத்தார். கதா தரன் இதை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டான். சில நாட் களில் கமார்புகூர் வீடுகளில் எப்படி ஆனந்தமாக ஒட்டிக் கொண்டானோ, அப்படியே இங்கும் ஒன்றாகி விட்டான்.

தென்னிந்தியாவைப் போலன்றி வங்காளத்தில் வீடு களிலும்கூடப் பூசாரிகளே பூஜை செய்வார்கள். பெரும் பாலும் செல்வந்தர்களின் வீடுகளில் இப்படி நடக்கும். பூஜை செய்யும் பூசாரிகளுக்குச் சம்பளம் தருவார்கள். ஒரு பூசாரியே நாள்தோறும் பல வீடுகளில் பூஜை செய் வார். அப்படிச் செய்பவர் ஒவ்வொரு வீட்டிலும் அவசர அவசரமாகப் பூஜையை முடித்துக்கொண்டு அடுத்த வீட் டிற்குச் செல்வார். அப்படிச் செய்யும் பூஜை அன்றாடம் செய்யும் வீட்டு வேலைகளில் ஒன்றாக இருக்குமே தவிர, பூஜையாக இருக்காது. கல்கத்தா நகர வீட்டுப் பூசாரிகள் யாவரும் இப்படியே இருந்தனர். ஆனால் கதாதரனின் பூஜை முற்றிலும் மாறுபட்டு இருந்தது. சில வீடுகளில் மட்டுமே அவன் பூஜை செய்தான். பணம் அவனுக்கு என்றும் குறிக் கோள் அல்ல. கமார்புகூரில் தன் வீட்டில் எப்படி இரகு வீரருக்கு மனமுருகிப் பூஜை செய்வானோ அப்படியே இந்த வீடுகளிலும் பூஜை செய்வான். மனம் உருகிப் பாடுவான். பூஜை முடிந்த பிறகும் வீட்டில் உள்ள பெரியவர்களோடும் பெண்களோடும் பக்தியைப் பற்றியும், பகவானின் கதை களைப் பற்றியும் பேசுவான். இதனால் வீட்டில் அனைவருமே அவனிடம் மிகுந்த அன்பும் மரியாதையும் கொண்டனர். பிற ஆடவர்களின்முன் வராத பெண்களும் அவனிடம் வந்து, அவனைத் தங்கள் வீட்டிலுள்ள ஒருவனாகவே

நினைத்துப் பேசி மகிழ்வார்கள். இத்தகைய குடும்பங்களில் மனம் குளிரப் பூஜை செய்தும், மகிழ்ச்சியாகப் பேசியபடியும் தன் கமார்புகூரின் பழைய குதூகல வாழ்வைக் கதாதரன் இங்கும் துவங்கிவிட்டான். இதனால் தன் அண்ணனிடம் சோதிடமும் சாஸ்திரங்களும் படிக்க அவனுக்கு அதிக நேரம் கிடைக்கவில்லை. கிடைக்கும் நேரத்திலும், அவைகளைப் படிப்பதில் அக்கறை செலுத்தவில்லை.

முதலில் சில மாதங்கள் இராம்குமார் கதாதரனின் விருப்பம் போல் விட்டுவிட்டார். மகிழ்ச்சியோடு இருந்த கிராமத்தையும் தாயையும் அவர் இப்படியெல்லாம் மறக்கட்டும் என்று நினைத்தார். ஆனால் பல மாதங்கள் கழிந்து கல்கத்தாவில் அவனுக்கு நிறைய நண்பர்கள் கிடைத்து, கிராமத்து நினைவு மறந்த பிறகும்கூட, கதாதரன் படிப்பில் அக்கறை காட்டாதது அவருக்கு வருத்தத்தையும் கோபத்தையும் உண்டாக்கியது. ஒரு காலத்தில் வசதியான நிலையில் இருந்த அவர்கள் குடும்பம் இப்போது சிறிது சிறிதாக அன்றாடம் உழைத்தால் மட்டுமே சாப்பிட முடியும் என்ற வறிய நிலைக்கு வந்து விட்டது. இவ்வளவு வளர்ந்த பிறகும் எந்தத் தொழிலையும் கற்றுக் கொள்ளாமல் உணவுக்கும் உடைக்கும் பிறரை எதிர்பார்த்து இருப்பது அவருக்கோ குடும்பத்திற்கோ நல்லதல்ல. கதாதரன் ஏதாவது தொழிலைக் கற்றுக் கொண்டு சம்பாதித்தால் குடும்பத்திற்கு எவ்வளவோ உதவியாக இருக்கும். அவருடைய மூத்த தம்பி இராமேஸ்வரரோ படிப்பில் திறமையானவராக இருந்தும் சம்பாதிப்பதில் திறமை இல்லாதவர். கதாதரனின் நடவடிக்கையும் அவருக்கு நம்பிக்கையைத் தரவில்லை. அவர் ஒருவரே குடும்பம் முழுவதற்கும் கடுமையாக உழைக்க வேண்டியிருந்தது. அத்துடன் அவருக்கும் வயதாகிக் கொண்டே வந்தது. தாம் நன்றாக நடமாடிக் கொண்டிருக்கும்போதே தம் தம்பி வாழ்க்கையை நடத்துவதற்குச் சம்பாதிப்பதற்கான சாஸ்திரங்களைக் கற்க வேண்டுமே எனக் கவலைப்பட்டார்.

ஒரு நாள் அவர் கதாதரனை அருகில் அழைத்து, தங்களுக்கு உரியதான புரோகிதத் தொழிலையோ, சோதிடத் தொழிலையோ செய்வதற்கான கல்வியைப் பெறாமல் இன்னும் விளையாட்டுப் போக்கிலேயே இருப்பதற்காகக் கடிந்து கொண்டார். உலகம் எவ்வளவு பயங்கரமானது என்பதையும் வறுமை எவ்வளவு கொடியது என்பதையும் வாழ்ந்து அனுபவித்த அவர் அதைத் தம்பியிடம் கூறி மிகுந்த ஆர்வத்தோடு

சாஸ்திரக்கல்வியைக்கற்கும்படி வற்புறுத்தினர். அமைதியாக எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த கதாதரன் இராம்குமாரைப் பார்த்து, ''சாப்பாடு, சாப்பாடு என்று கூறுகிறீர்களே! வெறும் சாப்பாட்டை மட்டும் தரும் படிப்பை வைத்துக்கொண்டு நான் என்ன செய்ய முடியும்? என் இதயத்தை எது ஒளிமயமாக்குகிறதோ, என் வாழ்நாளின் முழுப் பசியையும் ஒரே நேரத்தில் தீர்க்கும் உணவை எந்தக் கல்வி தருகிறதோ அந்தக் கல்வியே எனக்கு வேண்டும். வேறு எந்தக் கல்வியும் எனக்குத் தேவையில்லை'' என்ருன்.

இராம்குமாரால் கதாதரனைப் புரிந்து கொள்ள முடிய வில்லை. அவன் பேசுவது அவருக்குப் பைத்தியக்காரத் தன மாகத் தோன்றியது. ஏனென்ருல் கதாதரனின் மனநிலையை அவர் சிறிதும் அறிந்து கொள்ளாததுதான் காரணம். கதா தரன் உலகைப் பார்த்த விதமும் இராம்குமார் உலகைப் பார்த்த விதமும் முற்றிலும் வேறுபட்டவை. மிகவும் படித்த பண்டிதர்கள் படிப்பையெல்லாம் அவர்கள் வயிற்றுக் கும் வசதிக்கும் மட்டுமே பயன்படுத்துவதைக் கதாதரன் கமார்புகூரிலேயே கண்டிருந்தான்; கல்கத்தாவிலும் அந்த நிலையையே கண்டான். சில மாதங்களில் கல்கத்தாவில் தங் கியதும் அங்கு வாழும் மக்களின் மனப் போக்கும் ஆசை களும் அவனுக்குத் தெளிவாகத் தெரிந்துவிட்டன. அவர்கள் அழியக் கூடிய உலக இன்பங்களை நாடி ஓடுகிருர்கள்; பேருக் கும் புகழுக்கும் சண்டையிட்டுக்கொண்டு சாகிருர்கள். எந்த நேரமும் இன்பத்தைத் தேடுவது, பணத்திலும் பலத்திலும் பெரியவனே எங்கும் வாழ முடிவது—இவைகளே நகர வாழ்வின் இயல்பாக இருப்பதையும் கண்டான். இதற் காகவே விலைமதிக்க முடியாத மனிதப் பிறவி பாழடிக்கப் பட்டது. கடவுள், ஆன்மிகம், சமயம் என்பதெல்லாம் வெறும் பேச்சாக இருந்தன. சாஸ்திரங்களோ மூட நம்பிக்கைகளை வளர்ப்பவைகளாக இருந்தன. கதாதரனை இராம்குமார் இப்படிப்பட்ட நூல்களையே படிக்கச் சொன்னுர். ஆனுல் கதாதரன் மனமோ அன்ருடச் சோற்று வாழ்க்கையிலிருந்து விலகி, எப்போதும் உயர்ந்த தெய்விக வாழ்விற்காக ஏங்கிக் கொண்டிருந்ததால் அத்தகைய கல்வியைக் கற்பதில் ஆர்வம் கொள்ளவில்லை.

நாளாக நாளாக அவன், தான் பிறந்ததன் நோக்கம் பசிக் குச் சாப்பிட்டு, குளிருக்கு உடுத்தி, ஓய்விற்குத் தூங்கி, முடிவு நாள் வந்ததும் சாகும் வாழ்க்கைக்காக அல்ல; தன்னுடைய இலட்சியம் மற்றவர்களிடமிருந்து முழுவதும் மாறுபட்டது

என்பதை உணர்ந்தான். அடிக்கடித் தன்னையே, 'இவர்கள் படிக்கச் சொல்லும் இந்தப் படிப்பு என் தந்தையைப் போல் என்னைக் கடவுளுக்கு அஞ்சுபவனாகவும் நேர்மையாக வாழ்பவனுமாக ஆக்குமா?' என்று கேட்பான். 'இல்லை' என்பதே அவனுடைய மனம் கூறிய பதிலாகும். 'இந்தப் படிப்பால் நான் கடவுளைக் காணும் திண்மையைப் பெற்றிருக்கிறேனா? உலகில் உள்ள அறியாமையிலிருந்தும் ஆசைகளிலிருந்தும் விடுபட்டிருக்கிறேனா?' என்று கேட்பான். அதற்கும் 'இல்லை' என்ற பதிலையே அவன் மனம் எதிரொலித்தது. 'அப்படியென்றால் கடவுளைக் காண உதவாத, உலகத் துன்பங்களிலிருந்து விடுபடுவதற்கு உதவாத, இந்தப் படிப்பைக் கற்றுக்கொண்டு நான் என்ன செய்வது? கடவுளைக் காணவேண்டும் என்னும் என் இலட்சியத்திற்கு உதவாமல் அதற்கு மாறாக உலக வாழ்வில் என்னைச் சிக்க வைக்கும் படிப்பைப் படித்து நான் கற்றவனாக இருப்பதைவிட வாழ்நாள் முழுவதும் படிக்காதவனாகவே இருந்துவிடுகிறேன்' என்ற முடிவிற்கு அவன் வந்தான். சோறும், தண்ணீருமே மனித வாழ்வின் இலட்சியமல்ல. அது நோயிலிருந்தும் சாவிலிருந்தும் ஒருவனைக் காப்பாற்றாது. தன்னை இந்த நோயையும் சாவையும் தாண்டி எந்தக் கல்வி அழைத்துச் செல்லுகிறதோ, அந்தக் கல்வியே தனக்கு வேண்டும். தன் சகோதரனின் அறையில் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் புத்தகங்களிலும், அவற்றைப் படித்த பண்டிதர்களின் வாழ்விலும் இருள் படிந்திருக்கிறதே தவிர, ஒளியே இல்லை என்பதை அவன் கண்டான். அவைகளால் இலட்சியத்தை அடைவதற்கான வழியைக் கதாதரனுக்குக் காட்ட முடியவில்லை.

எனவே தன் அண்ணன் கேட்ட கேள்விக்குச் சிறிதும் தயங்காமல் மிகுந்த உறுதியோடு மேற்கூறிய பதிலைச் சொன்னான். இவ்வளவு நாட்களாகத் தம் எதிரே நின்று உரக்கக் கூடப் பேசாத தம்பி இவ்வளவு துணிச்சலாகவும், உறுதியாகவும் பேசியது கேட்டு இராம்குமார் மிகுந்த ஆச்சரியம் அடைந்தார். அவருக்கு, என்ன சொல்வது என்பதே புரியவில்லை. என்றாலும் கல்கத்தாவில் சாஸ்திரப்படிப்பு எவ்வளவு வசதியான வாழ்வைச் சுலபமாகக் கொண்டு வருகிறது என்பதை அழகாகக் கற்பனைகளோடு சொல்லிச் சொல்லி தன் தம்பியை படிக்குமாறு வேண்டினார்; வாதங்கள் செய்தார்.

இராம்குமாரின் அந்த வாதத்தால் கதாதரனை இணங்கச் செய்ய முடியவில்லை. தன் முடிவிலிருந்து அவனைச் சிறிதுகூட

அவரால் மாற்ற முடியவில்லை. பலவாறு முயன்று கடைசியில் கதாதரனுக்குக் கல்வி கற்பிக்கும் முயற்சியையே இராம்குமார் விட்டு விட்டார்.

இரண்டு ஆண்டுகள் கழிந்தன. இராம்குமாரின் வருவாய் உயர்வதற்குப் பதில் மேலும் மேலும் மோசமாகிக் கொண்டே வந்தது. திருப்பிக் கொடுக்க முடியாத வகையில் கடனும் வளர்ந்தது. பரம்பரைத் தொழிலான அர்ச்சகர் வேலையும், ஆசிரியர் வேலையும் போதிய வருமானத்தைத் தரவில்லை. வேறு எந்தத் தொழிலும் செய்ய அவருக்குத் தெரியவில்லை. பொறுப்பு முழுவதையும் தங்கள் குலதெய்வமான இரகுவீரரிடம் ஒப்படைத்துவிட்டு, நடப்பது நடக்கட்டும் என்று அமைதியாக இருந்தார். நெடுநாள் அவரால் அமைதியாக இருக்க முடியவில்லை. வருவாய் இல்லாமையும் வளர்ந்த கடனும் அவரால் பொறுக்க முடியாமல் எல்லையைக் கடந்தபோது சற்றும் எதிர்பாராத இடத்திலிருந்து எதிர்பாராத வகையில் உதவி அவரைத் தேடி வந்தது. அது கதாதரன் வாழ்க்கையிலும் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியது.

# 7. தட்சிணேசுவரக் காளி கோயில்

கல்கத்தாவில் ஜான்பஜார் என்னும் பகுதியில் ராணி ராசமணி என்னும் பணக்கார விதவை, தம் நான்கு மகள்களோடு வாழ்ந்து வந்தார். அவருடைய கணவர் ராய் ராஜ்சந்திரதாஸ் காலமானதும் அவர் விட்டுச் சென்ற பெரும் சொத்துக்களான பல எஸ்டேட்டுகளை அவர் மிகுந்த ஊக்கத்தோடும் திறமையோடும் கண்காணித்து மேலும் மேலும் வளர்த்து வந்தார். அவருக்குச் சிறந்த வியாபாரத் திறமையும் அளவற்ற துணிச்சலும் தைரியமும் இருந்ததுபோலவே, அளவற்ற கடவுள் பக்தியும் தம் மதமான இந்து சமயத்தில் ஆழ்ந்த பற்றும், ஏழை எளியவர்களிடம் மிக அதிகமான அன்பும் கருணையும் இருந்தன. தாராளமாக வாரி வழங்கும் அவருடைய தரும குணத்திற்கு எடுத்துக் காட்டாக இன்றும் கல்கத்தாவில் அவர் செய்த பல தருமச் செயல்கள் பொது மக்களுக்குப் பயன்பட்டு வருகின்றன.

இவ்வளவு செல்வமும் திறமையும் பெற்ற அவருக்கு மிகுந்த அதிர்ஷ்டவசத்தால் அவரைப் போலவே எல்லாத் திறமைகளும் கடவுள் பக்தியும் நிறைந்த மதுர்நாத் விஸ்வாஸ் என்பவர் மருமகனாகக் கிடைத்தார். சொத்துக்களைப் பராமரிப்பதிலும், வியாபாரத்திலும், மிகுந்த திறமை உடையவரான அவர் ராணியின் அளவற்ற நம்பிக்கைக்குப் பாத்திரமாகி அவருடைய வலது கை போன்று விளங்கி, எல்லாக் காரியங்களையும் கவனித்துக் கொண்டார். ராணி தம் மூன்றாவது மகளை அவருக்குத் திருமணம் செய்து கொடுத்திருந்தார். அந்த மகள் திடீரென இறந்து விடவே திறமைசாலியாகத் தம் நிழல்போல் இருந்த மதுரைத் தம் நிர்வாகத்தில் இழந்துவிடாமல் இருக்கத் தம்முடைய நான்காவது மகள் ஜகதம்பாவை அவருக்கு மறுபடியும் திருமணம் செய்து கொடுத்தார்.

அன்னை காளியே ராசமணியின் இஷ்ட தெய்வம். தம்முடைய எஸ்டேட்டின் முத்திரையிலும் காளியின் உருவத்தையே அவர் அமைத்திருந்தார். பல ஆண்டுகளாக அவர் காசிக்கு யாத்திரை செல்லப் பெரிதும் விரும்பிக் கொண்டிருந்தார். அதற்கான பணத்தைக்கூட ஒதுக்கி

வைத்துவிட்டார். ஆனுல் பரந்த சொத்துக்களை நிர்வகிக்கும் பொறுப்பில் ஒன்று மாற்றி ஒன்ருகப் பல முக்கியமான காரியங்கள் தொடர்ந்து வந்ததால் உடனடியாகச் செல்ல முடியாமல், காலம் கடந்து கொண்டே வந்தது. ராணி காசி சென்று திரும்ப ஆகும் பல மாதங்கள் வரையிலும் மதுர் சொத்துக்களின் நிர்வாகச் சுமையை ஏற்றுக் கொள்ள முன் வந்ததும், ராணி காசிக்குப் புறப்படுவதற்கான ஏற்பாடுகளில் முனைந்தார். பயணத்திற்கு எல்லாம் தயாராகிவிட்டன. புறப்பட வேண்டியதுதான். அப்போது ஒரு நாள் இரவு, ராணி கனவு ஒன்று கண்டார். அவரது இஷ்ட தெய்வமான காளி கனவில் தோன்றி காசிக்குச் செல்லும் அவருடைய பயணத்தை நிறுத்தும்படியும், அதற்குப் பதில் கங்கைக் கரையில் தனக்கு ஒரு கோயில் கட்டும்படியும், அவர் கட்டும் அந்தக் கோயிலின் சிலையில் தான் சாந்நியத்தோடு இருந்து அவருக்குக் காட்சி தருவதாகவும் கூறினுள்.

இது பற்றி மற்ருெரு நிகழ்ச்சியும் கூறப்படுகிறது. ராணி காசிக்குப் புறப்பட்டு விட்டாரென்றும் கங்கை நதியில் அவர் படகு தட்சிணேசுவரம் என்னும் கிராமம் அருகே சென்றதும் அவர் மேற்கண்ட கனவைக் கண்டார் என்றும் கூறுகிருர்கள். இந்த நிகழ்ச்சிகளில் உண்மை எவ்வளவு என்பது தெரியாவிட்டாலும் ராணி தம் பயணத்தை நிறுத்தி விட்டது உண்மை; காளிகோயில் கட்ட முனைந்ததும் உண்மை.

1847-ஆம் ஆண்டு கங்கைக்கரையில் தட்சிணேசுவரம் என்னும் கிராமத்தில் ஹேஸ்டி' என்னும் ஆங்கிலேயரிடமிருந்து இருபது ஏக்கர் நிலத்தை வாங்கி ராணி மிகப் பெரிய கோயிலைக் கட்ட ஆரம்பித்தார். கோயில் கட்டி முடிக்க எட்டு ஆண்டுகள் பிடித்தன.

தட்சிணேசுவரம் என்பது கல்கத்தாவிற்கு நான்கு மைல் தொலைவில் உள்ள ஒரு கிராமம். ராணி கட்டிய அந்தக் கோயிலுக்கு மேற்கே கங்கை ஓடுகிறது. கோயில் தோட்டத்துள்ளே கங்கையில் இறங்கும் படிகள் உள்ளன. கோயிலுக்குக் கங்கை வழியாகப் படகில் வரும் ஒருவர் இந்தப் படித்துறையில் இறங்கி, படிகள் வழியாக மேலேறிச் செல்லவேண்டும். அந்த வழியே சென்ருல் இரண்டு பக்கங்களிலும் வடக்கிலும் தெற்கிலுமாகப் பன்னிரண்டு சிவாலயங்கள் அமைந்துள்ளன. அதன் இடையே செல்லும் பாதை கோயிலுக்குள் அழைத்துச் செல்லும். இங்கே செங்கற்கள் பதித்த மிகப் பரந்த

அழகான திறந்த வெளி இருக்கிறது. இந்த வெளியின் வடக்கே இராதாகாந்தர் என்ற பெயரால் அழைக்கப் படும் கிருஷ்ணர் கோயிலும், தெற்கில் காளி கோயிலும் அமைந்துள்ளன.

காளிகோயிலில் மிக் அழகு வாய்ந்த ஆயிரம் இதழ்கள் கொண்ட வெள்ளைத் தாமரையின்மீது சிவபெருமான் மல்லாந்து படுத்திருக்கிறார். அவரது மார்பின்மீது தெற்கு நோக்கியபடி ஒரே கருங்கல்லில் செதுக்கப்பட்ட பவதாரிணி என்ற பெயரால் அழைக்கப்படும் அன்னை காளியின் சிலை உள்ளது. இந்தக் கோயிலின்மீது ஒன்பது கோபுரங்கள் உள்ளன. இதன்முன் செவ்வக வடிவில் தாழ்வாரமும் பிரம்மாண்டமான தூண்களால் தாங்கப்பட்ட மண்டபமும் உள்ளன.

கோயில் தாழ்வாரத்தின் தெற்கு, கிழக்கு, வடக்கு முதலிய திசைகளில் கோயிலில் தங்கும் வேலைக்காரர்கள் சாமான்கள் வைக்கவும் சமையல் செய்யவும் மற்றக் காரியங்களுக்கும் பல அறைகள் கட்டப்பட்டுள்ளன. அந்தக் கோயில் தாழ்வார வெளியின் தென் மேற்கு மூலையில், தெற்கேயுள்ள வரிசையான சிவாலயங்களை அடுத்து நம் கவனத்தை ஈர்க்கின்ற அறை ஒன்று உள்ளது. இந்த அறையில்தான் ஸ்ரீராமகிருஷ்ணர் முப் பத்துமூன்று ஆண்டுகளுக்குமேல் வாழ்ந்தார். இந்த அறை யின் மேற்கே அரைவட்டத் தாழ்வாரம் ஒன்று உள்ளது. அங்கு நின்றுகொண்டே எதிரே ஓடும் கங்கை யைப் பார்க்கலாம். அதன் எதிரே ஒரு பாதை வடக்கும் தெற்குமாகச் செல்லுகிறது. அதற்கு மேற்கே பூந்தோட் டம் அமைந்துள்ளது. அதன் கீழே கங்கை ஓடுகிறது. கோயிலின் பெரிய மதிலுக்கு வெளியே ராணி ராசமணி குடும்பத்தார் வந்து தங்கும் மாளிகை உள்ளது. கோயி லின் மதிலை ஒட்டித் தென்மேற்கில் ஒன்றும், வடமேற்கில் ஒன்றுமாக இரு வாத்திய மண்டபங்கள் உள்ளன. கோயில் பூஜை வேளைகளில் இங்கு வாத்தியங்கள் வாசிக்கப்படும். தோட்டத்தில் இரண்டு குளங்களும் பல மரங்களும் பல செடி கொடிகளும் வளர்ந்து மனத்தைக் கவரும் அழகோடு விளங்குகின்றன. இங்குள்ள மரங்களில் மிகவும் குறிப்பிடத்தக்கது ஸ்ரீராமகிருஷ்ணருடைய வாழ்க்கையில் முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கும் ஆலமரம். இதை யடுத்து முக்கியமானது கோயிலின் வடக்கு எல்லையில் உள்ள வில்வமரம். இவற்றைப்பற்றி நாம் பிறகு காணப் போகிறோம்.

இந்தக் கோயிலின் கும்பாபிஷேக விழா 1855-ஆம் ஆண்டு ஸ்நான யாத்திரை புனித நாளான மே மாதம் 3-ஆம் நாள் என நிச்சயிக்கப்பட்டது. எல்லாம் தயாராகி விட்டது. ராணியின் உள்ளம் அளவற்ற ஆனந்தத்தில் மிதந்தது. அன்னை காளி கனவில் தோன்றி எந்தக் கோயிலைக் கட்டினால் அங்கு நிறுவும் சிலையில் தாமே இருந்து அவரை ஆசிர்வதிப்பதாகச் சொன்னாளோ அந்தக் கோயில் அல்லவா இது? ஆனால் இந்த நேரத்தில் எழுந்த எதிர்பாராத சில தடைகளால் அவர் திட்டமே குலைந்து போகும்போல் இருந்தது.

மிகுந்த செல்வமும் செல்வாக்கும் திறமையும் கொண்ட ராணி, காளியின் கட்டளைக்கு இணங்கி வேகமாகவும் மிகுந்த அழகோடும், பெரிய கோயில் கட்டும் பணியில் மூழ்கியதில் மிக முக்கியமான ஒன்றை மறந்து விட்டார். ராணி சூத்திர வகுப்பைச் சேர்ந்தவர். சூத்திரர்கள் கட்டும் கோயிலில் எந்த வைதிக அந்தணரும் கோயில் பூசாரியாக வரவோ, அங்கே படைக்கப்படும் நைவேத்தியங்களை ஏற்கவோ மாட்டார்கள். ஏனென்றால் அந்தக் காலத்தில் நிலவிய மிகக் கடினமான வைதிக சாஸ்திர விதிப்படி அவை எல்லாம் தடுக்கப்பட்ட காரியங்களாகும். சூத்திரர் கட்டும் கோயிலில் அந்தணர் பூசாரியாக இருப்பதும் அங்குத் தரப்படும் பொருள்களை ஏற்பதும் மிக இழிவான செயல்கள் என்று கருதப்பட்டன. அதனால் கோயில் கும்பாபிஷேகத்திற்கு எல்லாம் தயாரான நேரத்தில், அதனைச் செய்து முடிக்க எந்த அந்தணர்களும் வராமல் எல்லாமே பாழாகிவிடும் போலிருந்தது. இந்த எதிர்பாராத செயலைக் கண்டு ராணி பெரும் வேதனையும் குழப்பமும் அடைந்தார்.

கோயில் கட்டி முடிந்து, சிலைகளைப் பீடத்தில் அமர்த்திக் கும்பாபிஷேகம் செய்ததும், தாமே சமைத்த உணவை நைவேத்தியமாகப் படைக்க வேண்டும் என்னும் ஆசையை ராணி யாரிடமும் வெளிப்படுத்தாமல் கோயில் கட்டத் துவங்கிய நாளிலிருந்தே தமக்குள் இரகசியமாக வைத்திருந்தார். இப்போது அந்த ஆசையும் நிறைவேறாத நிலை உண்டாகி விட்டது. இப்போது கோயிலில் சிலைகளைப் பிரதிஷ்டை செய்ய யாரும் வரவில்லையென்றால் கோயிலின் கும்பாபிஷேகமும் நின்றுவிடும். அப்படி யாராவது வந்து செய்வதானாலும் அவர்கள் சமைத்த உணவையேதான் முதலில் காளிக்குப் படைப்பார்களே தவிர, வேறு யார் சமைத்த

உணவையும் படைக்க, யாரையும் எந்தக் காரணத்திற்காக வும் அனுமதிக்கமாட்டார்கள். இந்த நினைவும் ராணியை மிகவும் வருத்தியது.

கும்பாபிஷேகத்திற்கான நாள் நெருங்கிக் கொண்டே இருந்தது. வேறு எந்தப் பெண்ணாக இருந்தாலும் பயங் கரமான இந்த நெருக்கடியில் மனம் கலங்கிச் செயலற்றுப் போயிருப்பார்கள்; அல்லது தன் விருப்பங்கள் அனைத்தை யும் விட்டுவிட்டு, பிறர் சொல்வதை ஏற்றுக் கும்பாபிஷே கத்திற்கு ஏற்பாடு செய்திருப்பார்கள். ஆனால் எத்தகைய துன்பத்தையும் எதிர்கொண்டு தாம் நினைத்ததைச் செய்து முடிக்கும் இயல்பு படைத்த ராணி தம் விருப்பப்படி கும்பாபிஷேகத்திற்கான காரியங்களில் ஆழ்ந்து ஈடுபட்டார். கல்கத்தாவிலும் அதைச் சுற்றிலும் வாழ்ந்த, சாஸ்திரங்களில் மிகுந்த புலமை படைத்த பண் டிதர்களுக்குத் தம்முடைய நிலையைப் பணிவோடு கடிதம் மூலம் விளக்கித் தமக்கு உதவி செய்து வழிகாட்டுமாறு வேண்டினார். ஒருவரிடமிருந்தும் சாதகமான பதில் வர வில்லை. ராணி பெரும் கவலையில் ஆழ்ந்தார். நெடு நாட்கள் உழைத்து உருவாக்கியதும் தம் வாழ்வின் இலட்சியமுமான இந்த விழா நின்று விடுமோ என்று அஞ்சினார். இந்த நேரத்தில்தான் கல்கத்தாவிலிருந்த இராம்குமாரிடமிருந்து ராணிக்கு ஒரு கடிதம் வந்தது. அதில், கோயிலின் உரிமையை ராணி தம்மிடம் வைத்துக்கொண்டு அதை நிர்வகிப்பதற்கு வேண்டிய சொத்துக்களை அந்தணர் ஒருவருக்குத் தானம் கொடுத்து விட்டால், அந்தணர்களே கோயிலில் கும்பாபிஷேகம் நடத்தலாம். இதைச் சாஸ்திரம் ஏற்றுக் கொள்கிறது என்று எழுதப் பட்டிருந்தது. இந்தக் கருத்தை அந்தக் காலத்தில் கூறுவதற்கு ஒருவருக்கு மிகுந்த தைரியம் வேண் டும். இதையும் அந்தணர்கள் எதிர்த்தார்கள். ஆனால் சாஸ்திரம் ஏற்றுக் கொள்ளும் ஒரு வழி கிடைத்தது பற்றி ராணி மிகவும் மகிழ்ந்தார்.

சாஸ்திரம் இடம் கொடுத்தாலும் புலமையும் தகுதியும் உள்ள அந்தணர்கள் யாரும் கோயில் பூசாரியாக வர மறுத்துவிட்டார்கள். இராம்குமார் கூறிய வழியை யும் கிண்டலாகப் பேசினார்கள். எப்படியாவது ஒருவர் துணிந்து வர நினைத்தாலும் மற்றப் பிராமணர்கள் தடுத் தார்கள்.

இந்தக் கடுமையான துன்பத்தில் ராணியின் எஸ்டேட்

டில் மேலாளராக இருந்த மகேஷ் சந்திரர் என்னும் அந்தணர் ராணிக்கு உதவ முன்வந்தார். அவருடைய ஊர் இராம்குமாரின் கமார்புகூருக்கு அருகில் உள்ள சிகோராகும். இராம்குமாரும் அவரும் இளமைக் கால நண்பர்கள். முதலில் யாராவது ஒரு பிராமணர் கோயில் பூஜை செய்வதற்கு முன்வந்தால் பிறகு மற்றவர்களும் முன் வருவார்கள் என்று எண்ணிய மகேஷ், தம் அண்ணனை இராதாகாந்தர் கோயிலுக்கு அர்ச்சகராக்கினார். ஆனால் காளி கோயிலுக்குச் சரியான அர்ச்சகரே கிடைக்கவில்லை. தம் இதயத்தைப் பிழிந்து கட்டிய அன்னை காளியின் கோயிலுக்குச் சாஸ்திர ஞானத்திலும் தெய்விக ஆற்றலிலும் புகழிலும் சிறந்த ஒருவரையே அர்ச்சகராக்க ராணி பெரிதும் விரும்பினார். எவ்வளவோ இடங்களில் பலவாறாக முயன்றும் பயனேதும் கிடைக்கவில்லை. இறுதியில் மகேஷ் சந்திரருக்கு இராம்குமாரின் நினைவு வந்தது. அவருடைய ஆழ்ந்த சாஸ்திர ஞானமும், காளியிடம் அவருக்குள்ள பக்தியும் கல்கத்தா பிராமணர்களிடையே அவருக்குள்ள மரியாதையும் மகேஷுக்குத் தெரியும். ஆனால் இராம்குமார் மிகவும் வைதிகமான குடும்பத்தில் பிறந்தவர். சாஸ்திர விதியை அப்படியே தம் வாழ்வில் கடைப்பிடிப்பவர். அப்படிப்பட்டவர் ஒரு சூத்திரப் பெண்மணி கட்டிய கோயிலில் பூஜை செய்யச் சம்மதிப்பாரா? அதையெல்லாம் நினைத்துக் கொண்டிருக்க இப்போது நேரமில்லை.

ராணியிடம் சென்றார் மகேஷ். இராம்குமார் ஒருவரால்தான் காளி கோயில் அர்ச்சகராக இருக்க முடியும் என்று கூறி, அவரைக் காளி கோயில் பூஜை செய்ய வேண்டி ஒரு கடிதம் எழுதித் தம்மிடம் கொடுக்கும்படி ராணியிடம் கூறினார். ராணி மிகுந்த மகிழ்ச்சியோடும் உருக்கத்தோடும் பணிவோடும் இராம்குமார் காளி கோயிலில் பூஜை செய்ய வேண்டுமென்று பலமுறை வேண்டிக் கடிதம் ஒன்று எழுதி மகேஷிடம் கொடுத்தார். மகேஷ் அதை எடுத்துக் கொண்டு இராம்குமாரிடம் சென்றார். நிலைமையை விளக்கிக் கூறினார். ராணியின் சிறந்த பக்தியையும் தரும குணத்தையும் இப்போது அவர் படும் மிகுந்த துன்பத்தையும் கூறினார். யாரும் ஒத்துக் கொள்ளாததால் கும்பாபிஷேகமே நின்று கோயிலும் பாழ்பட்டுப் போகக் கூடிய நிலையை விவரித்து அவரைப் வேண்டினார். இராம்குமார் இசையவே இல்லை. மகேஷ் மிகவும் கெஞ்சிப் பார்த்தார். பலனே இல்லை.

இறுதியில் கும்பாபிஷேகத்தை மட்டும் தாம் நடத்துவதாக வும் மறுநாள் வேறு ஒருவரைப் பார்த்துக் கொள்ள வேண்டுமென்றும் கூறி, அந்த நிபந்தனைக்கு இணங்கினல் மட்டுமே வருவதாகக் கூறினர். வேறு வழியில்லாது மகேஷும் இணங்கினர்.

குறிப்பிட்ட நாளில் கும்பாபிஷேகம் மிகச் சிறப்பாக நடந்தது. ஆயிரக்கணக்கான ஏழைகளுக்குச் சுவையான விருந்து அளிக்கப்பட்டது. விழாவைச் சிறப்பிக்க நெடுந் தொலைவிலிருந்தும் புகழ்பெற்ற அந்தணர்கள் பலர் வந் திருந்தனர். ராணி அவர்களுக்கெல்லாம் உரிய முறையில் மிகுதியான பரிசுகள் வழங்கி மரியாதை செய்தார். அந்தக் காலத்தில் இன்றைக்கு நூறு ஆண்டுகளுக்கு முன்பே கோயில் கட்டவும் விழாவுக்குமாக ஒன்பது இலட்ச ரூபாய் செலவு செய்யப்பட்டது. மேலும் இரண்டு லட்சத்து இருபத்தாறுயிரம் ரூபாய்க்கு வளமான இரண்டு கிராமங் களை வாங்கி, கோயிலின் பராமரிப்புக்காக கோயிலுக்கு எழுதி வைத்தார் ராணி.

கோயில் கும்பாபிஷேகம் முடிந்தது. மிக அழகான காளியின் திருவுருவம் பீடத்தில் நிறுவப்பட்டது. ராணியின் கனவு நிறைவுற்றது. பக்திமயமான அவருடைய உள்ளம் பேரானந்தத்தில் மூழ்கியது. அவருடைய மகத்தான காளி பக்தியும் இன்னும் கொஞ்ச நாளில் அத்திருவுருவிற்கு அர்ச்சகராக வரப் போகிறவரின் ஒப்பற்ற பக்தியும் உண் மையிலேயே அந்தக் கற்சிலையை உயிருள்ள காளியாக மாற்றப் போகின்றன. தோன்றிய நாளிலிருந்து இன்னும் எவ்வளவோ காலம் காலமாக அந்தக் கோயில் எத்தனையோ பேருக்குப் புகலிடமாக அமையப் போகிறது. அதனுடைய புனிதமான சூழல், அழகு செறியும் பூந்தோட்டம், மரங்கள், தெய்விக கங்கை, இவற்றுலும் இவை அனைத்திற்கும் மேலாக வெகு விரைவில் அங்கு வந்து அந்த இடத்தைத் தன் ஆன்மிகத்தால் ஆசீர்வதிக்க இருக்கும் ஒரு தெய்வ மனிதராலும் அந்தக் கோயில் மிகப் பெரிய புண்ணியத் தலமாக மாறி ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கும் சாத கர்களுக்கும் சாதுக்களுக்கும் புகலிடமாக இருக்கப் போகிறது.

ஸ்ரீராமகிருஷ்ணர் இந்தக் கோயிலின் கும்பாபிஷேக விழாவைப் பற்றித் தம் சீடர்களிடம் அடிக்கடி கூறுவார். ராணி காசிக்குச் செல்வதற்காகச் செய்த மிகப் பெரிய ஏற்பாடுகளையும், அவர்களையும் வேண்டிய

பொருள்களையும் சுமந்து செல்ல நூற்றியொரு படகுகளை அவர் ஏற்பாடு செய்ததையும், பயணம் துவங்கும் முன்னல் இரவு காளி அவர் கனவில் தோன்றிப் பயணத்தை நிறுத்தும்படிக் கூறியதையும் அவர் கூறியிருக்கிருர். மேலும் அவர் கூறும்போது கோயில் கட்டுவதற்கு மிகவும் புனிதமானது என்று கங்கையின் மேற்குக் கரையில் பல் வேறு இடங்களை ராணி தேடியதையும், அங்கே ஓடிய கங்கையைத் தங்கள் ஆதிக்கத்தின் கீழ் வைத்திருந்த ஜமீன்தார்கள் ராணி கங்கையில் படித்துறை ஒன்று தனியே அமைக்க அனுமதிதர மறுத்தார்கள் என்பதால் கங்கையின் கிழக்கில் தற்போதுள்ள இடத்தை வாங்கியதை யும் கூறியுள்ளார்.

அதோடு கோயில் கட்டியுள்ள இடத்தைப் பற்றிச் சொல்லும்போது அது யாரும் வர பயப்படும் சுடுகாடாகவும் ஆமையின் முதுகு போன்று நடுப்புறம் மேடாகவும் ஓரங்கள் தாழ்ந்தும் இருந்தாகவும், அத்தகைய இடம் தாந்திரிக சாஸ்திரப்படிக் காளிகோயில் கட்ட மிகச் சிறந்த இடம் என்றும் ராணி ராசமணி காளியின் திருவுருவம் செய்வதற்கு ஆரம்பித்த நாளிலிருந்து உணவு, உறக்கம் இவைகளை மிகவும் குறைத்து ஒரு யோகினி போல் தியானம், ஜபம் இவைகளி லேயே நெடுங்காலம் ஈடுபட்டிருந்ததாகவும், காளியின் திருவு ருவம் செய்து நெடுங்காலம் ஒரு பெட்டியில் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்தாலும் கும்பாபிஷேகம் விரைவில் நடத்த முயற்சி எடுக்காமையால் ராணியின் கனவில் காளி தோன்றி அடுத்து வரும் நல்ல நாள் ஒன்றிலேயே கோயில் கும்பாபிஷே கத்தை நடத்தும்படிக் கூறியதாகவும் அதனுலேயே காளியை விடவும் விஷ்ணுவுக்கு மிகவும் சிறந்த நாளாக இருந்தும் அடுத்து வந்த நாளையே கும்பாபிஷேம் நடத்தக் குறித்த தாகவும், ராணி சூத்திரச் சாதியைச் சேர்ந்தவராதலால் தம் குல குருவான பிராமணருக்குக் கோயிலை தானமாகத் தந்தார் என்றும், கோயில் கும்பாபிஷேகம் மிகுந்த ஆடம் பரத்தோடும் பெரும் சிறப்போடும் நடந்தது என்றும், அப் போது செய்யப்பட்ட விளக்கு அலங்காரங்கள், வாத்தியம், மந்திர ஓசைகள், சங்கீர்த்தனங்கள், நடத்தப்பட்ட நாடகங் கள் ஆகியவற்றின் அற்புதமான சிறப்புகள்பற்றியும் ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியுள்ளார்.

இவ்வளவு சிறப்பாக நடந்து ஆயிரக்கணக்கான ஏழை களுக்குச் சுவையான விருந்தளிக்கப்பட்ட விழாவில் ஸ்ரீராம கிருஷ்ணர் கலந்து கொண்டார். ஆனல் அங்கு எதுவும்

சாப்பிடவே இல்லை. பட்டினியாகவே நிகழ்ச்சிகளைப் பார்த்தார். காலணுவுக்குப் பொரி வாங்கித் தின்றுவிட்டு அன்று மாலையில் ஜமாபுகூர் போய்ச் சேர்ந்தார். மறுநாள் பகல் முழுவதும் காளி கோயிலிலிருந்து அண்ணன் வருவார் என்று எதிர்பார்த்தார்; வராமல் போகவே அவரைத் தேடிக் கொண்டு தட்சிணேசுவரத்திற்குச் சென்றார். அங்கே சென்றதும் தம் அண்ணன் நிலையாகவே காளிகோயில் அர்ச்சகராக அமர்ந்து விட்டதை அறிந்து மிகுந்த கோபமும் ஆத்திரமும் அடைந்தார். புனிதமே உருவான தங்களுடைய குலப் பெருமையைக் கெடுத்து அழித்து விட்டதாகவும் உடனடியாக அந்த வேலையை விட்டுவிட்டுத் தம்முடன் கல்கத்தா திரும்புமாறும் ஆவேசத்தோடு பலவாறு பேசினார். இராம்குமாரோ அமைதியாக, தாம் செய்தது தவறில்லை என்று கூறி, சாஸ்திரங்களிலிருந்தெல்லாம் மேற்கோள் காட்டி நெடுநேரம் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வாதாடினார்; பலனில்லை. இறுதியில் காளி கோயிலில் பூசாரியாக இருப்பதா, வேண்டாமா என்பதைத் திருவுளச் சீட்டு போட்டுத் தெரிந்து கொள்வது என்று முடிவு செய்யப்பட்டது. அதன்படி எழுதிப் போட்ட சீட்டை ஸ்ரீராமகிருஷ்ணர் எடுத்தார். பூசாரியாக இருக்கலாம் என்ற சீட்டு வந்தது. நிபந்தனைப்படி அண்ணனோடு தட்சிணேசுவரத்தில் அவர் தங்கத் துவங்கினார். ஆனால் இராம்குமார் எவ்வளவோ வேண்டியும் கோயிலில் சமைத்த உணவை மட்டும் சாப்பிட மறுத்துவிட்டார். கடைசியில் இராம்குமார் கோயில் பண்டக சாலையிலிருந்து அரிசி. காய் கறி முதலியன வாங்கிக் கங்கைக் கரையில் சமைத்துச் சாப்பிடச் சொன்னார். எந்தத் தீட்டையும் கங்கை அகற்றி விடும் என்னும் ஸ்ரீராமகிருஷ்ணரின் ஆழ்ந்த நம்பிக்கை அந்த உணவுப் பொருள்களை வாங்கிச் சமைத்துச் சாப்பிட இணங்கச் செய்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரக் கோயிலில் சில நாட்கள் வெறுப்புடனே இருந்தார். பிறகு கோயிலின் அழகும், அதில் அமைந்துள்ள அழகான பூந்தோட்டமும், அருகில் ஓடும் புனிதமான கங்கையும் அவர் மனத்தைக் கவர ஆரம்பித்தன. கங்கையிடம் இளமை முதலே அவருக்கு அளவிட முடியாத பக்தி இருந்தது. அதுபற்றி அவர் அடிக்கடி, ''கங்கை நீர், பிரம்மம் போன்று தூய்மையானது. கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள்கூடக் கங்கைக் கரையில் வாழ்ந்தால் பக்தனாகி விடுவார்கள். கங்கையிலிருந்து எழும் குளிர்ச்சியான காற்று கரையில் எவ்வளவு தூரம் படி

கிறதோ; அவ்வளவு தூரமும் புனிதமாகிவிடும். அந்த எல்லேக்குள் வாழும் மக்கள் எந்தவித முயற்சியும் இல்லாமலே ஆன்மிக விழிப்படைவார்கள்'' என்று கூறுவார். அவருடைய பக்தர்களில் யாராவது கடவுளைப்பற்றிப் பேசாமல் நெடுநேரம் உலக விஷயங்களையே பேசினுலும், உலகப் பற்றுள்ள மக்களோடு பழகினுலும் அவர்களைச் சிறிது கங்கை நீரை அருந்தச் சொல்வார். அவரது அறையில் அப்படிப்பட்டவர்கள் உட்கார்ந்தால் அவர்கள் எழுந்து சென்றதும் அந்த இடத்தில் கங்கை நீரைத் தெளிப்பார். இத்தகைய பக்தி அவருக்குக் கங்கையிடம் சிறு வயதிலிருந்தே இருந்தது. காளிகோயில் இத்தகைய கங்கையின் கரையில் கட்டப்பட்டிருந்ததால் சில நாட்களுக்குள் அந்தக் கோயிலே அவர் மனம் விரும்பவும் ஆரம்பித்தது.

கோயில் பிரசாதத்தைச் சூத்திர உணவு என்று ஸ்ரீராமகிருஷ்ணர் ஒதுக்கியதைக் காணும்போது அவருடைய மன நிலேயைக் குறைபாடுடையது என்று சிலர் கருதலாம். உண்மையில் அப்படி ஒன்றும் இல்லே. சாஸ்திரத்தில் கூறப்பட்ட கருத்தின்மீது கொண்ட உறுதியான பற்றினுலேயே அவர் அப்படி நடந்து கொண்டார். மேலும் இப்படிப்பட்ட உறுதியான பக்தியே பின்னுல் அவரைப் படிப்படியாகக் காளிக்குப் படைத்த உணவாக இருந்தால் போதும், யார் சமைத்தாலும் யார் படைத்தாலும் அது தூய்மையானதே என்று விரும்பி உண்ணும் நிலேக்கு அழைத்துச் சென்றது. நாளுக்கு நாள் அவருடைய சாஸ்திர ஞானமும் தெய்விகக் காட்சியின் மூலம் பெற்ற தெளிவும் அதிகமாக அதிகமாக, உணவைப் பற்றிய இந்தக் கருத்துக் கள் யாவும் தாமாகவே மறைந்துவிட்டன.

# 8. அன்னை காளியின் திருமுன்னர்

சிவந்த நிறத்தோடு மனத்தைப் பறிக்கும் அழகுட னும் எளிமையுடனும் காளிகோயிலில் நடமாடிக் கொண் டிருக்கும் புதிய இளைஞரான ஸ்ரீராமகிருஷ்ணரின் உரு வத்தை அடிக்கடிக் கோயிலுக்கு வரும்போதெல்லாம் மதுர் கவனித்தார். அந்த இளைஞரின் நடவடிக்கைகளும் எழில் வாய்ந்த தெய்விகக் களையோடு விளங்கிய முகமும் மது ருக்கு அவர்மீது அவரை அறியாமலேயே ஒரு விசித்திர மான பாசத்தை உண்டாக்கியது. எளிமையான ஓர் ஏழைப் பிராமண இளைஞனிடத்தில் தமக்கு இத்தகைய பாசம் ஏற்படுவதைக் கண்டு மதுர் ஆச்சரியப்பட்டார். ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றி விசாரித்த போது இராம் குமாரின் தம்பிதான் அவர் என்பதை அறிந்ததும் காளி கோயிலில் அவரையும் ஒரு வேலைக்கு அமர்த்தி, நிரந்தர மாக அவரை அங்கேயே வைத்துக்கொள்ள நினைத் தார். அது குறித்து இராம்குமாரிடம் பேசினார். தம்பி யின் விசித்திரமான குணங்களை அறிந்திருந்த இராம்குமார் மதுரின் இந்தப் பேச்சில் ஆர்வம் காட்டவில்லை. அவ னுடைய சுதந்திர மனப்பான்மையையும், பணத்திற்காக ஒருவரிடமும் அடிமையாக இருக்காத குணத்தையும் கூறி மதுரின் முயற்சியைத் தடுத்தார். இதனால் முதலில் ஏமாற்ற மடைந்தாலும் நினைத்ததை எப்படியும் சாதிக்கும் மதுர் உரிய காலம் வரட்டும் என்று அமைதியாக இருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணருடைய பிற்கால வாழ்வில் இருபத்தைந்து ஆண்டுகள் அவருடைய மிக நெருங்கிய தோழனாகவும் தொண்டனாகவும் இருந்து அவரது சாதனைக் காலத்தில் அவரைக் கண்போல் காப்பாற்றப் போகிற ஒருவன் தட்சிணேசுவரக் கோயிலுக்கு இந்தக் காலத்தில் வந்து சேர்ந்தான். அவன் பெயர் இருதயன். ஸ்ரீராமகிருஷ்ணரின் அத்தை மகளான ஹேமாங்கினி தேவி யின் மகன். அவன் தன் மாமன் ஸ்ரீராமகிருஷ்ணரை விடச் சில வருடங்கள் இளையவன். இளம் வயதில் ஸ்ரீராம கிருஷ்ணருக்கு மிக மிக நெருங்கிய தோழனாக இருந்தவன். கமார்புகூருக்கு மிக அருகில் இருந்த சிஹோர்தான் அவ

னுடைய சொந்த ஊர். ஸ்ரீராமகிருஷ்ணர் அவனைக் காண அடிக்கடி அந்த ஊருக்குப் போவதுண்டு.

இப்போது இருதயன் பதினாறு வயது இளைஞன். வேலை தேடி அலைந்து கொண்டிருந்தான். தன் மாமன் மார் இருவரும் செல்வம் கொழிக்கும் ராணி ராசமணியின் காளி கோயிலில் இருப்பதை அறிந்து தனக்கும் அங்கு ஏதாவது வேலை கிடைக்குமா என்று பார்க்கத் தட்சிணேசு வரம் வந்தான். அவனைக் கண்டதும் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. இருதயனுக்கும் ஸ்ரீராம கிருஷ்ணரைக் கண்டதும் அளவற்ற ஆனந்தம் பொங்கியது. பிற்காலத்தில் அவனே கூறியுள்ளபடி ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய்விகக் கவர்ச்சியால் கவரப்பட்டு அவருடைய நிழல் போல் அவருடன் சுற்றிக் கொண்டிருந்தான். எல்லா வேலை களையும் இருவரும் சேர்ந்தே செய்தார்கள். கங்கையில் சேர்ந்தே குளித்து மகிழ்ந்தார்கள். சேர்ந்தே சுற்றினார்கள். சாப்பாட்டு நேரம் தவிர மற்ற நேரங்களில் எல்லாம் சேர்ந்தே இருப்பார்கள். சாப்பாட்டு வேளையில் ஸ்ரீராம கிருஷ்ணர், தாமே சமைத்த உணவை உட்கொள்ளக் கங்கைக் கரைக்குச் செல்வார். இருதயன் காளிகோயிலுக்குச் செல்வான்.

இருதயன் மிகவும் அறிவுக் கூர்மை உடையவன்; ஆளுக் கும் நேரத்திற்கும் தகுந்தாற்போல் திறமையாகச் செயல் படுவான். உடல் வலிமையும் உற்சாகமும் உடையவன். தன் மாமனுக்கு உதவுவதில் ஏற்படும் எந்தத் துன்பங்களை யும் மகிழ்ச்சியோடு ஏற்கும் மனம் உடையவன். கடவுளைக் காண ஸ்ரீராமகிருஷ்ணர் இனி செய்யப்போகும் கடு மையான சாதனைகள் ஒவ்வொன்றிலும் அவரைக் காக்கும் கவசம் போல இருக்கப் போகிறவன்.

அந்தக் காலத்தில்தான் மதுர் ஸ்ரீராமகிருஷ்ணரைக் காளிகோயிலில் அர்ச்சகராக்க நினைத்து அவரைக் கண் காணித்து வந்தார். இதை அறிந்த ஸ்ரீராமகிருஷ்ணரோ அவர் பார்வையில் படுவதையே தவிர்த்து வந்தார். பொம்மை செய்வதில் வல்லவரான ஸ்ரீராமகிருஷ்ணர் மிக அழகான சிவபெருமானின் சிலையொன்றைச் செய் தார். அதைக் கோயிலின் ஒரு பக்கத்தில் வைத்து அவரும் இருதயனும் வழிபடத் துவங்கினர். ஒரு நாள் எதேச்சை யாக அந்தப் பக்கம் வந்த மதுரின் கண்களில் இந்தச் சிலை பட்டது. அதன் அழகில் மிகவும் ஈடுபட்ட அவர் அதைச்

செய்தது ஸ்ரீராமகிருஷ்ணர் என்று அறிந்ததும் மிகுந்த வியப்பும் ஆச்சரியமும் அடைந்தார். காளி கோயிலில் அவரைப் பூசாரியாக்க வேண்டும் என்னும் ஆர்வம் அவரிடம் மேலும் அதிகமாகியது. அதற்கான வாய்ப்பை ஆவலோடு எதிர்நோக்கலானார்.

மதுரின் கண்களில் படுவதையே தவிர்த்து, பரந்த கோயிலில் அங்கும் இங்குமாகச் சுற்றி வந்த ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு நாள் மதுரின் கண்களில் பட்டுவிட்டார். பார்வையிலிருந்து மறைவதற்குள் மதுர் வேலைக்காரனை அனுப்பி அவரை அழைத்துவரச் சொன்னார். வேலைக்காரன் வந்து அழைத்ததும் மதுரிடம் போக ஸ்ரீராமகிருஷ்ணர் மிகவும் தயங்கினார். இருதயன் காரணம் கேட்டதும் மதுர் தம்மைக் கோயில் அர்ச்சகராக்க விரும்புவதைக் கூறி, தாம் அந்த வேலையைச் செய்ய விரும்பவில்லை என்பதையும் கூறினார். வேலை கிடைக்குமா என்று ஊர் ஊராகத் தேடிவரும் இருதயனுக்குத் தம்மைத் தேடிவரும் வேலையை விட்டுவிட்டு ஓடும் தன் மாமனின் நிலை விசித்திரமாய்த் தோன்றியது. தாம் யாரிடமும் வாழ்க்கை முழுவதும் அடிமையாக இருக்க விரும்பாததோடு காளிகோயில் அர்ச்சகராக இருப்பது மிகவும் கடினமான பொறுப்பு என்றும், காளியின்மீது போட்டிருக்கும் விலை உயர்ந்த நகைகள் அனைத்திற்கும் பொறுப்பேற்கத் தாம் பயப்படுவதாகவும் ஸ்ரீராமகிருஷ்ணர் கூறினார். மேலும் இருதயனைப் பார்த்து, ''அந்தப் பொறுப்பை நீ ஏற்றுக் கொண்டால் நான் பூஜை வேலையை ஏற்றுக் கொள்கிறேன்'' என்றார். இருதயன் மகிழ்ச்சியோடு இணங்கினான். மதுரிடம் சென்ற ஸ்ரீராமகிருஷ்ணர் தம் கருத்தைக் கூறினார். மதுரும் ஸ்ரீராமகிருஷ்ணருக்காக இருதயனையும் வேலைக்குச் சேர்த்துக் கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் அன்னை காளிக்கு அலங்காரம் செய்யவும் ஆடைகள் உடுத்துவதுமான வேலையை ஏற்றுக் கொள்ள, இருதயன் இராம்குமாருக்கும் ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் உதவும் வேலையைச் செய்யத் துவங்கினான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் வேலைக்குச் சேர்ந்த சில நாட்களுக்குள் கோயிலில் நடந்த ஒரு சம்பவம் அதிர்ச்சியையும் குழப்பத்தையும் உண்டாக்குவதாகவும் ஆனால் ராணி ராசமணிக்கும் மதுருக்கும் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் மிகுந்த அன்பையும் மரியாதையும் உண்டாக்குவதாக அமைந்தது.

தட்சிணேசுவரக் கோயிலில் இராதாகாந்தர் என்னும் கிருஷ்ணர் கோயில் இருந்ததை முன்பே கண்டோம்.

அந்தக் கோயிலில் காலை பூஜை முடிந்ததும் நடுப்பகல் நேரத்தில் ஓய்வு கொள்வதற்காக இராதாகாந்தரைப் பீடத்திலிருந்து தூக்கிச் சென்று அடுத்த அறையில் இருந்த மஞ்சத்தில் படுக்க வைப்பது வழக்கம். அன்று கிருஷ்ணர் பிறந்த நாள் விழா. காலை வழிபாடு முடிந்ததும் பூசாரி திருவுருவை ஓய்வு மண்டபத்து மஞ்சத்தில் சேர்க்கத் தூக்கினார். திடீரென்று கால் வழுக்கவே அதனைக் கீழேபோட்டு விட்டார். திருவுருவின் கால் ஒன்று உடைந்துவிட்டது. இந்த நிகழ்ச்சியை ராணியின் குடும்பத்திற்கு வர இருக்கும் பெரிய துன்பத்தின் அடையாளமாக எல்லோரும் நினைத்தனர். செய்தி அறிந்ததும் ராணி மிகுந்த பரபரப்பும் வேதனையும் அடைந்தார். மதுரிடம் கலந்துகொண்டு இது குறித்து நல்ல ஆலோசனையைப் பெறுவதற்காகப் பெரிய பண்டிதர்களின் கூட்டமொன்றைக் கோயிலில் கூட்டினார். பண்டிதர்கள் நெடுநேரம் விவாதித்தார்கள். பிறகு உடைந்த சிலையை வழிபடுவது சாஸ்திரப்படி குற்றமென்றும் அதைக் கங்கையில் போட்டுவிட்டுப் புதிய சிலையொன்றைச் செய்து வழிபட வேண்டும் என்றும் எல்லோரும் ஒரே மனதாகக் கூறினர். உடனே புதிய சிலை ஒன்று செய்ய உத்தரவிடப்பட்டது.

ஆனால் ராணிக்குப் பழைய சிலையைக் கங்கையில் போட மனம் வரவில்லை. எட்டு ஆண்டுகள் முயன்று கோயிலைக் கட்டும்போது, ஒவ்வொரு சிலையையும் பார்த்துப் பார்த்துச் செய்து, மனம் நிறைவுபெறப் பீடத்தில் நிறுத்தி விழா எடுத்த ராணிக்கு அத்தகைய சிலையைக் கங்கைக்குள் போட்டுவிட்டுத் திடீரென்று இப்போது செய்த சிலையைப் பீடத்தில் நிறுத்த மனம் இடம் தரவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தியிலும் ஞானத்திலும் பெரிதும் நம்பிக்கை கொண்ட மதுர் ராணியின் மனநிலையை அறிந்ததும் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அது குறித்துக் கேட்க விரும்பினார். தம்மை மறந்த தெய்விகப் பரவச நிலையில் இருந்த ஸ்ரீராமகிருஷ்ணரிடம் மதுர், பண்டிதர்களின் முடிவைக் கூறி இது பற்றி அவரது ஆலோசனையைக் கேட்டதும், மேலும் தெய்விகப் பரவச நிலையில் ஆழ்ந்தபடியே, ''இந்த முடிவு கேலிக்குரியது. ராணியின் மருமகனின் கால் ஒடிந்துவிட்டால் ராணி அவரைத் தூக்கி வெளியில் போட்டுவிட்டு வேறு ஒரு மாப்பிள்ளையையா தேடுவார்? மருத்துவம் செய்து உடைந்த காலைச் சரியாக்கி மறுபடியும் அவரைத் தானே மாப்பிள்ளையாக வைத்துக் கொள்வார். அதே வழியை இங்கும் ஏன் பின்பற்றக் கூடாது?'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் இந்த திடுக்கிடச் செய்யும் விடை பண்டிதர்களுக்கெல்லாம் பெரிய புதிராக இருந்தது. ஏனென்ருல் அது எந்த சாஸ்திரத்திலிருந்தும் வரவில்லே. பக்தி மயமான அவருடைய இதயத்திலிருந்து வந்தது. ராணியோ இந்தப் பதிலேக் கேட்டு மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். பண்டிதர்கள் இந்தக் கருத்துக்கு முதலில் இணங்கவில்லே. இறுதியில் ஒருவாறு இணங்கினுர்கள். ஸ்ரீராமகிருஷ்ணரே உடைந்த சிலேயின் காலே உடைந்ததே தெரியாதபடி சரி செய்து கொடுத்தார். இதற்குள் புதிய சிலேயும் கொண்டு வரப்பட்டது. அது கோயிலில் வைக்கப் பொருத்தமானதா என்று மதுர் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கேட்டார். முன்பு போலவே தெய்விகப் பரவச நிலேயில் இருந்த ஸ்ரீராமகிருஷ்ணர், ''பழைய சிலேயே மிகவும் பொருத்தமானது'' என்ருர். பழைய சிலேயே மறுபடியும் பீடத்தில் வைக்கப்பட்டது.

அன்றே இராதாகாந்தர் கோயில் அர்ச்சகர் வேலேயிலிருந்து நீக்கப்பட்டார். மதுர் இராம்குமாரின் துணேயோடு அந்த இடத்தை ஸ்ரீராமகிருஷ்ணரை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினுர். ஸ்ரீராமகிருஷ்ணரும் மதுரின் வேண்டுகோளே ஏற்றுக்கொண்டு இராதாகாந்தர் கோயிலின் அர்ச்சகரானுர். இருதயன் காளிகோயிலில் இராம்குமாருக்கு உதவியாக ஸ்ரீராமகிருஷ்ணர் செய்து வந்த வேலேயைச் செய்யத் துவங்கினுன்.

# 9. காளியின் முதற்காட்சி

ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கையில் ஒரு புத்தம் புதிய பகுதிக்குள் நாம் இப்போது நுழைகிறோம். அதனுடைய அழகும் சிறப்பும் நம் மனத்தை உருக்கும் துயரமும் அளவு கூறவியலாத உயர்ந்த உன்னத நிலையும் நம்மை வியப்பில் ஆழ்த்திப் படிப்படியாக ஸ்ரீராமகிருஷ்ணர் கடவுளைக் கண்ட நிலைக்கு நம்மை அழைத்துச் செல்கிறது. இந்தக் காலக் கட்டத்தில் ஸ்ரீராமகிருஷ்ணருக்குக் கடவுளைக் காண வேண்டும் என்னும் ஏக்கம் அளவு கடந்திருந்தது. அதற்காகப் பன்னிரண்டு ஆண்டுகள் கடவுளைக் காணும் வெறி பிடித்தவராகவே இருந்தார். ஆறு ஆண்டுகள் அவருடைய கண்கள் மூடவே இல்லை. பசி, தாகம் மற்றும் உடலின் எந்தத் தேவைகளையும் உணராது, தம்மைச் சுற்றி உலகம் இருப்பதை அறவே மறந்து தெய்விக வெறியிலேயே மூழ்கி ஒரு பைத்தியக்காரனைப் போலவே அந்தப் பன்னிரண்டு ஆண்டுக் காலமும் இருந்தார்.

இராதாகாந்தர் கோயிலுக்கு அர்ச்சகராக ஸ்ரீராமகிருஷ்ணர் அமர்த்தப்பட்டதும் அவர் செய்த வழிபாடு இதுவரை சாதாரணப் பிராமணர்கள் செய்ததிலிருந்து முற்றிலும் மாறுப்பட்டதாயிருந்தது. பிராமணர்கள் இராதாகாந்தர் சிலையை வெறும் கற்சிலையாக நினைத்தே பூஜை செய்தார்கள். ஸ்ரீராமகிருஷ்ணரோ அந்தச் சிலையை உயிரோடு எதிரே நிற்கும் கிருஷ்ணராகவே கண்டு வழிபாடு செய்தார். பூஜை செய்ய அமர்ந்ததும் அவருக்கு வெளி உலக நினைவே மறந்துவிடும்; அவருக்கும் உலகிற்கும் இடையே ஒரு திரையே விழுந்துவிடும். பூஜையைக் காணக் கோயிலுக்குள் வந்து நிற்கும் மக்களைப் பற்றிய நினைவோ மற்ற நினைவோ சிறிதும் தோன்றாது.

சில வேளைகளில் உலக நினைவை இழந்தவராய்ப் பூஜை செய்ய அமர்ந்த இடத்திலேயே பல மணி நேரம் உட்கார்ந்திருப்பார். பூஜையின் துவக்கத்தில் பூஜைக்குரிய மந்திரங்களைச் சொல்லும்போது அந்த மந்திரங்கள் தெளிவாகத் தம் கண் எதிரே உருவத்தோடு நிற்பதைக் காண்பார். உதாரணமாக 'ரங்' என்ற மந்திரத்தைச் சொல்லி,

தங்களைச் சுற்றி நெருப்புச் சூழ்ந்து நின்று பேய், பூதம், பிசாசு முதலியவைகளிலிருந்து காப்பதாகப் பூஜை செய்பவர்கள் சிந்திக்க வேண்டும். மற்றவர்கள் இந்த மந்திரத்தைச் சொல்லிவிட்டு மனத்தால் அப்படி வெறுமனே நினைத்துவிட்டுப் பூஜையைத் துவங்கிவிடுவார்கள். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர் இந்த மந்திரத்தைச் சொல்லியதும் இரத்த வண்ணத்தில் நெருப்புச் சுவர்போல் தம்மைச்சுற்றி வட்டமாக எழுந்து நிற்பதைக் காண்பார். உடலில் மூலாதாரத்திலிருந்து குண்டலினி சக்தி எழுந்து சுழுமுனை நாடியில் உள்ள ஆறு சக்கரங்கள் வழியாக நுழைந்து அங்குள்ள தாமரை மொட்டுக்களை எல்லாம் மலரச் செய்து கொண்டு உச்சந்தலையில் உள்ள ஆயிரம் இதழ்கள் கொண்ட சஹஸ்ராரத்தில் போய்க் கலப்பதைக் காண்பார். பூஜை செய்யும்போது அவர் முகத்தில் வீசும் ஒளியையும், ஆழ்ந்த மன ஒருமைப்பாட்டையும், அவரைச் சுற்றியுள்ள தெய்விக உணர்வையும் காண்பவர்கள், சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள பிரம்மமே மனித வடிவெடுத்து அங்கே பூஜை செய்வதாக நினைத்தார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் இப்போது புதிய சூழ்நிலைக்கு ஏற்பத் தம்மை மாற்றிக் கொண்டுவிட்டார். முன்புபோல் விருப்பப்படிச் சுற்றுவதைவிட்டு ஒழுங்காகப் பூஜை செய்தபடி கோயிலுக்குள்ளேயே வாழும் தம்பியைக் கண்டு இராம்குமார் மகிழ்ச்சியடைந்தார். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணருக்குத் தற்போது ஏற்பட்டுள்ள அளவில்லாத பக்தியையும் காளிகோயிலில் நடைபெறும் ஆரவாரமான விழாக்கள் எதிலும் பங்கு கொள்ளாமல், அவர் இராதாகாந்தர் கோயிலில் பூஜை செய்வதையும், பூஜை முடிந்ததும் நாள் முழுவதும் கோயில் தோட்டத்தில் காடுபோல் மரங்கள் அடர்ந்த தனியான பகுதிக்குள் ஒரு மரத்தின் கீழ் பேசாமல் அமர்ந்திருப்பதையும், வெளிச்சம் பரவாத விடியற்காலை வேளைகளிலும் வெளிச்சம் மறையும் மாலை வேளைகளிலும் தன்னந்தனியாக ஆழ்ந்த சிந்தனையுடன் கங்கைக் கரையில் உலவுவதையும் கண்டு அவர் மிகுந்த கவலை கொண்டார். 'இடத்துக்குப் புதியவனானதால் இப்படி இருக்கிறான், நாளாக நாளாகச் சரியாகிவிடுவான்' என்று தம்மையே தேற்றிக் கொண்டார். தன் தம்பி தற்போது இராதாகாந்தர் கோயிலில் பூஜை செய்தாலும், அந்தக் கோயிலில் மிகப் பெரிய வேலையான காளி பூஜையை எதிர்காலத்தில் ஏற்றுக் கொண்டு நல்ல வருவாயையும் வசதிகளையும் பெறு

வான் என்ற எண்ணத்தில், காளி பூஜை செய்வதற்கான பல் வேறு முறைகளையும் அவருக்குக் கற்றுத்தர முடிவு செய்தார்.

காளி பூஜை செய்பவர்கள் சக்தி மந்திரத்தில் தீட்சை பெற்றிருக்க வேண்டும். எனவே கல்கத்தாவில் காளி பக்தியிலும் காளியின் வழிபாட்டுச் சாஸ்திரங்களிலும் புகழ் பெற்றவரான கேனுராம் பட்டாச்சார்யா என்பவரைக் குரு வாக அமர்த்தி ஸ்ரீராமகிருஷ்ணருக்குச் சக்தி மந்திரத்தில் தீட்சை செய்துவைக்க முடிவு செய்தார். அதற்கான நாள் குறிப்பிடப்பட்டுச் சடங்குகள் முடிந்ததும் ஸ்ரீராம கிருஷ்ணரின் காதில் முறைப்படி காளியின் மந்திரத்தைப் பட்டாச்சார்யர் ஓதினர். மந்திரத்தைக், கேட்டவுடனே ஸ்ரீராமகிருஷ்ணர் உடம்பு முழுதும் புல்லரிக்க, அளவற்ற உணர்ச்சிவயப்பட்டு 'ஓ' என்று சத்தமிட்டபடி ஆழ்ந்த தியானத்தில் மூழ்கிவிட்டார். இதைக் கண்டு அவருடைய குருவே ஆச்சரியப்பட்டார்.

இந்தத் தீட்சைக்குப் பிறகு இராம்குமார் அடிக்கடி இராதாகாந்தர் பூஜையைத் தாம் செய்துகொண்டு ஸ்ரீராம கிருஷ்ணரைக் காளி பூஜை செய்யும்படிச் செய்தார். இதைப் பலமுறை கண்ட மதுர் ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ண ரிடம் நிரந்தரமாக அவரையே காளி பூஜையைச் செய்து வரும்படிக் கேட்டுக் கொண்டார். இதைக் கேட்ட ஸ்ரீராமகிருஷ்ணர் தமக்குக் காளிபூஜைப் பற்றிய விதிகள் எதுவும் தெரியாததால் தம்மால் புனிதமான காளி பூஜையைச் சரிவரச் செய்ய முடியாது என்றார். இதைக் கேட்ட மதுர், ''உங்களுக்குச் சாஸ்திர விதிகள் தெரிய வேண்டுவதே இல்லை. உங்களிடம் இருக்கும் அள வற்ற பக்தியும் உண்மையான ஈடுபாடுமே போதும். நீங்கள் எப்படிப் பூஜை செய்தாலும் அன்னை மனங் குளிர்ந்து அதனை ஏற்றுக் கொள்வாள். உங்களுடைய பக்தி பூர்வமான அந்த வழிபாட்டை மகிழ்ச்சியோடு ஏற்று, அந்தச் சிலையில் அவள் எழுந்தருள்வாள்'' என்றார். மதுர் தம்மிடம் கொண்ட நம்பிக்கை ஸ்ரீராமகிருஷ்ணரின் மனத்தைத் தொட்டது. உடனே காளி பூஜை செய்வதை ஏற்றுக் கொண்டார். இராம்குமார், இராதாகாந்தர் கோயிலுக்கு அர்ச்சகரானர்.

இராம்குமாருக்கு இப்போது வயதாகிவிட்டது. வயதும் களைப்பும் மிகுந்த அவரால் செய்ய இயலாதவாறு பூஜை வேலை கடினமாக இருந்தது. எனவே சில மாதங்கள் கமார்புகூர் சென்று ஓய்வுபெற விரும்பி மதுரிடம் இதைப்

பற்றிக் கூறினர். மதுரும் மகிழ்ச்சியோடு அவருக்கு ஓய்வு தந்து, அவர் திரும்பும் வரையில் இருதயனை இராதா காந்தரின் பூஜையைக் கவனிக்கும்படிக் கூறினர். வேலையிலிருந்து விடுபட்ட இராம்குமார், மகிழ்ச்சியோடு தம் சொந்த ஊரையும் தாயையும் தம்பியையும் காணப் புறப்படுவதற்காக ஆயத்தம் செய்தார். ஆனால் விதி அவருக்கு வேறுவிதமான ஏற்பாட்டைச் செய்து வைத்திருந்தது. கல்கத்தாவிற்கு அருகே இருந்த ஓர் ஊருக்கு அவசர வேலையாகச் சென்றவர் நோய் கண்டு, அங்கேயே திடீரென்று இறந்துவிட்டார். அதைக் கேட்டு ஸ்ரீராம கிருஷ்ணரும் இருதயனும் அந்த ஊருக்கு ஓடிச் சென்று அவருடைய இறுதிச் சடங்குகளை முடித்துவிட்டுத் திரும்பினர்.

இராம்குமாரின் மரணம் ஸ்ரீராமகிருஷ்ணர் மனத்தில் அழிக்க முடியாத சோகத்தை ஆழப் பதித்துவிட்டது. தம் தந்தை இறந்தபோது ஸ்ரீராமகிருஷ்ணர் மிகவும் இளையவராக இருந்தார். எனவே இராம்குமாரே அவருக்குத் தந்தையைப் போல் இருந்து அளவற்ற அன்பைச் சொரிந்து வளர்த்துவந்தார். அவருடைய மரணம் ஸ்ரீராமகிருஷ்ணருக்குப் பேரிடியாக இருந்தது. அதுவும் அவருடைய மனம் ஒரு பெரும் போராட்டத்தில் - கண்ணுல் காணும் இந்த உலகம் நிலையற்றது - அழியக் கூடியது - பொய் - என்ற சிந்தனையில் - போராட்டத்தில் மூழ்கி, அதன் வேகத்தில் கரை காண முடியாமல் தவித்துக் கொண்டிருந்த நேரத்தில் நடந்த இத்தகைய நிகழ்ச்சி, உலகம் நிலையில்லாதது; உலகில் பிறக்கும் அனைத்தும் அழிந்தே தீர வேண்டும் என்பதை உறுதிப்படுத்தியது. எனவே இந்த உலகத் துன்பங்களையும், மரணங்களையும் கடந்து, மரணமேயில்லாத பேரின்பத்தை, பெருவாழ்வைத் தரும் கடவுளைக் காணும் துடிப்பு அவரிடம் வேகமாக அளவின்றிப் பெருகியது. கடவுளைக் காணுத நாட்கள் வீணுன நாட்களே என்று தெளிந்த அவர் இரவும் பகலும் கடவுளைக் காண வேண்டும் என்னும் தணியாத தாகத்தால், நெருப்புப் பற்றிய மனிதன் தண்ணீரை நாடத் துடிப்பதுபோல் துடிதுடித்தார். இத்தகைய காலத்தில்தான் அவரைக் காளி பூஜை செய்வதற்கு அமர்த்தினர்கள்.

சக்தி தீட்சைக்குப் பிறகு அன்னை காளி அவருடைய இஷ்ட தெய்வமாகிவிட்டாள். ஒவ்வொரு நாளும் பூஜை வேளையில் காளியின் திருவுருவைச் சந்தனத்தாலும் மலர்களாலும் அலங்கரிப்பார். அப்படி அலங்கரிக்கும்போது அது

அவருக்குச் சிலையாகவே தெரியாது. உயிருள்ள அன்னை காளியாகவே தோன்றும். அன்னை காளிக்கு அணிவிக்கப்பட்டிருக்கும் பகட்டான, விலையுயர்ந்த அழகான காசிப் பட்டுச் சேலையும் தலையிலிருந்து கால்வரை அணிவிக்கப்பட்டுள்ள விலையுயர்ந்த நகைகளும் கழுத்தில் தொங்கும் மண்டை ஓட்டு மாலையும் இடுப்பில் கட்டப்பட்டிருக்கும் மனிதக் கைகளால் ஆன பொன் கச்சையும் கையொன்றில் ஏந்தியுள்ள தங்க வாளும் மற்றொரு கையில் மனிதத் தலையும் அபய வரதம் அளிக்கும் நிலையில் உள்ள மற்ற இரண்டு கைகளின் அழகும் காண்பவர் யாருக்குத்தான் அது கற்சிலை என்ற நினைப்பை எழுப்பும்? ஒரு பக்கம் அச்சத்தையும் மற்றொரு பக்கம் அருளையும் சொரியும் பவதாரிணியாகிய காளியை ஸ்ரீராமகிருஷ்ணர் மனமுவந்து தம் உணர்வையும் உயிரையும் கலந்து சின்மய ஸ்வரூபிணியாக வழிபடத் துவங்கினார். தம் மனத்தில் ஏற்பட்டிருந்த போராட்டங்கள், வேதனைகள் அத்தனைக்கும் அவளே கதி என்று நினைத்து வழிபட்டார்.

இவ்வாறு காளியின் நினைவாகவே இருந்து, பூஜை செய்த போது இரவும் பகலும் தாம் காண்பது, கேட்பது அனைத்துமே காளி மயமாக இருக்கவேண்டுமென்று ஸ்ரீராமகிருஷ்ணர் விரும்பினார். உலகப் பேச்சுகளும் உலக ஆசை கொண்ட மக்களோடு பழகுவதும் அவருக்கு அருவருப்பையும் மிகுந்த வேதனையையும் தந்தன. அதனால் யாரோடும் பழகுவதை விட்டுவிட்டார். காலையில் பூஜை முடிந்ததும் பகல் நேரம் முழுவதையும் தன்னந் தனியாகவே கழிக்கத் துவங்கினார். இரவு பூஜை முடிந்ததும் யாருக்கும் தெரியாமல் எங்கோ சென்று விடுவார். விடியும்போது வரும் அவரைப் பார்த்தால் இரவெல்லாம் அழுது வீங்கிய கண்களும் முகமுமாக இருப்பார்.

நீண்ட நேரம் தியானத்தில் மூழ்கியதற்கான அடையாளங்களும் அவர் முகத்தில் காணப்படும். இரவு எங்கு செல்கிறார் என்பதைப் பற்றி அவரிடம் எவ்வளவு வற்புறுத்திக் கேட்டாலும் சரியான பதிலைச் சொல்வதில்லை. இதனால் எப்போதும் அவருடன் இருக்கும் இருதயன் ஒரு நாள் இரவில் அவர் எங்கே போகிறார் என்பதைக் கண்டுபிடிக்க உறுதி கொண்டான்.

தற்போது காளி கோயிலுக்கு வடக்கே பஞ்சவடி என்ற பெயரில் உள்ளதும் ஸ்ரீராமகிருஷ்ணரின் பெரும்பாலான தவங்கள் இயற்றப்பட்டதுமான சமமான இடம் அப்போது இல்லை. அந்த இடம் மிகவும் மேடுபள்ளங்கள் நிறைந்ததாகவும்

முட்செடிகளும் புதர்களும் மண்டி, அடர்ந்த காடாகவும் நடுப் பகலில் கூடச் சூரிய ஒளி உள்ளே நுழையாமல் எப்போதும் இருட்டாகவும் இருந்தது. முன்பு அது சுடுகாடாக இருந்ததால் அந்தப் பக்கம் எந்த நேரத்திலும் யாரும் போகமாட்டார்கள். அத்தகைய இடத்தில் நெல்லி மரத்தின் அடியில் ஸ்ரீராமகிருஷ்ணர் யாருக்கும் தெரியாமல் பகலிலும் இரவிலும் தியானமும் பல்வேறு சாதனைகளும் செய்து வந்தார்.

இருதயன் தன் மாமாவை மிகவும் விரும்பினான். அன்புள்ள ஒரு வேலைக்காரனைப்போல் இரவும் பகலும் அவருக்கு வேண்டிய எல்லாக் காரியங்களையும் செய்து வந்தான். ஆனால் அவரது மனத்தில் என்ன இருக்கிறது என்பதை அவனால் தெரிந்து கொள்ள முடியவில்லை. மேலும் அவருடைய விசித்திரமான செயல்களுக்கான காரணம் அவரிடமுள்ள அளவு கடந்த கடவுள் பக்தியே என்று மற்றவர்களைப் போலவே அவனும் நினைத்து வந்தான். உணவு, உறக்கம் முதலான எதைப் பற்றியும் கவலைப்படாமல் ஸ்ரீராமகிருஷ்ணர் இருப்பது அவனுக்கு மிகுந்த கவலையை அளித்தது.

எனவே அவர் பகலிலும் இரவிலும் என்னதான் செய்கிறார், எங்கே போகிறார் என்பதைக் கண்டுபிடித்துவிட வேண்டுமென்று நினைத்தான்.

ஒரு நாள் இரவு எல்லோரும் உறங்கிவிட்டார்கள். தம்முடன் படுத்திருந்த ஸ்ரீராமகிருஷ்ணர் அறையிலிருந்து எழுந்து செல்வதை இருதயன் கண்டான். உடனே அவருக்குத் தெரியாமல் அவர் பின்னாலேயே சென்றான். கோயிலிலிருந்து சிறிது நேரம் நடந்து சென்றவர் முன்பு சுடு காடாக இருந்து, இப்போது மரங்களும் முட்புதர்களும் அடர்ந்த காட்டுப் பகுதிக்குள் நுழைந்ததும் மறைந்துவிட்டார். அதுவரை பின்னால் சென்ற இருதயனுக்கு உள்ளே நுழைய அச்சமாக இருந்தது. வெளியில் நின்றபடியே ஸ்ரீராமகிருஷ்ணரைப் பயமுறுத்தி வெளியே வரச் செய்வதற்காகக் கற்களை எடுத்து அவர் சென்ற திசையில் நெடுநேரம் எறிந்தபடியே இருந்தான். எந்தவிதமான பலனும் கிடைக்கவில்லை. ஏமாற்றத்தோடு அறைக்குத் திரும்பிவிட்டான்.

மறுநாள் காலையில் இருதயன் ஸ்ரீராமகிருஷ்ணரிடம், ''இரவு நேரத்தில் அந்தப் பயங்கரக் காட்டிற்குள் ஏன் செல்கிறாய்?'' என்று கேட்டான். ஸ்ரீராமகிருஷ்ணர் எதை

யும் மறைக்கவில்லை. ''அங்கே ஒரு நெல்லி மரம் இருக்கிறது. அதனடியில் அமர்ந்து, காளியைத் தியானம் செய்கிறேன். அத்தகைய இடம் தியானத்திற்கு மிகவும் ஏற்றது'' என்றார். ஸ்ரீராமகிருஷ்ணரின் இந்தப் பதிலால் திருப்தியடையாத இருதயன் ஒவ்வொரு நாள் இரவும் தொடர்ந்து, அவருக்குத் தெரியாமல் அவர் பின்னால் காட்டினருகே செல்வதும் அவர் உள்ளே நுழைந்ததும் வெளியில் நின்றபடியே கற்களை வீசுவதுமாக இருந்தான். ஸ்ரீராமகிருஷ்ணர் அதைப் பற்றிக் கவலைப்பட்டவராகத் தெரியவில்லை. எனவே, ஒரு நாள் இருதயன் தன் மனத்தில் தைரியத்தையெல்லாம் திரட்டிக் கொண்டு ஸ்ரீராமகிருஷ்ணர் என்னதான் செய்கிறார் என்பதைப் பார்க்கக் காட்டிற்குள்ளே நுழைந்துவிட்டான்.

அங்கே ஸ்ரீராமகிருஷ்ணர் பூணூலையும் ஆடைகளையும் கழற்றித் தொலைவில் எறிந்துவிட்டு, நெல்லிமரத்தடியில் இருந்த சிறு மேடையில் தம்மை மறந்து தியானத்தில் மூழ்கியிருப்பது தெரிந்தது. இதைக் கண்டதும் இருதயன் வியப்புடன் கூடிய பயம் கொண்டவனாக, ''மாமா, என்ன இது? ஏன் இப்படிப் பூணூலையும் துணிகளையும் கழற்றிவிட்டு உட்கார்ந்திருக்கிறீர்கள்?'' என்று கத்தினான். அந்த வார்த்தைகள் ஸ்ரீராமகிருஷ்ணரின் காதுகளில் விழுந்ததாகவே தெரியவில்லை. சிலைபோல் அமர்ந்திருந்தவர் நெடுநேரம் கழித்துக் கண் விழித்தார். எதிரில் நின்றிருந்த இருதயன் மறுபடியும் முன் கேட்ட அதே கேள்விகளைக் கேட்டான். ''ஏன் உனக்குத் தெரியாதா? ஒருவர் தம்மிடமுள்ள எல்லாப் பந்தபாசங்களையும் ஒழித்துவிட்டுக் கடவுளைத் தியானிக்கும் முறைதான் இது. நாம் பிறந்தவுடனே நம்மை வெறுப்பு, அவமானம், குலப் பெருமை, புகழ், சாதி, ஆணவம், பண்பாடு முதலான எட்டுச் சங்கிலிகள் கட்டிச் சிறையிடுகின்றன. இந்தப் பூணூல் அணிந்திருப்பது நான் பிராமணன் - எல்லோரையும் விட உயர்ந்தவன் என்ற நினைப்பைத் தருகிறது. ஆடை அணிந்திருப்பது மானம், அவமானம் என்ற உணர்வைத் தருகிறது. அன்னை காளியைக் காண விரும்பும்போது இத்தகைய நினைவையெல்லாம் ஒதுக்கி வைத்துவிட வேண்டும். அதனால் பூணூலையும் ஆடைகளையும் கழற்றி 'வைத்துவிட்டேன்'' என்றார். அவர் சொன்னதை இருதயன் அமைதியாகக் கேட்டுக் கொண்டான்; அங்கிருந்து திரும்பிவிட்டான்.

இவ்வாறு அன்னை காளியைக் காண வேண்டும் என்ற துடிப்பு ஸ்ரீராமகிருஷ்ணருக்கு ஆழ்ந்த மன ஏக்கமாக மாறி விட்டது. அதன் காரணமாக அவருடைய செயல்கள் யாவுமே விசித்திரமாக மாறின. அவருக்கு முன்னுல் காளி யின் காட்சியைப் பெற்ற காளியின் மிகச் சிறந்த பக்தர் களான இராமப்பிரசாத், கமலாகாந்தர் முதலியவர்களின் பாடல்களை மனம் உருகிப் பாடுவது அவருடைய சாதனை யின் முக்கியமான ஒரு பகுதியாக அமைந்தது.

தாயிடமிருந்து பிரித்து வைக்கப்பட்ட சின்னஞ் சிறு குழந்தை தன் தாயைக் காண எப்படி அழுதுத் துடிதுடிக் குமோ, அத்தகைய உணர்வோடு அன்னை காளியைக் காண ஸ்ரீராமகிருஷ்ணர் துடித்தார். அத்தகையத் துடிப்பை வெளியிடும் ஓலங்களாக அவருடைய அந்த பக்திப் பாடல்கள் அமைந்திருந்தன. ''ஓ தாயே! நீ எங்கே இருக்கிறுய்? எனக்கு உன் காட்சி கொடு! இராமப்பிரசாதர் உன்னை நேரில் கண்டு உன் அருள் பெற்ருரே! நீ என்முன் வராத அள விற்கு நான் அவ்வளவு கொடியவனு? சொத்து, சுகம், சொந்தம், பந்தம், எதுவுமே எனக்கு வேண்டாம். நீ மட்டுமே வேண்டும். உன்னைக் காணும் பேறு மட்டுமே வேண்டும்'' என்று கதறினுர். கண்ணீர் எந்த நேரமும் அவர் கண் களில் வழிந்தபடியே இருந்தது. இப்படிக் கதறி அழுதபடியே பகல் முழுவதும் கழியும். மாலை வழிபாட் டிற்காகக் கோயிலில் அடிக்கப்படும் மணியோசை கேட் கும். உடனே, ''ஓ மற்ருெரு நாளும் வீணுகக் கழிந்துவிட் டதே! தாயே! உன்னை நான் காணவில்லையே! குறுகிய காலமுள்ள என் இந்த வாழ்நாளில் மற்ருெரு நாளும் போய்விட்டதே. சத்தியமே வடிவான உன்னை நான் காண முடியவில்லையே!'' என்று அழுவார். தாங்க முடியாத வேதனையால் கீழே விழுந்து முகத்தைத் தரையில் போட்டுத் தேய்த்துக் கொள்வார். முகம் தரையில் உராய்ந்து இரத்தம் கசியும். 'அம்மா! அம்மா!' என்று கதறுவார். கோயிலுக்கு வரும் கூட்டமெல்லாம் அவருடைய இந்தப் பரிதாபமான குரலைக் கேட்டு அவர் அருகில் வந்து கூடிவிடும்; காண்பவர் களின் கண்களில் கண்ணீரை வரவழைக்கும். இவருடைய நிலையைப் பார்த்தவர்கள் தங்களுக்குள், 'ஓ! பரிதாபமான இளைஞன்! பாவம் தன் தாயை இழந்துவிட்டிருக்கிறுன். இவ னுடைய அழுகை நம் கண்களில் கண்ணீரை வரவழைக் கிறது' என்று அவருடைய சொந்தத் தாயே இறந்து அவர் இது போல் அழுவதாக நினைப்பார்கள். பல நாட்கள் இப்படிக்

கதறுபவர் சில நாட்கள் காளியின் திருமுன்னர் உட்கார்ந்து கொண்டு, ''தாயே! நீ இருப்பது உண்மைதானு? அல்லது வெறும் கற்பனையா? நீ இருப்பது உண்மையானுல் என்னுல் ஏன் உன்னைப் பார்க்க முடியவில்லை? சமயம், கடவுள் என்பதெல்லாம் நூல்களில் கூறப்படும் வெறும் கட்டுக் கதையா? விசித்திரமான போலிக் கற்பனைதானு?'' என்று உருகுவார். உடனே அவர் மனதில் காளி பக்தராக இருந்து காளியை நேரில் கண்ட இராமப்பிரசாதரும் அவரைப் போன்ற மற்றும் பல பக்தர்களின் நினைவும் தோன்றும். உடனே, ''நிச்சயம் காளி வெறும் கற்பனையல்ல. காளி இருப்பது உண்மை. இல்லையென்றுல் இவ்வளவு பேர் எப்படி அவளை நேரில் கண்டிருக்க முடியும்? அவர்கள் பார்த்திருக்கும் போது என்னுல் மட்டும் ஏன் பார்க்க முடியாது? வாழ்க்கை கழிந்து கொண்டே இருக்கிறது. ஒரு நாள். அதற்குப் பிறகு ஒரு நாள். அதைத் தொடர்ந்து மற்ருெரு நாள். இப்படிக் கழிந்து கொண்டே இருக்கிறதே. ஆனுல் என் தாய் எங்கே? நான் அவளைக் காணவில்லையே! வாழ்க்கையில் தேடி அடைய வேண்டிய பொருள் ஒன்றே ஒன்றுதான், அது கடவுள் என்று சாஸ்திரங்கள் எல்லாம் கூறுகிறதே. அவர் இல்லாமல் போனுல் இந்த வாழ்க்கை பொறுக்க முடியாத வேதனையே. கடவுளைக் கண்டால் தான் வாழ்வதிலேயே அர்த்தம் இருக்கிறது. உண்மையான பக்தர்கள் கடவுளைக் காண்பதற்காகத் தங்களது வாழ்க்கையை அர்ப்பணித்து இருக்கிருர்கள். கடவுளாகிய அழியாப் பேரின்பத்தை அனுபவிக்காமல் நான் வாழ்ந்து கொண்டிருக்கும் பரிதாபமயமான இந்த வாழ்க்கை ஒரு வாழ்க்கையா?'' இது போன்ற நினைவுகள் தோன்றிக் கடவுளைக் காண வேண்டும் என்றும் அவருடைய வெறியை மென்மேலும் அதிகரித்தன. கடவுளின் தரிசனத்திற்காக அவருடைய முயற்சிகளை மேலும் மேலும் அதிகரிக்கச் செய்தன.

இறைவனைக் காண வேண்டுமென்று இந்தக் காலத்தில் தமக்கு ஏற்பட்ட இந்த பயங்கரமான துயரத்தைப் பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் பிற்காலத்தில் தம் சீடர்களிடம், ''ஓ! எவ்வளவு பயங்கரமான துயரத்தில் நான் அப்போது துடித்தேன். காளியைக் காணுது நான் பட்ட வேதனையை உங்களால் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது. அவ்வளவு தாங்க முடியாத துயரம். இந்தத் துயரம் இரவும் பகலும் எந்த நேரமும் என்னுடைய இயற்கையான இயல்பாகவே ஆகிவிட்டது. உதாரணமாக, பணவெறி பிடித்த திருடன்

ஒருவன் ஓர் அறையில் இருக்கிறான். அடுத்த அறையில் தங்கம் தங்கமாகக் கொட்டி வைக்கப்பட்டிருக்கிறது. இடையே இருப்பது மெல்லிய சுவர் ஒன்றுதான். அந்தத் திருடனுக்கு அடுத்த அறையில் தங்கம் இருப்பது தெரியும். அவன் அங்குள்ள தங்கத்தை வாரிக் கொள்ள எப்படித் துடிப்பான்! அப்படித்தான் இருந்தது என் துடிப்பு. அன்னை இருக்கிறாள் என்பது எனக்குத் தெரியும். அவர் முழுக்க முழுக்கப் பேரின்பமயமானவர் என்பதும், அந்த இன்பத்தோடு ஒப்பிடும் போது உலக இன்பங்கள் யாவும் தூசு என்பதும், அவள் எனக்கு மிக மிக அருகிலேயே இருக்கிறாள் என்பதும் தெரியும் அவளை அடையத் துடிக்காமல் என்னால் எப்படி இருக்க முடியும்? அவளை நான் தேட வேண்டும். பைத்தியம் போல் வெறி பிடித்துத் தேடி ஓடவேண்டும்.'' என்று கூறியுள்ளார்.

கடவுள் ஒருவரே எல்லையற்ற பேரின்பத்தின் இருப்பிடம் என்பதில் அவருக்குத்தான் எவ்வளவு மகத்தான நம்பிக்கை! இந்த நம்பிக்கையே அவரைப் பல பயங்கர வேதனைகளையும், சோதனைகளையும் தாங்கிக் கொள்ளவைத்தது. நெருப்பிலிட்டு எரிப்பதும் சுத்தியால் அடிப்பதுமான வேதனைகளைத் தாங்கிக் கொண்ட பிறகு தங்கம் புத்தம் புதியப் பொலிவைப் பெறுவதைப் போல் ஸ்ரீராமகிருஷ்ணர் இத்தகையத் துன்பங்களை அனுபவித்த பிறகுதான் கடவுளைக் காணும் பேறு அவருக்குக் கிடைத்தது. அவருக்கு இருந்த கடவுள் நம்பிக்கையும், அவரைத் தேடி அவர் அலைந்த அலைச்சலும் உலக ஆன்மிக வரலாற்றிலேயே ஓர் அதிசய நிகழ்ச்சியாகும். ஏனெனில் வழிகாட்ட ஒரு குருவோ அல்லது அறிவுரை கூற அல்லது சிறிதாவது உதவி செய்யவோ யாரும் இல்லாமல், சாஸ்திர அறிவும் அதிகமில்லாமல், சாஸ்திரங்களில் கடவுளை அடையக் கூறப்பட்டுள்ள சாதாரண வழிகளையும் கூடச் முறையாகப் பின்பற்றாமல், இறைவனிடம் கொண்ட நம்பிக்கை ஒன்றாலேயே அவனை அடைய ஸ்ரீராமகிருஷ்ணர் இவ்வளவு பாடுபட்டார்.

கடவுளைக் காணும் இந்தத் தீவிர ஏக்கத்தில் அவரால் காளி பூஜையும் செய்ய முடியவில்லை. பூஜைக்காக அன்னையின் முன் அமர்வார். அப்படியே மணிக் கணக்கில் கல்லைப்போல் உட்கார்ந்திருப்பார். ஒரு கணம் பேய் பிடித்தவர்போல் பயங்கரக் கோபத்தோடு தோன்றுவார். மறு கணம் சின்னஞ் சிறு குழந்தையைப் போல் அழுவார். பூஜை முறைப்படிப் பூவைத் தம் தலைமேல் வைத்துக்

கொண்டு அப்படியே பல மணி நேரம் உட்கார்ந் திருப்பார். அல்லது காளிக்கு உணவைப் படைக்கும்போது காளி அந்த உணவைச் சாப்பிடுவதுபோல் நெடுநேரம் அந்த உணவையே பார்த்துக்கொண்டு நிற்பார்.

காலை வேளையில் தோட்டத்தில் மலர் பறிப்பார். பிறகு நெடுநேரம் காளிக்கு ஆடை அணிவிப்பதிலும் அலங்காரம் செய்வதிலும் கழிப்பார். மாலை பூஜை வேளை யில் கர்ப்பூர ஆரத்தியைக் காளியின்முன் சுற்றத் துவங்குவார். நேரம், காலம் அனைத்தையும் மறந்து சுற்றிக்கொண்டே இருப்பார். அவருடைய இந்த விசித்திரமான செய்கை கள் கோயில் அதிகாரிகள் கவனத்திற்கு வந்தன. முதலில் அவரைக் கண்டித்தார்கள். என்ன கண்டித்தும் கேளாமல் தம்மையும் உலகையும் மறந்த நிலையில் அவர் செய்த அந்தப் பூஜை பலருக்கு அவரிடம் மிகுந்த மரியாதையைக் கொடுத்தது. ஆனால் சிலரோ பழையபடியே அவர் மூளை கலங்கிப் போய்விட்டது என்றே நினைத்தனர். ஆனால் இத் தகைய பூஜையால் மதுர் பெரிதும் கவரப்பட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தம்மைப்பற்றி யார் என்ன பேசு கிறார்கள் என்ற நினைப்பே இல்லாமல், கடவுளைக் காண வேண்டும் என்ற தம் இலட்சியத்தை அடைவதில் வேக மாகச் சென்றபடியே இருந்தார். சாப்பிடுவது ஏறக் குறைய நின்றுவிட்டது. இரவில் தூங்குவதும் குறைந்து விட்டது. எந்நேரமும் இறைவனைக் காணாத வேதனை தருகிற அந்த உணர்ச்சி அவர் மனத்தில் எழுந்து, அதன் காரண மாக மார்பும் கண்களும் இரத்த நிறமாகச் சிவந்தே கிடந்தன. கண்கள் ஏக்கத்தினால் எப்போதும் கண்ணீரை வடித்தபடியே இருந்தன.

அவரால் நெடுங்காலம் அத்தகைய வேதனைகளையும் துயரங்களையும் தாங்கிக்கொள்ள முடியவில்லை. ஒரு நாள் காளி கோயிலில் காளியின் எதிரே அமர்ந்தார். இவ்வளவு பாடுபட்டும் காளியைக் காணமுடியாத நிலையில், பொறுக்க முடியாத வேதனையால் துடித்தபடி, ''தாயே, என் குரல் உன் காதில் விழவில்லையா? எவ்வளவு நாட்களாக நான் பிரார்த்திக்கிறேன். இராமப்பிரசாதிற்கு மட்டும் காட்சி தந்தாயே! எனக்கு ஏன் காட்சி தர மறுக் கிறாய்?'' என்று கதறினார். திடீரென்று ஆச்சரியப்படும் வகையில் ஒரு நாள் அவருடைய ஆவல் நிறைவேறியது. அவர் காளியை முதலில் கண்ட அந்த நிகழ்ச்சியை அவருடைய வார்த்தைகளாலேயே காண்போம்:

''அப்போது நான் காளியைக் காணுமல் நெஞ்சைப் பற்றி எரிக்கும் பயங்கர வேதனையால் துடித்துக் கொண்டிருந்தேன். அப்போது என் இதயம் ஈரத்துணியை முறுக்கிப் பிழிவதுபோல் வேதனையோடு இருந்தது. அளவற்ற ஏக்கத்தாலும் பரபரப்பாலும் நான் என் நிலையை மறந்துவிட்டேன். ஒரு வேளை இந்தப் பிறவியில் நான் காளியைப் பார்க்க மாட்டேனே என்ற நினைவு தோன்றியது. அந்த நினைவு என்னுள் எழுந்ததும் என்னுல் பொறுக்க முடியவில்லை. காளி கோயிலில் மாட்டப் பட்டிருந்த பலி கொடுக்கும் பெரிய வாளின்மேல் என் பார்வை விழுந்தது. காளியைக் காண முடியாத இவ் வாழ்வு தேவையில்லை, இப்போதே முடித்து விடலாம் என்ற எண்ணம் மேலெழுந்தது. பைத்தியக்காரன்போல் ஒரே தாவாகத் தாவி அந்தக் கத்தியைக் கையில் எடுத்துக்கொண்டு என் கழுத்தை வெட்டுவதற்காக ஓங்கினேன். உடனே அன்னை எனக்குக் காட்சி தந்தாள். நான் மயங்கித் தரையில் சாய்ந்தேன். அதற்குப் பிறகு என்ன நடந்தது என்பதும் அந்த நாளும் அடுத்த நாளும் எப்படிக் கழிந்தது என்பதும் எனக்கு நினைவே இல்லை. ஆனுல் என்னுள் மாசு மறுவற்ற, கொஞ்சமும் குறையாத, இதுவரை நான் கண்டறியாத புத்தம் புதிய இன்ப வெள்ளம் ஓடியபடியே இருந்தது. அன்னையின் அந்தக் காட்சி என்னுள் எப்போதும் நிறைந்து நின்றது.''

மற்றொரு முறை, அந்த நிகழ்ச்சியைப்பற்றிக் கீழ் வருமாறு ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியுள்ளார்: ''சுற்றியுள்ள கட்டிடங்களும் கோயிலும் என் பார்வையிலிருந்து மறைந்துவிட்டன. அதற்குப் பதிலாக அந்த இடத்தில் அளவேயில்லாத முடிவற்ற உணர்வுமயமான ஒளிக் கடல் தோன்றியது. எட்டிய வரைக்கும் அவற்றின் ஒளிமயமான அலைகள் பெரிய பிரவாகமாக வெகு வேகத்தோடு எல்லாத் திசைகளிலிருந்தும் பெரிய இரைச்சலோடு என்னை நோக்கிப் பாய்ந்தோடி வந்தன. கண்ணை மூடித் திறப்பதற்குள் என்மீது மோதி என்னை அப்படியே சுற்றிச் சூழ்ந்து கொண்டன. நான் மூச்சுவிட முடியாமல் திணறினேன்; நினைவற்றுத் தரையில் வீழ்ந்துவிட்டேன்.''

அந்த ஒளிமயமான அலைகளின் நடுவே ஸ்ரீராமகிருஷ்ணர் காளியைக் கண்டாரா, இல்லையா என்பதைப் பற்றி அவர் தெளிவாகச் சொல்லவில்லை. பெரும்பாலும் அவர் பார்த்து இருக்கலாம். ஏனென்ருல் மயங்கி விழுந்தவர்

நினைவு தோன்றி எழும்போது அவர் வாய் உரக்க, ''அம்மா அம்மா'' என்றே அழைத்தது.

இந்தக் காட்சிக்குப் பிறகு காளியை மறுபடியும் காண வேண்டும் என்பதே அவருடைய இடைவிடாத பிரார்த்தனையாக மாறியது. சில நேரத்தில் அவருடைய இந்த ஆவல் அளவில்லாமல் பெருகிவிடும். அப்போது தரையில் விழுந்து புரளுவார். ''தாயே! என்னிடம் கருணைக் காட்டு. மறுபடியும் ஒரே ஒரு முறை எனக்குக் காட்சி கொடு'' என்று கூறி அழுவார். இந்தப் பரிதாப மான கதறலைக் கேட்டுப் பெரிய கூட்டமே அவரைச் சுற்றிக் கூடிவிடும். இதைப்பற்றி அவர் கூறும்போது, ''அப்படிக் கூட்டம் நிற்பதை நான் க்வனிப்பதே இல்லை. அவர்களின் உருவங்கள் நிழல்போல, படங்களில் எழுதப் பட்ட உருவங்கள்போல எனக்குத் தோன்றும். இப்படி அத்தனை பேர் முன்னாலும் அழுது கதறுவதுபற்றி எனக்கு வெட்கமே தோன்றாது. ஆனால் அன்னையைக் காணாத வேதனை அளவு கடந்துபோய் நான் என் நிலையை இழக்கும் நேரத்தில் அன்னை என் முன்னே ஈடு இணையற்ற அழ கோடு ஒளி வடிவத்தில் நிற்பதையும், தன்னுடைய பக்தர் களுக்கும் அபயம் தந்து உற்சாகமூட்டுவதையும் காண் பேன். அவள் என்னை நோக்கிப் புன்முறுவல் செய்வதை யும், என்னுடன் பேசுவதையும் ஆறுதல் தருவதையும் பல்வேறு வகையில் உபதேசங்கள் செய்வதையும் அடிக்கடிக் காண்பேன்'' என்று கூறியுள்ளார்.

## 10. கடவுள் வெறி நிலை

காளியின் காட்சியைப் பெற்ற பிறகு ஸ்ரீராமகிருஷ்ண ருக்கு ஏற்பட்ட அனுபவங்கள் சொற்களில் விளக்க முடியாத, மெய் சிலிர்க்க வைக்கும் ஆச்சரியகரமான நிலைகளாகும். கரை காண முடியாத அற்புதமான ஆன்மிக உலகில் இப் பொழுது அவர் முதன் முதலாக அடியெடுத்து வைத்திருக் கிறார். ஒவ்வொரு நாளும் அசாதாரணமான தெய்விகக் காட்சி களைக் காணத் துவங்கினார். அவர் தியானத்தில் மூழ்கி உலகை மறக்கும்போது சில காட்சிகள் தோன்றின. மற்றும் சில காட்சிகள் உலக நினைவோடு கண்களைத் திறந்து கொண் டிருக்கும்போதே தோன்றின. அவர் இந்த உலகத்தில் வாழ்ந்து, இந்த உலக மக்களோடு பழகிக் கொண்டிருந் தாலும் அவருடைய செயல்கள் யாவும் உண்மையில் வேறு உலகத்தைச் சேர்ந்ததும், வேறுஉலக மக்களோடு தொடர்பு டையது போலவும் இருந்தன. உயிரோடு இருக்கும் ஒரு மனிதரிடம் பேசுவதுபோல அவர் கோயிலில் காளியிடம் அடிக்கடி பேசிக் கொண்டிருப்பதை எல்லோரும் கண் டார்கள். ஸ்ரீராமகிருஷ்ணரின் இந்தச் செயல்களைக் கண்ட கோயில் அதிகாரிகளும் வேலைக்காரர்களும் அவர் முழுக்க முழுக்கப் பைத்தியமாகி விட்டதாகவே நினைத்தனர். ஸ்ரீராம கிருஷ்ணரின் அத்தை மகன் இருதயனும் அவர் காளியைக் காணச்செய்த கடுமையான தவத்தால் மூளை கலங்கிப் பைத் தியமாகி விட்டார் என்றே நினைத்தான். இதனால் சிறந்த மருத்துவரிடம் அவரை அழைத்துச் சென்று பல நாட்கள் மருத்துவம் செய்தனர். பலனேதும் இல்லை. ஸ்ரீராமகிருஷ் ணர் முன்பு போலவே இருந்தார்.

காளியை நேரில் கண்டதால் உடம்பில் ஏற்பட்ட அதிர்ச்சி உணர்வு மிகவும் பயங்கரமாக இருந்ததால் சிறிது காலம் வரை தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ளும் ஆற்றலையே அவர் இழந்து விட்டிருந்தார். நிலைமை சரியாகி காளி பூஜை செய்ய ஆரம்பித்ததும் அது எதிர் பாராதவிதமாக மாறியது. பூஜை செய்ய ஆரம்பித்ததும் அவருக்கு விசித்திரமான காட்சிகளும் புதிய நினைவுகளும் தோன்றின. தியானம் செய்ய அமரும்போது உடம்பும் கைகால்களும் தம் கட்டுப்பாட்டில் இருக்கக் காளி கோயில்

மண்டபத்தில் இருக்கும் பைரவர் சிலையைப் போல் தம் உடம்பு ஆடாமல் அசையாமல் இருக்க வேண்டுமென்று தமக்குத் தாமே உறுதிப்படுத்திக் கொள்வார். இவ்வாறு நினைத்ததும் ஏற்பட்ட நிலையை அவரே கூறியுள்ளார்.

''இவ்வாறு நான் எனக்குள் சொல்லியதும் என் கணுக் காலிலிருந்து கழுத்துவரை உடம்பு இப்படி அப்படி அசைய முடியாமல் எல்லா மூட்டுக்களையும் யாரோ ஒருவர் சாவி பாட்டுப் பூட்டுவதுபோல் இருக்கும். அப்போது சாவியைத் ருப்பும் 'கிளிக்' என்னும் ஓசையும் தெளிவாக என் காதில் விழும். உடனே என் உடம்பு தியானம் முடியும் வரை ஆடாமல், அசையாமல் அப்படியே இருக்கும். தியானம் முடிந்ததும் கழுத்திலிருந்து கணுக்கால் வரை முன்பு பூட்டிய பூட்டுக்கள் ஒவ்வொன்றாகத் திறக்கப்படுவதையும் அப்போது எழும் ஓசையும் என் காதுகளில் விழும். இப்படி எல்லாப் பூட்டுக்களையும் திறந்த பிறகே என்னால் காலையும் கையையும் அசைக்க முடியும். உடம்பு பூட்டப்பட்ட நிலையில் தியானத்தில் இருக்கும்போது நான் பல வகையான காட்சிகளைக் காண்பேன். சில நேரங்களில் மின்மினிப் பூச்சிகள் பறப்பதுபோல அண்ட சராசரம் முழுவதும் ஒளித் திவலைகளாகக் காண்பேன். மற்ற நேரங் களில் ஒளி மேகங்கள் பனித்திரள்போல் தோன்றி என்னை அப்படியே சூழ்ந்து கொள்ளும். மற்றும் சில நேரங்களில் கண்களை மூடியிருக்கும்போதும் சில நேரங்களில் கண்களைத் திறந்து கொண்டிருக்கும்போதும் உருக்கி விட்ட வெள்ளி எங்கும் பாய்ந்து செல்வதுபோல் ஒளி அலைகளைக் காண்பேன். இவைகளின் பொருள் தெரியாமல், இவைகள் தோன்றுவது நல்லதற்காகவா, கெட்டதற்காகவா என்பது புரியாமல் நான் காளியிடம் ஓடிச் சென்று, 'தாயே! இவையெல்லாம் என்ன? எனக்கு ஒன்றும் தெரியவில்லையே. எனக்கு மந்திரம் தெரி யாது. உன்னை அறிந்து கொள்வதற்கான எந்த வழிகளும் தெரியாது. தாயே! உன்னைக் காண்பது எப்படி என்று எனக் குக் கற்று கொடு. நீ கற்றுத் தரவில்லை யென்றால் வேறு யார் கற்றுத் தருவார்கள்?' என்று கதறுவேன். இதுவே காளியிடம் இரவும் பகலும் எந்த நேரமும் என் பிரார்த்தனையாக இருக் கும். சில நேரங்களில் காளியிடம் இதைக் கூறியபடி தாங்க முடியாத வேதனையில் இதயம் தூளாகும்படித் தேம்பித் தேம்பி அழுவேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் இவ்வளவு நாள் பட்ட இத்தனை கொடிய துன்பத்தின் பலனாகக் காளியின் காட்சியைப் பெற்

ஞர் என்றாலும் அந்தக் காட்சி அவருக்குத் தொடர்ந்து கிடைக்காததால் அடிக்கடி பெரும் வேதனைக்குள்ளா ஞர். தியானத்தின்போதும் மற்றக் கடினமான சாதனைகளைச் செய்யும்போதும் மட்டுமே ஏதோ ஒரு சிறு அளவில் காளி யின் காட்சி கிடைத்தது. இது அவருக்கு மிகுந்த வேதனை யையே அளித்தது. தாம் காணும் காளியின் காட்சி எந்தவித முயற்சியும் இல்லாமல், தியானத்தின்போது மட்டுமல்லாமல் சாதாரண நிலையிலும்கூட, எப்போதும் தமக்குக் கிடைக்க வேண்டுமென்று நினைத்தார். இத்தகைய நினைவுகளால் அவரது சாதனைகள் பல மடங்காயின. இதன் விளைவாக அவருடைய நடவடிக்கைகள் பெரிதும் மாறுதல் அடைந்தன. தமக்கு அகப்படாமல், மறைந்துகொண்டு விளை யாட்டுக் காட்டும் அன்னையைத் தேடி அழுது துடிக்கும் சிறு குழந்தையின் நிலையை அவர் அடைந்தார்.

அன்னையின் முதற்காட்சி பெற்ற உடனே, 'இனிமேல் கவலை இல்லை. காளியிடம் என்னை முழுமையாக ஒப்ப டைத்து விடலாம், அவள் என்னைத் தன் மடியில் வைத் துக் கொள்வாள். எப்போதும் அவளுடனே இருக்கலாம். மாயை மயமானதும் திக்குத் தெரியாததுமான இந்த உலகில் நான் சிறிது நேரமும் இருக்க வேண்டியதில்லை' என்று நினைத் தார். எனவே தம்மை அன்னையிடம் முழுமையாக ஒப்படைக்கத் தடையாக இருக்கும் 'நான்' 'எனது' என்ற உணர்வுகளை அறவே ஒழிக்க முயன்றார், தம்மை அன்னை காளியிடம் அப் படியே ஒப்படைக்கத் துடித்தார். இரவும் பகலும் ''தாயே! உன் திருவடிகளில் நான் தஞ்சமடைந்து விட்டேன். நான் என்ன செய்ய வேண்டும், என்ன பேச வேண்டும், என்பதை எனக்குச் சொல்லிக் கொடு. உன் விருப்பமே எங்கும் ஆற்றல் வாய்ந்ததாக இருக்கிறது. உன் மக்களின் நன்மையையே அது நாடி நிற்கிறது. என் ஆணவத்தை அழித்து என்னை உன் கருவியாக்கிக் கொள்'' என்று பிரார்த்தனை செய்தபடியே இருந்தார்.

அவருடைய நடவடிக்கைகள் கோயில் அதிகாரிகளாலும் வேலையாட்களாலும் மிகவும் இழிவாகப் பேசப்பட்டன. எல்லோரும் அவரைக் கேலி செய்வார்கள். அதைப்பற்றி அவருக்கு என்ன கவலை? காளியே அல்லவா அவர் கையைப் பிடித்து அழைத்துச் செல்கிறாள்? கண்ணால் காணும் மாயை மயமான உலகம் அவர் நினைவிலிருந்து வேகமாக மறையத் துவங்கியது. அன்னையையே அவர் மனம் நாடி நின்றது.

அவருடைய சாதனைகளும் பிரார்த்தனைகளும் தீவிர

மாகவே காளியின் உருவத்தைத் தொடர்ந்து நெடுநேரம் காணத் துவங்கினர். முன்பெல்லாம் மிக ஆழ்ந்த தியானத்தின்போது மட்டுமே மிகுந்த சிரமத்தோடு காளி யின் அழகிய கை, கால் அல்லது முகத்தைச் சிறிது நேரம் காண்பார். இப்போதோ காளியின் முழு வடிவத்தையும் கண்டார். அவள் தம்மோடு பேசுவதையும், அன்றாட வேலைகளை எல்லாம் எப்படிச் செய்ய வேண்டுமென்பதைக் கூறுவதையும் கேட்டார். இதற்கு முன்பு நைவேத்தியத்தைப் படைக்கும்போது காளியின் கண்களிலிருந்து ஒளி தோன்றி நைவேத்தியத்தின்மீது படிந்து அதை ஏற்றுக்கொள்வதைக் காண்பார். இப்போதோ படைப்பதற்கு முன்பே காளி முழு வடிவில் தோன்றி நைவேத்தியத்தை உண்பதைக் கண்டார். இதற்கு முன்பு காளியின் சிலையில் தெய்விக உணர்வு மட்டுமே இருப்பதாக நினைத்தார். இப்போதோ கற்சிலையே மறைந்து போய், அந்த இடத்தில் உயிரோடும் உணர்வோடும் நிற்கும் காளியையும் அவள் சிரிப்பதையும் பேசுவதையும் தமக்கு ஆசிகள் வழங்குவதையும் கண்டார்.

பிற்காலத்தில் அவர் இதுபற்றிக் கூறும்போது, ''இந்தக் காலத்தில் காளி மூச்சு விடுவதை அறிய அவள் மூக்கில் என் கையை வைத்துப் பார்த்தேன். மூச்சுக்காற்று போவதை யும் வருவதையும் என்னால் தெளிவாக உணர முடிந்தது. இரவில் காளியின் கருவறையில் விளக்கு எரியும். அன்னை நின்று கொண்டிருப்பாள். அந்த விளக்கு ஒளியில் யார் நின்றாலும் அவளுடைய நிழல் அந்தச் சிறிய அறையின் சுவர்களில் விழும். மனிதர்கள் நிழல்போல் அன்னையின் நிழலும் சுவர்களில் விழுகிறதா என்று மிக உன்னிப்பாகப் பார்ப்பேன். அவளுடைய நிழல் விழுவதே இல்லை. நான் என் அறையில் இருப்பேன். இரவில் சின்னஞ்சிறு சிறுமியின் துள்ள லோடு அன்னை தன் அறையிலிருந்து கோயில் மாடிக்குச் செல்வாள். அப்படிச் செல்பவளின் கால்களின் சலங்கை மணி ஓசை என் காதுகளில் விழும். இது ஒருவேளை என் மனப் பிரமையோ என்று நினைத்து ஓசை வந்த திசையை நோக்கிப் போவேன். அன்னை தன் விரிந்த நீண்ட கூந்தல் தவழ, கோயில் மாடியின்மேல் நின்றுகொண்டு எதிரே உள்ள கங்கையையும் கல்கத்தா நகரையும் மாறி மாறிப் பார்ப்பதைக் காண்பேன்'' என்று கூறியுள்ளார்.

இப்படி ஸ்ரீராமகிருஷ்ணர் எந்த நேரமும் கடவுளையே கண்டு கடவுள் பித்துப் பிடித்தவராகவே மாறிவிட்டார். காண்பதெல்லாம் அவருக்கு இறைக் காட்சி

யாகவும் கேட்பதெல்லாம் இறைவனின் குரலாகவும் மாறிவிட்டது. அவருக்கும் அன்னை காளிக்கும் இருந்த இடைவெளி சிறிது சிறிதாக மறையத் துவங்கியது. இடைவிடாமல் காளியைக் காணும் நிலையை அவர் மிக விரைவில் அடைந்தார். அவருடைய கடுமையான தவமும் இடைவிடாத முயற்சியும் இத்தகைய அற்புத நிலையைத் தந்தன. அவருடைய தடுக்க முடியாத வேகம் எல்லாத் தடைகளையும் கடந்து நின்றது.

இந்த நிலையில் அவர் பூஜை செய்யும்போது சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள வழிபாட்டு முறைகளை எல்லாம் கடந்து அப்பால் சென்று விட்டார். ஆரம்ப கால சாதகன் கடவுளை அடைவதற்காகச் செய்யும் மிக நீண்ட பிரார்த்தனைகள் எல்லாம் அவரிடமிருந்து மறைந்துவிட்டன. அதற்குப் பதில் அன்னையைப் பார்க்க வேண்டுமென்பதும் அவளோடு பேசவேண்டுமென்று கேட்பதுமாக மாறிவிட்டது. ஆரம்ப காலத்தில் பூஜை செய்யும் போது சாஸ்திர விதிக்கு ஏற்பக் காளியின் சிலையிலிருந்து குறிப்பிட்ட தூரம் தள்ளி நிற்பதும், மிகுந்த மரியாதையோடும் பயபக்தியோடும் பூஜை செய்வதும், கீழே விழுந்து வணங்குவதுமான பழக்கங்கள் முற்றிலும் அவரிடமிருந்து நீங்கி விட்டன. தன் சொந்தத் தாயிடம் எந்தப் பிள்ளை அப்படி யெல்லாம் செய்வான்? சொந்த மகனிடம் எந்தத் தாய்தான் பயத்தை உண்டாக்க முடியும்?

இந்தக் காலத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் செய்த வழிபாட்டைப்பற்றி இருதயன் பல சுவையான செய்திகளைக் கூறியுள்ளார்: ''என் மாமா கோயிலில் காளி பூஜை செய்து கொண்டிருக்கும்போது யாராவது கோயிலுக்குள் நுழைந்தால் காளியே அங்கு இருப்பது போன்ற உணர்வு தோன்றும், சில நேரங்களில் அவர் செய்யும் காளியின் வழிபாட்டைப் பார்க்கக் கூடாது என்று நான் நினைப்பேன். எவ்வளவு முயன்றாலும் பார்க்காமல் இருக்க முடியாது. அவர் காளியை வழிபடும் முறை என் மனத்தில் ஆச்சரியத்தையும் அவர் மீது உயர்ந்த மதிப்பையும் உண்டாக்கும். அதே நேரத்தில் 'இது சாஸ்திர விதிக்குப் புறம்பாக இப்படி யெல்லாம் செய்கிறாரே இது சரியா?' என்றும் நினைப்பேன். இவர் இவ்வாறு செய்கின்ற பூஜையைப்பற்றிய செய்தி ராணி ராசமணிக்கோ மதுர் பாபுவிற்கோ எட்டினால் அதன் விளைவு என்ன ஆகுமோ என்றும் பயந்தேன். ஆனால் அவரோ இதைப்பற்றி எல்லாம் கவலைப் படவேயில்லை. இது குறித்து அவரிடம் முன்பு

போல் நீண்ட விவாதம் நடத்தவும் என்னால் முடியவில்லை. ஏனென்றால் அவர் அருகில் போவதற்கே எனக்குப் பயமாக இருந்தது. எனக்கும் அவருக்கும் முன்பிருந்த நெருக்கம் மறைந்து இப்போது இடையே பெரிய இடைவெளி இருப்பது போல் தோன்றியது. எனவே முன்பு போலவே என்னால் முடிந்த அளவிற்கு அவருக்குச் சேவை செய்துகொண்டு, அவர் இப்படிச் சாஸ்திர விதிகளுக்கு எதிராகச் செய்யும் பூஜை எந்த ஆபத்தைக் கொண்டு வரப் போகிறதோ என்று பயந்து கொண்டும் இருந்தேன்.''

மேலும் ஸ்ரீராமகிருஷ்ணரின் வழிபாட்டைப் பற்றி இருதயன் சொல்லும்போது, ''என் மாமா பூக்களையும் வில்வ இலைகளையும் அன்னைக்கு அர்ப்பணிக்க எடுப்பார். ஆனால் அவற்றால் தம் தலை மார்பு, பாதம் உள்பட உடம்பு முழுவதும் தொட்டுவிட்ட பிறகே காளிக்கு அர்ப்பணம் செய்வார். சில நேரங்களில் அளவுக்கு மீறிய பக்தி ஆவேசத்தால் அவரது கண்களும் மார்பும் குடிகாரனது கண்களைப் போல் சிவந்துவிடும். தம்முடைய இருக்கையிலிருந்து காளியின் திருவுருவின் அருகே குடிகாரனைப்போல் கால்கள் தள்ளாட எழுந்து செல்வார். அன்போடு அன்னையின் மோவாயைத் தொட்டபடி பாடுவார்; பேசுவார்; வேடிக்கை செய்வார்; சிரிப்பார்; சிலையின் கையைப் பிடித்துக்கொண்டு நடனமாடுவார். சில வேளைகளில் கையில் நைவேத்தியத்தை எடுத்துக் கொண்டு சிலையருகே செல்வார்; கையில் சிறிது உணவை எடுத்துத் திருவுருவின் வாயில் வைத்துக் காளியைச் சாப்பிடும்படி நெடு நேரம் வேண்டிக்கொண்டே இருப்பார். பிறகு காளிக்கும் அவருக்கும் சுவையான உரையாடல் நடக்கும். 'ஓ! என்னைச் சாப்பிடச் சொல்கிறாயா? அப்படியானால் நான் சாப்பிடட்டுமா? மிகவும் நல்லது. நான் சாப்பிடுகிறேன்' என்று சொல்லியபடியே அதில் ஒரு பகுதியைச் சாப்பிடுவார். மீதியுள்ளதை அன்னையின் வாயில் வைத்து' 'ஓ! நான் சாப்பிட்டு விட்டேனில்லையா! இப்போது நீ சாப்பிட வேண்டும்' என்பார். ஒரு நாள் அவர் காளிக்கு நைவேத்தியம் படைக்கும்போது பூனை ஒன்று உள்ளே நுழைந்தது. அதைப் பார்த்த அவர் மிகுந்த அன்போடு, 'ஓ! தாயே! உனக்குச் சாப்பிட அவ்வளவு அவசரமா? அப்படியா! நீ சாப்பிடலாம்' என்று சொல்லியபடியே பூனைக்கு அந்த நைவேத்தியத்தை ஊட்ட ஆரம்பித்தார். சில நேரங்களில் பூஜை முடிந்ததும் காளியை ஓய்வு கொள்ளும்படி வேண்டுவார். 'ஓ! என்னையும் உன்னோடு உறங்கச் சொல்கிறாயா;

சரி! உன் விருப்பம்போல் உன்னுடன் படுத்துக் கொள்கிறேன்' என்று கூறி, காளி படுத்து ஓய்வுகொள்ள, கோயிலுக்குள் அமைத்துள்ள மெத்தையில் படுத்துக் கொள் வார். சில நேரங்களில் பூஜையின்போது உடல், உலகம் எல்லாவற்றையும் மறந்து சிலையைப்போல் அமர்ந்திருப்பார். நாள் தோறும் காலையில் காளிக்கு மாலை கட்டத் தோட்டத் தில் மலர் பறிப்பதை நான் பார்ப்பேன். அப்போது யாரோ எதிரில் இருப்பதுபோல் பேசிக் கொண்டும், சிரித்துக் கொண் டும் தொட்டுக் கொண்டும் வேடிக்கை செய்து கொண்டும் மலர் பறிப்பார். இரவு நேரங்களில் அவர் கண் மூடுவதே யில்லை. நான் எப்போதெல்லாம் விழித்துப் பார்க்கிறேனோ அப்போதெல்லாம் தெய்விகப் பரவச நிலையில் எதிரே யாரோ இருப்பதுபோல் பேசிக்கொண்டோ, பாடிக்கொண்டோ அல்லது இப்போது பஞ்சவடி இருக்கும் இடத்திற்குப் போய், தியானம் செய்துகொண்டோ இருப்பார்'' என்று கூறி யுள்ளார்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் இத்தகைய செயல்கள் கோயில் அதிகாரிகளுக்கு அவர் பைத்தியம் என்பதை உறுதியாக்கி விட்டன. அவருடைய செயல்கள் பைத்தியமாக மட்டுமல்லா மல் பெரும் பாவமாகவும் அவர்களுக்குத் தோன்றியது. காளிக் குச் சூட்டும் மலர்களைத் தம் தலை, மார்பு, பாதம் இவைகளில் தொட்டுச் சூட்டுவதும், காளிக்குப் படைக்க வேண்டிய நைவேத்தியத்தைப் பூனைக்கு ஊட்டுவதும், தாமே தின்பதும், காளியின் படுக்கையில் தாமே படுத்துக் கொள்வதும், சாதாரண மனிதர்களான அவர்களுக்குப் பாவச் செயல் களாகத் தோன்றியதில் வியப்பேதுமில்லை அன்றோ! இதோடு தாமே ஆடுவதும் பாடுவதும், அழுவதும் சிரிப்பதும், பேசிக் கொள்வதும் அவர் முழுமையான பைத்தியம் என்பதை உறுதிப்படுத்தின.

அவருடைய இந்தச் செய்கைகள் எல்லாம் கல்கத்தாவி லிருந்த மதுர்பாபுவிற்குத் தெரிவிக்கப்பட்டன. அவரிட மிருந்து தாம் நேரிலே வந்து கவனிப்பதாகவும், அதுவரையும் யாரும் ஸ்ரீராமகிருஷ்ணர் செய்யும் பூஜைக்கு இடையூறு செய்யக் கூடாது என்றும் கடிதம் வந்தது. இந்தக் கடிதத் தைக் கண்டதும் கோயில் அதிகாரிகள் மதுர் வந்து இந்தப் பைத்தியத்தைக் கோயிலைவிட்டுத் துரத்தப் போகிறார் என்று நினைத்தார்கள்.

ஒரு நாள் மதுர் யாருக்கும் சொல்லாமல், எந்த வித முன்னறிவிப்பும் இல்லாமல் ஸ்ரீராமகிருஷ்ணர் பூஜை செய்து

கொண்டிருந்தபோது கோயிலுக்கு வந்தார். நேரே காளி கோயிலுக்குள் சென்றார். அங்கே ஸ்ரீராமகிருஷ்ணர் செய்யும் பூஜையைக் கண்டதும் தம்மை மறந்து நின்று விட்டார். ஸ்ரீராமகிருஷ்ணரோ தம் இதயத்தை அப்படியே பிழிந்து காளிக்கு அர்ப்பணித்துக் கொண்டிருந்தார். மதுர் வந்ததோ, பார்த்ததோ அவருக்குத் தெரியவே இல்லை. காளியின் மீது மிகுந்த பக்தியும் உண்மையான வழிபாட்டை அறிந்தவரு மாகிய மதுருக்கு ஸ்ரீராமகிருஷ்ணர் செய்யும் பூஜை காளி யிடம் கொண்ட எல்லையற்ற பக்தியின் காரணமாகச் செய் யப்படும் பூஜை என்பது தெளிவாகத் தெரிந்தது. எந்தக் காளி எழுந்தருள வேண்டுமென்று இவ்வளவு பெரிய கோயிலைக் கட்டி, இவ்வளவு சிறந்த பூஜைகள், விழாக்கள் செய்யப்பட்டனவோ அந்தக் காரியம் ஸ்ரீராமகிருஷ்ணரால் நிறைவேறி விட்டதை அவர் உணர்ந்தார். அமைதியாகத் தம் வீடு திரும்பினார். உடனே கோயில் அதிகாரிகளுக்கு, ''சின்ன பூசாரி எப்படி யெல்லாம் பூஜை செய்ய விரும்பு கிறாரோ அப்படியெல்லாம் பூஜை செய்ய அனுமதியுங்கள். ஏதாவது தொந்தரவு கொடுத்தீர்களோ கோயிலை விட்டே துரத்திவிடுவேன்' என்று கடிதம் அனுப்பினார்.

சாஸ்திரங்களில் இரண்டு விதமான வழிபாட்டு முறைகள் கூறப்படுகின்றன. ஒன்று, வழிபாட்டு நூலில் கூறப்படு கிற பல்வேறு முறைகளைப் பின்பற்றி பூஜை செய்வது. அதா வது பூஜை செய்பவன் இத்தனை முறை குளிக்க வேண்டும்; இத்தனை முறை நோன்பிருக்க வேண்டும்; இந்த மந்திரத்தை அல்லது அந்த மந்திரத்தைச் சொல்ல வேண்டும்; கர்ப்பூர தீபத்தை இந்த வகையில் சுற்ற வேண்டும்-என்றெல்லாம் கூறப்பட்டுள்ள முறைகளைப் பின்பற்றிச் செய்யும் வழிபாடு. மற்றொன்று, பக்தி ஒன்றையே முதன்மையாகக் கொண்டு சாஸ்திர விதிகளைப்பற்றிக் கவலைப்படாமல் கடவுளை நேருக்கு நேராகப் பார்த்து நம் அன்புக்குரிய மனிதரிடம் எப்படி நடந்து கொள்வோமோ அப்படிச் செய்யும் வழிபாடு. முதல் வகையான பக்தி வைதிக பக்தி எனப்படும். இரண்டா வது வகையான பக்தி பிரேம பக்தி எனப்படும். முதலாவது பக்தி இரண்டாவது பக்திக்கு முதல் படியாகும். ஒருவனுக்குக் கடவுளிடத்தில் தோன்றும் பக்தி அளவு கடந்து வளரும் போது அது பிரேம பக்தியாக மாறுகிறது. இதுபற்றி எல் லாம் தெரியாதவர்கள் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பைத்தியம் என்றே கருதினர். பிறரால் எளிதில் அடைய முடியாத இந்தப் பக்தி ஸ்ரீராமகிருஷ்ணரிடம் இயல்பாகவே தோன்றியது.

இத்தகைய உயர்ந்த நிலையைத் தாம் அடைந்திருப்பது ஸ்ரீராமகிருஷ்ணருக்குக்கூடத் தெரியவில்லை. அவர் காளி யென்னும் அளவற்ற ஆற்றலிடம், கருணையிடம் தம்மை முழு மையாக ஒப்படைத்துவிட்டார். பிரேம பக்தியின் காரண மாகத் தம்மிடம் தோன்றியுள்ள மாறுபாடுகளைக் கண்டு அவரே சில நேரம் ஆச்சரியப்பட்டார். அது நல்லதுதானு என்ற சந்தேகமும் அவருக்குத் தோன்றியது. எனவே அடிக் கடி காளி கோயிலுக்குச் சென்று தம்முடைய விசித்திர மான நடத்தைகளைப்பற்றிக் காளியிடம் கூறி அழவும், அதுபற்றி அவளிடமே கேட்கவும் ஆரம்பித்தார்.

காளியைக் காண்பதற்காக அவர் செய்த கடுமையான சாதனைகளால் அவர் உடம்பில் பலவிதமான வேதனைகளும் உண்டாயிற்று. அதில் ஒன்று அவர் உடம்பு முழுவதும் எரி சோடாவைப் பூசியதுபோல் எந்த நேரமும் ஏற்பட்ட பொறுக்க முடியாத எரிச்சலாகும். அதைப்பற்றி அவரே பிற்காலத்தில், ''பூஜை நேரத்தில் சாஸ்திரத்தில் கூறியுள்ள படி நான் எனக்குள் இருக்கும் பாவ புருஷன் எரிந்து போய் விடுவது போலவும் என் உடல் தூய்மை வடிவாகி விடுவ தாகவும் எண்ணிக் கொள்வேன். அப்படி நினைக்கும்போது நம் ஒவ்வொருவருக்குள்ளும் ஒரு பாவ மனிதன் உண்மை யிலேயே இருக்கிறுன் என்பது யாருக்குத் தெரியும்? அப்படிக் கூறி நான் சாதனையைத் துவங்கிய நாள் முதல் என் உடல் முழுவதும் கடுமையான எரிச்சல் உண்டாவதைக் கண்டேன். இது என்னவாக இருக்கும் என்று நான் பல நாட்கள் சிந்தித் தேன். பல வகையான மருந்துகளைத் தேய்த்துப் பார்த்தேன். ஒன்றும் பலனில்லை. ஒரு நாள் நான் பஞ்சவடியில் தியானம் செய்து கொண்டிருந்தபோது சிவந்த கண்களும் கறுப்பு நிறமுமாக ஒரு மனிதன் குடிகாரனைப்போல் தள்ளாடிக் கொண்டே என் உடம்பிலிருந்து வெளியே வந்து என் முன்னுல் நடக்கத் துவங்கினுன். சிறிது நேரத்திற்குள் அமைதியான தோற்றத்தோடு காவியணிந்து கையில் சூலம் ஏந்திய உரு வம் ஒன்றும் என் உடம்பிலிருந்து வெளியே வந்து முன்னே வந்த கறுத்த மனிதனை அடித்துக் கொன்று விட்டது. இந்தக் காட்சிக்குப் பின்னர் சில நாட்கள் கழித்து ஆறு மாதங் களாக என்னை வேதனைப்படுத்தி வந்த அந்தக் கொடுமை யான எரிச்சலிலிருந்து நான் விடுபட்டேன்'' என்று கூறி யுள்ளார். அவர் வாழ்க்கையில் இரண்டு முறை இந்த எரிச்சல் மறுபடியும் வருவதைக் காணப் போகிறோம்.

பக்தி சாஸ்திரங்கள் ஐந்து வகையான வழிபாடுகளைக்

கூறுகின்றன. முதலாவது சாந்த பாவம். கடவுள்மீது அமைதியான முறையில் பக்தி கொள்வது. இத்தகைய பக்தர்கள் கடவுள் தங்கள் இதயத்தில் குடி கொண்டிருக்கிறார் என்பதை வேதங்கள், சாஸ்திரங்கள் மூலமாக அறிந்து, அந்தக் கடவுளை அடைய முற்படுவார்கள். உலகப் பொருள்கள் மீது தோன்றும் ஆசைகளை விட்டுத் தங்கள் இதயத்தில் இருக்கும் கடவுள் மீது மனத்தைத் திருப்பித் தியானிப்பார்கள். இத்தகையவர்கள் நகரத்தின் ஆரவாரங்களைத் தவிர்த்து அமைதியான இடங்களில் காய்கறி, கிழங்கு, இலை, வேர் முதலியவைகளை உணவாகக் கொண்டு எளிய வாழ்வு வாழ்வார்கள். இந்த வழி ஞான மார்க்கம் என்றும் கூறப்படும். வேத காலத்து ரிஷிகள் இத்தகைய வழிபாட்டைக் கடைப்பிடித்தனர்.

அடுத்த வழிபாட்டு முறை தாஸ்ய பாவம். கடவுளுடைய வேலைக்காரனாகத் தன்னை எண்ணுதல் என்பதாகும். தாசன் என்பதற்கு அடிமை என்பது பொருள். கடவுளைத் தலைவனாகவும் தன்னை வேலையாளாகவும் கொண்டு செய்யப்படும் வழிபாடு இது. தலைவனை மகிழ்விக்க அவனது அடிமை பல வகையாக அவனுக்குச் சேவை செய்வதுபோல், இத்தகைய பக்தி முறையைப் பின்பற்றுபவர்கள் கடவுளுக்குப் பல வழிகளில் சேவை செய்வார்கள். இராமரிடத்தில் அனுமன் கொண்ட பக்தி இத்தகையதாகும்.

மூன்றாவது வழிபாட்டு முறை சக்கியம் அல்லது நட்பு முறையாகும். இந்தப் பக்தர்கள் கடவுளை நெருங்கிய நண்பனாகக் கருதுவார்கள். நண்பன் முன் இருக்கும்போது எந்த விதப் பணிவோ, தயக்கமோ இல்லாமல் சரி சமமாகப் பழகி மகிழ்ந்திருப்பதுபோல் இத்தகைய பக்தர்கள் கடவுளிடம் பக்தி செலுத்துவார்கள். கிருஷ்ணனிடத்தில் அர்ஜுனனும் கோகுலத்து மாடு மேய்க்கும் சிறுவர்களும் கொண்ட பக்தி இத்தகைய பக்தியாகும்.

நான்காவது வாத்சல்ய பக்தி எனப்படும். அதாவது குழந்தையிடம் பெற்றோர் கொள்ளும் பாசம் போன்ற பக்தியாகும். இந்தப் பக்தி முறையில் கடவுளிடம் பணிவோ, பயமோ எதுவுமே இருக்காது. ஒரு சிறு குழந்தையிடம் பெற்றோர்க்கு எத்தகைய அன்பும் பாசமும் இருக்குமோ அத்தகைய அன்பும் பாசமும் இருக்கும். கடவுள் இவர்களுடைய முழுமையான அன்பிற்குரியவராக இருப்பார். கிருஷ்ணனின் வளர்ப்புப் பெற்றோர்களான யசோதையும் நந்தனும் இந்தப் பக்திக்குச் சிறந்த உதாரணங்களாவர்.

கடைசியாக உள்ள பக்தி முறை மதுர பக்தியாகும். இது தலைவன்-தலைவி உறவு முறையாகும். இது மற்ற முறைகள் அனைத்திலும் வலிமை வாய்ந்தது. இதில் பிரிவு என்பது சிறிதுகூடப் பொறுக்க முடியாததாகிறது. பிருந்தாவனத்துக் கோபிகைகள் இதற்குச் சிறந்த உதாரணங்களாவர். இந்தப் பக்தியில் இறைவனே பக்தர்களின் இணையற்ற காதலனாக விளங்குவார். பக்தனின் வாழ்வே—அவன் உண்ணும் சோறும் பருகும் நீரும் சுவாசிக்கும் காற்றும் பகவான் மயமாகவே இருக்கும். இது மற்ற நெறிகள் அனைத்திலும் தலை சிறந்ததும் மற்ற நெறிகள் அனைத்தையும் தனக்குள் அடக்கியதுமாகும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் இந்த ஐந்து வகையான பக்தி மார்க்கங்களையும் கடைப்பிடித்தார், சாந்த பாவத்தைக் கடைப்பிடித்து முதலில் காளியைக் கண்டார். காளியின் காட்சியைக் கண்ட சிறிது காலத்திற்குள் இவர் இராமரைக் காண விரும்பி, சாதனையைத் துவங்கினார். இராமரை அடைவதற்குச் சிறந்த வழி எதுவென்று யோசித்தவருக்கு அனுமனின் தாஸ்ய பக்தி நினைவிற்கு வர, அனுமனாகவே மாறி சாதனையை ஆரம்பித்தார். அந்தச் சாதனையைப் பற்றி அவர் சொற்களிலேயே காண்போம்.

“இடைவிடாமல் எப்போதும் அனுமனின் ஈடற்ற குணங்களையே நினைத்துத் தியானம் செய்து வந்த நான் ஒரு மனிதன் என்பதையே மறந்துவிட்டேன். என் அன்றாட வாழ்க்கை முறையும் உணவும் அனுமனாகிய குரங்கினுடையது போலவே மாறிவிட்டது. என் இடுப்பைச் சுற்றிக் குரங்குக்குக் கட்டிவிடுவதுபோல் வேட்டியைக் கட்டிக்கொண்டு அதன் ஒரு முனையை வால்போல் தொங்கவிட்டுக் கொள்வேன். மனிதனைப்போல் நடந்து செல்வதற்குப் பதிலாகக் குரங்கைப்போலக் குதித்துக் குதித்துச் செல்வேன். குரங்கைப்போல் பழங்களையும் கொட்டைகளையும் மட்டுமே சாப்பிடுவேன். அவைகளைச் சாப்பிடும்போதும் குரங்கைப்போல் தோலுரிக்காமலேயே சாப்பிட விரும்புவேன். ஒவ்வொரு நாளும் பெரும்பாலான நேரம் காளி கோயிலின் அருகில் இருந்த மரத்தின்மேல் குரங்கைப் போல் உட்கார்ந்துகொண்டு என்னை மறந்து இராமர் நினைவில் ஈடுபட்டு, ‘ராமா! ராமா’ என்று கூவி அழுதபடியே இருப்பேன். என் கண்கள் மனிதர்களின் அமைதியான பார்வையை இழந்து குரங்கின் கண்களைப் போலப் பரபரப்போடு அங்கும் இங்கும் பார்த்தன. இவைகள்

எல்லாவற்றையும்விட ஆச்சரியம் என்னவென்றால் இப்படி அனுமனாகவே மாறி நான் சாதனை செய்த சில நாட்களுக்கெல்லாம் என் முதுகெலும்பு நீண்டு ஓர் அங்குலம் வால் போலவே வளர்ந்துவிட்டது. சுருங்கச் சொன்னால் என்னிடத்தில் மனிதத் தன்மை என்பதே முழுவதும் நீங்கி முழுக்க முழுக்கக் குரங்காகவே நான் மாறிவிட்டேன்.''

இந்தச் சாதனையின் முடிவில் ஆச்சரியமான தெய்விகக் காட்சியை ஸ்ரீராமகிருஷ்ணர் கண்டார். இது அவர் இதுவரை கண்ட தெய்விகக் காட்சிகள் அனைத்திலிருந்தும் வேறு பட்டதாகவும், மிக மிகத் தெளிவானதாகவும், நெடு நாட்கள் அவர் மனத்தைவிட்டு நீங்காததாகவும் இருந்தது. இதுபற்றிக் குருதேவர் கூறினார்.

''ஒரு நாள் இப்போது பஞ்சவடி என்று அழைக்கப்படும் இடத்தில் சிறிதுகூடத் தியான நினைப்பில்லாமல் சாதாரண நிலையில் அமர்ந்திருந்தேன். அப்போது திடீரென்று வார்த்தைகளால் வருணிக்கவே முடியாத கனிவோடு ஒளிமயமான ஒரு பெண் வடிவம் என்முன் தோன்றியது. அவளுடைய ஒளியால் அந்த இடம் முழுவதுமே ஒளி மயமாகிவிட்டது. அங்கிருந்த மரங்கள், அருகில் ஓடும் கங்கை முதலிய எல்லாமே அவளுடைய ஒளியால் தகதகத்தன. நான் அந்த வடிவத்தைக் கூர்ந்துப் பார்த்தேன். அது கடவுளர்போல் மூன்று கண்கள் முதலியன இல்லாமல் மனித வடிவில் இரண்டு கை, இரண்டு கண்களுடனே இருந்தது. ஆனால் அதனிடமிருந்த ஈடு இணையற்ற அழகும், கண்களில் வெளிப்பட்ட அன்பும் கருணையும் பொறுமையும் நான் தெய்வங்களின் வடிவத்தில்கூடக் காணவில்லை. வடக்கிலிருந்து அவள் கருணையோடு என்னைப் பார்த்தபடியே மெதுவாக என்னை நோக்கி நடந்து வந்தாள். நான் அளவற்ற வியப்போடு இவள் யாராக இருக்கும் என்று நினைத்துக் கொண்டிருக்கும்போது குரங்கு ஒன்று கத்தியபடி குதித்து ஓடிவந்து அவர் அருகில் உட்கார்ந்து கொண்டது. இதைப் பார்த்ததும். 'ஓ! யாருடைய வாழ்க்கையின் ஒவ்வொரு வினாடியும் இராமரையே மையமாகக் கொண்டு அமைந்ததோ, சொல்ல முடியாத துயரம் யாருடைய சொத்தாக் இருந்ததோ அவரே, அந்தச் சீதையே இவர்!' என்ற நினைவு என் மனத்தில் திடீரென்று எழுந்தது. அளவு கடந்த உணர்ச்சி வசப்பட்டு, 'தாயே!' என்று அழைத்தபடி அவர் காலில் விழப் போனேன். அதற்குள் அவர் என் உடம்பிற்குள் புகுந்துவிட்டார். அளவற்ற உணர்ச்

சிப் பெருக்கால் நான் நினைவிழந்து தரையில் விழுந்துவிட்டேன் அப்படி அவர் இந்த உடம்பில் புகுந்த நாள் முதல் அவர் முகத்தில் திகழ்ந்த புன்னகை என் முகத்தில் தவழ ஆரம் பித்தது. தியானத்தில் மூழ்காமல் சாதாரணமாக உட் கார்ந்த நிலையில் கண்களைத் திறந்துகொண்டே நான் கண்ட முதல் தெய்விகக் காட்சி இதுதான். இதற்குப் பிறகு என் வாழ்வின் பெரும் பகுதி துயரம் மிகுந்ததாக மாறிவிட்டது. இது துயரமே உருவான சீதையை நான் கண்டதன் விளைவோ என்னவோ யாருக்குத் தெரியும்?''

ஒரு சாதனை நெறியின் மூலம் இலட்சியத்தை அடையவே சாதாரண மனிதருக்கு ஒரு பிறவி வேண்டியிருக்க, பல சாதனைகளை ஸ்ரீராமகிருஷ்ணர் தம் குறுகிய வாழ்நாளில் மேற்கொண்டது மட்டுமின்றி வெற்றியும் பெற்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் பல்வேறு சாதனைகளிலும் வெற்றி பெற்றதன் இரகசியத்தை ஒரே வார்த்தையில் சொல்லுவதென்றால், சத்தியத்தோடு ஐக்கியமாகி, நினைவு செயல் இரண்டும் ஒன்றிக் கலக்க அவர் சாதனை களில் ஈடுபட்டதாகும், ஏதாவது ஒன்றில் வெற்றிபெற வேண்டுமானால் அதனோடு இணைந்து இரண்டறக் கலந்து விட வேண்டும் என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவது வழக்கம். இந்த உண்மையை அவர் தமது வாழ்வில் எந்த அளவு கடைப்பிடித்தார் என்பதைப் போகப் போகக் காணலாம்.

ராணி ராசமணி ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கொண்டிருந்த ஈடுபாட்டை முன்பே கண்டோம். காளியின் தரிசனத்தை ஸ்ரீராமகிருஷ்ணர் பெற்றிருக்கிறார் என்பதை உறுதி யாக நம்பிய ராணி, அவருடைய விசித்திரமான நட வடிக்கைகளை யெல்லாம் மனக்கோளாறு என்று கருதாமல் காளியிடம் கொண்ட அளவுக்கு அதிகமான பக்தியின் விளைவே என்று கருதினார்.

ஒரு நாள் அவர் தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்தார். கங்கையில் குளித்துவிட்டுக் காளி கோயிலுக்குள் நுழைந் தவர் அங்கே ஸ்ரீராமகிருஷ்ணர் இருப்பதைக் கண்டார். காளியின் எதிரே அமர்ந்ததும் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பாடும் படி வேண்டினார். ஸ்ரீராமகிருஷ்ணர் எவரையும் உருக வைக்கும் தம் குரலில் உள்ளத்தைப் பிழிய வைக்கும் உணர்வோடும் பக்தியோடும் பாடத் துவங்கினார். சிறிது நேரம் கழித்து ராணியைப் பார்த்தார். அவருடைய கவனம் பாட்டில் செல்லாமல் எங்கேயோ சென்று கொண்

டிருப்பதை அறிந்ததும், ஆச்சரியத்தோடும் கோபத்தோடும், ''இங்கு கூடவா அந்த நினைவு?'' என்று கூறியவாறே ராணி ராசமணியின் கன்னத்தில் இரு முறை அறைந்து விட்டார். இதைக் கண்ட கோயில் வேலைக்காரர்கள் நடுங்கிப் போய்விட்டார்கள். ஸ்ரீராமகிருஷ்ணரை அடிக்க அவர்களின் கைகள் துடித்தன; அளவுக்கதிகமான பரப் பரப்பால் யாரும் கோயிலுக்குள் நுழையவில்லை. செய்தி தெரிந்ததும் கோயில் முழுவதும் பெரிய கலவரம்போல் ஆகிவிட்டது. கோயிலின் உரிமையாளர் கோயிலைக் கட்டிய வர் - கல்கத்தா முழுவதும் தம் ஆட்சித் திறமையாலும்- அளவற்ற தான தருமங்களாலும் எல்லோரும் வணங்கும் படியான ராணியை அவரிடமே வேலை பார்க்கும் பூசாரி ஒருவர் கை நீண்டி அடிப்பதா?

கோயிலில் இருந்த அனைவரும் கோபத்தாலும் ஆத்திரத் தாலும் துடித்தனர். இந்த நிலையில் சிறிதும் அமைதியிழக் காமல் இருந்தவர்கள் ஸ்ரீராமகிருஷ்ணரும் ராணியும்தாம். ஸ்ரீராமகிருஷ்ணர் தவறு செய்த தம் சிறிய குழந்தையைத் தண்டிக்கும் தந்தையின் மன நிலையில் இருந்தார். ராணியோ தவறு செய்துவிட்டுக் கையும் களவுமாகப் பிடிபட்ட குழந் தையின் நிலையில் இருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் தம் மனத் தில் ஓடிய எண்ணங்களைத் தெரிந்து கொண்டதை எண்ணி ராணி வியப்படைந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் பாடியபோது ராணி நெடுநாட்களாக வழக்கு மன்றத்தில் நடந்து வந்த வழக்கு ஒன்றைக் குறித்து எண்ணிக் கொண்டிருந்தார். அந்த நினைவே அவரைப் பாடலில் மனம் செலுத்தவொட்டாமல் தடுத்தது. இதை யறிந்த ஸ்ரீராமகிருஷ்ணர், ''அன்னை காளியின் முன்புமா அந்த நினைவு?'' என்று ராணியின் கன்னத்தில் அறைந்தார்.

ராணி கோயிலிலிருந்து எழுந்து தம் மாளிகைக்குச் சென்றார். கோயில் அதிகாரிகளும் மற்ற வேலைக்காரர்களும் அவரிடம் சென்று அவரை அடித்த ஸ்ரீராமகிருஷ் ணரை நன்கு தண்டிக்க வேண்டுமென்று ஆத்திரத்தோடு கூறினர். அதைக் கேட்ட ராணி, 'உங்களுக்கு அதன் காரணம் தெரியாது. அன்னை காளியே பூசாரி மூலம் தண்டித்து என் னைத் திருத்தினாள். எல்லோரும் உங்கள் இடத்திற்குப் போங் கள். இந்த சம்பவம்பற்றி யாரிடமும் ஒன்றும் சொல்லா தீர்கள்'' என்று கூறிவிட்டார்.

இந்த நிகழ்ச்சி நடந்த பிறகு ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ் ணர் மதுரிடம் இருதயனைத் தமக்கு பதில் காளி கோயில்

அர்ச்சகராக அமர்த்தும்படியும் காளி அவன் செய்யும் பூஜையை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்வாள் என்றும் கூறினார். ஸ்ரீராமகிருஷ்ணர் கூறும் எதையும் காளியின் வாக்காக எடுத்துக் கொள்ளும் மதுர் இதையும் அப்படியே ஏற்று இருதயனைக் காளி கோயில் அர்ச்சகராக்கினார்.

காளி கோயில் தோட்டத்தில் பஞ்சவடி* என்னும் இடமிருப்பதுபற்றி முன்பே கண்டோம். அதன் அருகே ஒரு சிறிய குளம் இருக்கிறது. அதன் கரையில் ஒரு நெல்லி மரம் இருக்கிறது. அதனடியில் அமர்ந்துதான் ஸ்ரீராமகிருஷ்ணர் காளியைக் காணக் கடுந்தவங்கள் செய்தார். குளத்தை ஆழப்படுத்த முயன்றபோது அதற்கு இடையூறாக இருக்கவே அந்த மரத்தை வெட்டிவிட்டார்கள். அதனால் மறைவாக அமர்ந்து தியானம் செய்ய இடமில்லாமல் போகவே ஸ்ரீராமகிருஷ்ணர் அதற்காக ஒரு நல்ல இடத்தைத் தேடினார். வெட்டப்பட்ட நெல்லி மரத்தின் அருகே வசதியான ஓர் இடத்தை இருதயனும் அவரும் தேர்ந்தெடுத்தனர். அங்கே ஸ்ரீராமகிருஷ்ணர் அரசங்கன்றை நட்டார். இருதயன் அசோகம், ஆல், வில்வம் முதலிய மரங்களை நட்டான். அதன் வேலியைப்போல் இருக்கத் துளசிச் செடியையும் அபராஜித மரங்களையும் நட்டார்கள். துளசி விரைவில் மிக உயரமாக வளர்ந்து அதற்குள் அமர்ந்திருப்பவர்களை யாரும் காண முடியாது மறைத்தது.

ஒருநாள் மாடுகள் உள்ளே நுழைந்து அந்தச் செடிகளையெல்லாம் மேய்ந்துவிட்டன. இதனால் மிகுந்த கவலையடைந்த ஸ்ரீராமகிருஷ்ணர் மறுபடியும் மாடுகள் வந்து அதை மேயாமல் இருக்க வேலிபோட நினைத்தார். அவர் அப்படி நினைத்த சிறிது நேரத்திற்கெல்லாம் கங்கை நதியில் அடித்து வரப்பட்ட ஒரு பெரிய மூட்டை கங்கைக் கரையில் ஒதுங்கியது. போய்ப் பார்த்ததும் அதில் வேலி அமைப்பதற்கான கம்புகளும் கயிறும் கத்தியும் இருந்தன. உடனே அதைக் கொண்டு ஸ்ரீராமகிருஷ்ணரும் இருதயனும் துளசிச் செடியைச் சுற்றி வேலியை அமைத்தனர்.

மதுர ஸ்ரீராமகிருஷ்ணரின் தேவைகளை எப்படிக் கவ

---

*பஞ்சவடி என்பது ஆல், அரசு, வில்வம், நெல்லி, அசோகம் என்னும் ஐந்து மரங்கள் சூழ்ந்த ஓரிடம். இது தியானம் செய்ய ஏற்ற இடம்.

ளித்துக் கொண்டார் என்பதையும், அவரைப் புரிந்து கொள்ளாத கோயில் வேலையாட்களிடமிருந்து அவரை எப்படிக் காப்பாற்றினர் என்பதையும் முன்பு கண்டோம். அவர்கூட இப்போது ஸ்ரீராமகிருஷ்ணரின் நடவடிக்கை களைப் பார்த்து அவை நரம்புக் கோளாறினுல் ஏற் பட்டதோ என்று சந்தேகப்படத் துவங்கினர். ராணி ராச மணியின் கன்னத்தில் அவர் அறைந்த நிகழ்ச்சி அவரது சந்தேகத்தை உறுதிப்படுத்தியது. அதனுல் கல்கத்தாவில் மிகச் சிறந்த மருத்துவரான கங்கா பிரசாத் சென்னிடம் ஸ்ரீராமகிருஷ்ணரை அழைத்துச் சென்ருர். பல நாட்கள் மருத்துவம் நடந்தும் பலனேதும் ஏற்படவில்லை. என்ருலும் மதுர் ஸ்ரீராமகிருஷ்ணரை மற்ற மனிதர்கள் போல் சாதாரண மாக நடந்து கொள்ளும்படியும் மனத்தில் பொங்கும் உணர்ச்சி களை அடக்கி யாளும்படியும் கூறி வந்தார். அப்போது ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம், ''கடவுள்கூட தான் விதித்த சட்டத்தைப் பின்பற்றி நடந்தாக வேண்டும். அதை மீறிப் போக அவருக்கும் சக்தியில்லை'' என்ருர். இதைக் கேட்ட ஸ்ரீராமகிருஷ்ணர், ''என்ன அற்பத்தனமாகப் பேசு கிருய்! சட்டத்தை உண்டாக்கிய ஒருவன் விரும்பினுல் அதை மீறவும் மாற்றவும் முடியும்'' என்ருர். இதைக் கேட்ட மதுர், ''அது எப்படி முடியும்? முடியவே முடி யாது. சிவப்பு மலர் பூக்கும் செடியில் சிவப்பு மலர் மட்டுமே பூக்கிறது. வேறு எந்த நிறத்திலும் அது பூப்ப தில்லை! உதாரணமாக அது வெள்ளை நிற மலரைப் பூக்கவே செய்யாது. ஏனென்ருல் அதுதான் சட்டம்'' என்ருர். ''கடவு ளால் எதையும் எளிதாகச் செய்ய முடியும். ஏனென்ருல் உலகில் எல்லாமே அவர் விருப்பத்தை ஒட்டியே நடக்கிறது.'' என்ருர் ஸ்ரீராமகிருஷ்ணர். மதுர் இதை ஏற்றுக் கொள்ள வில்லை.

மறுநாள் மதுர் கோயிலுக்கு வந்தார். அப்போது பூந்தோட்டத்திற்குச் சென்றிருந்த ஸ்ரீராமகிருஷ்ணர் வழக் கமாகச் சிவப்புப் பூக்களே பூக்கும் செடியில் ஒரே கிளையில் சிவப்பு மலர் ஒன்றும் வெள்ளை மலர் ஒன்றும் பூத்திருப் பதைக் கண்டார். அந்தக் கிளையை அப்படியே ஒடித்துக் கொண்டு வந்து மதுரிடம் காட்டினர்.

இதையெல்லாம் கண்ட மதுருக்கு ஸ்ரீராமகிருஷ்ண ரோடு நெருங்கிப் பழகப்பழக அவரைப்பற்றிய சந்தேகங்கள் எல்லாம் தீர்ந்தன. ஸ்ரீராமகிருஷ்ணர் ஈடு இணையற்ற ஒரு மகான் என்றும், நிறைவுபெற்ற யோகி என்றும், அவருக்குச்

சேவை செய்து அவரோடு இருப்பதே பெரிய தவம் என்றும் அவர் உறுதியாக நம்பத் துவங்கினார். நாளாக நாளாக ஸ்ரீராமகிருஷ்ணரின் அற்புத சக்தியால் அவர் பெரிதும் கவரப்பட்டார். தம்மைக் கடைத்தேற்ற வந்த குருவாகவே ஸ்ரீராமகிருஷ்ணரைப் போற்றத் தலைப்பட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் இத்தகைய தெய்விக நிலையில் திளைத்திருந்த இந்த நான்கு ஆண்டுகளில் (1855-1858) உலகப் பற்றுடைய மக்களோடு பேசுவதும் பழகுவதும் அவருக்குப் பொறுக்க முடியாத வேதனையாக இருந்தது. ஆனால் பக்தர்களோடு நெருங்கிப் பழகுவதிலும் அவர்களோடு சேர்ந்து பூஜைகளும் கீர்த்தனங்களும் செய்வதிலும் மிகுந்த ஆர்வம் கொண்டார். பராநகரிலிருந்த தச மகாவித்யா கோயிலுக்கும் காளிகாட்டில் இருந்த காளி கோயிலுக்கும் அடிக்கடிச் சென்றார். தட்சிணேசுவரத்திலிருந்து சில மைல் தொலைவில் உள்ள பானிஹாட்டியில் நடைபெறும் விழாவிற்கு ஆண்டு தோறும் சென்று வந்தார். இந்த இடத்தில்தான் வங்காளத்தின் வைணவ பக்தரும் பிற்காலத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் பெரும் பக்தி கொண்டவருமான வைஷ்ணவ சரண் என்பவரை முதன் முதலில் 1858-இல் சந்தித்தார். அப்போது ஸ்ரீராமகிருஷ்ணர் இருதயனோடு விழாவைக் காணச் சென்று அங்குள்ள மணிமோகன் சென் என்பவரின் கோயிலில் உட்கார்ந்திருந்தார். அங்கு வந்த வைஷ்ணவ சரண் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்தவுடனே அவர் இணையற்ற தெய்விக நிலையை உடையவர் என்பதைப் புரிந்து கொண்டார். பெரிய மகான்களைக் கண்டால் அவர்களுக்குக் காணிக்கை தந்து மரியாதை செய்வது வங்காளத்தில் உள்ள வழக்கம். அதற்கு ஏற்ப வைஷ்ணவ சரண் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு ஐந்து ரூபாய்களைக் காணிக்கையாகத் தந்தார். யார் எந்தக் காணிக்கையைத் தந்தாலும் ஏற்றுக் கொள்ளாதவர் ஸ்ரீராமகிருஷ்ணர். வைஷ்ணவ சரண் வற்புறுத்தியபோதும் காணிக்கையை வாங்க மறுத்துவிட்டார். வைஷ்ணவசரண் மேலும் மேலும் வற்புறுத்தவே இருதயனிடம் அந்தப் பணத்தை வாங்கி, கடவுளுக்கு நைவேத்தியம் படைக்க மாம்பழம் முதலியவற்றை வாங்கி வருமாறு கூறினார். ஸ்ரீராமகிருஷ்ணரால் அந்தப் பிரசாதத்தைச் சாப்பிட முடியவில்லை. மற்ற அனைவரும் சாப்பிட்டனர். இதன் பிறகு பரவச நிலையை அடைந்துவிட்ட ஸ்ரீராமகிருஷ்ணரை மையமாக வைத்து எல்லோரும் சுற்றி நின்று சங்கீர்த்தனம் செய்யத் துவங்கினார்கள்.

இக் காலத்தில் ராணி ராசமணியும் மதுர் பாபுவும் தாங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கொண்ட அன்பால், பயங்கரமான ஒரு சோதனையில் அவரை ஈடுபடுத்தினர். நாளுக்குள் நாள் ஸ்ரீராமகிருஷ்ணர் உடல் நலம் குன்றி வருவதைக் கண்ட மதுரும் ராணியும் மிகுந்த கவலை கொண்டனர். அவருடைய உடல் நலம் குன்றுவதற்குக் காரணம் அவர் காக்கும் கடுமையான பிரம்மசரியமே என்றும், அதைக் குலைத்தால் அவர் உடல்நலம் பெறுவார் என்றும் நினைத்தனர். . எனவே அதற்கான ஏற்பாடு ஒன்றை இரகசியமாகச் செய்தனர். விலைமாதர்கள் இருவரை ஸ்ரீராமகிருஷ்ணரின் பிரம்மசரியத்தைக் குலைக்க ஒரு நாள் அவர் இருந்த அறைக்குள் அனுப்பினர். அவர்களைப் பார்த்ததும் ஸ்ரீராமகிருஷ்ணர் 'தாயே' என்று அழைத்தபடியே காளியின் திருவடிகளைச் சரணடைந்தார். இதைக் கண்ட அந்த இரண்டு விலை மாதர்களும் தங்கள் செயலுக்கு வெட்கப்பட்டுத் திரும்பினர்.

இந்த முதல் முயற்சியில் தோல்வி அடைந்ததும் மதுர் மற்றொரு நாள் கல்கத்தாவிற்கு வண்டியில் ஸ்ரீராமகிருஷ்ணரை அழைத்துச் சென்றார். அங்கே அழகான பல இளம் விலைமாதர்கள் கூடியிருந்த வீட்டில் அவரை விட்டு விட்டுச் சென்றுவிட்டார். ஸ்ரீராமகிருஷ்ணரோ தம்மைச் சுற்றிலும் நின்ற விலைமாதர்களைப் பார்த்ததும், 'தாயே! தாயே!' என்று அழைத்தபடி சமாதி நிலை அடைந்துவிட்டார். இந்தக் காட்சி சுற்றி நின்ற பெண்களின் மனத்தில் மிக ஆச்சரியகரமான விளைவை ஏற்படுத்தியது. ஒரு மகானைக் கெடுக்கத் துணிந்த தங்கள் முட்டாள்தனத்தையும், அதனால் தங்களுக்கு ஏற்படக்கூடிய ஆபத்தையும் நினைத்து வருந்தி அவர் காலில் விழுந்து மன்னிக்கும்படி வேண்டினார்கள்.

அடுத்த வீட்டில் இருந்த மதுர் அங்கே எழுந்த கூச்சலைக் கேட்டு ஸ்ரீராமகிருஷ்ணர் இருந்த அறைக்குள் நுழைந்தார். அங்கே கண்ட காட்சியால் வாயடைத்துப் போனார்; ஸ்ரீராமகிருஷ்ணரின் மாசு மறுவற்ற தூய்மையை நேருக்கு நேராகக் கண்டார். இதற்குள் அவரைக் கெடுக்குமாறு ஏவிய பெண்கள் அங்கு வந்து மதுரைப் பலவாறாகத் தூற்ற ஆரம்பித்தனர். மதுர் தாம் செய்யத் துணிந்த தவறான காரியத்துக்காகப் பெரிதும் வெட்கமும் வேதனையும் அடைந்தார். இதன் விளைவாக ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அவர் கொண்ட பக்தியும் மரியாதையும் ஆயிரம் மடங்காகப் பெருகின.

# 11. ஹலதாரி

இந்த நேரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் வாழ்க்கையில் அடுத்த எட்டு ஆண்டுகள் தொடர்ந்து தொடர்பு கொண் டிருக்கப் போகும் ஒருவர் தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்து சேர்ந்தார். அவர் 1858 முதல் 1866 வரை தட்சி ணேசுவரத்தில் வாழ்ந்தார். அவர் பெயர் ராம்தாரக். ஆனால் எல்லோரும் அவரை ஹலதாரி என்றே அழைத் தனர். அவர் ஸ்ரீராமகிருஷ்ணரின் கடைசி சிற்றப்பா வான கனிராமின் மகன். அவர் வேலை தேடி தட்சிணேசு வரம் வந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரின் உறவினர் அவர் என்று அறிந்ததும், மதுர் அவரை வேலையில் அமர்த்திக் கொண் டார். ஸ்ரீராமகிருஷ்ணர் அப்போது தெய்விக வெறியில் மூழ்கி, காளி கோயிலில் பூஜை செய்ய இயலாதவராய் இருந்த தால் அவர் சாதாரண நிலையை அடையும்வரை ஹலதாரி யைக் காளி கோயில் அர்ச்சகராக மதுர் பாபு அமர்த்தினார். பாகவதம், அத்யாத்ம ராமாயணம், கீதை மற்றும் வேதாந்த நூல்களில் ஹலதாரி மிகுந்த ஞானமுள்ளவர். அவர் வைஷ்ணவராக இருந்தபோதிலும் மதுரின் வேண்டுகோளால் காளிகோயில் பூசாரியானார். காளி கோயில் கீழ்ச்சாதியினரால் கட்டப்பட்டதால் சாதி சம்பிரதாயங்களில் மிகவும் ஊறிய ஹலதாரி காளி கோயிலில் சமைத்த உணவைச் சாப்பிட மறுத்து விட்டுத் தாமே தனியாகச் சமைத்துக் கொண்டார். இதைக் கண்ட மதுர், ''உமது தம்பி ஸ்ரீராமகிருஷ்ணரே இங்கே சமைக்கும் உணவைச் சாப்பிடுகிறார். நீங்கள் மட்டும் ஏன் தனியாகச் சமைக்க வேண்டும்?'' என்றார். இதற்கு ஹலதாரி திறமையாக, ''என் தம்பி மிகச் சிறந்த தெய்விக நிலையை அடைந்தவன். அவன் எந்த உணவை யும் எங்கு வேண்டுமானாலும் உண்ணலாம். அத்தகைய நிலையை அடையாத நான் அப்படிச் செய்வது பெரிய பாவம்'' என்றார். ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய்விக நிலையை ஹலதாரி இப்படிப் புகழ்ந்ததும் மதுர் அளவற்ற மகிழ்ச்சி யடைந்து அவர் விருப்பம்போல் சமைத்துச் சாப்பிட அனுமதித்தார்.

காளி கோயிலில் உயிர்ப்பலி இடுதல் உண்டு. ஹல தாரியால் இத்தகைய பலிகளைப் பார்க்கவே முடிவதில்லை.

வைஷ்ணவரான அவர் மிகுந்த அச்சமும் அருவருப்பும் கொண்டார். இதனால் காளியின்மீது வெறுப்புக் கொண்டவராகப் பூஜைகளை ஏனோதானோவென்று செய்யத் துவங்கினார். இவ்வாறு ஒரு மாதம் கழிந்தது. ஒரு நாள் மாலை ஹலதாரி தியானம் செய்து கொண்டிருந்தார். அப்போது காளி தோன்றி, காளி கோயிலைவிட்டு உடனே போய்விடும்படியும், வெறுப்போடு தனக்கு பூஜை செய்து வருவதால் அவருடைய அன்புக்குரிய மகன் இறந்து போவான் என்றும் கூறினாள். இது நடந்த சிறிது நாட்களுக்கெல்லாம் கிராமத்தில் ஹலதாரியின் மகன் இறந்து போன செய்தி வந்தது. இதனால் மிகுந்த பயம் அடைந்த ஹலதாரி ஸ்ரீராமகிருஷ்ணரிடம் தியானத்தில் தான் கண்ட காட்சியைக் கூறிக் காளி கோயில் பூஜையிலிருந்து இராதா காந்தர் கோயில் பூஜைக்குத் தம்மை மாற்றிக் கொண்டார்.

கடவுளை அடைய வைஷ்ணவ நெறி கூறும் பலவகையான வழிகளில் தலைவன்-தலைவி முறை என்னும் மதுர பாவமும் ஒன்று. இறைவனைத் தலைவனாகவும் தன்னைத் தலைவியாகவும் கொண்டு இவர்கள் கடவுளை அடைய முயலுவர். அதற்குப் பதில் தன்னைக் காதலனாகவும் மற்றொரு வைஷ்ணவப் பெண்ணைக் காதலியாகவும் கொள்ளும் வைஷ்ணவப் பிரிவும் அப்போது வங்காளத்தில் இருந்தது. ஹலதாரி தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்த பிறகு அந்தப் பிரிவில் சேர்ந்து வைணவப் பெண் ஒருத்தியிடம் இரகசியமான உறவு கொண்டிருந்தார். இது மற்றவர்களுக்குத் தெரிந்து கோயிலில் பரவியது. சாதனைகளில் மூழ்கிய ஹலதாரி யாரையாவது பார்த்துக் கோபத்தோடு சபித்தால் பலித்து விடும் என்பதைக் கண்டிருந்த கோயில் வேலையாட்களும் அதிகாரிகளும் அவரிடம் அதுபற்றி நேரில் கேட்க அஞ்சி தங்களுக்குள் மறைவாகப் பேசியபடி இருந்தனர். இந்தச் செய்தி கோயில் முழுவதும் பரவி ஸ்ரீராமகிருஷ்ணர் காதுகளுக்கு எட்டியது. எதையும் மனத்தில் வைத்துக் கொள்ளாமல் வெளிப்படையாக யாரிடமும் பேசிவிடும் ஸ்ரீராமகிருஷ்ணர் நேராக ஹலதாரியிடம் சென்று, அதனைக் கேட்டு விட்டார். இதைக் கேட்டுக் கடுங்கோபமடைந்த ஹலதாரி, 'நீ என் பெரியப்பா மகன். அதோடு என்னை விட வயதில் மிகவும் சிறியவன். அப்படி இருந்தும் என்னை இப்படிப் பேசத் துணிந்தாயே! உன்னுடைய இந்தத் திமிருக்காக உன்னுடைய வாயிலிருந்து இரத்தம் கொட்டட்டும்' என்று சாபம் கொடுத்தார். ஸ்ரீராமகிருஷ்ணர்,

தாம் குறை கூறுவதற்காக அதைச் சொல்லவில்லையென்றும், கோயில் முழுவதும் அதைப்பற்றிக் கேவலமாகப் பேசுவதைத் தடுக்கவே அப்படிக் கூறியதாகவும், சாபத்தைத் திரும்பப் பெறும்படியும் வேண்டினார். ஹலதாரி கொஞ்சமும் அசைந்து கொடுக்கவில்லை. கொடுத்த சாபம் கொடுத்தது தான் என்று கூறி விட்டார்.

இந்த நிகழ்ச்சி நடந்தபோது தட்சிணேசுவரக் கோயில் பிரபலமாகிவிட்டிருந்தது. எனவே அந்தப் பக்கம் வரும் சாதுக்கள் அனைவரும் உணவும் உறைவிடமும் கிடைப்பதால் அங்கு வந்து தங்கிச் சென்றனர். அப்படி வந்த சாதுக்களில் ஒருவரிடமிருந்து ஸ்ரீராமகிருஷ்ணர் ஹடயோகத்தைக் கற்றுக்கொண்டு அப்போது பயிற்சி செய்து வந்தார். இந்த நிகழ்ச்சி நடந்த சிறிது நாள் கழித்து ஒரு நாள் மாலையில் ஸ்ரீராமகிருஷ்ணர் வாயில் எரிச்சல் ஏற்படுவதை உணர்ந்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் வாயிலிருந்து இரத்தம் கொட்ட ஆரம்பித்தது. ஸ்ரீராமகிருஷ்ணரே இந்த நிகழ்ச்சியைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். ''வாயிலிருந்து இரத்தம் கொட்ட ஆரம்பித்தது. அது கறுப்பாக, அவரை இலைகளைக் கசக்கினால் வரும் சாறுபோல் இருந்தது. அந்த இரத்தம் மிகவும் இறுகி இருந்ததால் அப்படியே உறைந்து போய் என் பற்களிலிருந்து கயிறுபோல் தொங்கியது. நான் துணியை எடுத்து இரத்தம் வரும் இடத்தில் அழுத்தி இரத்தத்தை நிறுத்த முயன்றேன். இரத்தம் நிற்கவில்லை; வடிந்து கொண்டேயிருந்தது. இதைக் கண்டு நான் மிகவும் பயந்து போனேன். இதைக் கண்டு பலர் என்னைச் சுற்றிக் கூடிவிட்டார்கள். கோயிலில் மாலை பூஜை செய்து கொண்டிருந்த ஹலதாரியும் இதைக் கேட்டு ஓடிவந்தார். நான் அழுதுகொண்டே 'அண்ணா! நீ உன் சாபத்தால் எனக்கு என்ன செய்திருக்கிறாய் என்பதைப் பார்' என்றேன். என் நிலையைக் கண்டு அவரும் அழ ஆரம்பித்துவிட்டார். நல்ல வேளையாக அப்போது கோயில் தோட்டத்தில் தங்கியிருந்த சாது ஒருவர், இந்த நிகழ்ச்சியைக் கேள்விப்பட்டு விரைந்து வந்து அந்த இரத்தத்தின் நிறத்தைக் கூர்ந்து கவனித்தார். அது எங்கிருந்து ஒழுகுகிறது என்பதையும் கூர்ந்து பார்த்தார். பிறகு மகிழ்ச்சியோடு, 'நல்ல வேளை! கடவுள் உன்னைக் காப்பாற்றினார். கவலைப்படுவதற்கு ஒன்றும் இல்லை. இரத்தக் குழாய் உடைந்து இப்போது இரத்தம் கொட்டியது உனக்கு நல்லதாகவே ஆகிவிட்டது. நீ ஹடயோகப் பயிற்சி செய்து வருகிறாய் என்று

நினைக்கிறேன். அது சுழுமுனை நாடியைத் திறந்து விட்டிருக்கிறது. அதனால் உடம்பிலிருந்து நிறைய இரத்தம் மிகுந்த வேகத்தோடு மூளைக்குச் செல்ல ஆரம்பித்திருக்கிறது. இந்த இரத்தம் நேராக மூளையைப் போய்த் தாக்குவதற்குப் பதில் பல்லில் ஒரு துளையை உண்டாக்கிக் கீழே வடிய ஆரம்பித்து விட்டது. அப்படி மட்டும் நடக்கவில்லையென்றால் நீ மூச்சுப் பேச்சற்றுக் கீழே விழுந்து பல நாட்கள் அப்படியே இருந்து இறந்துபோயிருப்பாய். அன்னை காளி உன்மூலம் ஏதோ பெரிய காரியத்தைச் செய்யப்போகிறாள். அதனால்தான் நீ இப்படிக் காப்பாற்றப் பட்டிருக்கிறாய்' என்றார். அவருடைய சொற்கள் எனக்கு ஆறுதலைத் தந்தன. பயமெல்லாம் ஒழிந்தது.''

மிகவும் வைதிக பிராமணராகவும், தம் முன்னோர்களான சட்டர்ஜிகளின் புகழில் பெருமை கொண்டவராகவும் ஹலதாரி இருந்ததால், அதே குடும்பத்தைச் சேர்ந்த தம் உறவினரான ஸ்ரீராமகிருஷ்ணர் தங்கள் குடும்ப கௌரவத்திற்கும், சாதி, சாஸ்திர சம்பிரதாயங்களுக்கும் எதிராக நடந்து கொள்வதைப் பார்த்து மனம் பொறுக்காதவரானார். ஸ்ரீராமகிருஷ்ணர் தம் வாழ்வில் மிகக் கடுமையான சாதனைகள் செய்தபோது உடன் இருந்த போதிலும், வெறும் ஏட்டுப் படிப்பில் மட்டும் ஊறிய அவர், ஸ்ரீராமகிருஷ்ணர் மிக மிக உயர்ந்த தெய்விக நிலையை அடைந்ததால் செய்த காரியங்களையெல்லாம் மூளை கலங்கிப் போனதால் அவர் செய்கிறார் என்று மற்றவர்கள் போலவே தவறாக நினைத்தார். அதனால் ஸ்ரீராமகிருஷ்ணருக்குச் சேவை செய்து வந்த இருதயனைப் பார்த்து, ''இருதய்! அவன் பூணூலைக் கழற்றிப் போட்டு விட்டுச் சுற்றுவதும், சில நேரங்களில் ஆடையே இல்லாமல் எல்லோர் முன்பும் நிர்வாணமாக நிற்பதும் அருவருப்பாகவும் கேவலமாகவும் இருக்கிறது. பிராமணனாகப் பிறப்பது மிகவும் புண்ணியம், அதனை இவன் எப்படிக் கேவலப்படுத்துகிறான் பார்! சாதி சம்பிரதாயத்தை விட்டு விடும் அளவிற்கு அவ்வளவு உயர்ந்த தெய்விக நிலையை அவன் அடைந்து விட்டதாக நான் நினைக்கவில்லை. அவன் யாருடைய பேச்சையும் கேட்க மாட்டேன் என்கிறான். நீ சொன்னால் சிறிது கேட்கிறான். அவனைப் பிராமண சம்பிரதாயத்திற்கு ஏற்ப நடந்துகொள்ளச் சொல். கண்டித்தாவது அவனை அப்படி நடந்துகொள்ள வை,'' என்று அடிக்கடி கூறுவார்.

ஆனால் சில நேரங்களில் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றிய அவருடைய இந்த எண்ணங்கள் மாறிவிடும். காளிகோயிலில்

ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்தாரானால் அவருடைய அளவற்ற பக்தியையும், தெய்விகப் பரவசத்தையும், உள்ளத்தை உருக வைக்கும் பிரார்த்தனையையும் கேட்டு அப்படியே திகைத்து நின்று விடுவார். இத்தகைய உணர்வுகள் எதையும் அனுபவம் மூலம் பெறாமல் வெறும் புத்தகத்தை மட்டும் படிக்கும் ஹலதாரி ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றி முன்பு கொண்ட தவறான எண்ணங்களுக்காக வருத்தப்படுவார். உடனே இருதயனிடம் ஓடிப் போய், ''இருதய்! இராமகிருஷ்ண னிடம் நீ ஏதாவது தெய்விகத்தை நிச்சயம் கண்டிருக்க வேண்டும். இல்லையென்றால் இவ்வளவு காலம் இவ்வளவு பக்தி யோடு உன்னால் அவனுக்குச் சேவை செய்ய முடியாது'' என்பார். இதைக் கேட்டு இருதயன், ''உண்மைதான் மாமா, இல்லையென்றால் இவ்வளவு சின்னஞ் சிறு வேலைகளையும் வேறு யாருக்காவது, அவர் எப்படிப்பட்ட ஆளாக இருந்தாலும் நான் செய்வேனா?'' என்பான்.

இவ்வாறு ஹலதாரி தன் பெரியப்பா மகனைப் பற்றி அடிக்கடி உண்மைக்கும் சந்தேகத்துக்கும் இடையே நெடுநேரம் ஊசலாடுவார். ஸ்ரீராமகிருஷ்ணர் இதைப் பற்றிச் சொல்லும்போது, ''பல நேரங்களில் ஹலதாரி என் பக்தியையும் கடவுளைக் காண்பதில் உள்ள வெறியையும் கண்டு, 'ராமகிருஷ்ணா! நீ உண்மையில் யார் என்பதை நான் கண்டு பிடித்து விட்டேன்' என்பார். அதைக் கேட்டு நான், 'எச்சரிக்கையாக இருங்கள். மறுபடியும் சந்தேகம் வந்துவிடப் போகிறது' என்பேன். அவர் அதற்கு, 'என்னை நீ ஏமாற்ற முடியாது. சத்தியமாகக் கடவுள்தான் உன் வடிவத்தில் இருக்கிறார்!' என்பார். நானும் சிரித்துக் கொண்டே, 'அப்படியா? சரி. அப்படியே இருக்கட்டும். இரண்டு பேரும் ஒன்றாக இருந்து அதைத் தெரிந்து கொள் வோம்' என்பேன். ஆனால் அவர் ஓய்வாக அமர்ந்துகொண்டு மூக்கில் பொடியை ஏற்றியபடி பாகவதம், அத்யாத்ம இராமாயணம் முதலிய நூல்களைப் படிக்கும்போது மறு படியும் மாறி விடுவார். தான் மிகவும் படித்தவன்; ஞானி என்ற நினைப்பு வந்து விடும். மறுபடியும் தற்பெருமை தலைக்கேறி விடும். முன்பு இருந்த பணிவெல்லாம் பறந்து விடும். தம்முன் இருப்பவர்களை யெல்லாம் முட்டாளாகவும், தம்மைப் பெரிய குருவாகவும் நினைத்துக்கொண்டு எல்லோ ருக்கும் உபதேசம் செய்ய ஆரம்பித்து விடுவார்.

''சில நேரங்களில் நான் அவரிடம் சென்று, 'நீ சாஸ் திரங்களில் என்னென்ன படிக்கிறாயோ அதையெல்லாம் நான்

நேராகப் பார்த்து அனுபவித்து இருக்கிறேன். எனவே சாஸ்திரங்களின் உட்பொருளை நான் நன்ருகத் தெரிந்து கொண்டிருக்கிறேன்' என்று சொல்வேன். உடனே அவர் கோபம் கொண்டு, 'என் முன்னே நிற்காதே. ஓடிப் போய் விடு. நீ ஓர் அடிமுட்டாள். நீ போய் சாஸ்திரங்களின் கடுமையான உள்பொருளையெல்லாம் புரிந்து கொண்டதாகச் சொல்லுகிருயா?' என்பார். நான், 'என்னிடம் தெய்வம் இருப்பதாக அடிக்கடி நீ சொல்கிருயே, அந்தத் தெய்வம்தான் எனக்கு இதையெல்லாம் கற்றுக் கொடுத்தது' என்பேன். இதைச் சொன்னதும் வெறி பிடித்தவர்போல் கோபம் கொண்டு, 'எவ்வளவு முட்டாள்தனமாகப் பேசுகிருய். சாஸ்திரங்களில் இந்தக் கலியுகத்தில் கடவுள் கல்கியாக அவதாரம் எடுத்துக் குதிரைமேல் வருவார் என்று கூறப்பட்டிருக்கிறது. நீ என்ன அப்படியா இப்போது வந்திருக்கிருய்? நீ முழுக்க முழுக்கப் பைத்தியமாகி விட்டாய். அதனுல் தான் இவ்வாறெல்லாம் பேசுகிருய்' என்பார். 'நான் தெய்விக அவதாரம் என்றும், அதில் சிறிதும் சந்தேகமில்லை என்றும் முன்பு சொன்னுயே. எப்படிச் சொன்னுய்?' என்று கேட்டால் நான் சொல்லும் எதையும் கேட்கும் நிலையில் அவர் இருக்கமாட்டார். எங்களுக்கிடையே பல முறை இது போன்ற வேடிக்கை நடக்கும். ஒரு நாள் நான் நிர்வாணமாகப் பஞ்ச வடியில் உள்ள ஆலமரத்தின் கிளையொன்றில் உட்கார்ந்திருந்தேன். இதைப் பார்த்த ஹலதாரி என்னைப் பிரம்மதைத்யன்* ஒன்று பிடித்துக்கொண்டு விட்டதாக உறுதியாக நம்பி விட்டார்.''

ஹலதாரி வைஷ்ணவர் என்பதை முன்பே பார்த்தோம். காளியின் கோபத்தால் தன் மகன் இறந்ததிலிருந்து காளியை இழிவான வெறிபிடித்த பிசாசுக் கடவுள் என்றே நினைக்க ஆரம்பித்து விட்டார். ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம், ''பிசாசான தமோ குணக், காளியை வழிபட்டு நீ என்ன ஆன்மிக உயர்வை அடைய முடியும்? ஏன் அளவுக்கு மீறி இந்தக் காளி பூஜையில் இப்படி மனம் உருகுகிருய்?'' என்ருர். ஸ்ரீராமகிருஷ்ணர் ஒன்றும் பேசவில்லை. ஆனுல் தம்முடைய வழிபடு தெய்வமான காளியை அவர் இப்படிப் பேசியது மிகுந்த மனவேதனையை உண்டாக்கியது. உடனே கோயிலுக்குச் சென்று கண்களில் நீர்மல்கக் காளியிடம், 'அம்மா! ஹலதாரி பெரிய அறிஞர். சாஸ்திரங்களை நன்ருகப் படித்தவர். அவர் நீ தமோ குணம் கொண்ட

---

*இறந்த பிராமணனின் ஆவி.

பிசாசுக் கடவுள் என்று கூறுகிறார். அது உண்மையா?'' என்று கேட்டு அழுதார். காளி, ''அப்படியல்ல!'' என்று உணர்த்தியதும் அளவற்ற மகிழ்ச்சியோடும் கோபத்தோடும் சின்னஞ்சிறு குழந்தையைப்போல் இராதாகாந்தர் கோயிலில் பூஜை செய்துகொண்டிருந்த ஹலதாரியிடம் ஓடி அவருடைய தோள்களில் ஏறிக்கொண்டு, ''என் தாயைப் பிசாசுக் கடவுள் என்று சொல்வதற்கு உனக்கு எவ்வளவு தைரியம்? அவள் பிசாசுக் கடவுளா? இல்லவே இல்லை. அவள்தான் எல்லாம். மூன்று குணங்களும் அவள்தான். அதே நேரத்தில் சத்துவ குணம் மட்டும் நிறைந்தவளும் அவள்தான்'' என்றார். ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய்விகக் கரங்கள் பட்டதும் ஹலதாரியின் உள் மனம் விழித்துக் கொண்டது; அறியாமை மறைந்தது. அந்த விநாடியே தாம் காளியைப் பற்றிக் கூறிய முட்டாள்தனமான வார்த்தைகளுக்காக மனம் வருந்திக் கூனிக் குறுகி நின்றார். மிகுந்த பணிவோடு ஸ்ரீராமகிருஷ்ணர்முன் தலை வணங்கியபடியே பூக்களைச் சந்தனத்தில் தோய்த்து, தெய்வத்தின் காலடியில் இடுவது போல் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் காலடிகளில் இட்டார்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த இருதயன் பிறகு ஹலதாரியிடம், ''நீ இதுவரை ஸ்ரீராமகிருஷ்ணரைப் பைத்தியம் என்றும் பிரம்மதைத்யன் பிடித்திருப்பவன் என்றும் கூறிவிட்டு இப்போது கடவுளாக நினைத்து அவர் காலடிகளில் மலரை வைத்து வணங்கினாயே, அது எப்படி?'' என்று கேட்டான். ஹலதாரி, ''அதுவா? எதனால் அப்படிச் செய்தேன் என்று எனக்கும் புரியவில்லை. அவன் காளி கோயிலிலிருந்து என்னிடம் வந்ததும் நான் எல்லாவற்றையும் மறந்து போனேன். அவனில் மிகத் தெளிவாகக் கடவுளைக் கண்டேன். நான் எப்போதெல்லாம் காளி கோயிலில் அவனைப் பார்க்கிறேனோ அப்போதெல்லாம் நான் இத்தகைய நிலையை அடைகிறேன். உண்மையிலேயே இது என்னால் புரிந்துகொள்ள முடியாத விசித்திரமாக இருக்கிறது'' என்றார். இவ்வாறு சில நேரங்களில் மட்டும் ஹலதாரி தம் பெரியப்பாவின் மகனது தெய்விக நிலையை அறிந்து கொள்வார். ஆனால் சாஸ்திரத்தைப் படிக்க ஆரம்பித்ததும் எல்லாவற்றையும் மறந்து விடுவார். ஹலதாரியின் இந்த நடத்தை, 'சாஸ்திரங்கள் மனத்தில் முடிச்சைப் போட்டு விடுகின்றன; கடவுளைக் காண்பதற்கான துடிப்பை அது தடுத்து விடுகிறது' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவதற்குச் சரியான உதாரணமாக இருந்தது.

காளி கோயிலில் பிச்சைக்காரர்களுக்கெல்லாம் சாப்பாடு போடுவதுபற்றி முன்பே கண்டோம். உண்மையான வேதாந்தியான ஸ்ரீராமகிருஷ்ணர் ஒருநாள் ஏழைப் பிச்சைக்காரர்களும் கடவுளே என்று நினைத்து அவர்கள் இலையிலிருந்த எச்சில் சோற்றை எடுத்துச் சாப்பிட்டார். இதைக் கண்ட ஹலதாரி வேதனையால் துடிதுடித்து ஸ்ரீராமகிருஷ்ணரிடம் ஓடிப் போய், ''நீ என்ன காரியம் செய்கிறாய்? இதனால் நீ அந்தணர் குலத்திலிருந்து விலக்கப்படுவாய். இனிமேல் உன் பெண்களை யார் திருமணம் செய்து கொள்வார்கள்?'' என்றார். ஹலதாரி இப்படிப் பேசியதும் ஸ்ரீராமகிருஷ்ணர் அளவற்ற ஆத்திரம் கொண்டவரானார். ''திருட்டுப் பயலே! நீ எந்த நேரமும், 'இந்த உலகம் மாயை, கடவுள் ஒருவரே நிலையானவர், எல்லா உயிர்களையும் பிரம்மமாகப் பார்க்க வேண்டும்' என்று கூறும் சாஸ்திரங்களை எப்போதும் ஒப்பித்துக் கொண்டிருக்கிறாய். உன்னைப்போல் நான் இந்த உலகம் பொய்யென்று சொல்லிவிட்டு, அதே நேரத்தில் பிள்ளைகளைப் பெற்றுக் கொள்வேன் என்று நினைக்கிறாயா? உன்னுடைய சாஸ்திர புத்தியின்மீது நான் காறித் துப்புகிறேன்'' என்றார்.

ஒரு நாள், ''மனம் வாக்கிற்கு எட்டாதவர் என்று சாஸ்திரங்கள் கூறும் கடவுளை ஸ்ரீராமகிருஷ்ணரால் எப்படிக் காண முடியும்?'' என்று ஹலதாரி எல்லோரிடமும் கூறினார். இதைக் கேட்ட ஸ்ரீராமகிருஷ்ணருக்குத் தம் காட்சிகளைப் பற்றியே சந்தேகம் வந்துவிட்டது. அப்போது அவருக்கு ஏற்பட்ட மனவேதனையைப் பிற்காலத்தில் தம் சீடர் பிரேமானந்தரிடம் கூறியுள்ளார். ''இதைக் கேட்டதும் 'நான் இதுவரை கண்ட காளியின் பல்வேறு தெய்விகத் தோற்றங்களும், அவள் வாய்மூலமாகக் கேட்ட வார்த்தைகளும் பொய்யா? அவையெல்லாம் என் மூளைக் கோளாறால் ஏற்பட்ட கற்பனைகளா? நான் அன்னை காளியால் முட்டாளாக்கப்பட்டு விட்டேனா?' என்று நினைத்தேன். இந்த நினைப்பே எனக்குச் சொல்ல முடியாத வேதனையை உண்டாக்கியது. என் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. அழுது துடிதுடித்தேன். சிறிது நேரத்தில் நான் நின்றிருந்த இடத்தில் எனக்கு முன்னால் பனிமூட்டம்போல் ஒளி தோன்றியது. அதன் நடுவே அமைதியே வடிவான தாடியுடன் கூடிய மிக அழகிய உருவம் ஒன்று தோன்றி, தெளிவான குரலில், 'கவலைப்படாதே. பாவமுக நிலையில்-

அதாவது கடவுள் நிலை, உலக நிலை என்னும் இரண்டிற்கும் நடுவே எப்போதும் நிலையாக இரு' என்று கூறியது. இப்படி மூன்று முறை கூறியதும் அந்த உருவம் மெதுவாக அந்தப் பனிமூட்ட ஒளியில் மறைந்துவிட்டது. பிறகு அந்தப் பனிமூட்டமும் மறைந்துவிட்டது. இந்தக் காட்சி, 'நான் கண்ட அன்னையின் தெய்விக வடிவமும், கேட்ட அவருடைய குரலும் உண்மை' என்ற எண்ணத்தை என் மனத்தில் ஏற்படுத்தியது.''

மற்றொரு நாள் ஹலதாரியின் இத்தகைய பேச்சால் குழந்தை போன்ற ஸ்ரீராமகிருஷ்ணர் அமர்ந்து தம் சந்தேகத்தைத் தீர்க்கும்படி அழுது துடித்து அன்னையிடம் வேண்டினார். அப்போது அன்னை காளி ராதியின் தாய் (ஒரு பக்தை) வடிவில் பூஜைக்காகக் கங்கை நீர் வைத்திருந்த பாத்திரத்தருகே தோன்றி, முன்பு பனிமூட்டத்தில் தெரிந்த உருவம் கூறிய அதே வார்த்தைகளைத் திரும்பவும் கூறியது.*

இதே போன்ற கட்டளை ஸ்ரீராமகிருஷ்ணர் நிர்விகல்ப சமாதியிலிருந்து இறங்கி உலக நினைவை அடைந்தபோது மறுபடியும் மூன்றும் முறையாகக் கூறப்பட்டது. இது பின்னால் நடந்த நிகழ்ச்சியாகும்.

---

*இங்குக் கூறப்பட்ட நிகழ்ச்சிகள் யாவும் ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்வில் எட்டு ஆண்டுகளில் நடந்த நிகழ்ச்சிகளின் சுருக்கமான தொகுப்பாகும்.

## 12. கமார்புகூர் திரும்புதலும் திருமணமும்

துன்பங்கள் பெரும்பாலும் தனியாக வருவதில்லை சந்திரா தேவி ஏற்கனவே அளவற்ற துன்பங்களை அனுபவித்திருந்தார். தன் பாசத்திற்குரிய மூத்த மகன் இராம்குமாரின் மரணம் தந்த அதிர்ச்சியிலிருந்து அவர் இன்னும் மீளவே இல்லை. அதற்குள் தம் அன்புக்குரிய கடைசி மகன் தட்சிணேசுவரக் கோயிலில் பூஜையை விட்டுவிட்டுப் பைத்தியம் போல் தனியாக எங்கோ போய்விடுவதும், தம் விருப்பப்படி கோயிலில் ஆடுவதும் ஓடுவதும் அழுவதும் பேசுவதுமாக இருக்கும் செய்தி அவர் காதில் விழுந்தது. இந்தச் செய்தி சந்திரா தேவிக்கும், இராமேஸ்வருக்கும் சொல்ல முடியாத வேதனையைத் தந்தது. கமார்புகூரில் சிறுவனாக இருந்ததிலிருந்தே அடிக்கடி ஏற்பட்டுக் கொண்டிருந்த மயக்கம்தான் இப்போது முற்றி நரம்புகளைப் பாதித்துப் பைத்தியம்போல் ஆக்கிவிட்டதோ என்று அவர் நினைத்தார். எனவே கமார்புகூரில் ஆரோக்கியமான கிராமத்துச் சூழ்நிலையில் தங்கள் கவனிப்பில் மருத்துவம் செய்ய நினைத்து உடனடியாக அவரைக் கமார்புகூர் வந்து சேரும்படிக் கடிதங்களுக்குமேல் கடிதமாக எழுதினார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் அந்தக் கடிதங்களைக் கண்டு கமார்புகூர் திரும்பினார். அன்பு மயமாக, ஆட்டமும் பாட்டுமாக அங்கிருந்து கல்கத்தா சென்ற தம் மகன் இப்போது அமைதியே வடிவாக, தமக்கும் ஊருக்கும் தொடர்பே இல்லாதவன்போல் எப்போதும் சோகமும் வேதனையும் தவழும் முகத்துடன் இருப்பதைக் கண்டு சந்திரா தேவி மிகுந்த வேதனையடைந்தார். அடிக்கடி அழுதபடி, 'அம்மா', 'அம்மா' என்று கூவியவாறே ஸ்ரீராமகிருஷ்ணர் அரற்றிக் கொண்டிருந்தார். இதைக் கண்ட சந்திரா தேவி முழுவதுமாக மனமுடைந்து போனார். மகனின் நோய்க்கான காரணம் தெரியாத அவர் அவனுக்குப் பல வகையான ஆறுதல் கூறி அவன் அழுகையை நிறுத்த முயன்றார். பலனேதும் கிடைக்கவில்லை. பல வகையான மருந்துகளோடு மந்திரம், தந்திரம் என்று பல வழிகளில் அவருடைய நோயை நீக்கப் பாடுபட்டார். இந்த முயற்சிகளால் பலனேதும் ஏற்படவில்லை. இதற்கு மாறாக தட்சி

ணேசுவரத்தில் முன்பு கடவுள் காட்சிக்காக அழுது துடித்து ஏங்கியபோது ஏற்பட்ட கொடூரமான ஏக்கங் களும் அழுகையும் கதறலும் மறுபடியும் திரும்பிவிட்டன. தட்சிணேசுவரத்தில் இருந்தபோது ஏற்பட்ட பயங்கரமான உடம்பு எரிச்சல் மீண்டும் தோன்றிவிட்டது. கமார்புகூர் மக்கள் இதற்குமுன் யாரும் கடவுளைக் காண்பதற்காக இவ்வளவு ஆவேசத்தையும் எதற்குமே அஞ்சாத தன்மை யையும், இவ்வளவு உலக நினைவே இல்லாத, எல்லாவிதத் துன்பங்களையும் தாங்கிக்கொள்ளும் மனிதரையும் பார்த்ததே யில்லை.

என்ன செய்தும் பலனில்லாமல் போகவே சந்திரா தேவி பெரிய மந்திரவாதி ஒருவர் மூலம் ஸ்ரீராமகிருஷ் ணரைப் பிடித்த பேயை ஓட்ட ஏற்பாடு செய்தார். இது பற்றி ஸ்ரீராமகிருஷ்ணரே கூறினார்: ''ஒரு நாள் பேய் ஓட்டுபவன் ஒருவன் வந்து மந்திரித்த தண்ணீரை என் னிடம் கொடுத்து, 'இதை நீ நுகர்ந்தால் உன்னைப் பிடித்த பேய் உடனே உன்னைவிட்டு ஓடிவிடும்' என்று கூறினான். நான் அவன் சொன்னபடி நுகர்ந்தேன். ஆனால் எந்தப் பேயும் என்னிடமிருந்து ஓடவில்லை. அதன் பிறகு மிகச் சிறந்த மந்திரவாதியை அழைத்துவந்து ஒருவன் மேல் ஆவேசம் வரச் செய்து என் நோயைப்பற்றிக் கூறும்படிக் கேட்டார்கள். ஆவேசம் வந்தவன் என்னைப் பேயும் பிடிக்கவில்லை; எவ்வித நோயும் எனக்கு இல்லை என்று கூறி விட்டு, என்னைப் பார்த்து, 'நீயோ சாதுவாக விரும்பு கிறாய். பிறகு நீ ஏன் அதிகமாகப் பாக்கைத் தின்கிறாய்?' என்று கேட்டான். உண்மையிலேயே பாக்குச் சாப்பிடுவது என்பது எனக்கு மிகவும் பிடித்தமான செயல். ஆவேசம் வந்தவன் என்னை இப்படிக் கேட்ட பின்பு நான் பாக்குச் சாப்பிடுவதை விட்டுவிட்டேன்.''

கமார்புகூரில் இரண்டு சுடுகாடுகள் இருந்தன. இந்த இரண்டு இடங்களிலும் பேய்கள் உலவுவதாக யாரும் பகலில்கூட அந்தப் பக்கம் தனியாகப் போக மாட்டார்கள். எனவே தன்னந்தனியாக, தியானம் முதலிய சாதனைகள் செய் பவர்களுக்கு அது மிகவும் பொருத்தமான இடமாக இருந் தது. மனித உடல்கள் எரிக்கப்பட்டு எலும்புகளும் சாம்பல்களும் நிறைந்து கிடக்கும் அந்த இடம் சாதகர்களுக்கு உலக இன்பங்களின் நிலையாமையை உணர்த்துவதோடு, மனத்தையும் தானாகக் கடவுளி டம் திருப்பிவிடும். இதனால்தான் சுடுகாடுகள் தியான

மும் சாதனைகளும் செய்வதற்குச் சிறந்த இடங்களாக நம் நாட்டில் மிகவும் பழங் காலத்திலிருந்தே கொள்ளப்பட்டு வருகின்றன. அதுவும் தாந்திரிக சாதகர்களுக்கு இது மிகவும் புனிதமான இடமாகும். இந்தச் சுடுகாடு அண்ட சராசரங்களையும் அழிக்கும் அன்னை காளிக்கு மிகவும் பிடித்தமான உறைவிடம். எனவே அந்த இடத்தில் அமர்ந்து, தியானம் முதலிய சாதனைகளைச் செய்தால் காளியை விரைவில் காணலாம் என்று பக்தர்கள் நம்பினார்கள்.

மிகக் கடுமையான தவம் செய்ய விரும்பிய ஸ்ரீராமகிருஷ்ணர் இந்த இரண்டு சுடுகாடுகளில் ஒன்றைத் தேர்ந்தெடுத்தார். அங்கே இரவும் பகலும் தியானத்திலும் காளி வழிபாட்டிலும் செலவழித்தார். சிறிது சிறிதாக இதை அவருடைய தாயும் அண்ணனும் அக்கம் பக்கத்தில் உள்ளவர்களும் அறிந்தார்கள். இதனால் கவலைப்பட்டு சந்திரா தேவி அடிக்கடி மகன் இராமேஸ்வரை அனுப்பி ஸ்ரீராமகிருஷ்ணரைச் சுடுகாட்டிலிருந்து அழைத்து வரும்படி அனுப்புவார். சுடுகாடு அருகே செல்லும் இராமேஸ்வர் உள்ளே செல்ல அஞ்சி வெளியில் இருந்தவாறே குரல் கொடுத்து ஸ்ரீராமகிருஷ்ணரை அழைத்து வருவார்.

இவ்வாறு சுடுகாட்டுத் தவத்தின் மூலம் அவர் காளியின் காட்சியைக் காண ஆரம்பித்த பிறகு ஒரு மாதம் கழித்து, அவருடைய பரபரப்பும் அடிக்கடி அழுவதுமான செயல்களும் நின்றுவிட்டன. ஆனால் அவர் சுடுகாட்டிற்குச் செல்வதும் உடை இன்றி அமர்ந்து தியானிப்பதும் நிற்கவில்லை.

இப்போது ஸ்ரீராமகிருஷ்ணர் இருபத்து மூன்று வயது வாலிபர். என்றாலும் முன்பு போலவே உலகைப்பற்றியும் வாழ்வைப்பற்றியும் சிறிதும் கவலையில்லாதவராகவே இருந்தார். அவரது தாயும் அண்ணனும் அவருக்கு வாழ்க்கையில் பற்றுதலை ஏற்படுத்தத் தங்களுக்குள் தீர்மானித்தனர். அதற்குச் சரியான வழி அவருக்குத் திருமணம் செய்து வைப்பதே என்று நினைத்தனர். திருமண வயதினரான ஸ்ரீராமகிருஷ்ணர் இதை மறுக்க முடியாது என நினைத்தனர். திருமணமாகி விட்டால் மனைவியின் நினைவிலும், குடும்ப வாழ்விலும் ஈடுபட்டுக் கடவுளை நாடி எப்போதும் மேலே செல்லும் அவர் மனம் கீழே இழுக்கப்பட்டு, சாதாரண நிலைக்கு வந்து

விடுவார் என்று நினைத்து, வங்காளத்தில் அப் போதைய வழக்கம்போல மிகவும் இளவயதிலேயே ஸ்ரீராமகிருஷ்ணருக்குத் திருமணம் செய்யாத தங்கள் தவற்றுக்கு வருந்தியபடி பெண் தேடத் துவங்கினர்.

பெண் தேடிச் சுற்றிலுமுள்ள கிராமங்களுக்கு உறவினர் களை அனுப்பினர். எங்கும் பெண் கிடைக்கவில்லை. அந்தணர் களிடையே இந்தக் காலத்தில் பெண் வீட்டார் மாப்பிள்ளைக்கு வரதட்சணை தர வேண்டியிருப்பதுபோல மாப்பிள்ளை வீட் டார் பெண்ணுக்கு வரதட்சணைத் தர வேண்டிய பழக்கம் அந்தக் காலத்து வங்காள அந்தணர்களிடையே இருந்தது. ஏழையான சந்திரா தேவியால் மிகவும் அதிகமான பணம் கொடுக்க முடியாததால் எளிதில் பெண்கள் யாரும் கிடைக்க வில்லை. என்றாலும் சந்திரா தேவி தீவிரமாகப் பல இடங் களிலும் பெண்ணைத் தேடியபடியே இருந்தார். எவ்வளவோ முயற்சி செய்தும் பயனே இல்லை. இதனால் சந்திரா தேவி நம்பிக்கை இழக்கலானார். மேலும், இந்தப் பெண் தேடும் படலமும், திருமண விஷயமும் ஸ்ரீராமகிருஷ்ணருக்குத் தெரிந் தால் எங்கே இடையூறு செய்வாரோ என்று அவருக்குத் தெரியாமல் மிகவும் இரகசியமாகவே வைத்திருந்தனர். மிகுந்த அறிவுக் கூர்மையுள்ள ஸ்ரீராமகிருஷ்ணர் மிக எளிதாக அந்த முயற்சியைக் கண்டு கொண்டார். சிறுவர்கள் தங்கள் வீட்டில் நடக்கும் பெரிய பண்டிகைகளை நினைத்து மிகுந்த மகிழ்ச்சியும் ஆவலும் கொள்வதுபோல் அந்தத் திருமண நிகழ்ச்சியில் மிகுந்த ஆவலும் கொண்டார். அன்னை காளியின் செயல் இதுதான் என்று அவர் முன்பே அறிந் ததுதான் அதன் காரணமாக இருக்குமோ? அல்லது திருமணம் ஒரு வேடிக்கை மிகுந்த சுவையான நிகழ்ச்சியாக அவருக்குத் தோன்றியதா? சாதாரண மனிதர் கள் பின் கூறியதை ஏற்பார்கள், ஆனால் ஆழ்ந்து சிந் திப்பவர்கள் முன் கூறியதே காரணம் என்பதைக் காண் பார்கள்.

ஒரு நாள் மிகவும் மனச் சோர்வோடு அமர்ந்திருந்த தாயையும் அண்ணனையும் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் மிகவும் துருவி அவர்களைக் கேட்டுத் தமக்கு நல்ல பெண் கிடைக் காததே அவர்கள் கவலைகளுக்கும் வருத்தத்திற்கும் காரணம் என்பதை அறிந்தார். அதைக் கேட்டதும் ஆழ்ந்த பரவசத்தில் மூழ்கியவராக, ''இங்கும் அங்கும் அலைவதில் பயனில்லை. ஜயராம்பாடிக்குச் செல்லுங்கள். எனக்கென்று தேர்ந்தெடுக்கப்பட்ட மணமகள் அங்கே

இராமச்சந்திர முகர்ஜியின் வீட்டில் இருக்கிறாள்'' என்றார். இதை அவருடைய தாயும் அண்ணனும் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. என்றாலும் ஓர் ஆளை ஜயராம் பாடிக்கு அனுப்பினார்கள். திரும்பி வந்த அவர் இராமச்சந்திர முகர்ஜியின் வீட்டில் அவ்வாறே பெண் ஒருத்தி இருப்பதாகவும், ஆனால் ஐந்து வயதேயுடைய மிகச் சிறு பெண்ணாக இருப்பதாகவும் கூறினார். வேறு எந்தப் பெண்ணும் கிடைக்காமையால் கடைசியாகச் சந்திரா தேவி அந்தச் சிறுமி சாரதாமணிதேவியை ஸ்ரீராமகிருஷ்ணருக்கு மணம் முடிக்க முடிவு செய்தார். மணப் பெண் பார்க்கும் வேலையெல்லாம் முடிந்து குறிக்கப்பட்ட நல்ல நாளில் திருமணமும் நிறைவுற்றது. இராமேஸ்வர் சாரதாமணிக்கு முன்னூறு ரூபாய் மணமகள் காணிக்கையாக அளித்தார்.

மணம் முடித்ததும் சந்திரா தேவி நிம்மதியடைந்தார். திருமணம் ஸ்ரீராமகிருஷ்ணரின் மன நிலைக்கு நன்மை செய்யும் என்று அவர் நம்பினார். தம்முடைய பைத்தியக்கார மகன் திருமண நிகழ்ச்சிகள் அனைத்திலும் சமர்த்தாக நடந்து கொண்டது அவருக்கு மேலும் ஆறுதலாக இருந்தது. ஆனால் இந்த மகிழ்ச்சி திருமணத்தை அடுத்து நடந்த ஒரு நிகழ்ச்சியால் மறைந்து விட்டது.

சந்திரா தேவியின் குடும்பம் ஏழ்மை நிலையில் இருந்ததால் திருமணத்தின்போது லாஹா குடும்பத்தில் இருந்து கடனாக நகைகளை வாங்கிச் சாரதாமணி தேவிக்கு அணிவித்திருந்தார். திருமணம் முடிந்து மணமக்கள் மணமகனின் ஊரான கமார்புகூருக்கு வந்து சில நாட்கள் கழிந்து விட்டன. கடன் வாங்கிய நகைகளைத் திருப்பித் தர வேண்டும். புதிய ஆடை, நகைகள், பொம்மைகள் என்று மிகுந்த ஆவல் கொள்ளும் வயதுடைய சாரதை, தான் அணிந்துள்ள நகைகளால் மிகுந்த மகிழ்ச்சியும் ஆசையும் கொண்டிருந்ததைக் கண்ட சந்திரா தேவி நகைகளைக் கழற்ற மனமில்லாமல் கவலைப்பட்டார். தாயின் கவலையை அறிந்த ஸ்ரீராமகிருஷ்ணர் சாரதை உறங்கும்போது அவள் அறியாமல் எல்லா நகைகளையும் கழற்றி லாஹா குடும்பத்திற்கு அனுப்பி விட்டார். கண் விழித்த சாரதை தன் காதிலும் கழுத்திலும் இருந்த நகைகளைக் காணாமல் அழத் துவங்கினாள். கண் கலங்கிய சந்திரா தேவி குழந்தையை எடுத்துக் கையில் வைத்துக்கொண்டு, ''அந்த நகைகளைவிடக் கதாதரன் நல்ல நகைகள் எல்லாம் பின்னர் உனக்குப் போடுவான்'' என்று சமாதானப்படுத்தினார். ஆனால் அன்று மணமகளைப் பார்க்க

வந்த அவருடைய மாமன் இதை அறிந்ததும் சந்திரா தேவியிடம் பெரிதாகச் சண்டை போட்டுவிட்டுக் கோபத்தோடு சாரதாவைத் தோளில் தூக்கிக் கொண்டு ஜயராம்பாடிக்குப் போய்விட்டார். இந்த நிகழ்ச்சி சந்திரா தேவியைப் பெரிதும் வருத்தியது. ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர் தமாஷாகச் சிரிப்போடு, ''தூக்கிக் கொண்டு போகட்டும்; அல்லது என்னவாவது செய்யட்டுமே. நடந்த கல்யாணத்தை இல்லாமல் செய்துவிட முடியுமா, என்ன?'' என்றார்.

திருமணத்திற்குப் பிறகு ஒன்றரை ஆண்டுகள் ஸ்ரீராமகிருஷ்ணர் கமார்புகூரில் தங்கியிருந்தார். அவருடைய நோய் முழுமையாகக் குணமாவதற்கு முன்பு அனுப்பினால் மறுபடியும் வந்துவிடுமோ என்று சந்திரா தேவி நினைத்து நோய் முழுமையாக நீங்கும்வரை அவரைக் கிராமத்தில் இருக்கச் செய்தார். அப்படி அவர் கிராமத்தில் தங்கிய போது தம் மாமனார் வீட்டிற்குச் சென்று சில நாட்கள் தங்கியிருந்து சாரதா தேவியுடன் கமார்புகூர் திரும்பினார். நாட்கள் கழிந்தன. மறுபடியும் தட்சிணேசுவரம் செல்லும் ஆவல் அதிகமாகியது. வீட்டின் வறுமையும் அவரை அதற்குத் தூண்டியது. அண்ணனிடமும் தாயிடமும் விடை பெற்றுக்கொண்டு, தட்சிணேசுவரம் புறப்பட்டார்.

## 13. மீண்டும் தட்சிணேசுவரத்தில்...

தட்சிணேசுவரம் திரும்பியதும் ஸ்ரீராமகிருஷ்ணர் மறுபடியும் காளி பூஜையைத் தொடர்ந்து செய்ய ஆரம் பித்தார். சில நாட்களுக்கெல்லாம் முன்புபோலவே ஆவேசமும் கடவுட்பித்தும் வெறிகொண்டு எழுந்தன. வயதான தாய், குடும்பத்தை நடத்தப் போராடும் அண்ணன், இளம்மனைவி முதலான இவ்வுலக நினைவுகள் அனைத்தும் மறந்துவிட்டன. அன்னை காளியின் தரிசனத்தைப் பெற வேண்டுமென்னும் விருப்பத்தில் இரவும்பகலும் கடுமை யான தியானம், பிரார்த்தனை, உணர்ச்சிப் பெருக்கால் மார்பு செக்கச் செவேலென்று ஆவது, உடம்பு முழுவதும் வேதனை தரும் அதே எரிச்சல், உலகைப் பற்றிய பேச் சைக் கேட்டால் அதே வேதனை, துடிப்பு, அதே மாதிரி யான பைத்தியம் போன்ற மனநிலை எல்லாமே மறுபடியும் திரும்பிவிட்டன. ஏற்கெனவே அவர் இதை அனுபவித்து இருந்தாராதலால், இப்போது அதுபற்றிய பயம் தோன்ற வில்லை.

போன நோய் மீண்டும் திரும்பி விட்டதே என்று மதுரும் மற்றவர்களும் மிகவும் வருந்தினர். முன்பு போலவே கல்கத்தாவில் புகழ் பெற்ற மருத்துவரான கங்காபிரசாத் சென்னிடம் அழைத்துச் சென்றனர். பய னில்லை. நோய் தீராமலேயே தொடர்ந்தது. ஒரு நாள் கங்காபிரசாத்திடம் ஸ்ரீராமகிருஷ்ணர் மருத்துவத்திற்குச் சென்றபோது கிழக்கு வங்காளத்திலிருந்து வந்த மற்றொரு சிறந்த மருத்துவரும் அங்கே இருந்தார். ஸ்ரீராமகிருஷ் ணரின் நோயைப் பற்றிக் கேட்டதும் இந்த நோய் மிகக் கடுமையான யோகப் பயிற்சிகளால் வருவது என்றும் மருந்தினால் இதற்கு எந்தவிதப் பலனும் கிடைக்காது என் றும் அவர் கூறினார். ஸ்ரீராமகிருஷ்ணர் பிற்காலத்தில், 'என் நோயைப் பற்றி முதன் முதலில் சரியாக அறிந்துகொண்ட மருத்துவர் இவர்தான்' என்று கூறியுள்ளார். ஆனால் அவருடைய பேச்சுக்கு யாரும் எந்தவித முக்கியத்துவமும் கொடுக்கவில்லை. இந்த நோயின் தீவிரம் நாளுக்கு நாள் அதிகமாகவே வேறு மருத்துவங்களைக் கையாண்டு ஸ்ரீராம கிருஷ்ணரின் நோயைத் தீர்க்க மதுர் பெரிதும் முயன்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் இந்த நோய் பற்றிய செய்தி மறுபடியும் மெல்லக் கமார்புகூருக்கு எட்டியது. சந்திரா தேவியார் மனம் எப்படித் துடித்திருக்கும் என்பதை நாமே கற்பனை செய்துகொள்ளலாம். மகனின் நோயைத் தீர்க்க வேறு எந்த வழியுமில்லாது போகவே, தம் மகனின் நோயைத் தீர்ப்பதற்காகத் தாமே பட்டினி நோன்பிருந்து மகனின் நோயைத் தீர்ப்பது அல்லது உயிரை விடுவது என்று அவர் முடிவு செய்தார். கமார்புகூர் சிவன் கோயிலில் இருந்தருளும் சிவபெருமான் பக்தர்களின் வேண்டுதலை உடனே நிறைவேற்றுபவர் என்று புகழ் பெற்றிருந்தார். சந்திரா தேவி இக் கோயிலுக்குச் சென்றார். சிவபெருமான் தம் மகனைக் காப்பாற்றுவதாகத் தமக்கு வாக்களிக்கும்வரை உணவும் தண்ணீருமின்றிப் பட்டினி கிடக்கத் துவங்கினார். ஒரு நாள் கனவில் அருகில் உள்ள முகுந்தபூரிலுள்ள கோயிலுக்குப் போகும்படி சிவபெருமானின் கட்டளை கேட்டது. சந்திரா தேவி உடனே முகுந்தபூர் சென்றார். அங்கே சிவபெருமான் கோயிலில் இரண்டு நாட்கள் உணவும் தண்ணீரும் அருந்தாமல் பட்டினியாக இருந்தார். சிவபெருமான் சந்திரா தேவியின் கனவில் தோன்றி 'ஒன்றும் பயப்பட வேண்டாம். உன் மகன் பைத்தியமாகி விடவில்லை. கடவுளைக் காண அவன் செய்யும் முயற்சிதான் இந்த நிலையை உண்டாக்கியிருக்கிறது' என்று கூறினார். சந்திரா தேவி மிகுந்த ஆறுதல் பெற்று வீடு திரும்பினார்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கையில் இந்தக் காலம் மிகவும் குறிப்பிடத் தக்கதாகும். இரவும் பகலும் காளியைக் காண வேண்டும் என்னும் துடிப்பில், ''ஓ! தாயே! என் மீது இரக்கம் காட்டு! தகுதியில்லாத இந்த மகனுக்கு உன் காட்சியைக் கொடு! எனக்குப் பணமோ, புகழோ எதுவுமே வேண்டாம். நீ மட்டுமே வேண்டும்.'' என்று இடைவிடாது பிரார்த்தித்துக் கொண்டே இருந்தார். இந்தக் காலத்தில் இருந்த தம் மனநிலையைக் குறித்துப் பின்னால் ஸ்ரீராமகிருஷ்ணர் அடிக்கடிக் கூறி இருக்கிறார்:

''ஒரு சாதனை நிலை நிறைவு பெற்றதும் அடுத்த நிலை புயல் போல் வந்து என்னை ஆட்கொண்டு விடும். அந்தப் பயங்கரமான புயலில் நான் அணிந்திருந்த பூணூல் மறந்துவிட்டது; ஆடைகளைக்கூட உடம்பில் தங்கவைத்துக் கொள்வது கடினமாக இருந்தது. சில நேரங்களில் என் மேல்தாடை சுவர்க்கத்

தையும், கீழ்த்தாடை பாதாளத்தையும் தொடுவதுபோல் வாயைத் திறந்து மனம் உருகி அழுது 'அம்மா' என்று அழைத்தபடியே, அந்த வாய்க்குள் செம்படவன் வலைபோட்டு மீன் பிடிப்பது போல் காளியைப் பிடித்துவிடத் துடிப்பேன்.

"ஓ! அந்த நாட்களில் எத்தகைய மனநிலைகளில் எல்லாம் நான் இருந்திருக்கிறேன்! எல்லோரும் நான் பைத்தியம் என்று நினைத்துவிட்டார்கள். வெளியில் காணும் ஒரு சின்னஞ் சிறு நிகழ்ச்சிகூட என் மனத்தில் மிக ஆழமான தெய்விக எழுச்சியை உண்டாக்கிவிடும். தெருவில் நடந்து செல்லும் விலைமகள்கூட, எனக்கு ஸ்ரீராமரைத் தேடிச் செல்லும் சீதையாகவே தோன்றுவாள்.

"ஒரு நாள் ஓர் ஆங்கிலேயச் சிறுவன் கால்களை ஒன்றுக்கு ஒன்று குறுக்காக வைத்தபடி ஒரு மரத்தில் சாய்ந்து நின்று கொண்டிருப்பதைக் கண்டேன். உடனடியாக ஸ்ரீகிருஷ்ணரைப் பற்றிய நினைவு எழுந்து, நான் ஆழ்ந்த சமாதியில் மூழ்கி விட்டேன். ஒரு சமயம் காளி கோயில் கட்டிடத்தினுள் ஒரு மூங்கில் தடியைத் தோளில் வைத்தபடி அங்கும் இங்குமாக அலைந்துகொண்டே இருந்தேன்; மற்றொரு சமயம் நாய்க் குச் சோறு போட்டுக்கொண்டே அதன் எச்சிலை எடுத்து நான் சாப்பிட்டேன். உயர்ந்த ஜாதி, தாழ்ந்த ஜாதி, பிராமணன், சண்டாளன் என்னும் நினைப்புகளே என் மனத்தி லிருந்து அடியோடு நீங்கிவிட்டன. கீழ் ஜாதியைச் சேர்ந்த ஒருவன் தன் மனைவி சமைத்த உணவை எனக்கு அனுப் பினான். அதை நான் மிகவும் சுவைத்துச் சாப்பிட்டேன். புற உலக நினைவில்லாமல் தியானத்தில் மூழ்கிப் பஞ்சவடியில் கிடப்பேன். அந்தக் காலத்தில் கவனிப்பில்லாமல் என் தலைமயிர் மிக நீளமாக வளர்ந்து, அழுக்குப் படிந்து, சடை சடையாகக் கிடந்தது. காளி பூஜையின்போது என் மீது தெளித்துக் கொள்ளும் அரிசிகளில் சில அந்த சடைக் குள்ளே தங்கி விடும். பறவைகள் என் தலைமீது அமர்ந்து அந்த அரிசிகளை எல்லாம் கொத்தித் தின்னும். சில நேரங்களில் உணர்ச்சியற்ற என் உடம்பின்மீது பாம்புகள் கூட ஏறிச் செல்லும். இவையெல்லாம் துளியும் எனக்குத் தெரியாது. பாம்புகளுக்கும் ஒரு மனிதன் மீது ஊர்ந்து செல்கிறோம் என்ற எண்ணமே இருக்காது. ஓ! அந்தக் காலத்தில் இரவும் பகலும் என்னவெல்லாம் காட்சிகள் என் கண்முன் தோன்றின.

"அந்தக் காலத்தில் நான் தியானம் செய்ய அமர்ந்ததும்

திரிசூலத்தை ஏந்தியபடி ஒரு துறவி என் உடம்பிலிருந்து வெளியே வந்து மற்ற நினைவுகளை எல்லாம் ஒதுக்கிவிட்டுக் கடவுளின்மீது மனத்தைச் செலுத்தச் சொல்வார். நான் அவ்வாறு செய்யவில்லையென்றால் அந்தச் சூலத்தாலேயே என்னைக் குத்திக் கொன்றுவிடுவதாகவும் பயமுறுத்துவார். முன்பு என் உடம்பிலிருந்து தோன்றிய பாவ புருஷனைக் கொன்றவரும் இவரேதான். நான் தொலைவில் உள்ள கோயில்களைப் பார்க்க விரும்பினாலோ அல்லது அங்கு நடக்கும் சங்கீர்த்தனங்களில் பங்கு கொள்ள விரும்பினாலோ ஒளிமயமான இந்த உருவம் என்னுடலிலிருந்து வெளியே வந்து அந்த இடங்களுக்கெல்லாம் ஒளி மயமான பாதை வழியாகச் செல்லும். நானும் அந்த இடங்களைக் காண்பேன். என் ஆசைகள் நிறைவேறியதும் அந்த உருவம் உடம்பினுள் சென்று விடும்.

''என்னைப் போலவே, உருவம் படைத்த ஓர் இளம் துறவி என் உடம்பிலிருந்து வெளியே வந்து எல்லா விஷயங்களைப் பற்றியும் எனக்கு விளக்குவார், அந்த நேரத்தில் தியானத்தில் மூழ்கி இருந்தாலும் சிறிது உலக நினைவும் இருக்கும். ஆனால் பெரும்பாலும் உலக நினைவை முற்றிலும் இழந்து அந்த அதிசயத் துறவியின் நடமாட்டங்களைப் பார்த்தபடியே இருப்பேன். அவர் என் உடம்பிற்குள் நுழைந்த பிறகுதான் எனக்கு மறுபடியும் நினைவு வரும்.

''சாதாரண மனிதனுடைய உடல் என்னுடைய இந்தத் தெய்விக வெறியில் கால் பங்கைப் பெற்றிருந்தால் கூட உடைந்து தூள் தூளாகச் சிதறிப் போயிருக்கும். வார்த்தைகளில் விளக்க இயலாத பயங்கரமான என் துடிப்பும் வேகமும் அழுகையும் இரவும் பகலும் பெரும்பான்மையான நேரங்களில் நான் அன்னையை ஏதாவது ஒரு வகையில் பார்த்துக் கொண்டிருந்ததால் மட்டுமே கொஞ்சம் அடங்கியிருந்தது. ஆறு வருடங்கள் தூக்கம் என்பதே சிறிதும் இல்லாமல் என் கண்கள் இமைக்கவே செய்யாமல் அப்படியே கிடந்தன. நான் கையால் இழுத்து என் இமைகளைமூட எவ்வளவு முயன்றும் முடியவில்லை. நேரம் பற்றியோ உலகம் பற்றியோ உடல் பற்றியோ எனக்கு அறவே நினைவு இல்லாமல் போய்விட்டது. என் மனம் எப்போதாவது மிகக் கீழே இறங்கி வரும்போது உடம்பு பற்றிய நினைவு இலேசாக வரும். அப்போது நான் இருக்கும் அலங்கோலத்தைப்

பார்த்து நான் பைத்தியமாகிக் கொண்டிருக்கிறேனு என்ற அச்சம் எழும். அவ்வளவுதான்; பயங்கர வேதனை என் மனத்தில் உண்டாகும். கண்ணுடியின் முன்னர் நின்று என் இமைகள் இமைக்கின்றனவா என்று நெடுநேரம் பார்த்துக் கொண்டிருப்பேன். இமைக்க முயன்ருலும், கையால் மூடிப் பார்த்தாலும்கூட அவை இமைக்கவே இமைக்காது. அதைக் கண்டு நடுக்கம் அடைந்து ஓவென்று அழுத படியே அன்னை காளியிடம், 'தாயே! நான் எப்போதும் உன்னையே பிரார்த்தனை செய்து உன்னையே முழுமையாகச் சரணடைந்து விட்டதற்கு இதுதான் பரிசா? ஆ! எனக்குக் காட்சி தருவதன் மூலம் கடைசியில் நீ நோயையா எனக்கு வரவழைத்துவிட்டாய்?' என்று கதறுவேன். உடனே மறு விநாடி, 'அதுதான் உன் விருப்பம் என்ருல் அப்படியே நடக்கட்டும். இந்த உடம்பு தூள் தூளாகப் போகட்டும். ஆனுல் நீ மட்டும் என்னைவிட்டுப் போய் விடாதே! தாயே! உன்னுடைய இந்த மகனிடம் கருணை காட்டு. தாயே! உன் தாமரைத் திருவடிகளில் நான் சரணடைந்துவிட்டேன். நீ ஒருத்தியே என் புகலிடம்' என்று கூறுவேன். நான் இவ்வாறு பிரார்த்தனை செய்ததும் எனக்கு உடலைப் பற்றிய நினைவுகள் அற்பமாகவும் இந்த உடம்பு மிகக் கேவலமான சிறு குப்பையைப் போலவும் தோன்றும். என் மனம் முன்போல் மகிழ்ச்சியால் தூண்டப்படும். ஆனந்தமயமான அன்னை எனக்குக் காட்சி தந்து அன்பும் அருளும் பொங்கும் வார்த்தைகளால் எனக்கு ஆறுதல் கூறுவாள்.''

ஆன்மிகச் சாதனைகள் செய்யும்போது சாதனைகளின் பயனுல் மனம் மிகவும் தூய்மையடைந்து அதுவே குருவாகி வழிகாட்டும்' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் அடிக்கடிக் கூறுவார். அவருடைய உடம்பிலிருந்து அவரைப் போன்ற மற்ருெருவர் வெளியே வந்த அசாதாரணமான நிகழ்ச்சியையே இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். இதற்கு அளவற்ற மன ஒருமைப்பாடு வேண்டும். அந்த மன ஒருமைப்பாட்டில் மனமே ஒரு நிலையான வடிவத்தைப் பெற்றுக் கொண்டு ஒரு மனிதனைப் போல வாழவும், இங்கும் அங்கும் நடமாடவும் செய்கிறது.

சாதனைகளில், அவர் பணத்தின் மேலுள்ள பற்றை அறவே விடுபடச் செய்யச் செய்த சாதனையும் ஒன்று கங்கைக் கரையில் உட்கார்ந்தபடி தம் கையில் சில ரூபாய்களையும் மண்ணையும் எடுத்துக் கொள்வார்.

தமக்குத்தாமே, ‘இந்தப் பணம் கொஞ்சம் வசதியைத் தரும். தருமம் செய்வதற்கு உதவும். இதைத் தவிர வேறு எதற்கு உதவும்? வாழ்வின் ஒரே குறிக்கோளான கடவுளை இது காணச் செய்யாது. எனவே இதற்கு உள்ள மதிப்பும் இந்தக் கையில் உள்ள மண்ணுக்கு இருக்கும் மதிப்பும் ஒன்றுதான்’ என்று நினைப்பார். இப்படி இரண்டு கைகளிலும் தனித்தனியே இருக்கும் மண்ணையும் பணத்தையும் ஒரு கையிலிருந்து மற்றொரு கைக்கு மாற்றிமாற்றி வைத்தபடியே இந்த எண்ணத்தைத் தம் மனத்தில் பசுமரத்தாணிபோல் பதியும்படிச் செய்வார். ஆகவே மண்ணிற்கும் பணத்திற்கும் உண்மையாகவே சிறிதும் வேற்றுமை இருப்பதாக அவருக்குத் தெரியவில்லை. முடிவில் கங்கையில் கலக்கும்படி இரண்டையும் ஒன்றாக வீசியெறிவார்.

மேலும், உயர்வு-தாழ்வு என்ற நினைப்பைத் தம் மனத்திலிருந்து அடியோடு நீக்குவதற்காக, தட்சிணேசுவரக் கோவில் அருகே வாழ்ந்திருந்த தோட்டி ஒருவனின் வீட்டுச் சாக்கடையைத் தூய்மை செய்தார். கழுவிச் சுத்தம் செய்து, நீண்டு வளர்ந்திருந்த தம் தலைமயிரால் அந்த ஈரத்தைத் துடைத்தார். இதைச் செய்து கொண்டே தம் மனத்தில் சந்தனம், அழுக்கு, இரண்டுமே பஞ்சபூதச் சேர்க்கையால் தோன்றிய பொருட்கள் தாம் என்ற எண்ணத்தை மேலும் மேலும் ஆழமாக ஊட்டி, இரண்டையும் ஒன்றுபோலவே எண்ணுகின்ற உணர்வைப் பெற்றார்.

இந்தச் சாதனைகளை எல்லாம் காணக்காண மதுருக்கு ஸ்ரீராமகிருஷ்ணரிடம் மதிப்பும் மரியாதையும் நாளுக்கு நாள் உயர்ந்துக் கொண்டே வந்தது. அவர் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு வேண்டிய சகல வசதிகளையும் செய்து தருவதில் மிகக் கவனமாக இருந்தார்.

ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணர் காளிகோயிலில் இருந்த பன்னிரண்டு சிவாலயங்களில் ஒன்றிற்குள் நுழைந்து, சிவபெருமானைப் பற்றிய மிகமிக அழகான தோத்திரங்கள் அடங்கிய ‘சிவமஹிம்ன ஸ்தோத்திரம்’ பாடத் துவங்கினார். சிறிது நேரத்தில் சிவபெருமானுடைய பெருமையைக் கூறும் அந்தப் பாடலில் மூழ்கியபடியே புற உலகை மறந்து உணர்ச்சி வசப்பட்டவராய் சமாதியில் ஆழ்ந்தார். அந்த உணர்ச்சி அலைகளின் வேகத்தில், எந்தச் சிவபெருமானின் பெருமையைப் பாடினாரோ அவரே நேருக்கு

நேராக நிற்பதைக் கண்டார். அவர் பாடிக் கொண்டிருந்த, 'பகவானே! உன்னுடைய அளக்க இயலாத பெருமைகளை நான் எப்படி விவரிப்பேன்?'' என்ற வார்த்தைகள் மட்டுமே திரும்பத் திரும்ப வாயிலிருந்து வந்தன. கண்களிலிருந்து கண்ணீர் ஆறுகப் பெருகியது. அவருடைய இந்த விசித்திரமான செய்கை அருகிலிருந்த மக்களையெல்லாம் அவரைச் சுற்றிக் கூடுமாறு செய்தது. ஆனால் அவரோ இவைகளை அறியாதவராய் அழுதபடியே அதே வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருந்தார். அந்த நேரத்தில் கோயிலில் இருந்த மதுர் இதைக் கேள்வியுற்று வேகமாகக் கோயிலுக்குள் நுழைந்தார். மௌனமாக நின்று ஸ்ரீராமகிருஷ்ணரின் செயல்களைக் கூர்ந்து கவனித்தார். அப்போது அங்குள்ள கோயில் அதிகாரி ஒருவன், 'பைத்தியம் பிடித்த இவனை அங்கிருந்து பிடித்து வெளியே தள்ள வேண்டும்' என்றான். இதைக் கேட்ட மதுர் மிகுந்த கோபத்தோடு, 'யாராவது அவர் மேல் கையை வைத்தால் அவன் தலை கழுத்திலிருந்து கீழே உருளும்' என்றார். மதுரின் இந்த வார்த்தைகள் எல்லோரையும் வாய் மூடிப் பின்னடையச் செய்தது. நெடுநேரம் கழித்து ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிது சிறிதாக உலக நினைவைப் பெற்றார். தம்மைச் சுற்றி இவ்வளவு மக்கள் நின்று கொண்டிருப்பதைப் பார்த்ததும் வியப்படைந்தார். மதுரும் அங்கே இருப்பதைப் பார்த்து அச்சத்தோடு சிறிய குழந்தையைப்போல், ''நினைவில்லாமல் இருந்தபோது நான் ஏதாவது தவறு செய்துவிட்டேனா?'' என்று கேட்டார். ''ஓ! ஒன்றும் இல்லை. நீங்கள் பிரார்த்தனையைச் சொல்லிக் கொண்டிருந்தீர்கள். உங்களுக்கு யாரும் தொல்லை கொடுக்கக் கூடாது என்பதற்காக நான் இங்கே நின்று கொண்டிருக்கிறேன்'' என்றார் மதுர்.

இதன் பிறகு சில நாட்கள் கழித்து குறிப்பிடத் தக்க ஒரு நிகழ்ச்சி நடந்தது. அது மதுருக்கு ஸ்ரீராமகிருஷ்ணரிடம் ஏற்கெனவே இருந்த அளவுகடந்த மதிப்பையும் பக்தியையும் அதிகரிக்கச் செய்தது. ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணர் தம் அறைக்குப் பக்கத்தில் இருந்த வராந்தாவில் குறுக்கும் நெடுக்குமாக ஆழ்ந்த சிந்தனை வயப்பட்டவராய் நடந்து கொண்டிருந்தார். மதுர் எதிரேயிருந்த மாளிகையில் தம் அறையில் தனியாக இருந்தார். அந்த அறையின் ஜன்னல் வழியாக வராந்தாவில் நடப்பதை மிகத் தெளிவாகக் காண முடியும். நெடுநேரம் மதுர்

அங்கே உட்கார்ந்தவாறே எதிரில் வராந்தாவில் ஸ்ரீராம கிருஷ்ணர் தம்மை மறந்த நிலையில் முன்னும் பின்னுமாக நடந்து கொண்டிருப்பதைப் பார்த்தார். ஸ்ரீராம கிருஷ்ணருக்கு அது சிறிதும் தெரியாது. பார்த்துக் கொண்டேயிருந்த மதுர் திடீரென்று தம் அறையிலிருந்து பைத்தியம் பிடித்தவர் போல் வேக மாக ஓடிவந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரின் காலடியில் வீழ்ந்து, அவருடைய இரண்டு கால்களையும் பிடித்துக் கொண்டு குழந்தையைப் போல் தேம்பித் தேம்பி அழத் துவங்கினார். ஸ்ரீராமகிருஷ்ணரோ, அளவற்ற ஆச்சரியம் அடைந்து, ''ஐயோ என்ன காரியம் செய்கிறீர்கள்! நீங்கள் ராணி ராசமணியின் மருமகன். நீங்கள் இப்படி நடந்து கொள்வதைப் பார்த்து மக்கள் என்ன நினைப்பார்கள்? அமைதி அடையுங்கள். அமைதி அடையுங்கள்! எழுந் திருங்கள்!' என்றார். ஆனால் மதுர் அவர் கால்களைப் பற்றியபடி அழுதுகொண்டே இருந்தார். சிறிது நேரம் கழித்து அவர் அமைதி அடைந்ததும் தம்முடைய இந்தச் செயலுக்கான காரணத்தை விவரிக்க ஆரம்பித்தார்.

''நீங்கள் வராந்தாவில் மெதுவாக நடந்து கொண் டிருந்ததை நான் பார்த்தபடியே இருந்தேன். நீங்கள் ஒரு பக்கமாக நடந்து சென்றபோது திடீரென்று உங்களை அங்கே காணவில்லை. நீங்கள் காளியாக நடந்து செல் வதைக் கண்டேன். நீங்கள் திரும்பி எதிர்ப்புறமாக நடந்து வரும்போது காளியின் உருவம் இல்லை; சிவபெருமானாக நடந்து வருவதைப் பார்த்தேன். மறுபடியும் திரும்பி மறு பக்கம் நடக்கின்றபோது முன்பு போலவே காளியாகவும், பிறகு சிவபெருமானாகவும் கண்டேன். எனக்கு ஆச்சரியம் தாங்கமுடியவில்லை. எழுந்து நின்று இந்த அற்புதக் காட்சி உண்மையா வெறும் தோற்றமா என்று கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தேன். அதே காட்சி காளி...சிவபெரு மான்; காளி....சிவபெருமான்...'' என்று இப்படிச் சொல் லிக் கொண்டே பெரும் காளி பக்தரான மதுர் உணர்ச் சிகளை அடக்க முடியாமல் மறுபடியும் பொங்கிப் பொங்கி அழ ஆரம்பித்துவிட்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் சின்னஞ் சிறு குழந்தைபோல் ''அப்படியா? எனக்கு ஒன்றும் தெரியவில்லையே'' என்றார்.

மேற்கண்ட இந்த நிகழ்ச்சியைப் பிற்காலத்தில் தம் சீடர்களிடம் கூறிய ஸ்ரீராமகிருஷ்ணர் மேலும் தொடர்ந்து, ''மதுரைக் கட்டுப்படுத்தவோ, சமாதானப்படுத்தவோ

அந்த நேரத்தில் முடியவில்லை. ராணி ராசமணி இதை அறிந்தால் நான் மனோவசியம் செய்து மதுரை இப்படி ஆக்கிவிட்டேன் என்று நினைப்பாரோ என்று பயந்து விட்டேன்'' என்றார். பிறகு அவர், ''மதுர் காரண மின்றியா இந்த உடம்பின் (தமது) தேவைகளை அறிந்து ஆயிரமாயிரமாகக் கொட்டி, அவ்வளவு அக்கறையுடன் ஒரு வேலைக்காரனைப் போல் எனக்குச் சேவை செய்தார்? அது வெறும் பக்தி என்று நினைத்தீர்கள்? இதன் மூலம் பல அதிசயங்களைக் காளி மதுருக்குக் காட்டினாள். மதுரின் ஜாதகத்தில் அவருடைய இஷ்ட தெய்வமான காளி அளவற்ற அன்போடு அவருக்குக் காட்சியளிப்பாள் என்றும் எப்போதும் சாதாரண மனித வடிவில் அவரோடு நடமாடுவாள் என்றும் கூறப்பட்டிருக்கிறது'' என்று கூறியிருக்கிறார்.

இந்த நிகழ்ச்சிகளுக்குப் பிறகு மதுருக்கு ஸ்ரீராமகிருஷ்ணரிடம் இருந்த மதிப்பும் பக்தியும் ஆயிரம் மடங்காகப் பெருகிவிட்டது. அன்றிலிருந்து ஸ்ரீராமகிருஷ்ணரின் சாதனைகளுக்கான உதவிகளைச் செய்வதும் அவருக்குச் சேவை செய்வதுமே வாழ்க்கையில் தமக்குக் கிடைத்துள்ள அரிய பேறு என்பதை உறுதியாக உணர்ந்து கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அவ்வப்போது எழும் சின்னஞ்சிறு ஆசைகளையும் தேவைகளையும் உடனடியாகச் சிறப்போடு நிறைவேற்றத் துவங்கினார். ஸ்ரீராமகிருஷ்ணரின் பிற்காலச் சாதனைகளின்போது மதுர் எவ்வளவு நெருக்கமாக அவருக்குச் சேவை செய்தார் என்பதைப் பின்னால் காண்போம்.

இப்போது ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கையில் மற்றொரு முக்கியமான நிகழ்ச்சிக்கு வருகிறோம். அது 1861-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 19-இல் நடந்த ராணி ராசமணியின் மரணமாகும். தாம் இறப்பதற்கு முன் தமது இரண்டு பெரிய ஆசைகளும் நிறைவேறியதில் அவர் மிகுந்த திருப்தி அடைந்தார். ஒன்று காளி கோயிலின் சிறப்பான கும்பாபிஷேக விழா. மற்றொன்று அந்தக் கோயிலின் எதிர் காலத்திற்கு நிரந்தர வருமானம் கிடைப்பதற்காகச் சொத்து முதலானவற்றைத் திரட்டி அதன் பெயருக்கு எழுதிவைத்த சிறப்பான ஏற்பாடுகள். ஸ்ரீராமகிருஷ்ணரைக் கதாநாயகராகக் கொண்டு அன்னை காளி நடத்திய நாடகத்தில் ராசமணியின் பங்கு

முடிவடைந்து, அவர் மேடையிலிருந்து வெளியேறும் வேளை வந்து விட்டது. அவர் காய்ச்சலில் விழ்ந்தார். வயிற்று வலியும் அதனோடு சேர்ந்து கொண்டது. சில நாட்களில் அது பயங்கரமான இரத்த பேதியாக மாறி யது. ராசமணி நோயுற்றிருந்த இந்தக் கடைசி நேரத்தில் அவருடைய மூத்த மகள் பத்மாமணி காளி கோயிலின் சொத்தில் அவருக்கு வரும் பங்கைக் கோயிலுக்குத் தர ஒப்பாது தஸ்தாவேஜுகளில் கையெழுத்திட மறுத்தது, ராசமணிக்கு மிகுந்த வேதனையை உண்டாக்கியதாகக் கூறப்படுகிறது.

ராசமணி மரணமடைவதற்குச் சில நாட்களுக்கு முன்பு கங்கைக் கரையில் காளி கோயிலின் அருகிலுள்ள தம் வீட்டிற்கு எடுத்துச் செல்லப்பட்டார். உயிர் விடும்போது புனிதமான கங்கை நதிக்கருகில் உயிர்விட வேண்டும் என்னும் அவரது ஆவலை நிறைவேற்ற அவர் கங்கைக் கரைக்குக் கொண்டு வரப்பட்டார். சிறிது நேரம் கழித்து நினைவு திரும்பியவர் தம் எதிரில் விளக்கு வைக்கப்பட் டிருப்பதைக் கண்டு மிகுந்த ஆச்சரியத்தோடு, ''அந்த விளக்கை நிறுத்துங்கள்! அவை அழுதல்லவா வடிகின் றன! ஆ! என் தாய்! என் காளி வருகிறாள்! அவ ளுடைய உடலிலிருந்து தோன்றும் ஒளி இந்த இடம் முழு வதையுமே ஒளியாக்கிவிட்டது'' என்றார். பிறகு சிறிது நேரம் கழித்து, 'தாயே நீ வந்துவிட்டாயா? ஆமாம்! பத்மா கையெழுத்திட மறுத்துவிட்டாள். அதனால் ஏதா வது கெடுதி ஏற்படுமா அம்மா?' என்றார். இந்த வார்த் தையைச் சொல்லியபடியே உயிர் அவர் உடலை விட்டு அமைதியாகப் பிரிந்தது. அவர் ஆத்மா உடம்பென்னும் கூட்டிலிருந்து விடுபட்டு அன்னை காளியின் திருவடிகளை அடைய, அவளது உலகைத் தேடிப் பறந்தோடி விட்டது.

ராசமணி இறந்த பிறகு மதுர், ராசமணியின் சொத்து முழுவதற்கும் காப்பாளராகிவிட்டார். ஸ்ரீராம கிருஷ்ணரைக் காளியாகவும், சிவபெருமானாகவும் பார்த்ததி லிருந்து எந்த நேரத்திலும் ஸ்ரீராமகிருஷ்ணரின் அரு கிலேயே இருந்து அவருடைய கட்டளையை நிறைவேற்று வதையே தம் இலட்சியமாகக் கொண்டு வாழலானார். ஸ்ரீராமகிருஷ்ணர் எங்கு போக வேண்டுமானாலும் அதற் கான எல்லா வசதிகளையும் செய்து கொடுப்பதோடு,

பானிஹாட்டி என்னுமிடத்தில் ஆண்டுதோறும் கொண்டாடப்படும் கூட்டம் மிகுந்த திருவிழாவுக்கு அவர் செல்லும்போது தாமே அவருக்குப் பாதுகாவலராகச் சில சேவகர்களோடு அவருக்குத் தெரியாமல் மாறுவேடத்தில் செல்ல ஆரம்பித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் மேலும் பல நெறிகளில் கடுமையான சாதனைகளைச் செய்தபோது, அவருக்கு ஒருவருடைய ஆதரவும் துணையும் மிகுந்த பொருளும் தேவைப்பட்டன. ஸ்ரீராமகிருஷ்ணர் அன்னை காளியிடம் அவைகளை எல்லாம் தமக்குத் தரக் கூடிய ஒருவரைத் தரும்படி வேண்டினார். இந்த வேண்டுதலுக்குப் பிறகு அன்னை காளி தமக்கு இத்தகைய உதவிகளைச் செய்ய ஐந்து ஆதரவாளர்களை நியமித்ததாகவும், அதில் மதுர் முதன்மையானவர் என்றும் ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியுள்ளார்.

தம் மனத்தில் ஏதாவது ஆசை தான்றுமானால் ஸ்ரீராமகிருஷ்ணர் உடனே அதை மதுரிடம் கூறுவார். அது எவ்வளவு பெரிய ஆசையாக இருந்தாலும் உடனே அதை நிறைவேற்றி வைப்பதில் மதுர் அளவற்ற ஆனந்தம் அடைவார். அதே நேரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரும் மதுரிடம் அளவற்ற அன்போடு நடந்து கொண்டார். மதுரின் ஆசைகள் அனைத்தையும் நிறைவேற்றினார். அவரது ஆசைகள் சத்தியம், தருமம் இவைகளுக்கு முரண்படும்போது ஸ்ரீராமகிருஷ்ணர், சிறிதும் தயக்கமின்றிச் சொல்வதோடு, மதுர் என்னதான் சொன்னாலும், வேண்டினாலும் சிறிதுகூட விட்டுக் கொடுக்கமாட்டார். மதுரிடம் ஸ்ரீராமகிருஷ்ணர் நடந்துகொண்ட முறை யாராலும் கட்டுப்படுத்த முடியாத சுதந்திரப் போக்கோடும் குழந்தையைப் போன்று கள்ளம் கபடமற்றதாகவும் இருந்தது. எந்தச் சமயத்திலும் தமக்கு ஏதேனும் வேண்டும் என்பதற்காக - அது எவ்வளவு உயர்ந்ததாக இருந்தாலும் தம் சுதந்திரத்தை விட்டு மதுரிடம் கெஞ்சவேண்டும் என்று அவருக்குத் தோன்றியதே இல்லை. ஏனென்றால் தம் மனத்தில் தோன்றும் ஆசைகள் அனைத்தையும் அன்னை காளியே நிறைவேற்றுவாள் என்ற உறுதியான நம்பிக்கை ஸ்ரீராமகிருஷ்ணருக்கு இருந்தது.

ஒரு நாள் இராதாகாந்தர் கோயிலில் திருவுருவங்களுக்கு அணிவிக்கப்பட்டிருந்த நகைகளில் சில களவு போய்விட்டன. மதுர் இதைக் கேள்விப்பட்டதும் ஸ்ரீராம

கிருஷ்ணரின் முன்னிலையில் இறைவனிடம், ''நீ என்ன கடவுள்? உன் நகைகளைத் திருடர்களிடமிருந்து காப்பாற்றிக் கொள்ளும் சக்திகூட உனக்கில்லையா?'' என்று வருத்தத் தோடும் வெறுப்போடும் கூறினார்.

இதைக் கேட்ட ஸ்ரீராமகிருஷ்ணரின் வாயிலிருந்து வார்த்தைகள் சீறிக் கிளம்பின. ''என்ன முட்டாள்தன மாகப் பேசுகிறாய்! நகைகள் உயர்ந்தவை என்ற எண்ணம் உனக்கே தவிர, கடவுளுக்கு அல்ல. உனக்குத்தான் அவை விலை மதிக்க முடியாதவை. ஆனால் கடவுளுக்கோ அது வெறும் களிமண்தான். இந்த அண்ட சராசரங்கள் அனைத் திலும் உள்ள செல்வத்தின் அதிபதியான இலட்சுமி அவருக்குப் பணிபுரிபவள் என்பதை நினைவில் வைத்துக் கொள்!'' என்றார்.

ஒரு நாள் மதுர் தம் பெரிய எஸ்டேட்டின் ஒரு பகுதியை ஸ்ரீராமகிருஷ்ணரின் பெயரில் எழுதி வைப்பதாகக் கூறினார். இதைக் கேட்டதும் பயங்கரமான கோபத்தோடு இடிபோன்ற உரத்த குரலில், 'என்ன? என்னையும் உன்னைப் போல் உலகப் பற்றுள்ளவனுக்க எண்ணுகிறாயா?' என்று கத்தினார் ஸ்ரீராமகிருஷ்ணர்.

சொத்து எழுதி வைக்கும் காரியத்தை மதுர் அன் றோடு விட்டு விட்டார். மதுர் அடிக்கடி ஸ்ரீராமகிருஷ் ணரைக் கல்கத்தாவில் உள்ள தம் மாளிகைக்கு அழைத்துச் சென்று பல நாட்கள் தம்மோடு தங்கவைத்துப் பெரு மகிழ்ச்சி அடைவார். மாலை நேரங்களில் கல்கத்தா நக ரைப் பார்க்க வண்டியில் அவரை அழைத்துச் செல்வார். ஸ்ரீராமகிருஷ்ணர் பயன்படுத்துவதற்காக விலை உயர்ந்த பொன் வெள்ளிப் பாத்திரங்களையும் வாங்கினார். அதோடு விலையுயர்ந்த ஆடைகளையும் வாங்கினார். ஆனால் ஸ்ரீராம கிருஷ்ணரோ எவ்வித மாற்றமும் இல்லாமல் அன்னை காளி யின் சின்னஞ் சிறு குழந்தையாகவே எதிலும் பற்றில்லா மலே இருந்தார்.

ஒரு நாள் மதுர் மிக உயர்ந்த சால்வை ஒன்றை ஸ்ரீராமகிருஷ்ணருக்காக வாங்கினார். ஸ்ரீராம கிருஷ்ணரும் குழந்தையைப் போல் மிகுந்த ஆசை யோடும் உற்சாகத்தோடும் அதைக் கையில் எடுத்துக் கொண்டு எல்லோரிடமும் காட்டிக் கொண்டே வந்தார். சிறிது நேரம் கழித்து அவருடைய மனம் சிந்திக்க ஆரம்பித்துவிட்டது. ''இதில் என்ன இருக்கிறது? வெறும்

ஆட்டு மயிர். உலகத்தில் எல்லாவற்றையும் போலவே இதுவும் ஜடப் பொருள்தான். இது குளிரிலிருந்து காப்பாற்றும். சந்தேகமே இல்லை. ஆனுல் சாதாரணப் போர்வைகூட குளிரிலிருந்து காப்பாற்றுமே! மற்றப் பொருட்களைப் போலவே இதுவும் நாம் கடவுளைக் காண்பதற்கு உதவி செய்யப் போவதில்லை. இதை வைத்திருப்பவனுக்கு, 'நான் மற்ற வர்களைவிடச் சிறந்தவன்' என்ற அகங்காரத்தை வேண்டு மானுல் இது தரும். அவன் தன்னைப் பணக்காரனுகவும் மிகுந்த பெருமையுள்ளவனுகவும் நினைத்துக் கொள்ள லாம். இப்படியாக ஒருவனை இது கடவுளிடமிருந்து விலக்கிவிடும்.'' இப்படி மனத்தில் அந்த விலையுயர்ந்த சால்வையைப் பற்றி நினைத்தவுடனே, இவ்வளவு நேரம் மிக அழகானது என்றும் விலை உயர்ந்தது என்றும் மகிழ்ச்சியோடு எல்லோரிடமும் காட்டிக் கொண்டிருந்த சால்வையைத் தரையில் வீசி எறிந்தார். அதைக் காலால் ஓங்கி ஓங்கி மிதிக்கவும் அதன்மீது காறித் துப்பவும் ஆரம்பித்தார். இதோடு நில்லாமல் நெருப்பைக் கொண்டு வந்து அதை எரிக்க ஆரம்பித்தார். அருகில் இருந்தவர் கள் ஓடிப்போய் அதைத் தடுத்தனர். இந்த நிகழ்ச்சியைக் கேள்விப்பட்ட மதுர் மனம் நிறைந்த சிரிப்போடு, 'பாபா! நல்ல வேலை செய்தார்' என்ருர்.

மதுருக்குக் குடும்பப் புரோகிதர் ஒருவர் இருந் தார். அவர் பெயர் சந்திரஹல்தார். ஒன்றும் தெரி யாத காளி கோயில் பூசாரியான ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கொஞ்ச நாட்களாக மதுர் அளவற்ற அன்பும் பக்தியும் செலுத்துவதைக் கண்டார் அவர். இவ்வளவு நாட்கள் என் னென்னவோ செய்து மதுரின் அன்புக்குப் பாத்திரமாகி அதன் மூலம் பணம் சம்பாதித்துக் கொண்டிருந்த அவருக்கு இப்போது மதுரின் அன்பு முழுவதும் ஸ்ரீராம கிருஷ்ணரிடம் திரும்பிவிட்டது பெரிய அதிர்ச்சியாக இருந்தது. அதை ஒரு முடிவிற்குக் கொண்டுவர உறுதி கொண்டார். ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணர் கல்கத்தாவில் மதுரின் வீட்டு வெளி அறையில் தெய்விகப் பரவசத்தில் பாதி நினைவிழந்த நிலையில் படுத்திருந்தார். அந்த நேரத்தில் இந்தப் புரோகிதர் உள்ளே நுழைந்தார். அப்போது யாருமே அருகில் இல்லை. ஸ்ரீராமகிருஷ்ணரை மேலும் கீழும் தள்ளிய படியே அவரிடம், 'மதுரை எப்படி வசியம் செய்தாய்? உண்மையைச் சொல்' என்று பலமுறைக் கேட்டார். ஸ்ரீராம கிருஷ்ணர் அந்த நேரத்தில் பேசமுடியாத நிலையில் இருந்த

தால் அமைதியாக இருந்தார். பாதி நினைவிழந்த அந்தத் தெய்விக நிலையில் அவரால் பேச முடியவில்லை. புரோகிதர் பலமுறை ஸ்ரீராமகிருஷ்ணரிடம் முன்பு கேட்டதையே திரும்பத் திரும்பக் கேட்டார். பதில் கிடைக்காததால் ஆத்திரமடைந்தார். ஆத்திரம் தீரும்வரை தம் காலால் எட்டி எட்டி அவரை உதைத்துவிட்டு வேகமாகப் போய் விட்டார். இது மதுருக்குத் தெரிந்தால் என்ன நடக்கும் என்பது ஸ்ரீராமகிருஷ்ணருக்குத் தெரியும். எனவே அவர் நடந்ததை யாரிடமும் சொல்லவில்லை.

இவ்வாறு எந்தச் சூழ்நிலையிலும் பண ஆசைக்கும், காமத்திற்கும் ஆட்படாமல் சின்னஞ் சிறிய குழந்தையைப் போல் ஸ்ரீராமகிருஷ்ணர் இருப்பதைக் கண்டு மதுருக்கு அவரிடம் அளவற்ற மதிப்பும் ஈடு இணையற்ற பக்தியும் உண்டாயின.

# 14. பைரவி பிராம்மணி

ஒருநாள் காலையில் ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரப் பூந்தோட்டத்தில் மலர் பறித்துக் கொண்டிருந்தார். நாட்டுப் படகு ஒன்று கங்கையில் கோயில் படித்துறையில் வந்து நிற்பதையும் ஒரு பெண்மணி சிறு மூட்டை ஒன்றைக் கையில் வைத்துக் கொண்டு இறங்குவதையும் கண்டார். அந்தப் பெண்மணிக்கு நடுத்தர வயதிருக்கும். மிக அழகான தோற்றமுடைய அவருடைய முதுகின்மேல் அடர்ந்த கூந்தல் அவிழ்ந்தபடி தொங்கிக் கொண்டிருந்தது. அவர் அணிந்திருந்த காவியுடை அவர் ஓர் சந்நியாசி என்பதை உணர்த்தியது. மூட்டையிலிருந்த அவருடைய சொத்தெல்லாம் இரண்டு மூன்று புத்தகங்களும் ஒன்றிரண்டு ஆடைகளுமே. அவருக்கு நாற்பது வயதாகியிருப்பினும் பார்வைக்கு மிகவும் இளமையோடு தோன்றினர். ஸ்ரீராமகிருஷ்ணர் அவரைப் பார்த்ததுமே அவரால் கவரப்பட்டிருக்க வேண்டும். ஏனென்றல் அவரைக் கண்டதுமே விரைந்து தம் அறைக்குச் சென்றார். அங்கிருந்த இருதயனிடம் கோயில் முன் மண்டபத்தில் அமர்ந்திருக்கும் அந்தப் பெண்மணியின் அடையாளங்களைக் கூறி அவரை அழைத்து வரும்படிக் கூறினர். இதைக் கேட்ட இருதயன் வியப்போடு, 'முன்பின் அறியாத ஒரு பெண்ணை எப்படிப் போய் அழைப்பது? அவள் ஏன் இங்கே வர வேண்டும்?' என்றெல்லாம் கேள்விகள் கேட்க ஆரம்பித்தான். ஏனென்றல், தன் மாமன் எந்தப் பெண்ணேடும் பேசுவதற்கு இதுவரை விரும்பியதே இல்லை. இருதயன் கூறுவதையெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளாத ஸ்ரீராமகிருஷ்ணர், ''போ! போய் என்னைப் பற்றிச் சொல். அவர் உடனே வருவார்'' என்றார்.

இருதயன் ஒரு வார்த்தையும் மறுத்துச் சொல்ல முடியாமல் கோயில் முன் மண்டபத்திற்குச் சென்றான். அங்கே ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியபடி ஒரு சந்நியாசினி உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவரைப் போன்றவர்களை பைரவி என்று அழைப்பார்கள். தன் மாமன் சொல்லியதை இருதயன் அவரிடம் சொன்னர். உடனே பதில் ஒன்றும் பேசாமல் அவர் இருதயன் பின்னே புறப்பட்டு வந்தார். இருதயன் ஆச்சரியப்பட்டுப் போனன்.

பைரவி ஸ்ரீராமகிருஷ்ணரைக் கண்டதும் அளவற்ற மகிழ்ச்சியுடன் ஆனந்தக் கண்ணீர் வடித்து, ''மகனே! நீ இங்கேயா இருக்கிறாய்? கங்கைக் கரையில் எங்காவது ஓர் இடத்தில் நிச்சயம் இருப்பாய் என்ற நம்பிக்கையில் நீண்ட நாட்களாக நான் உன்னைத் தேடிக் கொண்டிருக்கிறேன். இப்போதுதான் உன்னைக் காண்கிறேன்'' என்றார்.

''அம்மா! என்னைப் பற்றி உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டார் ஸ்ரீராமகிருஷ்ணர். ''அன்னை காளியின் அருளால் நான் மூன்று பேர்களைச் சந்திப்பேன் என்பதை அறிந்தேன் இரண்டு பேர்களை ஏற்கனவே கிழக்கு வங்காளத்தில் சந்தித்துவிட்டேன். இன்று உன்னையும் கண்டுபிடித்து விட்டேன் என்றார்'' பைரவி.

நெடுநாட்களுக்கு முன் காணாமல் போன தம்முடைய அருமையான மகன் கிடைத்ததுபோல் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தாம் கண்டதைக் குறித்து பைரவி மிகுந்த உணர்ச்சி வசப்பட்டுப் பேசினார்.

அதன் பின் தம்மைப் பற்றிக் கூறினார். வங்காளத்தில் ஜெஸ்ஸூர் மாவட்டத்தில் ஒரு பிராமணக் குடும்பத்தில் அவர் பிறந்தார். தேவியின் அருளால் அவர் தம் யோக சக்தியின் மூலம், வங்காளத்தில் ஆன்மிகத்தில் மிகச் சிறந்த மூவரைச் சந்தித்து அவர்களைக் குறிப்பிட்ட நெறிகளில் சாதனைகளைப் பழக வைக்க வேண்டும் என்பதை அறிந்தார். கிழக்கு வங்காளத்திலுள்ள பாரிசால் மாவட்டத்தில் சந்திரா, கிரிஜா என்னும் இருவரை அவர் ஏற்கெனவே சந்தித்து அவர்களுக்கான சாதனைப் பயிற்சிகளை முடித்து வைத்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் சின்னஞ் சிறு குழந்தை தன் தாயிடம் உட்காருவதுபோல் பைரவியின் பக்கத்தில் நெருக்கமாக உட்கார்ந்து கொண்டு, சிறு குழந்தைபோல் தாம் செய்த சாதனைகளையும் அதன் பயனாகத் தாம் கண்ட வியப்பிற்குரிய தெய்விகக் காட்சிகளையும் தியானம் செய்யும்போது உலகமே மறந்து போய்விட்ட நிலையையும் உடம்பு முழுவதும் அப்போது பொறுக்க இயலாத எரிச்சலால் படும் வேதனையையும் இரவும் பகலும் தூக்கமே வராததையும் மற்றும் தன்னுடைய உடல் வேதனைகளையும் கூறினார். பிறகு பரிதாபமாக அவரைப் பார்த்தபடி, 'எல்லோரும் நான் பைத்தியம் என்று சொல்லுகிறார்கள். நான் உண்மையில் பைத்தியமா? இல்லையென்றால் இப்படிப்பட்டக் காட்சி

களும் நோய்களும் எனக்கு ஏன் வந்திருக்கின்றன? அன்னை காளியை நான் இரவும் பகலும் வழிபடுவதற்குக் கிடைத்த பரிசா இது?' என்றெல்லாம் கேட்டார்.

பைரவி, ஸ்ரீராமகிருஷ்ணர் சொன்னதையெல்லாம் மிகுந்த மகிழ்ச்சியோடும் ஆச்சரியத்தோடும் கேட்டுக் கொண்டு இடையிடையே தாய்போல் அவருக்கு ஆறுதல் சொல்லி வந்தார். ''மகனே! உன்னைப் பைத்தியம் என்று யார் சொன்னது? உனக்குப் பைத்தியம் இல்லை. சாஸ்திரங்களில் மிகமிக உயர்ந்த ஆன்மிகநிலை என்று எதைச் சொல்லுகிறார்களோ அந்த மகாபாவ நிலையில் இப்போது நீயிருக்கிறாய். உனக்கு ஏற்பட்டுள்ள இந்த உன்னதமான பேரின்ப நிலையைப் பற்றி அறியாத சாதாரண மக்கள்தாம் உன்னைப் பைத்தியம் என்பார்கள். இராதையும் ஸ்ரீசைதன்ய மஹா பிரபுவும் இத்தகைய நிலையை அடைந்திருந்தார்கள். இவைகளைப் பற்றி எல்லாம் விரிவாகப் பக்தி சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளன. அந்தச் சாஸ்திரங்களை எல்லாம் நான் உனக்குப் படித்துக் காட்டுகிறேன். யாரெல்லாம் கடவுளைக் காண உண்மையாக ஏங்குகிறார்களோ அவர்கள் இத்தகைய நிலைகளையெல்லாம் அனுபவிப்பார்கள். இந்த நிலைகளை அனுபவித்த பின்பே கடவுளை அடைய முடியும்'' என்றார். பைரவியின் சொற்கள் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு மிகுந்த ஆறுதலைத் தந்தன.

இதற்குள் காலைவேளை நீண்ட நேரம் கழிந்து போகவே, ஸ்ரீராமகிருஷ்ணரே காளி கோயிலிலிருந்து கொஞ்சம் பிரசாதத்தைக் கொண்டு வந்து பைரவியிடம் கொடுத்தார். ஸ்ரீராமகிருஷ்ணரைத் தம் சின்னஞ் சிறு மகனாகவும் தம்மை அவருடைய அன்புக்குரிய தாயாகவும் பைரவி எண்ணி ஸ்ரீராமகிருஷ்ணருக்குக் கொஞ்சம் கொடுத்துச் சாப்பிடச் செய்த பின்பே மீதியை உண்டார். பிறகு கோயில் முழுவதையும் சுற்றிப் பார்த்தார் பைரவி. கோயில் தர்மசாலையில் அரிசியும் காய்கறிகளும் வாங்கிக் கொண்டு பஞ்சவடிக்கு வந்தார். அவர் தினமும் சமைத்ததன் பின் தம்முடன் எப்போதும் வைத்திருக்கும் இரகுவீரர் சாளக்கிராமத்திற்கு நிவேதித்த பின்பே சாப்பிடுவது வழக்கம்.

சமையல் முடிந்தது. இரகுவீரரின் திருமுன்னர் உணவை வைத்துவிட்டுக் கண்களை மூடித் தியானத்தில் அமர்ந்தார். தியானத்தில் மிக ஆழ்ந்து சென்றார். உலக நினைவு முற்றிலும்

நீங்கியது; தெய்விகக் காட்சி தோன்றியது; கண்களில் கண்ணீர் வழிந்தது. இந்த நேரத்தில் தம் அறைக்குள் அமர்ந்திருந்த ஸ்ரீராமகிருஷ்ணரை ஏதோ ஓர் ஆற்றல் பஞ்சவடிக்கு இழுப்பதுபோல் தோன்றியது. தம்மையும் அறியாது பாதி நினைவிழந்த நிலையில் தூக்கத்தில் நடப்பவர் போன்று தம் அறையிலிருந்து எழுந்து பைரவி தியானத்தில் அமர்ந்திருக்கும் பஞ்சவடிக்கு விரைந்தார்; பைரவி இரகுவீரரின் முன் வைத்திருந்த உணவை எடுத்துச் சாப்பிட ஆரம்பித்தார். இதற்குள் பைரவி கண் விழித்தார். எதிரே ஸ்ரீராமகிருஷ்ணர், உணவை உண்ணும் காட்சி அவர் மனத்தில் பளிரென்ற ஓர் ஆனந்தப் பேருணர்வை எழுப்பியது. ஏனென்றால் அவர் தியானத்தில் சற்று முன்கண்ட காட்சிக்கும் இப்போது நேரே காணும் காட்சிக்கும் இருந்த ஒற்றுமைதான் அவரிடம் இப்படிப்பட்ட உணர்வை எழுப்பியது. பைரவியால் தம் கண்களை நம்பவே முடியவில்லை.

இதற்குள் ஸ்ரீராமகிருஷ்ணர் சுய நினைவு பெற்றார். தாம் செய்து கொண்டிருக்கும் காரியம் என்னவென்று தெரிந்ததும் மிகுந்த வெட்கமும் வேதனையும் அடைந்தவராக, ''முழு நினைவில்லாத நிலையில் நான் இப்படி நடந்து கொண்டேன். ஏன் இப்படிப்பட்ட தவறு செய்தேன் என்றே புரியவில்லை. மன்னிக்க வேண்டும்'' என்றார். ஆனால் பைரவி, ''மகனே! நீ நல்ல காரியம்தான் செய்திருக்கிறாய். உண்மையில் அதைச் சாப்பிட்டது நீயல்ல. உனக்குள் எந்த இராமர் இருக்கிறாரோ அவர்தாம் எப்போதும் சாப்பிடுவதுபோல் இப்போதும் சாப்பிட்டார். நான் தியானத்தில் யார் இதைச் சாப்பிட்டது, எதற்காகச் சாப்பிட்டார் என்பதைத் தெளிவாகக் கண்டேன். சாதாரணமான இந்த உணவு படைக்கும் வழிபாட்டை இனிமேலும் நான் செய்யத் தேவையில்லை. அந்த நிலையிலிருந்து நான் உயர்ந்த நிலைக்குப் போய்விட்டேன் என்பதை உணர்ந்து கொண்டேன். நெடுநாட்கள் நான் செய்துவந்த வழிபாட்டின் பயன் எனக்குக் கிடைத்து விட்டது'' என்றார். பிறகு சிறிதுகூடத் தயங்காமல் ஸ்ரீராமகிருஷ்ணர் சாப்பிட்ட பின்னர் எஞ்சி இருந்ததைப் பிரசாதமாக எடுத்துச் சாப்பிட்டார். அத்துடன் இவ்வளவு பக்தியோடு பூசித்து அதன் பயனாக தம் இஷ்ட தெய்வத்தை ஸ்ரீராமகிருஷ்ணரின் வடிவிலேயே அறிந்து கொண்டதால் தம்மிடமிருந்த இரகுவீரரின் சாளக்கிராமத்தைக் கங்கையில் போட்டுவிட்டார்.

''தாயே, நீதான் எனக்கு எல்லாம் சொல்லித் தர வேண்டும். உன்னிடம் மட்டுமே நான் கற்றுக் கொள்வேன்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் அன்னை காளியிடம் செய்துவந்த பிரார்த்தனை பைரவிப் பிராம்மணியைச் சந்தித்ததில் நிறைவேறியது. ஸ்ரீராமகிருஷ்ணர் தாம் கண்டுவந்த காட்சிகள், அனுபவித்து வந்த உடல் நோய்கள் இவைகளுக்கெல்லாம் காரணம் தெரியாது மனம் குழம்பிக் கிடந்து பிறரால் பைத்தியம் என்று கேலி செய்யப்பட்ட நேரத்தில் சாஸ்திரங்களோடு அவைகளை ஒப்பிட்டுக் காட்டி அவற்றின் தெய்விக உண்மையை நிலைநாட்ட பைரவி வந்தார். அன்னை காளி தமது ஒவ்வோர் அடியிலும் வழிகாட்டி அழைத்துச் செல்கிறார் என்பது ஸ்ரீராமகிருஷ்ணருக்கு நன்றாக விளங்கியது.

முதல் சந்திப்பிலேயே பைரவிக்கும் ஸ்ரீராமகிருஷ்ணருக்குமிடையே தோன்றிய தாய்-மகன் உறவு அவர்கள் பழகப் பழக நாளுக்கு நாள் வலுத்தது. பைரவி தட்சிணேசுவரக் கோயிலிலேயே தங்கினார். நாளின் பெரும் பொழுது சாஸ்திரம், சமயம் குறித்துப் பேசுவதிலேயே கழிந்தது. பைரவி பிராம்மணி இந்து சமயத்தின் பல்வேறு புனித நூல்களைக் கற்றறிந்திருந்தார்; தாந்திரிக, வைணவ சாதனைகள் செய்து அவற்றில் சிறந்த நடைமுறை அறிவும் பெற்றிருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் தாம் கண்ட பல்வேறு ஆன்மிகக் காட்சிகளையும் அனுபவங்களையும் பற்றிக் கேட்ட, பல்வேறு சந்தேகங்களுக்கும் ஏற்ற அதிகாரபூர்வமான விடைகளை, ஸ்ரீராமகிருஷ்ணரின் அனுபவங்களைப் போலவே உண்மையைத் தேடி, அதற்கு முன் அதே போன்ற அனுபவங்களைப் பெற்றவர்களை மேற்கோள் காட்டி, அந்தச் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள வாசகங்களை படித்துக் காட்டி, அவர் பைத்தியம் அல்லவென்றும் அவரிடம் தோன்றியவை பல்வேறு நிலைகளே என்பதையும் தெளிவாக்கினார். பைரவியின் கூற்றால் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு மனத்தில் இருந்த எல்லாச் சந்தேகங்களும் தீர்ந்து மறுபடியும் நம்பிக்கை பிறந்தது.

ஒரு வாரம் கூடக் கடந்திருக்காது. பெண்ணாகிய பிராம்மணியிடம் தாம் இரவும் பகலும் இப்படி நெருங்கிப் பழகுவது மற்றவர்களுக்குச் சந்தேகத்தைக் கொடுக்கும் என்பதை ஸ்ரீராமகிருஷ்ணர் புரிந்து கொண்டார். ஒருநாள் பைரவியிடம் அதனைக் குறிப்பாகக் கூறினார். பைரவியும் அவர் கூறியதை ஏற்றுக் கொண்டு கோயி

லுக்குச் சுலபமாக வந்து போகும் தூரத்தில் ஓர் இடத்தில் தங்க இசைந்தார். கோயிலிலிருந்து இரண்டு மைல் தொலேவிலுள்ள ஒரு வீட்டில் தங்க ஏற்பாடு செய்து கொண்டார். தம் இனிமையான குணங்களால் விரைவில் தாம் தங்கியிருந்த கிராமத்து மக்களின் மிகுந்த அன்பிற் குரியவராகிவிட்டார். இதனுல் அவருடைய உணவு பற்றிய சிக்கல்கள் தீர்ந்து போயின. அங்கிருந்து தினமும் ஸ்ரீராம கிருஷ்ணரைக் காணக் கோயிலுக்கு வருவார். வைஷ்ணவியான பிராம்மணி மிக உயர்ந்த பக்தி நிலேயை அடைந்திருந்ததால் வாத்ஸல்ய **பா**வம் என்னும் சிறந்த பக்தி நிலே அவருக்கு உண்டாயிற்று. யசோதை, கிருஷ்ணனுக்குப் பல்வேறு இனிப்புகள் ஊட்டி மகிழ்ந்ததுபோல் பைரவியும் பல்வேறு இனிப்புகளே ஸ்ரீராமகிருஷ்ணரைச் சாப்பிடச் செய்து மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். தம் அறையில் மோரும் வெண்ணெயும் கையில் வைத்தபடி ஸ்ரீராமகிருஷ்ணரை நினேத்துத் தம்மை மறந்து ''கோபாலா'' என்று அழைப் பார். அவர் கண்களில் கண்ணீர் பெருகும். அந்த நேரத் தில் தட்சிணேசுவரத்தில் உள்ள ஸ்ரீராமகிருஷ்ணரின் மனத் தில் யாரோ தம்மைப் பற்றிப் பிடித்து இழுப்பதுபோல் ஓர் உணர்ச்சி தோன்றும். தம்மை மறந்தவராக அங் கிருந்து பைரவியின் வீட்டிற்கு வந்துவிடுவார். அவர் பக் கத்தில் உட்கார்ந்துகொண்டு வெண்ணெயும் மோரும் பருகுவார். சில நேரங்களில் பைரவி சுவையான இனிப் புக்களேயும் வாங்கிக்கொண்டு பட்டு ஆடைகளேயும் மற்றவர்களிடம் வாங்கிய பல்வேறு ஆபரணங்களே யும் அணிந்து கொண்டு யசோதையைப்போல் கிராமத்துப் பெண்கள் பலர் உடன்வர, யசோதை கண்ணனேத் தேடி ஓடிவரும் பாடலேப் பாடிக்கொண்டே ஸ்ரீராமகிருஷ்ண ரைக் காண தட்சிணேசுவரத் தெருக்களில் ஊர்வலமாக வருவார். பக்தி ததும்பும் அந்தக் காட்சி காண்போர் மனத்தைத் தொட்டு, தெய்விக உணர்வை எழுப்பிவிடும். அவர்கள் நெஞ்சங்களில் கிருஷ்ணரின் அன்புத் தாயான யசோதையின் நினேவு எழும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தம்மைப் பற்றியும் தாம் கண்ட காட்சிகளேப் பற்றியும் கூறியதை ஆராய்ந்த பைரவி அவை யாவும் அவருடைய அளவற்ற கடவுள் பக்தியின் காரண மாகத் தோன்றியவையே என்ற முடிவுக்கு வந்தார். ஒவ்வொரு நாளும் தெய்விகப் பரவசத்தில் ஸ்ரீராமகிருஷ் ணர் மூழ்குவதைப் பைரவி கண்டார். இருவரும் நாள்

தோறும் பல்வேறு ஆன்மிக அனுபவங்களையும் சாஸ்திரங் களையும் பற்றியே பேசினார்கள். தியானத்தில் ஸ்ரீராம கிருஷ்ணர் உலக நினைவை இழந்து விடுவதையும், சங்கீர்த் தனம் செய்யும்போது அவருக்கு ஏற்படும் ஆனந்தப் பரவசத் தையும், மற்றும் பலவிதமான பக்தி வெளிப்பாடுகளையும் கண்டு அவர் ஆன்மிக வாழ்வின் மிக உயர்ந்த நிலையை அடைந்து இருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்டார்.

வங்காளத்தில் அண்மையில் தோன்றிய பெரும் புகழ் பெற்ற சைதன்யரின் வரலாற்று நூல்களான சைதன்ய சரிதாமிருதம், சைதன்ய பாகவதம் மற்றும் சைதன்யரின் வரலாற்றைக் கூறும் பல நூல்களையும் பைரவி மிக ஆழ்ந்து படித்திருந்தார். அவைகளில் எல்லாம் சைதன்யர் மக்களின் அறியாமையையும் துன்பங்களையும் தீர்ப்பதற்காக மறுபடியும் அவதாரம் செய்யப் போகிறார் என்று குறிப்பிடப்பட்டிருந்தது. கௌராங்கரிடம் காணப்பட்ட பொதுவான ஆன்மிக நிலைகளை ஸ்ரீராம கிருஷ்ணரிடம் கண்ட பைரவிக்குக் கௌராங்கர் மறுபடியும் அவதாரம் செய்யப் போகிறார் என்ற கருத்து நெஞ்சில் தோன்றி, அவரே ஸ்ரீராமகிருஷ்ணர் என்ற எண்ணம் எழுந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர், கௌராங்கர் இருவருமே கடவுளிடம் ஆழ்ந்த அன்பு கொண்டவர்கள். தெய்விகப் பரவச நிலையில் இருக்கும்போது ஒருவரைத் தொட்டால் அவர்களுக்கும் மிகச் சிறந்த ஆன்மிக நிலையை அளிக்கும் ஆற்றலை இருவரும் பெற்றிருந்தார்கள். இவையும் இவை போன்று மற்ற பல ஒற்றுமைகளும் இருவருக்குமிடையே காணப்பட்டதால் கௌராங்கரே ஸ்ரீராமகிருஷ்ணராக மறுபடியும் அவதாரம் செய்திருக்கிறார் என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டார் பைரவி.

அந்த நேரத்தில் நடந்த மற்றொரு நிகழ்ச்சியும் பைரவியின் இந்த நம்பிக்கையை உறுதிப்படுத்தியது. ஸ்ரீராம கிருஷ்ணரின் உடலில் ஏற்பட்டிருந்த பொறுக்க முடியாத எரிச்சலைப்பற்றி முன்பே கண்டோம். பைரவி தட்சிணேசு வரம் வந்த பின்னர் மறுபடியும் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அந்த எரிச்சல் ஏற்பட்டது. முன்புபோலவே எரிச்சல் தாங்க முடியாததாக இருந்தது. மருத்துவர்கள் மூலம் செய்யப்பட்ட எல்லா முயற்சிகளும் பயனற்றுப் போய் விட்டன. அந்த எரிச்சல் காலையில் சூரியன் தோன்றி யதும் துவங்கும். பகல் ஆக ஆக, பயங்கரமாக அதிகரிக் கும். நடுப்பகலில் அது பொறுக்க முடியாததாகிவிடும்.

கங்கையில் இறங்கித் தலையில் ஈரத் துண்டு ஒன்றைச் சுற்றியபடி நாள்தோறும் மூன்று நான்கு மணி நேரம் நீரிலேயே உட்கார்ந்திருப்பார் ஸ்ரீராமகிருஷ்ணர். நெடு நேரம் தண்ணீரில் இருந்தால் வேறு ஏதாவது நோய் வந்துவிடுமோ என்று பயந்து தண்ணீரிலிருந்து எழுந்து வந்து, மதுர் தங்கும் மாளிகையில் தரைக்குப் போடப்பட்டுள்ள பளிங்குக்கல்லை ஈரத் துணியால் துடைத்துவிட்டு அதன்மேல் படுத்துக் கிடப்பார். திறமைவாய்ந்த மருத்துவர்களும் சாதாரண மக்களும் ஸ்ரீராமகிருஷ்ணரின் உடம்பிற்குள் ஏற்பட்ட ஏதோ ஒரு கோளாறுல்தான் இந்நோய் உண்டாகியிருப்ப தாக நினைத்தார்கள். ஆனால் பைரவியோ இதற்கு வேறு காரணத்தைக் கண்டு பிடித்தார்.

அந்த நோயின் காரணம் கடவுளைக் காண அவர் கொண்ட அளவற்ற மன ஏக்கமே என்று பைரவி கூறினார். இத்தகைய உடம்பெரிச்சல் ராதைக்கும் இருந்தது என்று சாஸ்திரத்தில் கூறப்பட்டிருப்பதையும் அண்மைக் காலத்தில் வாழ்ந்த கௌராங்கருக்கு ஏற்பட்டதாக அவர் வரலாற்றில் குறிக்கப்பட்டுள்ளதையும் கண்டார். தெய்விகப் பரவசமான புயல் வீசும்போது உடலில் இத்தகைய வேதனைகள் உண்டாகின்றன. சாஸ்திரத்தில் இதற்குக் கூறப்பட்டுள்ளபடியே அந்த நோய்க்கு பைரவி மருத்துவம் செய்ய ஆரம்பித்தார். அந்த சிகிச்சைப்படி நோயாளி மிகவும் வாசனை வீசும் மாலைகளை அணிந்துகொள்ள வேண்டும். உடல் முழுவதும் சந்தனத்தைப் பூசிக்கொள்ள வேண்டும். பைரவி யின் இந்த யோசனைகளைக் கேட்டு எல்லோரும் சிரித்தார் கள். ஏனென்றால் இதைவிட எவ்வளவோ கடினமானதும் செலவுமிகுந்ததுமான பெரிய மருத்துவங்கள் எல்லாம் அவருக் குப் பார்க்கப்பட்டுவிட்டன. மதுர், பைரவி பிராம்மணி விரும்புவதுபோல் செய்வதில் எவ்விதத் தீங்கும் இல்லாத தால் அவர் விரும்பியபடியே செய்ய அனுமதித்தார். எனவே சாஸ்திரத்தில் கண்டபடி மிகுந்த வாசனை வீசும் மாலைகளைக் கழுத்தில் சூட்டி ஸ்ரீராமகிருஷ்ணரின் உடல் முழுவதும் சந்தனத்தைப் பூசினார். எல்லோரும் வியக்கும் வண்ணம் மூன்றே நாட்களில் ஸ்ரீராமகிருஷ்ணரின் உடம்பு எரிச்சல் நின்றுவிட்டது. ஆனால் பலர் பிராம்மணி செய்த மருத்துவத்தால் ஸ்ரீராமகிருஷ்ணரின் எரிச்சல் தீர்ந்ததாக ஏற்றுக் கொள்ளவில்லை. முன்பு கொடுத்திருந்த அளவற்ற பல மருந்துகளின் காரணமாகவே திடீரென்று நோய் தீர்ந்துவிட்டதாக நினைத்தார்கள்.

இந்த நிகழ்ச்சி பிராம்மணிக்கு ஸ்ரீராமகிருஷ்ணரின் வடிவில் இருப்பது கௌராங்கரே என்று உறுதி செய்து கொள்வதற்குத் துணையாக இருந்தது. ஒரு முறை ஸ்ரீராமகிருஷ்ணர் சிகோர் என்னும் கிராமத்திற்குச் சென்றபோது வழியில் இரு அழகான சிறுவர்கள் தம் உடம்பிலிருந்து வெளிவந்து மறுபடியும் தமது உடலுக்குள்ளே சென்று விட்டதாகத் தெய்விகக் காட்சி ஒன்று கண்டிருந்தார். இந்த நிகழ்ச்சி ஸ்ரீராமகிருஷ்ணரின் உடலில் இருப்பவர் கௌராங்கரே என்பதை மிகவும் உறுதியாக்கியது. பிராம்மணி இந்த முடிவை ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கூறி, 'இப்போது கௌராங்கர் அவருடைய தோழராகிய நித்யானந்தர் வடிவில் வந்து தோன்றியிருக்கிறார்' என்றார்.

சில நாட்கள் கழிந்ததும் மற்றுமொரு பயங்கரமான நோய் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு ஏற்பட்டது. அதைப் பற்றி ஸ்ரீராமகிருஷ்ணரே கூறுகிறார்: ''நான் மிகப் பயங்கரமான பசியால் தாக்கப்பட்டேன். எவ்வளவு சாப்பிட்டாலும் பசி அடங்குவதே இல்லை. பசி எடுத்ததும் சாப்பிடுவேன். சாப்பிட்டு வந்த உடனே மறுபடியும் பசிக்கும். இரவும் பகலும் எப்போது பார்த்தாலும் பசி, பசி; சாப்பாடு, சாப்பாடு. இதுவே என் நிலையாகிவிட்டது. இந்தப் புதிய துன்பம் என்னவாக இருக்கும் என்று எனக்குள்ளேயே நான் யோசனை செய்து கொண்டிருந்தேன். இதைப் பற்றிப் பிராம்மணியிடம் கூறி நான் ஆலோசனை கேட்டேன். அவர், 'மகனே! கவலைப்படாதே. சாதனை மார்க்கத்தில் முன்னேறி வரும் சாதகன், இதுபோன்ற வழக்கத்திற்கு மாறான பல நிலைகளைக் கடந்து சென்றாக வேண்டும். நான் அதைக் குணப்படுத்துகிறேன்' என்றார்.

''மதுரிடம் ஓர் அறை நிறைய எல்லா விதமான உணவுப் பொருட்களையும் வாங்கிக் குவிக்கச் சொன்னார். அவ்வாறு குவிக்கப்பட்டதும் என்னை இரவும் பகலும் அந்த அறைக்குள்ளேயே இருந்து கொண்டு விரும்பும்போது எதை வேண்டுமானாலும் எந்த நேரமும் சாப்பிட்டுக்கொண்டே இருக்கும்படிக் கூறினார். நானும் அப்படியே அந்த அறையில் அங்குமிங்கும் நடந்த வண்ணம் இதில் கொஞ்சம், அதில் கொஞ்சம் என்று சாப்பிட்டுக்கொண்டே இருந்தேன். மூன்று நாட்களுக்குப் பிறகு அந்தக் கொடிய பசி நோய் நீங்கிவிட்டது.''

இத்தகைய கடும் பசி மற்ற பல சாதகர்களின் வாழ்க்கையிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. ஸ்ரீராமகிருஷ்ணர் இத்தகைய அளவு கடந்த பசியைப் பலமுறை தம் வாழ்க்கையில் அனுபவித்திருக்கிறார்.

இந்தப் பரிசோதனைகளில் கண்ட வெற்றியும் ஸ்ரீராமகிருஷ்ணர் கண்ட பல அதிசயமான தெய்விகக் காட்சிகள் சாஸ்திரங்களில் கூறப்பட்ட காட்சிகளோடு ஒத்திருந்ததும், தாம் அவரைச் சந்தித்த முதல் நாள் அன்றே தம் இஷ்ட தெய்வத்திற்கு நிவேதனம் செய்தபோது நடந்த நிகழ்ச்சியும், பிராம்மணியின் மனத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் உண்மையில் சைதன்யரே என்ற அசைக்க முடியாத நம்பிக்கையை ஏற்படுத்திவிட்டது. எனவே வெளிப்படையாக எல்லோரிடமும், ''ஸ்ரீராமகிருஷ்ணர் சாதாரண மனிதர் அல்லர். மிக மிக உயர்ந்த ஆன்மிக ஆற்றல் படைத்த மகானும்கூட அல்ல; கடவுளே மனித வடிவில் இந்த உலகத்தில் தோன்றியுள்ள அவதார புருஷர்'' என்று சொல்லத் துவங்கினார். இந்த நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டுவிட்டது, ஸ்ரீராமகிருஷ்ணர், இருதயன் இவ்விருவரிடம் மட்டுமல்லாது மற்றவர்களிடமும் அதைச் சொல்ல ஆரம்பித்தார்.

ஒரு நாள் பஞ்சவடியில் ஸ்ரீராமகிருஷ்ணர் இருதயனுடனும் மதுருடனும் உட்கார்ந்திருந்தார். அப்போது ஸ்ரீராமகிருஷ்ணர் மதுரிடம், ''இதோ பார்! இங்கே ஒரு பிராம்மணி மாது வந்திருக்கிறார். என்னை அவர் கடவுளின் அவதாரம் என்று கூறுகிறார்'' என்று தற்செயலாகக் கூறினார். இதற்கு, ''அது எப்படி இருக்க முடியும்? சாஸ்திரங்கள் எல்லாம் அவதாரங்கள் பத்து என்றுதான் கூறுகின்றன. அப்படியிருக்கும்போது பதினோராவது அவதாரம் எங்கிருந்து எப்படி வர முடியும்? நீங்கள் அன்னை காளியின் எல்லையற்ற அருளைப் பெற்றவர் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன்'' என்று பதிலளித்தார் மதுர்.

ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணரோ குழந்தையைப்போல், ''என் உடம்பில் ஓர் அவதார புருஷருக்கு உரிய தெய்விக அடையாளங்கள் எல்லாம் தெளிவாக இருக்கின்றன என்று பைரவி கூறுகிறார். அவருக்குச் சாஸ்திரத்தில் மிகுந்த புலமை இருக்கிறது. அவர் தம்மிடம் நிறையப் புத்தகங்கள் வைத்திருக்கிறார்'' என்றார்.

இவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருந்தபோது பிராம்

மணி ஒரு தட்டில் இனிப்புகளை எடுத்துக்கொண்டு அவர்கள் அமர்ந்திருக்கும் இடத்தை நாடித் தொலைவில் வந்து கொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும் மதுர் ஸ்ரீராம கிருஷ்ணரிடம் அவர் குறிப்பிட்ட பிராம்மணி இவர்தானா என்று கேட்டார். ஒரு தாய் தன் குழந்தைக்கு ஊட்டு வதற்காக உணவை எடுத்து வருவதுபோல் தம்மை மறந்த நிலையில் பிராம்மணி வருவதை மதுர் பார்த்தார். அருகில் வந்ததும் ஸ்ரீராமகிருஷ்ணருடன் யாரோ அமர்ந்திருப்பதைக் கண்டதும் தாமே ஸ்ரீராமகிருஷ்ண ருக்கு ஊட்ட வந்த இனிப்பைத் தட்டோடு இருதயனிடம் கொடுத்துவிட்டு ஒதுங்கி நின்றார். அவரைப் பார்த்த ஸ்ரீராமகிருஷ்ணர் மதுரைச் சுட்டிக் காட்டி, ''நீங்கள் என்னை அவதார புருஷர் என்று சொன்னதை இப்போது இவரிடம் சொல்லிக் கொண்டிருந்தேன். இவரோ, 'சாஸ்திரங்களில் பத்து அவதாரங்கள்தாமே சொல்லப்பட்டிருக்கின்றன! அதற்கு அதிகமாக மற்றொரு அவதாரம் எப்படி வரும்' என்று கேட்கிறார்'' என்றார். மதுர், பைரவியை வணங்கிவிட்டு அவர் கூறப்போகும் பதி லுக்குக் காத்திருந்தார். மிக வேகமாகவும் தெளிவாகவும் பைரவியிடமிருந்து பதில் வந்தது. ''ஏன் அப்படிக் கேட் கிறீர்கள்? பாகவதத்தில் உண்மையில் பத்து அல்ல; இரு பத்திரண்டு அவதாரங்களைப்பற்றிக் கூறப்பட்டிருக் கின்றன. எண்ணற்ற பல அவதாரங்கள் இருக்கலாம் என்றும் கூறப்பட்டுள்ளது. மேலும் வைஷ்ணவ சாஸ்திரங்களில், கௌராங்கர் மறுபடியும் அவதரிக்கப் போகிறார் என்பது தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீராம கிருஷ்ணருக்கும் கௌராங்கருக்கும் இடையில் கவனத்தைக் கவரும் பலவித ஒற்றுமைகள் இருக்கின்றன'' என்றார். தொடர்ந்து, ''இதைப் பற்றி முடிவு செய்ய வைஷ்ணவ சாஸ்திரங்களில் ஆழ்ந்த ஞானமுள்ள பண்டிதர்களால் தான் முடியும். அப்படிப்பட்டவர்களின் கூட்டத்தைக் கூட்டினால் இவர் அவதாரம் என்பதை அதில் உறுதியாக நிரூபிக்கிறேன்'' என்றார். மதுரால் ஒன்றும் பேச முடியவில்லை. அமைதியாக இருந்தார்.

எல்லோரும் ஆச்சரியத்தோடும், அச்சத்தோடும், பரபரப்போடும் இதைப் பற்றியே பேசினார்கள். மது ருக்கோ ஒன்றும் புரியவில்லை. மிகவும் சங்கடமான நிலை. அவருக்கு ஒரு பக்கம் நம்பிக்கை தோன்றும். உடனே சந்தேகமும் தோன்றும். சில ஆண்டுகளாக அவர் ஸ்ரீராம

கிருஷ்ணரோடு நெருங்கிப் பழகுவதால் அவரிடம் மனிதனுக்கு மேற்பட்ட தெய்விகச் சக்திகள் இருப் பதை அறிந்திருந்தார். ஆனால் அவர் முழுமுதற் கடவுளே என்பதை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. ஆனால் பிராம்மணி அவர் கடவுள் அவதாரமே என்று அடித்துச் சொல்லி அதை நிரூபிக்கப் பண்டிதர்களின் கூட்டத்தைக் கூட்டச் சொல்லியது அவர் மனத்தில் ஒரு புயலையே உருவாக்கிவிட்டது. பைரவி சாஸ்திரங்களை மேற்கோள் காட்டிச் சவால் விடுகிறார். ஸ்ரீராமகிருஷ்ணரும் ஒரு சிறுவனைப் போலப் பண்டிதர்களின் கூட்டத்தைக் கூட்ட வேண்டு மென்று மிகவும் ஆசைப்பட்டார்; மதுரிடம் உடனடியாகக் கூட்டத்தைக் கூட்டும்படி வற்புறுத்தவும் தொடங்கினார். ஒரு பக்கம் தமக்கு ஏற்பட்டுள்ள சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளவும் மறு பக்கம் ஸ்ரீராமகிருஷ்ணரின் பொறுக்க முடியாத வற்புறுத்தலுக்காகவும் மதுர் பண்டிதர்களின் கூட்டத்தைத் தட்சிணேசுவரத்தில் கூட்ட முடிவு செய்தார்.

கல்கத்தாவிலேயே அந்தக் காலத்தில் மிகப் பெரிய அறிஞர்களாக இருந்த வைஷ்ணவ சரணை யும் கௌரி பண்டிதரையும் வரவழைப்பது என்று முடிவு செய்யப்பட்டது. சிறந்த பக்தரான வைஷ்ணவ சரண் வங்காள வைஷ்ணவ சமூகத்தின் ஒரு பகுதிக்குத் தலைவராக இருந்தார். பலவகையான சமயத் தத்துவங்களிலும் சாஸ் திரங்களிலும் குறிப்பாக வைஷ்ணவ பக்தி சாஸ்திரங்களி லும் மிகுந்த தேர்ச்சி பெற்றவராக அவர் விளங்கினார். நாள் தோறும் ஜபம், தியானம் முதலிய சாதனைகளில் ஈடுபடும் உண்மையான சாதகராக அவர் விளங்கியதால் அவரிடம் சமய அறிவுரைக்காகப் பலர் எந்நேரமும் வருவார்கள். அவரைச் சுற்றி எப்போதும் பெருங் கூட்டம் இருக்கும். அவரை அழைத்ததன் மூலம் மதுர் மிகவும் பொருத்த மானவரை விவாதத்திற்கு அழைத்திருந்தார். கௌரி பண்டிதரும் வைஷ்ணவ சரணைப் போலவே சாஸ்திரங் களில் மிகுந்த பயிற்சியும் அன்றாடம் கடினமான சாதனை களும் பழகுபவர். ஸ்ரீராமகிருஷ்ணர் அவதாரமா என முடிவு செய்ய மிகவும் பொருத்தமானவர்.

குறிப்பிட்ட நாளில் வைஷ்ணவ சரண் காளி கோயி லுக்கு வந்தார். அவரோடு பல பண்டிதர்கள் உடன் வந் திருந்தனர். கோயிலில் உள்ளவர்களும் அக்கம் பக்கத்தவர் களும் பெருங் கூட்டமாக ஆர்வத்தோடு வந்து கூடினர். மதுர் வியப்போடு அமர்ந்திருந்தார். கூட்டத்தின் நடுவே

ஸ்ரீராமகிருஷ்ணரும் உட்கார்ந்திருந்தார். பிராம்மணி தம் எதிரே அமர்ந்திருந்த வைஷ்ணவர்களேயும் மற்றப் பண்டிதர்களேயும் பார்த்து, தாம் கேள்விப்பட்ட ஸ்ரீராமகிருஷ்ணரின் சாதனைகளேப் பற்றியும், தாமே நேரில் அவரிடம் கண்ட பல்வேறு தெய்விக நிலைகளேப் பற்றியும் நெடு நேரம் எடுத்துச் சொல்லி, பிறகு அவை ஒவ்வொன்றும் சாஸ்திரத்தில் கூறப்பட்டதற்குச் சரியாக இருப்பதாகச் சாஸ்திரத்தைப் படித்து விளக்கினர். பிறகு வைஷ்ணவ சரணிடம், ''இந்தக் காரணங்களால் ஸ்ரீராமகிருஷ்ணர் அவதார புருஷர் என்பதை நான் திடமாக நம்புகிறேன். இந்த நம்பிக்கை சாஸ்திரங்களின் அடிப்படையில் தான் தோன்றியது. நான் அவரை உண்மையில் அவதார புருஷர் என்று கூறுகிறேன். மறுப்பதென்ருல் நீங்கள் அதற்கான காரணத்தைக் சொல்லுங்கள்'' என்ருர். வீரம் கொப்பளிக்கும் ஒரு தாய்போல் குரலே உயர்த்திக் கம்பீரமாகக் கூறிய அவர் யாருடைய எந்தக் கேள்விக்கும் பதில் சொல்லத் தயாராக நின்ருர்.

இந்த நேரத்தில் இவ்வளவு பெரிய கூட்டமும் விவாதமும் யாரைப் பற்றி நடக்கிறதோ அந்த மனிதர் கூட்டத்தின் நடுவே உட்கார்ந்து கொண்டு ஒரு சின்னஞ் சிறு பையனேப்போல் சுற்றிலும் தம்மைப் பற்றி நடக்கும் இவ்வளவு ஆரவாரங்களிலும் கலந்து கொள்ளாமல், அதைப் பற்றிய நினேவே இல்லாமல் ஃகயிலிருந்த சிறிய பையிலிருந்து பாக்கையும் இலவங்கத்தையும் அவ்வப்போது கொஞ்சம் எடுத்து வாயில் போட்டுக்கொண்டும் பரமானந்த நினேவுகளில் மூழ்கியபடியும் அமர்ந்திருந்தார். இடையிடையே, வைஷ்ணவ சரணிடம், ''இதோ பாருங்கள், சில நேரங்களில் எனக்கு இதுபோன்றும் அதுபோன்றும் உணர்வுகள் ஏற்படும்'' என்று கூறியபடியே உட்கார்ந்திருந்தார். இந்தக் கூட்டத்தின் முடிவில் என்ன நடந்தது? வைஷ்ணவ சரண் மனத் திருப்தியோடும் மிகுந்த மகிழ்ச்சியோடும் பைரவி கூறிய எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டார். அது மட்டுமின்றி சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ள மகா பாவ நிலேயின் எல்லா அடையாளங்களும் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் மிகத் தெளிவாக வெளிப்பட்டிருக்கின்றன என்று கூறினர். அதைச் சொல்லிவிட்டு, ''இது மிகவும் ஆச்சரியம், ஏனென்ருல் பெரிய மகான்களிடமும் பக்தர்களிடமும்கூட இந்த மகா பாவத்தின் பத்தொன்பது

அடையாளங்களில் ஒருசில மட்டுமே தோன்றும். இவரிடம் பத்தொன்பது அடையாளங்களும் தோன்றியிருப்பது ஆச்சரியத்திலும் ஆச்சரியம்'' என்றார். மதுரும் மற்றவர்களும் இதைக் கேட்டு வாயடைத்துப் போனார்கள். ஸ்ரீராமகிருஷ்ணரோ ஒரு சின்னஞ் சிறுவனைப் போல், ''அவர் இப்படிச் சொல்வதைக் கேட்டதும் கடைசியில் இவையெல்லாம் நிச்சயம் வியாதியல்ல என்று தெரிந்து விட்டதில் எனக்கு மிகவும் மகிழ்ச்சி'' என்றார்.

வைஷ்ண சரண் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்ததும் தமக்கு உண்டான உணர்ச்சிகளின் அடிப்படையிலோ, மனக் கவர்ச்சியாலோ இதைச் சொல்லவில்லை. இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அவர் நாள்தோறும் காளி கோயிலுக்கு வந்து ஸ்ரீராமகிருஷ்ணரைக் காணலானார். நாளாக நாளாக, ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அவருக்கு மதிப்பும் அன்பும் பெருகியது. மிகவும் படித்த பண்டிதரான அவர் சமயத்தைப் பற்றியும் சாதனைகளைப் பற்றியும் அடிக்கடி வந்து ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அறிவுரை கேட்கலானார். தம்மைச் சேர்ந்த பக்தர்களையும் சில நேரங்களில் அவரிடம் அழைத்து வந்தார்.

வைஷ்ணவ சரண் வங்காள வைஷ்ணவ சமயப் பிரிவுகளில் ஒன்றான 'கர்த்தா பஜா'* என்னும் வைஷ்ணவப் பிரிவைச் சார்ந்தவர். கல்கத்தாவிற்குச் சில மைல் தொலைவிலிருந்த ஓர் இடத்தில் பக்தர்களான ஆண்களும் பெண்களும் அவருடைய உதவியுடன் சாதனைகளைப் பயின்று வந்தனர். அவருடைய வேண்டுதலின் பேரில் ஸ்ரீராமகிருஷ்ணர் பல முறை அந்த இடத்திற்குச் சென்று வந்தார். ஆனால் 'கர்த்தா பஜா' நெறியில் அனுமதித்துள்ளபடி ஆண்களும் பெண்களும் மிக மிக நெருங்கிப் பழகிச் சாதனை புரிந்த முறை, அதன் இழிவிற்கும் அழிவிற்கும் காரணமாக இருந்தது. அந்த முறைபற்றி முன்பே கேள்விப்பட்டிருந்த ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அது மிகவும் வெறுப்பூட்டுவதாயிருந்தது. ஆனால் இங்கும்கூட உண்மையான சிரத்தையோடும் புனிதமான உணர்வோடும் சாதனைகளில் ஈடுபாடு கொண்ட சிறந்த பக்தர்கள் சிலரைக் கண்டார். இதனால் இந்த நெறி பற்றி முன்பு தமக்கிருந்த கருத்தை மாற்றிக்கொண்டு வழி எதுவாயினும் உண்

---

*வங்காளத்தில் வழக்கத்தில் இருந்து வரும் சமய நெறிகளுள் ஒன்று. இதனைச் சேர்ந்தவர்கள் தங்கள் குருவையே முழுமுதற் கடவுளாக எண்ணி வழிபடுவர்.

மையான சாதகன் தன் இலட்சியத்தை எட்ட முடியும் என்று உணர்ந்து கொண்டார். நாளாக நாளாக வைஷ்ணவ சரண் ஸ்ரீராமகிருஷ்ணரின் தூய்மையான நடவடிக்கையையும் ஆச்சரியகரமான தெய்விக வாழ்க்கையையும் கண்டு அவரிடம் மிகுதியான ஈடுபாடு கொண்டார். அவர் ஓர் அவதார புருஷர் என்று அறிந்து எல்லோரிடமும் தயக்கமின்றிச் சொல்வதில் மிகுந்த பெருமையும் பூரிப்பும் அடைந்தார்.

வைஷ்ணவர்களோடு பைரவி நடத்திய கூட்டம் நடந்த சில நாட்கள் கழிந்ததும் கௌரிகாந்த தர்க்கபூஷண் என்ற பண்டிதர் தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்தார். அவர் வங்காளத்தில் பாங்குரா மாவட்டத்தில் இந்தூர் என்னும் ஊரில் வாழ்ந்தவர். அவர் மிகப் பெரிய தாந்திரீக சாதகர். ஒவ்வோர் ஆண்டும் துர்க்கா பூஜையின்போது, தம் மனைவியையே காளியாக வழி படுவார். அவர் ஆச்சரியமான வகையில் ஹோமம் செய்வார். தரையில் ஹோமம் செய்யும் வழக்கத்திற்குப் பதிலாகத் தம்முடைய இடது கையை நீட்டி அதன்மேல் எண்பது பவுண்டு எடைவரையில் கட்டைகளை வைப்பார். பிறகு தம் வலது கையில் நெருப்பை மூட்டி அந்த ஹோமக் கட்டை முழுவதும் பற்றி எரிந்து தீரும் வரையில் அவற்றை கையில் தாங்கியபடியே இருப்பார். அவர் அவ்வாறு செய்வதை ஸ்ரீராமகிருஷ்ணர் நேரில் கண்டிருக்கிறார். அதை, அவர் பெற்றுள்ள அசாதாரண சக்திகளில் ஒன்று என்று அடிக்கடி கூறுவார்.

கௌரி பண்டிதர் தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்த போது வேடிக்கையாக ஒரு நிகழ்ச்சி நடந்தது. இதை ஸ்ரீராமகிருஷ்ணர் அடிக்கடித் தம் பக்தர்களிடம் கூறுவார். கௌரி பண்டிதர் சாஸ்திரங்களில் ஈடு இணையற்ற அறிவு படைத்தவர் என்ற புகழ் பெற்றிருந்தார். எனவே அவரோடு வாதம் செய்ய எல்லோரும் அஞ்சுவர். இதன் காரணம் கௌரியிடம் இருக்கும் ஓர் அற்புத சக்தியே என்று எல்லாரும் சொன்னார்கள். அவரைத் தங்களோடு வாதிடப் பண்டிதர்கள் அழைத்ததும் அவர் வாதம் நடக்கின்ற இடத்திற்குச் செல்வார். அங்கு நுழையும்போது அன்னை காளியின்மீது தோத்திரமொன்றைப் பாடியபடி, சில மந்திரங்களையும் சேர்த்து தம்முடைய இடி போன்ற குரலில் உரத்து, 'ரீ,ரீ' என்று சத்தமிட்டு உச்சரிப்பார். அவர் இவ்வாறு செய்வது அவருக்கு இரண்டு வகையான பயன்களைத் தந்தது:

தம்முடைய எதிரியை இத்தகைய உரத்த கூச்சலால் நிலைகுலையச் செய்வது; அதோடு அதிசயமான ஓர் ஆற்றலைத் தம்முள் எழுப்பிக் கொள்வது. ஸ்ரீராமகிருஷ்ணர் இதைப் பற்றிச் சொல்லும்போது, ''இத்தகைய சண்டை தொடுக்கின்ற ஆவேசத்தோடு அவர் வாதிடும் மண்டபத்தில் நுழைவாராஞல் பிறகு அங்கு யாருக்கும் அவரை வெல்வது என்பது இயலாத காரியமாகும்'' என்று கூறியுள்ளார்.

கௌரி தம்முடைய இந்த வழக்கப்படி தட்சிணேசுவரக் கோயிலுக்குள் நுழைந்தார். அப்போது ஸ்ரீராமகிருஷ்ணர் தம் அறையில் உட்கார்ந்திருந்தார். அவருக்குக் கௌரியின் இந்தச் சக்தியைப் பற்றி ஒன்றுமே தெரியாது. காளிகோயிலின் முன் நின்றுகொண்டு மிக உரத்த குரலில் கௌரி, 'ரீ ரீ' என்று உச்சரிக்க ஆரம்பித்தார். கௌரியின் இந்த ஓசையைக் கேட்டதும் ஸ்ரீராமகிருஷ்ணர் தம்மையறியாமல் ஓர் ஆற்றலால் தூண்டப்பட்டு, அதே போன்று அதைவிட உரத்த குரலில் சொல்ல ஆரம்பித்தார். அதஞல், கௌரி தம் குரலை உயர்த்திஞர். ஸ்ரீராமகிருஷ்ணர் குரலை மீண்டும் உயர்த்திவிட்டார். இப்படியே இரண்டு பேருக்கும் இடையே கூச்சல் போட்டி மிகக் கடுமையாக எல்லை கடந்து சென்று கொண்டே இருந்தது. இவர்கள் போடும் கூச்சல் கேட்டு, கோயிலின் காவலர்களும் மற்றவர்களும், யாரோ கொள்ளைக்காரர்கள்தான் கோயிலுக்குள் புகுந்து தாக்குகிருர்கள் என்று எண்ணி, தடியையும் கத்தியையும் எடுத்துக் கொண்டு எல்லாத் திசைகளிலிருந்தும் வேகமாக ஓடி வந்தனர். பார்த்தால் கௌரி பண்டிதரும் பைத்தியக்கார பூசாரியும் பெரிய போட்டி போட்டுக்கொண்டு கூச்சல் போட்டு, தங்கள் பலத்தைக் காட்டிக் கொண்டிருந்தனர். இந்தக் கூச்சல் போடுவது கொஞ்ச நேரம் தொடர்ந்து நடந்தது. கௌரி ஸ்ரீராமகிருஷ்ணரைவிட உரக்கச் சத்தம் போட எவ்வளவோ முயன்ருர். அவரால் முடியவில்லை. கடைசியில் சத்தம் போடுவதை நிறுத்தித் தம் தோல்வியை ஒப்புக் கொண்டு, கடுகடுப்பான முகத்தோடு காளி கோயிலுக்குள் நுழைந்து காளியை வணங்கிஞர். இதைப்பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் பிற்காலத்தில் சொல்லும் போது, ''வாதத்தில் எவராலும் வெல்ல முடியாதபடி கௌரியிடம் இருந்த அந்தச் சக்தியை அன்னை காளி என்னிடம் மாற்றிவிட்டார்.... ஏனென்ருல் பெரிய காளி பக்தரான அவருக்கு அந்தச் சக்தியே அவர் காளியைக் காண முடியாத பெரும் தடையாக இருந்தது'' என்று

கூறியுள்ளார். அதன் பிறகு சில நாட்கள் காளி கோயிலில் தங்கி ஸ்ரீராமகிருஷ்ணரோடு பழகியதும் அவருடைய அதிசயமான குணங்களால் பெரிதும் கவரப்பட்ட கௌரி அவரிடமே சரணடைந்தார்.

கௌரி, காளி கோயிலுக்கு வந்த சில நாட்களுக் கெல்லாம் மதுர் ஸ்ரீராமகிருஷ்ணர் அவதார புருஷரா என் பதை விவாதிக்க மற்ெறாரு கூட்டத்தைக் கூட்டினூர். அதற்கு வைஷ்ணவ சரணும் மற்றும் பல பண்டிதர்களும் வந்திருந் தனர். இந்தக் கூட்டம் காலையில் காளி கோயிலின்முன் இருக்கும் மண்டபத்தில் நடப்பதாக இருந்தது. வைஷ் ணவ சரண் வருவதற்குத் தாமதமாகவே, ஸ்ரீராமகிருஷ்ணர் கௌரியோடு கூட்டம் நடக்கும் மண்டபத்திற்குப் புறப்பட்டார். அங்கே போவதற்கு முன் காளி கோயிலுக்குள் நுழைந்து அன்னையை வணங்கிவிட்டு, ஆனந்தப் பரவச நிலையில் கோயிலிலிருந்து வெளியே வந்தார். அப்போது எதிரே வந்த வைஷ்ணவ சரண் ஸ்ரீராமகிருஷ்ணரின் பரவச நிலையைக் கண்டு அவருடைய திருவடிகளைத் தொட்டுத் தலையில் ஒற்றிக் கொள்ளக் குனிந்தார். ஸ்ரீராம கிருஷ்ணரோ அவருடைய தோளில் ஏறி உட்கார்ந்து கொண் டார். ஸ்ரீராமகிருஷ்ணரின் உடம்பு வைஷ்ணவ சரணின் உடல்மீது பட்டவுடனே சொற்களால் விவரிக்க முடியாத ஒரு தெய்விகப் பேரானந்தம் தம் உடல் முழு வதும் பரவி, இதயத்தில் பொங்குவதை வைஷ்ணவ சரண் உணர்ந்தார். தம்மை மிகவும் பாக்கியசாலியாகக் கருதி அள வற்ற மகிழ்ச்சியடைந்து, பெரும் கவிஞூரான அவர் ஸ்ரீராம கிருஷ்ணரைப் புகழ்ந்து சமஸ்கிருதத்தில் அப்போதே சில துதிப் பாடல்களைப் புனைந்து பாடினூர். வைஷ்ணவ சரண் பாடும்போது ஸ்ரீராமகிருஷ்ணரின் முகத்தில் காணப்பட்ட தெய்விக ஒளியும் வைஷ்ணவ சரண் தம் இனிய குரலில் மிக அழகாக அந்தப் பக்திப் பாடல்களைப் பாடிய முறையும், ஸ்ரீராமகிருஷ்ணர் மீது அவர் கொண்டிருந்த உயர்ந்த மதிப்பும் கூடியிருந்த ஒவ்வொருவர் மனத்திலும் தெய்விக ஆனந்தத்தை நிறைத்தது. அதன் பிறகு சிறிது நேரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு உலக நினைவு திரும்பியது. சாதாரண நிலையை அடைந்தார். நிதானமாக நடந்து சென்று மண்டபத்தில் அமர்ந்தார்.

கூட்டம் துவங்கியது. கூடியிருந்த பண்டிதர்களைப் பார்த்துக் கௌரி பண்டிதர், ''வைஷ்ணவ சரண் உண்மை யிலேயே அதிர்ஷ்டசாலி, இன்று அவர் தெய்வத்தின் கருணை

கிடைக்கப் பெற்றிருக்கிறார். இனி ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு அவதார புருஷரா என்ற விஷயம் குறித்து அவரிடம் நான் வாதம் செய்யவே மாட்டேன். அப்படி வாதம் செய்தாலும் நான் நிச்சயம் தோற்கடிக்கப்படுவேன். ஸ்ரீராம கிருஷ்ணர் கடவுள் அவதாரமே என்று வைஷ்ணவ சரண் கூறுவதை நானும் அப்படியே ஏற்றுக்கொள்கிறேன். அவருடைய முடிவுதான் என்னுடைய முடிவும். அது குறித்து வாதமிடுவது வீணான வேலையாகும்'' என்றார்.

கௌரி, வைஷ்ணவ சரணின் அறிவாற்றலைக் கண்டு பயந்து இப்படிப் பேசவில்லை. தாம் அடைந்திருந்த தெய்விகப் பேராற்றல் மூலம் ஸ்ரீராமகிருஷ்ணர் அவதார புருஷர் என்பதை உணர்ந்துகொண்டு விட்டார். கௌரி பண்டிதரைச் சோதனை செய்வதற்காக ஒரு நாள் குருதேவர், ''வைஷ்ணவ சரண் எப்போது பார்த்தாலும் இந்த உடம்பில் (தம் உடம்பைக் காட்டி) கடவுள்தான் அவதரித்திருப்பதாகக் கூறுகிறார். இது முடியக் கூடிய காரியமா? நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டார். இதைக் கேட்ட கௌரி சிந்தனை மிகுந்த முகத்தோடு, ''உங்களைப்பற்றி இவ்வளவுதான் வைஷ்ணவசரண் சொல்லுகிறாரா? அப்படியென்றால் அவர் உங்களைப்பற்றி மிக மிகக் குறைவாகவே கூறுகிறார். நீங்கள் கணக்கிட முடியாத தெய்விக ஆற்றலின் சுரங்கம் என்பது என்னுடைய உறுதியான நம்பிக்கையாகும். அந்த ஆற்றலில் ஏதோ ஒரு சிறு பகுதிதான் அவ்வப்போது அவதார புருஷர்களாக உலகில் தோன்றுகிறது.'' என்றார்.

அதைக் கேட்டுப் புன்சிரிப்போடு ஸ்ரீராமகிருஷ்ணர், ''ஆ! நீங்கள் வைஷ்ணவ சரணையும் மிஞ்சி விட்டீர்கள். அத்தகைய எண்ணம் உங்கள் மனத்தில் உண்டாக நீங்கள் என்னிடம் என்ன அவ்வளவு பெரிய அற்புதத்தைக் கண்டு விட்டீர்கள்?'' என்றார்.

''நான் என் மனத்தில் அதைத் தெளிவாகக் காண்கிறேன். சாஸ்திரங்களும் எனக்குத் துணையாக இருக்கின்றன. யாராவது இது குறித்துச் சவாலுக்கு வந்தால் அதை எதிர்த்து உண்மை என்பதை நிரூபிக்கவும் தயாராக இருக்கிறேன்'' என்றார் கௌரி.

''நல்லது. நீங்கள் அப்படிச் சொல்லுகிறீர்கள். என்னை உண்மையாக நம்புங்களேன். எனக்கு அப்படி எதுவும் தெரியவில்லை'' என்றார் ஸ்ரீராமகிருஷ்ணர் சிறு பையனைப்போல்.

இவ்வாறு ஸ்ரீராமகிருஷ்ணரைச் சோதிக்க வந்த இரண்டு பெரிய அறிஞர்களும் கடைசியில் ஸ்ரீராமகிருஷ்ணரிடமே சரணடைந்து விட்டார்கள்.

இது ஸ்ரீராமகிருஷ்ணர் பைரவியைச் சந்தித்த பிறகு நடந்த மிக முக்கியமான ஒரு நிகழ்ச்சியாகும். இந்த நிகழ்ச்சியும் இதைத் தொடர்ந்து நம் கவனத்திற்குக் கொண்டு வரப்படாத பல நிகழ்ச்சிகளும் மேலும் மேலும் பைரவிக்கும் ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் இடையே மிக ஆழ்ந்த உறவை ஏற்படுத்தியது. ஸ்ரீராமகிருஷ்ணர் மிகக் கடினமான தாந்திரிக சாதனையைப் பழக அவரைத் தம் குருவாக ஏற்றுக் கொண்டார். இந்தக் குருவின் மனப்போக்கே அதிசயமான இந்தச் சீடரோடு பழகியதன் மூலம் நாளடைவில் மிகவும் மதிக்கத் தக்க அளவு வளர்ச்சி அடைந்தது. அதனைப் பிறகு காண்போம்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் வரலாற்றில் இந்தக் காலகட்டத்தைப் பற்றி ஒரு பெரிய சந்தேகமும், அவர் செயலில் விசித்திர போக்கும் நமக்குத் தோன்றக் கூடும். அது அவர் ஒரு பெண்ணைக் குருவாக ஏற்றுக் கொண்டதாகும். பிற்கால வாழ்வில் பக்தர்களுக்குத் தம் உபதேசத்தின் சாரமாக, 'பெண்ணையும் பொன்னையும் நீக்கி விடுங்கள்' என்றும் 'கடவுளைக் காண்பதற்காகச் செய்யும் சாதனையில் பெண்ணே பெருந்தடை' என்றும் கூறியவர் இப்படி ஒரு பெண்ணையே குருவாகக் கொண்டது மிகவும் ஆழ்ந்து சிந்திப்பதற்குரிய செய்தியாகும். தம்முடைய ஆண் பக்தர்களைப் பெண்களோடு எந்த உறவும் வைத்துக்கொள்ள வேண்டாம் என்றவர் தாமே ஒரு பெண்ணை . ஆன்மிக குருவாகக் கொண்டு அவருடைய காலடியில் அமர்ந்து உபதேசங்களைக் கேட்கத் துவங்கினார். இதன் மூலம் அவர், ஒருவனுடைய ஆன்மிக முன்னேற்றத்துக்குப் பெண் எந்த வகையிலும் தடையில்லை. ஆனால் அவளை எந்த நோக்கில் பார்க்கிறானோ அந்த நோக்கில்தான் தடை இருக்கிறது என்பதை உணர்த்தினார். ஒருவன் ஒரு பெண்ணை அவளுடைய வெறும் உடலழகிற்காக மட்டும் விரும்பினால், அவள் அவனை நாசப் படுத்தி விடுவாள். அதற்குப் பதில் அவளைத் தெய்வ வடிவமாகவும், உலகின் தாயாகிய அன்னை காளியின் வடிவமாகவும் பார்த்தானானால் அவள் உலக பந்தங்களை எல்லாம் அறுத்து நாம் பேரின்பம் காணத் துணை செய்வாள். இந்த உலகத்தில் பெண்ணை முழுக்க முழுக்க வெறுத்து ஒதுக்கி விட முடியாது. அவர்கள் துணையில்லாமல் வாழ்ந்து

விடவும் முடியாது. மனத்தில் ஆண்-பெண் என்னும் வித்தியாசம் இருக்கும்வரை நீங்கள் எங்குச் சென்றாலும் பெண்களை விலக்க முடியாது. அந்த எண்ணத்தை நீங்கள் தவிர்க்க வேண்டுமானால் காணும் எல்லாப் பெண்களையும் உங்கள் தாயாகவோ, தங்கையாகவோ, மகளாகவோ எண்ண வேண்டும். ஆனால் நீங்கள் அவர்களைக் கேவலப்படுத்தவோ அல்லது உங்களுடைய உடலின் பத்திற்கு வெறும் கருவியாகப் பயன்படுத்தவோ செய்தால் அவர்களுடைய கோபம் எங்கும் உங்களைப் பின் தொடர்ந்து வந்து நாசப்படுத்திவிடும். ஸ்ரீராமகிருஷ்ணர் தம் வாழ்வின் மூலம் ஓர் ஆண் ஒரு பெண்ணிடமும், ஒரு பெண் ஓர் ஆணிடமும் கொள்ள வேண்டிய தூய்மையான உறவு முறையை உலகிற்குக் காட்டினார்.

இரண்டாவதாக ஸ்ரீராமகிருஷ்ணர், பைரவியைச் சந்தித்தபின், அவருடைய சாதனை வாழ்க்கையில் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டுப் புதிய வழியில் அவருடைய சாதனைகள் தொடர்ந்தன. இதுவரை அவர் கடவுளைக் காணும் முயற்சியில் எந்த விதமான வெளி உதவியையும் பெறவில்லை. அவருடைய முதல் குருவான கேனாராம் பட்டாசார்யாவிடமிருந்து மந்திர தீட்சை பெற்றாரே தவிர, அவரிடம் இருந்து வேறு எந்த உதவியும் பெறவில்லை. தம்முடைய மிகக் கடுமையான சொந்த முயற்சியாலும் மனிதர்களின் இதயத்தில் எப்போதும் வீற்றிருக்கும் குருவான பகவானின் வழிகாட்டுதலாலுமே மிகக் குறுகிய காலத்தில், மற்றவர்கள் நினைக்கவும் முடியாத, இந்த உலகின் எல்லைகளை யெல்லாம் கடந்த சத் - சித் - ஆனந்த மயமான இறைவனை நேராகக் கண்டார். கடவுளைக் காண்பதில் ஆவல் கொண்டு, ஈடு இணையற்ற உற்சாகத்தாலும் உலக சுகம் அனைத்தையும் உதறி எறிந்ததாலும் அளவிட முடியாத பொறுமையாலும் தளர்ச்சியே அடையாத உறுதியாலும் தம் மனத்தில் கடவுளைக் காணத் தடையாக இருந்த அனைத்தையும் வெட்டி எறிந்தார். அதன் பயனாகச் சத்தியம் தன்னுடைய முழுமையான தூய்மையோடும் அழகோடும் தம்முள் பிரகாசித்து நிற்பதைக் கண்டார்.

அவருடைய வழியின் மூலம் கடவுளை அடைய வேண்டுமானால் புலன்களை அலைக்கும் எந்தவொரு பொருளையும் நாடிச் செல்வது கூடாது என்பதை நாம் அறிகிறோம். உண்மையில் நமக்கு எது சொந்தமில்லையோ அது எப்போதும் நம்முடையதாகாது. போராட்டத்தின் மூலமே நாம் உண்மை

யில் நமக்கு எது சொந்தமானது என்பதைக் கண்டறி வோம். இந்த மகோன்னதமான உயர்வுக்கு முதலில் வேண்டுவது அளவற்ற உற்சாகம். போராட்டத்தில் இந்த உற்சாகம் மட்டும் இல்லையென்றால், இலட்சியத்தில் உறுதி இல்லையென்றால் வெளியிலிருந்து எதுவும் நமக்குள் ஆன் மிகத்தைப் புகுத்திவிட முடியாது. பரந்த ஆன்மிக ஞானமும், தீர்த்த யாத்திரைகளின் புண்ணியப் பலன்களும், பக்தர்களின் கூட்டுறவும், வணக்கங்களும் வழிபாடுகளும் எந்தவிதப் பயனையும் தந்துவிட முடியாது; சாதாரண மக்களுக்கு இது மிகமிக உயர்ந்ததாகவும் மனத்தில் பதித்துக் கொள்ள முடியாததாகவும் இருக்கலாம். ஆனால் சாஸ்திர அறிவோடு சேர்ந்த முடிவற்ற சாதனைகளை வாழ்க் கையில் கடைபிடிக்கும்போது படிப்படியாக அது கடவுளைக் காணும் இலட்சியத்தை நோக்கி நம்மை வழி நடத்திச் செல்வதை நாம் காணலாம். முனிவர்கள், மகான்கள், ஞானிகள், அவதார புருஷர்களின் வாழ்க்கை நம் மனத்தில் அறியாமையை நீக்கிக் கடவுளிடம் அடக்க முடியாத பேராவலை எழுப்பத் துணை செய்யும்.

பிராம்மணியைக் குருவாகக் கொண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள சாதனைகளை அவர் துணை யோடு தொடர்ந்து கடைப்பிடித்தார். அதன் மூலம் தாம் இவ்வளவு காலமும் குருவில்லாமல் தம் சொந்த முயற்சியில் சாதனை செய்து எதை அடைந்தாரோ, அந்தக் கடவுள் காட்சியையே அடைந்தார். அது குறித்துப் பின்ன னர் காண்போம்.

அடுத்து ஸ்ரீராமகிருஷ்ணர், பைரவி பிராம்மணி ஆகிய இருவரின் சந்திப்பு, உண்மையான பக்தன் கடவுளை வேண்டினால் அவனுக்குத் தேவையான துணையெல்லாம் உரிய காலத்தில் தானே வந்து சேரும் என்பதற்கும் உதாரண மாகும். இது, கடவுளைக் காண நமக்கு மிகவும் வேண்டப் படுவதெல்லாம் கடவுளை அடைய வேண்டும் என்னும் அளவிட முடியாத தாகம் ஒன்றே என்பதற்கும், மற்றவை எல்லாம் வேண்டும்போது தானே கிடைக்கும் என்ப தற்கும் சிறந்த சான்றாக அமைந்துள்ளது. அவசரப் படுவது என்பது நமக்கு எந்தவித உதவியையும் செய்யாது; மாறாக வாழ்வின் அமைதியை அழித்துவிடும்.

அடுத்ததாகப் பைரவி பிராம்மணி, ஸ்ரீராமகிருஷ்ணர் இருவரின் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இந்தச் சந்திப்பின் மூலம் கிடைத்த மற்றொரு பலன் ஸ்ரீராமகிருஷ்ணரைப்

பற்றியும் அவருடைய மகோன்னதமான தெய்விக நிலையைப் பற்றியும் இந்த உலகம் சரியானபடி அறிந்து கொண்டதாகும். அதுவரையில் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றி ஒவ்வொருவரும் தங்களுக்கு இருந்த ஆழமற்ற, சாதாரண அறிவால் அளந்து பார்த்து அவரைப் 'பைத்தியம்' என்றும் மற்றும் பல விதமாகவும் கூறி வந்தனர். மதுரும் இதற்கு விதி விலக்காக இல்லை. ஸ்ரீராமகிருஷ்ணரின் ஆன்மிக வலிமையை மிகப் பெரிய அறிஞர்களும் புரிந்து கொண்டு, அவரை அவதார புருஷர் என்று எல்லோரும் தெரிந்து கொள்ளச் செய்தவர் பிராம்மணியே. அவர் தனியாக அந்தக் கருத்தைக் கூறுவதோடு நின்று விட்டிருந்தாராஞல் ஸ்ரீராமகிருஷ்ணரின் இந்தக் கடவுள் அவதார நிலை யாருக்கும் தெரிந்திருக்காது. அவர், அதை எதிர்ப்பவர்களுக்குச் சவால் விட்டுக் கூட்டத்தைக் கூட்டித் தம் வாதத்தின் மூலம் நிலைநாட்டியபோது, யாராலும் தடை சொல்ல முடியவில்லை. எல்லோரும் ஏற்றுக் கொள்ளும் நிலை ஏற்பட்டது.

பிராம்மணி தட்சிணேசுவரம் வந்த இந்தக் காலம் முதற்கொண்டே ஸ்ரீராமகிருஷ்ணர் கடவுள் அவதாரம் என்று எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டார். இதுவரையிலும் ஒதுக்கப்பட்டும் தனிமைப் படுத்தப்பட்டும் கிடந்த ஸ்ரீராமகிருஷ்ணரின் மகத்தான பெருமையை எல்லோரும் போற்றும்படிச் செய்தவர் பிராம்மணிதான். இந்த உலக ஆன்மிகத்திற்குத் தற்போது தேவையான கருத்துக்களைத் தருவது ஸ்ரீராமகிருஷ்ணரின் இலட்சியம் என்பதை முதன் முதலில் அறிந்தவரும் அவர்தான்; அதே நேரத்தில் அந்த இலட்சியத்திற்குத் தாம் செய்ய வேண்டிய பங்கையும் அவர் நன்கு உணர்ந்திருந்தார். இந்தத் தெய்விக இலட்சியத்தைப் பரப்ப, தம் கடமையைச் சிறிதும் அயராமல் உண்மையான அன்போடும் மிகுந்த ஆற்றலோடும் செய்தார். அதன் மூலம் அந்த இலட்சியம் உலகில் மலர்ந்து உலகைக் காப்பாற்றப் பெரும் சேவை செய்தார்.

கேலிக்கும் கேவலத்திற்கும் ஆளாக்கப்பட்டுக் கிடந்து, திடீரென்று உலகமே வணங்கும் நிலைக்கு உயர்த்தப்பட்ட இந்த மனிதரைப்பற்றி ஒரு வார்த்தை:

பெரும்பாலும் பைத்தியம் என்று எல்லோராலும் கருதப்பட்ட ஒரு மனிதர் அந்த நிலையிலிருந்து திடீரென்று கடவுள் அவதாரம் என்று போற்றும் நிலையை அடைந்தால்

கர்வத்தால் அவரது தலை உடலிலிருந்து கழன்றே போயிருக்கும். ஆனால் அன்னை காளியின் சின்னஞ் சிறு மகனாக இருந்த அவரை இந்தப் புகழாலும் பெருமையாலும் சிறிதுகூட மாற்ற முடியவில்லை. அவர் தம் பார்வை முழுவதையும் அன்னை காளியின் தாமரைத் திருவடிகளில் வைத்தபடி அவளுடைய காட்சிக்கும் வழிகாட்டுதலுக்கும் உபதேசத்துக்குமே காத்துக் கிடந்தார். கடவுள் அவதாரம் என்ற முடி அவர் தலையில் சூட்டப்பட்டது. ஜூலியஸ் சீசர் நாடகத்தில் சீசர் முதலில் தனக்குச் சூட்டப்பட்ட முடியைக் கழற்றிக் கீழே வைத்துவிட்டுப் பிறகு அவனே சூடிக் கொள்வதுபோல் அல்லாமல் ஸ்ரீராமகிருஷ்ணர் தமக்குச் சூட்டப்பட்ட அவதார முடியை நிலையாகவே தம் தலையிலிருந்து கழற்றி வைத்துவிட்டார். பாராட்டுவது, தூற்றுவது; ஏற்றுக் கொள்வது, தள்ளிவிடுவது; இவையெல்லாம் எந்த நேரமும் உலகையெல்லாம் தாண்டிப் பிரம்மத்தில் ஆழ்ந்திருக்கும் ஒருவருக்கு வெறும் மாயையே தவிர, வேறு ஒன்றும் இல்லை.

# 15. தாந்திரிக சாதனைகள்

மனிதன் இயல்பாகவே இன்பங்களை அனுபவிக்க விரும்பு பவன். இன்பங்களைத் துறக்க வேண்டும் என்பதை அவன் வரவேற்பதில்லை. ஆசையே இல்லாத தூய மனத்தோடும், எளிமையோடும் இறைவனை வழிபடுவது அவனுக்குக் கடின மாக இருக்கிறது. அவன் மனத்தில் ஏதோ சில ஆசைகளும், உலக இன்பங்கள் பற்றிய நினைவுகளும் மறைந்தே இருக் கின்றன. அவன் காமத்தையும், பணத்தையும் துறந்தாலும் கூட அவைகளைப் பற்றிய நினைவுகள் அவனது மனத்தை எப் போதும் அலைத்தபடியே இருக்கின்றன. அதனால்தான் சாஸ் திரங்கள் அன்னை காளியை முழுக்க முழுக்க ஆசையற்ற மனத்தோடும் தூய்மையே உருவான சிந்தனையோடும் வழிபட வேண்டும் என்று கூறிய பிறகு, பல்வேறு ஆசைகளைப் பூர்த்தி செய்யக் கோரும் தோத்திரப் பாடல் களையும் வழிபாட்டில் அனுமதித்துள்ளன. மனிதனின் இந்த கைய மனநிலைபற்றி ஆச்சரியப் படுவதற்கு ஒன்றுமில்லை. இது அன்னை காளி தனது படைப்பான உயிர்களிடம் எந்த அளவிற்குப் புலன் இன்பங்களைப் பற்றிய ஆசையை உருவாக்கி இருக்கிறாள் என்பதையே காட்டுகிறது. மிக வும் வேதனைப் படத்தக்க உண்மை என்னவென்றால் அன்னை காளி தன்னுடைய அளவற்ற கருணையின் மூலம் இந்த மாயை வலையிலிருந்து நம்மை விடுவித்தாலொழிய நாமே அதிலிருந்து விடுபட வலிமையில்லாதவர்களாகவே இருக்கிறோம் என்பது தான்.

தாந்திரிக சாதனையைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால், யோகமும் போகமும் ஒருவனுக்குத் தேவை என்ற கருத்துக்கள் உருவான வேத காலத்திற்கு நாம் செல்ல வேண்டும். அந்தக் காலத்தில் மனித வாழ்வின் இலட்சியம் புலன் இன்பங்களை ஒரு வரையறையோடு அனுபவிப்பதாக இருந்தது. பிரார்த்தனை மூலமும் பலிகள் மூலமும் கடவுளைத் திருப்திப்படுத்தி அவர்கள் அதை அடைய நினைத்தார்கள். மனம் இந்த வழிபாடுகளால் ஓரளவு பண்பட்ட பிறகு, கீழான ஆசைகள் எல்லாம் நீக்கப்பட்டபின் அவர்கள் உபநிஷதங்களில் குறிக்கப்பட்டுள்ள மிக உயர்ந்த சாதனைகளில் ஈடுபட்டனர். ஆனால் புத்த மதம்

தோன்றியதும் இவைகளில் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. தூய்மையே உருவான இதயம் கொண்ட துறவிகளுக்கு மட்டுமே பொருத்தமான வழிபாடுகள் எல்லாம் சாதாரண இல்லறத்தார்களுக்கும், அவர்களுடைய ஆற்றல், விருப்பு-வெறுப்புகள் முதலிய எதைப்பற்றியும் கவலைப்படாமல் விதிக்கப்பட்டன. இதன் விளைவாக வேத காலத்தில் மக்கள் மனத்தைப் படிப்படியாகப் புலன் இன்பங்களை மறப்பதற்காகக் கையாளப்பட்ட வழிபாடுகள் மிகவும் இரகசியமான-பயங்கரமான தன்னந் தனியான இடங்களில்-இருண்ட நடு இரவில்-யாரும் பார்க்காமல்-குறிப்பாகக் காவலர்களின் கண்களில் படாமல் செய்யப்படுகின்ற வழிபாடுகளாக மாறின. தாந்திரிக வழிபாடு, வேத வழிபாட்டிற்குப் பதிலாகச் சிவபெருமானால் உண்டாக்கப்பட்டது என்று கூறப்படுவதில் மிகுந்த உண்மை இருக்க வேண்டும். பிற்காலத்தில் வேத வழிபாடு தகுதியற்றவர்களைச் சென்றடைந்து விட்டது. அந்த வழிபாட்டில் யோகமும் போகமும் வேத கால வழிபாட்டைப் போன்று இணைக்கப் பட்டிருந்ததோடு அல்லாமல் வேதகாலத்தில் தனித் தனியாக இருந்த கர்ம காண்டப் பகுதியும் தத்துவப் பகுதியும் மிக நெருக்கமாக இணைக்கப் பட்டிருந்தன.

தாந்திரிகத்தில் ஒவ்வொரு வழிபாட்டு முறையிலும் வழிபடுவோரும், வழிபடு கடவுளும்—அதாவது ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றேயென எண்ணித் தியானம் செய்ய வேண்டும். உதாரணமாக, வழிபட அமர்ந்ததும் முதுகுத் தண்டின் அடிப்பகுதியில் முற்பிறவி வாசனைகளாகப் பாம்பு வடிவில் சுருண்டு அமைந்திருக்கின்ற ஒரு மனிதனின் சக்தி முழுவதும் அங்கிருந்து புறப்பட்டு உச்சந் தலையில் உள்ள ஆயிரம் இதழ்களைக் கொண்ட தாமரையில் வீற்றிருக்கும் ஒளி வடிவாகிய இறைவனோடு இணைந்து விடுவதாக நினைத்துக் கொள்ள வேண்டும். அதன் பிறகு இவ்வாறு இணைந்த சக்தியிலிருந்து தான் பிரிந்ததாகவும், தான் வழிபடும் கடவுளாக அந்த ஒளி மாறுவதாக நினைத்துக்கொள்ள வேண்டும். அந்த வடிவத்தைத் தன்னிலிருந்து வெளியே கொண்டு வந்து தான் வழிபட எதிரே வைத்திருக்கும் உருவத்தோடு ஒன்றி விட்டதாக நினைத்துக் கொள்ள வேண்டும். பிறகு அந்த வடிவத்திற்கு—திருவுருவிற்குப் பூஜை செய்ய வேண்டும். பூஜை செய்து முடித்த பின்னர் மனத்தாலேயே கடவுளைத் தனக்குள் இழுத்துக்கொள்ள வேண்டும்.

இப்போது இந்த வழிபாட்டின் தத்துவத்தை நினைத்துப்

பார்த்தோமானால், மனித வாழ்வின் இறுதியான இலட்சிய மான கடவுளோடு இணைவது என்னும் தத்துவம் பக்தி மூலம் இதில் மிகச் சிறந்த முறையில் இணைக்கப்பட்டுள்ளதை அறிய லாம். தாந்திரிகத்தில் கூறியுள்ள இத்தகைய வழிபாட்டை எங்கோ ஆயிரத்தில் ஒருவர்தான் சரியான முறையில் செய்ய முடியும் என்பது உண்மைதான். ஆனால் எல்லோருமே, முயற்சித்தால் அந்த முயற்சி நிச்சயம் நம் வாழ்வின் குறிக் கோளான இறைவனை நாடி நம்மை நிதானமாக அழைத்துச் செல்லும் என்பதும் உண்மையாகும். எனவே தாந்திரிக சாஸ் திரத்தில் உள்ள ஒவ்வொரு சாதனையும் அல்லது வழிபாடும் சந்தேகமின்றிச் சாதகர் மனத்தைக் கடவுளோடு இணைக்கிறது என்பதை அறியலாம்.

அதோடு தாந்திரிகம் கடவுளின் தாய்மையைப் போதிக் கிறது; பெண்களின் மகோன்னதத்தை உணர்த்துகிறது. வேத வேதாந்தங்களிலோ புராணங்களிலோ இத்தகைய கருத்தைக் காண இயலாது. வேதங்களின் சில பகுதிகளில் இந்தக் கடவு ளின் தாய்மை வழிபாடு மிகவும் ஆரம்ப நிலையில் காணப்படு கிறது. அதாவது கணவன், மனைவியின் உடலைப் புனிதமா னது என்று நினைத்து அதில் இறைவன் இருப்பதாக வணங்க வேண்டுமென்றும், அவ்வாறு வணங்கினால் அவன் நல்ல பிள்ளைகளைப் பெறுவான் என்றும் கூறப்பட்டுள்ளது. தாந்திரிக சாஸ்திரம் இதை மிகவும் விரிவாக்கி ஒரு புதிய வழியில் மிகச் சிறந்த முறையில், குறிப்பிடத் தக்கத் தெளிவான பலன்களோடு, காலத்திற்குப் பொருத்தமாக இதை வளர்த் துள்ளது. இதுதான் பெண்ணையும் மதுவையும் பயன்படுத்தும் வீராச்சார தாந்திரிக சாதனத்தின் தோற்றமாக இருக்கலாம். சாதாரண மனிதனும் வாழ்க்கையின் இன்பங் களைப் பெற வேண்டும் என்று தாந்திரிக வழிபாட்டின் ஆசிரியர்கள் நினைத்தது சரியானதாகும். இன்பங்களை அனு பவிக்கும்போது இன்பத்துக்குரிய அப்பொருள்களில் இறை வனைக் காண வேண்டும். அவ்வாறு செய்வார்களானால் புலன் களுக்கு அவர்கள் அடிமையாக மாட்டார்கள்; சிறிது சிறிதாகப் புலனடக்கம் பெறுவார்கள். எனவே அவர்கள் பெண்களின் உடலை மிகவும் தூயதாக நினைக்க வேண்டும் என்கிறார்கள். ஒருவன் பெண்களை அன்னை காளியின் பல் வேறு வடிவங்களில் ஒன்று என்று உணர்ந்து கொண்டு அவளை மிகவும் மதிப்போடு நடத்த வேண்டும். தாந்திரிகத்தில் பெண் களை மோசமாக நடத்துவது மிகவும் கண்டிக்கப்பட்டுள்ளது.

தாந்திரிக வழிபாட்டைக் கூவக்கியவர்கள், பெண்களைப்

போகப் பொருள்களாக நினைக்காமல், எவ்வாறு தெய்விகமாக நினைக்க வேண்டும் என்று ஆத்மிக சிந்தனையோடு நினைத்துச் செய்தவை எல்லாம் காலம் செல்லச் செல்லப் பாழடைந்து விட்டன. இறைவனை அடைவதற்குப் பதிலாக சிறிய சித்திகளைப் பெற முயன்றனர். இதுதான் தாந்திரிக வழிபாட்டில் மிகவும் பயங்கரமான பேய் பிசாசுகள் பூதங்கள் வழிபாட்டைக்கொண்டு வந்து சேர்த்து இன்று நாம் காணும் மோசமான நிலைக்கு அதைக் கொண்டு வந்து நிறுத்தி இருக்கிறது.

தாந்திரிக வழிபாட்டின் முக்கிய நோக்கம் எப்போதும் போகப் பொருள்களின் மேல் சென்றபடியே, மனிதனைக் கணக்கற்ற பிறப்பு—இறப்புக்களில் பிணைக்கும் புலன்களை அடக்குவதே. கண்ணில் காண்கின்ற ஆசையூட்டும் பொருள்கள் அனைத்தையும் கடவுளின் வடிவங்களாகக் கொள்ள வேண்டுமென்றும் அவ்வாறு கொண்டால் அவைகளின்மேல் உள்ள கண்மூடித் தனமான ஆசைகள் நீங்கி விடும் என்றும் கூறப்படுகிறது. சாதகர்களின் தகுதிக்கேற்ப தாந்திரிக சாதனை, பசு**பா**வம் அதாவது மிருக இயல்பினர்க்கு உரியது; வீர**பா**வம் அதாவது வீர இயல்பினர்க்குரியது; திவ்ய **பா**வம் அதாவது தெய்விக இயல்பினர்க்குரியது என்று மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

முதலில் கூறிய சாதகர்களிடத்தில் விலங்கு குணம் மிகுந்திருக்கும். அவர்கள் முடிந்த வரையில் ஆசையை மூட்டும் எல்லாப் பொருள்களிலிருந்தும் விலகி ஜபம் முதலான சாதனைகளில் மிக மிகத் தூய்மையான மனத்தோடு ஈடுபட வேண்டும். இரண்டாவது வகையான சாதகன் முன்னதை விடச் சற்று உயர்ந்தவன். அவனிடம் இறை பக்தி மிகுந்து, சிற்றின்ப ஆசைகள் அனைத்தையும் அவன் கடந்திருப்பான். அவனுக்கு இந்த இன்பக்கவர்ச்சிகள் ஒவ்வொன்றும் கடவுளைக் காணும் ஆவலையே மிகுதியாக்கும். அவர்கள் ஆசையூட்டும் பொருள்களின் நடுவே வாழ்ந்து கொண்டு மனம் சிறிதும் கவரப்படாமல் கடவுளையே நினைத்துத் தியானம் செய்ய வேண்டும். மூன்றாவது வகையான சாதகர்கள் கடவுளிடம் கொண்டுள்ள அளவற்ற பற்றாலும் பக்தியாலும் இந்த உலக ஆசைகள் அனைத்தையும் கடந்தவர்கள். அவர்களிடம் உண்மை, மன்னிப்பது, கருணை, மனநிறைவு முதலிய தெய்விகக் குணங்கள் மூச்சுவிடுவது போன்று அவ்வளவு இயல்பாக இருக்கும். எனவே இதிலிருந்து தாந்திரிக சாதனை மூலம் சிறந்த பலனைப் பெறுவதற்கான அடிப்படையாகச்

சாதகனிடம் இருக்க வேண்டியது புலனடக்கமே என்பதை அறியலாம்.

தாந்திரிக வழிபாட்டின் ஆதிக்கம் வைஷ்ணவம் உள்பட இந்தியாவில் உள்ள எல்லா சமய நெறிகளிலும் உள்ளது. வைஷ்ணவம் மட்டும் சில மாறுதல்களோடு தாந்திரிகத்தை ஏற்றுக்கொண்டது. அவர்கள் துவைத உபதேசம் மனிதனுக்கு மிகுந்த நன்மையைத் தரும் என்று எண்ணுவதால் அதைக் கூறும் தாந்திரிகப் பகுதிகளுக்கு மட்டுமே மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கின்றனர். உதாரணமாக தாந்திரிக சாதனத்தின் மந்திரங்களுக்கும் வழிபாட்டு முறைகளுக்கும் அவர்கள் அதிக முக்கியத்துவம் தருகின்றனர். அவ்வழிபாட்டில் ஒரு புதிய சக்தியைச் செலுத்தி மக்களை அவரவர்களுடைய ஆசைக்கேற்ப வழிபடும்படிக் கூறுகின்றனர்.

தாந்திரிக வழிபாட்டில் இறைவன் தனக்குப் படைக்கப் படுவனவற்றை அருள் நோக்கால் ஏற்றுக் கொள்வதாகக் கூறப்படுகிறது. அந்தப் பிரசாதத்தை உண்ணும் பக்தன் நாளடைவில் தூயவனுகிருன். ஆனுல் இதனைச் சற்று மாற்றி இறைவன் அருள் நோக்கால் ஏற்றுக் கொள்வது மட்டுமின்றி, பக்தி முதிர்ந்தால் நேரில் வந்தும் உண்பான் என்ற கருத்தை வைஷ்ணவ ஆசாரியர்கள் நிறுவினர். வைஷ்ணவர்கள் தாந்திரிக வழிபாட்டில் புகுத்தியுள்ள மாறுபாடுகளில் மிக முக்கியமானது, பசுபாவ வழிபாட்டில் அவர்கள் புகுத்தியுள்ள அடிப்படையான வேறுபாடாகும். சாதகர்களின் உணவு, வாழ்க்கை முறை முதலிய ஒவ்வொன்றிலும் கடினமான வழிகளை அவர்கள் புகுத்தியுள்ளனர். கடவுளைக் காண, ஜபம் செய்வதை மிக அதிகமாக அவர்கள் வலியுறுத்துகிருர்கள். நாளடைவில் இந்த வழிபாட்டிலும் தீமைகள் நுழைந்து விட்டன. வழிபாட்டைத் துவக்கிய ஆசாரியர்களின் உபதேசத்தின் உயர்வை மறந்து, தங்கள் இழிவான ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் வழிகள் இதில் புகுந்து விட்டன. கடவுளிடம் பக்தன் கொள்ள வேண்டிய அன்பிற்கு உதாரணமாக ஒரு காதலனும் காதலியும் கொள்கின்ற அன்பை உருவகமாக ஆசாரியர்கள் வைத்தனர். ஆனுல் பிற்காலத்தில் வந்தவர்களோ அதை நடைமுறை அன்பாக ஏற்றுக்கொண்டு ஆண்கள் பெண்களின் உடல் உறவுக் காதலாக அதை மாற்றி பழைய புனிதமான வழிபாட்டை நாசப்படுத்தி விட்டனர். இது எல்லாச் சமயங்களிலும் நடைபெற்று வருகிற நிகழ்ச்சிதான்.

மேற் கூறிய காரணத்தால் தாந்திரிக வழிபாட்டையே மக்கள் பொதுவாக மிக மிகக் கேவலமான வழிபாடாகத் தூற்ற ஆரம்பித்தனர். ஆனால் உண்மையில் தூற்றப்பட வேண்டியது அதைக் கைக்கொண்ட இழிந்த மனிதர்களையே தவிர தூய்மையான வழிபாட்டையல்ல. தாந்திரிக சாதனையை மதுவோ, பெண்கள் உறவோ இல்லாமல் ஸ்ரீராம கிருஷ்ணர் பின்பற்றியதுபோல் பின்பற்றலாம். ஸ்ரீராம கிருஷ்ணரை மிகச் சிறந்த ஆன்மிக உலக குருவாக மாற்றவே அன்னை காளி இந்தத் தாந்திரிக சாதனைகளையும் அவர் பின்பற்றும்படிச் செய்தாள்.

பைரவி ஸ்ரீராமகிருஷ்ணரைக் கண்டதிலிருந்தே அவரிடம் தாயின் பாசத்தைக் கொண்டதை முன்பே கண்டோம். அவருக்கு ஸ்ரீராமகிருஷ்ணர் அவதார புருஷர் என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தாலும், தாய்ப்பாசத்தால் ஸ்ரீராமகிருஷ்ணரின் அந்த மகோன்னத நிலையை மறந்துவிட்டுத் தம்முடைய சின்னஞ்சிறு மகன்போல அவரை நடத்தத் தலைப்பட்டார். ஆனால் காளி அவருக்குச் செய்யுமாறு கூறிய தெய்விகக் கட்டளையை அவர் மறக்கவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணரின் ஆன்மிக குருவாக இருந்து தம்மால் இயன்ற வரை மிகச் சிறந்த சாதனைகளில் அவரைப் பயிற்றுவித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் அன்னை காளியிடம் அனுமதி பெற்ற பின்பே பைரவியிடம் தாந்திரிக சாதனையைப் பழக தொடங்கினார். அவருக்கே இயல்பாயுள்ள உற்சாகத்தோடு அந்தச் சாதனைகளில் ஈடுபட்டார். பைரவி இந்த வழிபாட்டிற்கான, கிடைப்பதற்கரிய பல பொருள்களை ஒன்று சேர்த்து அவைகளைத் தட்சிணேசுவரக் கோயிலுக்குக் கொண்டு வருவார். தாந்திரிக சாஸ்திரப்படி பஞ்சவடியிலும் கோயிலின் வடக்குக் கோடியில் இருந்த வில்வ மரத்தின் அடியிலும் இரண்டு ஆசனங்கள் அமைக்கப்பட்டன. இந்தக் காலத்தைப் பற்றிக் குருதேவர் பிற்காலத்தில் குறிப்பிடும்போது, பிராம்மணி இந்தச் சாதனைகளுக்குத் தேவையான, தாந்திரிக சாஸ்திரங்களில் குறிக்கப்பட்ட மிக அரிதான பொருள்களைத் தட்சிணேசுவரத்திலிருந்து மிகத் தொலைவான இடங்களுக்குச் சென்று திரட்டி வருவார். இரவு வந்ததும் இந்த இரண்டு ஆசனங்களில் ஒன்றில் அமருவார். நானும் அங்குச் செல்வேன். அன்னை காளியை வழிபட்ட பின் அவர் சொல்கிற முறைப்படி நான் தியானம் செய்யத் துவங்குவேன். என் ஜபமாலையில் மணிகளை உருட்டத்

துவங்கிய உடன் பரவசநிலையில் என்னையே மறந்து விடுவேன். அப்போது நான் கண்ட பல்வேறான தெய்விகக் காட்சிகளை இப்போது என்னால் சொல்ல முடியாது. அவை மிக வேகமாக ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றி மறைந்தன. அந்தச் சாதனைகளின் விளைவுகளை என்னால் மிகத் தெளிவாக உணர முடிந்தது. பைரவி தாந்திரிக சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள அறுபத்து நான்கு தாந்திரிக சாதனைகளிலும் என்னைப் பழக்கினார். இவைகளில் பெரும்பாலானவை மிகமிகக் கடுமையானவை. செய்பவர்களை நெறி தவறச்செய்து மிக மிகக் கேவலமான நிலையில் கொண்டு போய் அமுத்தக் கூடியவை சில சாதனைகள். ஆனால் அன்னை காளியின் அளவற்ற கருணையால் சிறிதும் தோல்வியின்றி நான் இந்தச் சாதனைகள் அனைத்தையும் வெற்றிகரமாகச் செய்து முடித்தேன்' என்றார்.

மிகக் கடுமையான இந்தச் சாதனைகளை ஸ்ரீராமகிருஷ்ணர் மிகத் தூய்மையோடும் மிகுந்த வெற்றிகரமாகவும் முடித்தது, அவருடைய ஈடு இணையற்ற உடலாசைகளை ஒழித்த தன்மையைக் காட்டுகிறது; மாயையை முழுமையாகக் கடந்து எல்லையற்ற சத்தியத்தில் நிலை பெற்று விட்டதைக் காட்டுகிறது. இந்த உலகத்தில் அழிந்து போகும் மாயா ஜாலங்கள் எல்லாம், காளியிடம் உறுதியாக ஒரே முகமாக நிலைத்து விட்ட அவரது பக்தியை ஒன்றும் செய்ய இயலவில்லை. மிகக் கடினமான சாதனைகள் அனைத்தையும் மிக மிக வேகமாகக் கடந்து உயர்ந்த நிலையை அவர் எளிதில் அடைந்தார். அவருடைய மனம் எப்போதும் மிக உயர்ந்த தெய்விக எல்லையில் நின்று, காணும் ஒவ்வொரு காட்சியையும் அன்னையின் காட்சியாகவே அவருக்குக் காட்டியது. இந்த நிலையில் அவருக்கு அண்ட சராசரங்கள், உண்மையில் எப்படி இருக்கிறதோ அப்படியே காட்சி தந்தன. தாந்திரிக சாதனைகளை எல்லாம் சிறப்பாகச் செய்து முடிக்கும் சாதகர்களுக்கு இயல்பாகவே உண்டாகும் அனுபவமானகலப்பற்ற பேரின்பஉணர்வு எப்போதும் அவர் மனத்தில் ஊறியபடியே இருந்தது. எல்லையற்ற, தீமை ஏதும் இல்லாத தெய்விக அழகு வெளியில் அவர் மிதந்தார். இதைக் கண்ட பிராம்மணி குருதேவர் இப்போது முழுமையான யோகியாகி விட்டார் என்றும் மிகமிகச் சிலரால் மட்டுமே வெற்றிகரமாகச் செய்யக் கூடிய தாந்திரிக சாதனைகளை மிகச் சிறப்போடும் வெற்றியோடும் செய்து முடித்து விட்டார் என்றும் கூறினார். பெண்ணையும் மதுவையும் பயன்படுத்த வேண்டிய இந்தக் கடினமான சாதனை முழுவதும் ஸ்ரீராமகிருஷ்ணர்

எல்லாப் பெண்களிடத்தும் தாய்மையையே கண்டு அவை களைத் தொடாமலேயே மிகுந்த வெற்றி பெற்றார்; காரணம் (மது) என்ற பெயரைக் கேட்ட உடனே பிரபஞ்சத்தின் முதற் காரணமாகிய காளியை எண்ணி உலகையே மறந்து தியானத்தில் ஆழ்ந்துவிடுவார்.

இக்காலத்தில் புனிதம், புனிதமற்றது என்ற வேற்று மையே அவரிடமிருந்து நீங்கிவிட்டது. விலைமாதுகூட அவருக்கு அன்னை காளியின் வடிவாகத் தோன்றினாள். மற்றவர்கள் கேட்டால் அவர்கள் மனத்தை மிகவும் புண்படுத்திக் கோபத்தால் பொங்கி எழச் செய்கின்ற வார்த்தைகள் எல் லாம் அவருக்குப் பொருள் இல்லாத வெறும் ஓசைகளின் கூட்டமாகவே தோன்றின. அதில் உள்ள ஒவ்வோர் எழுத் தும் சாஸ்திரங்கள் கூறுவதுபோல் அன்னை காளியை நினைவு படுத்தி அவரைச் சில நேரங்களில் ஆழ்ந்த சமாதியில் மூழ்கச் செய்தது.

உள்ளும் வெளியிலும் ஞானமாகிய நெருப்பால் தாம் சூழப்பட்டிருப்பதை அவர் உணர்ந்தார். இந்தக் காலத்தில் அவருடைய மிகவும் வியப்புக்குரிய அனுபவம் குண்டலினி சக்தி மூலாதாரத்திலிருந்து உச்சந்தலையில் உள்ள சஹஸ் ராரத்திற்கு ஏறிச் சென்ற அனுபவமாகும். இதை ஸ்ரீராம கிருஷ்ணர் பிற்காலத்தில் தமக்கே உரிய பாணியில் கீழ் வருமாறு கூறியுள்ளார்: ''ஏதோ ஒன்று 'டிங்' என்ற ஒலியுடன் உள்ளங் காலிலிருந்து உச்சந் தலைக்குச் செல்லும். அது தலையை அடையும் வரை நான் நினைவோடு இருப்பேன். தலையை அடைந்த மறு விநாடியே வெளி உலகத்திற்குப் பிணமாகி விடுவேன். கண்கள் காண்பதும் காதுகள் கேட்ப தும் கூட நின்றுவிடும். பேசுவது பற்றிச் சொல்லவே வேண்டி யதில்லை. யார் பேசுவது? 'நான்' 'நீ' என்னும் வேற் றுமை போய்விடும். சில நேரங்களில் அந்த விசித்திரமான சக்தி முதுகுத் தண்டில் ஏறிச் செல்லும்போது நான் காண் கின்ற-உணர்கின்ற எல்லாவற்றையும் உங்களுக்குச் சொல்ல வேண்டுமென்று நினைப்பேன். அது இது வரையிலும் ... அல்லது இது வரையிலும்... வரும்வரைகூட (மார்பையும் கழுத்தையும் சுட்டிக் காட்டி) பேசுவதற்கு முடியும். அதுபற்றிச் சொல் வேன். ஆனால் இதைத் (கழுத்து) தாண்டியதும் மறுவிநாடியே யாரோ என் பேச்சை நிறுத்தி விடுகின்றனர். நானும் நிலை தடுமாறிப் போகிறேன். பிறகு நினைவு வந்ததும் குண்ட லினி சக்தி தொண்டையைத் தாண்டிச் சென்றதும் என்ன நடக்கிறது என்று சொல்ல எண்ணுவேன். அந்த எண்ணம்

தோன்றியதுமே மனம் ஒரே பாய்ச்சலில் தொண்டையைத் தாண்டிச் சென்று விடுகிறது. அவ்வளவுதான்; விஷயமே முடிந்து விடுகிறது.''

குருதேவர் பல முறை குண்டலினி தொண்டையைத் தாண்டிச் சென்றால் ஏற்படும் நிலை குறித்துச் சொல்ல முயன்றார். ஆனால் ஒவ்வொரு முறையும் தோல்வியே கண்டார். ஒரு நாள் சொல்லியே தீருவது என்ற உறுதியோடு அப்படியே அந்தச் சக்தி தொண்டையை அடையும் வரை சொல்லிக்கொண்டே வந்தார். பிறகு ஆறாவது இடமான புருவ மத்தியில் கையை வைத்தபடி, ''இங்கே மனம் சென்றடைந்ததும் பரமாத்மாவின் காட்சி கிடைக்கிறது. மனம் சமாதியில் மூழ்குகிறது. ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் இடையே இங்கு மிக மெல்லிய திரையே உள்ளது. பிறகு இது போல் பார்க்கிறார்....'' என்று அதுபற்றி விரிவாகச் சொல்ல முயன்று கொண்டிருக்கும் போதே சமாதியில் மூழ்கிவிட்டார். மனம் அங்கிருந்து சிறிது கீழே இறங்கி வந்ததும் அதுபற்றிக் கூற மறுபடியும் முயன்றார். ஆனால் மீண்டும் மீண்டும் சமாதியில் மூழ்கிவிட்டார். பல முறை இவ்வாறு முயன்று கண்களில் நீர் வழிய, ''ஓ! நான் சத்தியமாக எல்லாவற்றையும் உங்களுக்குச் சொல்லிவிட விரும்புகிறேன். ஆனால் அன்னை அனுமதிக்கவில்லை. என் வாயை அடைத்துவிடுகிறாள்'' என்றார்.

குண்டலினி தலைக்குச் செல்லும் பல வேறு விதங்களைப் பற்றி அவர் . கூறும்போது, ''ஆ! 'டிங்' என்ற உணர்ச்சியோடு எழும் குண்டலினி ஒரே மாதிரியான வேகத்தோடு எப்போதும் சஹஸ்ராரத்திற்குச் சென்று விடுவதில்லை. சாஸ்திரங்களில் குண்டலினி சக்தி ஐந்து வகையாக மேலேறிச் செல்லும் எனக் கூறப்பட்டுள்ளது. முதலில் எறும்பு போல் ஊர்ந்து செல்வது—அதாவது எறும்புகள் வாயில் உணவை வைத்துக்கொண்டு ஊர்ந்து செல்வது போல் பாதத்திலிருந்து மேலாக நிதானமாகச் செல்லும். அது தலையை அடைந்ததும் சாதகன் சமாதி நிலையில் ஆழ்ந்து விடுவான். இரண்டாவது, தவளை செல்வது போன்றது. தவளை ஒரே மூச்சில் இரண்டு மூன்று குதி குதித்துக் கொஞ்ச நேரம் ஓய்வு கொள்ளும். பிறகு அங்கிருந்து இரண்டு மூன்று முறை குதித்து மறுபடியும் கொஞ்ச நேரம் நிற்கும். இதுபோல் குறிப்பிட்ட இடத்தைச் சென்று சேரும் வரை குதித்துச் செல்லும். அது போலவே உள்ளங் காலிலிருந்து தலைவரை குண்டலினி சக்தி செல்லும். மூன்றாவது, பாம்புபோல் வளைந்து வளைந்து செல்

வது. பாம்பு தரையில் வளைந்து வளைந்து வேகமாக ஓடுவதுபோல் இந்த முறையில் குண்டலினி இப்படியும் அப்படியுமாக வேகமாக அசைந்து அசைந்து மேலே செல்லும் சமாதியும் ஏற்படும். நான்காவது, பறவை பறப்பது போன்றது. பறவை ஓரிடத்திலிருந்து மற்ற இடத்திற்கு சிறகை விரித்துக்கொண்டு சில நேரத்தில் உயரத்திலும் சில நேரத்தில் தாழவும் ஆனால் எங்கும் நில்லாமல் பறந்து செல்வது போல, குண்டலினி சக்தி செல்லும். கடைசியாக, குரங்கு செல்வது போன்றது. ஒரு மரத்திலிருந்து இன்னொரு மரத்திற்குச் செல்லும் குரங்கு இடையே உள்ள பெருந்தூரத்தை ஒரே தாவாகத் தாவி அடைவது போல் குண்டலினி சஹஸ்ராரத்தைச் சென்றடையும். உடனே யோகி சமாதி நிலையில் மூழ்கி விடுவான்'' என்று கூறியுள்ளார்.

இதே அனுபவங்களை அவர் வேதாந்தக் கொள்கையின்படி வேறு சமயங்களில் கீழ்வருமாறு விளக்கியுள்ளார். ''வேதாந்தம் நம் உடலில் ஏழு பூமிகளை—இடங்களைப் பற்றிக் கூறுகிறது. அதில் ஒவ்வோர் இடத்தை மனம் அடையும் போது சாதகன் ஒவ்வொரு வகையான காட்சியைக் காண்பான். மனித மனம் பொதுவாக தன்னுடைய செயல்களை எல்லாம் முதல் மூன்று பூமிகளுக்குள்ளாகவே நிறுத்திக் கொள்ளும் இயல்புடையது. பொதுவாகப் பசி தாகம் போன்ற உணர்ச்சிகளோடு நிறுத்திக் கொள்ளும். ஆனால் இதயத்தில் உள்ள நான்காவது பூமியை அடையும்போது சாதகன் தெய்விக ஒளியைக் காண்கிறான். இந்த இடத்திலிருந்து அவன் மறுபடியும் கீழ்நோக்கிப் போய் விடும் வாய்ப்பு உண்டு. மனம் ஐந்தாவது பூமியான தொண்டைக்கு வந்ததும் அவனால் கடவுளைத் தவிர மற்ற எதைப்பற்றியும் பேச முடியாது. நான் அந்த நிலையில் இருக்கும்போது யாராவது உலக பேச்சைப் பேசினால் பெரிய தடியைக் கொண்டு என் தலைமேல் மிகப் பயங்கரமாக அடிப்பது போல் இருக்கும். அப்படிப்பட்ட லௌகிகர்கள் வரும்போது பஞ்சவடிக்குள் ஓடி ஒளிந்து கொள்வேன். வாயைத் திறந்து கொண்டு விழுங்க வரும் பெரும் பள்ளங்கள் போலவே என் உறவினர்கள் எனக்குத் தோன்றுவார்கள். அவர்களுக்கு முன்னால் எனக்கு மூச்சுத் திணறும். ஏறக்குறைய செத்தே போய் விடுவேன். அவர்கள் அங்கிருந்து போன பின்பே நிம்மதி அடைவேன். இந்த நிலையை ஒரு சாதகன் அடைந்தாலும்கூட வழி தவற நேரலாம். அதனால் அவன் எப்போதும் விழிப்போடு இருக்க வேண்டும். புருவ மத்தியில்

இருக்கின்ற ஆறுவது பூமிக்குப் போய்விட்டால் அவன் பயப்படத் தேவையில்லை. எல்லா அபாயங்களையும் அவன் தாண்டி விடுவான். அங்கே அவன் பரமாத்மாவின் காட்சியைப் பெற்றுச் சமாதியில் மூழ்கிவிடுவான். அந்த இடத்திற்கும் சற்று மேல் உள்ள கடைசி இடமான சஹஸ்ராரத்துக்கும் இடையே ஒரு மெல்லிய திரைதான் உள்ளது. அவன் பரமாத்மாவிற்கு மிக நெருங்கி இருப்பதால் பரமாத்மாவோடு இணைந்து விட்டதாகவே நினைக்கிறான். ஆனால் உண்மையில் பரமாத்மாவோடு இணையவில்லை. இந்நிலையிலிருந்து மனம் ஐந்தாவது நிலைக்கு இறங்கி வரும். அதிகமாகப் போனால் நான்காவது நிலைக்கு இறங்கி வரும். அதற்குக் கீழ் இறங்காது. சாதாரண சாதகர்கள் இந்த நிலையிலிருந்து கீழ் இறங்கவே முடியாது. இருபத்தொரு நாட்கள் இதே நிலையில் தொடர்ந்து சமாதியிலிருந்த படியே, இடையில் உள்ள மெல்லிய திரையைக் கிழித்தபடி பரமாத்மாவோடு இணைந்து விடுவார்கள். சஹஸ்ராரத்தில் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் இணையும் இந்த நிலையை வேதாந்தம் ஏழாம் பூமிக்குச் செல்வது என்று கூறும்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் இச்சாதனை காலத்தில் அண்ட சராசரங்களை உற்பத்தி செய்யும் மகா காரணமாகிய மகாயோனி, மிகப் பெரிய ஒளிமயமான முக்கோண வடிவில் இருப்பதாகவும், அது ஒவ்வொரு விநாடியும் முடிவேயில்லாமல்—கணக்கற்ற அண்ட சராசரங்களையும் உயிர்களையும் படைத்துக் கொண்டிருப்பதையும் கண்டார். அவர் அடிக்கடி அண்டங்கள் அனைத்திலுமுள்ள கணக்கற்ற ஓசைகளின் திரட்சியால் உண்டாகிற மிகப் புனிதமான 'ஓம்' என்னும் அனாகத ஒலியைக் கேட்டார். சிலர் இது குருதேவர் தம்மிடமிருந்தே கேட்டார் என்றும் அந்த நேரத்தில் பறவைகள், விலங்குகள் முதலியன பேசும் மொழிகளையும் அவர் புரிந்து கொண்டார் என்றும் கூறுகிறார்கள்.

இந்தத் தாந்திரிக சாதனைகளின் விளைவாக மனிதனைக் கடவுளாகவே—எல்லாம் வல்லவனாக்கும் அணிமா, மகிமா, லகிமா, கரிமா முதலான எட்டு வகையான சித்திகளையும் ஸ்ரீராமகிருஷ்ணர் பெற்றார். அன்னை காளி ஒரு காட்சியின் மூலம் அவருக்கு இந்தச் சித்திகள் யாவும் மிகவும் கேவலமானவை என்பதைக் காட்டினாள். அந்த நேரத்திலிருந்து அவர் இந்தச் சித்திகளைப் பற்றிய பேச்சை எடுத்தாலே மிகுந்த அருவருப்புக் கொள்பவராக மாறிவிட்டார். தம் பக்தர்களை அதுபற்றி மிகவும் எச்சரிக்கவும் தொடங்கினார்.

இந்த நேரத்தில்தான் அவர், எல்லாம் வல்ல இறைவன் இந்த அண்டங்களை எல்லாம் தன்னிலிருந்து வெளிப்படுத்தியும் காத்தும் கரைத்தும் கொள்ளும் தெய்விக மாயையைக் காட்சியில் கண்டார்: பஞ்சவடியில் அவர் அமர்ந்திருந்தார். அப்போது கங்கையிலிருந்து ஈடு இணையற்ற அழகிய ஒரு பெண் நிதானமாக நடந்து வந்தாள். அருகில் வந்ததும் அவள் கருவுற்றிருப்பதைக் கண்டார் ஸ்ரீராமகிருஷ்ணர். கொஞ்ச நேரத்தில் மிக அழகான குழந்தையைப் பெற்றெடுத்த அவள் அளவற்ற பாசத்தோடும், மென்மையோடும் அந்தக் குழந்தைக்குப் பாலூட்டினாள். சிறிது நேரம் கழிந்ததும், அந்தப் பெண்ணிடம் இருந்த பாசமும் அன்பும் முற்றிலும் மாறிவிட்டது. இப்போது அவள் பயங்கரமான வடிவத்தை எடுத்துக் கொண்டாள். கோரமான தன் பற்களிடையே குழந்தையைப் போட்டுக் கடித்துத் துண்டு துண்டுகளாக்கி விழுங்கி விட்டாள். பிறகு மெல்ல நடந்து சென்று கங்கைக்குள் மறைந்து விட்டாள். இதுதான் உலக மக்களைத் திரும்பத் திரும்பப் பிறப்பு, வளர்ச்சி, இறப்பு என்று புரிந்து கொள்ள முடியாத வகையில் உயிர்களைக் கவர்ந்து இழுத்துத் தன் தொழில் நடத்தி வருகின்ற இறைவனின் மாயையாகும்.

இந்தக் காலத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் கணக்கற்ற தேவதைகளைக் கண்டார். பலர் அவரோடு பேசினார்கள்; பல வழிகளில் அவருக்கு அறிவுரைகள் கூறினார்கள். இவர்களைப் பற்றிக் கூறும்போது, ''எல்லாத் தேவதைகளுமே அளவற்ற அழகுடையவர்களாக இருந்தார்கள். என்றாலும் சோடசி எனப்படும் ராஜ ராஜேஸ்வரி அழகில் எல்லாரையும் மிஞ்சி விட்டாள்!'' என்று கூறுவது வழக்கம்.

தாந்திரிக சாதனையில் அவர் பெற்ற இந்த வெற்றியின் விளைவாக அவர் ஒரு குழந்தை போலாகி விட்டார். அவரால் உடலின்மீது ஆடையை அணியவோ பூணூலைப் போட்டுக் கொள்ளவோ முடியவில்லை. அவர் எவ்வளவு முயன்றாலும் அவை அவர் உடலிலிருந்து தாமே நழுவி விடும்.

இதிலிருந்து சில காலம், காண்போர் அனைவரையும் கவரும் வண்ணம் அவரது மேனியழகு மிளிர்ந்தது. கையில் அணிந்திருந்த தங்க ரட்சைக்கும் உடலுக்கும் வேறுபாடு காணமுடியாத வகையில் அவரது உடல் பொன்னிறமாயிருந்தது. ''இவ்வுடலின் அழகைக் கண்டவர்கள் அப்படியே மெய்ம்மறந்து நிற்பார்கள். எனது மார்பும் முகமும் எப்போதும் சிவந்தே காணப்படும். உடம்பு முழுவதும் ஒளிர்

வதுபோல் தோன்றும். அதனை மறைக்க எப்போதும் என் உடலை ஒரு தடித்த துணியால் மூடிக்கொள்ள வேண்டியிருந்தது. 'அம்மா, புற அழகை நீக்கிவிட்டு எனக்கு உன் அக அழகைக் கொடு. தூய உள்ளத்தைக் கொடு, தாயே!' என்று நான் அன்னையைப் பிரார்த்தித்தேன். எனது மார்பை மெல்ல வருடியவாறே 'உள்ளே மூழ்கு' என்று திரும்பத் திரும்பக் கூறுவேன். நீண்ட நாட்களுக்குப் பின்னர் இப்போதுள்ளது போல் எனது உடல் சற்று மங்கிய நிறமாகி விட்டது'' என்று ஸ்ரீராமகிருஷ்ணரே கூறியுள்ளார்.

பல,பக்தர்களும் சா.தகர்களும் ஐயங்கள் அகற்றி ஆன்ம ஞானம் பெறுவதற்காகத் தம்மிடம் வரப் போகிறார்கள் என்ற உண்மை ஸ்ரீராமகிருஷ்ணருக்கு இந்நாட்களில் தெரிய வந்தது. இதனைக் கேட்ட மதுர் மிகுந்த மகிழ்வுடன், ''ரொம்ப நல்லது, எல்லோருமாக உங்கள் சத்சங்கத்தில் ஆனந்தமாக இருக்கலாம்'' என்று கூறினார்.

தாந்திரிக சாதனைகளின் ஒவ்வொரு நிலையிலும் மிகக் குறைந்த காலத்தில் வெற்றி பெற்றது ஸ்ரீராமகிருஷ்ணரின் தனித்தன்மையாகும். ஒரு சாதனையில் வெற்றி பெற அவருக்கு மூன்று நாட்களே தேவையாயிருந்தது. அன்னை காளியைக் கண்டு அவளது திருவருளைப் பெற்றிருந்தமையால் தான் அவரால் இது முடிந்தது என்பது சொல்லாமலே விளங்கும். எந்தக் கடினமான ராகத்தைப் பாடச் சொன்னாலும் தயக்கமின்றிப் பாடும் கைதேர்ந்த பாடகனின் நிலை போன்றது இது. ஸ்ரீராமகிருஷ்ணர் தந்திர சாதனைகளில் நிறைநிலை எய்தியது தனித்தன்மை வாய்ந்தது; அதற்கு முன்னர் யாராலும் செய்யப் படாதது. பழமை வாய்ந்த தாந்திரிக சாதனைகளின் உண்மையையும் தூய்மையையும் உலகிற்கு உணர்த்திய பெருமை ஸ்ரீராமகிருஷ்ணரையே சேரும்.

# 16. பக்தர்களோடும் அறிஞர்களோடும்

ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் மற்றும் இரண்டு மகான்களுக்கும் உபதேசம் செய்யும்படி பைரவி பிராம்மணியிடம் அன்னை காளி கட்டளையிட்டிருந்ததைப் பற்றி முன்பு கண்டோம். அவர் அடிக்கடிக் குருதேவரிடம், ''நீ விரும்பினல் அவர்கள் இரு வரையும் கடிதம் எழுதி இங்கு வரச் செய்கிறேன்'' என்று சொல்வார். ஒரு நாள் குருதேவர் கடிதம் எழுதச் சொன்னர். சில நாட்களில் சந்திரா என்பவர் வந்தார். அவரைத் தம் வீட்டில் இருக்கச் செய்துவிட்டு அது பற்றிக் குருதேவரிடம் தெரிவிக்காமல் பைரவி ஸ்ரீராமகிருஷ்ணரைத் தம் வீட்டிற்கு வரும்படிச் சொல்லியனுப்பினர். ஸ்ரீராமகிருஷ்ணர் வரும் போது சந்திராவும் பிராம்மணியும் பேசிக் கொண்டிருந்தனர். பிராம்மணி அவரை வரவேற்ருர். உடனே ஸ்ரீராமகிருஷ்ணர் சமாதியில் ஆழ்ந்து போய், ''ஆ! இங்கே சந்திரா இருக்கிருர். இவர் சந்திரா இல்லையா?'' என்று சொல்லியபடி உணர் விழந்து நின்றுவிட்டார். சந்திரா அவர் கையைப் பிடித்துக் கொண்டு அவருடைய நினைவு திரும்ப நான் கைந்து முறை அவருடைய பெயரை உரக்கச் சொல்லி அழைத்தார். அதன் பின் குருதேவர் தம் சுய நிலையடைந் தார். சந்திரா அவரைப் பார்த்து, ''நீங்கள் என்னைத் தெரிந்து கொண்டீர்களே! இவ்வளவு நாட்கள் ஏன் என்னை மறந் திருந்தீர்கள்?'' என்று கேட்டார். ஸ்ரீராமகிருஷ்ணர், 'அது கடவுளின் விருப்பம்' என்ருர். பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார்.

சந்திரா மிகப் பெரிய பக்தர். ஸ்ரீராமகிருஷ்ணர் அவரை மிகவும் விரும்பினர். அவர் சந்திராவைப் பற்றிக் கூறும்போது, 'அவர் விஷ்ணுவின் சக்திகளில் சிலவற்றைப் பெற்றிருந்தார். அதனல்தான் இவ்வளவு எளிதாக என்னைச் சமாதிநிலை யிலிருந்து திரும்ப உலக நினைவிற்கு அவரால் கொண்டுவர முடிந்தது!' என்று கூறியுள்ளார். ஆனல் பார்ப்பதற்கு அவர் எடுப்பான தோற்றம் சிறிதும் இல்லாதவராக மிக மிகச் சாதாரணமாக இருந்தார். அதனல் இருதயன் அவருடைய ஆன்மிக நிலையைப் பற்றி மிகவும் சந்தேகப்பட்டு, பல் வேறுன கேள்விகளைக் கேட்டான். ஆனல் ஸ்ரீராமகிருஷ்ணர் அவனைத் தடுத்தார். ஒரு நாள் சந்திரா ஸ்ரீராம

கிருஷ்ணரைப் பார்க்க வந்ததும் ஸ்ரீராமகிருஷ்ணர் இருதயனிடம், ''ஒரு காவித் துணியை எடுத்து அவர்மேல் போடு. பிறகு அதன் விளைவைப் பார்!'' என்றார். இருதயன் அப்படிக் காவித் துணியை அவர்மேல் போட்டதும் சந்திரா விசித்திரமான உணர்ச்சியில் தம்மை மறந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் புன்சிரிப்புடன் இந்த மாற்றத்தை இருதயனிடம் காட்டினார். பிற்காலத்தில் தம்முடைய சாதனையின் பலனாக, நினைத்தால் பிறர் கண்ணுக்குத் தென்படாதிருக்கும் சித்தியையும் பெற்றார்.*

பிராம்மணியின் மற்றொரு சீடரான கிரிஜாவும் இத்தகைய சித்திகளைப் பெற்றிருந்ததாக ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியுள்ளார். அவரும் தட்சிணேசுவரம் வந்தார். ஒரு நாள் மாலை குருதேவர் கிரிஜாவோடு கோயிலின் அருகே உள்ள சம்பு மல்லிக்கின் தோட்ட மாளிகைக்குச் சென்றார். சம்பு ஸ்ரீராமகிருஷ்ணருக்குச் சேவை செய்வதைப் பெரும் பேறாகக் கொண்டிருந்தார். அங்கு ஓரிடத்தில் அமர்ந்தபடியே தங்களை மறந்து ஆன்மிகப் பேச்சில் மூவரும் ஈடுபட்டிருந்த

*1899-ஆம் ஆண்டு அதாவது சுவாமி விவேகானந்தர் இரண்டாம் முறை மேல் நாடுகளுக்குச் சென்ற பிறகு பேலூர் மடத்திற்கு வந்து ஒருவர் தம்மைச் சந்திரா என்று அறிமுகப்படுத்திக் கொண்டார். அப்போது சுவாமி பிரம்மானந்தர் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் தலைவராக இருந்தார். இருவரும் நீண்ட நேரம் தனியாக உரையாடுவது வழக்கம். தம் எதிர் காலத்தைப் பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் சொன்ன எல்லாமே பலித்தன என்று அவர் கூறினார். ஒன்றே ஒன்றுதான் பலிக்க வேண்டும். அது தாம் சாகும்போது குருதேவர் தம்மைச் சந்திப்பதாகச் சொன்னது என்றும் கூறினார். அவர் பூஜை அறையில் நீண்ட நேரம் கண்களில் கண்ணீர் வழிந்தோடத் தியானத்தில் அமர்ந்திருப்பார். ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளில் தமக்குத் தெரிந்தவற்றையெல்லாம் எல்லோரிடமும் மிகுந்த மகிழ்ச்சியோடு சொல்வார். சாதாரணமாக அமைதியை விரும்பும் மனிதர் அவர். சந்தடியற்ற ஓர் இடத்தில் எப்போதும் அமர்ந்திருப்பார். முதல் முறை அவர் மடத்தின் பூஜை அறையில் நுழைந்தபோது ஸ்ரீராமகிருஷ்ணரின் படத்தைப் பார்த்ததும் மிகுந்த உணர்ச்சி வசப்பட்டு, ''அண்ணா'' என்று அழுதார். இந்தியாவில் உள்ள பல்வேறு புண்ணியத் தலங்களுக்கும் யாத்திரை சென்று வந்ததாகக் அவர் கூறினார். சுவாமி பிரம்மானந்தர் அவரை மடத்திலேயே நிலையாகத் தங்கிவிடச் சொன்னார். ஆனால் ஏதோ வேலையாக வீடு சென்ற அவர் திரும்பவேயில்லை. அவர் பெரும்பாலும் மேலே குறிக்கப்பட்ட சந்திராவாக இருக்கலாம்.

னர். மாலைப்பொழுது மறைந்து நன்றாக இருட்டிவிட்டதையும் மறந்து விட்டார்கள். பிறகு இருவரும் கோயிலுக்குத் திரும்பிச் செல்லப் பாதைக்கு வந்தபோது அவர்களுக்குப் பாதையே தெளிவாக தெரியாத அளவுக்கு ஒரே இருட்டாக இருந்தது. குறிப்பாக ஸ்ரீராமகிருஷ்ணர் நடக்க முடியாது மிகவும் தடுமாறினர். அவர் படும் வேதனையைக் கண்ட கிரிஜா திடீரென்று வழியில் நின்று கொண்டு, ''கொஞ்சம் நில்லுங்கள். நான் வெளிச்சம் தருகிறேன்'' என்று கூறித் தம் முதுகுப்புறத்தைப் பாதையின் பக்கம் திருப்பினர். அவரது முதுகிலிருந்து மிகப் பிரகாசமான ஒளி தோன்றி, காளி கோயிலின் வாயில்வரை வெளிச்சம் பரவியது. ''நான் அந்த வெளிச்சத்தின் மூலம் சுலபமாகக் காளி கோயிலை அடைந்தேன்'' என்று குருதேவர் பிற்காலத்தில் கூறியுள்ளார். பிறகு அதைப்பற்றித் தொடர்ந்து சொல்லும்போது, ''ஆனால் சந்திரரவோ கிரிஜாவோ இந்தச் சக்தி களைத் தங்களிடம் நிலையாகப் பெற்றிருக்கவில்லை. அவர்கள் என்னோடு வசிக்கும்போது அருள் மயமான அன்னை அதை அவர்களிடமிருந்து நீக்கிவிட்டாள். ஏனென்றால் அப்போதுதான் அவர்களால் எந்தவிதத் தொல்லையுமின்றி கடவுளை அடையச் சாதனைகள் செய்ய இயலும்.'' என்று கூறியுள்ளார்.

தட்சிணேசுவரக் காளிக் கோயில் அதனுடைய தனிமைக்காகவும் புனிதத்திற்காகவும் ராணி ராசமணியின் தாராள நன்கொடைக்காகவும் பக்தர்களும் அறிஞர்களும் விரும்பிவந்து தங்கும் இடமாக இருந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர் பிற்காலத்தில் ஆங்கிலம் படித்தத் தம்முடைய சீடர்களிடம் அந்த நாட்களைப் பற்றிப் பின்வருமாறு கூறினர் ''கேசவசந்திரசேனர் இங்கு வர ஆரம்பித்த பிறகுதான் வங்காளத்து இளைஞர்கள் இங்கே அடிக்கடி வர ஆரம்பித்தார்கள். ஆனால் அதற்கு நெடுநாட்களுக்கு முன் கணக்கற்ற பல்வேறு பிரிவுகளைச் சேர்ந்த சந்நியாசிகளும் பக்தர்களும் கூட்டம் கூட்டமாக இங்கே வருவார்கள். கங்கா சாகருக்கோ பூரிக்கோ செல்லும் அவர்கள் சில நாட்கள் இங்கே தங்கியிருப்பார்கள். இது ரெயில் பாதைகள் போடுவதற்கு முன்பு நடந்ததாகும். சில குறிப்பிட்ட காலங்களில் ஒரு குறிப்பிட்ட பிரிவைச் சேர்ந்த சந்நியாசிகள் இங்கே வந்து கூடுவார்கள்.

''ஒரு முறை வைஷ்ணவ சமயத்தின் ராமாயத் பிரிவைச் சேர்ந்த சாதுக்கள் கூட்டமாக இங்கே

கூடினர். அவர்களுடைய பக்தி, நம்பிக்கை, உறுதி இவையெல்லாம் சொல்லால் விவரிக்க முடியாத ஒன்றாகும். அவர்களில் ஒருவரிடத்திலிருந்துதான் நான் ராம்லாலாவைப் பெற்றேன்.* இந்தப் பிரிவைச் சேர்ந்த மற்றொருவர் கடவுளின் பெயரில் வியக்கத்தக்க நம்பிக்கை கொண்டிருந்தார். அவரிடம் இருந்ததெல்லாம் ஒரு தண்ணீர்ப் பாத்திரமும் ஒரு புத்தகமுமே. அந்தப் புத்தகத்தை அவர் விலை மதிக்க முடியாத பெரிய செல்வமாக வைத்திருந்தார். தினந்தோறும் அதை மலரிட்டு வழிபடுவார். அவ்வப்போது அதைத் திறந்து படிக்கவும் செய்வார். 'அவர் என்னிடம் பழக்கமான பிறகு அந்தப் புத்தகத்தை நான் பார்க்க அனுமதிக்கும்படி மிகவும் மன்றாடிக் கேட்டுக்கொண்டேன். அந்தப் புத்தகத்தைத் திறந்ததும் ஒவ்வொரு பக்கத்திலும் 'ஓம் ராமா' என்று பெரிய சிவப்பு எழுத்துக்களால் எழுதப்பட்ட சொற்களையே கண்டேன். 'கூடை கூடையாகப் புத்தகங்களைப் படிப்பதால் என்ன பயன்? கடவுள்தான் வேதம், புராணம் மற்ற எல்லா சாஸ்திரங்களுக்கும் அடிப்படை. அவருக்கும் அவருடைய பெயருக்கும் வேற்றுமையே கிடையாது. நான்கு வேதங்களிலும் பதினெட்டு புராணங்களிலும் மற்ற எல்லாவித சாஸ்திரங்களிலும என்ன கூறப்பட்டுள்ளதோ அவையெல்லாம் கடவுளின் ஒரு திருநாமத்தில் அடங்கியுள்ளன. எனவே நான் அவருடைய பெயா ஒன்றிலேயே திருப்தி அடைந்துவிட்டேன்' என்றார். இறைவனின் திருநாமத்தில் அவ்வளவு நம்பிக்கை அவருக்கு இருந்தது.

''இந்தப் பிரிவைச் சேர்ந்தவர்களே கொஞ்ச காலம்வரை காளி கோயிலுக்கு வந்தபடி இருந்தார்கள். இவர்கள் அடிக்கடி வராதபோது பரமஹம்ஸப் பிரிவைச் சேர்ந்த சந்நியாசிகள், கபட சந்நியாசிகள் அல்லவர ஆரம்பித்தார்கள். இந்த அறையில் இரவும் பகலும் அவர்கள் கூட்டம் மிகுந்து இருக்கும். அவர்களது, விவாதங்கள் வேதாந்தம், அதாவது பிரம்மத்தின் தன்மை, மாயை இவைகளைப் பற்றியதாகவே இருக்கும். இந்த் நேரத்தில் பயங்கரமான சீதபேதியால் நான் வருந்திக் கொண்டிருந்தேன். இருதயன் எனக்குச் சேவை செய்து கொண்டிருந்தான். என்றாலும் நான் அவர்கள் பேசுவது

---

*இந்த நிகழ்ச்சி அடுத்த பகுதியில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

முழுவதையும் புரிந்து கொண்டேன். அவர்கள் ஏதாவது ஒரு கருத்தில் சரியான தெளிவு ஏற்படாமல் குழம்பும் போது இதற்குள்ளிருந்து (தம் உடம்பைக் காட்டி) ஏதோ ஒன்று தெளிவான எளிய வார்த்தைகளில் ஒரு கருத்தை வெளிப்படுத்தும். எல்லோரும் மனநிறைவோடு ஏற்றுக் கொள்வார்கள்.''

குருதேவர் சில நேரங்களில் இந்தச் சந்நியாசிகளைப் பற்றிய சில சுவையான செய்திகளைக் கூறுவார். ''ஒரு நாள் ஒளி வீசும் முகத்தோடு ஒரு சந்நியாசி இங்கே வந்தார். அவர் ஒரே இடத்தில் மணிக் கணக்கில் உட்கார்ந்து கொண்டு தமக்குத் தாமே சிரித்துக் கொண்டிருப்பார். தம்முடைய அறையிலிருந்து காலையிலும் மாலையிலும் மட்டும் வெளியே வந்து வானம், கங்கை, மரங்கள் முதலிய வற்றைப் பார்ப்பார். உடனே கையைத் தூக்கிக்கொண்டு நடனம் ஆடுவார். சில நேரங்களில் தரையில் விழுந்து குலுங்கிக்குலுங்கிச் சிரிப்பார். 'ஓ! சபாஷ்!! என்ன வேடிக்கை! மாயை மயமான இந்த உலகம் எவ்வளவு அழகாக இருக்கிறது!' என்று உரக்கக் கூறுவார். தெய்விகப் பேரானந்தத்தை அனுபவித்த அவருடைய பிரார்த்தனைகளும் தியானமும் இவைதான்.

''மிக உயர்ந்த ஆன்மிக நிலையை அடைந்த மற்றும் ஒருவர் இங்கு வந்ததுபற்றி என் நினைவிற்கு வருகிறது. அவ்வளவு உயர்ந்த ஆன்மிக நிலையை அவர் அடைந்திருந்தும் பார்ப்பதற்குப் பைத்தியக்காரன் போலவே அவர் இருந்தார். உடையில்லாமலும் அழுக்கு மயமாகவும் குப்பைகளை மேலே போட்டுக் கொண்டும் அழுக்குப் படிந்த நீண்ட தலைமுடியுடனும் நீண்ட நகங்களுனுடம் அழுக்கான கந்தையை உடம்பில் சுற்றிக் கொண்டும் அவர் ஒரு பிசாசுபோல இருந்தார். ஒரு நாள் காளி கோயிலின் முன் நின்றுகொண்டு அன்னையைப் பற்றிய பாடல் ஒன்றைப் பாடினார். அவர் எழுப்பிய உரத்த குரலில் காளி கோயிலே அதிர்ந்து போய்விட்டது. அதைக் கேட்டு அன்னையும் மகிழ்ச்சி அடைந்ததாகத் தோன்றியது.

''பிறகு பிச்சைக்காரர்களோடு அவர் சாப்பிடச் சென்றார். அவருடைய அருவருப்பான தோற்றத்தைக் கண்டு அவர்கள் அவரை விரட்டினார்கள். அதன் பிறகு பிச்சைக்காரர்களின் எச்சிலைச் சில நாய்களோடு அவர் சாப்பிடுவதைக் கண்டேன். ஒரு நாயின் கழுத்தைத் தழுவியபடியே எச்சிலை எடுத்துச் சாப்பிட்டார். மனிதனும் நாயும் ஒரே இலையில் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். நாய் அவரோடு

மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. இதைப் பார்த்துக்கொண் டிருந்த நான் ஒரு நாள் நானும் அதுபோல் ஆகிவிடுவேனே என்று நினைத்து நடுங்கிப் போய் விட்டேன். அங்கிருந்து இருதயனிடம் வந்து, 'அவர் சாதாரணப் பைத்தியக்காரன் அல்ல. பெரிய மகான். ஞானப் பைத்தியம்' என்றேன். இதைக் கேட்டதும் இருதயன் அவரைத் தேடிக் கொண்டு ஓடினான். கோயில் மதில் சுவரைத் தாண்டி அவர் போய்க் கொண்டிருந்தார். அவர் பின்னாலேயே, 'நான் கடவுளைக் காண வழி சொல்லுங்கள்' எனக் கேட்டபடியே இருதயன் ஓடினான். முதலில் அவர் ஒன்றும் சொல்லவில்லை. பிறகு இருதயன் மிகவும் கெஞ்சுவதைப் பார்த்துச் சாலையின் பக்கத்திலிருந்த சாக்கடைத் தண்ணீரைக் காட்டி, 'இந்தச் சாக்கடைத் தண்ணீரும் கங்கை நீரும் உனக்கு எப்போது ஒன்றுபோல் தோன்றுகிறதோ அப்போது நீ கடவுளைக் காண்பாய்'' என்றார். இருதயன் அவரிடம் மேலும் உபதேசம் கேட்க விரும்பினான். தன்னை அவருடைய சீடனாக ஏற்றுக் கொள்ளும்படியும் வேண்டினான். ஆனால் அவரோ பதில் சொல்லாமலேயே போய்க் கொண்டிருந்தார். இரு தயன கெஞ்சியபடி பின்னாலேயே வருவதைக் கண்ட அவர் ஒரு பெரிய கல்லை எடுத்து இருதயன்மேல் எறிய வந்தார். இருதயன் திரும்பி ஓடி வந்துவிட்டான். பிறகு அவர் வேக மாக மறைந்துவிட்டார். இருதயனால் அவரைக் கண்டுபிடிக் கவே முடியவில்லை. பெரிய மகான்கள் அடிக்கடி மற்றவர் களின் பார்வையிலிருந்து இப்படி மறைந்து விடுவார்கள். அவர் மிகச் சிறந்த பரமஹம்சர்.''

அதன் பிறகு குருதேவர் பரமஹம்சர்களின் குணங் களைப் பற்றிக் கூற ஆரம்பித்தார்: ''அவர்கள் சில சமயம் குழந்தை போலவும் சில சமயம் பேய்கள் போலவும் சில சமயம் பைத்தியக்காரர்கள் போலவும் இருப்பார்கள் என்று சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது. குழந்தைகள் தங்களை எந்நேரமும் சூழ்ந்திருக்கும்படிச் செய்துகொள்வதன் மூலம் தாங்களும் குழந்தைத் தனத்தையும், பற்றற்ற தன்மை யையும் பெறுவதற்கு அவர்கள் முயலுவார்கள். ஒரு புதிய துணியைத் தாய் குழந்தைக்குக் கொடுத்ததும் அது எவ்வளவு மகிழ்ச்சியடைகிறது என்பதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். நீங்கள் அதைத் திரும்பக் கேட்டால் அதை மறைத்துக் கொண்டு, 'நான் கொடுக்கமாட்டேன். அம்மா எனக்குக் கொடுத்தது' என்று சொல்லும். நீங்கள் பிடுங்கிக் கொள்வீர்களோ என்று கெட்டியாகப் பிடித்துக் கொள்ளும்.

தன் உயிரையே அதன்மேல் வைத்திருக்கும். ஆனல் ஒரு நிமிடம் கழிந்ததும் உன் கையில் ஒரு பொம்மை இருப்பதைப் பார்த்துவிட்டால் அது பத்து காசுக்கும் மதிப்பில்லாததாக இருந்தாலும், 'இந்தத் துணியைக் கொடுக்கிறேன். அதைக் கொடு' என்று கேட்கும். கொஞ்ச நேரம் கழித்துப் பொம்மையைப் போட்டுவிட்டுப் பூவின் பின்னல் ஓடும். அது எதனேடும் தன்னைப் பந்தப்படுத்திக் கொள்வதில்லை. உண்மையான ஞானியும் அப்படிப்பட்டவனே.''

இந்தக் காலத்தில் (*1862-1863*) ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணரின் மனத்தில் காளி கோயிலுக்கு வரும் பக்தர்கள் அனைவருக்கும் அவரவர்கள் வணங்கும் கடவுளை வழிபடுவதற்குரிய பொருட்களைக் கொடுக்க வேண்டும் என்றும் அவர்கள் அதைக் கொண்டு செய்யும் வழிபாடுகளைத் தாம் காண வேண்டுமென்றும் ஆசை எழுந்தது. இதை அவர் மதுரிடம் கூறினர். உடனே மதுர் அதற்காகத் தனியே ஒரு அறையை ஏற்பாடு செய்து, வேண்டிய பொருள்களை எல்லாம் வாங்கி வந்து குவித்தார். யாருக்கு எது வேண்டுமோ அதை ஸ்ரீராமகிருஷ்ணர் தம் விருப்பம் போல் கொடுக்கும்படிக் கூறி அவரிடமே ஒப்படைத்து விட்டார். உணவிற்காக வேண்டிய அரிசி, பருப்பு, நெய் முதலியவைகளோடு, போர்வைகள், கமண்டலங்கள், தாந்திரிக சந்நியாசிகள் தங்கள் வழிபாட்டின்போது பயன்படுத்தும் மது முதலான எல்லாப் பொருள்களும் அந்த அறையில் வாங்கி நிறைக்கப்பட்டன.

அந்தக் காலத்தில் தாந்திரிக சாதகர்கள் பலர் கோயிலுக்கு வந்தார்கள். அவர்கள் வட்டமாக அமர்ந்து தங்கள் சாதனைகளைச் செய்யும் போது அதில் கலந்துகொள்ள ஸ்ரீராமகிருஷ்ணரை அழைப்பார்கள். சிலநேரங்களில் அவரைத் தலைவராக்கி விடுவார்கள். முதலில் காளிக்குப் படைத்த மதுவை அவரைக் குடிக்கும்படி வேண்டினர்கள். அவரால் மது குடிக்க முடியாது; அதன் பெயரைச்சொன்னலே அவர் தெய்விக போதையில் ஆழ்ந்து விடுவார் என்று தெரிந்ததும் குருதேவரை வற்புறுத்துவதை விட்டு விட்டார்கள். ஆனல் தலைவராக இருப்பவர் மதுவைப் பயன்படுத்தியே ஆக வேண்டும் என்பதால் குருதேவர் மதுவைக் கையில் தொட்டு அதில் ஒரு துளியை நெற்றியில் ஒற்றிக் கொள்ளவோ, முகரவோ இன்னும் அதிகமாகப் போனல் நாக்கில் தொடவோ செய்வார். அதில் சிலர் மதுவை அருந்திவிட்டுத் தியானம் செய்ய அமர்ந்து தியானத்தில் ஆழ்ந்து மூழ்கி விடுவதையும்

பெரும்பாலோர் தியானம் செய்ய விருப்பம் இல்லாமல் போதைக்காகவே மதுவைக் குடித்து ஆடுவதையும் கண்டார். இதைக் கண்டதும் ஸ்ரீராமகிருஷ்ணர் மதுவைத் தருவதையே நிறுத்திவிட்டார்.

பல்வேறு சமயத்தைச் சேர்ந்த மகானகளும் அறிஞர் களும் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வந்து சேர்ந்தது மிக மிகக் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். உண்மையான ஆன்மிகம் என்பது ஒருவரிடமிருந்து பிறருக்குப் பரவும் தன்மை வாய்ந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர் ஏதாவது குறிப்பிட்ட சாதனையைச் செய்து முடித்ததும் அந்தப் பிரிவைச் சேர்ந்த சாதகர்கள் மிகுதியான எண்ணிக்கையில் காளி கோயிலுக்கு வருவார்கள். அவர்கள் தங்கள் கருத்துக்களை ஸ்ரீராமகிருஷ்ண ரோடு பரிமாறிக் கொள்வார்கள். குருதேவரின் அற்புதமான கடவுள் காட்சியைப்பற்றிக் கேட்டதும் தாமும் அதைக் காண விரும்பி அவருடைய உபதேசங்களின்படிக் கடுமை யான சாதனைகளைச் செய்யத் துவங்குவார்கள். இவ்வாறு ஸ்ரீராமகிருஷ்ணரிடம் இவர்கள் உபதேசம் பெற்றுச் சாதனை கள் மூலம் நடைமுறையில் கடவுளைக் கண்டதைத் தாங்கள் சீடர்களுக்கும் பக்தர்களுக்கும் பரப்பி, அவர்கள் மூலமாக மற்றவர்களுக்கும் பரப்பி, இவ்வாறே இந்தியா முழுவதும் தட்சிணேசுவரத்தில் இருந்தபடியே ஸ்ரீராமகிருஷ்ணர் ஆன் மிகத்தைப் பரவச் செய்தார். ஸ்ரீராமகிருஷ்ணருக்குக் குருவாக இருந்தவர்களும் கூடச் சாஸ்திரங்களில் படிக்கப்படுவதும் வாதிடப்படுவதுமான பல நுட்பமான ஆன்மிக உண்மைகளை ஸ்ரீராமகிருஷ்ணர் மூலம் நடைமுறையில் கண் எதிரே கண்டனர்.

தாந்திரிக சாதனைகளைப் பைரவியின் வழிகாட்டுதலில் செய்து முடித்ததும் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் தாந்திரிகச் சாதகர்கள் தட்சிணேசுவரத்தில் வந்து சேர்ந் தார்கள் என்பதை ஸ்ரீராமகிருஷ்ணரே கூறியுள்ளார். இப்படியே அவர் வைஷ்ணவ, அத்வைத சாதனைகள் செய்து முடித்ததும் வைஷ்ணவ, அத்வைத மரபைச் சேர்ந்த சாதகர் கள் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் கவரப்பட்டு அங்கு வந்து சேர்ந்தார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணரைப் போன்ற பெரிய மகான்களின் தோற்றம் இந்தியாவின் மறுமலர்ச்சிக்குக் காரணமாக அமைந் தது. பதினெட்டாம் நூற்றூண்டின் இடைப் பகுதியைப் போன்று இந்திய வரலாற்றில் எந்தக் காலத்திலும் இந்தியா வின் பண்பாட்டையும் மதத்தையும் சிதைக்கும் செயல்கள்

அவ்வளவு பயங்கரமாக நடந்ததில்லை. இது நாட்டின் சமூகம், அரசியல் பொருளாதாரம் முதலான எல்லாவற்றிலும் ஊடுருவியது. இந்தியாவின் முதுகெலும்பாகிய சமயம் முழுவதுமாக மறைக்கப்பட்டுவிட்டது. மனித இயற்கையின் மிகக் கேவலமான குணங்களான சோம்பேறித்தனம், வெறுப்பு, கோபம், காமம் முதலியன மிக மிகக் கேவலமான முறையில் தூண்டிவிடப்பட்டன. சனாதன சமயமான இந்து சமயத்தின் பண்பாடு, வாழ்க்கை முறை எல்லாமே அழிந்து போய்விட்டதுபோல் தோன்றியது. ஆனால் உலகின் அமைதியே இந்தியாவின் உயர் வாழ்க்கையில்தான் இருந்தது. உலக வேதனைகளால் அடிபட்ட மனித இனத்திற்கு இந்தியாவின் தத்துவமே அமைதியூட்டும் மருந்தாக அமைந்தது. இந்தியாவை இதற்காகத் தயார் செய்வதற்கு ஆன்மிக எழுச்சி வேண்டும். ஸ்ரீராமகிருஷ்ணரைப் போன்றவர்களால் அல்லாமல் வேறு யாராலும் இதைச் செய்து முடிக்க முடியாது. பிரம்ம சமாஜத்தின் புகழ்பெற்ற எழுத்தாளர் (பிரதாப் சந்திர மஜூம்தார்) எழுதியதுபோல், ''இந்து சமயத்தின் ஆழமான, இனிமையான உயிர் வாழும் தத்துவத்தின் சிறந்த உதாரணம் இந்தத் துறவிதான் (ஸ்ரீராமகிருஷ்ணர்). அவர் உலக ஆசைகளை எல்லாம் அடக்கியவர். அவர் முழுக்க முழுக்க இறைமயமானவர்; சமயத்தின் முழுமையான உண்மை; முழுக்க முழுக்க ஆனந்தமயமானவர்; முழுக்க முழுக்கப் பேரின்பத் தூய்மையின் நிறைவு. இந்து சித்த புருஷன் என்ற வகையில் அவர் இந்த உலகம் பொய் என்பதற்கும் வெறுமை என்பதற்கும் ஓர் எடுத்துக் காட்டு. ஒவ்வோர் இந்துவின் இதயத்திலும் அவர் உபதேசம் மிக ஆழமாகச் சென்று பதிந்தது. அவருக்குக் கடவுளைத் தவிர வேறு தொழிலோ, உறவோ, நினைவோ, நண்பரோ இல்லை. கடவுள் ஒருவரே அவருக்குப் போதுமானவர். அவருடைய தூய்மையும், சொற்களால் வெளிப்படுத்த முடியாத பேரானந்தமும் ஆழ்ந்த முடிவில்லாத ஞானமும், குழந்தையைப்போல அமைதியும், எல்லா மனிதர்களிடத்தும் பேரன்பும், எல்லாவற்றையும் எரித்துவிடுகின்ற, எல்லாவற்றையும் உறிஞ்சிக் கொள்கின்ற கடவுள் பக்தியுமே அவர் பெற்றுள்ள பரிசாகும்.'' இந்த அழகான வரிகளில் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றிய விளக்கம் மிகச் சிறப்பாகச் சொல்லப் பட்டிருக்கிறது. இந்திய வரலாற்றில் மிகவும் நெருக்கடியான நேரத்தில் ஒரு தேவ தூதராக ஸ்ரீராமகிருஷ்ணர் இந்தியாவில் தோன்றினார்.

புண்ணிய பாரதம் தன் உள்ளுணர்வின் மூலம் தன்னை

வாழவைக்க வந்த தெய்விக புருஷரின் வரவை அறிந்து கொண்டது. தங்கள் இதயம் முழுவதும் நிரம்பி வழியும்படி தெய்விகத்தை நிறைத்துக் கொள்ள நூற்றுக் கணக்கில் சாதுக்களை அது தட்சிணேசுவரக் காளி கோயிலுக்கு அனுப்பியது. அவர்கள் ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவடிகளில் அமர்ந்து, அவர் வாயிலிருந்து தெய்விகச் செய்திகளைக் கேட்டபடியே இருந்தனர். ஒவ்வொருவனும் அவன் எந்தச் சமயத்தைச் சேர்ந்தவனாக இருந்தாலும் தன்னுடைய சமயத்தின் நிறைநிலையை அவரிடம் கண்டான். அவர் தம்மிடமிருந்து தெய்விகத்தையும் அன்பையும் வாரி வாரி வழங்கினார். தாமே மிக உயர்ந்த சாதகராக இருந்த காரணத்தால் அவர் பல்வேறு வகைப்பட்ட சாதகர்களையும் அவர்களுடைய இயல்பான குணங்களுக்கு இடையூறு நேராமல் அவர்களுடைய சொந்தப் பாதையில் வழி நடத்திச் சென்றார். மகத்தான குருமார்கள் அனைவரும் இப்படித்தான் செய்திருக்கிறார்கள். அவர்கள் துணை செய்வார்கள். ஆனால் இருப்பதை அழித்துவிட்டு வேறொன்றை அங்கே வைக்க மாட்டார்கள். தங்களுடைய சொந்தச் சாதனையின் மூலம் மக்கள் மறந்து போன ஆன்மிக உண்மைகளைக் கண்டெடுத்து உரக்கக் கூவி உலகின் தேவைக்கு ஏற்ப அதனைத் தருவார்கள்.

இந்த மகத்தான மகானாகிய ஸ்ரீராமகிருஷ்ணர் இந்தியாவில் முற்கால மகரிஷிகளால் உருவாக்கப்பட்ட பல்வேறு நெறிகள் இந்திய ஆன்மிகத்தின் முடியில் உள்ள பல்வேறு வைரங்கள் போல் ஒன்றுக்கொன்று துணையாக இருப்பதுவே தவிர ஒன்றுக்கொன்று விரோதமானவையல்ல என்பதை அனுபவ பூர்வமாகத் தம் சாதனைகள் மூலம் கண்டார். எல்லா நெறிகளின் அடிப்படையும் சத்தியமே என்பதைத் தம் வாழ்வின் மூலம் நிரூபித்துக் காட்டிய அவர் 'தமது இலட்சியத்தில் உறுதியாயிருப்பதுடன் மற்றவர்களின் கொள்கைகளையும் மதிக்க வேண்டும்' என்னும் கொள்கையை உலகிற்குத் தம் வாழ்க்கை மூலம் முழக்கம் செய்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அடிக்கடி வந்த பக்தர்களிலும் அறிஞர்களிலும் பலர் அவரிடம் தீட்சை பெற்று, அவருடைய சீடர்களாகிச் சாதனைகள் செய்தார்கள். வைஷ்ணவசரண், கௌரி பண்டிதர் போல் பலர் அவருடைய தொடர்பால் தாங்கள் செய்து வந்த சமயச்சாதனையில் உயர்வு பெற்றார்கள். முக்கியமாக கௌரி பண்டிதர் ஸ்ரீராமகிருஷ்ணரால் பெரிதும் கவரப்பட்டார். சில ஆண்டுகளுக்குப் பின் 1870-ஆம் ஆண்டில் நாம் மறுபடியும் அவர் தட்சிணேசுவரத்தில் ஸ்ரீராம

கிருஷ்ணரின் திருவடியில் சீடர்போல் அமர்ந்திருப்பதைக் காண்கிறோம். குடும்பத்தையும் உலகையும் துறக்க வேண்டும் என்னும் வெறி அவரிடத்தில் கட்டுக்கடங்காது பொங்கியது. சாஸ்திர அறிவின் மீதும், பெருமை, அதிகாரம் முதலிய அனைத்தின் மீதும் அவருக்கு மிகுந்த வெறுப்புத் தோன்றியது. கடவுளிடம் பக்தி செலுத்துவது ஒன்றே வாழ்வின் முடிவான பயன் என்று உணர்ந்து கடவுளை அடையும் வழியில் வாழ்க்கை முழுவதையும் செலுத்தத் துவங்கினார். வாதங்களிலும் சொற்போரிலும் முன்பிருந்த ஆர்வமெல்லாம் மறைந்தது. இறைவனை உணர்வதில் செலுத்தியிருக்க வேண்டிய ஆற்றலை இத்தகைய அற்ப காரியங்களில் செலவழித்தத் தன் முட்டாள் தனத்தை நினைத்து வருந்தினார். கடவுளைக் காணச் சாதனை செய்யத் தனக்குக் கிடைத்த பல அரிய சந்தர்ப்பங்களை அவர் நழுவ விட்டு விட்டார். வயதான காலத்தில் மிகுந்திருந்த ஒவ்வொரு விநாடியையும் கடவுளைக் காணச் செலவழிப்பதில் மிகுந்த உறுதி கொண்டார். தட்சிணேசுவரக் கோயிலிலேயே தங்கி ஸ்ரீராமகிருஷ்ணரின் வழிகாட்டுதலால் மிகத் தீவிரமாக சாதனைகளில் மூழ்கினார்.

சில மாதங்கள் கழிந்தன. நெடுங்காலம் கௌரி பண்டிதர் வராமல் இருக்கவே வீட்டில் உள்ளவர்களுக்கு மிகுந்த அச்சம் தோன்றியது. ஒரு பைத்தியக்கார சாதுவிடம் அவருக்குத் தொடர்பு ஏற்பட்டதிலிருந்து அவரும் அதுபோல் ஆகிக் கொண்டிருக்கிறார் என்னும் செய்தி அவர்களுக்கு எட்டியது. எனவே வீட்டிற்கு வரும்படி வற்புறுத்திப் பல கடிதங்கள் எழுதினார்கள். அவர்கள் நேரிலேயே வந்து தம்மைக் கட்டாயப்படுத்தி வீட்டிற்கு அழைத்துச் சென்றுவிடக் கூடும் என்று நினைத்த கௌரி நீண்ட சிந்தனைக்குப் பிறகு ஒரு நாள் கண்களில் நீர் வழிய ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவடிகளில் வீழ்ந்து தான் அங்கிருந்து செல்ல அனுமதிக்குமாறு வேண்டினார். ஸ்ரீராமகிருஷ்ணர் மிகுந்த பரிவோடு, "ஓ! கௌரி, என்ன செய்தி? எங்கே போகிறீர்கள்?" என்றார். கௌரி எழுந்து இரண்டு கைகளையும் குவித்தபடி, "என் ஆசை நிறைவேற எனக்கு அருள் புரியுங்கள். கடவுளைக் காணாமல் நான் இந்த உலகத்திற்குத் திரும்பிவரக் கூடாது" என்றார். பிறகு அங்கிருந்து புறப்பட்டு விட்டார்.

இதைப் போன்றே ராஜபுதனத்திலிருந்த வைதிக பிராமணக் குடும்பத்தில் பிறந்த நாராயண சாஸ்திரி என்பவரும்

ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணரைக் காண வந்தார். வைதிக இந்து சமயத்தின்படி வாழ்ந்த அவர் பிரம்மசாரியாக இருபத்தைந்து வருடங்கள் குருகுல வாழ்க்கை நடத்தி, இந்து சமயத்தின் பல்வேறு சாஸ்திரங்களையும் நன்கு கற்றுணர்ந் தார். அவருடைய பெரும் ஆர்வம் இந்து சமயத்தில் உள்ள ஆறு தரிசனங்கள் எனப்படும் ஆறு தத்துவங்களைக் கற்று உணர்வதாகும். அவைகளில் ஐந்து தரிசனங்களை வட இந்தி யாவில் பல்வேறு அறிஞர்களிடம் கற்றார் அவர். இறுதியான நியாய தத்துவத்தைக் கற்க வங்காளத்தில் நாதியா என்னு மிடத்தில் உள்ள பண்டிதர்களிடம் வந்தார். ஜெய்பூர் மகா ராஜா அவருடைய சாஸ்திர ஞானத்தைக் கேள்விப்பட்டு அவரை மிக உயர்ந்த சம்பளத்தில் தம் அரச சபையில் பண்டிதராக வைத்துக் கொள்ள விரும்பினார். ஆனால் மேலும் மேலும் சாஸ்திர முறைகளைக் கற்பதில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்த நாராயண சாஸ்திரி அதையெல்லாம் மறுத்து விட்டு ஏழு ஆண்டுகள் நாதியாவில் மிகவும் கடினமான நியாய தத்துவத்தைக் கற்றுத் தம் ஊருக்குத் திரும்பிச் செல்லும் வழியில் கல்கத்தா வந்தார்.

மற்ற பண்டிதர்களைப்போல் நாராயண சாஸ்திரி வெறும் சாஸ்திர ஞானத்தோடு மன நிறைவு கொள்ள வில்லை. சிறந்த கடவுள் பக்தரான அவர் தத்துவங்களை வெறுமனே படிப்பதால் பயனில்லை என்பதை உணர்ந்தார். படிப்பும் நடைமுறை ஞான மும் ஒன்றுக்கொன்று வெகு தூரத்தில் இருப்பதையும் படிப்பு ஞானத்தைவிட நடைமுறை ஞானமே பயனுள்ள தாக இருப்பதையும் கண்டார். சில சமயங்களில் தாம் படித்த எல்லாவற்றையும் விட்டுவிட்டு, சாஸ்திரங்களில் கூறப் பட்டது போல் கடவுள் ஒருவரே உண்மையென்ற உண்மையை உணர்ந்துகொள்ள அளவில்லாத தாகம் கொண்டார். ஆனால் சாஸ்திரங்களையும் தத்துவங்களையும் படித்து முடிக்கும் வரை தம் ஆர்வத்தை அடக்கியிருந்தார். அவர் செய்திருந்த பெரும் புண்ணியத்தின் காரணமாகப் படிப்பு முடிந்ததும் தட்சிணே சுவரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்தித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் அவரை மிகவும் கவர்ந்து விட்டார். ஸ்ரீராமகிருஷ்ணரின் துணையுடன் சாதனைகள் செய்ய தட்சிணேசுவரத்திலேயே தங்கி விட்டார். குருதேவரோடு பழகப் பழக நாராயண சாஸ்திரி மென்மேலும் கவரப்பட்டு அவரிடம் மிகுந்த பக்தி கொண்டார். குருதேவரும் அத் தகைய உண்மையான சாதகரைக் கண்டு மிகவும் மகிழ்ந்தார்.

மணிக்கணக்கில் அவரோடு ஆன்மிக ஞானத்தைப் பற்றிப் பேசுவதிலும், கற்பிப்பதிலும் கழித்தார்.

நாராயண சாஸ்திரி மனித உடம்பில் உள்ள ஏழு தெய்விக இடங்களைப் பற்றியும், சாதகனது மனம் மேலே உயர்ந்து அந்த இடங்களை அடையும்போது அவன் காணும் அதிசயக் காட்சிகளைப் பற்றியும், அது கடைசி இடத்தை அடைந்து பிரம்மத்தோடு ஒன்றியதும் மாயையிலிருந்து முழுவதுமாக விடுபட்டு அவன் சமாதியில் ஆழ்ந்து விடுவதையும் பற்றி வேதாந்தத்தில் படித்திருந்தார். அது இது வரை வெறும் ஏட்டு ஞானமாகவே இருந்து வந்தது. உணர்வுகளைத் தாண்டிய நிலை, சமாதி என்ற சொற்கள் எல்லாம் அவருக்கு விளங்காத வெறும் சொற்களாகவே இருந்தன. இப்போது தம் முன்னே அந்த நுட்பமான கருத்துக்களை எல்லாம் அன்றுடம் வாழ்க்கையில் அனுபவித்து வரும் ஒரு மனிதரை அவர் கண்டார். இதைக் கண்டபோது அவர், ''என்ன ஆச்சரியகரமான நிகழ்ச்சி! சாஸ்திரங்களில் உள்ள கருத்துக்களை உபதேசிப்பதற்கு இவரைவிட நல்ல குருவை நான் எங்கே காண இயலும்? இவரை நான் இழந்து விடக் கூடாது. இந்த உலகில் சாவைவிட நிச்சயமானது எதுவும் இல்லை. நான் எப்படியாது கடுமையான சாதனைகள் செய்து கடவுளைக் கண்டுவிட வேண்டும்'' என்று நினைத்தார். இந்த நினைவு நாளுக்கு நாள் அவரை உலகப் பற்றிலிருந்து பிரித்துக்கொண்டே வந்தது. மிகுந்த பணிவோடு ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவடிகளின் கீழ் அமர்ந்து அவருடைய உபதேசங்களைக் கேட்கலானர். அவர் அடிக்கடித் தமக்குள், ''மனமே! இந்த மகானைப் பார்! அவர் வாழ்வின் இலட்சியத்தை அடைந்து விட்டார். இந்த ஞானத்தை ஆயுதமாகக் கொண்டு எவ்வளவு அமைதியாக இவர் இருக்கிருர்! சாவுகூட அவரிடத்திலே பயத்தைத் தோற்றுவிக்க முடியாமல் தோற்று விட்டது. உபநிஷதங்களில் இத்தகைய மனிதர்கள் என்ன நினைக்கிருர்களோ அவை அப்படியே நடக்கும் என்றும் அவர்களிடம் சரணடைபவர்கள் ஆசைகளிலிருந்து விடுபட்டு கடவுளை நேராகக் காண்பார்கள் என்றும் கூறப்பட்டிருக்கிறதே! நான் அந்த இலட்சியத்தை அடைய ஏன் இவரை என் குருவாகக் கொள்ளக் கூடாது?'' என்று கேட்டுக் கொள்வார். ஆனுல் தம்மைச் சீடராக ஏற்றுக் கொள்ளச் சொன்ஞல், தகுதியில்லை என்று ஸ்ரீராமகிருஷ்ணர் தம்மை ஒதுக்கி விடுவாரோ என்று பயந்தார். இப்படியே நாட்கள் கழிந்து கொண்டிருந்தன. ஒரு நாள் தம்மைச் சீடராக ஏற்றுக்

கொள்ள வேண்டுமென்று நாராயண சாஸ்திரி ஸ்ரீராம கிருஷ்ணரை வேண்ட தம் தைரியத்தை எல்லாம் திரட்டினர்.

இதற்கிடையில் குறிப்பிடத் தக்க நிகழ்ச்சி ஒன்று அங்கு நடந்தது. மிகச் சிறந்த வங்கக் கவிஞரும் கிறிஸ்த வரும் வழக்கறிஞருமான மைக்கேல் மதுசூதன தத்தர் என்பவரை மதுர் பாபுவின் மகன் துவாரகாநாத் தம்மு டைய வழக்கொன்றைப் பற்றிப் பேச தட்சிணேசுவரத்துக்கு வரவழைத்திருந்தார். தட்சிணேசுவரம் வந்த அவர், ஸ்ரீராம கிருஷ்ணரைப் பற்றிக் கேள்விப்பட்டு அவரைப் பார்க்க விரும்பினர். எனவே மதுசூதனன் தாம் இருக்குமிடத்திற்கு வரும்படி ஸ்ரீராமகிருஷ்ணருக்குச் சொல்லி அனுப்பினர். ஸ்ரீராமகிருஷ்ணர் அங்கே போக விரும்பவில்லை. இருதயனை அனுப்பினர். துவாரகாநாத் மீண்டும் சொல்லியனுப்பவே ஸ்ரீராமகிருஷ்ணர் அங்கு நாராயண சாஸ்திரியுடன் சென்றார். சாஸ்திரி மதுசூதனரோடு சாஸ்திரத்தைப் பற்றிச் சிறிது நேரம் பேசியபோது, இந்துவாக இருந்து கிறிஸ்தவராக அவர் மாறியதை அறிந்து, ''ஏன் கிறிஸ்தவராக மாறினீர்?'' என்று கேட்டார். அவரும் பல காரணங்களைச் சொல்லி இறுதியில் வயிற்றுப் பிழைப்புக்காகவே தாம் மதம் மாறவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டதாகக் கூறினர். இதைக் கேட்டதும் சாஸ்திரி மிகுந்த கோபத்தோடு, 'என்ன? அவ்வளவு சாதாரணமான ஒன்றுக்காகவா விலை'மதிக்க முடியாத சொந்த சமயத்தை விட்டுப் போய்விட்டீர்கள்? அதைவிட நீங்கள் பட்டினியாக இருந்து செத்துப்போயிருப்பதே மேல்'' என்றார். அதன் பிறகு மதுசூதனரிடம் மிகுந்த வெறுப்புக் கொண்டு அவரிடம் பேசவே இல்லை. மதுசூதனர் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் தமக்கு ஏதாவது அறிவுரை சொல்லுமாறு வற்புறுத்தினர். ''யாரோ என் வாயை அழுத்துகிறார்கள். என்னால் ஒரு வார்த்தையும் பேச முடியவில்லை'' என்றார் குருதேவர்.

''நான் உங்கள் அடிமை. எனக்கு ஏன் நல்லது சொல்ல மறுக்கிறீர்கள்?'' என்று வேண்டினர் கவிஞர்.

''நீங்கள் என்னைப் புரிந்து கொள்ளவில்லை. உண்மை யிலேயே நான் உங்களிடம் பேசவே விரும்புகிறேன். ஆனால் பேச முடியாமல் யாரோ என் வாயை மூடுகிறார்கள்'' என்றார் குருதேவர்.

சாதாரணமாக யாரும் இதைக் கேட்டு வேதனையும் அவமானமும் அடைவதுபோல் கவிஞரும் அடைந்தார். சிறிது நேரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் புகழ் பெற்ற சில பக்திப்

பாடல்களைப் பாடினார். அது மதுசூதனருக்குப் பெரும் ஆறுதலாக இருந்தது. மதுசூதனர் நல்ல இந்துவாக இருந்து பணத்துக்காகக் கிறிஸ்தவராக மாறியதில் மிகுந்த வெறுப்பும் வேதனையும் கொண்ட நாராயண சாஸ்திரி ஸ்ரீராமகிருஷ்ணரின் அறைக்குமுன் இருந்த சுவரில், 'வயிற்றுப் பிழைப்புக்காகச் சொந்த சமயத்தை விடுவது முட்டாள்தனம்' என்று வங்காள எழுத்துக்களில் பெரியதாகக் கரித்துண்டால் எழுதிவைத்தார். இந்த நிகழ்ச்சி நடந்த நெடுநாட்களுக்குப் பிறகும் பலருடைய கவனத்தை அது ஈர்த்துக் கொண்டிருந்தது.

ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணர் தனியாக இருக்கும்போது சாஸ்திரி அவரைச் சந்தித்து, தமக்குச் சந்நியாச தீட்சை அளிக்கும்படிக் கெஞ்சினார். ஆனால் குருதேவர் அதற்கு இணங்கவில்லை. அதன் பிறகு சாஸ்திரி தட்சிணேசுவரத்தில் திடீரென்று ஒரு நாள் காணாமல் போய் விட்டார். பின்னர் உறுதியாக அவரைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. அசாமிலுள்ள வசிஷ்டர் ஆசிரமத்தில் கடவுளைக் காண்பதில் உயிரே போனாலும் சரி என்று அவர் சாதனையில் மூழ்கிக் கிடந்ததாகச் சிலர் கூறினார்கள். பெரும்பாலும் அவர் அங்கேயே இறந்து போயிருக்கலாம். ஸ்ரீராமகிருஷ்ணர் தம் பக்தர்களிடம் அவரைப் பற்றி அடிக்கடிப் பேசுவது வழக்கம்.

இவ்வாறு சாதகர்களும் அறிஞர்களும் பக்தர்களும் தம்மிடம் வந்து பலன் பெற்றுச் செல்வதோடு ஸ்ரீராமகிருஷ்ணர் மனநிறைவு கொள்ளவில்லை. பக்குவமானவர்கள் என்று தாம் கேள்விப்பட்ட பக்தர்களுக்கும் பண்டிதர்களுக்கும் ஞானத்தைத் தர அவர்கள் அழைக்கவில்லை என்றாலும் தாமாகவே அவர்களைத் தேடிச் சென்றார். அவர்கள் தமக்கு மரியாதை தருகிறார்களா, இல்லையா என்பதைப்பற்றிக் கவலைப்படுவதே இல்லை. அவருடைய நோக்கமெல்லாம் பல்வேறு பக்தர்களைக் கண்டு அவர்கள் தங்கள் ஆன்மிக சாதனைகளில் எந்த அளவு முன்னேறி இருக்கிறார்கள் என்பதைக் கண்டறிவதாகவே இருந்தது. பெரும் செல்வந்தனாக இருந்தாலும் பரம ஏழையாக இருந்தாலும் அவர்களுடைய உண்மையான ஆன்மிக நிலையைத் துல்லியமாக அவர் அறிந்து கொள்வார். பண்டித பத்மலோசன், தேவேந்திரநாத் தாகூர், பகவன்தாஸ் பாபாஜி, சுவாமி தயானந்தசரஸ்வதி முதலியவர்கள் இப்படி இவர் தாமே சென்று இந்தக் காலத்தில் சந்தித்தவர்களில் சிலர் ஆவர். இப்போது பத்மலோசனை அவர் சந்தித்ததைக் காண்போம்.

பத்மலோசன், பர்த்துவான் நகரத்து அரசரின் அவைப் புலவராக இருந்த மிகப் பெரிய அறிஞர். கடினமான நியாயத் தத்துவத்தைப் படித்து முடித்த பிறகு வேதாந்தத்தைக் கற்கக் காசிக்குச் சென்று அங்கே ஒரு குருவுடன் தங்கி வேதாந் தத்தை நன்கு கற்றுத் தேர்ந்ததும் ஊர் திரும்பி ஞர். அப்போது அவருடைய புகழ் வங்காளத்தில் பரவியிருந்ததால் பர்த்துவான் நகர மன்னர் அவரை அழைத்து அரசவைப் புலவராக்கிக் கொண்டார். சிறிது காலத்திற்குப் பின் அங்கிருந்த எல்லாப் பண்டிதர்களாலும் தலைவராக ஏற்றுக் கொள்ளப்பட்டு இந்து சமய சாஸ்திரங் களின் ஒரு சட்ட பூர்வமான அதிகாரியாக இருந்தார். மிகச் சிறந்த சாஸ்திர ஞானத்தோடு, தவத்திலும் பரந்த மனப் பான்மையிலும் பக்தியிலும் இந்து சமய வழிமுறைகளைச் சிறிதும் தவறாது பின்பற்றுவதிலும் நிகரில்லாதவராக விளங் கினர். தலை சிறந்த சாஸ்திர ஞானமும் அதே சமயத்தில் இறைவனிடம் ஆழ்ந்த பக்தியும் ஒரு மனிதனிடம் சேர்ந் திருப்பது அரிதான ஒன்றாகும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் இவரைப் பற்றிக் கேள்விப்பட்டதும் அவரைச் சந்திக்க விரும்பினர். மதுரிடம் இதைக் கூறி அவரைச் சந்திக்க விரைவில் ஏற்பாடு செய்யுமாறு வற்புறுத்திக்கொண்டே இருந்தார் ஸ்ரீராமகிருஷ்ணர். வாழ்வு நிலையில்லாதது; எந்தநேரத்திலும் எதுவும் நேரலாம் என்பதை உணர்ந்திருந்ததால் நல்ல காரியங்கள் எதைச் செய்ய நினைத்தாலும் உடனே அதைச் செய்து முடிக்க வேண்டுமென்று பிடிவாதமும் பரபரப்பும் கொள்வார். ஸ்ரீராமகிருஷ்ணரின் நச்சரிப்பைப் பொறுக்க முடியாத மதுர் அவரை பர்த்துவானுக்கே அனுப்ப ஏற்பாடு செய்து கொண்டிருந்தபோது பண்டிதரே கல்கத்தாவிற்கு மருத்துவம் செய்துகொள்ள வருவதாகவும், கல்கத்தா அருகில் ஒரு மாளிகையில் நெடுங்காலம் தங்கியிருக்கப் போவ தாகவும் செய்தி கிடைத்தது. குருதேவர் இருதயனை அனுப்பி அது உண்மைதானா என்பதைக் கண்டறிந்து வரச் செய்தார். இருதயன் திரும்பிவந்து அச் செய்தி உண்மையே என்பதையும், அவன் மூலம் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றிக் கேள்விப்பட்ட பண்டிதர் அவரைச் சந்திக்க மிகவும் ஆர்வம் கொண்டிருப்பதாகவும் கூறினன்.

அவரைச் சந்திக்க ஒரு நாள் முடிவு செய்யப்பட்டது. அன்று பிற்பகல் ஸ்ரீராமகிருஷ்ணர் இருதயனோடு படகில் ஏறி அவர் இருக்குமிடம் சென்றார். பண்டிதர் அவரை மிகவும் அன்போடும் மரியாதையோடும் வரவேற்றார். உபசார

மாகச் சில வார்த்தைகள் இருவரும் பேசிக் கொண்ட பின்னர் ஸ்ரீராமகிருஷ்ணர் கேட்போரை உருக வைக்கும் தமது குரலில் சில பக்திப் பாடல்களைப் பாடினார். அவை பண்டிதரை அப்படியே உருக்கி விட்டன. குருதேவர் அடிக்கடிச் சமாதியில் ஆழ்வதைக் கண்டு மிகவும் கவரப் பட்டு, அவரைச் சந்தித்தது தம்முடைய மிகப் பெரிய பேறு என்று பண்டிதர் நினைத்தார். தங்களைச் சுற்றியிருந்தவர்களைப் பார்த்து, ''நான் வண்டி வண்டியாகப் புத்தகங்களைப் படித்து அறிந்து கொண்டதைவிடவும் அதிகமாகவும் இவர் (ஸ்ரீராமகிருஷ்ணர்) ஒரே ஒரு பக்கத்தைக் கூடப் புரட்டாமல் தெரிந்து கொண்டிருக்கிறார்'' என்றார். இருதயனிடம் தாம் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தெய்வமாக மதிப்பதாகக் கூறிய பண்டிதர், குருதேவரிடம், ''உத்சவானந்த கோசுவாமியும் மற்றவர்களும் கடவுளைப்பற்றிக் கூறிய கருத்துக்களுக்கு நான் விளக்கம் எழுதியிருக்கிறேன். அதை நான் உங்களுக்குப் படித்துக்காட்ட விரும்புகிறேன். நீங்கள் கேட்டால் என் உழைப்பு பலனுள்ளதாக இருக்கும் என்று நிறைவு கொள்வேன்'' என்றார்.

பத்மலோசன் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அளவற்ற ஈடுபாடு கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் பண்டிதரின் ஞானத்தையும் உண்மையையும் பக்தியையும் கண்டு அவரிடம் பெரும் ஈடுபாடு ஏற்பட்டது. இந்த மகிழ்ச்சிகரமான சந்திப்பு அவர்கள் இருவரையும் மேலும் பலமுறை சந்திக்க வைத்தது. இந்தச் சந்திப்புகளின் விளைவாகப் பத்மலோசனருக்கு ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு தெய்விக புருஷர் என்ற எண்ணத்தில் மிக உறுதியான நம்பிக்கை ஏற்பட்டது. ஸ்ரீராமகிருஷ்ணர் பத்மலோசனரின் குழந்தை போன்ற மனநிலையை எடுத்துக்காட்ட கீழ்க்கண்ட சுவையான நிகழ்ச்சியைச் சொல்வார். ஒரு முறை பர்த்துவான் அரசருடைய சபையில், சிவன் பெரியவரா? விஷ்ணு பெரியவரா? என்பது குறித்துப் பண்டிதர்களிடையே பெரிய விவாதம் எழுந்தது. ஒரு சாரார் சிவனே பெரியவர் என்றும் மற்றொரு சாரார் விஷ்ணுவே பெரியவர் என்றும் சாஸ்திரங்கள், புராணங்களிலிருந்தெல்லாம் சான்று காட்டிப் பேசினர். விவகாரம் உச்ச நிலையடைந்து அடிதடி என்ற நிலைக்கு வர இருந்தபோது, பத்மலோசன் அழைக்கப்பட்டு இதற்கான தீர்ப்பைக் கூறும்படிக் கேட்டுக்கொள்ளப்பட்டார். இரு சாராரும் சொல்லியதையெல்லாம் கேட்ட பத்மலோசனர் இறுதியாக, ''நானாவது, என் பரம்பரையில் எவராவது, சிவனையும் பார்க்கவில்லை; விஷ்ணுவையும் பார்க்கவில்லை

எனவே இருவரில் யார் பெரியவர் என்று நான் எப்படிச் சொல்ல முடியும்? ஆனுல் சாஸ்திரங்களும் புராணங்களும் என்ன சொல்கின்றன என்று நீங்கள் கேட்டால், சிவனைப் பற்றிய நூல்கள் சிவனே பெரியவர் என்று கூறுகின்றன. விஷ்ணுவைப் பற்றியவை விஷ்ணுவே பெரியவர் என்று கூறுகின்றன. ஒவ்வொரு பக்தருக்கும் அவர் வழிபடும் கடவுளே பெரியவர்'' என்ருர். இரண்டு கூட்டத்தினரும் அவருடைய தீர்ப்பை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டு கலவரம் ஏதும் செய்யாமல் சென்றனர்.

தாந்திரிக சாதனைகளைப் பழகியதன் விளைவாகப் பத்மலோசனர் சில அற்புதமான சக்திகளைப் பெற்றிருந்தார். அவர் எப்போதும் தம் பக்கத்தில் ஒரு பாத்திரம் நிறையத் தண்ணீரும் ஒரு கைக்குட்டையும் வைத்திருப்பார். ஏதாவது கடினமான பிரச்சினையைத் தீர்க்குமாறு அவர் அழைக்கப்பட்டால் சிறிது தூரம் நடந்து சென்று வந்து பாத்திரத்திலுள்ள தண்ணீரை எடுத்து முகத்தைக் கழுவிக் கொண்டு பின் துண்டால் முகத்தைத் துடைத்துக் கொண்டு வந்து தீர்ப்பு கூறுவார். அவருடைய இஷ்ட தெய்வத்தின் அருளின்படி இதை அவர் செய்துவந்தார். இப்படிச் செய்தால் அவர் கூறும் எந்தத் தீர்ப்பிலும் அவர் செய்யும் எந்த வாதத்திலும் அவரை வெல்ல யாராலுமே முடியாது. இது அவரது மனைவிக்குக்கூடத் தெரியாத ஒரு ரகசியமாகப் பாதுகாக்கப்பட்டு வந்தது. ஏதோ சிந்தனை செய்வதுபோல் கொஞ்சம் நடந்து சென்று வந்து தண்ணீரில் முகம் கழுவுவதாலும் கைகுட்டையால் துடைத்துக் கொள்வதாலும் யாருக்கும் எந்தச் சந்தேகமும் ஏற்பட வழியில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அன்னை காளியின் அருளால் இது தெரிந்துவிட்டது. ஒரு நாள் அவர் அந்தத் தண்ணீர் பாத்திரத்தையும் கைக்குட்டையையும் பத்மலோசனருக்குத் தெரியாமல் எடுத்து ஒளித்து வைத்துவிட்டார். அப்போது பத்மலோசனருக்கு மிகக் கடினமான ஒரு கேள்விக்கு பதில் சொல்லியே ஆக வேண்டிய நெருக்கடி ஏற்பட்டது. பண்டிதர் அதற்குப் பதில் சொல்லுமுன், வழக்கம் போல் தண்ணீர் பாத்திரத்தையும் கைக் குட்டையையும் தேடினுர். அவை அங்கு இல்லாதது கண்டு ஆச்சரியமடைந்தார். அவற்றை ஸ்ரீராமகிருஷ்ணர்தாம் எடுத்து மறைத்து வைத்திருக்கிருர் என்பது அவருக்கு வியப்பூட்டியது. அதிலும் அவர் வேண்டுமென்றே அதைச் செய்திருக்கிருர் என்பதை அறிந்ததும் அவர் அடைந்த ஆச்சரியத்திற்கு அளவே இல்லை. தம் இஷ்ட தெய்வமான காளியைத் தவிர வேறு யாராலும்

அறிந்து கொள்ள முடியாத இந்த ரகசியத்தை அறிந்து கொண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் தம் இஷ்ட தெய்வமான காளியே என்று உணர்ந்து கண்ணீர் மல்கி, குருதேவரைத் தம் இஷ்ட தெய்வமாகப் பாடிப் பிரார்த்திக்கத் துவங்கினுர். இந்த நிகழ்ச்சி பண்டிதர் தம்மை முழுவதுமாக ஸ்ரீராமகிருஷ்ணரிடம் ஒப்படைக்கச் செய்துவிட்டது; அவரிடம் அசைக்க முடியாத நம்பிக்கையை ஏற்படுத்திவிட்டது. இதைக் குறித்துப் பண்டிதர் சொல்லும்போது, ''நான் நல்ல நிலேயை அடைந்ததும் இந்த நாட்டில் உள்ள சமய அறிஞர் களையெல்லாம் கூட்டி ஒரு பெரிய கூட்டம் நடத்தி, நீங்கள் கடவுளின் அவதாரம் என்பதை மெய்ப்பிக்கிறேன். யாருக்குத் தைரியம் இருக்கிறதோ அவர்கள் வந்து எதிர்க்கட்டும்'' என்றுர்.

கீழ்வரும் நிகழ்ச்சியும் பண்டிதருக்குக் குருதேவரிடம் இருந்த பக்திக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும். 1863-ஆம் ஆண்டு மிகப் பெரிய செலவில் மதுர் ஸ்ரீராமகிருஷ்ணரின் வேண்டுகோளின்படி ஆயிரம் மணங்கு அரிசியும் காய்கறி களும் பருப்பு முதலான உணவுப் பொருள்களும் இவற்றேடு தங்கம், வெள்ளி முதலியவற்றையும் பிராமணர்களுக்குத் தானமாகக் கொடுத்தார். அப்போது மிகச் சிறந்த பாடகர் களேக் கொண்டு ஓர் இசை நிகழ்ச்சியும் ஏற்பாடு செய் திருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரும் அதில் கலந்து கொண்டார். சிறந்த பாடகர்களுக்கு விலே உயர்ந்த சால்வைகள், பட்டாடைகள் முதலியவற்றை நூற்றுக் கணக்கில் பரிசாகத் தந்தார். யார் பாடும்போது ஸ்ரீராமகிருஷ்ணர் பரவச நிலேயில் ஆழ்கிருரோ அவரையே சிறந்த பாடகராகத் தேர்ந்தெடுத்தார் மதுர்.

பத்மலோசனரை இந்த விழாவிற்கும் அழைக்க விரும்பி னுர் மதுர். ஆனுல் மிகவும் வைதிக பிராமணராகிய அவர் தாழ்ந்த குலத்தவரான தன் கோயிலுக்கும் விழாவிற்கும் வருவாரோ என்று பயந்தார். என்றுலும் ஸ்ரீராமகிருஷ்ணர் மூலம் அவருக்கும் அழைப்பு அனுப்பினுர். கல்கத்தா சென்று அவரைச் சந்தித்த ஸ்ரீராமகிருஷ்ணர் அவரிடம், ''ராணி ராசமணியின் காளி கோவிலுக்கு நீங்கள் வருவீர்களா?'' என்று கேட்டார். பண்டிதர் சிறிதும் தயங்காமல், ''ஏன் வரமாட்டேன்? ஒரு தோட்டியின் வீட்டிலும் உங்களோடு சாப்பிடுவேன். அப்படி இருக்க, சூத்திரன் நடத்தும் விழாவில் கலந்து கொள்வது என்பது மிகச் சாதாரண விஷயம்'' என்றுர்.

ஆனுல் பத்மலோசனருக்கு இந்த வாக்குறுதியை நிறை

வேறொரும் வாய்ப்பு கிடைக்காமல் போய்விட்டது. அந்த விழா துவங்குதற்குள் அவருடைய உடல்நிலை குணமடையாமல் மேலும் மோசமாகவே, இறுதிக்காலம் நெருங்குவதை உணர்ந்து தம் கடைசி நாட்களைக் காசியில் கழிக்கத் தீர்மானித்தார். எனவே ஸ்ரீராமகிருஷ்ணரிடம் விடை பெற்றுக்கொண்டு காசிக்குச் சென்றார். சில நாட்களுக்குப் பின் அங்கே காலமாகிவிட்டார்.

பத்மலோசனர் பற்றிய மேலும் ஒரு நிகழ்ச்சியை இங்குக் குறிப்பிட வேண்டும். பத்மலோசனர் மறைந்து நெடுங்காலத்துக்குப் பிறகு ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வந்த அவருடைய பக்தர்களும் சீடர்களும் வெளிப்படையாக எல்லா இடங்களிலும் ஸ்ரீராமகிருஷ்ணர் கடவுளின் அவதாரம் என்று பிரச்சாரம் செய்தார்கள். இதைக் கேட்டு வெறுப்படைந்த அவர் அதை நிறுத்திக் கொள்ளும்படி எரிச்சலோடு கூறியபோது, ''இப்போது நான் கடவுள் அவதாரம், கடவுள் அவதாரம் என்று ஊரெல்லாம் சொல்வது யார் தெரியுமா? ஒருவன் டாக்டர். இன்னொருவன் நாடகக் கம்பெனியின் மேனேஜர். இவர்கள் என்னைப் பார்த்துவிட்டு என்னைக் கடவுளின் அவதாரம் என்கிறார்கள். அப்படிச் சொல்வதன் மூலம் அவர்கள் எனக்கு மிகுந்த நன்மை செய்வதாகவும் உலகின்முன் என் பெருமையை நிலைநாட்டிவிட்டதாகவும் நினைக்கிறார்கள்.... ஆனால் கடவுள் அவதாரம் என்றால் என்ன என்றாவது அவர்களுக்குத் தெரியுமா? நீண்ட நாட்களுக்கு முன்பே—இவர்கள் என்னைப் பற்றிய இந்தப் புதிய கண்டுபிடிப்பை அறிந்து கொள்வதற்கு முன்பே சாஸ்திரங்களில் மகா வல்லவர்களாகவும் வாழ்நாளையே இந்தக் கடவுள் அவதாரத்தைப் பற்றிய சாஸ்திரங்களைக் கற்பதில் செலவழித்தவர்களும், எல்லாவகையான தத்துவ சாஸ்திரங்களிலும் மகா வல்லமை படைத்தவர்களுமான பண்டித பத்மலோசனர் போன்றோர் இங்கே வந்து வெளிப்படையாக என்னைக் கடவுள் அவதாரம் என்று திரும்பத் திரும்ப, நான் அதைக் கேட்டு எரிச்சல் அடைந்து சலித்துப் போகும்வரை கூறியிருக்கிறார்கள். எனவே அந்தப் பழைய கதையையே இவர்கள் திரும்பத் திரும்பச் சொல்வதில் என்ன பயன்?'' என்றார்.

ஆரிய சமாஜத்தை நிறுவிய சுவாமி தயானந்த சரஸ்வதி ஒரு முறை கல்கத்தாவிற்கு வந்து பக்கத்துக் கிராமத்து மாளிகை ஒன்றில் தங்கியிருந்தார். அவர் பெரிய அறிஞர் என்னும் புகழ் எங்கும் பரவி இருந்தாலும், அவ

ருடைய புகழ்பெற்ற ஆரிய சமாஜக் கொள்கைகளை அவர் அப்போது உருவாக்கவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் அவரைத் தேடிச் சென்று சந்தித்தார். அதைப் பற்றிப் பிற்காலத்தில் தம் சீடர்களிடம் சொல்லும்போது, 'நான் அவரைப் பார்க்கச் சிந்தி மாளிகைக்குச் சென்றேன். அவரிடம் கொஞ்சம் தெய்விக சக்தி இருந்தது. ஆன்மிக உணர்வு அவரிடத்தில் பொங்கி எழுந்து கொண்டேயிருந்ததால் அவர் மார்பு எப்போதும் சிவந்து கிடந்தது. இரவும் பகலும் அவர் சாஸ்திரங்களைக் குறித்தே விவாதித்தார். இலக்கணத்தின் மூலம் சாஸ்திரங்களின் உண்மையான பொருளைத் எல்லாம் திரித்துக் கூறி ஏதாவதொரு புதிய சமயப் பிரிவை உண்டாக்க ஆர்வம் கொண்டிருந்தார்'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் சந்தித்த மற்றொரு மிகப் பெரிய அறிஞர் பண்டித ஜய்நாராயணர். அவரைப்பற்றிக் குருதேவர் கீழ் வருமாறு கூறியுள்ளார்: ''அவர் சிறந்த அறிஞர். இருந்தும் இந்த அறிஞர்களுக்கே இயல்பான அகந்தை அவரிடம் சிறிதும் இல்லை. அவர் தம் மரணத்தைக் குறித்து முன்பே தெரிந்துகொண்டு 'நான் காசியில் இறப்பேன்' என்று கூறினார். உண்மையில் அப்படியே நடந்தது.''

ஸ்ரீராமகிருஷ்ணர் அடிக்கடிச் சந்தித்த மற்றொரு பெரிய பக்தர் கிருஷ்ண கிஷோர். அவர் இராமரை வழிபடுபவர். அரியதாகாவில் அவர் வாழ்ந்தார். அவரைப்பற்றிக் குருதேவர் சொல்லும் போது, ''எனக்கு முதலில் தெய்வீகப் பரவச நிலை ஏற்பட்டு அதிலேயே ஆழ்ந்து கிடந்தபோது என்னால் உலக ஆசை பிடித்த சாதாரண மக்களோடு இருக்கவே முடியாது. நான் கடவுள் வெறி பிடித்துக் கடவுளைப் பற்றிய சொற்களையே கேட்க விரும்பினேன். மகாபாரதம் எங்கே நடக்கும்? பாகவதம், அத்யாத்ம ராமாயணம் எங்கே நடக்கும்? என்று அலைந்தேன். அத்யாத்ம ராமாயணம் கேட்கச் சில நேரங்களில் கிருஷ்ண கிஷோரிடம் செல்வேன். அவருக்குக் கடவுளிடம் அற்புதமான நம்பிக்கை இருந்தது. ஒரு முறை அவர் பிருந்தாவனம் சென்றிருந்த போது தாகத்தால் தவித்து ஒரு கிணற்றின் அருகே சென்றார். அங்கே ஒருவன் தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்தான். கிஷோர் அவனிடம் தமக்குக் குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் எடுத்துக் கொடுக்கும்படிக் கேட்டார். அவனோ தான் மிகவும் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவன் என்றும் அவருக்குத் தண்ணீர் எடுத்துத் தருவது பாவம் என்றும் கூறினார்.

உடனே கிருஷ்ண கிஷோர் அவனிடம், 'சிவ சிவா' என்று சொல்லச் சொன்னார், அவன் சொன்னதும், 'நீ உயர் குலத்தவன் ஆகிவிட்டாய், உன் கையாலேயே தண்ணீர் இறைத்துக் கொடு' என்றார். கடவுளின் திருநாமத்தில் அவருக்கு அவ்வளவு நம்பிக்கை!

''மற்றொரு சமயம் சாது ஒருவர் அரியதாகாவிற்கு வந்திருந்தார். அவரைக் காண விரும்பிய நான், ஹலதாரியிடம், 'நானும் கிஷோரும் அரியதாகாவில் வந்துள்ள ஒரு சாதுவைக் காணப் போகிறோம், நீயும் வருகிறாயா?' என்றேன். அதற்கு அவர், 'எலும்பும் தோலும் இரத்தமும் கலந்த ஒரு கூண்டைப் பார்ப்பதால் என்ன பயன்? நான் வரமாட்டேன்' என்றார். அவர் கீதையும் வேதாந்தமும் படிப்பது வழக்கம். அதனால்தான் அப்படிச் சொன்னார். நான் இதைக் கிஷோரிடம் சொன்னதும் அவருக்கு அளவற்ற கோபம் வந்து விட்டது. 'அப்படிப் பேச அவனுக்கு எவ்வளவு இறுமாப்பு இருக்க வேண்டும்? இறைவனை எப்போதும் பூஜிக்கின்றவரை' இராமரை எப்போதும் தியானம் செய்கின்றவரை—அவருக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்துவிட்ட ஒருவரை அப்படி இழிவாகப் பேசுவதா? ஒரு பக்தனின் உடம்பு இறைவன் உறையும் திருக்கோவில் என்பதை ஹலதாரி தெரிந்து கொள்ள வேண்டும்' என்றார். ஒருவன் இறைவன் திருநாமத்தை ஒரு முறை சொன்னால் அவன் தூயவனாகி விடுவான் என்பது கிஷோரின் நம்பிக்கை. ஆனால் ஹலதாரி இதை மறுப்பான். 'மிகப் பெரிய பக்தனாகிய அஜாமிளன் கூட கடுமையான தவம் செய்தே தூய்மை அடைந்தான். எனவே ஒரு முறை 'நாராயணா' என்று சொல்வதே ஒருவனைத் தூய்மைப் படுத்தி விடாது' என்பான். இது கிஷோருக்கு மிகுந்த வெறுப்பை ஊட்டியது. எனவே தட்சிணேசுவரக் கோயிலில் ஹலதாரியைப் பார்க்கும் போதெல்லாம், கிஷோர் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொள்வார்.''

''ஒரு நாள் கிஷோர் என்னிடம், 'ஏன் நீ பூணூல் போட்டுக் கொள்வதில்லை?' என்றார். 'தெய்விகப் புயல் ஒன்று என் மீது அடித்தது. அதில் என்னிடமிருந்த எல்லாமே பறந்து விட்டது. என் வாழ்வில் பெரும் புரட்சியை ஏற்படுத்தி விட்டது. ஆடையே என் உடம்பின்மீது நிற்காமல் பறக்கும் போது இந்தப் பூணூலை எப்படிப் பாதுகாத்துக் கொள்வது? உனக்கும் என்னைப் போலக் கடவுள் வெறி ஏற்பட்டால் அப்போது இதையெல்லாம் புரிந்துகொள்வாய்!' என்றேன். உண்மையில் நான் சொல்லியது நடந்தது. அவருக்கும் கடவுள் பைத்தியம் பிடித்து விட்டது. வீட்டின் ஒரு மூலையில்

உட்கார்ந்து கொண்டு யாரிடமும் எதுவும் பேசாது ''ஓம்! ஓம்!' என்று சொல்லிக் கொண்டே இருந்தார். அவருடைய மனைவி மக்கள் எல்லோரும் அவருக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்று எண்ணி மருத்துவரை அழைத்து வந்தார்கள். மருத்துவரைக் கண்டதும் கிஷோர், 'மருத்துவம் செய்யப் போகிறீர்களா? மிகவும் நல்லது. என் நோயைத் துரத்தி விடுங்கள். நான் 'ஓம்' என்று சொல்வதை மட்டும் துரத்தி விடாதீர்கள்' என்ருர். வளர்ந்த தம்முடைய இரு பிள்ளைகளும் காலமான போது அவர் மிகுந்த துயருற்ருர். அவர்களில் ஒருவன், 'ராமா! ராமா' என்று சொல்லிக் கொண்டே உயிர் விட்டான். அதைப் பற்றிச் சொல்லும் போது 'ஆ! அவன் இராமர் பெயரை உச்சரித்தபடியே இறந்தான். அவனைக் குறித்து அழக் கூடாது' என்பார். என்ருலும் அவ்வப்போது அவனை நினைத்துக் கண்ணீர் விட்டுக் கதறுவார்'' என்று கூறியுள்ளார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் மிகுந்த அன்போடு அடிக்கடிக் கூறும் இரண்டு இளம் பக்தர்களைப்பற்றிக் கூறுவதோடு நூலில் இந்தப் பகுதியை முடித்து விடலாம். இந்தக் காலத்தில் அவர்கள் இருவரும் காளி கோயிலுக்கு வந்து அடிக்கடி ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்திப்பார்கள். ஒருவன் பெயர் கோவிந்தன்; மற்றவன் கோபால். வராநகரில் வாழ்ந்த எண்ணெய் வியாபாரியின் மகன் கோவிந்தன். சிறுவனுக இருந்தாலும் மிகுந்த பக்தியுடையவனுக இருந்தான். பெரும்பாலும் ஸ்ரீராமகிருஷ்ணரோடு இருந்து அவர் பாடும் பாடல்களையும் அவருடைய ஆன்மிக அனுபவங்களையும் கேட்டுக் கொண்டு இருப்பான். குருதேவர் அவனை மிகவும் விரும்பினுர். அடிக்கடித் தட்சிணேசுவரம் வரும்படிக் கூறுவார். ஒரு நாள் அவன் தன் நண்பன் கோபாலை அழைத்து வரக் குருதேவரிடம் அனுமதி கேட்டான். கோபால் ஆன்மிக விஷயங்களைக் கேட்கும்போது அடிக்கடித் தெய்விகப் பரவசம் அடைந்துவிடுவான். ஒரு நாள் கோபால் ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவடிகளைத் தொட்டு வணங்கி இந்த உலகம் அவனுக்கு மிகுந்த வேதனை தரும் இடமாக இருப்பதாகவும் அதிலிருந்து போய்விடப் போவதாகவும் கூறினுன். அதன் பிறகு பல நாட்கள் வரை குருதேவர் அவனைப் பற்றி ஒன்றுமே தெரிந்துகொள்ள முடியவில்லை. பிறகு ஒருநாள் கோவிந்தன் வந்து, கோபால் இறந்து போய் விட்டான்' என்று கூறினுன். அதைக் கேட்டுக் குருதேவர் திகைத்து நின்று விட்டார். சில நாட்கள் கழித்து கோவிந்தனும் இறந்து போனுன்.

# 17. இராம்லாலா

இராம்லாலா நிகழ்ச்சி ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கையைப் படிப்பவர் மனத்தில் மிகவும் ஆழமாகப் பதியும் ஒன்றாகும். ஏனென்றால் இது கடவுளை எப்படி மனிதன் உணர்வின் வழியாக அடைய முடியும் என்பதைக் காட்டு கிறது. இதன் மூலம் கடவுள் ஒரு கடுமையான எஜமானனு மல்ல; கண்களுக்குப் புலனாகாத—மனத்தால் நினைக்க முடி யாத ஒன்று அல்ல; நமக்கு மிகவும் நெருங்கியவரும், எல்லோரைக் காட்டிலும் நம்மிடம் அன்பு கொண்டவரும், எப்போதும் பக்தர்கள் தம்மை அறிந்துகொள்ள வேண்டும் என்று விரும்புபவரும் ஆவார் என்பது எடுத்துக்காட்டப் பட்டுள்ளது. நாம் அவரைத் தொட ஒரு கையை நீட்டினால் அவரும் நம்மைத் தொட மிகுந்த கருணையோடும் அன்போடும் தம் இரு கைகளையும் நீட்டுகிறார். அத்தகைய கருணை மயமானவர் அவர்.

ஏறக்குறைய 1864-இல் ஜடாதாரி முதலில் தட்சிணேசு வரம் வந்தார். இவர் இராம பக்தர். ஓரிடத்தில் நிலை யாகத் தங்காமல் ஊர் ஊராகப் பயணம் செய்யும் சந்நி யாசி. ஸ்ரீராமகிருஷ்ணர் அவரோடு நெருங்கிப் பழகியபோது அவரிடமிருந்து பல்வேறு வழிபாட்டு முறைகளைக் கற்றுக் கொண்டார். குருதேவர் அடிக்கடி ஜடாதாரியின் இணை யற்ற பக்தியையும் கடவுளுக்காக அவர் ஏங்கித் துடித்த துடிப்பையும் பற்றிக் கூறுவார். இராம்லாலா அல்லது குழந்தை இராமர் அவருடைய இஷ்ட தெய்வம். அவருக்குச் சேவை செய்வதற்கே தம் வாழ்வை ஜடாதாரி அர்ப்பணித்துவிட்டார். நீண்டகாலம் மிக ஆழ்ந்த தியானத்திலும் வழிபாட்டிலும் மூழ்கி ஜடாதாரி ஆன்மிகத்தில் உயர்ந்த நிலையை அடைந்தார்; இராமரை நேராகக் காணும் பேறு பெற்றார். அவர் மனம் எப்போதும் மிக உயர்ந்த ஆன்மிக நிலையிலேயே நிலைத்திருந் தது. உலக நினைவே அவரிடமிருந்து விலகிவிட்டது. தம்மிடம் வைத்திருந்த குழந்தை இராமர் திருவுருவில் அவர் ஒளிமயமான இராமரை, குழந்தை ராமராக ஆரம்பத்தில் அவ்வப்போதும், பிறகு எப்போதும் பார்த்தார். இந்தக் குழந்தை இராமருக்குச் சேவை செய்வதே அவர் வாழ்வின் ஒரே இலட்சியமாக இருந்தது. அவர்

அந்தக் குழந்தை இராமரைச் சீராட்டினர்; உணவூட்டினர்; அவரோடு தாமும் விளையாடினர்; படுக்கையில் படுக்க வைத்துத் தூங்கச் செய்தார். இந்தச் சாதனைகளில் அவர் தம்முடைய சொந்த சுகம், வசதிகள் எல்லாவற்றையும் மறந்துவிட்டார்.

ஜடாதாரி தாம் எப்போதும் கண்டு கொண்டிருக்கும் குழந்தை இராமரைப் பற்றி யாரிடமும் கூறுவதில்லை. ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அவரால் அதை மறைக்க முடியவில்லை. பல்வேறு தெய்விகச் சாதனைகளோடு நெருக்கமான தொடர்பு கொண்டிருந்த ஸ்ரீராமகிருஷ்ணர் ஜடாதாரியின் இந்த ரகசியத்தைத் தெரிந்து கொண்டார். ஜடாதாரி இடையறாது எப்போதும் அனுபவித்து வரும் பேரானந்தத்தைக் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் அவரைக் காளி கோயிலுக்கு வந்து தங்கும்படி வேண்டினர். அவர் அங்கு வந்து தங்கிய பின் ஸ்ரீராமகிருஷ்ணர் மணிக்கணக்காக அவருடைய பரவச பக்தியைக் கவனித்தபடியே இருந்தார்.

பிற்காலத்தில் குருதேவர் இதைப்பற்றி தம் சீடர்களிடம் கூறும்போது, ''பாபாஜி!* வாழ்க்கை முழுவதுமே இராம பக்தராக இருந்தார். குழந்தை இராமரின் திருவுருவை அவர் போகுமிடமெல்லாம் தம்முடனே கொண்டு சென்றார். பிச்சையெடுத்து என்ன கிடைக்கிறதோ அதைச் சமைத்து இராம்லாலாவுக்குப் படைப்பார். இராம்லாலா அந்த உணவை உண்பதைத் தெளிவாகக் காண்பார். சில நேரம் இராம்லாலா அவர் படைக்கும் உணவு போதாது என்று வேறு பொருள்களைக் கேட்பான். ஜடாதாரி இரவும் பகலும் இந்தக் குழந்தை இராமரின் சேவையில் மூழ்கியவராக எந்த நேரமும் பேரின்பத்தில் ஆழ்ந்திருப்பார். நான் இராம்லாலா செய்யும் எல்லாக் காரியங்களையும் என் கண்களாலேயே காண்பேன். அவைகளைக் கவனித்தபடியே பாபாஜியோடு இருப்பேன். இப்படியே பல நாட்கள் நகர்ந்தன. நாட்கள் செல்லச் செல்ல இராம்லாலா என்னோடு நெருங்கிப் பழக ஆரம்பித்துவிட்டான். நான் ஜடாதாரியோடு இருக்கும் வரை இராம்லாலா மிகவும் மகிழ்ச்சியோடு இருப்பான். நான் அங்கிருந்து வந்ததுமே, அவனும் பின்னாலேயே என் அறைக்கு வந்து விடுவான். என்ன சொன்னாலும் கேட்க மாட்டான். முதலில் நான் இதை வெறும் மனப் பிரமையாக இருக்கும் என்றெண்ணினேன். ஏனென்றால்

*வைஷ்ணவ சாதுவை இப்படி அழைப்பார்கள்.

தம் வாழ்நாள் முழுவதும் அவனுடைய சேவையில் கழிக்கும் ஜடாதாரியை விட்டு விட்டு என்னிடம் அவன் எப்படி வர முடியும்? நான் என்னையே ஏமாற்றிக் கொள்கிறேனு என்று பலமுறை சந்தேகப்பட்டேன். ஆனால் இராம்லாலா என் அறைக்கும் வரும் காட்சி நாள்தோறும் தொடர்ந்தது. நான் உங்கள் எல்லோரையும் இப்போது எப்படித் தெளி வாகக் காண்கிறேனே, அதுபோலவே இராம்லாலாவைக் கண் டேன். சிறிது நேரம் அவன் என்முன் நடனமாடுவான். அடுத்த வினுடி துள்ளி ஓடிவந்து என் முதுகின்மேல் ஏறி உட்கார்ந்து கொள்வான். தன்னைத் தூக்கிக் கொள்ளும்படி என்னை வற்புறுத்துவான். சில நேரங்களில் நான் அவனை என் மடிமீது படுக்க வைத்துக் கொள்வேன். ஆனால் அவன் மடியின்மீது படுக்கமாட்டான். கடும் வெயிலில் வெளியே ஓடுவான். முள் புதர்களிலிருந்து பூக்களைப் பறிப்பான். அல்லது கங்கையில் குதிப்பான். 'ஏய், வெயிலில் ஓடாதே. கால்கள் கொப்புளித்துவிடும்' என்று கண்டிப்பேன். அவன் கேட்கவே மாட்டான். என்மீது அவனுடைய அழகான கண்களைப் பதித்தபடியே புன்முறு வல் செய்வான்; குறும்புக்காரச் சிறுவன்போல் பரிகாசம் செய்வான். உதட்டினைப் பிதுக்கியும் கண்களைக் கோணலாக்கியும் எனக்கு ஆழகு காட்டுவான். சில நேரங்களில் எனக்குப் பொறுமையெல்லாம் பறந்து விடும். 'டேய். போக்கிரிப் பயலே! நில் அங்கேயே. உன் தோலை உரித்துவிடுவேன்' என்று சொல்லி அவனைப் பிடித்து இழுத்துப் பல்வேறு பொம்மைகளை அவனிடம் போட்டு என் அறைக்குள்ளேயே விளையாடும்படிச் சொல்வேன். சில நேரங்களில் அவன் செய்யும் தொந்தரவைப் பொறுக்க மாட்டாமல் கன்னத்தில் அறைந்தும் விடுவேன். கண்களில் வடியும் நீரோடும் நடுங்கும் உதடுகளோடும் அவன் என்னைப் பார்ப்பான். ஆ! அதைப் பார்த்ததும் நான் அவனை அறைந் ததற்காக எவ்வளவு வேதனைப்படுவேன்! அவனை என் மடியில் படுக்க வைத்துக்கொண்டு சமாதானம் செய்வேன். இவைகளெல்லாம் உண்மையில் நடந்தவை.

''ஒரு நாள் நான் குளிக்க, கங்கைக்குப் போனேன். அவனை யும் கூட அழைத்துச் சென்றேன். ஆனால் குளித்து முடித்த பின் அவன் தண்ணீரை விட்டு வரவில்லை. வருமாறு எவ்வளவு கூறியும் பயமுறுத்தியும் கேட்கவே இல்லை. எனக்கோ மிகவும் கோபம் வந்துவிட்டது. 'விருப்பம்போல் விளையாடு' என்று சொல்லிக் கொண்டே அவனைப் பிடித்துத்

தண்ணீருக்குள் அழுத்தினேன். ஆ! மூச்சுவிட முடியாமல் அவன் துடித்தான். பிறகு நான் அப்படிச் செய்த தவறுதலுக்காக என்னையே பெரிதும் நொந்து கொண்டு அவனை என் தோளில் சாய்த்துக்கொண்டு அழுதேன். அப்போது நடந்த மற்றொரு சம்பவம்கூட எனக்கு மிகுந்த மனக் கஷ்டத்தை கொடுத்ததோடு என்னை மிகவும் அழவைத்து விட்டது.

''ஒரு நாள் என்னால் கொடுக்க முடியாததைக் கொடுக்கச் சொல்லி மிகவும் தொல்லை கொடுத்தான். அவன் தொல்லையிலிருந்து விடுபடுவதற்காக நன்றாக உமி நீக்கப்படாத அவலை அவனுக்குத் தின்ன கொடுத்தேன். அதை அவன் மெல்லும் போது கூர்மையான உமி மென்மையான அவனுடைய நாக்கைக் குத்திக் கீறி விட்டது. அந்தக் காட்சியை என்னால் பார்த்துச் சகித்துக்கொள்ள முடியவில்லை. அவனைத் தூக்கி என் மடியின்மேல் அமர்த்தி வைத்துக் கொண்டு, 'ஆ! உன் தாய் கௌசல்யா உனக்கு வெண்ணெயும் இனிப்பும் மிக மிகக் கவனமாகத் தருவாளே! என்ன மடமை! இந்தக் கரடுமுரடான அவலை நான் புத்தியில்லாமல் உனக்குத் தந்துவிட்டேனே' என்று அழுதேன்.'' இந்த நிகழ்ச்சியை நினைவு கூர்ந்தபோது ஸ்ரீராமகிருஷ்ணர் அப்போதுதான் அது நடந்தது போன்று மிகுந்த உணர்ச்சி வசப்பட்டுத் தேம்பித் தேம்பி அழுதார். கேட்டுக் கொண்டிருந்தவர்களின் கண்களிலெல்லாம் கண்ணீர் வழிந்தது. ஆனாலும் அவர்கள் ஸ்ரீராமகிருஷ்ணர் இராம்லாலாவிடம் கொண்டிருந்த அளவு கடந்த பாசத்தின் ஒரு துளியை மட்டுமே உணர்ந்தார்கள்.

''பாபாஜி சில நேரம் சமைத்து வைத்துவிட்டு இராம்லாலாவைக் காணாமல் தேடுவார். மிகுந்த வேதனையோடு என் அறைக்கு ஓடி வருவார். அங்கே இராம்லாலா என்னோடு விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்ப்பார். தன்மீது அன்பில்லாமல் அவன் என்னோடு விளையாடுவதைக் கண்டு மனம் உடைந்தவராய், 'சாப்பாடு தயாராகி விட்டது. நான் உன்னைத் தேடிக் கொண்டிருக்கிறேன். நீயோ உல்லாசமாக இங்கே விளையாடிக் கொண்டிருக்கிறாய்! ஆமாம். இது உன் இயல்புதானே? உன் விருப்பப்படியே செய். உனக்கு இரக்கம் என்பதே இல்லை. கருணையில்லாத கல்மனம் உன்னுடையது. உன் தந்தையை விட்டுக் காட்டுக்கே போய்விட்டாய். மனம் ஒடிந்து உன் தந்தை மரணப் படுக்கையில் இருந்தபோதும் நீ திரும்பிவந்து பார்க்க

மறுத்துவிட்டாய்''* இவ்வாறு திட்டியபடியே ஜடாதாரி அவனை இழுத்துக் கொண்டுபோய்ச் சாப்பிட வைப்பார். இராம்லாலா என்னைவிட்டுப் பிரிய மறுத்ததால் அவனுக்காகவே பாபாஜி தட்சிணேசுவரக் காளி கோயிலில் நீண்ட காலம் தங்கியிருந்தார்.

''தம் அன்புக்குரிய இராம்லாலாவை விட்டுவிட்டு அவரால் போகவும் முடியவில்லை. ஒரு நாள் ஜடாதாரி அழுது கொண்டே என்னிடம் வந்தார். 'இராம்லாலா தம் எல்லையற்ற கருணையினால் என் ஆசையை நிறைவேற்றிவிட்டான். அவரைக் காண விரும்பிய வடிவத்தில் எனக்குக் காட்சி கொடுத்துவிட்டான். ஆனால் இப்போது உங்களை விட்டுவிட்டு என்னோடு வர மறுக்கிறான். அதற்காக நான் வருந்தவில்லை. இங்கே அவன் உங்களோடு மகிழ்ச்சியாக ஆடிப் பாடிக் கொண்டிருப்பதைக் கண்டு நானும் மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன். அவன் சந்தோஷமாக இருப்பதே எனக்கும் மன நிறைவைத் தருகிறது. மகிழ்ச்சியோடு அவனை நான் உங்களிடமே விட்டுவிட்டு என் வழியே போகிறேன்' என்றார். இவ்வாறு கூறி இராம்லாலாவை என்னிடமே விட்டுவிட்டு, தட்சிணேசுவரத்தை விட்டுப் போய்விட்டார். அதிலிருந்து இராம்லாலா இங்கே என்னோடுதான் இருக்கிறான்.''

இதுதான் சுருக்கமான வகையில் ஸ்ரீராமகிருஷ்ணர் இராம்லாலாவிடம் கொண்ட வாத்ஸல்ய பாவ (தாய்-சேய் உறவு) பக்தியாகும். மனித அன்பு கடவுள் அன்பின் சிறு பிரதிபலிப்பாகும். நம் அன்பு பெரும்பாலும் நமக்குக் கிடைக்கும் உலக ஆதாயத்தை வைத்துக் கொண்டும், காலம், இடம், சூழ்நிலை இவைகளை வைத்தும்தான் பிறக்கிறது; மாறுகிறது. ஆனால் தெய்விக அன்பு நிலையானது; காரணமில்லாதது, அதாவது எதையும் எதிர்பாராதது. மரணம் கூடக் கடவுளையும் பக்தனையும் பிரிக்க முடியாது. கடவுள் மிகவும் அருகில் இருக்கிறார். ஆனால் நம் பார்வையோ கோடிக்கணக்கான மிகச் சாதாரண உலக ஆசைகளால் சிதறுண்டு போய்க் கிடக்கிறது. அதனால் கடவுள் நமக்கு வெகு தொலைவில் இருப்பதாகத் தோன்றுகிறார். ஆயிரமாயிரம் மனிதர்கள் தங்கள் காலடியின்கீழ் புதைந்து கிடக்கும் புதையலின் மேல் - அங்கு புதையல் இருப்பதையே அறியாமல் நடந்து போகிறார்கள். ஆனால் ஒரு நிபுணன் அதைப்பற்றிக் குறிப்பாகத் தெரிந்து கொள்கிறான்.

---

*இங்கே இராமாயண நிகழ்ச்சி கூறப்படுகிறது.

தரையைத் தோண்டிப் புதையலை மேலே எடுக்கிறுன். ஆயிரக் கணக்கான ஆண்களும் பெண்களும் இராம்லாலா எனப்படும் குழந்தை இராமர் சிலையைப் பார்க்கிருர்கள். எல்லோருக்குமே அது ஒரு குழந்தையாக இல்லாமல் செப்புப் பொம்மையாகவே தெரிகிறது.

அவர்களுக்கு ஸ்ரீராமகிருஷ்ணர் கண்ட இந்த நிகழ்ச்சியைச் சொன்னுல் வெறும் கதையாகவே தோன்றும். ஆனுல் அவரது மனநிலைக்கும் சாதாரண மனிதர் ஒருவரின் மனநிலைக்கும் தான் எவ்வளவு வித்தியாசம்! உண்மையாகவே இறைவனைத் தேடியும், அவர் தங்கள் குரலுக்குச் செவி சாய்க்கவில்லை என்று யாரால் கூற முடியும்? 'நாங்கள் இரவும் பகலும் கடவுளைக் காணத் துடிதுடித்தோம். ஆனுல் இராம்லாலா ஸ்ரீராமகிருஷ்ணரிடரிம் பேசியது போல் எங்களிடம் பேச வில்லையே' என்று எப்படிச் சொல்ல முடியும்? உலகம் முழு வதும் ஒரே பேச்சு மயமாக இருக்கிறதே ஒழிய யாரும் எதையும் செயலில் காட்டுவதில்லை. ஆனுல் அழைப்பவர்களை நோக்கி ஓடிவர எப்போதும் இறைவன் தயாராக இருக்கிருர். ஒரு பக்தரால் மட்டும் கடவுளை நேரே காண முடிந்தது என்ருல் ஒவ்வொரு பக்தராலும் அது எவ்வளவு கடினமாயினும் கடவுளைக் காண்பது நிச்சயம் முடியக் கூடிய காரியமே. ஆம்! நமது இந்தக் கண்களால் உலகத்தைப் பார்ப்பதைவிட மிகத் தெளிவாகக் இறைவனைக் காண முடியும். அவர் ஒருவர்தான் உண்மையிலேயே ஒளி வீசும் நிலையான பொருள். மற்றவை எல்லாம் அவருடைய வெறும் நிழல்தான். தூய்மையான இதயத்தோடு சரியான வழியில் அவரைத் தேடுவோர் நிச்சயம் அவரைக் காண்பார்கள். ஆனுல் இதில் உள்ள தொல்லை என்னவென்ருல் கடவுளைக் காண்பதற்கு அவசிய மான சாதனைகளை நாம் செய்யத் தயாராக இல்லாததுதான். உலகப் பொருள்களைப் பெறுவதற்காக - பணம், பதவி, சொத்து இவைகளைப் பெறுவதற்காக நாம் ஆண்டுக் கணக்கில் அவதியுறுகிரும். பொறுமையோடு காத்திருக் கிரும். ஆனுல் விலைமதிக்கவே முடியாத கடவுளைக் காண் பதற்கு நம்மிடம் இருக்க வேண்டிய பொறுமை இல்லை. இதனுல் தான் நாம் தோல்வியடைகிரும். ஸ்ரீராமகிருஷ் ணர் அதிசயிக்கத் தக்கவகையில் துறவறத்தை மேற்கொண்டு ஒரே மனத்தோடும், பொறுமையோடும் உற்சாகத்தோடும், வைராக்கியத்தோடும், தியானம் முதலிய சாதனைகளைப் பழகி கடவுளைக் காணும் முயற்சியில் தம்மை ஈடுபடுத்திக்

கொண்டார். அதனால் மிகக் குறுகிய காலத்திலேயே அவர் வெற்றியடைந்தார். ஆன்மிக வரலாற்றில் அவருக்கு ஈடான வர்கள் எவருமே இல்லை.

'தாந்திரிக சாதனைகள் முடிந்ததும் ஸ்ரீராமகிருஷ்ணர் ஏன் வைஷ்ணவ மார்க்கத்தில் ஈடுபட்டு அதன் ஒரு பகுதி யாகக் குழந்தை இராமரின் காட்சியைப் பெற்றார்?' என்று கேட்டால், அதற்குப் பல காரணங்கள் உள்ளன. முதல் காரணம் அவருடைய குணத்தில் அமைந்திருந்த பல்வேறான இயல்புகள். பற்று சிறிதுமே இல்லாத, பாறைபோல் உறுதி யான ஞானியாக அவர் இருந்தார்; அதே சமயம் பனி யைப் போல் உருகிவிடும் கருணையே வடிவான பக்தராகவும் அவர் இருந்தார். தம் சீடர்களுக்கு மிகக் கண்டிப்புள்ள எஜ மானராகவும், ஒழுக்கக் கட்டுப்பாடுள்ள ஆசிரியராகவும் இருந்தாலும் அவர்களிடம் தாயைப் போன்று மிகுந்த அன்பும், அக்கறையும் கொண்டவராக இருந்தார். அவ ருடைய இத்தகைய போக்கு சாதாரண நிலையிலிருந்து பார்த்தால் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாகத் தோன்ற லாம். உயர்ந்த நிலையில் இருந்து பார்த்தால் அவை கட வுளிடம் மனம் செல்வதற்குரிய பல்வேறான நிலைகள் என்பது தெரியும்.

பொதுவாகச் சாதகர்கள் ஏதாவது ஒரு சாதனை மூலம் கடவுளை அடைந்துவிட்டால் அதோடு மன அமைதிகொண்டு விடுவார். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணரோ எத்தனை வழிகளில் காணமுடியுமோ அத்தனை வழிகளிலும் கடவுளைக் காண ஆவல் கொண்டார். அதில் அவருக்குக் களைப்போ சலிப்போ ஏற்படவே இல்லை. ஒரு வழியில் வெற்றி கண்ட உடனே அடுத்த சாதனையைத் தொடங்கிவிடுவார். அவரு டைய வாழ்க்கை முழுவதுமே கடவுளைப் பல்வேறு வழிகளில் காண்பதும் அவருடைய பல்வேறான குணங்களில் ஆழ்ந்து மகிழ்வதாகவுமே இருந்தது.

இரண்டாவது, அவர் வைஷ்ணவக் குடும்பத்தில் பிறந்தவர் என்பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும். அவருடைய தந்தை மிகச் சிறந்த இராம பக்தர். அத் தகைய சூழலில் பிறந்து வளர்ந்தவரான அவர், இயல் பாகவே வைஷ்ணவ நெறியில் ஈடுபாடு உடையவராக இருந்தார். அதனாலும் இராமரைக் காண்பதில் ஆவல் கொண்டார்.

கடைசியாக, ஸ்ரீராமகிருஷ்ணருக்குத் தாந்திரிக சாதனை களைக் கற்பித்தவரான பிராம்மணியும் வைஷ்ணவ நெறியை

பின்பற்றுபவர். எனவே தாந்திரிகச் சாதனை முடிந்ததும் வைஷ்ணவ சாதனையில் அவர் மனம் பற்றுக் கொண்டது மிகவும் இயல்பான ஒன்றாகும்.

தம் சாதனையில் ஆரம்பகால நான்கு ஆண்டுகளில் அவர் அமைதியான சாந்த **பா**வத்தை அல்லது எஜமானனிடம் வேலைக்காரன் கொள்ளும் தாஸ்ய **பா**வத்தைக் கடைப்பிடித்தார். அனுமனைப் போலவே பக்தி செலுத்திச் சீதையின் காட்சியை அவர் பெற்றதை முன்பே கண்டோம். சில நேரங்களில் அவர் கிருஷ்ணனின் நண்பர்களான ஸ்ரீதாமன், சுதாமன் போன்று இறைவனைத் தோழனாக எண்ணும் நெறியையும் (சக்ய **பா**வம்) பின்பற்றிச் சாதனை செய்தார். இத்தகைய பல்வேறான வைஷ்ணவ வழிபாட்டு முறைகளைக் கடைப்பிடித்து வெற்றி பெற்றார். இப்பொழுது கடவுளை அடைவதற்குப் பின்பற்ற எஞ்சியிருந்த வாத்ஸல்யம் (குழந்தையிடம் பெற்றோர் கொள்ளும் உறவு) மதுர **பா**வம் (காதலி, காதலனிடம் கொள்ளும் உறவு) முதலிய நெறிகள் மூலம் சாதனைகளைத் துவங்கினார்.

வாத்சல்ய **பா**வத்தை ஸ்ரீராமகிருஷ்ணர் பின்பற்றும் போது அவர் ஒரு பெண்ணாகவே மாறிவிட்டார். இயல்பாகவே அவரிடம் மிகுந்திருந்த பெண்மைக் குணங்கள் இதற்குப் பெரிதும் துணை செய்தன. அவர் தம்முடைய ஆண் தன்மையை முற்றிலும் மறந்து, பேச்சிலும் ஜாடையிலும் பெண்ணாகவே மாறிவிட்டார். அப்போது அவர் வாழ்ந்திருந்த மதுர் குடும்பத்துப் பெண்களால்கூட அவரை ஆண் என்று பல நேரங்களில் கண்டு பிடிக்க முடியவில்லை. துர்க்கா பூஜையின் போது அன்னையின் வேலைக்காரியைப் போல் உடையணிந்து கொண்டு அன்னைக்குச் சாமரம் வீசுவதும் மற்றும் பல விதமான சேவைகளையும் செய்வார். இந்த நேரத்தில் அவர் ஜடாதாரியைச் சந்தித்து இராம்லாலாவுடன் கொஞ்சியது அவர் இதயத்தில் பெற்றோர்க்கு உரிய பாசத்தை மிகவும் பெருக்கிவிட்டது. கௌசல்யாவிற்குக் குழந்தை இராமரிடம் எத்தகைய பாசம் இருந்ததோ அதே பாசம் அவருக்கு ராம்லாலாவிடம் ஏற்பட்டது. ஜடாதாரி தட்சிணேசுவரத்தை விட்டுப் புறப்படுவதற்கு முன் ஸ்ரீராமகிருஷ்ணரை வாத்சல்ய முறையில் சாதனை செய்யத் தீட்சை அளித்துவிட்டுச் சென்றார். தங்கு தடையற்ற ஆர்வத்தோடும் உற்சாகத்தோடும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அந்தச் சாதனையில்

ஈடுபட்டார். குறுகிய காலத்திலேயே அதில் வெற்றி பெற்று குழந்தை இராமரை எந்த நேரமும் தரிசித்துக் கொண்டு இருந்ததோடு அதே தசரதன் மைந்தனுகிய இராமரே இந்த அண்ட சராசரங்களாகவும் அதில் உள்ள பொருள்களாகவும் தூய்மையே வடிவான பிரம்மமாகவும் எங்கும் பரவி இருப்பதையும் கண்டார். முன்பு ஆரம்ப காலத்தில் யாருடைய துணையும் இல்லாமல் தாமே மிகவும் முயன்று எந்தப் பிரம்மத்தையும் கண்டாரோ, அதே பிரம் மத்தை வாத்ஸல்ய பாவத்தின் மூலமும் கண்டார்.

# 18. பிரேம பக்தி

ஸ்ரீராமகிருஷ்ணர் அடுத்து வைஷ்ணவ சாதனைகளில் மிகவும் உயர்ந்ததும் கடினமானதுமாகிய மதுர பாவனையைப் பின்பற்றத் துவங்கினார். மதுர பாவம் என்பது இறைவனைக் காதலனாகவும் தன்னைக் காதலியாகவும் கொண்டு பக்தி செலுத்தி, அவரை அடைகின்ற முறை. வைஷ்ணவ சமயத்தில் பக்தியை அடிப்படையாக வைத்துச் செய்யப் படும் ஐந்து வகையான சாதனைகளைப் பற்றிச் சுருக்கமாக முன் பகுதிகளில் கண்டோம். இவ்வைந்து வகையான பக்திச் சாதனைகளில் படிப்படியாக இறைவனின் பரந்த பெருமையையும் பராக்கிரமங்களையும் பற்றி நினைப் பது குறைந்துகொண்டே வரும். பக்தன் மென்மேலும் சுதந்திரமுடையவனாகி தான் வணங்கும் தெய்வத்தோடு நெருங்கி வருவான். வணங்கும் பக்தனுக்கும் வணங்கப் படும் கடவுளுக்கும் இடையே ஏற்படும் நெருங்கிய உறவால், இறுதியாக இருவருமே ஒருவரில் ஒருவர் இணைந்து விடுகின்றனர். இந்த இணைப்பு மனத்தளவில் மட்டுமின்றி பக்தனின் உடலில்கூடப் பலவகையான மாற்றங்களை ஏற்படுத்துவதை நாம் ஆன்மிகப் புருஷர்களின் வரலாற்றில் காண்கிறோம். இந்நெறியில் காதலி, காதலனைப் பற்றி எப்படி உடலும் உள்ளமும் உருக நினைத்து இடையறாது ஏங்கு வாளோ அப்படி பக்தனும் கடவுளை நினைத்து ஏங்குகிறான். இதில் சாதி, மதம். ஒழுக்கம் போன்ற எந்தத் தடைகளும் இல்லை. காதலி தன் காதலனைத் தேடி எல்லாத் தடைகளையும் தூளாக்கிக் கடந்தபடிச் செல்கிறாள். தன் காதலனை அடைவதில் மட்டுமே மகிழ்ச்சியும் நிறை வும் காண்கிறாள். இத்தகைய சாதனைமுறை ஸ்ரீசைதன்ய ராலும அவருடைய சீடர்களாலும் பெரிதும் வளர்க்கப் பட்டது.

இத்தகைய பிரேம பக்தி பிருந்தாவனத்தில் கிருஷ்ண னுக்கும் கோபியர்களுக்கும் இடையே ஏற்பட்டதை நம் இந்து சமயப் புராணங்களில் காண்கிறோம். கோபியர்கள் அனைவரும் கிருஷ்ணனிடம் கொண்ட காதலில் வெறிபிடித்தவர்களா கவே ஆகிவிட்டனர். அவர்கள் தங்கள் சொந்த சுகத்தைப் பற்றிக் கவலைப்படவே இல்லை. அவர்களுடைய இலட்சிய

மெல்லாம் தங்கள் உடல், மனம், ஆத்மா அனைத்தையும் ஈடு இணையற்ற அழகனுன தங்கள் கண்ணனை மகிழ்ச்சிப் படுத்துவதற்காக அர்ப்பணிப்பதிலேயே இருந்தது. பக்தனின் மனத்தில் கடவுளிடம் ஏற்பட்ட இந்த அளப்பரும் பக்தியைப் புராண ஆசிரியர்கள் இப்படிக் கிருஷ்ணனும் கோபியர்களும் கொண்ட காதலாக - உலக நடைமுறையில் காணப்படும் காதலாக-அமைத்துக் காட்டுகிருர்கள்.

நடைமுறை உலகில் காணும் காதலன் காதலியர்களின் உணர்ச்சியை-உணர்வை இந்தப் பக்தி பாவத்தில் காட்டிய போது கோபியர்கள் அனுபவித்த காதல் உடல் உணர்வை யெல்லாம் கடந்த பேரின்பமாகக் கருதப்பட்டது. ஸ்ரீராமகிருஷ்ணர் தம் அனுபவத்தின் மூலம் கோபியர்கள் கண்ட இன்பம் இத்தகையதே என்று கூறியுள் ளார். கோபியர்களின் இந்தப் பக்தி உணர்ச்சி, காதல் மயமான சொற்களில் உணர்ச்சிமயமாக அந்தப் புராணங் களில் வெளிப்படுத்தப்பட்டது. அந்தக் காதலன் - காதலி பாவத்தின் உண்மையான தத்துவத்தைப் பற்றிக் கூறுவது இங்கே சுவையாக இருக்கும்.

உருவமற்றதும் பரமாத்மாவும் சத் - சித் - ஆனந்தமும் புருஷனுமாகிய அண்ட சராசரங்களின் ஆற்றல் கண் ணன் என்னும் ஆண் வடிவில் கருதப்பட்டது. அதே போல் நுட்பமானதாகவோ அல்லது கடல்போல் பெரிய பயங்கர வடிவமானதாகவோ உலகில் உருவத்தோடு இருக் கும் முடிவற்ற இயற்கை பெண்வடிவமாகிய இராதையாகக் கருதப்பட்டது. பிரகிருதியாகிய இந்தப் பெண் வடிவம் புருஷனை அடையக் கைக்கொண்ட நெறியே கோபியர்களாக உருவாக்கப்பட்டது. இந்தக் கோபியர்களின் தலைவி இராதை. அவள்தான் பகவானிடம் மிகவும் நெருக் கம் கொண்டவள்; அவனிடமே ஒன்றிப் போனவள். எனவே அவள்தான் மகா பாவம்; பாவங்கள் அனைத்திலும் பெரிய பாவம். எல்லா பாவங்களும் இணைந்த பாவம். அதே நேரத்தில் அந்த பாவங்கள் அனைத்தும் முடிகின்ற இலட்சியமும் இந்த பாவம்தான். எனவே யாராவது ஒருவர் பகவானை இணையற்ற இந்த பாவங்கள் ஏதாவது ஒன்றின் மூலம் தங்கள் இதயம் முழுவதுமாக தூய்மையான உள்ளத்தோடு வழிபட்டால் அவர்கள் மகா பாவத்தை அடைவார்கள். அதன் வழியாக அவர்கள் தங்கள் இலட்சிய மான முக்தியை - ஈடில்லாப் பேரின்பத்தைப் பெறு வார்கள்

இராதை கிருஷ்ணனிடம் கொண்ட இந்தப் பக்தியை ஒருவர் தன் தியானத்திற்கு அடிப்படையாகக் கொண்டால் - இராதையைப் போலவே தனக்கென்று தனியாக ஓர் ஆனந்தமும் இன்றி கிருஷ்ணரே எல்லா ஆனந்தமுமாகக் கொண்டால் மற்ற எல்லா வகையான பக்திகளும் பாவங்களும் அவரிடம் வந்து சேரும். பக்தனுக்குப் பகவானிடம் இந்தக் காதலியின் பாவம் மட்டும் தோன்றுமானுல் அவருக்குச் சேவகன்போல் சேவை செய்யும் தாஸ்ய பாவம்; அவர் மகிழ்ச்சியில் மகிழ்ச்சியும் துன்பத்தில் துன்பப்படுவதுமாகிய நட்புறவான சக்ய பாவம்; அவருடைய உடல் நலத்தையும் மகிழ்ச்சியையும் நாடி எல்லாக் காரியங்களேயும் செய்வதால் தாய்மை உணர்வு பொங்கும் வாத்சல்ய பாவம் இவையனைத்தும் தோன்றும். முழுமையான பக்தன் யார் என்ருர் இப்படி எல்லா வகையிலும் தன் சுக துக்கத்தைப்பற்றிக் கவலைப்படாமல் கடவுளின் ஆனந்தத்தை கவனிப்பவன்தான்.

இன்றைய விஞ்ஞான யுக மனிதனுக்கு இது கேட்பதற்குப் பொருத்தமற்றதாகவும் அதிர்ச்சியளிப்பதாகவும் இருந்தாலும், வேதாந்திகளுக்கு இந்தத் தத்துவம் பயனுடையதாக விளங்குகிறது. அன்ருட வாழ்க்கையில் அவன் ஒரு நினைவை மனத்திலிருந்து துரத்த மற்ருெரு நினைவை உண்டாக்க முனைவதுபோல் மனிதனிடம் உள்ள கீழான மனநிலையை ஒழித்து அதை உயர்ந்த ஆன்மிகமாக மாற்ற அதாவது ஒரு முள்ளைக் கொண்டே மற்ருெரு முள்ளை எடுக்க இந்த பாவம் உதவுகிறது. இதை விளக்க வேண்டுமானுல் - மனிதர்களிடத்தில் எல்லா நினைவுகளுக்கும் அடிப்படையான நினைவாக இருப்பது தான் ஓர் ஆண் அல்லது பெண் என்று நினைக்கும் உடல் நினைவுதான். ஒருவன் மிக அழுத்தமான உணர்வுகளோடு தான் ஆண் அல்ல, உண்மையில் பெண்ணே என்று நினைத்து எல்லா வகையிலும் - எல்லா நிலையிலும் தன்னைப் பெண்ணுகவே நினைத்துக்கொண்டு - ஆக்கிக் கொண்டு விட்டானுனல், அந்த நிலை அவனுக்கு மிக உயர்ந்த நிலையை அதாவது தான் ஆணுமல்ல, பெண்ணுமல்ல என்ற நிலையை உண்டாக்கிவிடும். இதுதான் மதுர பாவத்தின் அடிப்படைக் கொள்கையாகும். வேதாந்திகளின் நோக்கில் சாதகன் கடவுளைக் காதலனுகவும் தன்னைக் 'காதலியாகவும் கொண்டு சாதனை செய்வானுகில் அவன் உலகைக் கடந்து செல்லும் நிலைக்கு, அதாவது வேதாந்தம் கூறும் உயர் நிலையாகிய அத்வைத நிலைக்கு வந்து விடுகிருன்.

சாதாரண மனிதர்கள் மகா பாவ நிலையை அடைய முடியும் என்னும் வேதாந்திகளின் கொள்கையை வைஷ்ணவ ஆசாரியர்கள் மறுக்கின்றனர். அப்படி மறுப்பது தர்க்க பூர்வமற்றதாகும். ஏனெனில் புராணத்தில் இராதைக்கும் மற்ற கோபியர்களுக்கும் கூறப்படும் வேறுபாடு அவர்களிடம் காணப்பட்ட பக்தியைப் பொறுத்ததே அன்றி ஆளைப் பொறுத்தல்ல என்பது அவர்கள் வாதம்.

ஸ்ரீராமகிருஷ்ணர் ஏதாவது ஒரு சாதனையில் இறங்கினால் அது ஒன்றே உயிராக நினைத்து ஈடில்லா உற்சாகத்தோடு அதில் இறங்குவதையும் அதற்குத் தொடர்பில்லாத எதையும் ஏறெடுத்தும் பார்க்காததையும் முன்பே கண்டோம். மதுர பாவ சாதனை செய்ய வேண்டுமென்ற ஆசை அவர் மனத்தில் எழுந்ததும் தாம் ஆண் என்பதையே மறந்து பெண்போலவே வாழ, புடவை முதலியவைகளையும் நகைகளையும் மதுரிடம் கேட்டு வாங்கிக் கொண்டார். பிறகு ஸ்ரீகிருஷ்ணரிடம் காதல் கொண்டு வாழ்ந்த கோபியரின் வாழ்க்கை போல் அவருடைய வாழ்க்கையும் துவங்கியது. அவருடைய ஒவ்வொரு வார்த்தையும் ஒவ்வோர் உணர்ச்சியும் நடையும் மூச்சும் பேச்சும் கண்ணனைப் பிரிந்ததால் ஏற்பட்ட கோபியரின் துயரமாகவும் வேதனையாகவும் மாறி, அவனைச் சந்திக்க வேண்டுமென்னும் அளவிறந்த ஏக்கமாக உருவெடுத்தது. அவருடைய இந்த வேதனையையும் செயல்களையும் பார்த்தபோது கோபியர் கிருஷ்ணனைப் பிரிந்து எப்படி வேதனைப் பட்டிருப்பார்கள் என்பது தெளிவாகத் தெரிந்தது. அவர் ஆறு மாதங்கள் இந்த நிலையில் இருந்தார். ஒரு வினாடிகூட கண்ணனுடைய பிரிவின் வேதனையிலிருந்து அவர் விலகவேயில்லை.

பிருந்தாவனத்து ஆயர் குலத்துப் பெண்கள் அங்குக் கோயில் கொண்ட காத்யாயனியை வழிபட்டுத் தாங்கள் கிருஷ்ணனைக் கணவனாக அடைய வேண்டும் என்னும் வரத்தை வேண்டினர். எனவே ஸ்ரீராமகிருஷ்ணரும் அன்னை காளியின் வேலைக் காரியாக மாறிச் சேவை செய்தார். ஆனால் அடிக்கடிக் கிருஷ்ணனுக்கும் இராதைக்குமே சேவை செய்தார்.

அந்தக் காலத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் அடிக்கடி மதுரின் குடும்பத்தோடு வாழ்ந்தார். அந்தக் குடும்பத்திலுள்ள பெண்களும் இவர் ஆண் என்று சிறிதும் வெட்கப்படாமல் தங்களில் ஒருவராகவே நினைத்துப் பழகினர். ஒவ்வோர் ஆண்டும் மதுர் வீட்டில் நடக்கும் துர்க்கா பூஜையின்போது

மதுர், ஸ்ரீராமகிருஷ்ணரைக் கலந்து கொள்ள அழைப்பார். ஸ்ரீராமகிருஷ்ணரும் செல்வார். அந்த ஆண்டும் துர்க்கா பூஜை விழாவிற்கு ஸ்ரீராமகிருஷ்ணர் சென்றிருந்தார். அப்போது நடந்த நிகழ்ச்சி ஒன்று ஸ்ரீராமகிருஷ்ணர் எந்த அளவு பெண்ணாகவே மாறிவிட்டார் என்பதைக் காட்டுகிறது. வழக்கம்போல் மதுர் துர்க்கா பூஜைக்காக மிகச் சிறப்பான ஏற்பாடுகள் செய்திருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் விழாவிற்கு வந்திருந்தது விழாவின் சிறப்பை மேலும் அதிகப்படுத்தியது. மதுரும் அவர் மனைவியும் இந்த வாய்ப்பை எண்ணி அளவற்ற மகிழ்ச்சியடைந்தனர்.

முதல் நாள் பூஜை முடிந்தது. மாலை விழாவிற்கான ஏற்பாடு நடந்து கொண்டிருந்தது. ஆனால் எதிர்பாராத தடையொன்று நேரிட்டது. பெண் போலவே புடவை அணிந்து தாம் அன்னை காளியின் வேலைக்காரி என்ற பாவத்தில் அப்போது இருந்த ஸ்ரீராமகிருஷ்ணர் அப்படியே உலகை மறந்து சமாதியில் மூழ்கிவிட்டார். மதுரின் மனைவியால் அவரை அந்த நிலையில் தனியாக விட்டுச் செல்ல முடியவில்லை. ஏனென்றால் சில நாட்களுக்கு முன்புதான் இத்தகைய சமாதி நிலையில் அவர் நெருப்பில் விழுந்துவிட்டார்; உடம்பெல்லாம் எரிந்து போயிற்று. ஆண்டிற்கு ஒரு முறையே நிகழும் அன்னை காளியின் ஆரதி நேரமும் நெருங்கிக் கொண்டே வந்தது. என்ன செய்வதென்று தெரியாது குழம்பிப் போன மதுரின் மனைவி இறுதியாக அவருக்கு ஆபரணங்கள் எல்லாம் பூட்டி, ''அன்னை காளியின் ஆரதி நேரம் வந்துவிட்டது. நீங்கள் அன்னைக்குச் சாமரம் வீச வேண்டாமா? வாருங்கள்! வாருங்கள்!'' என்றாள். காளி என்ற பெயரைக் கேட்டதும் சிறு நினைவு பெற்ற குருதேவர் மகிழ்ச்சியுடன் அவளுடன் சென்றார். ஆரத்தி நிகழ்ச்சி துவங்கியது. பெண்கள் சூழ நின்று கொண்டிருந்த ஸ்ரீராமகிருஷ்ணர் காளிக்குச் சாமரம் வீசத் துவங்கினார். அந்த மண்டபத்தின் மறு கோடியில் ஆண்களோடு மதுர் நின்றிருந்தார். திடீரென்று தம் மனைவியின் பக்கத்தில் வணங்கத் தக்க ஒரு பெண்மணி நின்று காளிக்குச் சாமரம் வீசுவதைக் கண்டார். அந்தப் பெண்மணியை திரும்பத் திரும்பப் பார்த்து, அவ்வளவு மரியாதைக்கு உரியவராக விளங்குபவர் யார் என்று நினைத்துப் பார்த்தார். அவரால் யார் என்று நினைவு கூர முடியவில்லை. ஒருவேளை தம் மனைவியின் தோழியாக இருக்கலாம் என்ற

முடிவிற்கு வந்தார். ஆரதி முடிந்து எல்லாப் பெண்களும் சென்றதும் மதுர் தம் மனைவியிடம் சென்று அந்தப் பெண் யார் என்று கேட்டார். இதைக் கேட்ட அவர் மனைவி மிகுந்த ஆச்சரியமடைந்து, ''ஆமாம்! நம் பாபா பெண் வேடத்தில் இருந்தால் அவரை அடையாளம் கண்டு கொள்வது எல்லோருக்கும் கடினம்தான்'' என்றார்.

இந்தக் காலத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் இருந்த நிலையைப் பற்றி இருதயன் கூறும்போது, ''அவர் பெண் கோலத்தில் பெண்களோடு நின்றிருந்தால் அவருடைய நெருங்கிய சுற்றத்தாரால்கூட அவரை அடையாளம் கண்டு கொள்ள முடியாது. ஒரு முறை மதுர் என்னை அவரது வீட்டில் பெண்கள் வாழும் உட்பகுதிக்கு அழைத்துச் சென்றார். அவர் வீட்டுப் பெண்களோடு சேர்ந்து பெண்ணாக இருந்த என் மாமாவை அடையாளம் கண்டு பிடிக்கச் சொன்னார். ஸ்ரீராமகிருஷ்ணரோடு பல ஆண்டுகள் நான் ஒன்றாக வாழ்ந்திருந்தும் எனக்கு உடனடியாக அவரை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. தட்சிணேசு வரத்தில் மலர் பறிக்க நாள்தோறும் காலையில் என் மாமா பூந்தோட்டத்திற்குச் செல்வார். அப்போது அவர் பெண் களைப் போலவே இடது காலை முதலில் வைத்துச் செல் வதை நாங்கள் கவனித்திருக்கிறோம். பைரவி பிராம்மணிகூட, 'அவர் பூப்பறிப்பதைப் பார்க்கும்போது நான் ஸ்ரீராதை என்று ஏமாந்திருக்கிறேன்' என்பார்'' என்று குறிப்பிட்டுள் ளார்.

தம் இதயக் கடவுளான கிருஷ்ணரைக் காணும் வரம் தருமாறு பிரார்த்தனை செய்த ஸ்ரீராமகிருஷ்ணர், கிருஷ் ணரின் திருவடிகளிலும் ராதையின் திருவடிகளிலும் தம் முடைய ஆற்றல் அனைத்தையும் திரட்டிப் பிரார்த்தனை யிலும் சேவையிலும் மூழ்கினார். அவருடைய அந்தச் சாதனை வேகத்தை எதனாலும் தடுக்க முடியவில்லை. நாட்கள் செல்லச் செல்ல, மாதங்கள் நகர நகர கிருஷ்ணனைப் பிரிந்த அவருடைய துயரம் பயங்கரமாக மாறிப் பொறுக்க முடியாததாகிவிட்டது. உணவு, உறக்கம் எல்லாவற்றை யும் மறந்தார். பகலெல்லாம் கண்ணனின் பிரிவால் ஏற் பட்ட கடுமையான துயரத்தை நினைத்துக் கதறத் துவங் கினார். முன்பு இரண்டு முறை தோன்றி அவரை வாட்டிய உடம்பெரிச்சல் மீண்டும் வந்துவிட்டது. சில நேரங்களில் அந்த அளவற்ற வேதனையால் அவருடைய உடம்பின் மூட்டுக்கள் எல்லாம் இடம்விட்டுக் கழன்று

போய்விட்டதாகத் தோன்றின. அளவற்ற வேதனையின் காரணமாக மூச்சுப் பேச்சு நின்று பிணம்போல் கிடப்பார். இந்த உலகம் இதுபோன்ற பக்தி வெறியை இதுவரை கண்டதேயில்லை.

நாம் முன்பே கண்டவாறு கிருஷ்ணரிடம் சுய நலமே கலவாத பிரேம பக்தி கொண்டிருந்த எல்லா கோபியர்களிலும் இராதையின் பக்தியே ஈடு இணை யற்றதாகும். எனவே புராணங்களும் சாஸ்திரங்களும் சம்பிரதாயமும் கண்ணனின் தூய அன்பிலேயே உயிர் வாழ்ந்திருந்த இராதையின் அன்பைப் பெற்றாலன்றி ஒரு வருக்குக் கண்ணனின் காட்சி கிடைப்பது இயலாத காரியம் என்று கூறுகின்றன. அதனால் ஸ்ரீராமகிருஷ்ணர் இராதையின் வழிபாட்டில் மிகுந்த ஆர்வம் கொண்டு வேறு எந்த நினைவும் இன்றி இராதையையே தியானிக்கத் துவங்கினார். மிகக் குறைந்த நாட்களுக்குள் இராதை அவருக்கு காட்சியளித் தாள். இம்முறையும்கூட முன்பு எல்லாத் தெய்வங்களும் செய்ததுபோல இராதை தோன்றி அவர் உடலில் ஐக்கிய மாகிவிட்டாள். இதைப்பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் கூறும் போது, 'இராதையின் தெய்விக அழகையும் அவளுடைய இனிமையையும் சொல்லுவது என்பது முடியாத காரியம். அவளுடைய தோற்றமே கண்ணனிடம் கொண்ட அள வற்ற காதலால் அவள் தன்னையே மறந்து கிடப்பதைக் காட்டியது. அவளது நிறம் வெளிர் மஞ்சளாக இருந்தது' என்று குடுப்பிட்டுள்ளார்.

இந்தக் காட்சிக்குப்பின் ஸ்ரீராமகிருஷ்ணர் தாமே இராதை என்று நினைக்கத் துவங்கிவிட்டார். இராதையின் குணங்கள் மீது இரவும் பகலும் அவர் எப்போதும் தியா னம் செய்து கொண்டிருந்தது. தாம் ஓர் ஆண் என்ற நினைவையே அவரிடமிருந்து அகற்றி மற்றொரு இராதை யாகவே அவரை மாற்றிவிட்டது. ராதையிடம் இருந்த அத்தனை குணங்களும் அவரிடம் வெளிப்பட்டன. மகா பாவத்தின் வடிவமாகவே அவர் விளங்கினார். இராதை அடைந்ததாகக் கூறப்பட்டுள்ள அதே மகா பாவ உணர்வு களும் சைதன்யர் அடைந்ததாக வரலாறு கூறும் அத்தனை பாவங்களும் அப்போது ஸ்ரீராம கிருஷ்ணரிடம் தோன்றியுள்ளதைக் கண்டு பைரவி பிராம்மணி யும் வைஷ்ணவ சரண் முதலியவர்களும் மிகவும் அதிசயப் பட்டனர். இந்தக் காலத்தில் இயற்றிய சாதனைகளைப் பற்றிக் குருதேவர் குறிப்பிடும்போது, ''பிரேம பக்தி காரண

மாக ஒரு மனிதரிடம் தோன்றும் பத்தொன்பது புக்தி அடையாளங்களை மகா பாவ நிலை என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. சாதாரண மனிதனுக்கு இதில் ஒன்றைப் பெறுவது என்றாலும் வாழ்நாள் முழுவதும் சாதனை செய்ய வேண்டும். ஆனால் இந்த உடம்பில் (தம் உடம்பில்) அந்தப் பத்தொன்பது அடையாளங்களும் சிறிதும் குறையாமல் தோன்றின'' என்று கூறியுள்ளார்.

தம்மை ராதையாக எண்ணி, கண்ணனிடம் ஸ்ரீராம கிருஷ்ணர் கொண்ட பிரேம பக்தியால் மிகக் குறுகிய காலத்தில் கண்ணனின் காட்சி அவருக்குக் கிடைத்தது. காண்போரை மயக்கும் அழகுடன் அவர்முன் தோன்றிய ஸ்ரீ கிருஷ்ணர் அவர் உடலில் கலந்தார். அந்தப் பேரின்பப் பெருநிலையில் ஸ்ரீராமகிருஷ்ணர் இரண்டு, மூன்று மாதங்கள் திளைத்தார். தம்மையே கண்ணனாக எண்ணிய அவருக்கு இப் பிரபஞ்சமும் அதிலுள்ள உயிருள்ள, உயிரற்ற பொருட்கள் அனைத்தும் கண்ணனாகவே தெரிந்தது. பிற்காலத்தில் நீல மலர் ஒன்றைக் காட்டித் தம் சீடர்களிடம், ''என்முன் தோன்றிய கண்ணனின் நிறம் இது போலவே இருந்தது'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியுள்ளார்.

இவ்வாறு ஸ்ரீராமகிருஷ்ணரின் மதுரபாவ சாதனை நிறைவுற்றது. மனம் கவர்ந்த மனமோகனின் காட்சிக்குப் பின்ன அவரது மன ஏக்கம் மறைந்தது. ஆன்மிக அனுபவத்தின் உச்சநிலையான நிர்விகல்ப சமாதி அடையும்வரை அவர் இந்த ஆனந்தப் பேரூற்றில் மூழ்கித் திளைத்தபடியே இருந்தார். இக் காலத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் கண்ட முக்கியமான காட்சி ஒன்றைக் கூறுவதுடன் இந்த அத்தியாயத்தை நிறைவு செய்யலாம்.

ஒருநாள் ஸ்ரீராமகிருஷ்ணர் ராதா கோவிந்தர் கோவில் வராந்தாவில் அமர்ந்து பாகவத புராணம் வாசிப்பதைக் கேட்டுக் கொண்டிருந்தபோது பரவச நிலையில் ஆழ்ந்தார். அப்போது உலகையே ஒளி வெள்ளத்தில் ஆழ்த்துவது போன்ற ஒளியுடன் ஸ்ரீகிருஷ்ணர் அவர்முன் தோன்றினர். அவரது திருப்பாதங்களிலிருந்து ஒளிக் கீற்று ஒன்று புறப்பட்டு முதலில் பாகவத்தையும் பின்னர் ஸ்ரீராமகிருஷ்ணரது நெஞ்சையும் தொட்டது. ''பகவான், பக்தன், இறைவனின் வார்த்தைகளாகிய பாகவதம் (தெய்விக நூற்கள்) இவை மூன்றும் வெவ்வேறு போலத் தோன்றினாலும் ஒன்றே என்பதை இக் காட்சிக்குப் பிறகு அறிந்து கொண்டேன்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் தமது காட்சியைப் பற்றிக் கூறியுள்ளார்.

# 19. நிர்விகல்ப சமாதி

நினைவுகளுக்கு அப்பால், பலவாகக் காணப்படும் உலகங்களுக்கு அப்பால், மாயையையும் அதனுடைய எல்லாவகையான மாற்றங்களையும் பின்னுக்குத் தள்ளி, ஆக்கல், காத்தல், அழித்தல் இவைகளுக்கு அப்பால், எல்லா வகையான துன்பங்களையும் இன்பங்களையும் நன்மை தீமைகளையும் கடந்து வார்த்தைகளால் விளக்க முடியாத பேரின்பமாய், சச்சிதானந்தமாய் நிர்விகல்ப சமாதியில் பிரம்மம் ஒளிர்கிறது. அங்கே அறிவு, அறிபவர், அறியப்படும் பொருள் ஆகிய மூன்றும் கரைந்து போகின்றன; பிறப்பு, வளர்ச்சி, மரணம் ஆகிய மூன்றும் அங்கு மறைந்து போகின்றன. காதலன், காதலி, காதல் ஆகிய மூன்றும் கங்குகரையற்ற அந்தப் பேரானந்தக் கடலில் இணைந்து போகின்றன. எல்லாச் சந்தேகங்களும், அவநம்பிக்கைகளும் நொறுங்கிப் போகின்றன. மனத்தின் நுட்பங்களும், முற்பிறவிகளின் வினைப் பயன்களும் அழிக்கப்பட்டு, ஆணவம் அடங்கிய இனிமை மயமான உணர்வைத் தாண்டிய நிலை நிர்விகல்ப சமாதியில் உண்டாகிறது.

நிர்விகல்ப சமாதி அத்வைதத் தத்துவத்தின் மிக உயர்ந்த நிலையாகும். அங்கே உண்மை முழுமையாகவும் மகோன்னதமாகவும் உணரப்படுகிறது. சாதகன் கடவுளை-பிரம்மத்தை, தொட்டு உணரக்கூடிய ஒன்றாக அங்கே காண்கிறான். அதை அடைந்தவர்களின் ஞானம் நிலையானதாகவும் ஆனந்தம் அழியாததாகவும் இருக்கிறது; உலக எண்ணங்கள் முழுமையாக அழிந்து போகின்றன. மிக உயர்ந்த அந்த நிலையிலிருந்து அவன் கீழே இறங்கிய போதும் 'நான், எனது' என்னும் எண்ணம் இல்லாதவனாய், தன் உடம்பை வெறும் நிழலாகவும் ஆன்மாவை மூடியிருக்கும் உறையாகவும் காண்கிறான். அவன் இறந்த காலத்தைப் பற்றிச் சிந்திப்பதில்லை; எதிர்காலத்தை நினைப்பதில்லை; நிகழ்காலத்தைப் பெரிதாக எண்ணுவதில்லை. பல்வேறாகவும் அழியக் கூடியதாகவும் உள்ள உலகப் பொருள்கள் அனைத்தையும் விருப்பு வெறுப்பில்லாமல் அவன் காண்கிறான். அவற்றால் தோன்றும் இன்ப துன்பங்களைக் கடந்து நிற்கிறான். ஆன்மிக சாதனையில் இந்த நிர்விகல்ப சமாதிதான் இமயம். அதைவிட

உயர்ந்தது எதுவும் இல்லை. இந்தச் சமாதியை அடைந்தவனுக்குப் பிறப்பில்லை; இறப்பில்லை; உடம்பின் மாற்றங்களோடு அவனுக்கு எந்தத் தொடர்பும் இல்லை. தான் பிரம்மம் என்பதை அவன் உணர்கிறான்; பிரம்மமாகவே ஆகிவிடுகிறான்.

சாதாரண சாதகன் ஒருவன் இந்நிலையை அடைந்துவிட்டால் அவன் சாதாரண நிலைக்குத் திரும்பமாட்டான். பேரானந்தத்தை அனுபவித்த சில நாட்களில் ஆத்மாவானது உடலிலிருந்தும் மனத்திலிருந்தும் பூரணமாகப் பிரிக்கப்படுகிறது; உடல் அழிந்து விடுகிறது. உலக நன்மைக்காக என்று பிறந்தவர்கள் மட்டுமே அசாதாரணமாக, அறியமுடியாத விதத்தில் இச் சமாதி நிலையின்று கீழே வருகின்றனர். அதன் பின்னர் அவர்களது சொல், செயல் அனைத்தும் உலக நன்மைக்காகவே. அதற்காக அவர்களிடம் ஆன்மிக சக்தி நிரப்பப்படுகிறது. தெய்விகம் அவர்கள் மூலம் இவ்வுலகில் பிரகாசிக்கிறது. அவர்களது ஒரு ஸ்பரிசம், சொல், பார்வை, எண்ணம்கூட மற்றவர்களிடம் தூய்மையையும் புனிதத்தையும் நிரப்ப வல்லது. அதனால்தான் அத்தகைய தெய்விக மனிதர்களால் உலகையே மாற்றி அமைக்க முடிகிறது.

சமாதியைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்லுவதென்றால் மனத்தைக் கடந்த மிக உயர்ந்த நிலை என்று சொல்லலாம். புலன்களால் அறியப்படும் உலகத்தைக் கடந்து, மனம் மிக உயர்ந்த இடத்திற்குச் சென்று, எல்லாமுமான நிலையில் ஒன்றிவிடும் நிலை அது. ஸ்ரீராமகிருஷ்ணர் இந்தச் சமாதியை அடைந்ததும் பல வகையான தெய்விகக் காட்சிகளையும் அளவேயில்லாத பிரம்ம உணர்வில் மனம் அடியோடு அழிந்து போவதையும் கண்டார். சில நேரங்களில் தாம் விரும்பி அந்த நிலையை அடைந்தார். சில நேரங்களில் அவர் மனத்தில் கங்குகரை காணாது எழுந்த ஆன்மிக வெள்ளத்தின் வேகத்தால் அவரையும் அறியாமலே அங்கு அடித்துச் செல்லப்பட்டார். இவ்வாறு வெளி உலகத்தின் உந்தலுக்கு ஏற்ப 'ஆற்றல் மயமான அந்த உலகத்தை, அழகு மயமான அந்த உலகத்தை, ஆன்மிக மகோன்னதம் மிக்க அந்த சமாதி உலகத்தை' அவர் அடைந்தார். அவரால் தெய்வங்களோடும் கடந்த கால அவதார புருஷர்களோடும் தொடர்பு கொள்ள முடிந்தது. இத்தகைய காட்சிகளைப் பெறும் இந்த நிலை சமாதி நிலையிலிருந்து பல படிகள் கீழானதாகும். இதுவரை ஸ்ரீராமகிருஷ்ணர் அந்தப் படியிலேயே இருந்தார், ஆழங்காண முடியாத அத்வைதத்தின் உச்ச நிலையாகிய நிர்

விகல்ப சமாதி நிலையை அடையவில்லை. எனவே அந்த நிலையையும் அடைய—மிக மிகக் கடினமானதும் இதுவரை அவர் செய்த சாதனைகளிலிருந்து மிகவும் வேறுபட்டதுமான சாதனையில் ஈடுபட்டார்.

அவருடைய வாழ்க்கையின் இந்தப் புதிய அத்தியாயத்திற்கு வருமுன் இந்தப் புதிய சாதனைக்கு ஏற்ப அவர் மனம் எப்படித் தயாராக இருந்தது என்பதை அறிந்து கொள்வது அவசியமாகும். சாஸ்திரங்கள் இந்தச் சாதனையைச் செய்பவர்கள் நான்கு முக்கிய தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டும் என்று கூறுகின்றன. முதலில் உண்மை, உண்மையற்றது என்னும் இரண்டிற்கும் உள்ள வேற்றுமையில் அதாவது பிரம்மம் ஒன்றே நிலையானது, மற்றவையெல்லாம் அழியக் கூடியது என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கையைப் பெற்றிருக்க வேண்டும். அதற்கு அடுத்ததாக இந்தப் பிறவியிலும் இனி வரும் பிறவிகளிலும் தான் செய்யும் செயல்களின் பலன்களை எல்லாம் தியாகம் செய்துவிட வேண்டும். மூன்றாவதாக மனத்தையும் புலன்களையும் அடக்குவதில் வல்லமை, வெளி உலகத்திலிருந்து மனத்தை உள்ளே இழுத்துக் கொள்ளுதல், தன்னலமின்மை, சாஸ்திரங்களிலும் குருவிடமும் ஆழ்ந்த நம்பிக்கை, மன ஒருமைப்பாடு முதலியவை பெற்றவராக இருக்க வேண்டும். கடைசியாக முக்தியில் தீவிர நாட்டம் இருக்க வேண்டும். இத்தனை தகுதிகளையும் பெற்றவன் தன்னைப் பிரம்மத்திடம் செலுத்துவதற்குரியவரும், வேதங்களின் உட்பொருளை அறிந்தவரும், ஆசைகள் அனைத்திலிருந்தும் நீங்கிப் பாவமில்லாதவரும், கருணைமயமானவரும், இவைகளுக்கெல்லாம் மேலாகப், பிரம்மத்தை அறிந்தவருமான குருவிடம் செல்ல வேண்டும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் இந்தத் தகுதிகள் அனைத்தையும் சிறப்பாகப் பெற்றிருந்தார். இதேபோல் அவருக்குக் குருவாக இருக்கும் எல்லாத் தகுதிகளும் பெற்றவராக ஆச்சரியகரமான ஒரு மனிதர் அப்போது தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்தார். அவர் அத்வைதத் தத்துவத்தின் சிகரமான நிர்விகல்ப சமாதியடைந்து அதன் மூலம் பிரம்மத்தை அறிந்தவராக மட்டுமல்லாமல், அந்தத் தத்துவத்தைத் தம் வாழ்வில் அன்றாடம் கடைப்பிடிப்பவராகவும் இருந்தார். அவர் பெயர் தோதாபுரி. நர்மதையாற்றின் கரையில் நாற்பது ஆண்டுகள் கடுமையாகத் தவம் செய்து நிர்விகல்ப சமாதியடைந்தவர். அவர் பரந்த மனப்பான்மையும் உலகின் இன்ப துன்பங்களைப்பொருட்படுத்தாதவராகவும், மீதமுள்ள தம்வாழ்நாளைப்

புண்ணியத்தலங்கள் தோறும் சென்று காண்பதில் கழிப்பவ ராகவும் இருந்தார். அச்சமே இல்லாத சிங்கம்போல் நாடு முழுவதும் அவர் சுற்றி வந்து கொண்டிருந்தார். பூரி, கங்கா சாகர் முதலிய இடங்களுக்குச் சென்றுவிட்டு, கங்கையின் கரையில் உள்ள தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்தார்.

தோதாபுரி காளி கோயில் முன்மண்டபத்திற்கு வந்த போது அங்கே ஸ்ரீராமகிருஷ்ணர் சாதாரண வேட்டி ஒன்றை உடுத்திக் கொண்டு தம்மை மறந்த நிலையில் அமர்ந்திருந்தார். ஆனால் ஒளிவீசிய அவரது முகம் தோதாபுரியின் கவனத்தைக் கவர்ந்தது. ஸ்ரீராமகிருஷ்ணரின் மிகச் சிறந்த ஆன்மிக நிலையை அவர் புரிந்து கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணரை உற்றுப் பார்க்கப் பார்க்க அவருடைய உன்னதமான நிலை அவருக்கு மேலும் தெரிந்தது. மிகக் கடினமான அத்வைத சாதனையை ஸ்ரீராமகிருஷ்ணருக்குப் போதிக்க அவருக்கு மிகுந்த விருப்பம் ஏற்பட்டது. ''நீ ஆன்மிகத்தில் மிகச் சிறந்த பயிற்சி பெற்ற வனாகத் தோன்றுகிறாய். அத்வைத சாதனையைக் கற்றுக் கொள்கிறாயா?'' என்று கேட்டார்.

''அது பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. என் அன்னைக் குத் தான் தெரியும். அவள் சரியென்றால் நான் கற்றுக்கொள் கிறேன்'' என்றார் ஸ்ரீராமகிருஷ்ணர். ''மிகவும் நல்லது. போ. போய் உன் அம்மாவிடம் கேட்டு வா. நான் அதிக நேரம் இங்கே இருக்க மாட்டேன்'' என்றார் தோதாபுரி. ஸ்ரீராமகிருஷ்ணர் அங்கிருந்து அமைதியாக எழுந்தார். காளி கோயிலுக்குச் சென்றார். தெய்விகப் பரவச நிலையில் காளி யிடம் தோதாபுரி கூறியதைச் சொன்னார். பரவச நிலையிலிருந்த அவருக்கு, ''ஆமாம் மகனே! போய் அத்வைத சாதனையைக் கற்றுக் கொள். அதற்காகத்தான் அவன் இங்கே வரவழைக்கப்பட்டிருக்கிறான்'' என்று காளி கூறினாள். உடனே உலகை மறந்த அரை நினைவு நிலையில் முகமெங்கும் புன்னகை வழிந்துவர, தோதாபுரியிடம் சென்று தம் தாய் அனுமதியளித்து விட்டதாகக் கூறினார். உருவ வழிபாட்டில் சிறிதும் நம்பிக்கை இல்லாத பெரிய வேதாந் தியான தோதாபுரி காளி சிலையிடம் அனுமதி பெற்றுவந்த ஸ்ரீராமகிருஷ்ணரின் செயலைப் பார்த்துச் சிரித்திருப்பார்; என்றாலும் அவரது நம்பிக்கையைப் பார்த்து வியப்பும் அடைந்திருக்க வேண்டும்.

தோதாபுரி ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அத்வைத சாதனை யைப் போதிக்கத் துவங்கினார். ''வேதாந்தத்தைக் கற்றுக் கொள்ளுவதற்கு முன் அதற்கான சம்பிரதாயப்படி சடங்குகள்

செய்து சந்நியாச தீட்சை பெற்றுக்கொள்ள வேண்டும். இந்தப் பிறவிக்கு உரியதாக உள்ள எல்லாவற்றை யும், அதாவது பிராமணன் என்பதைக் காட்டும் பூணூல், குடுமி இவைகளை யெல்லாம் நீக்கிவிட வேண்டும். புத்தம் புதிய பிறவியைப் பெற வேண்டும்'' என்றார் தோதாபுரி. இதைக் கேட்ட ஸ்ரீராமகிருஷ்ணர், ''இவற்றை எல்லாம் மறைவாகச் செய்வதென்றால் எனக்கு தடைஒன்றும் இல்லை'' என்றார். இப்படி அவர் சொல்லியதற்குக் காரணம் அவர் தாய் சந்திரா தேவிதான். வாழ்நாளில் பல்வேறு துன்பங்களை அனுபவித்த அவர் இறுதி நாட்களைத் தம் அன்பிற்குரிய மகனோடு கங்கைக் கரையில் கழிக்க ஓராண்டுக்கு முன் காளி கோயிலுக்கு வந்து விட்டார். மதுர் அவருக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் மிகுந்த மகிழ்ச்சியோடு அளித்து, கங்கையைப் பார்த்தபடி இருக்கும் தனி அறையில் வாழச் செய்து, மிகுந்த அன்போடு அவர் நலனைக் கவனித்து வந்தார். தாம் சந்நியாசி யாகி விடுவதை அவர் கண்டால் துடித்துப் போவார் என் பதற்காகத்தான் ஸ்ரீராமகிருஷ்ணர் இவ்வாறு கூறினார். தோதாபுரி ஸ்ரீராமகிருஷ்ணரின் இதைக் கேட்டதும் குறித்த நல்ல நாளில் இரகசியமாகவே அவருக்குச் சந்நியாச தீட்சை தருவதாகக் கூறினார்.

அந்த நாளும் வந்தது. சந்நியாசி இந்த உலகத்திற்கு உண் மையில் செத்துப் போய் விடுகிறவன். அவனால் சிராத்தம் போன்ற சடங்குகளில் எல்லாம் பங்கு கொள்ள முடியாது. ஆதலால், இறந்த தங்கள் முன்னோர்களுக்குச்செய்யும் இறுதிக் கடனான சிராத்தம் என்னும் சடங்கைத் தோதாபுரி ஸ்ரீராம கிருஷ்ணரைச் செய்யும்படிச் செய்தார். அதன் பிறகு தன் கர்ம பலனால் வேறு உலகங்களுக்குச் சென்று இன்பம் அனுபவிக்கும் தன்னுடைய ஆசைகளை விட வேண்டும் என்பதற்காகத் தனக்கே இறுதிக் கடன் செய்யும்படிக் கூறினார். பஞ்சவடியில் இவைகளையெல்லாம் செய்து முடித்த ஸ்ரீராமகிருஷ்ணர் அன்று முழுவதும் உபவாசத்தோடு இந்தச் சடங்கின் இறுதியான காரியத்துக்காக மகிழ்ச்சியோடு காத்திருந்தார். இரவு பெரும்பாலும் கழிந்து விட்டது. விடிய இன்னும் அரைமணி நேரம் இருந்தது. சந்நியாச தீட்சை தருவதற்கான அந்தப் புனிதமான வேளையில் குருவும் சீடரும் தியான அறைக்குள் நுழைந்தனர். ஹோமம் வளர்க்கப்பட்டது. அருகே அமர்ந்து குரு மந்திரம் சொல்ல, சீடர் தம் ஆசைகள் ஒவ்வொன்றை யும் துறப்பதாகவும், தம் உயிரின் உயிராக உள்ள உலக உயிர்கள் அத்தனைக்கும் நன்மை செய்வதாகவும் கூறிய

படியே ஹோமத் தீயில் நெய்யையும் மற்ற பொருட்களையும் சமர்ப்பித்துக் கொண்டே இருந்தார். குடுமியையும் பூணூலையும் இறுதியாக ஹோமத்தில் போட்டு எரித்துவிட்டுப் புதிய சந்நியாச வாழ்வின் அடையாளமான காவித் துணியைக் குருவிடம் பெற்றுக் கொண்டார்.

பொழுது விடிந்தது. அது இந்தியாவிற்கும் உலகத்திற்கும் எதிர்காலத்தில் மிகப் பெரும் நன்மைகளைக் கொண்டு வந்த நாள். மிகப் பழமையான வேதாந்தம் ஒரு புதிய சீடனைக் கண்ட நாள். உலக உயிர்கள் அனைத்தினிடமும் பொங்கிப் பெருக்கெடுத்து ஓடும் புத்தரின் அன்பையும், சங்கரரின் மிகக் கூர்மையான அறிவையும் ஒருங்கே உலகம் கண்டு கொண்ட நாள். மேல்நாடு, கீழ்நாடு இரண்டிற்கும் இடையே பாலத்தை அமைத்து இரண்டு உலகின் கடந்த கால நம்பிக்கைகளையும், எதிர்காலத் தேவைகளையும் இணைத்து வைக்க ஒரு புதிய தீர்க்கதரிசி-கடவுளின் தூதர்-மலர்ந்த நாள்!

குருவின் முன் வீழ்ந்து வணங்கி ஸ்ரீராமகிருஷ்ணர் அவருடைய உபதேசங்களைப் பெற அருகில் அமர்ந்தார். அத்வைதத்தின் உயிர் நாடியான கொள்கையைத் தோதாபுரி உபதேசிக்க ஆரம்பித்தார். ''பிரம்மம் ஒன்றே இருப்பது. பிரிவில்லாதது. அறிவிற்கு எட்டாத மாயையின் மூலம் அது பல்வேறு பெயர்களாகவும் வடிவங்களாகவும் பிரிக்கப் பட்டாலும் உண்மையில் பிரம்மம் ஒன்றுதான். அதில் பிரிவே கிடையாது. சாதகன் ஒருவன் இறுதியில் சமாதியில் ஒன்றி விடும்போது அவன் மாயை தோற்றுவிக்கும் காலத்தையோ இடத்தையோ பெயரையோ வடிவங்களையோ காண மாட்டான். மாயையின் எல்லைக்குள் என்னவெல்லாம் இருக்கின்றனவோ அவை உண்மையல்ல. அதையெல்லாம் விட்டுவிட்டு, பெயர், வடிவம் முதலிய மாயைகளைக் கிழித்துக் கொண்டு சிங்கம்போல் வெளியில் வா. ஆத்மாவைத் தேடி ஆழத்தில் மூழ்கு. சமாதியின் மூலம அதில் உறுதியாக நிலை பெற்று நில். அதன் பிறகு பெயரும் வடிவமும் உள்ள இந்த உலகம் சூன்யத்தில் மறைந்துபோவதைக் காண்பாய். நான் என்னும் அகங்காரமும் பரந்த அண்ட வெளியில் மறைந்து போவதைக் காண்பாய், சத் சித் ஆனந்தமான பிரம்மமும் நீயும் ஒன்று என்பதை அறிவாய்.''

மேலும் சாஸ்திரங்களிலிருந்து மேற்கோள் காட்டிய படியே தோதாபுரி சொல்ல ஆரம்பித்தார். ''காண்பதன் மூலமும் கேட்பதன் மூலமும் மற்றொருவர் மூலமும் பெறும்

ஞானம் அற்பமானது. எது அற்பமானதோ அது பயனில்லாதது; பேரின்பத்தைத் தர இயலாதது. ஆனால் கேட்டு அறியாத, கண்டு அறியாத மற்றவர் மூலமும் அறிய முடியாத, விவகாரங்களுக்கு அப்பாற்பட்ட ஞானம் மகத்தானது. அது ஒருவன் பேரின்பத்தை அடையத் துணை செய்கிறது. எல்லோருடைய இதயத்திலும் ஒளிவீசும் நிலையான பொருளை மனமோ, புலன்களோ எப்படி அறியும்?''

இவ்வாறு விவாதம் மூலமாகவும் சாஸ்திரங்களிலிருந்து மேற்கோள் காட்டியும் அன்று முழுவதும் தோதாபுரி ஸ்ரீராமகிருஷ்ணரின் மனத்தைப் பிரம்மத்தில் ஊன்றவைக்க முயன்றார். அதை ஸ்ரீராமகிருஷ்ணரின் சொற்களிலேயே நாம் காண்போம். ''எனக்குத் தீட்சையளித்த பிறகு நங்டா* அத்வைத வேதாந்தத்தின் பல்வேறு கொள்கைகளை உபதேசிக்கத் துவங்கினார். என் மனம் முழுவதையும் உலகப் பொட்களுளிலிருந்து இழுத்து ஆத்மாவில் ஆழப் பதிய வைக்கும்படிச் சொன்னார். ஆனால் நான் எவ்வளவுதான் முயன்றும் என் மனத்தை உருவமும் பெயருமற்ற வெளியில் நிறுத்த முடியவில்லை. உலகப் பொருள்களிலிருந்து என் மனத்தை விடுவித்துக் கொள்வது எனக்குக் கடினமாக இல்லை. ஆனால் ஒன்றிலிருந்து மட்டும் என் மனத்தை விடுவிக்க முடியவில்லை, அது நான் எப்போதும் காண்கின்ற பேரின்பமயமான-ஒளிவீசுகின்ற உணர்வு மயமான அன்னை காளியின் வடிவம். அது என்முன் தோன்றி என் மனத்தை உருவம், பெயர் இல்லாத வெளிக்குச் செல்வதைத் தடுத்து நின்றது. மறுபடியும் மறுபடியும் நான் என் மனத்தை அத்வைதத் தத்துவத்தில் நிலை நிறுத்த முயன்றேன். ஆனால் ஒவ்வொரு முறையும் அன்னை என் வழியில் நின்றாள். முயன்று முயன்று களைத்துப் போன நான் நங்டாவிடம், 'ஒன்றும் முடியவில்லை. என்னால் மனத்தை உருவம், பெயரற்ற வெளிக்கு உயர்த்தி ஆத்மாவை நேருக்கு நேர் பார்க்க முடியவில்லை' என்றேன். அவர் அளவற்ற கோபம் கொண்டவராகப் பரபரப்போடு, 'என்ன! உன்னால் செய்ய முடியவில்லையா? நீ செய்தே ஆக

---

*தம் குரு என்பதால் தோதாபுரியை ஸ்ரீராமகிருஷ்ணர் பெயர் சொல்லி அழைக்காமல் நங்டா அழைப்பது வழக்கம். இதன் பொருள் ஆடையின்றித் திரிபவர் என்பதாம். நாகா சந்நியாசிகள் பரம்பரையைச் சேர்ந்த தோதாபுரி அந்தப் பரம்பரையின் வழக்கப்படி ஆடையின்றியே இருந்து வந்தார்.

வேண்டும்' என்று ஆத்திரத்தோடு கூறியபடி சுற்று முற்றும் பார்த்தார். அவர் கண்களுக்குத் தரையிலிருந்த கூரான ஒரு கண்ணாடித் துண்டு தெரிந்தது. அதை எடுத்து என் நெற்றியில் புருவங்களுக்கு இடையில் மிகவும் அழுத்தமாகக் குத்தியபடி, 'இந்த இடத்தில் உன் மனத்தைத் திரட்டி நிலைக்க வை' என்றார். நானும் என் வலிமை முழுவதையும் திரட்டி மீண்டும் தியானத்தில் அமர்ந்தேன். மறுபடியும் அன்னையின் கருணை மயமான வடிவம் என்முன் நின்றது. நான் என் விவேகத்தை வாளாக்கிக் கொண்டு அந்த வடிவத்தை இரண்டாக வெட்டி வீழ்த்தினேன். அதன் பிறகு என் மனத் திற்குத் தடையேதும் இல்லை. சமாதியில் மூழ்கி நினைவை இழந்து விட்டேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் வார்த்தைகளால் வருணிக்க முடியாத மகோன்னதமான நிர்விகல்ப சமாதியை அடைந்தார். அந் தப் பேரானந்த நிலையில் புலன்களும் மனமும் செயல்படாது நின்று விட்டன. அவர் உடம்பு அசைவில்லாது பிணம் போல் ஆகிவிட்டது. அண்டங்கள் அவருடைய காட்சி யிலிருந்து மறைந்து, எல்லாமே எண்ணங்களாக மாறி மனத்திலிருந்து நிழல் போல் ஓடி மறைந்தன. நான் என்கின்ற மிக மெல்லிய உணர்வு மட்டும்தான் தெளிவில்லாமல் ஒலித்துக் கொண்டிருந்தது. சிறிது நேரத்தில் அதுவும் நின்று விட்டது. ஆன்மா ஆன்மாவில் ஒன்றிவிட்டது. பொருள்களைப் பற்றிய நினைவுகளும் காண்பதும், காணப்படுவதும் எல்லாமே மறைந்து விட்டன. பேச்சுக்கு அப்பால், அனுபவங்களுக்கு அப்பால், எண்ணங்களுக்கு அப்பால் ஸ்ரீராமகிருஷ்ணர் பிரம் மத்தை உணர்ந்தார்; பிரம்மமாகவே மாறிவிட்டார்.

தோதாபுரி நெடு நேரம் அமைதியாக உட்கார்ந்தபடி தம் சீடரைக் கவனித்துக் கொண்டிருந்தார். அவர் உடம் பில் சிறிதுகூட அசைவில்லாததைக் கண்டதும் மெல்ல அறைக்கு வெளியே வந்து, தமக்குத் தெரியாமல் யாராவது ஸ்ரீராமகிருஷ்ணருக்குத் தொந்தரவு கொடுக்கலாம் என்று எண்ணிக் கதவைத் தாளிட்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் நினைவு பெற்றுக் கூப்பிட்டதும் கதவைத் திறக்கலாம் என்று வெளி யில் அமர்ந்தார். பகலெல்லாம் கழிந்தது. இரவு வந்தது. மறுநாள் கழிந்தது. மற்றொரு நாளும் கழிந்தது. இப்படியாக மூன்று நாட்கள் கழிந்தன. குடிசைக்குள்ளிருந்து குரல் வரவே இல்லை. ஆச்சரியத்தில் மூழ்கிய தோதாபுரி உள்ளே நுழைந்தார். முன்பு அங்கே ஸ்ரீராமகிருஷ்ணரைத் தோதாபுரி

எந்த நிலையில் கண்டாரோ அதே நிலையில் அப்படியே அசைவில்லாமல் அவர் அமர்ந்திருந்தார். அவரது உடலில் உயிர் இருப்பதாகவே தோன்றவில்லை. ஆனால் முகத்தில் மட்டும் ஒளி! அமைதி! தெளிவு! அழகு! தோதாபுரி தம் சீடர் இந்த வெளி உலகிற்கு இறந்து போய் விட்டதையும் அவர் மனம் ஆத்மாவில் உறைந்து போய் சிறிதுகூட அசைவில்லாமல் அப்படியே நிலையாக இருப்பதையும் கண்டார்.

எல்லையற்ற வியப்போடு தோதாபுரி ஸ்ரீராமகிருஷ்ணரின் அதிசயமான காட்சியைப் பார்த்தபடியே நின்றார். ‘என்ன! நான் காண்பது உண்மையா? நாற்பது ஆண்டுகள் கடும் பயிற்சிக்குப் பிறகே என்னால் அடைய முடிந்ததை ஒரு மனிதனால் ஒரே நாளில் அடைய முடியுமா?’ என்று தம்மை மறந்தபடி தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார். சந்தேகத்தால் ஸ்ரீராமகிருஷ்ணரைக் கூர்ந்து ஆராய்ந்தார். மிகுந்த கவனத்தோடு இதயம் துடிக்கிறதா என்று பார்த்தார். மிக மெதுவாகவாவது மூச்சு விடுகிறாரா என்று கவனித்தார். மறுபடியும் மறுபடியும் பிணம் போல் விறைத்துக் கிடந்த தம் சீடரின் உடம்பைத் தொட்டுத் தொட்டுப் பார்த்தார். உடம்பில் உயிரோ உணர்வோ இருப்பதற்கான அடையாளமே இல்லை. அளவற்ற மகிழ்ச்சியோடும் பிரமிப்போடும், ‘கடவுளே! இது அதிசயம். அதிசயம் தவிர வேறில்லை’ என்று தம்மை மறந்து கூவினார். ஸ்ரீராமகிருஷ்ணர் சிறிதும் சந்தேகமில்லாமல் அத்வைத சாதனையின் உச்சமான நிர்விகல்ப சமாதியில் மூழ்கிவிட்டார்!

தோதாபுரி உடனடியாக ஸ்ரீராமகிருஷ்ணரின் மனத்தை உலக நினைவிற்குக் கொண்டு வர எண்ணினார். ‘ஹரி ஓம்’ என்னும் மந்திரத்தைத் தெளிவாகவும் உணர்வு பூர்வமாகவும் சொல்ல ஆரம்பித்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் அமர்ந்திருந்த அறை முழுவதும் அந்தத் தெய்விக மந்திரம் நிறைந்து எதிரொலித்தது. சிறிது சிறிதாக ஸ்ரீராமகிருஷ்ணரின் மனம் வெளி உலகை நோக்கித் திரும்பியது. கண்களைத் திறந்தார். எதிரே மிகுந்த அன்போடும் பெருமையோடும் தம்மைப் பார்த்தபடி நிற்கும் குருவைக் கண்டார். தம் திருவடிகளில் வீழ்ந்த ஸ்ரீராமகிருஷ்ணரைத் தோதாபுரி அப்படியே சேர்த்து அணைத்துக் கொண்டார்.

தோதாபுரி பொதுவாக ஓரிடத்தில் மூன்று நாட்களுக்கு மேல் தங்கமட்டார். ஆனால் ஆச்சரியகரமான இந்தச் சீடரை உன்னதமான அத்வைத நிலையில் உறுதியாகத் தங்கச் செய்ய விரும்பி பதினொரு மாதங்கள் அவருடனே தட்சிணேசுவரத்தில் தங்கினார். இனி ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் அவருடைய குருமார்களான தோதாபுரி, பைரவி இவர்களுடைய உறவில் நடந்த சில நிகழ்ச்சிகளைக் காண்போம். இந்த நிகழ்ச்சிகள் ஸ்ரீராமகிருஷ்ணர் தம் குருமார்களுக்கே சில வேளைகளில் குருவாக விளங்கிய சுவையான செய்திகளைக் கூறுகின்றன.

# 20. குருமார்களுடன் உறவு

ஆன்மிக சாதனைகளில் வெளி உதவியைவிடத் தமது தூய்மையான மனத்தையே ஸ்ரீராமகிருஷ்ணர் பெரிதும் சார்ந்திருந்ததை நாம் முன்பே கண்டோம். ஒரு பெரிய அறிஞர் ஸ்ரீராமகிருஷ்ணரின் வரலாற்றில் இதைப்பற்றிக் குறிப்பிடும்போது, ''ஸ்ரீராமகிருஷ்ணர் தம் சொந்த முயற்சியாலேயே கடவுளை நேராகக் கண்டிருந்தும் பல்வேறு யோகங்களைச் செய்யப் பல குருமார்களை ஏற்றுக்கொண்டார். அவர்களின் துணையோடு அவர், மிக விரைவில் அந்த யோகங்களில் வெற்றி பெற்றார். சீடன் ஒருவன் குருவின் மூலமே ஆழமான ஆன்மிக ஞானத்தைப் பெற முடியும் என்னும் பொதுவான சாஸ்திர விதிக்காக மட்டுமே அவர் குருமார்களை ஏற்றுக் கொண்டார் என்று தெரிகிறது'' என்று கூறுகிறார். கடந்த அத்தியாயங்களில் கூறப்பட்ட நிகழ்ச்சிகளைப் படித்தவர்களுக்கு மேல் கூறப்பட்ட கருத்தின் உண்மை நன்கு விளங்கும். உண்மையில் குருதேவர் தம் குருமார்களின் உதவியுடன் சாதனைகளில் வெற்றி அடைந்தார் என்றாலும், அவர்கள் இதயத்தில் இருந்த சில குறுகிய எண்ணங்களைப் போக்கவும் செய்தார். இவ்வாறு ஸ்ரீராமகிருஷ்ணர் அவர்களின் சீடராக இருந்த போதிலும் சில நேரங்களில் குருவாக மாறி அவர்களின் ஆன்மிக அறிவை மிகவும் விரிவுபடுத்தி, அவர்களுடைய தெய்விக அனுபவத்தை ஆச்சரியப்படும்படி விரிவாக்கினார். அவருடைய குருமார்களும் அவருடைய ஞானத்தை ஏற்று அவருக்கு வணக்கம் செலுத்தினார்கள்.

இப்போது தோதாபுரியைப் பற்றிச் சிறிது காண்போம். அவர் பெரும்பாலும் ஒரு பஞ்சாபியாகவும் மிகவும் இளமையிலேயே துறவியானவராகவும் இருக்க வேண்டும். பஞ்சாபில் லூதியானாவிலிருந்த நாகா சம்பிரதாயத்து மடம் ஒன்றின் தலைவரான ஒரு யோகி அவருக்கு சந்நியாச தீட்சை அளித்தார். இந்த மடத்தின் துறவிகள் கடுமையான தவத்திற்கும் சகிப்புத் தன்மைக்கும் பெயர் பெற்றவர்கள். குரு இறந்த பிறகு தோதாபுரி மடத்தின் தலைவரானார். அவர் உயரமாகவும் உரம் வாய்ந்த உடல் பெற்றவராகவும் எப்போதும் ஊர் ஊராகச் செல்லும் கடினமான வாழ்க்கையை மேற்

கொண்டவராகவும் இருந்தார். பிரம்மத்தை உணர்ந்தவராக அவர் இருந்த போதும், பெரும்பாலான நேரம் தியானத்தி லேயே மூழ்கி இருந்தார். அவருடைய சந்நியாச சம்பிரதாயப் படி 'துனி' என்னும் நெருப்பின் ஆற்றலில் மிகுந்த நம்பிக்கை உடையவராக எங்குச் சென்ருலும் அங்கே நெருப்பை மூட்டு வார். எல்லோரும் தூங்கும் ஓசையற்ற இரவு நேரத்தில் அந்த நெருப்பை நன்ருக எரியும்படித் தூண்டி அதன் எதிரே அமர்ந்து தியானத்தில் மூழ்குவார். பகலிலும் பெரும் பொழுது தியானம் செய்வார். நெருப்பின் அருகே ஒரு போர்வையால் உடம்பை மூடியபடியே பகலில் தியானம் செய்வார். அவருடைய இந்தத் தியானத்தை யாரும் அறிய மாட்டார்கள். எல்லோரும் அவர் தூங்குவதாகவே நினைப் பார்கள்.

தோதாபுரியிடம் ஒரு கமண்டலமும் நெருப்பை எடுக்கும் இடுக்கி ஒன்றும் அமர ஒரு தோல் ஆசன மும் ஒரு போர்வையுமே இருந்தன. அவர் நாள் தோறும் தியானம் செய்வதைக் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் அவரிடம் ஒரு நாள், ''நீங்கள் தியானத்தின் எல்லையான பிரம்ம ஞானத்தையே அடைந்து விட்டீர்கள். பிறகு ஏன் நாள் தோறும் தியானம் செய்கிறீர்கள்?'' என்று கேட்டார். அதற்குத் தோதாபுரி, தம் கையிலிருந்த பித்தளைக் கமண்டலத்தைக் காட்டி, மிகவும் அமைதியாக, ''இதோ பார்! இது எவ்வளவு பளபளப்பாக இருக் கிறது. நாள்தோறும் இதைத் துலக்கவில்லையென்ருல் இப்படி இருக்குமா? மனமும் அதுபோல்தான். ஒருவர் நாள் தோறும் அதைத் தியானத்தின் மூலம் துலக்க வேண்டும். இல்லையென்ருல் அழுக்குப் படிந்துவிடும்'' என்ருர். தோதா புரி கூறிய உண்மையை ஒப்புக்கொண்ட குருதேவர் அவ ரிடம் திரும்பி, ''அந்தப் பாத்திரம் பொன்ஞல் செய்யப் பட்டிருந்தால் தினமும் இப்படித் தேய்க்க வேண்டியது இல்லை அல்லவா?'' என்ருர். தோதாபுரி புன்னகையோடு, ''ஆமாம்! தேய்க்க வேண்டியதில்லைதான்'' என்ருர். 'தம் சீடருக்குத் தினமும் தியானம் தேவையில்லை. அவன் பொன் பாத்திரம் போன்றவன்' என்று தோதாபுரி எண்ணிக் கொண்டாரோ, என்னவோ! யாருக்குத் தெரியும்? ஸ்ரீராம கிருஷ்ணர் தினந்தோறும் தியானம் செய்வது பற்றிய குருவின் இந்த வரர்த்தைகளை மனத்தில் பதிய வைத்துக் கொண்டார். பிற்காலத்தில் தம் சீடர்களுக்கும் பக்தர் களுக்கும் அடிக்கடி இதைக் கூறி நாள்தோறும் தியானம் செய்யச் சொல்வார்.

தோதாபுரி தம் குருவினிடம் வேதாந்தப் பாடமும் ஆன்மிக உபதேசங்களும் தம் இளம் வயதிலேயே பெற்றூர். அவருடைய மடத்தில் சந்நியாசிகளேத் தியானத்தில் பழக்க மிகச் சிறந்த ஏற்பாடுகள் இருந்தன. குருவிடம் கேட்ட செய்திகளே ஸ்ரீராமகிருஷ்ணர் பிற்காலத்தில் தம் சீடர்களிடம் கூறியிருக்கிறூர்: ''அந்த மடத்தில் எழுநூறு சந்நியாசிகள் இருந்தார்கள். முதன் முதலில் மெத்தையின் மேல் அமர்ந்து தியானம் பழகுவார்கள். ஏனென்றுல் ஆசனம் மிகவும் கடினமாக இருந்தால் கவனம் கடவுளிடம் படிவதற்குப் பதில் உடம்பின் மீதே திரும்பி விடும். ஆனுல் நாளாக நாளாகக் கொஞ்சம் கொஞ்சமாகக் கடினமான ஆசனங்களே பயன்படுத்தத் தருவார்கள். இறுதியில் தோல்மீதோ அல்லது வெறும் தரையிலோ அமர்ந்து தியானம் செய்யச் சொல்வார்கள். உணவிலும் மற்றப் பழக்கங்களிலும் கூட இதே போன்ற முறை படிப்படியாகக் கடைபிடிக்கப்பட்டது. ஆடை அணிவதிலும்கூட இப்படிப் படிப்படியாகக் குறைத்து இறுதியில் ஆடையே இல்லாமல் இருக்கும்படிச் செய்வார்கள். ஏனென்றுல் மனிதன் பிறக்கும்போதே மானம் அவமானம், வெறுப்பு, பயம், குலப் பெருமை முதலான எட்டுச் சங்கிலிகளால் கட்டப்படுகிறுன். எனவே இந்தச் சந்நியாசிகள் கொஞ்சம் கொஞ்சமாக அவைகளே உடைத்தெறியப் பயிற்றுவிக்கப் பட்டார்கள். இவர்கள் தியானத்தில் ஆழ்ந்த பயிற்சி பெற்றதும் நாட்டில் உள்ள புண்ணியத் தலங்கள் அனேத்தையும் முதலில் சிலரோடும். பிறகு தனியாகவும் சுற்றிவர அனுப்பப்பட்டார்கள். நாகா சந்நியாசிகள் பயிற்றுவிக்கப்பட்ட சந்நியாச முறை இது.''

அவர்கள் தங்கள் தலேவரைத் தேர்ந்தெடுப்பது பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் தம் குருவிடமிருந்து அறிந்ததைக் கீழ்வருமாறு கூறியுள்ளார்:

''தங்கள் தலேவருடைய பதவி காலியாகும் போதெல்லாம் அவர்கள் தங்களுக்குள்ளேயே தகுதியான ஒரு பரமஹம்சரைத் தலேவராகத் தேர்ந்தெடுப்பார்கள். இல்லேயென்றுல் அந்த மடத்தில் உள்ள மிகுதியான செல்வத்தைச் செலவழிப்பதிலும், மக்களிடமிருந்து மரியாதையை ஏற்றுக் கொள்வதிலும் தவறுகள் நேரும். யார் இந்த ஆசைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவர்களாக இருக்கிறுர்களோ அவர்களேயே தலேவராகத் தேர்ந்தெடுப்

பார்கள். அவர்கள் தங்கள் சுயநலத்திற்காகப் பணத்தைச் செலவழிக்காமல் இறைவனுக்காகவும் உடனுள்ள சந்நியாசி களுக்காகவும் செலவழிப்பார்கள்.''

தோதாபுரி பிறக்கும்போதே நல்வாசனைகளோடு (சம்ஸ் காரங்கள்) பிறந்திருந்தார். அவர் உறுதியான மனமும் தம் குருவிடம் அசையாத பக்தியும் கொண்டவர், முக்தியடைய வேண்டும் என்னும் பேராவல் கொண்ட அவர், தமக்குக் கிடைத்த குரு அருளையும் சந்நியாசிகளின் கூட்டுறவையும் பயன்படுத்திக்கொண்டு பயிற்சிகள் செய்து, படிப்படியாக நிர்விகல்ப சமாதியை அடைந்தார். சாதாரண மனிதர்கள் போல் அலைந்து திரியும் மனம் அவருக்கு இருந்ததே இல்லை. நிலையான மனமும் தம்மிடத்தில் உள்ள நம் பிக்கையும் குரு பக்தியும் அவரை வாழ்வின் மிக உயர்ந்த இலட்சியமாகிய நிர்விகல்ப சமாதியை அடைய வைத்தன. எந்தக் காலத்திலும் அவர் மனச் சஞ்சலத்தால் அலைக் கழிக்கப்பட்டு வருந்தியதே இல்லை. இந்த உலகை மிகப் பெரிய சக்தியொன்று ஆட்சி செய்கிறது என்பதிலும், அவனுடைய கருணை இல்லையானால் உலகில் வாழ முடியாது என்பதிலும் அவருக்கு நம்பிக்கை இல்லை. அவருடைய சொந்த அனுபவம் இயற்கையின் இந்த இருண்ட பகுதி களைக் காண வைக்கவில்லை. அவருக்கு வாழ்க்கையில் எல்லாமே மென்மையானதாகவும் எளிதில் அடையக்கூடியது மாகவுமே இருந்தன. வெளி உதவிகள் எதுவும் இல்லாமல் ஆன்மிக வாழ்வில் அவர் தாம் நினைத்ததை எல்லாம் அடைந்தார். இதனால் புலன்கள் ஒரு மனிதனைப் பல்வேறு பொருள்கள்மீது இழுத்து அலைக்கழித்து அவனை நாசப் படுத்தும் என்பது அவருக்கு சிரிப்பிற்குரிய ஒன்றாக இருந் தது. பிரம்மத்திலிருந்து பிரிக்க முடியாத, நிலையான துணை யான, இந்த உலகத்தைத் தம் விருப்பம்போல் ஆட்டிவைக் கின்ற, மாயை என்னும் பயங்கர சக்தியைப்பற்றித் துளியும் அவர் அறியாதவராக இருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணருடன் கொண்ட தொடர்பால் அவருடைய இந்தக் குறை நீங்கியது. மாயையும் பிரம்மமும் உண்மையில் ஒன்றே; மாயையை ஒருவர் விலக்கவே முடியாது என்பதைத் தெரிந்து கொண்டார். தட்சிணேசுவரத்தை விட்டுப் போவதற்கு முன்னால் மாயை என்னும் கடக்கமுடியாத ஒன்று கடவுளின் சக்தியாக இருப்பதை ஏற்றுக்கொண்டு அதை வணங்கி அருள் பெற்றார்.

இளமையிலிருந்தே உருவ வழிபாட்டை விரும்பாத

வேதாந்தியாக அவர் இருந்ததால் பக்தியின் சிறப்பையோ, பிரம்மத்தை அடையும் வழிகளில் அதுவும் ஒன்று என்பதையோ அவர் அறிந்து கொள்ளவில்லை. உண்மையான பக்தி ஒருவனைக் கடவுளைக் காண உதவும் என்பதையும், இறுதியில் அத்வைதத் தத்துவத்தை அடைய அது வழி செய்யும் என்பதையும் அவர் அறியவில்லை. பக்தி நெறியின் அங்கங்களான பிரார்த்தனைகள், கீர்த்தனைகள், ஜபம் முதலான எல்லாம் அவருக்குப் பொருளற்றவைகளாகத் தோன்றின. பக்திப் பெருக்கால் எழும் பரவசத்தைக்கூட அவர் கேலி செய்வார். ஆனால் அவர் கடவுள் பற்றே இல்லாத நாத்திகர் அல்ல. பொருள் புரியவில்லை என்றாலும் ஸ்ரீராமகிருஷ்ணர் பாடும் பக்திப் பாடல்கள் அவர் கண்களில் கண்ணீரை வரவழைத்து விடும். அவர் சாதனை முறைகளில் சாந்த பாவத்தை விரும்பினார். ஆனால் அடிமையாகவும் நண்பனாகவும் மகனாகவும் கடவுளை அடையும் முறையை அவர் ஏற்றுக் கொள்வதில்லை. கடவுளைக் காணப் பக்தர்கள், பக்தி மிகுதியால் அழுவதும், அரற்றுவதும், வேண்டுவதும், ஆடுவதும், பாடுவதும், சிரிப்பதும் அவருக்குப் பைத்தியக்காரச் செயல்களாகத் தோன்றின. இத்தகைய செயல்கள் மூலம் கடவுளை அடைய முடியும் என்பதை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் அவருக்குமிடையே இதைப்பற்றியே எப்போதும் சுவையான விவாதம் நடக்கும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் சிறு வயதிலிருந்தே, விடியற் காலையிலும் மாலை நேரத்திலும் கைகளைத் தட்டிக் கொண்டும், சில நேரங்களில் நடனமாடிக் கொண்டும் இறைவனின் பல்வேறு திருநாமங்களைச் சொல்லிப் பாடுவார். 'ஹரி போல், ஹரி போல்', (ஹரியின் பெயரைச் சொல்) 'ஹரியே குரு', 'குருவே ஹரி', 'ஓ, என் உயிரே, கோவிந்தா', 'மனமே கோவிந்தா', 'பிராணனே கோவிந்தா'', 'அறிவே கோவிந்தா', 'தியானமே கோவிந்தா' 'உணர்வே கோவிந்தா'—நீயே உலகம்!; உலகமே நீ; நான் இயந்திரம்; நீ இயக்குபவன்' என்றெல்லாம் பாடுவார். அத்வைத சாதனை செய்து கடவுளை உருவமும் குணம் இல்லாதவராக—எங்கும் நிறைந்த எல்லாமான பிரம்மமாகக் கண்ட பிறகும்கூட அவரிடம் இந்தப் பழக்கம் நிற்கவில்லை.

ஒரு நாள் மாலை தோதாபுரியும் ஸ்ரீராமகிருஷ்ணரும் உட்கார்ந்து வழக்கம் போல் ஆன்மிகம் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். வெளிச்சம் மறைந்து இருள்

சூழ்ந்தது. சந்தியா காலம் பரவத் துவங்கியது. ஸ்ரீராம கிருஷ்ணர் வழக்கம்போல் கையைத் தட்டிக் கொண்டு இறை வனின் திருநாமங்களைப் பாட ஆரம்பித்தார். இதைக் கண்டு தோதாபுரி ஆச்சரியமடைந்தார். ஏனென்றால் ஆன்மிகத்தில் ஆரம்ப நிலையில் இருப்பவர்கள் மட்டுமே செய்யக்கூடிய காரியம் இது. ஸ்ரீராமகிருஷ்ணரோ இதற்குமேல் எதுவுமே இல்லை என்னும் ஆன்மிக சாம்ராஜ்யத்தின் உச்ச நிலையான அத்வைத சாதனையில் வெற்றி பெற்று இருப்பவர். அவர் இப்படிச் சாதாரண மனிதர்போல் கை தட்டுவதும் பாடுவ தும் அவருக்கு வேடிக்கையாகவும் வியப்பாகவும் இருந்தது. புன்சிரிப்போடு குருதேவரைப் பார்த்து அவர் கைகளை ஒன்றோடு ஒன்று தட்டுவதை, ''என்ன பூரி செய்ய மாவு தட்டுகிறாயா?'' என்றார். இதைக் கேட்டதும் குருதேவர் சிரித்துக்கொண்டே, ''என்ன அர்த்தமில்லாமல் பேசு கிறீர்கள்! நான் இறைவனின் புனிதமான பெயரைப் பாடு கிறேன். அதைப் போய்ப் பூரி செய்யும் வேலையோடு ஒன்று சேர்க்கிறீர்களே. இது மிகவும் மோசம்'' என்றார். தோதாபுரி புன்சிரிப்புடன் பதில் ஒன்றும் பேசாமல் இருந்துவிட்டார்.

மற்றொரு நாள் மாலை ஸ்ரீராமகிருஷ்ணர் தம் குருவோடு அவர் வளர்த்திருந்த நெருப்பின் அருகே அமர்ந்திருந்தார். இரண்டு பேரும் தங்களை மறந்து வேதாந்தப் பேச்சில் ஈடு பட்டிருந்தார்கள். அப்போது கோயில் தோட்டக்காரன் சுருட் டைப் பற்ற வைக்க அந்த நெருப்பிலிருந்து எரியும் விறகு ஒன்றை எடுக்க வந்தான். முதலில் தோதாபுரி இதைக் கவனிக் கவில்லை. அவன் நெருப்பை எடுத்ததும் பார்த்து விட்டார். அவருக்கு அளவில்லாத கோபம் வந்துவிட்டது. 'பிரம்ம மய மான நெருப்பிலிருந்து சுருட்டுப் பற்றவைப்பதா?' என்றெண் ணிய அவர் அவனைக் கண்டபடியாகத் திட்டி அடிப்பதற்கே போய்விட்டார். இதைக் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர், ''என்ன இது? என்ன இது?'' என்று பரவச நிலையில் உரக்கக் கூவியபடி விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்து விட்டார். தோதாபுரி தம் சீடனின் விசித்திரமான நடத்தையைக் கண்டு ஆச்சரியமடைந்து, ''ஏன் சிரிக்கிறாய்? அவன் செய்தது தவறான காரியமில்லையா?'' என்று அவரைக் கேட்டார். ஒருவாறு சிரிப்பை அடக்கிக்கொண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் தோதாபுரியைப் பார்த்து, ''உங்களுடைய அத்வைத ஞானத் தின் ஆழம் என்னைச் சிரிக்க வைத்துவிட்டது. இவ்வளவு நேரம் என்னிடம், 'பிரம்மம் ஒன்றே உண்மை, உலகத்தில் உள்ள ஒவ்வொரு பொருளும் அந்தப் பிரம்மத்தின்

தோற்றமே' என்று சொல்லிக் கொண்டிருந்தீர்கள். அதன் படிப் பார்த்தால் அந்த நெருப்பும் பிரம்மம்; அதை எடுத்துச் சுருட்டுப் பற்றவைக்க வந்த தோட்டக்காரனும் பிரம்மம். சுருட்டைப் பற்ற வைக்கிற செயலும் பிரம்மம். பிரம்மம் பிரம்மத்தைப் பற்ற வைக்கிறது. அப்படியிருக்க, தோட்டக்காரன் செய்தது அக்கிரமம் என்று நீங்கள் அவனை அடிக்க ஓடுகிறீர்களே! எல்லோரையும் ஆட்டிப் படைக்கும் மாயையின் சக்திதான் எப்படிப்பட்டது என்று நினைத்தேன் என்னால் சிரிப்பை அடக்க முடியவில்லை'' என்றார். அதைக் கேட்டதும் தோதாபுரி அசந்துபோய் விட்டார். நெடுநேரம் அவரால் ஒன்றுமே பேசமுடியவில்லை பிறகு நிதானமாக, ''ஆமாம்! நீ சொல்வது சரிதான். கோபத்தில் நான் எல்லாவற்றையும் மறந்து விட்டேன். எதனிடமும் பற்றுக் கொள்வதும் ஆபத்துதான். இனிமேல் கோபம் கொள்ள மாட்டேன்'' என்றார். அது போலவே கோபப்படுவதை அன்றிலிருந்து விட்டுவிட்டார்.

மாயையின் பயங்கரமான ஆற்றலைப் பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்லும்போது, ''பிரம்மம் கூட மாயையின் வலையில் அகப்பட்டுக் கொண்டு வேதனைப்படுகிறது. கண்களை மூடிக் கொண்டு வேதாந்தத் தத்துவத்தைச் சிந்தித்தபடி 'எல்லாமே பிரம்மம். கால் என்பதும் இல்லை; முள் என்பதும் இல்லை' என்று ஆழ்ந்து நினைக்கலாம். ஆனால் முள் காலில் குத்தியதும் வலியால் அலறுகிறோம். அது போலவே பிறப்பில்லை, இறப்பில்லை; நல்லதில்லை, கெட்டதில்லை; துன்பமில்லை, இன்பமில்லை; பசி இல்லை, தாகமில்லை—நாம் நிலையான-எல்லாமான பிரம்மம்-சத்-சித்-ஆனந்தம் என்றெல்லாம் பேசலாம். ஆனால் அடுத்த நிமிடம் நம் உடலுக்கு ஏதாவது ஏற்பட்டாலோ, மனத்தில் மோகமோ ஆசையோ வெறி கொண்டு எழுந்தாலோ இந்தத் தத்துவங்கள் எல்லாம் மறந்து போகின்றன. நிதானமிழந்து வேதனையால் துடிக்கிறோம்'' என்று கூறுவது வழக்கம். மாயையை அவர் ஓர் அழகான கதை மூலமாகவும் விளக்கியிருக்கிறார்.

இராமன், இலட்சுமணன், சீதை ஆகிய மூவரும் காட்டில் போய்க் கொண்டிருந்தார்கள். அது ஒற்றையடிப் பாதை. ஒரு நேரத்தில் ஒருவர் மட்டுமே போக முடியும். இராமர் வில்லையும் அம்பையும் கையில் ஏந்தியபடியே முதலில் போனார். சீதை அவர் பின்னால் சென்றார். அதற்குப் பின்னால் இலட்சுமணன் வில்லையும் அம்பையும் கையில் எடுத்துக் கொண்டு சென்றான். இலட்சுமணன்

இராமரிடம் அளவில்லாத பக்தி கொண்டவனுதலால் எப்போதும் இராமரைப் பார்த்தபடியே இருக்க விரும்பினுன். இப்போது சீதை நடுவில் போவதால் அவனுல் இராமரைப் பார்க்க முடியவில்லை. இது அவன் மனத்தைப் பெரிதும் வருத்தியது. சீதை இதை உடனே அறிந்து கொண்டாள். பாதையிலிருந்து விலகி, 'இப்போது அண்ணனைப் பாருங்கள்' என்ருள். இலட்சுமணன் தன் அன்பிற்குரிய அண்ணனைக் கண் குளிரக் கண்டான். இதுபோல மனிதனுக்கும் கடவுளுக்கும் இடையே மாயை இருக்கிருள். நாம் என்ன தான் விவேகம், வைராக்கியங்களைக் கடைப் பிடித்தாலும் அவள் அருள் இல்லையானுல் ஒன்றும் நடக்காது.''

அன்னை காளியின் இத்தகைய மாயா சக்தியைத் தோதாபுரி தெரிந்து கொள்ளவில்லை. இந்தச் சக்தி இறை நெறியில் செல்லும் பலரைச் சங்கிலியால் பிணைத்துப் படாத பாடு படுத்தியிருக்கிறது. சிலரை ஒன்றும் செய்யாமல் கடவுளைக் காண விட்டுவிட்டிருக்கிறது. தோதாபுரி இளமையி லேயே அன்னையின் அருளால் வாழ்வின் போராட்டங்கள் எதிலும் அகப்படாமல் தம் குறிக்கோளைஅடைந்து விட்டார். ஒவ்வொரு முயற்சியிலும் அன்னையின் அருட்கரங்கள் இணைந்து உதவுவதை அவர் அறிந்து கொள்ளவில்லை. தன் வலிமையாலும் தவத்தாலுமே வாழ்க்கைச் சிக்கல் எதிலும் அகப்பட்டுக் கொள்ளாமல் பிரம்மத்தை அடைந்து விட்டதாக நினைத்தார் அவர். ஆனுல் அன்னை காளி இப்போது தன் மாயையின் ஆற்றலை அவருக்கு உணர்த்த விரும்பினுர்.

இரும்பு போன்ற வலிமையான உடலைப் படைத்த தோதா புரி இளமையிலிருந்தே எந்த நோயாலும் பீடிக்கப்பட்ட தில்லை. எதைச் சாப்பிட்டாலும் அவருக்கு ஜீரணமாகிவிடும். எங்கு படுத்தாலும் தம்மை மறந்து தூங்குவார். அவர் மனமும் எப்போதும் ஆனந்தத்தால் நிரம்பித் ததும்பும். அத்தகைய வலிமையான தோதாபுரியின் உடலையும் வங்காளத்தின் வெயிலும் மழையும் பதம் பார்த்து விட்டன. தட்சிணே சுவரத்தில் தங்கிய சில மாதங்களுக்கெல்லாம் ஜீரணக் கோளாறு ஏற்பட்டு மிகக் கடுமையான வயிற்றுப் போக்கால் தாக்கப்பட்டார். இரவும் பகலும் பொறுக்க முடியாத வயிற்று வலியால் வேதனைப்பட்டார். நாற்பது ஆண்டுக் காலமாகப் பழக்கப்பட்ட அவருடைய மனம் தியானத்தில் ஒன்ருமல் நோயின் கொடுமையால் அலைந்து துடித்தது. என்ன முயன்றும் அவரால் வழக்கம்போல் பிரம்மானந்தத்தில் மூழ்க

முடியவில்லை. வங்காளத்தின் தண்ணீரும் வெயிலும் ஒத்துக் கொள்ளாததைக் கண்டு இந்த நோய் வருவதற்கு முன்பே அவர் அங்கிருந்து புறப்பட நினைத்தார். ஆனால் ஸ்ரீராம கிருஷ்ணரைவிட்டு அவரால் பிரிய முடியவில்லை. 'உலகம் உண்மையல்ல; பிரம்மம் ஒன்றே உண்மை என்பதைக் கண்கூடாகக் கண்ட என்னை இந்த நோயும் வேதனையும் இதன் முடிவான மரணமும் என்ன செய்ய முடியு ? பிறகு ஏன் நோயைப்பற்றிக் கவலைப்பட வேண்டும்?' இத்தகைய எண்ணங்கள் அவர் மனத்தில் தோன்றி தட்சிணேசு வரத்தை விட்டுப் புறப்படுவதைத் தடை செய்தன.

ஆனால் நாளாக நாளாக நோயின் கொடுமை அதிக மாயிற்று. நோய் அதிகமாகும் ஒவ்வொரு முறையும் தோதா புரி தட்சிணேசுவரத்திலிருந்து புறப்பட ஸ்ரீராமகிருஷ்ணரிடம் விடைபெற்றுச் செல்ல நினைப்பார். ஆனால் ஏதோ காரணங் களால் அது முடியாமலே போய்க் கொண்டிருந்தது. நாளுக்கு நாள் தோதாபுரி பலவீனமாகிக் கொண்டு வருவதைக் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் அவருக்கு மருத்துவம் செய்யத் துவங்கினர். சாதாரண மருத்துவத்தால் முடியாமல் போகவே மதுர் மூலமாகச் சிறந்த மருத்துவரிடமும் சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தார். அதனாலும் பலன் இல்லை. உடம்பு இளைத்துக்கொண்டே வந்தது. பொறுக்க முடியாதபடி வயிற்று நோய் அதிகமாகிக்கொண்டே வந்தது. என்றாலும் மிகுந்த முயற்சியுடன் வயிற்று வலியால் உடலை நாடி ஓடிவரும் மனத்தை ஒருவகையாகக் கட்டுப்படுத்தித் தியானத்திலே நிலைக்கச் செய்துவந்தார்.

ஒரு நாள் இரவு வலி அளவுக்கு மிகுந்து சென்று விட்டது. எவ்வளவோ பொறுத்துப் பார்த்தார்; முடிய வில்லை. மனத்தை உடல்வலியிலிருந்து பிரித்து, தியானத்தின் மூலம் பிரம்மத்தின்மீது நிலைக்கச் செய்யப் பல முறை முயன்றார். மனத்தை மேலே கொண்டுசெல்ல முயலுவதற்குள் உடம்பின் வலி அதைக் கீழே இழுத்து வந்து பலமுறையும் அவருடைய முயற்சியை வீணாக்கியது. மறுபடியும் மறுபடி யும் மறுபடியுமாகப் பல முறை முயன்றும் வயிற்று வலி அவருடைய இந்தக் கடுமையான முயற்சிகள் அனைத்தையும் முறியடித்து விட்டது. மனம் சலித்து வெறுப்பும் கடுங் கோபமும் கொண்ட அவர் 'இந்தக் கேவலமான உடம்பு என் மனத்தையே அலைத்து வேதனைப்படுத்துகிறதே; நான் இந்த உடல் அல்ல என்பது தெளிவாக எனக்குத் தெரிகிறது. இந்த உடம்போடு இருந்துகொண்டு நான் ஏன் இந்த வேதனையை

அனுபவிக்க வேண்டும்? இந்த உடம்பைத் தூக்கிக்கொண்டு திரிவதால் என்ன பயன்? கங்கையில் மூழ்கி இந்த உடம்பை ஒழித்து இந்த நோய்க்கு முடிவு கட்டுகிறேன்' என்று நினைத்தார்.

மிகுந்த முயற்சியோடு மனத்தைப் பிரம்மத்தில் நிறுத்தினர். உடம்பை அழித்துக் கொள்வதற்காகக் கங்கைக்குள் அந்த இரவு நேரத்தில் இறங்கி விட்டார். இறங்கியவர் போய்க் கொண்டே இருந்தார். பாதி ஆறு வரையிலும் கடந்தாகி விட்டது. கொஞ்சம் இறங்கியதுமே மூழ்கடித்து விடும் கங்கையாற்றுக்கு இப்போது என்ன ஆயிற்று? முழங்கால் அளவே தண்ணீர் இருக்கிறதே! கங்கை வற்றிவிட்டதா? எதிர்க் கரையில் உள்ள வீடுகளும் மரங்களும் இருட்டில் நிழல்கள்போல் தென்படத் துவங்கின. அதுவரையில் தண்ணீர் அவர் முழங்கால் அளவே இருந்தது. அவருக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. 'ஆ! மாயையின் ஆற்றல் தான் என்ன? கரைபுரண்டு ஓடும் கங்கை என் கணுக்கால் வரையுமே இருக்கிறதே! கடவுளின் அதிசயமான விளையாட்டுத் தான் என்ன?' என்று நினைத்தார்.

திடீரென்று அவர் முன் ஒளிமயமான ஒரு காட்சி எழுந்தது. அவருடைய வறட்டு ஞானமெல்லாம் மறைந்தது. உலகம் முழுவதும் நிறைந்த-உலகையே ஆளுகின்ற அன்னை காளியின் அழகிய வடிவம் கண்ணில் தெரிந்தது. நிலம் முழுவதும் அவள் காட்சி; நீர் முழுவதும் அவள் காட்சி; உடம்பு எல்லாம் அவளே; மனங்களெல்லாம் அவளே; இன்பங்களெல்லாம் அவளே; அறிவுகள் அனைத்தும் அவளே; அறியாமையனைத்தும் அவளே; அவளே வாழ்க்கை; அவளே மரணம். தாம் கண்ட அனைத்திலும், கேட்ட அனைத்திலும், நினைத்த அனைத்திலும் அவர் காளியைக் கண்டார். முடிவதை முடியாததாகவும், முடியாததை முடிவதாகவும் அவள் ஆக்குவதைக் கண்டார். அவளுடைய கருணை மட்டும் இல்லையென்றால் அவளுடைய மாயையை எந்த உயிரும் கடந்து செல்ல முடியாது; சாவது என்றால் கூட அவளுடைய அனுமதியும் கருணையும் வேண்டும். யாருக்கும், தோதாபுரிக்கும் சேர்த்து, எதையும் தானே செய்யும்—சாகும் உரிமைகூட இல்லை. அவளே அனைத்தின் தாய்-எல்லாம் கடந்தவள். எல்லாமானவள். இதுவரை தோதாபுரி தம் வாழ் நாள் முழுவதும் யாரை வழிபட்டு வந்தாரோ-தம் இதயத்தையே யாருடைய திருவடியில் வைத்துக் கிடந்தாரோ அந்தப் பிரம்மமே இந்தக் காளி. 'பிரம்மம், சக்தி இரண்டும் ஒன்றே. ஒரே பொருளின் இரண்டு பக்கங்கள்.

ஆழ்ந்த அந்தச் சலனமற்ற இரவில், இதயம் பக்திப் பெருக்கால் நிறைந்து வழிய தோதாபுரி மறுபடியும் மறுபடியும் காளியை வணங்கினர். தம்மை முழுவதுமாக அவளிடம் ஒப்படைத்து விட்டார். தட்சிணேசுவரம் திரும்பினர். வயிற்று வலி இன்னும் இருந்தபோதிலும் காளியின்மீது குவிந்த அவர் மனத்தை அதனல் ஒன்றும் செய்ய முடியவில்லை. அன்னை காளியை நேராகக் கண்டது அவர் மனத்தில் அளவற்ற பேரானந்தத்தைத் தந்தது. பஞ்ச வடியில் தம் வழக்கமான இடத்தில் அமர்ந்து தீயை எழுப்பி இரவு முழுவதும் அதன் பக்கத்தில் அமர்ந்தபடி தியானத்தில் மூழ்கிப் போனர்.

மறுநாள் காலை அவருடைய உடல்நிலை பற்றி விசாரிக்க வந்த ஸ்ரீராமகிருஷ்ணர் அவர் முற்றிலும் வேறு பட்ட ஒரு புதிய மனிதராக இருப்பதைக் கண்டார். மகிழ்ச்சி யினல் முகமலர்ச்சியோடு இருந்த அவர், தம் நோயிலிருந்து விடுபட்டவராகக் காணப்பட்டார். இரவில் என்ன நடந்தது என்பதைப் பற்றிச் சொல்லுவதற்காக, ஸ்ரீராமகிருஷ்ணரைத் தம் அருகில் அமரும்படி தோதாபுரி கேட்டுக் கொண்டார். பின் அவர், ''இந்த நோய் என்னுடைய நண்பனுக வந்திருக் கிறது. நேற்று இரவு அன்னை காளியின் காட்சியைப் பெறும் பேறு பெற்றேன். அவள் அருளால் நோயிலிருந்தும் விடுதலை பெற்றேன். ஆஹா! எப்படி இவ்வளவு நாட்கள் நான் அன்னையைப் பற்றி ஒன்றுமே அறியாமல் இருந்திருக்கிறேன்! நல்லது. இப்போது நான் இங்கிருந்து செல்ல, உன் அன்னை யிடம் அனுமதி வாங்கித் தா. எனக்கு இப்பொழுது புரிகிறது. இந்தப் பாடத்தைக் கற்பிப்பதற்காகவே, தன்னைப் பற்றிய உண்மையை எனக்கு உணர்த்துவதற் காகவே, இவ்வளவு நாட்கள் என்னை இங்கே தங்கி யிருக்கும்படிச் செய்திருக்கிருள் அன்னை. உண்மை யாகவே நான் இங்கிருந்து போக எண்ணி, உன்னிடம் விடைபெற்றுச் செல்வதற்கென பல முறை வந்திருக்கிறேன். ஆனல் அப்போதெல்லாம் யாரோ தடுத்து விடுவது போல் உணர்வேன். அதோடு இதைப் பற்றிய பேச்சை ஆரம்பிக்க முயலும் போது, அந்தப் பேச்சே மாறிப் போய் எப்படியோ வேறு விஷயங்களைக் குறித்த பேச்சாகத் திரும்பி விடும்!'' என்ருர். இதைக் கேட்டு மகிழ்ச்சி பொங்கிவராய் ஸ்ரீராம கிருஷ்ணர் புன்னகையோடு, ''ஆ! பார்த்தீர்களா! அப்பொழு தெல்லாம் என் அன்னையை நம்ப மறுத்தீர்கள். அவளை இல்லை என்று நிரூபிப்பதற்காக என்னுடன் வாதாடினீர்கள்.

இல்லையா! இப்பொழுது அவள் யார் என்ற உண்மையை அறிந்து கொண்டீர்கள். அன்னை இதை வெகு நாட்களுக்கு முன்பே, நெருப்பையும் அதன் சுடுகின்ற சக்தியையும் எப்படிப் பிரிக்கமுடியாதோ அதேபோலத்தான் பிரம்மமும் அதன் சக்தியும் என்று எனக்குக் கற்பித்திருக்கிருள்'' என்று கூறினுர்.

அந்த நேரத்தில் காளி கோயிலில் பூஜைக்கான மணியின் இனிய ஒலி கேட்க ஆரம்பித்தது. பல்வேறு வாத்தியங்களும் முழங்க ஆரம்பித்தன. குருவும் சீடரும் எழுந்தனர். காளி கோயிலுக்குள் நுழைந்தனர். இருவரும் அன்னையின் திருவடிகளில் நெடுஞ்சாண்கிடையாக வீழ்ந்து வணங்கினர். தோதாபுரி புறப்படுவதற்கான அனுமதியை மகிழ்ச்சியோடு அன்னை தந்ததை இருவரும் உணர்ந்தனர். சில நாட்களில் தோதாபுரி தட்சிணேசுவரத்தை விட்டுப் புறப்பட்டுச் சென்ருர்.

தட்சிணேசுவரத்தில் தோதாபுரி பெற்ற பாடத்தின் சுருக்கத்தை ஸ்ரீராமகிருஷ்ணரின் சொற்களிலேயே காண்போம்: ''அண்டமனைத்தும் நிறைந்த பேராற்றல் செயல்படாமல்—படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய காரியங்களைச் செய்யாமல் இருக்கும்போது அதை நான் பிரம்மம் அல்லது புருஷன் அல்லது உருவமற்ற கடவுள் என்று அழைக்கிறேன். அதுவே படைத்தல், காத்தல், அழித்தல் முதலான காரியங்களைச் செய்தபடிச் செயல்படும்போது அதை நான் சக்தி அல்லது மாயை அல்லது பிரகிருதி அல்லது உருவமுள்ள கடவுள் என்று அழைக்கிறேன். ஆனுல் உண்மையில் பிரம்மத்திற்கும் சக்திக்கும் வித்தியாசம் எதுவும் இல்லை.''

ஸ்ரீ ராமகிருஷ்ணர் தோதாபுரியிடம் சந்நியாச தீட்சை பெற்று அத்வைத சாதனை பழகும்போது பைரவியும் தட்சிணேசுவரத்தில் இருந்தார். பக்தையாகவும் உருவ வழிபாட்டில் மிகுந்த ஈடுபாடு கொண்டவருமான பைரவியால் தோதாபுரியின் அத்வைத நெறியையும், அருவ வழிபாட்டையும் ஒத்துக்கொள்ள முடியவில்லை. மேலும் ஸ்ரீராமகிருஷ்ணரிடம், ''அந்தத் துறவியுடன் நெருங்கிப் பழகாதே. அவரது வறட்டு ஞான வெறி உன்னிடமுள்ள பக்தியை அழித்து விடும்'' என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் இதைச் சிறிதுகூடக் காதில் போட்டுக் கொள்ளவில்லை; அவர் தம் போக்கிலேயே சென்ருர்.

தோதாபுரி தட்சிணேசுவரத்தை விட்டுச் சென்றதும் குருதேவர் உலகை முற்றிலும் மறந்து நிர்விகல்ப சமாதியில்

மூழ்கிக் கிடக்க முடிவு செய்தார்; அதற்கான சாதனைகளைச் செய்யத் துவங்கினார். சிறிது நாட்களில் நிர்விகல்ப சமாதியில் மூழ்கினார். உலக நினைவே அவரிடமிருந்து போய்விட்டது. 'நான்' 'எனது', 'நீ' 'உனது' என்னும் எண்ணங்கள் முற்றிலும் நீங்கி விட்டன. காண்பவன், காணப்படும் பொருள் என்ற வேற்றுமையெல்லாம் அகன்று விட்டது. பேரானந்தத்தில் மூழ்கியவராய், உடல் இருப்பதையும் மறந்து பசி, தாகம் மறந்தவராய் அப்படியே கிடந்தார். ஆறு மாதங்கள் அவர் ஆன்மிகத்தின் இந்த உன்னத நிலையில் இருந்தார். இதைப்பற்றி அவர் குறிப்பிடும்போது, ''தொடர்ந்து ஆறு மாதங்கள் நான் அந்த நிலையில் இருந்தேன். சாதாரண மனிதர் யாருக்காவது இந்த நிலை ஏற்பட்டிருந்தால் இருபத்தொரு நாட்களில் மரத்திலிருந்து சருகு உதிர்வதுபோல் உயிர் உடலை விட்டுப் பிரிந்து போயிருக்கும். இரவு, பகல் என்பதே அப்போது எனக்குத் தெரியாது. பிணங்களின் வாயிலும் மூக்கிலும் மொய்ப்பதுபோல் என் மூக்கிலும் வாயிலும் ஈக்கள் மொய்த்துக் கொண்டிருந்தன; ஆனால் எனக்கு அதுபற்றிய உணர்வே இல்லை. அழுக்கின் மிகுதியால் தலை முழுவதும் சடையாகி விட்டது. உடல் உயிரோடு இருப்பதே முடியாததாகி விட்டது. அந்த நேரத்தில் எங்கிருந்தோ ஒரு சாது தட்சிணேசுவரத்துக்கு வந்து சேர்ந்தார். அவர் மட்டும் இல்லையென்றால் இந்த உடம்பை விட்டு உயிர் பறந்தே போயிருக்கும். அவர் என் நிலையைப் புரிந்து கொண்டார். அதோடு இந்த உடம்பு உயிரோடு இருந்தால் உலகிற்குப் பெரும் நன்மைகள் கிடைக்கும் என்று அறிந்து, அதை எப்படியும் காப்பாற்ற அவர் உறுதி கொண்டார். எனவே என்னை உயிரோடு வைத்துக் கொள்வதற்கு மிகுந்த முயற்சிகள் எடுத்துக் கொண்டார்.

''தினமும் அவர் எனக்கு உணவு கொண்டு வருவார். உலகை மறந்து நினைவில்லாமல் வீழ்ந்து கிடக்கும் என்னை உணவை உண்ணச் செய்யப் பல வழிகளில் முயலுவார். எதுவும் முடியவில்லை என்றால் ஒரு சிறு தடியால் என்னை நன்றாக அடிப்பார். அந்த வலியால் எனக்குச் சிறிது உடல் நினைவு வந்த உடனே இரண்டு மூன்று கவள உணவை என் வாயில் திணிப்பார். அதில் ஏதோ சிறிது என் வயிற்றுக்குள் செல்லும். சில நாட்கள் அவர் எவ்வளவுதான் முயன்றாலும் சிறிது உணவைக்கூட என் வாயில் திணிக்கவே முடியாது. நினைவே இல்லாது நான் கிடப்பேன். இவ்வாறு ஆறு மாதங்கள் கழிந்தன. இறுதியில், 'உலக நன்மைக்காக

பாவ முகத்தில் இரு' என்று அன்னையின் கட்டளை பிறந்தது. அப்போது மிகவும் பயங்கரமான இரத்த பேதி நோயால் நான் பாதிக்கப்பட்டிருந்தேன். இரவும் பகலும் பொறுக்க முடியாத வயிற்று வலி என்னைச் சித்திரவதை செய்தது. ஆறு மாதம் இந்த நோயால் வேதனைப் பட்டேன். இந்த நோயின் காரணமாக என் மனம் படிப்படியாகக் கீழிறங்கி உடம்பின் பக்கம் திரும்பியது. சிறிது சந்தர்ப்பம் கிட்டினாலும் உலகை மறந்து நிர்விகல்ப சமாதியில் மூழ்கும் என் மனம் சாதாரண நிலையை அடைந்தது'' என்று கூறியுள்ளார்.

இந்த நேரத்தில் மதுரின் குடும்பத்தில் ஒரு நிகழ்ச்சி நடந்தது. அது மதுருக்கு ஸ்ரீராமகிருஷ்ணரிடத்தில் இருந்த நம்பிக்கையையும் பக்தியையும் மிகவும் அதிகமாக்கியது. மதுரின் மனைவி ஜகதம்பா தாசி மிகக் கடுமையான இரத்த பேதி நோயால் பீடிக்கப்பட்டார். மருத்துவர்கள் தங்களால் ஒன்றும் செய்ய முடியாது என்று கை விரித்து விட்டனர். மரணப் படுக்கையில் கிடந்த அவர் உயிர் சிறிது சிறிதாக நீங்கத் துவங்கியது. தனக்கு ஏற்படப் போகும் பயங்கரத் துன்பத்தை நினைத்து மதுர் நிலைகுலைந்து போனார். ஸ்ரீராம கிருஷ்ணரைத் தேடி தட்சிணேசுவரம் ஓடி வந்தார். சொல்ல முடியாத வேதனையால் அழுதபடியே தம்மிடம் வந்த மதுரின் அருகில் அமர்ந்து கொண்டு அளவற்ற அன்போடு ஸ்ரீராம கிருஷ்ணர் விசாரித்தார். மதுர் தேம்பியபடியே, ''என் மனைவி இறந்து போவதால் எனக்குத் தனிப்பட்ட முறையில் ஏற்படப் போகிற பயங்கரமான துயரம் ஒரு பக்கம். அவள் மூலமாக இப்போது என் மேற்பார்வையில் இருக்கும் இந்தக் கோயிலின் நிர்வாகமே அவள் இறந்து போனால் என்னை விட்டுப் போய்விடும். அதனால் என்னால் உங்களுக்குச் சேவை செய்ய முடியாது. அதை நினைக்கும் பொழுது என்னால் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை'' என்றார். மதுரின் அளவு கடந்த பக்தி ஸ்ரீராமகிருஷ்ணரின் மனத்தை மிகவும் தொட்டு விட்டது. தெய்விகப் பரவசத்தில் மூழ்கித் தம்மை மறந்தவராய், ''நீ பயப்பட வேண்டாம். உன் மனைவி பிழைத்து விடுவாள்'' என்றார். இந்த வார்த்தைகள் மதுருக்கு அளவற்ற நம்பிக்கையைக் கொடுத்தது. வீட்டிற்குத் திரும்பினார். அவர் மனைவியின் நிலைமையில் திடீர் மாற்றம் ஏற்பட்டது. சில நாட்களில் முழுமையான குணம் அடைந்து விட்டார். இந்த நிகழ்ச்சியைப்பற்றிப் பிற்காலத்தில் ஸ்ரீராம கிருஷ்ணர் சொல்லும்போது, ''அன்றிலிருந்து ஜகதம்பா தாசி சிறிது சிறிதாக குணமாகிக்கொண்டே வந்தாள்.

ஆனால் அவளுடைய நோய் இந்த உடம்பிற்கு (தம் உடம்பைச் சுட்டிக் காட்டி) மாற்றப்பட்டது. அதன் பலனாக நான் ஆறு மாத காலம் பயங்கரமான இரத்த பேதி நோயாலும் மற்ற நோய்களாலும் வேதனைப் பட்டேன். மதுர் பதினான்கு வருடகாலம் எனக்கு அவ்வளவு உண்மையாகச் சேவை செய்தார் என்றால் சும்மாவா செய்தார்? இந்த உடம்பின் மூலம் (தம் மூலம்) பல அற்புதங்களை அன்னை அவருக்குக் காட்டினாள். அதனால்தான் அவர் அப்படிச் சேவை செய்தார்'' என்று கூறினார்.

இதன் காரணமாகவும் ஆறு மாத காலம் நிர்விகல்ப சமாதியிலிருந்தபோது உடலைச் சிறிதுகூடக் கவனிக்காததாலும் ஸ்ரீராமகிருஷ்ணர் கடுமையான இரத்தபேதி நோய்க்கு ஆளானார். கல்கத்தாவில் புகழ்பெற்ற மருத்துவரான கங்கா பிரசாத் சென் மூலம் மதுர் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு மிகுந்த கவனத்தோடு சிகிச்சை செய்தார். இருதயன் எப்போதும் உடனிருந்து கவனித்துக் கொண்டான். நோயின் கடுமை அதிகமாக இருந்தபோதிலும் அவர் மனம் உடல் நினைவை விட்டுப் பிரம்மத்தின்மீதே பதிந்து, அமைதியிலும் ஆனந்தத்திலும் ஆழ்ந்திருந்தது. இதனால் அவருக்கு உடல் நோயின் கடுமை பெரும்பாலும் தெரியவே இல்லை. இந்த நேரத்தில் தட்சிணேசுவரத்துக்கு வேதாந்த சந்நியாசிகள் பெருங்கூட்டமாக வந்தனர். ஸ்ரீராமகிருஷ்ணர் தம் நோயைப் பற்றிய கவலையே இல்லாது அவர்களோடு வேதாந்தத்தைப் பற்றிப் பேசுவதில் நாள் முழுவதையும் கழித்தார்.

ஆறு மாதத்திற்குப் பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் அந்த நோயிலிருந்து குணமடைந்தார். அவருடைய மனம் உலகை மறந்த சமாதி நிலைக்கும் உலக நிலைக்கும் இடைப்பட்ட நிலையில் (பாவ முகத்தில்) தங்க ஆரம்பித்தது. அத்வைத சாதனையில் பெற்ற வெற்றியின் விளைவாக எல்லாச் சமயங்களும் கடவுளைக் காணும் பல்வேறு வழிகளே என்பதை ஏற்றுக் கொள்ளும் அதிசயமான மன நிலை அவருக்கு ஏற்பட்டது. இதன் விளைவாக இந்த நோயிலிருந்து விடுபட்டதும் இஸ்லாம் சமயத்தில் சாதனை செய்யத் துவங்கினார். அப்போது கோவிந்த ராய் என்பவர் தட்சிணேசுவரக் காளி கோயில் தோட்டத்தில் வசித்து வந்தார். அவர் முதலில் இந்துவாக இருந்தவர். பின்னர் முஸ்லிமாக மாறிவிட்டார். கடவுளிடம் மிகுந்த பக்தி கொண்ட் அவர் இஸ்லாம் சமயத்தில் சூபி* என்னும்

*இஸ்லாமிய சமயத்தின் ஒரு பிரிவு; வேதாந்தக் கொள்கைகள் பலவற்றை உள்ளடக்கியது.

பிரிவைச் சேர்ந்தவராக இருந்தார். அவருடைய பக்தி விரைவில் ஸ்ரீராமகிருஷ்ணரின் கவனத்தைக் கவர்ந்தது. அவர் மூலம் இஸ்லாமியச் சாதனையைப் பழக விரும்பினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் ஒன்றை நினைத்து விட்டால் அதை நிறைவேற்றும் வரை சிறிதுகூட ஓயமாட்டார். தம் விருப்பத்தை அவர் கோவிந்த ராயிடம் கூறியதும் அவர் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு இஸ்லாமிய நெறியில் தீட்சை செய்து வைத்தார். அதில் அவர் தம்மை மறந்து ஈடுபட்டார். அந்தச் சாதனை காலத்தில் அவருடைய மனநிலையைப் பற்றிப் பிற்காலத்தில் அவர் கூறும்போது, ''நான் அல்லாவின் பெயரைச் சொல்லத் துவங்கினேன். முகம்மதியர்கள் அணிவதுபோலவே ஆடையை அணிந்து கொண்டேன். வேளை தோறும் அவர்களைப் போலவே நமாஸ் செய்தேன். இந்து சமய எண்ணங்கள் முழுமையாக என் மனத்திலிருந்து மறைந்து விட்டன. இந்துக் கடவுளை என்னால் வணங்கவே முடியவில்லை. வணங்காதது மட்டுமல்ல; அவர்களைப் பார்க்க வேண்டும் என்னும் எண்ணம்கூட என் மனத்தில் எழவில்லை. மூன்று நாட்கள் கடுமையான சாதனைக்குப் பிறகு அந்நெறியின் மூலம் நான் கடவுளைக் கண்டேன்'' என்று கூறியுள்ளார். அந்தக் காட்சியின்போது முதலில் நீண்ட தாடியுடைய ஆழ்ந்த சிந்தனையோடு கூடிய ஒளிமயமான ஒரு வடிவத்தைக் கண்டார். அதன் பிறகு அவர் மனம் குணம் வடிவத்தோடு கூடிய பிரம்மத்தின் வழியாகச் சென்றது. அதன் பிறகு குணம், வடிவமில்லாத பிரம்மத்திலேயே மூழ்கி நிலைத்துவிட்டது.

ஸ்ரீராமகிருஷ்ணர் இஸ்லாம் சமயத்தின் மூலம் சாதனை செய்து கடவுளை அடைந்தது எதிர்காலத்தில் இந்தியாவில் குறிப்பிடத்தக்க விளைவை ஏற்படுத்தலாம். அத்வைத சாதனைக்குப் பிறகு அவர் இஸ்லாம் சாதனை செய்தது, இந்த அத்வைதத் தத்துவத்தின் 'உண்மை ஒன்று; ஞானிகள் அதைப் பலவாறு பெயரிட்டு அழைக்கிறார்கள்' என்னும் கொள்கை மூலமே இந்து சமயமும் முகம்மதிய சமயமும் இணைய முடியும் என்பதைக் காட்டுகிறது. ஸ்ரீராமகிருஷ்ணர் ஒன்றுக்கொன்று எதிரான இந்த இரண்டு சமயங்களுக்கும் இடையே அமைந்துள்ள விரிவான வேற்றுமைகளை அறிவார். என்றாலும் இந்துவாகிய அவர் அந்தச் சமய சாதனை செய்து கடவுளைக் கண்டதால் ஒரு நாள் இந்த இரண்டு சமயத்தவர்களும் தங்கள் வேற்றுமைகளையெல்லாம் மறந்து ஒற்றுமை அடையாமலா போய்விடுவார்கள்? இதன் உண்மையைக் காலம்தான் காட்ட வேண்டும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தமக்கு ஏற்பட்ட நோயால் மிக்வும் பலவீனமாகிவிட்டார். இடமாற்றம் நல்லது என்று தம் கிராமத்திற்குச் செல்ல நினைத்தார். மதுரும் அவர் மனைவியும் கிராமத்தில் அவர் குடும்பத்தின் ஏழ்மையை அறிந்து, அவருக்கு ஒரு சிறிதும் குறை ஏற்படாமல் இருக்க நிறையப் பணமும் பொருள்களும் அவரோடு அனுப்பி வைத்தனர். 1867-ஆம் ஆண்டு மே மாதம் இருதயனோடும் பைரவியோடும் ஸ்ரீராமகிருஷ்ணர் கமார்புகூர் புறப்பட்டார். கங்கையை விட்டுப் பிரிய மனமில்லாததால் அவருடைய தாய் தட்சிணேசுவரத்திலேயே மதுரின் அன்பான கவனிப்பில் தங்கிவிட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் கமார்புகூருக்கு மறுபடியும் எட்டு ஆண்டுகள் கழித்துச் செல்கிறார். அவருடைய உறவினர்களும் நண்பர்களும் மிகுந்த அன்போடும் ஆர்வத்தோடும் அவரை வரவேற்றனர். அவர்கள் அவரைப்பற்றிப் பலவிதமான விசித்திரச் செய்திகளை—சில நேரம் பெண்போலவே உடை உடுத்திக் கொண்டு 'ஹரி ஓம், ஹரி ஓம்' என்று சொல்லிக் கொண்டிருந்தது; பிறகு சந்நியாசியாகி விட்டது' ஆகியவற்றை எல்லாம் கேட்டிருந்தனர். இவை எல்லாம் அந்த எளிய கிராம மக்களிடம் அவரைப் பற்றிப் பல்வேறான நினைப்பைத் தூண்டி விட்டிருந்தன. ஆனால் அவர்கள் ஸ்ரீராமகிருஷ்ணரைக் கண்டதும் அவை எல்லாம் மறைந்து விட்டன. சின்னஞ் சிறு வயதில் தாங்கள் கண்ட ஆர்வமும் உண்மையும் வேடிக்கை விளையாட்டு நிறைந்த அதே கதாதரனை, கடவுள் பெயரைக் கேட்டதும் தம்மை மறந்து சமாதியில் மூழ்கிவிடுகின்ற ஸ்ரீராமகிருஷ்ணரில் அப்படியே கண்டனர். அது மட்டுமல்லாமல் மற்றும் சில அற்புதமான குணங்களையும் அவரிடம் கண்டனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் கமார்புகூரில் ஆறு அல்லது ஏழு மாதங்கள் தங்கினார். தட்சிணேசுவரத்தில் மிகக் கடுமையான சாதனைக்குப் பிறகு எளிமையான கிராம மக்களின் மகிழ்ச்சியிலும் துயரத்திலும் பங்கெடுத்துக்கொண்டு வாழும் வாழ்க்கை அவருக்கு மிகுந்த மகிழ்ச்சியையும் ஓய்வையும் தந்தது. இளம் வயது நண்பர்களுக்கு அன்றாடத் தொழில்களுக்கு இடையே மனித வாழ்வின் உன்னதக் குறிக்கோளான கடவுளைக் காண்பதற்காகப் புலனடக்கத்தையும் மற்றும் பல வழிகளையும் நிதானமாகவும் அமைதியாகவும் போதித்து வந்தார் ஸ்ரீராமகிருஷ்ணர்.

அந்தக் கிராமத்தில் தம் ஆழமான ஆன்மிக வளர்ச்சியை

அறிந்துகொண்டு பாராட்டும் சிலர் இருப்பதைக் கண்டு ஸ்ரீராமகிருஷ்ணர் ஆச்சரியமடைந்தார். அதுபற்றிக் கீழ்க் காணும் நிகழ்ச்சியைக் குருதேவர் கூறியுள்ளார். ஒரு நாள் புகல் உணவிற்குப் பிறகு, குருதேவர் வீட்டில் அமர்ந்திருந் தார். கிராமத்துப் பெண்கள் சிலர் அவரைக் காண வந்தனர். ஆன்மிகத்தைப் பற்றி அவர்கள் பேசிக் கொண்டிருந்தனர். இடையே அவர் சமாதியில் ஆழ்ந்து விட்டார். இது அவரது வாழ்க்கையில் அடிக்கடி நடக்கும் நிகழ்ச்சியாதலால் அது பற்றிக் கவலைப்படாமல் எல்லோரும் தங்களுக்குள் பேசிக் கொண்டிருந்தனர். அப்போது அவர்களில் ஒருத்தி மற்றவர் களிடம், 'அவர் இப்பொழுது பிரம்மமாகிய கடலில் மீனைப் போல் நீந்திக் கொண்டிருக்கிறார். அவருடைய அந்த ஆனந் தத்தை உங்கள் பேச்சின் மூலம் கலைத்து விடாதீர்கள்' என் றாள். குருதேவர் சமாதியிலிருந்து விழித்ததும் அந்தப் பெண்மணி கூறியதைச் சொல்லி அது பற்றிக் கேட்டனர். ''ஆமாம்! அவள் சொன்னது முற்றிலும் உண்மை. அவள் எப்படி இதை அறிந்து கொண்டாள் என்பது எனக்கு ஆச்ச ரியமாக இருக்கிறது'' என்றார். கள்ளம் கபடமற்ற கிராமப் பெண்கள் அவருக்குச் சுவையான இனிப்புக்களையும் மற்றத் தின்பண்டங்களையும் கொண்டு வந்தனர். அவரிடம் அடிக்கடி வந்து பேசி மகிழ்ச்சியடைந்தனர்.

இந்த நேரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரின் மனைவியான சிறுமி சாரதா தேவி தம் பெற்றோர் வீட்டில் இருந்தார். கடைசியாக அவர் தமது ஏழாவது வயதில் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த் தார். அது கணவன்-மனைவி என்ற உறவுபற்றி அறிந்து கொள்ள முடியாத பருவம். அப்போது அவர் நினைவிலிருந்த ஒரே நிகழ்ச்சி ஸ்ரீராமகிருஷ்ணர் தம் வீட்டிற்கு வந்தபோது உடன் வந்த இருதயன் தமது கால்களில் தாமரை மலரை இட்டு வணங்கிய நிகழ்ச்சியாகும். ஸ்ரீராமகிருஷ்ணர் கமார் புகூர் வந்ததும் சாரதா தேவியை அழைத்து வரும்படி ஆள னுப்பினார்கள். ஸ்ரீராமகிருஷ்ணர் அதை அறிந்தார். என் றாலும் அதுபற்றி ஒன்றும் சொல்லவில்லை. சில நாட்களில் சாரதா தேவி வந்து சேர்ந்தார். நெடு நாட்களுக்குப் பிறகு ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ளும் வயதில் அவர்கள் சந்திக்கும் முதல் சந்திப்பு இதுவே.

சில நாட்களுக்குள் சாரதை தம் கணவரின் மனநிலையைப் புரிந்துக் கொண்டார். அதற்கு ஏற்ப மிகுந்த பக்தியோடு குருதேவருக்குச் சேவை செய்ய ஆசை கொண்டார். தம்மை முழுவதுமாக அவர் சேவையில் ஒப்படைத்து, தம் ஆன்மிக

வளர்ச்சிக்கும் வழி காட்டுதலுக்கும், மனைவி என்றாலும் மாணவி என்ற மன நிலையோடு காத்து நின்றார். தூய்மையே வடிவான அவர் இறை மனிதரான ஸ்ரீராமகிருஷ்ணரோடு தமக்கு ஏற்பட்டுள்ள உன்னதமான உறவை நினைத்துப் பெரு மகிழ்ச்சி கொண்டார். குருதேவர் சாரதையின் மன நிலையை அறிந்து மிகுந்த மகிழ்ச்சியோடு அவருக்கு ஆன்மிகத்தைப் போதிக்க ஆரம்பித்தார். தாம் திருமணமானவன் என்று அறிந்தும், தமக்குச் சந்நியாசம் தரும்போது தம் குரு தோதாபுரி கூறியதைப்பற்றி நினைவு கூர்ந்தார்: ''என்ன? யார் பிரம்ம ஞானத்தில் ஊன்றி நிலைத்து நிற்கிறானோ அவன் மனைவியுடன் வாழும் போதுங்கூட விவேகத்தோடும் வைராக்கியத்துடனும் வாழ்வான். யார் ஆணையும் பெண்ணையும் ஆத்மாவாகப் பார்த்து அதற்கு ஏற்ப நடந்துகொள்கிறானோ அவனே பிரம்ம ஞானம் பெற்றவன். ஆண், பெண் வித்தியாசம் காண்பவன் ஒரு நல்ல சாதகனாக இருக்கலாம். ஆனால் அவன் பிரம்மத்தை அடைவதற்கு எவ்வளவோ தொலைவில் இருக்கிறான்.'' தாம் பிரம்மத்தில் நிலைத்தவரா, இல்லையா என்பதை அறிந்துகொள்ள மனைவியோடு வாழும் இந்த வாழ்க்கை அவருக்கு ஒரு பெரிய வாய்ப்பாக அமைந்தது. மனைவிக்குரிய இடத்தைக் கொடுத்து இந்தப் புதிய சாதனையில் ஸ்ரீராமகிருஷ்ணர் இறங்கினார். இதிலும் எல்லாச் சாதனைகளிலும் போலவே சிறந்து வெற்றி பெற்றுப் பொலிவோடு விளங்கினார்.

ஏதாவது ஒன்றைச் செய்வது தம் கடமை என்று நினைத்துவிட்டால் காலம் தாழ்த்துவதோ பாதியில் நிறுத்துவதோ ஸ்ரீராமகிருஷ்ணரின் வழக்கம் இல்லை. மனைவிக்கு ஆன்மிகத்திலும் அன்றாட வாழ்க்கையிலும் முழு மனத்தோடு பயிற்சி தர ஆரம்பித்தார் ஸ்ரீராமகிருஷ்ணர். குடும்ப வேலைகளிலும் பணம் செலவழிப்பதிலும் இவைகளுக்கெல்லாம் மேலாகச் சந்தர்ப்பத்திற்கும் ஆட்களுக்கும் தகுந்தாற்போல் நடந்துகொள்ள வேண்டியது பற்றியும் கற்றுத் தந்தார். இவைகளைச் சாரதா தேவி எந்த அளவு கற்றுக் கொண்டார் என்பதைப் பின்னால் காணப் போகிறோம். தம் கணவர் தம்மிடம் காட்டிய தூய்மையான சுயநலமில்லாத அன்பினாலும் அவர் மிகவும் கவரப்பட்டார். அவரைத் தம் இஷ்ட தெய்வமாகக் கொண்டு அவர் காட்டிய வழியில் நடக்கத் துவங்கினார்.

பைரவி பிராம்மணி ஸ்ரீராமகிருஷ்ணரின் அண்ணன் இராமேஸ்வரின் குடும்பத்தோடு மிகுந்த அன்போடு நெருங்

கிப் பழகினர். அந்த வீட்டில் இருந்த ஒவ்வொருவரும் அவரை மிகவும் மதித்தார்கள். பைரவி ஆன்மிகத்தில் மிக உயர்ந்த நிலையை அடைந்திருந்தாலும் முழுமையடையவில்லை. அதனால்தான் குருதேவர் தோதாபுரியிடம் வேதாந்த சாதனை செய்யத் துவங்கியதை வேண்டாமென்று தடுத்தார். தாந்திரிக சாதனையில் மிக உயர்ந்த நிலையான திவ்விய சாதகி நிலையை அவர் அடையவில்லை; அதோடு கோபம், பொறாமை என்னும் சாதாரண மனிதக் குறைபாடுகளிலிருந்தும் அவர் விடுபடவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் மற்றக் குருமார்களுடனோ பக்தர்களுடனோ பழகுவதை அவர் சிறிதும் விரும்புவதில்லை. பிராம்மணி போன்று ஆன்மிகத்தில் மிக உயர்ந்த நிலையை அடைந்தவரிடம் இத்தகைய குணங்கள் இருப்பது அதிசயமானதாகும். ஸ்ரீராமகிருஷ்ணர் தம்மிடம் கொண் டுள்ள மதிப்பும் அன்பும் சாதாரண மனிதர்களுடையது போல் மாறக் கூடியதல்ல; அவை நிலையானவை என்பதை பைரவி அறிவார். ஆனால் சுதந்திரம் கொடுக்க மறுக்கும் அன்பு சுயநலமானது என்பதை அவர் அறியவில்லை. உண்மை யான அன்பானது, செலுத்துபவரிடம் நிலையான பிடிப்பைத் தருவதுடன் இருவருக்கும் இடையே உள்ள தடைகளையெல் லாம் நீக்கி, கடவுளையும் காண வைக்கும்.

நாளாக நாளாக, பைரவி போலிப் பெருமைக்கும் பொய் கௌரவத்துக்கும் அடிமையாகி விட்டார். ஸ்ரீராம கிருஷ்ணரின் குரு என்பதால் தாம் மிக உயர்ந்தவர் என்றும் எல்லோரும் தமக்கு மரியாதை செலுத்த வேண்டுமென்றும் அப்படிச் செய்யாதவர்கள் வெறுக்கப்பட வேண்டுமென்றும் நினைத்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் தம் மனைவியிடம் அன்போடு பழகுவதையும் அக்கறையோடு அறிவுரைகள் கூறுவதையும் அவர் சிறிதும் விரும்பவில்லை. அவ்வாறு அவர் நடந்து கொள்வது முடிவில் அவருடைய பிரம்மச்சரிய வாழ்விற்கு இடையூறு நேரலாமென்று அவர் நினைத்திருக்கலாம். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர் பிராம்மணியின் தடைகளைப்பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. இது பிராம்மணியின் கோபத்தையும் ஆத்திரத்தையும் அதிகப்படுத்தியது. இதன் விளைவாகச் சில நாட்கள் ஸ்ரீராமகிருஷ்ணரையே மரியாதை இல்லாமல் நடத்தத் துவங்கினர். யாராவது அவர் முன்னிலையில் ஸ்ரீராம கிருஷ்ணரிடம் ஆன்மிகம் பற்றி ஏதாவது கேட்டால், ''இதைப் போய் அவனிடம் என்ன கேட்கிறீர்கள்? அவனுடைய தெய் விகக் கண்களைத் திறந்தவளே நான்தான். என்னைக் கேளுங் கள்'' என்று கூறுவார். வரவரச் சிடுசிடுத்து எடுத்ததற்கெல்

லாம் எரிச்சலடைந்து எதிர்ப்பட்டவர்களைத் திட்டத் துவங்கினார். சின்னஞ் சிறு காரணங்களுக்காகவும் சில நேரங்களில் காரணமில்லாமலும்கூட அந்தக் குடும்பத்துப் பெண்களைக் கோபித்துக் கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் இவைகளையெல்லாம் பெரியதாக எடுத்துக் கொள்ளவில்லை. முன்பு போலவே அவரிடம் மிகுந்த மரியாதையோடும் அன்போடும் பழகினார். அவருடைய கட்டளைப்படி சாரதா தேவியும் பைரவியைத் தம் சொந்த மாமியாராகவே நினைத்து அவர் எவ்வளவு எரிச்சலும் கோபமும் கொண்டு திட்டினாலும் பணிவோடு அவருக்குச் சேவை செய்துவந்தார்.

அளவுக்கு அதிகமாக நம்மைப்பற்றிப் பெருமை கொள்வது ஒவ்வொரு நிமிடமும் நம்மைத் தவறுகள் செய்ய வைத்து விடும். பிராம்மணி ஆன்மிகத்தில் மிக உயர்ந்த நிலையை அடைந்திருந்த போதிலும் அவருக்குத் தம்மைக் கட்டுப் படுத்திக்கொள்ளத் தெரியவில்லை. ஒரு நாள் மிகச் சாதாரணமான ஒரு காரியத்திற்காக இருதயனிடம் சண்டையிட ஆரம்பித்தார். குருதேவரின் உறவினர்கள் சிலர் தலையிட்டு இருவரையும் சமாதானப்படுத்தினார்கள். இதைக் கண்டு பைரவி முதலில் தம்மை எல்லோரும் அவமானப் படுத்தி விட்டதாக நினைத்தார். பிறகு சிந்தித்துப் பார்த்ததில் தாமே தவறு செய்திருப்பதைக் கண்டு மிகுந்த வேதனைப்பட்டார். இதுபற்றி நெடு நேரம் அமைதியாகச் சிந்தித்தவர் நீண்ட நாட்கள் அந்தக் குடும்பத்தோடு தாம் தங்கிவிட்ட தவற்றை உணர்ந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரோடு அவருக்குள்ள பாசம் நல்லது என்றாலும் அதுவும் உடைக்கப்பட வேண்டிய விலங்கே என்று உணர்ந்து கொண்டார். இந்தச் சிந்தனை அவர் போக்கையே மாற்றி விட்டது. சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் தாம் மிகுந்த கவனத்தோடு கட்டிய மாலையையும் சந்தனத்தையும் கையில் எடுத்துக்கொண்டு ஸ்ரீராமகிருஷ்ணரிடம் சென்றார். மாலையை அவர் கழுத்திலிட்டு, சந்தனத்தை அவர் நெற்றியிலிட்டு அவரைக் கௌராங்கரின் அவதாரம் என்று வணங்கினார். பிறகு தம்மை மன்னிக்கும்படிக் கூறிவிட்டு, கமார்புகூரை விட்டே புறப்பட்டு விட்டார்.

பைரவி ஆறு ஆண்டுக்காலம் ஸ்ரீராமகிருஷ்ணருடன் இருந்தார். இந்தக் காலத்தில் அவர் குருதேவரிடமிருந்து கற்றுக் கொண்ட பாடங்கள் மறக்க முடியாதவை. அவர் ஏற்கனவே மிக உயர்ந்த ஆன்மிக நிலையை அடைந்திருந்தாலும் பிற்காலத்தில் மிகக் கடுமையான தவங்களில் மூழ்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் கமார்புகூரிலிருந்த பொழுது அருகிலிருந்த இருதயனின் ஊரான சிகோருக்கு அடிக்கடிச் சென்று வந்தார். அப்போது இருதயன் புகழ்பெற்ற வைஷ்ணவ பக்தர்கள் ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்திக்கவும், சமயத்தைப் பற்றி விவாதிக்கவும் ஏற்பாடு செய்தான். இருதயனின் தாய் ஹேமாங்கினி ஸ்ரீராமகிருஷ்ணரைத் தம் இஷ்ட தெய்வமாகப் போற்றி ஒவ்வொரு முறையும் அவர் திருவடிகளில் மலரிட்டு வழிபாடு செய்தார். இவ்வாறு வழிபாடு செய்யும் போது ஒரு நாள் தாம் காசியில் இறந்து போக வேண்டுமென்று வரம் தரும்படி வேண்டினர். ஆனந்தப் பரவசத்தில் இருந்த குருதேவரும் அவ்வாறே ஆகட்டும் என்றார். பிற்காலத்தில் அது உண்மையாகவே நடந்தது. கடைசிவரையில் நல்ல நினைவோடு அவர் காசியில் இறந்தார்.

கமார்புகூரில் தங்கியதும் ஸ்ரீராமகிருஷ்ணர் நோய் நீங்கி நல்ல உடல் நிலையை அடைந்தார். எனவே இருதயனோடு தட்சிணேசுவரம் திரும்பினர். வழியில் பர்த்துவான் அருகே வந்தபோது ஒரு வயலில் சிவபெருமானுக்கு மிகவும் விருப்பமான மலர்களும் இலைகளும் மிக அதிகமாக இருப்பதைக் கண்டார். அந்த இடம் தூய்மை இல்லாமல் அழுக்காக இருந்த போதும்கூட அங்கேயே உட்கார்ந்து அந்த மலர்களையும் இலைகளையும் தலைமேல் வைத்தபடி தியானம் செய்ய ஆரம்பித்தார். சிறிது நேரத்தில் ஆழ்ந்த சமாதியில் மூழ்கிவிட்டார். பயணம் செய்யும் நினைவை முற்றிலும் மறந்து போனர். இதற்கிடையே கல்கத்தாவிற்குச் செல்லும் இரயில் வருவதற்கான நேரம் நெருங்கிவிட்டது. என்ன செய்தும் அவருக்கு நினைவு திரும்பாததைக் கண்ட இருதயன், இறுதியில் அவரைத் தம் தோளில் தூக்கிக் கொண்டு இரயில் நிலையத்தை அடைந்தான். அவன் அங்கு வருவதற்கும் இரயில் வருவதற்கும் சரியாக இருந்தது. குருதேவர் அடிக்கடி சாதகன் கடவுளை அடைய வேண்டுமானல் அவன் சுத்தம், அசுத்தம் என்னும் இரண்டையும் கடந்து மேலே செல்ல வேண்டும் என்று கூறுவது வழக்கம். இந்த நிகழ்ச்சியில் அவர் அதை மெய்ப்பித்துக் காட்டினர்.

# 21. மதுர்பாபுவைப் பற்றிய நினைவுகள்

''இருதயா, என் மனைவி, மக்கள், செல்வம், பேர், புகழ், எல்லாமே பொய். ஸ்ரீராமகிருஷ்ணர் ஒருவரே உண்மை.'' மேற்கண்ட சொற்கள் மூலம் மதுர் தமக்கு ஸ்ரீராமகிருஷ்ண ரிடமுள்ள பக்தியை வெளிப்படுத்தியுள்ளார். படிப்படியாக அவர் தம்மை எப்படி முழுவதும் ஸ்ரீராமகிருஷ்ணரிடத்தில் ஒப்படைத்து அவர் வழிகாட்டுதலில் வாழ்ந்தார் என்பதை நாம் கண்டோம். கல்கத்தாவிலிருந்த மதுரின் வீட்டிற்குத் துர்க்கா பூஜையின்போது ஒரு முறை குருதேவர் சென்றதை யும் அப்போது நடந்த நிகழ்ச்சி ஒன்றையும் கண்டோம். மற்றும் பலமுறை அவர் அங்குச் சென்றபோது நடந்த சில சுவையான நிகழ்ச்சிகளைக் காண்போம்.

ஸ்ரீராமகிருஷ்ணர் துர்க்காபூஜைக்குத் தம் வீட்டிற்கு வந்ததும் விழாவின் மூன்று நாட்களும் மதுர் அவரோடு மிகுந்த மகிழ்ச்சியோடு கழித்தார். இவ்வளவு நாட்கள் மிகுந்த சிறப்போடு வழிபட்ட அன்னையின் திரு வுருவைக் கங்கையில் கொண்டுபோய் அமிழ்த்தும் நாளான விஜயதசமி வந்தது. அன்னையைப் பிரியும் அந்த நாளில் எல்லோர் மனமும் வேதனையில் மூழ்கியது. திருவுருவை ஆற்றுக்கு எடுத்துச் செல்ல வேண்டிய நேரம் நெருங்கவே, பூசாரி மதுரிடம் அன்னை துர்க்கா தேவியை வந்து கடைசியாக வணங்கிக் கொள்ளும்படிச் சொல்லி அனுப்பினார். மூன்று நாட்களாக அன்னை துர்க்கையின் வருகை யினால் பக்தியிலும் பரவசத்திலும் மூழ்கியிருந்த மதுர் இதைக் கேட்டதும் மிகவும் அதிர்ச்சியடைந்தார். அன்னை துர்க்கா தேவியைக் கங்கையில் அமிழ்த்துவதா? அது, அவரால் எப்படி முடியும்? மனமொடிந்து போன மதுர் ஒன்றும் பதிலனுப்பாமல் அப்படியே உட்கார்ந்துவிட்டார். நேரம் கடந்துகொண்டே இருந்தது. மதுர்பாபுவை வரும்படியும் இல்லையென்றால் திருவுருவினை எடுத்துச் செல்ல அனுமதி அளிக்கும்படியும் பூசாரி திரும்பத் திரும்பச் சொல்லி அனுப் பினார். இறுதியில் மதுர், ''அன்னையைக் கங்கையில் அமிழ்த்த யாரும் எடுத்துச் செல்லக் கூடாது. அங்கேயே வைத்து நாள்தோறும் வழிபாடு செய்ய வேண்டும். இதை யாராவது மீறினால் பயங்கரமான தண்டனைக்குள்ளாவார்கள்'' என்று

சொல்லியனுப்பினர். இதைக் கேட்ட எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். சாஸ்திரப்படி விஜய தசமியன்று துர்க்கையின் திருவுருவம் ஆற்றில் விடப்பட வேண்டும். வீட்டில் உள்ள பெரியவர்கள் மதுருக்கு எவ்வளவு எடுத்துக் கூறியும், மதுர் தம் தீர்மானத்தில் பிடிவாதமாக இருந்தார். மதுரின் மனைவி இறுதியில், ஸ்ரீராமகிருஷ்ணரைச் சரணடைந்து, அவரிடம் தம் கணவரின் நிலையைக் கூறினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் மதுரின் அறைக்குள் சென்ருர். மதுர் மனக் கிளர்ச்சியோடு தம் அறைக்குள் அங்குமிங்குமாக மெதுவாக நடந்து கொண்டிருந்தார். குருதேவரைக் கண்டதும், ''பாபா, யார் என்ன சொன்னலும் சரி. நான் அன்னையைக் கங்கையில் அமிழ்த்தச் சம்மதிக்கவே மாட்டேன். முறையாக அன்னைக்கு நாள்தோறும் வழிபாடு செய்ய வேண்டும் என்று சொல்லிவிட்டேன். அன்னையை என்னல் பிரியவே முடியாது'' என்ருர். ஸ்ரீராமகிருஷ்ணர் மிகுந்த அன் போடு அவர் மார்பைத் தம் கையால் தடவியபடியே, ''ஓ! இதுதான் உனக்கு இவ்வளவு வேதனையைத் தருகிறதா? யார் உன்னை அன்னையைப் பிரிந்து இருக்கச் சொன்னர்கள்! கங்கையில் அமிழ்த்தி விட்டாலும் அவள் எங்கே போவாள்? அன்னை தம் மகனைவிட்டுப் போய்விடுவாளா? கடந்த மூன்று நாட்களாக வெளியிலே - உன் பூஜை மண்டபத்தில் அவள் உன் வழிபாடுகளை ஏற்றுக் கொண்டாள். இனிமேல் எப்போதும் மிக மிக நெருக்கமாக உன் இதயத்திற்குள் அமர்ந்து நாள்தோறும் ஒவ்வொரு விநாடியும் உன் வழி பாட்டை ஏற்றுக்கொள்ளப் போகிருள்'' என்று கூறினர்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய்விக ஸ்பரிசமும் அவருடைய அன்பான வார்த்தைகளும் கொதித்துக் கொண்டிருந்த மதுரின் உள்ளத்தைப் பழைய நிலைக்குத் திரும்பின. தம் இதயத்தில் அவர் ஒளிமயமான அன்னையைக் கண்டாரோ? யார் கண்டார்கள்? மதுர் உடனே துர்க்கையின் திருவுருவைக் கங்கையில் அமிழ்த்துவதற்கான அனுமதியளித்தார். உண் மையான குருவைப்போல், ஸ்ரீராமகிருஷ்ணர் தொடுவதன் மூலம் மதுரின் மனநிலையை மிக உயர்ந்த ஆன்மிக நிலைக்கு உயர்த்தி, அவருடைய இஷ்ட தெய்வத்தை இதயத்திற்குள் காணும்படிச் செய்தார். ஸ்ரீராம கிருஷ்ணர் இப்படித் தொடுவதன் மூலம் தம் சீடர்களின் மனத்தில் வியக்கத் தக்க மாறுதலை உண்டாக்கியதை நாம் அடிக்கடிக் காண்கிருேம். மணிக் கணக்கில் புரியும் வாதங்கள் யாவும் பயனளிக்காதபோது அவர் சீடர்களை ஒரு முறை

தம் கையால் தொடும் ஒரே விநாடியில் எதையும் அவர்களுக்கு உணர்த்த முடியும். அவர் சொல்வதை மறுவார்த்தையில்லாமல் அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள். இதுபற்றி அவர் விளக்கும்போது, தாம் தொட்டதும் சீடன் மனத்தில் உள்ள அழுக்குகள் யாவும் நீங்கிவிடுகிறது என்றும், தூய்மையான அந்த மனத்தினுல் உண்மையைப் பளிச்சென்று அறிய முடிகிறது என்றும் கூறியுள்ளார்.

கீழ்வரும் நிகழ்ச்சி மதுர் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கொண்ட அளவற்ற நம்பிக்கையைக் காட்டுகிறது. ஒரு முறை ஆபத்தான சீழ்பிடித்த கட்டி ஏற்பட்டு மிகவும் உடல் நலமின்றி மதுர் படுத்த படுக்கையாகக் கிடந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரைக் காணப் பெரிதும் ஆவல் கொண்டு பலமுறை சொல்லியனுப்பினுர். ஸ்ரீராமகிருஷ்ணரும் ஜான்பஜாரிலிருந்த அவரது வீட்டிற்குச் சென்ருர். அங்கே மதுரின் படுக்கையருகே போய் நின்றுகொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணரைக் கண்டதும் மதுர் மிகுந்த சிரமப்பட்டுப் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து, அவருடைய திருவடிகளின் தூசியைத் தம் தலைமேல் இட்டுக் கொள்ளக் கேட்டார். ''அது உனக்கு என்ன செய்யும்? உன் நோயைத் தீர்த்துவிடுமா?'' என்று கேட்டார் ஸ்ரீராமகிருஷ்ணர். அதைக் கேட்ட மதுர், ''பாபா! அதற்கு டாக்டர்கள் இருக்கிருர்கள். நான் இந்த உலகத்தை விட்டுப் போகும்போது என் குருதேவரின் ஆசிகளுக்காக அதைக் கேட்கிறேன்'' என்ருர். ஸ்ரீராமகிருஷ்ணர் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் ஆனந்தப் பரவசத்தில் ஆழ்ந்து சமாதியில் மூழ்கிவிட்டார். மதுர் கண்களில் நீர்வழிய ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவடிகளைத் தம் தலைமீது எடுத்து வைத்துக் கொண்டார். சில நாட்களுக்குள் மதுர் அந்தக் கொடிய நோய் தீர்ந்து நலம் பெற்றுவிட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் கருணை மதுரோடு மட்டும் நின்றுவிடவில்லை. அவருக்குப் பிறகு அவருடைய பிள்ளைகளுக்கும் அது தொடர்ந்தது. ஒரு நாள் அவர் பரவசத்தில் மூழ்கியபடியே மதுரிடம், ''நீ உயிரோடு இருக்கும்வரைதான் இந்தக் கோயிலில் இருப்பேன்'' என்ருர். மதுர் அதிர்ச்சியடைந்தார். தம் மகன் துவாரகாநாத்துக்கும் அவர் அருள்புரிய வேண்டுமென்று மிகவும் விரும்பிய மதுர், ''பாபா! துவாரகாநாத்கூட உங்களைத் தெய்வமாக நினைக்கிருனே'' என்ருர். ''சரி! அவன் உயிரோடு இருக்கும்வரை நான் தட்சிணேசுவரத்தில் இருக்கிறேன்''

என்றார் ஸ்ரீராமகிருஷ்ணர். அதுபோலவே உண்மையில் துவாரகாநாத் இறந்த பிறகே அவர் தம் தொண்டை வலிக்கு மருத்துவம் செய்துகொள்ளத் தட்சிணேசுவரத்தை விட்டு நீங்கினார்.

மதுர் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அளவற்ற நம்பிக்கை வைத்து எல்லாக் காரியங்களையும் அவர் ஆலோசனைப்படி செய்ததுபோலவே, ஸ்ரீராமகிருஷ்ணரும் சமாதியில் இருக்கும்போது தவிர மற்ற எல்லா நேரங்களிலும், எல்லாக் காரியங்களையும் ஒரு குழந்தைபோல் மதுரிடம் கேட்டே நடத்தி வந்தார். ஒருவரை ஒருவர் சார்ந்தவர்களாகவும் ஒருவர்மேல் ஒருவர் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டவர்களாகவும் இருவரும் இருந்தார்கள். சாதனை காலங்களில் தமக்கு என்னென்ன உதவிகள் - பொருள்கள் எவ்வெப்போது வேண்டுமோ அனைத்தையும் குருதேவர் மதுரிடம் கேட்பார். சாதனையின்போது தமக்குத் தோன்றிய அதிசயமான காட்சிகளை எல்லாம் கூறி அதுபற்றி அவருடைய கருத்தைக் கேட்பார். அதே நேரத்தில் மதுரிடம் உள்ள அளவற்ற செல்வம் நல்ல வழியில் செலவிடப்படுகிறதா என்பதைக் கண்காணிப்பதிலும் குருதேவர் அக்கறை எடுத்துக் கொண்டார். தம்மிடம் ஸ்ரீராமகிருஷ்ணர் காட்டும் அளவற்ற கருணையையும் தெய்விகப் பரவசத்தில் இல்லாத சாதாரண நேரங்களில் ஒரு குழந்தை போல் பேசிச் சிரித்துக் கள்ளம் கபடமில்லாமல் எல்லாவற்றுக்கும் தம்மை நாடி நிற்கும் நிலையும் மதுரின் மனத்தை உருக்கிவிட்டது. எனவே ஸ்ரீராமகிருஷ்ணரை உலக வாழ்வில் காப்பாற்றும் பொறுப்பை முழுக்க முழுக்க அவர் ஏற்றுக் கொண்டார். கண்களுக்குத் தெரியாத தம் ஆன்மிக வாழ்வை ஸ்ரீராமகிருஷ்ணர் காப்பாற்றி வருவது போல் கண்ணுக்குத் தெரிந்த அவர் உடலையும் உலக வாழ்வையும் காப்பாற்றும் பொறுப்பு தம்முடையது என்று மதுர் ஏற்றுக் கொண்டார். இதன் காரணமாக ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் மதுருக்கும் இடையே அமைந்த உறவு விசித்திரமான ஒன்றாக அமைந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர், சமாதி நிலையை அடையும்போது மதுருக்கு அவர் வழிபடும் கடவுளாக இருப்பார்; சாதாரண நேரங்களில் மதுருடைய பாதுகாப்பை வேண்டி நிற்கும் குழந்தையாக இருப்பார்.

என்றாலும், பெரும் துன்பங்கள் வந்துற்றபோது மதுர், ஸ்ரீராமகிருஷ்ணரையே நாடினார். ஒரு முறை மதுருக்கும் அருகில் உள்ள மற்றொரு ஜமீன்தாருக்கும் கடும் பகை

உண்டாயிற்று. மதுர் தம் ஜமீனில் உள்ள ஆட்களை அவர்களோடு சண்டையிட அனுப்பி வைத்தார். இதன் விளைவாக மதுரின் ஆட்கள் எதிரி ஜமீனில் சிலரைக் கொன்று விட்டார்கள். அந்தக் குற்றம் மதுர்மேல் விழுந்தது. தம் அறிவு, பணம், செல்வாக்கு எல்லாவற்றையும் பயன்படுத்தி மதுர் எவ்வளவோ முயன்று பார்த்தார். ஒன்றும் முடிய வில்லை. அவரைக் கைது செய்யும் நிலை வந்துவிட்டது. ஆதரவற்ற இந்த நிலையில் மதுர் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் ஓடோடி வந்தார். தம் நிலையைக் கூறிக் காப்பாற்றும்படி வேண்டினார். இதைக் கேட்டதும் கோபம் கொண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் முதலில், ''அயோக்கியப் பயலே! ஒவ்வொரு நாளும் இப்படி ஊர்ச் சண்டையை இழுத்துவிட்டுக் கொண்டு பிறகு என்னிடம் காப்பாற்றும்படிக் கேட்க வருகிறாய். நான் என்ன செய்ய முடியும்? போ. போய், உன் குற்றத்துக்கான தண்டனையை அனுபவி. நான் எப்படி உன்னைக் காப்பாற்ற முடியும்?'' என்று கூறிவிட்டார். ஆனால் மதுர் அவரை விடவே இல்லை. தம்மைக் காப்பாற்றியே ஆக வேண்டுமென்று அவர் கால்களைப் பிடித்துக் கொண்டார். நெடு நேரத்திற்குப் பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர், ''சரி போ. அன்னையின் விருப்பப்படி நடக்கும்'' என்றார். மதுர் அந்த ஆபத்திலிருந்து தப்பித்துக் கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணரோடு வாழ்ந்து அவர் எப்போதும் பாவ சமாதியில் மூழ்குவதைப் பார்த்து வந்த மதுருக்கு ஒரு முறை தாமும் அந்த ஆனந்த நிலையை அடைய வேண்டும் என்னும் ஆசை உண்டாயிற்று. ஸ்ரீராமகிருஷ்ணர் நினைத்தாலே எதுவும் நடக்கும் என்று உறுதியாக நம்பிய மதுர் தமக்கும் பாவ சமாதி நிலை ஏற்படச் செய்ய வேண்டுமென்று வற்புறுத்த ஆரம்பித்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் தம் வழக்கப்படி, ''அவசரப்படாதே, உரிய காலம் வரும்போது நீ அந்த ஆனந்தத்தைக் கண்டிப்பாக அனுபவிப்பாய். இப்போது நீ உலக இன்பம், தெய்விக இன்பம் இரண்டையும் அனுபவித்து வருகிறாய். சமாதி நிலையை அடைந்தால் நீ உலகக் காரியங்கள் எதுவும் செய்ய முடியாது. உன் வியாபாரம், ஜமீன் எதையும் பார்த்துக்கொள்ள முடியாது. எல்லாம் தூள்தூளாகி விடும்'' என்றார். அப்போதும் மதுர் விடவில்லை. இறுதியில் குருதேவர் தமக்கே உரிய கடைசி ஆயுதத்தைப் பயன்படுத்தினார். ''நல்லது, நான் அன்னையைக் கேட்கிறேன். அவள் என்ன நினைக்கிறாளோ அது நடக்கும்'' என்றார்.

சில நாட்கள் கழிந்தன. கல்கத்தாவில் தம் வீட்டி லிருந்த மதுருக்கு பாவ சமாதி நிலை ஏற்பட்டது. அவ ரால் தம் வியாபாரத்தையோ ஜமீன்களையோ எதையுமே பார்க்க முடியவில்லை. தம்மை மறந்து சிரிப்பதும், ஆடு வதும் பாடுவதும், காரணமில்லாமல் அழுவதுமாக இருந் தார். இதன் காரணத்தை அறியாத அவர் உறவினர்கள் மிகவும் பயந்து போய் அவருக்கு ஏதாவது நோய் ஏற் பட்டுவிட்டதோ என்று மருத்துவரை அழைத்து வந்தார் கள். ஆனால் எந்த மருத்துவமும் பயன் தரவில்லை. நாளுக்கு நாள் மதுரின் நிலைமை கவலைக்குரியதாக மாறியது. உற வினர்கள் மிகுந்த கவலை கொண்டார்கள். ஒரு நாள் மதுர் அவர்களிடம், ''எனக்குப் பைத்தியமோ அல்லது பயங்கரமான நோயோ எதுவுமில்லை. யாரும் கவலைப்பட வேண்டாம். ஸ்ரீராமகிருஷ்ணரை அழைதது வாருங்கள். எல்லாம் சரியாகிவிடும்'' என்றார். ஸ்ரீராம கிருஷ்ணர் வந்தார். இந்த நிகழ்ச்சியைப் பற்றிக் குருதேவர் பிற்காலத்தில் கூறும்போது, ''எனக்கு ஆள் அனுப்பினார் கள். அங்குச் சென்றதும் மதுர் இருக்கும் விசித்திரமான நிலையைக் கண்டேன். கடவுளைப் பற்றியே அவர் பேசிக் கொண்டிருந்தார். கண்கள் எல்லாம் சிவந்து கிடந்தன. கடவுளைப் பற்றிப் பேசும்போதெல்லாம் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் வடிந்தது. மார்பெல்லாம் நடுங்கியது. என்னைப் பார்த்ததும் என் கால்களில் விழுந்து, பற்றிக்கொண்டு தம் தவறுதலுக்கு வருந்துபவர்போல், 'என்னை மன்னித்து விடுங்கள், பாபா! கடந்த மூன்று நாட் களாக நான் இந்த நிலையில் இருக்கிறேன். நான் எவ்வளவு முயன்றும் என் மனத்தை உலகக் காரியங்களில் திருப்பவே முடியவில்லை. என் முயற்சிகள் எல்லாம் பயனில்லாமல் போய்விட்டது. உங்களுடைய பாவ சமாதியை நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள். எனக்கு இது வேண்டவே வேண் டாம். இனிமேல் உங்களைக் கேட்கவே மாட்டேன்' என்றார். அதற்கு நான், 'நீதானே அதைக் கொடுக்கும்படி வற்புறுத் தினாய்?' என்றேன். 'ஆமாம். அதிலிருக்கும் ஆனந்தத்தை யும் நான் அனுபவிக்கிறேன். ஆனால் நான் இதே நிலையில் இருந்தால் என் ஜமீன்களும் சொத்துக்களும் பாழாகப் போய் விடும். இந்த பாவ சமாதி உங்களுக்குத்தான் பொருத்தம்; எனக்கல்ல. எனவே அருள் கூர்ந்து இதை நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள்' என்றார். நான் சிரித்தபடியே, 'நான் முன்பே எச்சரித்தேன். நீ கேட்கவில்லை' என்றேன். 'உண்மைதான் பாபா. ஆனால் இது பேய்போல் என்னை இப்படிப் பிடித்து

கொள்ளும் என்றோ, நான் எவ்வளவு முயன்றாலும் அதிலிருந்து விடுபட முடியாது என்றோ எப்படி அறிவேன்?' என்றார். அவர் மார்பின்மீது கையை வைத்துத் தடவினேன். சிறிது நேரத்தில் அவர் பழைய நிலைக்கு வந்து விட்டார்'' என்று சொன்னார்.

ஒருவர் குறிப்பிட்ட ஆன்மிக நிலையை அடைய விரும்பினால் அதைத் தாங்குவதற்கான வலிமையைப் பயிற்சியின் மூலம் அடைய வேண்டும்; அவர் எல்லா ஆசைகளிலிருந்தும் விடுபட்டுத் தூய்மை மயமாக வேண்டும். இல்லையென்றால் அந்த நிலை அவரிடம் நிலைத்து நிற்காது. பயங்கரமான எதிர் விளைவுகளும் உண்டாகும். எனவே ஆன்மிக உயர்வை வேண்டுபவர்கள் அடிப்படையான பயிற்சிகளில் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

மதுர் ஸ்ரீராமகிருஷ்ணரைக் கடவுளின் அவதாரமாக நினைத்து அவருடைய தேவைகள் அனைத்தையும் மிகுந்த பக்தி சிரத்தையோடு கவனித்துக் கொண்டார். தமக்கென்று ஒரு சொத்தும் இல்லாமல் கடவுளே கதி என்று வாழ்ந்த அவருக்கு உலகின் கொடுமைகளை நன்கறிந்த மதுர் தமக்குப் பிறகு அவருடைய தேவைகளைத் தம்மைப்போல் யாரும் கவனிக்க மாட்டார்கள் என்பதையும் உணர்ந்து கொண்டார். இதனால் அவருடைய பராமரிப்புக்காகச் சுலபமாக வருவாய் வரும் பெரிய சொத்தொன்றை அவர் பேரில் எழுதி வைக்க முடிவு செய்தார். ஒரு நாள் தனியாக இருக்கும் போது குருதேவரிடம் தம் கருத்தை வெளியிட்டார். ஆத்திரமும் அளவற்ற கோபமும் கொண்ட குருதேவர் தம்மை உலக ஆசை பிடித்தவனாக மாற்ற முயலும் மதுரின் செயலுக்காக அவரை மிகவும் ஏசி, மதுர் மறுபடியும் அந்தப் பேச்சைத் தம்மிடம் எடுக்காதவாறு செய்து விட்டார்.

சந்திரா தேவி தட்சிணேசுவரத்திற்கு வந்த உடனே மதுரின் பழைய ஆசை மறுபடியும் துளிர்த்தது. அவர் மூலம் ஸ்ரீராமகிருஷ்ணர்பேரில் சொத்தை எழுதி வைக்க நினைத்தார். ஒரு நாள் சந்திரா தேவியிடம் பேசிக் கொண்டிருக்கும்போது இந்தப் பேச்சை ஆரம்பித்தார் மதுர். அவருக்கு வேண்டிய ஒன்றைத் தம்மிடம் கேட்டு வாங்கிக் கொள்ளுமாறு சந்திரா தேவியை வற்புறுத்தினார். ஆனால் வயதான அந்தத் தாய்க்கு என்ன வேண்டுமென்றே தெரியவில்லை. மதுர் மீண்டும் மீண்டும் வற்புறுத்தினார். இதனால் சங்கடப்பட்ட அவர் மதுரிடம், ''மகனே! என் தேவைகள் அனைத்தையும் நீதான்

கவனித்துக் கொண்டு வருகிருய். எனக்கு வேண்டிய துணி மணிகள் இருக்கின்றன. சாப்பாட்டிற்கும் நிறையக் கொடுத் திருக்கிருய். இதற்குமேல் எனக்கு என்ன வேண்டும்?'' என்ருர். மதுர் அப்போதும் விடவில்லே. ஏதாவது கேட்டுப் பெற்றுக் கொண்டே ஆக வேண்டும் என்ருர். சந்திரா தேவி சிறிது நேரம் யோசித்தரர். பிறகு மதுரிடம், ''மகனே, நீ எனக்கு ஏதாவது கொடுத்துத்தான் ஆக வேண்டுமென்ருல் ஓர் அணு விற்குப் புகையிலே வாங்கிக் கொடு. அதைப் பற் பொடியாக்கிக் கொள்ளுகிறேன்'' என்ருர். ஓர் இலட்ச ரூபா யாலும் கொடுக்கத் தயாராயிருந்த மதுர், சந்திரா தேவி ஓரணுவிற்குப் புகையிலே கேட்டதும் அப்படியே மனம் உரு கிப் போனுர். கண்களில் நீர் நிறைந்தது. இரண்டு கைகளே யும் கூப்பி அவரை வணங்கியபடியே, ''தாயே! உன்னுல் தான் ஸ்ரீராமகிருஷ்ணரைப் போன்ற ஒரு பிள்ளேயைப் பெற்றுத் தர முடியும்'' என்ருர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் மதுரோடு சென்று அப்போது கல் கத்தாவில் புகழ் பெற்றிருந்த இரண்டு பக்தர்களேச் சந்தித் தார். ஒருவர் ஆதிப் பிரம்ம சமாஜத்தை உருவாக்கியவ ராகிய தேவேந்திரநாத் தாகூர். ஸ்ரீராமகிருஷ்ணர் மதுரிடம், ''தேவேந்திரர் கடவுள் மீது அதிகமாகத் தியானம் செய்கிருர். நான் அவரைப் பார்க்க வேண்டும்'' என்ருர். மதுரும் தேவேந்திரநாத் தாகூரும் கல்லூரியில் ஒன்ருகப் படித்தவர் கள். எனவே முன்னறிவிப்பு இல்லாமலே ஒரு நாள் மதுர் குரு தேவரை அழைத்துக் கொண்டு இருதயனும் உடன்வர தேவேந்திரநாத்திடம் சென்ருர். குருதேவரைத் தம் நண் பரிடம் அறிமுகப்படுத்திஞர் மதுர். தாகூர் மிகுந்த அன்போடு குருதேவரை வரவேற்ருர். அவரோடு ஆன்மிக விஷயங்களே யும் அவர் செய்துவரும் சாதனேகளேயும் பற்றிப் பேசிய குருதேவர், அவருடைய ஆன்மிக உயர்வை அறிவதற்காக அவர் உடலின் நிறத்தைக் காணச் சட்டையைக் கழற்றும் படிக் கூறிஞர். சட்டையைக் கழற்றிய தாகூரின் நிறம் நல்ல சிவப்பு நிறமாக இருப்பதைக் கண்டார்.

இந்தச் சந்திப்பைப் பற்றிக் குருதேவர் சொல்லும் போது, ''நான் அவரைச் சந்தித்தபோது அவரிடமும் சிறிது பெருமை இருக்கக் கண்டேன். சாதாரண மனிதன் நினேக்கக் கூட முடியாத அளவு செல்வம், படிப்பு, பேர், செல்வாக்கு அனேத்தும் பெற்றிருந்த அவரிடம் இது இருப்பது இயற்கை தான். இதை மனத்தில் வைத்துக் கொண்டு நான் மதுரிடம், 'இந்த அகங்காரத்தின் மூலம் எது? அறிவா? அறியாமையா?

பிரம்மத்தை அறிந்த ஒரு மனிதனுக்குத் தன் பண ம்படிப்பு, அறிவு இவைகளைப் பற்றிய பெருமை தோன்றுமா?' என்றேன். தேவேந்திரநாத்துடன் பேசிக் கொண்டிருந்தபோது ஒருவனின் எண்ணங்களை அப்படியே காணும் விசித்திரமான நிலையை அடைந்தேன். அந்த நிலையில் பெரிய அறிஞர்களாக இருந்தாலும் அவர்களிடம் விவேகமும் தியாகமும் இல்லையென்றால் அவர்களைத் தூசிபோல் நினைப்பேன். அவர்களைப் பற்றி எனக்குள்ளே சிரிப்புப் பொங்கி எழும். தாகூர் குடும்ப வாழ்வை அனுபவித்துக்கொண்டே ஆன்மிக வாழ்விலும் ஈடுபட்டிருப்பதைக் கண்டேன். அவருக்குச் சின்னஞ் சிறுவர்களாகப் பல குழந்தைகள் இருந்தனர். அவர் பெரிய ஞானியாக இருந்தாலும் உலக இன்பத்தோடும் தம்மை இணைத்துக் கொண்டிருந்தார். எனவே நான் அவரிடம், 'நீங்கள் இந்தக் காலத்து ஜனகர். ஜனகர் இந்த உலகையும் அனுபவித்தார்; மிக உயர்ந்த ஞானத்தையும் அடைந்திருந்தார். நீங்கள் உலக வாழ்க்கையை நடத்தினும் எப்போதும் கடவுளைத் தியானம் செய்வதாக அறிந்தேன். அதனால்தான் உங்களைக் காண வந்தேன். கடவுளைப் பற்றி எனக்குக் கொஞ்சம் சொல்லுங்கள்' என்றேன்.

''தேவேந்திரர் வேதங்களிலிருந்து சில பாடல்களைப் பாடினர். 'இந்த உலகம் சர விளக்கு போன்றது. அதில் ஒவ்வோர் உயிரும் ஒரு தனித்த விளக்கு' என்றார். பஞ்சவடியில் தியானம் செய்து கொண்டிருந்தபோது நானும் இத்தகைய காட்சியைக் கண்டிருந்தேன். என் காட்சியோடு இவர் கூறியது சரியாக இருக்கவே இவர் நிச்சயம் பெரிய மகானாகத்தான் இருக்க வேண்டுமென்று நினைத்தேன். நான் அதை விளக்கும்படிக் கேட்டேன். அதற்கு அவர், 'இந்த உலகத்தை யாரால் அறிய முடியும்? கடவுள் தம் பெருமைகளை விளக்கவே மனிதனைப் படைத்திருக்கிறார். சர விளக்கில் ஒளி மட்டும் இல்லையானால் எல்லாம் ஒரே இருள் மயம். அந்த விளக்கு இருப்பதைக்கூட ஒருவரால் பார்க்க முடியாது' என்றார்.

''நாங்கள் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தோம். அவருடைய சமாஜ ஆண்டு விழாவில் கலந்து கொள்ளும்படி எனக்கு அழைப்பு விடுத்தார். நான் அவரிடம், 'நான் வருவது இறைவனின் விருப்பதைப் பொறுத்தது. என் நிலையைப் பாருங்கள். என் சுய விருப்பம் என்பது எதுவும் இல்லை. குறிப்பிட்ட ஒரு நேரத்தில் அவர் என்னை எந்த நிலையில் வைத்திருப்பார் என்பதும் எனக்குத் தெரியாது' என்றேன். 'இல்லை. நீங்கள்

அவசியம் வர வேண்டும். ஆனால் தயவு செய்து வேட்டியும் மேல் துண்டும் அணிந்து வாருங்கள். இப்போது போல் வந்தால் அங்குள்ளவர்கள் உங்கள் உடையைப்பற்றிக் குறை கூறுவார்கள். அது எனக்கு வருத்தத்தைக் கொடுக்கும்' என்றார். அதைக் கேட்டதும் நான், 'என்னால் அப்படிப் பெரிய செல்வந்தர்போல் உடையணிந்து கொள்ள முடியாது' என்றேன். இதைக் கேட்டதும் தாகூரும் மதுரும் மற்றவர்களும் ஓவென்று சிரித்தார்கள். மறுநாள் தாகூரிடமிருந்து மதுருக்கு ஒரு கடிதம் வந்தது. மேல் சட்டை இல்லாமல் விழாவிற்கு வருவது நன்றாக இருக்காது. ஆதலால், நான் வர வேண்டாம் என்று எழுதியிருந்தார்.'' என்று கூறியுள்ளார்.

குருதேவர் சந்தித்த மற்றொரு பக்தர் கல்கத்தாவில் பாக் பஜாரில் வசித்த தீனநாத் முகர்ஜி. முன்னரே அறிவிக்காது சென்ற அந்தச் சந்திப்பு தீனநாத்தின் மகனுடைய பூணூல் அணிவிப்புச் சடங்கு அன்று நடந்ததால் பெரும் ஏமாற்றத்தில் முடிந்தது. அந்த வீடு சிறியதாகவும், நிகழ்ச்சிக்கு வந்திருந்தவர்களால் நிறைந்தும் இருந்ததால் முகர்ஜியால் ஸ்ரீராமகிருஷ்ணரையும் மதுரையும் உடன் வந்த மற்றவர்களையும் வரவேற்கவோ, தனியாக உட்காரவைக்கவோ முடியவில்லை. சிறிது நேரம் உரையாடிவிட்டு ஸ்ரீராமகிருஷ்ணர் அங்கிருந்து திரும்பிவிட்டார்.

# 22. புனிதப் பயணம்

மதுரும் அவர் மனைவியும் வட இந்தியாவில் உள்ள புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை செல்ல ஏற்பாடு செய்தார்கள். ஸ்ரீராமகிருஷ்ணரையும் உடன் வருமாறு அழைத்தார்கள். அவர்களுடைய அன்பான வற்புறுத்தலுக்கு இணங்கி குருதேவரும் உடன் செல்ல இசைந்தார். இருதயனோடு சேர்ந்து நூற்று இருபத்து ஐந்து பேர் பயணத்திற்குக் கிளம்பினார்கள்.

ரயிலில் ஓர் இரண்டாவது வகுப்புப் பெட்டியும் மூன்று மூன்றாவது வகுப்புப் பெட்டிகளும் அவர்களுக்கென்று தனியாகப் பதிவு செய்யப்பட்டது. ஹௌராவுக்கும் முகல் சராய்க்கும் இடையே அவர்கள் எந்த ரயில் நிலையத்தில் விரும்புகிறார்களோ, அங்கே அதனை ரயிலிலிருந்து பிரிக்கவும், வேண்டிய நேரம் இணைக்கவும் செய்யலாம். 1868-ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், 27-ஆம் தேதி அவர்கள் புறப்பட்டார்கள். வைத்தியநாதர் கோயிலைப் பார்ப்பதற்காக அவர்கள் தியோகரில் மூன்று நாட்கள் தங்கினார்கள். இங்கே சுவையான நிகழ்ச்சி ஒன்று நடந்தது.

ஒரு நாள் ஒரு கிராமத்தின் வழியாகப் போய்க்கொண்டிருந்தபோது அப்போது ஏற்பட்டிருந்த பஞ்சத்தின் காரணத்தால் கிராமத்து மக்கள் எல்லாம் பசியால் நலிந்து அழுக்கு ஆடையும் பரட்டைத் தலையுமாய் இருக்கும் வேதனையான காட்சியை ஸ்ரீராமகிருஷ்ணர் கண்டார். இதனால் மிகவும் வேதனை கொண்ட குருதேவர் மதுரிடம், ''நீ அன்னை காளியின் சொத்திற்கு மேற்பார்வையாளன். இந்த ஏழைகளுக்கெல்லாம் வயிறார ஒரு வேளை உணவளித்து, அணிந்துகொள்ளப் புதிய ஆடைகளையும் கொடு'' என்றார். இதைக் கேட்டதும் அங்கிருந்த அதிகமான மக்கள் தொகையைக் கண்டு மதுர் முதலில் தயங்கினார். ''இந்தப் பயணத்திற்கு அதிகமான பணம் தேவைப்படுகிறது. இங்கு மக்களோ அதிகமாக இருக்கிறார்கள். இவர்கள் எல்லோருக்கும் ஒரு வேளைச் சோறும் உடையும் கொடுத்தால் வழியில் செலவுக்குப் பணமில்லாமல் போய்விடுமே, என்ன செய்வது?'' என்றார். மதுரின் இந்தப் பதிலால் ஸ்ரீராமகிருஷ்

ணர் சிறிதும் திருப்திக் கொள்ளவில்லை. அந்த ஏழை மக்களின் வேதனையைக் கண்டு கண்ணீர் வடித்தவராக, ''சீ! நீ எவ்வளவு மோசமானவனாக இருக்கிறாய். நான் உன்னோடு காசிக்கு வரவில்லை. நாதியற்ற இந்த ஏழைகளுடனே நானும் இருந்து விடுகிறேன்'' என்று சிறு குழந்தையைப் போன்று பிடிவாதமாய் அவர்களுடன் போய் உட்கார்ந்து கொண்டார்.

இவ்வாறு ஸ்ரீராமகிருஷ்ணர், அந்த ஏழைகள் பால் காட்டிய அனுதாபம் மதுரின் நெஞ்சத்தைத் தொட்டது. அந்த ஏழை மக்களின் வறுமைத் துயரத்தை உணர்ந்து மதுர் மூட்டை மூட்டையாய்த் துணிகளும் உணவுப் பொருள்களும் கல்கத்தாவிலிருந்து கொண்டு வரச் செய்து எல்லோருக்கும் வயிறார உணவளித்து ஆடைகளும் வழங்கினார். அதன் பிறகு உற்சாகத்தோடு குருதேவர் அவரோடு காசிக்குப் புறப்பட்டார். வழியில் முகல்சராய் அருகில் ஏதோ ஒரு ரயில் நிலையத்தில் ரயில் நிற்கும்போது குருதேவரும் இருதயனும் யாரிடமும் சொல்லாமல் ரயிலிலிருந்து கீழே இறங்கினார்கள். அந்த நேரத்தில் ரயில் புறப்பட்டு விட்டது. இருவரும் அந்த நிலையத்திலேயே நின்றுவிட நேரிட்டது. இடையில் ஸ்ரீராமகிருஷ்ணர் ரயிலில் இல்லாதது கண்டு மிகுந்த கவலையடைந்த மதுர் அடுத்த ரயில் நிலையத்தில் தங்கள் ரயிலை நிறுத்தச் செய்து, தந்திமூலம் ஸ்ரீராமகிருஷ்ணரையும் இருதயனையும் அடுத்த ரயிலில் அனுப்பும்படி முந்தைய ரயில் நிலையத் தலைவருக்குக் கூறினார். ஸ்ரீராமகிருஷ்ணரும், இருதயனும் வருவதற்கு வண்டிக்கு ஏற்பாடு செய்துவிட்டு, மதுர் வருத்தத்தோடு காசியை நோக்கிப் பயணமானார். இதற்குள் அடுத்த வண்டி வந்தது. அதிர்ஷ்டவசமாக அதில் கல்கத்தாவைச் சேர்ந்த பாபு ராஜேந்திரலால் பானர்ஜி என்ற பிரபல ரயில்வே அதிகாரி வந்து கொண்டிருந்தார். வழியில் தனியாக மாட்டிக் கொண்டு துயரத்தோடு நின்றுகொண்டிருந்த குருதேவரையும், இருதயனையும் தம்முடைய வண்டியில் ஏற்றிக்கொண்டு அவர்களை முகல்சராயில் விட்டுச் சென்றார்.

சாஸ்திரங்களில் சிவபெருமானின் தெய்விக நகரம் என்று போற்றப்படும் காசி க்ஷேத்திரத்தைச் சற்றுத் தூரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் காணலுற்றார். படகில் கங்கையைக் கடந்து காசியை நெருங்கும் நேரத்தில் அவர் ஓர் அதிசயமான தெய்விகக் காட்சியைக் கண்டார். சாஸ்திரங்களில்

வருணித்திருப்பதுபோல் காசி முழுவதுமே தங்க மயமாக அவருக்குத் தோற்றமளித்தது. கணக்கற்ற சாதுக்களும் பக்தர்களும் அங்குச் செய்த தவத்தாலும், கடவுளர்கள் அங்கே வாழ்ந்து வருவதாலும் உண்மையில் தெய்விகம் பொருந்திய காசி, பார்வைக்குச் சாதாரண நகரம்போல் காட்சியளித்துக் கொண்டிருந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர் தாம் கண்ட மகத்தான காட்சியால் பெரிதும் கவரப்பட்டவராய் அந்த நகரை எந்தவகையிலும் அசுத்தப்படுத்த விரும்பாமல் முதலில் சில நாட்கள்வரை சிறுநீர் கழிக்கவும் மலம் கழிக்கவும்கூட நெடுந்தொலைவு நடந்து அதன் எல்லையைத் தாண்டிச் சென்று வந்தார்.

காசியில், தங்குவதற்கு கேதார்காட் என்னுமிடத்தில் மதுர் இரண்டு பெரிய மாளிகைகளை வாடகைக்கு எடுத்திருந்தார். அங்கே அவர் பெரிய அரசர்போல் வாழ்ந்தார். வெளியே சென்றால் சீருடை அணிந்த அலுவலர்கள் பலர் அவருக்கு வெள்ளிக்குடை பிடித்துக் கொண்டும் மற்றும் பலர் அரசமரியாதைகளைச் செய்தபடியும் உடன் சென்றனர். ஸ்ரீராமகிருஷ்ணருக்கு ஏற்பட்ட தெய் விகப் பரவசத்தால் அங்கு இருந்தபோது அவரால் நடக்கவே முடியவில்லை. எனவே மதுர் அவருக் கென்று ஒரு பல்லக்கை ஏற்பாடு செய்து விட்டார். ஒரு நாள் மதுர், ஸ்ரீராமகிருஷ்ணருடன் சென்று காசியில் இருந்த ஒரு ஜமீன்தாரைச் சந்தித்தார். இருவரும் நெடுநேரம் லௌகிக விஷயங்களைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். இதைக் கேட்டு மிகவும் வருந்திய குருதேவர் அன்னை காளியிடம், ''என்னை எந்த இடத்திற்கு அம்மா நீ கூட்டி வந்திருக்கிறாய்? தட்சிணேசு வரத்தில் தெய்விகப் பேச்சுக்களை மட்டுமே கேட்டபடி நிம்மதியாக இருந்து வந்தேனே! இங்கு மனிதர்கள் எல்லா வகையான பேச்சிலும் ஈடுபட்டுக் கிடக்கிறார்களே!'' என்று வேதனையுடன் கூறினார்.

காசி வந்ததும் மதுர் செய்த முதல் காரியம் அங்குள்ள அறிஞர்களையெல்லாம் அழைத்து அவர்களுக்கு விருந்து வைத்ததாகும். அவர்களையும் அவர்கள் குடும்பத் தினரையும் தாம் தங்கியிருக்கும் இடத்திற்கு அழைத்து எல் லோருக்கும் ஆடையும், ஆளுக்கு ஒவ்வொரு ரூபாயும் அளித்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் தினந்தோறும் இருதய னுடன் அங்கு கோவில் கொண்டுறையும் விசுவநாதரைத் தரிசித்தார். கோயிலில் விசுவநாதர் முன்பும் கோயிலுக்

குச் செல்லும் வழியிலும்கூட அவர் அடிக்கடி சமாதியில் மூழ்கிவிட்டார். விசுவநாதர் ஆலயத்தைவிட கேதார்நாத் ஆலயத்தில் அவர் சமாதி நெடுநேரம் நீடித்தது.

காசியில் உள்ள புகழ்பெற்ற சந்நியாசிகளை எல்லாம் குருதேவர் சென்று சந்தித்தார். ஒரு நாள் மதுரோடு நானக் சம்பிரதாயத்தைச் சேர்ந்த மடம் ஒன்றிற்குச் சென்றார். அங்குள்ள சாதுக்களின் பக்தியைக் கண்டு மிகுந்த ஆனந்தம் அடைந்தார். மற்றொரு நாள் காசியில் புகழ்பெற்ற, மௌன விரதம் பூண்டிருந்த திரைலிங்க சுவாமியைச் சென்று பார்த்தார். திரைலிங்க சுவாமி ஸ்ரீராமகிருஷ்ணரைக் கண்டதும் அன்போடு வரவேற்றுத் தம் அருகில் உட்காரச் செய்து அவரிடம் தான் வைத்திருந்த பொடிடப்பியை நீட்டிப் பொடி எடுத்துக் கொள்ளுமாறு செய்து, மிகுந்த மரியாதை காட்டினார். இந்த நிகழ்ச்சியைப்பற்றிப் பிற்காலத்தில் குருதேவர் தம் பக்தர்களிடம், ''அவருள் விசுவநாதர் உயிரோடு வாழ்வதைக் கண்டேன். காசி நகரமே அவரால் புனிதமடைந்து கொண்டிருந்தது. அவர் எப்போதும் உடல் உணர்வே இல்லாமல் மிக உயர்ந்த தெய்வீக நிலையில் இருந்தார். காசியின் கடுமையான வெயிலால் கொதிக்கின்ற மணலில் அவர் ஆனந்தத்தோடு அமர்ந்திருப்பார். நான் சைகையின் மூலம், 'கடவுள் ஒருவரா, பலரா?' என்று அவரிடம் கேட்டேன். அதற்கு அவர் சைகை மூலமே, 'சமாதியில் காணும்போது கடவுள் ஒருவர். அதிலிருந்து இறங்கி, சாதாரண மனநிலையோடு பார்க்கும்போது கடவுள் பலர்' என்று கூறினார். இருதயனிடம் அவரைக் காட்டி, 'இதுதான் உண்மையான பரமஹம்ச நிலை என்று கூறினேன்'' என்று கூறியுள்ளார். அப்போது திரைலிங்க சுவாமி கங்கையில் மணிகர்ணிகாகட்டம் என்னும் துறைக்கு அருகே மற்றொரு குளிக்கும் துறை ஒன்றைக் கட்டிக் கொண்டிருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரின் கட்டளைப் படி இருதயன் மண்வெட்டியை எடுத்துச் சிறிது நேரம் மண் வெட்டினான். இதைக் கண்டு சுவாமி மிகவும் மகிழ்ந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் அவரை மதுர் தங்கியிருந்த வீட்டிற்கு ஒரு நாள் வருமாறு செய்து மிகுந்த மதிப்போடு வரவேற்று உபசரித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் காசியில் மிக அற்புதமான ஒரு தெய்விகக் காட்சியைக் கண்டார். அதை அவர் அடிக்கடித் தம் சீடர்களுக்குச் சொல்வது வழக்கம். ஸ்ரீராமகிருஷ்ணர் காசியில் தங்கியிருந்தபோது கங்கைக் கரையில் உள்ள

கோயில்களை அவர் தரிசிப்பதற்காக மதுர் ஒரு படகில் அழைத்துச் செல்வார். ஒரு நாள் மதுர், இருதயன், குருதேவர் முதலானோர் சென்று கொண்டிருந்தபோது படகு மணிகர்ணிகா கட்டத்தைக் கடந்து சென்றது. அப்போது அதன் கரையில் ஏராளமான பிணங்கள் எரிந்து கொண்டிருந்தன. அதிலிருந்து புகை திரள்திரளாக எழுந்து வானத்தை மூடியபடி சென்றது. அப்போது குரு தேவர் கண்ட ஒரு தெய்விகக் காட்சியினால் ஆனந்த வெறிபிடித்தவர் போலானார். திடீரென்று எழுந்து படகின் ஓரத்திற்கு ஓடினார். ஓடியவர் அங்கேயே அசைவற்று நின்று சமாதியில் மூழ்கிவிட்டார். அவருடன் வழிகாட்டியாகச் சென்ற அர்ச்சகரும் படகுக்காரனும் அவர் கங்கையில் விழுந்துவிடாமல் பிடிக்க எழுந்து ஓடினர். ஆனால் அவர்கள் உதவி எதுவும் இல்லாமலே குருதேவர் தாமே படகின் ஓரத்தில் நின்றுவிட்டார். அவர் முகத்தில் தெய்விகப் புன்னகை அரும்பியது, மதுரும் இருதயனும் அவர் ஒரு வேளை கால்தவறி விழுந்துவிட்டால் பிடித்துக் கொள்வ தற்காக அவர் அருகில் தயாராக நின்றனர். இப்படியே சில நிமிடங்கள் கழிந்தன. குருதேவர் சிறிது சிறிதாக உலக நினைவு பெற்றார். பிறகு எல்லோரும் தாங்கள் செய்யவந்த சடங்கையும் செய்து முடித்து வீடு திரும் பினர். வீடு திரும்பியதும் கங்கைக் கரையில் தாம் கண்ட காட்சியைப்பற்றி எல்லோருக்கும் குருதேவர் கூறினார்:

''வெண்மை நிறத்தோடு கூடிய மிக உயரமான, சடைமுடியோடு கூடிய ஓர் உருவம் கங்கைக் கரையில் எரிந்து கொண்டிருந்த பிணங்கள் ஒவ்வொன்றிடமும் சென்று, கருணையோடு அவ்வுயிரைத் தட்டி எழுப்பி, அவர் களின் காதுகளில் மேலான மந்திரத்தை ஓதியது. உலக அன்னையாகிய கருணைவடிவினளான காளி, நெருப்பின் மறு பக்கம் உட்கார்ந்து கொண்டு அவ்வுயிர்களைப் பிணைத்திருக்கும் தளைகளை ஒவ்வொன்றாக நீக்கி அந்த உயிர்களுக்கு முக்தியின் கதவைத் திறந்து கொண்டிருந்தாள்; அதிர்ஷ்டசாலி களான அவர்களை மிக வேகமாக நிர்வாணமாகிய மோட்சத் திற்குள் அனுப்பிக்கொண்டே இருந்தாள். கால காலங் களாக சாதனையில் மூழ்கிக் கடுமையான தவம், தியானங் களில் ஈடுபட்டு ஒருவர் பெறக்கூடிய மிக உயர்ந்த இந்த அத்வைத நிலையைக் காசியில் உயிர்விடுவதாலேயே சாதாரண மான மக்கள்கூட அதை மிகச் சுலபமாகச் சிவபெருமானின் எல்லையற்ற கருணையால் அடைந்து கொண்டிருந்தார்கள்.''

இந்த அற்புதக் காட்சியைப் பற்றிக் கேட்ட எல்லோரும் வியப்படைந்தார்கள். மதுருடன் இருந்த அறிஞர்கள், ''கந்த புராணத்தின் ஒரு பகுதியாகிய காசிக் காண்டத்தில் யார் காசியில் இறக்கிறார்களோ அவர்களுக்குச் சிவபெருமான் முக்தி அளிப்பதாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் அவர் எப்படி முக்தி அளிக்கிறார் என்பது அதில் கூறப்படவில்லை. உங்கள் காட்சி அதை மிகவும் தெளிவாக்கிவிட்டது. உங்களுடைய காட்சி சாஸ்திரங்களையும் தாண்டிச் சென்றுவிட்டது. இது அதிசயம்தான்'' என்று கூறினார்கள்.

காசியில் ஒரு வாரம் தங்கிய பிறகு எல்லோரும் அலகாபாத் சென்றார்கள். கங்கையும் யமுனையும் கலக்கும் புண்ணிய இடத்தில் அனைவரும் நீராடினர். மதுரும் மற்றவர்களும் அந்த இடத்தின் சம்பிரதாயப்படி தலையை மொட்டை அடித்துக் கொண்டார்கள். ஸ்ரீராமகிருஷ்ணர் தமக்கு அவையெல்லாம் அவசியமில்லாதவை என்று கூறி மொட்டையடித்துக்கொள்ள மறுத்துவிட்டார். மூன்று நாட்கள் அங்கே தங்கிய பிறகு எல்லோரும் மறுபடியும் காசிக்கே திரும்பினார்கள்.

பதினைந்து நாட்கள் காசியில் தங்கிய பிறகு எல்லோரும் பிருந்தாவனத்திற்குச் சென்றார்கள். நிதுவனத்திற்கு அருகே ஒரு பெரிய மாளிகையை மதுர் வாடகைக்கு எடுத்தார். எல்லோரும் அதில் தங்கினார்கள். காசியில் வாழ்ந்தது போலவே மதுர் இங்கும் அரசர் போலவே வாழ்ந்தார். ஸ்ரீகிருஷ்ணரைப் பற்றிய இனிமையான நினைவுகள் நிறைந்த அந்தப் புனிதமான இடத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் மிக உயர்ந்த ஆன்மிக நிலையை அடைந்தார். அங்குள்ள முக்கியமான இடங்களுக்கெல்லாம் தெய்விகப் பரவசத்தோடு சென்று பார்த்தார். அங்கே, தாம் அடைந்த அனுபவங்களில் சிலவற்றை அவர் கீழ்வருமாறு கூறியுள்ளார்: ''அங்குள்ள 'பங்கு விஹாரி'* எனப்படும் கிருஷ்ணரின் கோயிலைக் கண்டதும் உணர்ச்சிப் பெருக்கால் என்னை மறந்து கிருஷ்ணனைத் தழுவிக்கொள்ள ஓடினேன். கோவிந்தர் கோவில்** என்னை அவ்வளவு கவரவில்லை. கிருஷ்ணன் காளியன் மேல் நாட்டியம் ஆடிய 'காளிய

---

*பங்கு என்பது கிருஷ்ணரின் பெயர்களில் ஒன்று.

**கிருஷ்ணரின் இன்னொரு பெயரான கோவிந்தர் என்ற பெயரில் கட்டப்பட்ட மற்றொரு கோயில்,

தமன் காட்'* என்னும் யமுனை நீர்த் துறையைக் கண்டதும் நான் சமாதியில் மூழ்கிவிட்டேன். இருதயன் சிறு குழந்தை யைப் போல என்னைக் குளிப்பாட்டினான். மரங்களுக்கு இடையே சிறு சிறு குடிசைகள் நிறைந்த மணல் வெளியான யமுனை நதிக் கரையில் மாலை நேரங்களில் நான் உலவு வேன். ஒரு நாள் பசுக் கூட்டங்கள் மேய்ந்துவிட்டு வீட் டிற்குத் திரும்பிக் கொண்டிருந்தன. அதன் பின்னால் வந்த மாடு மேய்க்கும் சிறுவர்கள் யமுனை ஆற்று நீரில் இறங்கி அதனைக் கடந்து வந்தார்கள். இந்தக் காட்சி எனக்குக் கண்ணனை நினைவு படுத்தியது. கண்ணனைப் பற்றிய உணர்ச் சியைத் தாங்க முடியாமல் பரிதாபமாக அழுதுகொண்டே, 'கிருஷ்ணன் எங்கே? ஓ! என் கிருஷ்ணன் எங்கே?' என்று ஓடினேன். அங்குள்ள இராதா குண்டத்தையும் சியாம குண்டத்தையும்** பார்ப்பதற்கு ஆசைப்பட்டேன். என்னைப் பல்லக்கில் அனுப்பினார்கள். அவை மிகுந்த தொலைவில் இருந்தன. எனவே வழியில் சாப்பிடுவதற்காக உணவு கொடுத்தனுப்பினார்கள். வழியில் கோவர்த்தன கிரியைப் பார்ப்பதற்காக இறங்கினேன். அந்த மலையைக் கண்டதுமே என் மனம் தன்வசமிழந்து விட்டது. ஒரே ஓட்டமாக ஓடி அதன் உச்சியில் நின்றபடி உலக நினைவையே இழந்துவிட் டேன். அங்கிருந்தவர்கள் என்னைப் பத்திரமாக கீழே அழைத்து வந்தனர்.

''சியாம குண்டம் இராதா குண்டத்திற்குச் செல்லும் வழியில் இருந்த கிருஷ்ணன் விளையாடிய மரங்களும், செடி, கொடிகளும், பறவைகளும், மான்களும் நிறைந்த அந்தப் பழைய புல்வெளியைப் பார்த்தேன். கண்ணனைப் பற்றிய நினைவுகள் கட்டுக்கடங்காமல் என் மனத்தில் எழுந்தன. கண்களிலிருந்து கண்ணீர் தாரைதாரையாகப் பெருகி என் ஆடையை நனைத்தது. 'ஓ! கிருஷ்ணா! உன்னோடு தொடர்பு கொண்டு புனிதம் பெற்ற எல்லாமே இங்கு இருக்கின்றன. ஆனால் உன்னை மட்டும் காண முடியவில்லையே' என்று நினைத் தேன். அப்போது நான் பல்லக்கில் இருந்தேன். இறங்கி அந்த இடத்திற்கு நடந்து செல்ல விரும்பினேன். உணர்ச்சி மேலீட்டால் என்னால் ஒரு வார்த்தைகூடப் பேச முடியாத தால் பல்லக்குத் தூக்கிச் செல்பவர்களிடம் 'நில்' என்றுகூட

*ஸ்ரீகிருஷ்ணர் காளியன் என்ற கொடிய பாம்பை அடக்கி அதன் படத்தின்மேல் நடனமாடிய இடம்.

**மதுராவிலிருந்து பல மைல்கள் தொலைவிலுள்ள இரண்டு குளங்கள்.

என்னால் சொல்ல முடியவில்லை. பல்லக்கின் பின்னாலேயே வந்து கொண்டிருந்த இருதயன் மிக எச்சரிக்கையாக என்னைத் தூக்கிச் செல்லும்படிக் கூறிக்கொண்டே வந்தான். சியாம குண்டம், இராதா குண்டத்திற்கு அருகே சாதுக்கள் ஓலைக்கூரை வேய்ந்த குடிசைகளில் வசித்துக் கொண்டு சாதனைகளில் ஈடுபட்டிருந்தார்கள். வெளியில் பார்த்தால் தங்கள் கவனம் கலையும் என்று முதுகை வாசற் பக்கம் காட்டியபடி உள்ளே பார்த்தவாறே சாதனைகளில் ஈடு பட்டிருந்தனர்.''

பிருந்தாவனத்தில் புகழ்பெற்ற வைஷ்ணவ பக்தையான கங்கா மாதாவை ஸ்ரீராமகிருஷ்ணர் சந்தித்தார். அவர் பிருந்தா வனத்திலேயே வசித்து வந்தார். பிரேம பக்தியை உலகுக்கு அறிவிப்பதற்காக அவதாரம் செய்துள்ளவர் என்றும் இராதை யின் நெருக்கமான தோழியர்களில் ஒருவர் என்றும் மக்கள் அனைவரும் அவரைப்பற்றிக் கூறினர். அறுபது வயதான அவர் ராதை பிறந்த பாசார் என்னும் கிராமத்திலேயே தம் வாழ்நாளின் பெரும் பகுதியைக் கழித்தார். ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்த மாத்திரத் திலேயே அவருடைய உயர்வை கங்கா மாதா அறிந்து கொண்டார்; அவரைக் கண்டதால் தான் பெரும் பேறு பெற்றதாக மகிழ்ந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரும் அந்த மாதின் பக்தியாலும் தூய்மையாலும் பெரிதும் கவரப் பட்டார். குருதேவரே அவரைப் பற்றிக்கூறியுள்ளதைக் கீழே தருகிறோம்—''கங்கா மாதா என்னைப்பற்றி மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டார். அவர் மிகவும் வயதானவர். நிது வனத்திற்கு அருகே ஒரு குடிசையில் தனியாக வசித்து வந்தார். என் ஆன்மிக நிலையையும் அடிக்கடி சமாதியில் மூழ்கி உலகை மறந்து விடுவதையும் கண்டு அவர் அடிக் கடி ராதை இப்போது என் வடிவில் அவதரித்திருப்பதாகக் கூறுவார். எனவே இராதையின் செல்லப் பெயரான துலாலி என்ற பெயராலேயே என்னை அழைப்பார். நான் அவரோடு இருக்கும்போது பசி, தாகம் முதலிய அனைத்தையும், தங்குமிடத்திற்குத் திரும்ப வேண்டும் என்பதையும்கூட மறந்து விடுவேன். சில நாட்கள் இருதயன் அங்கே உணவு கொண்டுவந்து என்னைச் சாப்பிடச் செய்வான். கங்கா மாதாவும் எனக்காகப் பலவகையான உணவைத் தயார் செய்வார். அவரும் அடிக்கடி தெய்விகப் பரவசத்தில் ஆழ்ந்து சமாதியில் மூழ்கி விடுவார். இதைக் காணப் பெரிய கூட்டம் கூடிவிடும். எனக்கு அவரைப்

பிரிந்திருக்கச் சிறிதுகூட முடியவில்லை. எனவே நான் அவ ரோடு பிருந்தாவனத்திலேயே தங்கிவிடுவது என்று முடிவு செய்யப்பட்டது. புழுங்கலரிசிச் சோறே நான் சாப்பிட வேண்டுமென்றும் அந்தக் குடிசையில் கங்கா மாதா ஒரு பக்கம் தன் கட்டிலையும், நான் மற்றொரு பக்கம் என் கட்டிலை யும் போட்டுக் கொள்வது என்றும் முடிவு செய்யப்பட்டது.

''நான் அங்கே தங்கியிருக்க, ஒவ்வொரு வசதியும் மிகவும் நுட்பமாகப் பார்த்துச் செய்யப்பட்டது. இருதயன், 'அடிக்கடி உங்களுக்கு வயிற்றுவலி வருமே! யார் உங்களைப் பார்த்துக் கொள்வார்கள்?' என்று கேட்டான். உடனே கங்கா மாதா, 'ஏன்? நான் பார்த்துக் கொள்கிறேன். நான் அவருக்குச் சேவை செய்கிறேன்' என்றார். என்னைத் தம் மோடு தட்சிணேசுவரத்துக்கு அழைத்துச் செல்வதற்காகச் செய்த முயற்சிகளெல்லாம் தோற்றுப் போன பிறகு கடைசி யாக இருதயன் என்கையைப் பிடித்து கங்கா மாதாவின் வீட்டி லிருந்து இழுத்துக் கொண்டு போக ஆரம்பித்தான். உடனே கங்கா மாதா என் மற்றொரு கையைப் பிடித்து அவருடைய குடிசைக்கு இழுக்க ஆரம்பித்தார். அந்த நேரத்தில் எனக்கு என் தாயைப் பற்றிய நினைவு வந்து விட்டது. அப்போது என் தாய் தட்சிணேசுவரத்தில் தன்னந் தனியாக வசித்து வந்தார். நான் பிருந்தாவனத்தில் தங்கி விட்டால் அவரை யார் கவனிப்பார்கள்? இந்த நினைவு நான் பிருந்தாவனத்திலிருந்து திரும்ப வேண்டுமென்பதை முடிவு செய்துவிட்டது. 'நான் பிருந்தாவனத்தில் இருக்க மாட் டேன். தட்சிணேசுவரம் புறப்படுகிறேன்' என்று புறப்பட்டு விட்டேன்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் இருதயனிடம் கங்கா மாதாவின் பெரு மைகளை எப்போதும் மிக உயர்வாகக் கூறுவார். குருதேவர் பிருந்தாவனத்தில் தங்கிய பதினைந்து நாட்களும், நெற்றியில் நாமமும் வைஷ்ணவச் சின்னங்களும் உடையுமாக வாழ்ந்தார். மதுராவுக்குச் சென்றிருந்தபோது, யமுனா நதிக்கரையிலுள்ள 'துருவா காட்' என்னும் துறையைக் கண்டவுடனே வசுதேவர், குழந்தை கிருஷ்ணனைக் கைகளில் ஏந்தியபடி யமுனையின் குறுக்கே நடந்து செல்லும் காட்சியைப் பெற்ற தாகக் கூறினார்.

சுமார் பதினைந்து நாட்கள் பிருந்தாவனத்தில் தங்கியிருந்து விட்டு மதுர், குருதேவரையும் மற்றவர்களையும் அழைத்துக் கொண்டு காசிக்குத் திரும்பினார். காசியில் தம் தாந்திரிக குரு வான பைரவி பிராம்மணியை ஸ்ரீராமகிருஷ்ணர் சந்தித்தார்.

கங்கையில் குளிக்கும் ஒரு படித் துறை அருகே மிகச் சிறந்த ஆன்மிக நிலையை அடைந்த மற்றொரு பெண்மணியோடு அவர் தங்கியிருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் பலமுறை அவர்களுடைய இருப்பிடத்திற்குச் சென்றார். பைரவியுடன் இருந்தவரின் ஆழ்ந்த பக்தி குருதேவரை மிகவும் மகிழ்ச்சியடையச் செய்தது. குருதேவர் பிராம்மணியைக் கடைசிக் காலம்வரை காசியிலேயே இருக்கும்படிக் கூறினார். சிறிது காலத்திற்குள் பைரவி காசியில் மரணமடைந்தார்.

காசியிலிருக்கும்போது ஸ்ரீராமகிருஷ்ணர் வீணை இசையைக் கேட்க வேண்டுமென்று மிகவும் விரும்பினார். அதிர்ஷ்டவசமாக, அப்போது மகேஷ்சந்திர சர்க்கார் என்னும் சிறந்த வீணை வித்வான் அப்போது காசியில் இருந்தார். அவரை முறைப்படி அழைத்துவர வேண்டும்; வாசிக்கச் சொல்ல வேண்டும், என்னும் சம்பிரதாயங்களைப் பற்றி எல்லாம் கவலைப் படாமல் ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணர் ஆவல் மிகுதியினால் தாமே அவருடைய வீட்டிற்குச் சென்று வீணை வாசிக்கும்படிக் கேட்டார். மகேஷ் மிகுந்த மகிழ்ச்சியோடு அதற்குச் சம்மதித்து அவருக்காக வீணையை மீட்ட ஆரம்பித்தார். ஓசை காதில் விழுந்ததோ இல்லையோ, குருதேவர் சமாதியில் மூழ்கிவிட்டார். பிறகு ஓரளவு நினைவு வந்தவராக அன்னை காளியிடம், ''தாயே! என் நினைவை எடுத்துக் கொண்டு விடாதே. நான் வீணையின் இசையை ரசிக்க வேண்டும்'' என்று பிரார்த்தனை செய்தார். அதன் பிறகு முற்றிலும் நினைவுடையவராய் வீணையின் இனிய நாதத்தைக் கேட்டு மகிழ்ந்தார். இடையிடையே தாமும் வீணையோடு சேர்ந்து பாடினார். இவ்வாறு மூன்று மணி நேரம் கழிந்தது. சிறிது சிற்றுண்டி சாப்பிட்டுவிட்டுக் குருதேவர் தாம் தங்கியிருந்த இடத்திற்குத் திரும்பினார். அதன்பிறகு நாள் தோறும் குருதேவரைக் காண மகேஷ், மதுர் தங்கியிருந்த இடத்திற்கு வந்து கொண்டிருந்தார்.

விசுவநாதருக்குச் செய்யும் ஒரு குறிப்பிட்ட சிறந்த அலங்காரத்தைப் பார்ப்பதற்காக அது செய்யப் படும் மே மாதம் கடைசிவரை மதுர் காசியிலேயே தங்கியிருந்தார். கல்கத்தாவிற்குத் திரும்பும் வழியில் கயாவிற்குச் சென்று வர விரும்பினார். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர் வர மறுக்கவே மதுர் அந்த எண்ணத்தை விட்டுவிட்டார். தாம் ஒருமுறை கயாவிற்குச் சென்றால் தம் மனம் அங்குள்ள கதாதரரிடமே சென்று படிந்துவிடும் என்றும் அதன் பிறகு உடம்பை விட்டு உயிர் பிரிந்துவிடும் என்றும் குருதேவர்

உறுதியாக நினைத்தார். தாம் பிறப்பதற்கு முன்னால் தம் தந்தை கயாவில் கண்ட கனவை அவர் அறிந்திருந்தார். எனவே தாம் அங்குச் சென்றால் தம் மனம் உலக நிலைக்குத் திரும்பாமல் கதாதரரோடு ஐக்கியமாகிவிடும் என்று அவர் உணர்ந்திருந்தார். அன்னை காளியின் கையில் ஒரு கருவியாக இருந்து, இந்த உலகில் பல காரியங்களைச் செய்ய வேண்டியிருப்பதால் அன்னையின் கட்டளைக்கு மாறாக அவர் நடக்க விரும்பவில்லை. எனவே எல்லோரும் காசியிலிருந்து நேராகக் கல்கத்தா திரும்பினார்கள்.

பிருந்தாவனத்தில் இருந்து குருதேவர் அதன் புனித மண்ணைத் தம்முடன் கொண்டு வந்து, அதன் ஒரு பகுதியைப் பஞ்சவடியில் தூவினார். மற்றொரு பகுதியைத் தாம் அத்வைத சாதனை செய்த குடிசையில் புதைத்தார். இவ்வாறு செய்துவிட்டு, ''இப்போது இந்த இடம் பிருந்தாவனம்போல் புனிதமாகிவிட்டது'' என்றார். இதன் பிறகு சிறிது காலத்திற்குள் குருதேவரின் வேண்டுகோள்படி மதுர் ஏராளம் வைஷ்ணவர்களைக் காளி கோயிலுக்கு வரவழைத்து விருந்தளித்துப் பணத்தைக் காணிக்கையாக வழங்கினார்.

## 23. இருதயனும் அட்சயனும்

ஸ்ரீராமகிருஷ்ணரின் சாதனையின் ஆரம்பக் காலத்திலிருந்து இருதயன் மிகவும் உண்மையான தொண்டனுக அவருக்குச் சேவை செய்து வந்ததைக் கண்டோம். அவன் இரக்கம், கருணை முதலான உணர்வுகள் எதுவும் இல்லாதவன்; காரியத்திலேயே கண்ணுக இருக்கும் இயல்பு படைத்தவன். அவன் இலட்சியமெல்லாம் தன் குடும்பம் நல்ல நிலையில், முடிந்த அளவு வசதியோடு இருக்க வேண்டுமென்பதுதான். குருதேவருடன் அவன் எந்த நேரமும் வாழ்ந்து கொண்டிருந்தது அவனுடைய மனத்தில் ஏதோ சில நேரங்களில் மட்டும் கடவுள் பக்தியை உண்டாக்கியது என்ருலும் அது நிலைக்கவில்லை. எங்காவது தன் பணத்தாசையை நிறைவேற்றிக் கொள்ளும் வாய்ப்புக் கிடைக்குமானுல் எல்லாவற்றையும் விட்டுவிட்டு அதன்பின் ஓடி விடுவான். அதனுல்தான் அவன் கண்முன்னுலேயே குருதேவர் பல ஆண்டுகளாக அற்புதமான தெய்விகக் காட்சிகளையும் அனுபவங்களையும் பெறுவதைக் கண்டிருந்தும் அதன் பெருமைகளை அவனுல் அறிந்து கொள்ள முடியாமல் போய்விட்டது. ஆனுல் தன் மாமாவிடம் கொண்ட ஈடு இணையற்ற அன்பும் அவரை எப்பொழுதும் வசதிகளோடும் மகிழ்ச்சியோடும் வைத்திருக்க வேண்டும் என்னும் ஆசையும் அவனைத் தைரியமும் அறிவுக் கூர்மையும் எந்தக் காரியத்தையும் சாதிக்கும் ஆற்றலும் உள்ளவனுக ஆக்கின. ஆன்மிக வாழ்வைப் பொறுத்தவரையில் பிற்காலத்தில் அதற்கு நிறைய நேரம் இருக்கிறதென்றும் குடும்பத்தை நல்ல நிலையில் வைத்து ஆசைகளையெல்லாம் அனுபவித்துத் தீர்த்ததும் தானுகவே கடவுள் புக்தி வந்துவிடும் என்றும் அவன் நினைத்தான்.

இந்தக் காலத்தில்தான் அவன் மனைவி இறந்துபோனுள். இதனுல் வாழ்க்கையைப் பற்றிய அவனுடைய கண்ணேட்டம் முழுவதுமே மாறிவிட்டது. உலக இன்பங்கள் வெறுத்துவிட்டன. அவன் மனம் கடவுளுக்காக ஏங்கியது. எனவே அன்னை காளியை வழிபட ஆரம்பித்தான். ஸ்ரீராமகிருஷ்ணர் காளியைக் காண பூணூலையும் ஆடைகளையும் கழற்றிவிட்டுத் தியானம் செய்ததைக் கண்டிருந்த அவன்

தானும் அதுபோலவே செய்ய ஆரம்பித்தான். ஸ்ரீராம கிருஷ்ணரிடம் காளியைக் காணும் ஆற்றலைத் தனக்குத் தரும்படியும் வற்புறுத்தினன். இவ்வளவு நாட்கள் தன் சேவைகளால் மனம் மகிழ்ந்த அவர், தான் கேட்ட உடனே தனக்குக் கடவுளைக் காணும் ஆற்றலைத் தந்து விடுவார் என்று நம்பினன். ஆனல் குருதேவரோ தமக்குச் சேவை செய்து கொண்டிருந்தாலே எல்லாத் தெய்விகக் காட்சிகளும் அவனுக்குக் கிடைக்குமென்றும், இருவருமே கடவுள் நினைவில் மூழ்கி, இரண்டு பேரையுமே கவனிக்க ஆள் இல்லாமல் போனல் இருவரின் ஆன்மிக வாழ்க்கை யுமே நாசமாகிப் போய்விடும் என்று கூறினர். ஆனல் இருதயன் அதைக் கேட்காமல் மிகவும் வற்புறுத்தவே குருதேவர், ''சரி! எல்லாம் அன்னையின் விருப்பம்போல் நடக்கட்டும். என் விருப்பத்தால் என்ன நடக்கும்? அவள் தான் என் மனத்தில் ஏக்கத்தை ஏற்படுத்தி, இவ்வளவு காரியங்களையும் நடத்தித் தன்னைக் காணும்படிச் செய்தாள். அவள் விரும்பினல் நீயும் அத்தகைய நிலையை அடைய லாம்'' என்ருர்.

சில நாட்கள் கழிந்தன. இருதயன் தெய்விகக் காட்சி களைக் காண ஆரம்பித்தான். தியானத்தின் போதும் காளி வழிபாட்டின் போதும் அடிக்கடித் தன்னை மறந்து பாவ நிலைகளில் மூழ்க ஆரம்பித்தான். இதைக் கண்ட மதுர் அதை நம்பாமல் அவன் பாசாங்கு செய்வதாக நினைத்துக் குருதேவரைக் கேட்டார். குருதேவர், ''இது பாசாங்கு இல்லை. அவன் சில காட்சிகளைக் காண வேண்டுமென்று மனமார அன்னையிடம் பிரார்த்தனை செய்தான். அதனல் தான் இந்த நிலை. அவன் தெய்விகக் காட்சிகளைக் காண் கிருன். அன்னை விரைவில் அவனைச் சாதாரண நிலைக்குக் கொண்டு வருவாள்'' என்ருர். இதைக் கேட்ட மதுர், ''அதெல்லாம் ஒன்றும் இல்லை. இதெல்லாம் உங்கள் வேலை. உடனடியாக அவனைச் சாதாரண நிலைக்குக் கொண்டு வாருங்கள். உங்களுக்குத்தான் இந்த நிலைகள். எங்களுக் கெல்லாம் இது வேண்டாம். நாங்கள் இரண்டு பேரும் உங்களுக்குச் சேவை செய்கிருேம். அதுவே எங்களுக்குப் போதும்'' என்ருர்.

இதற்குப் பிறகு ஒரு நாள் மாலையில் ஸ்ரீராமகிருஷ்ணர் பஞ்சவடிக்குப் போய்க் கொண்டிருந்தார். இருதயன் துணைக்காக அவருக்குத் தெரியாமல் அவர் பின்னலேயே போனன். கொஞ்ச தூரம் போனதும் ஓர்

அதிசயமான காட்சியைக் கண்டான்: ஸ்ரீராமகிருஷ்ணரின் மனித உடம்பு மறைந்துவிட்டது. அதற்குப் பதில் ஒளியே வடிவான உடம்பு ஒன்று தோன்றியது. அதிலிருந்து புறப்பட்ட ஒளி எல்லாத் திசைகளையும் நிரப்பியது. ஒளிமயமான அவரது கால்கள் தரையில் படவேயில்லை. இது பிரமையோ என்று நினைத்து மறுபடியும் மறுபடியும் இருதயன் கண்களைத் துடைத்துக் கொண்டு பார்த்தான். பிரமையில்லை; முழுக்க முழுக்க உண்மை. அவனது மாமா தான் அப்படி ஒளிமயமாகத் தோன்றுகிறார். தன்னைச் சுற்றிப் பார்த்தான். பக்கத்தில் ஓடும் கங்கையை, சுற்றிலுமுள்ள மரங்களை, கட்டிடங்களை கோயிலை இவையனைத்தையும் பார்த்தான். எங்கும் ஒளியில்லை. எல்லாம் முன்போலவே இருக்கின்றன. எங்கும் மாற்றம் இல்லை. தன் மாமாவிடம்தான் மாற்றம். அப்போது, தன்னிடமும் ஏதோ ஒரு மாற்றம் உண்டானது போல் தோன்றவே ஆச்சரியப்பட்டவனாய் தன்னைப் பார்த்தான். என்ன ஆச்சரியம்! தானும் ஸ்ரீராமகிருஷ்ணரைப் போலவே ஒளிமயமாக இருக்கக் கண்டான். முன்னே செல்பவர் எப்போதும் ஒளிமயமான தெய்வமாகத் திகழ்வதையும் தான் அவருடைய ஒரு பகுதியாக இருப்பதையும் அவருக்குச் சேவை செய்வதற்காக ஒரு தனியான வடிவம் எடுத்திருப்பதையும் இருதயன் உணர்ந்தான். இந்த உண்மை அவனுக்கு அளவற்ற ஆனந்தத்தைக் கொடுத்தது. அந்த ஆனந்தத்தில் தன்னையும் உலகத்தையும் எல்லாவற்றையும் மறந்தவனாய், பைத்தியக்காரன்போல் ''ஓ ராமகிருஷ்ணா! ஓ ராமகிருஷ்ணா! நாம் மனிதர்கள் அல்ல. நாம் ஏன் இங்கே இருக்க வேண்டும்? வா, நாம் ஒவ்வோர் இடத்திற்கும் போவோம். துன்பப்படும் எல்லா மக்களையும் காப்பாற்றுவோம். நம்முள் வேறு பாடில்லை; நீயும் நானும் ஒரே பொருள்தான்'' என்று திரும்பத் திரும்பக் கத்தினான்.

இதைக் கேட்ட குருதேவர் அங்கிருந்தபடியே, ''உஷ்! சப்தம் போடாதே! நமக்கு என்ன நடந்துவிட்டது? ஏன் இப்படிக் கத்துகிறாய்? என்னவோ பயங்கரம் நடந்து விட்டது என்று மக்கள் வந்து கூடிவிடப் போகிறார்கள்!'' என்றார். ஆனால் இருதயன் அவர் பேச்சைக் கேட்கவில்லை. மறுபடியும் முன்னைவிட அதிகமாகக் கூச்சலிடத் துவங்கினான். ஸ்ரீராமகிருஷ்ணர் வேகமாக அவனிடம் வந்து அவன் மார்பைத் தம் கையால் தடவியபடியே, ''தாயே! இந்த முட்டாளின் அறிவை மழுங்கச் செய்'' என்றார். உடனே இருதயன் இதுவரை அனுபவித்துக் கொண்டிருந்த ஆனந்

த்ம் அனைத்தும் போய்விட்டது. முன்பு இருந்த பழைய சாதாரண நிலைக்கு வந்துவிட்டான். தேவனுகச் சொர்க் கத்தில் இருந்தவன் அந்தத் தெய்விகம் முழுவதையும் இழந்துவிட்டான். இதைப் பொறுக்கமுடியாமல் துடித்துக் கதறியழுதபடியே ஸ்ரீராமகிருஷ்ணரிடம், ''மாமா! என்னை என்ன செய்துவிட்டீர்கள்? என்ன செய்து விட்டீர்கள்? என்னை இந்தக் கொடுமையான நிலைக்கு ஏன் ஆளாக் கினீர்கள்? முன்பு அனுபவித்த ஆனந்தம் சிறிதுகூட இல்லையே. எல்லாம் போய்விட்டதே'' என்றான். குரு தேவர் ஆறுதலாக, ''உன்னை முழுவதும் மந்தமானவனுக ஆக்கும்படி நான் அன்னையிடம் சொல்லவில்லை. இப்பொழுது மட்டும்தான் அப்படி ஆக்கும்படிச் சொல்லி இருக்கிறேன். இந்த அற்பக் காட்சிக்கே நீ இவ்வளவு கூச்சல்போட்டு அமர்க் களம் செய்யவே, நான் அதைச் செய்யும்படி ஆகிவிட்டது. நான் ஒரு நாளில் இருபத்துநான்கு மணி நேரமும் கணக் கில்லாமல் இப்படிப்பட்ட காட்சிகளைப் பார்த்துக் கொண்டே இருக்கிறேன். நான் அதைப்பற்றி ஏதாவது அமர்க்களம் செய்கிறேனு? நீ அவைகளையெல்லாம் காணும் அளவிற்குத் தகுதி பெறவில்லை. இப்போது அமைதியாக இரு. காலம் வரும்போது இதைவிட அருமையான காட்சி களைக் காண்பாய்'' என்றார்.

இருதயன் அப்போது அமைதியாகி விட்டான். ஆனல் அவன் மனம் மிகவும் புண்பட்டிருந்தது. தன் முயற்சிகளை மிகவும் அதிகமாக்கி அதன் மூலம் முன்போன்று காட்சிகளைக் காண முடிவு செய்தான். பல மணி நேரம் பிரார்த்தனையிலும் தியானத்திலும் கழித்தான். முன்பு ஸ்ரீராமகிருஷ்ணர் கடவுள் காட்சிக்காக எந்த இடத்தில் பஞ்சவடியில் அமர்ந்து தியானம் செய்தாரோ அங்கே அமர்ந்து தியானிக்க ஒரு நாள் இரவு முடிவு செய்தான். நல்ல இருட்டில் கோயிலில் ஓசை அனைத்தும் ஒடுங்கியதும் தன் படுக்கையிலிருந்து எழுந்து பஞ்சவடிக்குச் சென்று ஸ்ரீராமகிருஷ்ணரின் ஆசனத்தில் அமர்ந்து தியானம் செய்ய ஆரம்பித்தான். கொஞ்ச நேரம் கழிந்திருக்கும். தம் அறையில் இருந்த குருதேவரை யாரோ பஞ்சவடிக்கு இழுப்பதுபோல் இருந்தது. எழுந்து பஞ்சவடிப் பக்கம் விரைந்துவந்தார். அவர் பஞ்சவடியை நெருங்கவும் இரு தயன், ''மாமா! மாமா! காப்பாற்றுங்கள்! ஐயோ உடம்பு எல்லாம் பற்றி எரிகிறதே'' என்று அலறவும் சரியாக இருந்தது. விரைந்து அவனிடம் சென்ற ஸ்ரீராமகிருஷ்ணர்,

''என்ன நடந்தது?'' என்று கேட்டார். உடம்பெல்லாம் எரிகின்ற வேதனையால் துடித்தபடியே இருதயன், ''இங்கே தியானம் செய்ய அமர்ந்தேனே இல்லையோ, யாரோ ஒரு தட்டு நிறைய எரியும் தணலை என்மேல் கொட்டியது போல் இருக்கிறது. ஐயோ! இந்த வேதனையைத் தாள முடியவில்லையே'' என்று ஓலமிட்டான். குருதேவர் அமைதியாக அவன் உடம்பு முழுவதும் மெதுவாகத் தடவிய படியே, ''இனிமேல் எரிச்சல் இருக்காது. எதற்காக இங்கே வந்து தியானம் எல்லாம் செய்கிறாய்? எனக்குச் சேவை செய்வதன் மூலமாக உரிய காலத்தில் உனக்கு எல்லாம் கிடைக்கும் என்று நான் சொல்லவில்லையா?'' என்றார். இது பற்றி இருதயன் கூறும்போது, ஸ்ரீராமகிருஷ்ணர் தன் உடம்பு வேதனைகளையெல்லாம் அப்போதே நிறுத்தி விட்டார் என்று கூறியுள்ளான். ஸ்ரீராமகிருஷ்ணரின் அறிவுரைக்கு எதிராக நடப்பது மிகவும் ஆபத்தானது என்பதை இதன் மூலம் தெரிந்துகொண்ட இருதயன் அதன் பிறகு பஞ்சவடிப் பக்கம் தியானம் செய்யப் போவதையே விட்டுவிட்டான்.

குருதேவரின் வார்த்தைகளில் இருதயன் நம்பிக்கை வைத்த போதிலும் அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அவனுக்கு வாழ்க்கையே சுவையில்லாமல் போய்விட்டது. கோயில் வேலை எதைச் செய்யவும் பிடிக்கவில்லை. எனவே மனத்திற்கு புதிய உற்சாகம் தருகின்ற மாதிரி ஒரு வேலையைத் தேட ஆரம்பித்தான். இது 1868-ஆம் ஆண்டு வசந்தகாலத்தில் நடந்தது. அப்போது அந்த ஆண்டின் துர்க்கா பூஜை வந்தது. தன் சொந்தக் கிராமத்து வீட்டில் துர்க்கா பூஜையைச் சிறப்பாகக் கொண்டாட இருதயன் விரும்பினான். குருதேவரும் அவன் விருப்பத்தை ஏற்றுக்கொண் டார். மதுர் அந்தச் செலவிற்கான பணத்தைக் கொடுத் தார். இருதயன் அந்தப் பூஜைக்காகக் குருதேவரைத் தன் னுடன் தன் கிராமத்திற்கு அழைத்துச் செல்வதில் பெரும் ஆர்வம் கொண்டிருந்தான். ஆனால் மதுர் இதற்கு எதிராக இருந்தார். ஏனென்றால் தம் வீட்டில் பெரும் சிறப்போடு தாம் கொண்டாடும் துர்க்கா பூஜைக்குக் குருதேவர் வரவேண் டும் என்று பெரிதும் விரும்பினார். இருதயன் மனமுடைந்து போனான். குருதேவர் அவனிடம், ''இதற்காகக் கவலைப் படாதே, இருதய்! நீ செய்யும் பூஜையை நான் ஒவ்வொரு நாளும் என் நுட்பமான உடம்பில் அங்கே வந்து காண்கிறேன். ஆனால் நீ மட்டுமே என்னைப் பார்க்க

முடியும். மந்திரங்களைச் சொல்ல ஒரு நல்ல பூசாரியை அமர்த்திக் கொள். உனக்கு விருப்பமான முறையில் பூஜை செய். நாள் முழுவதும் பட்டினியாக நோன்பிருக்காதே. மத்தியான வேளையில் பாலும் கங்கை நீரும் வெல்லப் பானகமும் சாப்பிடு. என் அறிவுரையைப் பின்பற்றி அதன்படியே நடந்தால் அன்னை உன் வழிபாட்டை ஏற்று மகிழ்வாள்'' என்றார். அதோடு பூஜைக்கான திருவுருவை யார் செய்ய வேண்டும்? யார் இருதயனுக்குத் துணைப் பூசாரியாக இருக்க வேண்டும், மற்றும் எல்லாம் காரியங்களையும் எப்படி நடத்த வேண்டும் என்பதையெல்லாம் குருதேவர் குறிப்பாகச் சொல்லி அனுப்பினார்.

இருதயன் மகிழ்ச்சியோடு கிராமத்திற்குச் சென்றான். மூன்றுநாள் பூஜையின்போதும் திருவுருவின் பக்கத்தில் தன் மாமா ஒளிமயமாக நின்றிருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டான். அதன் பிறகு தட்சிணேசுவரம் வந்த இருதயன் அங்கு நடந்ததையெல்லாம் சொன்னான். அதைக் கேட்ட குருதேவர், ''ஆமாம், மாலை நேர பூஜையின் போதும், அடுத்துச் சந்தியாகாலப் பூஜையின் போதும் நான் உண்மையிலேயே உன் பூஜையைக் காணப் பெரிதும் ஆசைப்பட்டேன். அதைத் தொடர்ந்து ஏற்பட்ட சமாதி நிலையில் இங்கிருந்து ஒளிமயமான பாதை வழியே ஒளிமயமான வடிவில் நான் உன் பூஜை மண்டபத்திற்கு வந்தேன்'' என்றார். அதன் பிறகு குருதேவர் தெய்விகப் பரவச நிலையில் ஒரு முறை இருதயனிடம், ''நீ மும்முறை துர்க்கா பூஜை நடத்துவாய்'' என்றார். அதன்படியே நடந்தது. நான்காவது முறை கொண்டாட இருதயன் எவ்வளவோ முயன்றான். முடியாமலே போய்விட்டது. முதல் ஆண்டு துர்க்கா பூஜைக்குப் பிறகு இருதயன் மறுபடியும் திருமணம் செய்துகொண்டான். அதன் பிறகு தட்சிணேசுவரக் காளி கோயிலில் பூஜையிலும், குருதேவருக்குச் சேவை செய்வதிலும் முன்போலவே மிகுந்த ஆர்வத்தோடு ஈடுபட்டான்.

ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அட்சயன என்னும் அண்ணன் மகன் இருந்ததை முன்பே கண்டோம். இராம்குமாரின் மகனை அவனது தாய் இளமையிலேயே இறந்து போனதால் அந்தக் குடும்பத்தின் செல்ல மகனாக அவன் வளர்ந்தான். ஸ்ரீராமகிருஷ்ணர் அவனை மிகவும் நேசித்தார். கமார்புகூரில் அவன் குழந்தையாக இருந்தபோது எந்த நேரமும் தம் கைகளில் தூக்கி வைத்துக் கொண்டிருப்பார். ஆண்டுகள் கழிந்தன. அட்சயன் மிகுந்த அழகான தோற்றம் கொண்ட

இளைஞனாக வளர்ந்தான். சோதிடத்தில் வல்லவரான அவனது தந்தை அவன் நெடுநாட்கள் வாழமாட்டான் என்பதை அறிந்து சொன்னார். அற்ப ஆயுளில் இறந்துபோகப் போகும் அவனிடம் பாசம் வைத்து வருந்துவதற்கு அஞ்சிய இராம்குமார் அவன் பிறந்ததிலிருந்தே அவனிடம் சிறிதும் பாசமில்லாமல் நடந்து கொண்டார். அவனைக் கைகளில் தூக்குவதோ, சீராட்டுவதோகூட இல்லை. அந்தக் காரியங்கள் அனைத்தையும் ஸ்ரீராமகிருஷ்ணர் செய்தார். அவர் கமார்புகூரை விட்டுக் கல்கத்தா சென்றபோது, அவன் சிறு குழந்தையாகவே இருந்தான்.

அதன் பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்தார். பல ஆண்டுகள் கடுமையான சாதனைகளில் கழித்தார். தட்சிணேசுவரக் கோயிலில் இராதாகாந்தர் கோயிலில் பூசாரியாக இருந்த ஹலதாரி அதைவிட்டுப் போனதும் பதினேழு வயதான அட்சயன் தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்து அந்த வேலையை ஏற்றுக் கொண்டான். சிறு வயதிலிருந்தே அவனுக்கு இராமரிடம் பக்தி அதிகம். மணிக்கணக்காக அமர்ந்து அவருக்குப் பூஜை செய்வான். தட்சிணேசுவரத்தில் அவனுடைய இந்தப் பக்தி மிகுதியாக வளர்ந்தது. இராதாகாந்தருக்குப் பூஜை செய்யும்போது தியானத்தில் ஆழ்ந்து மூழ்கிவிடுவான்—தன்னைச் சுற்றி நிற்கும் எவரைப் பற்றியும் நினைவே எழாது. சிவபெருமானை வழிபடுவதிலும் பாகவதம் படிப்பதிலும் நெடுநேரம் கழிப்பான். பல ஆண்டுகளாக இதுவே அவனுடைய தினசரி வாழ்க்கையாக இருந்தது. சில நேரங்களில் கடுமையான சாதனைகளில் ஈடுபடுவான். அதன் காரணமாகத் தொண்டையிலும் வாயிலும் இரத்தம் கசியும். அவனுடைய இந்த ஆழ்ந்த பக்தியும் சாதனைகளும் ஸ்ரீராமகிருஷ்ணரை அவனிடம் பேரன்பு கொள்ள வைத்தன.

1869-ஆம் ஆண்டு அவனுக்குத் திருமணம் நடந்தது. சில நாட்களில் கடுமையாக நோய்வாய்ப்பட்டான். சற்றுக் குணமானதும் தட்சிணேசுவரம் வந்தவனுக்கு மறுபடியும் அந்தக் கடுமையான நோய் திரும்பிவிட்டது. வைத்தியர்கள் சாதாரண நோய் என்று கூறி மருந்து கொடுத்தார்கள். மூன்று நான்கு நாட்களாகியும் அவனுக்கு ஏற்பட்ட காய்ச்சல் சிறிதும் குறையாததைக் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் இருதயனிடம், "டாக்டர்கள் தவறு செய்துவிட்டார்கள். இது கடுமையான டைபாய்டு காய்ச்சல், உன் திருப்திக்காக டாக்

டர்களை அழைத்து வா. ஆனால் இவன் பிழைக்க மாட்டான்'' என்றார்.

இதைக் கேட்ட இருதயன் துடிதுடித்தபடி, ''உங்கள் வாயால் அப்படிச் சொல்லாதீர்கள். உங்களால் எவ்வாறு இப்படிப்பட்டக் கொடுமையான வார்த்தைகளைச் சொல்ல முடிகிறது?'' என்றான். இதைக் கேட்ட குருதேவர், ''இதை நானாகவா சொல்கிறேன்? அன்னை காளி சொல்ல வைக்கிறாள். அட்சயன் இறந்துபோக வேண்டுமென்று நான் நினைப்பேன் என்று எண்ணுகிறாய்?'' என்றார். இதைக் கேட்ட இருதயன் மிகவும் துயரமடைந்தான். அட்சயன் பிழைப்பதற்காகத் தன்னாலான எல்லாவற்றையும் செய்தான். ஆனால் நோய் படிப்படியாக அதிகரித்துக் கொண்டே வந்தது. உயிர் பிரியும் நேரம் வந்ததும் ஸ்ரீராமகிருஷ்ணர் அவன் படுக்கைக்கு அருகில் நின்று இராமநாமத்தைச் சொல்லும் படிக் கூறினார். இரண்டு முறை இராமநாமத்தைக் கூறியவன் மூன்றாவது முறையாகச் சொல்லிக்கொண்டே உயிர் நீத்தான். அந்த நேரத்தில் இந்த நிகழ்ச்சி ஸ்ரீராமகிருஷ்ணர் மனத்தில் எவ்வித பாதிப்பையும் உண்டாக்கவில்லை. இருதயன் கதறி அழுதபோது பரவச நிலையில் ஆழ்ந்தவராய் ஸ்ரீராமகிருஷ்ணர் சிரித்துக் கொண்டே இருந்தார். அதன் பிறகு அந்தச் சம்பவம் குறித்து ஸ்ரீராமகிருஷ்ணரே கூறியதாவது:

''அட்சயன் என் கண் முன்னாலேயே இறந்து போனான். எனக்குச் சிறிதும் சம்பந்தமில்லாத ஒரு மனிதன் இறப்பதைப் பக்கத்தில் நின்று பார்ப்பதுபோல் பார்த்துக் கொண்டிருந்தேன். உறையிலிருந்து வாளை எடுப்பதுபோல் உயிர் அவன் உடலிலிருந்து பிரிந்தது. அதைக் கண்டு நான் மிகவும் மகிழ்ந்தேன்; சிரித்தேன்; பாடினேன்; ஆடினேன். சிறிது நேரத்தில் அந்த உடம்பைச் சுடுகாட்டிற்கு எடுத்துச் சென்று தகனம் செய்துவிட்டார்கள். ஆனால் மறுநாள் நான் அங்கே (தமது அறைக்குத் தென்கிழக்கில் உள்ள வராந்தாவைச் சுட்டிக் காட்டி) நின்றிருந்தபோது அட்சயன் இறந்ததால் ஏற்பட்ட வேதனை ஈரத் துணியைப் பிழிவதுபோல் என் மனத்தைச் சித்திரவதை செய்தது. இதைக் கண்டு நான் ஆச்சரியப் பட்டேன். அன்னை காளி இதன் மூலம் எனக்கு ஒரு பாடம் கற்பிக்கிறாள் என்று நினைத்துக் கொண்டேன். நான் என் உடம்பைப் பற்றியே அதிகம் நினைப்பதில்லை. என் அண்ணன் மகனைப் பற்றி நிச்சயம் இன்னும் குறைவாகவே நினைத்

திருப்பேன். அவனுடைய மரணம் எனக்கே இப்படிப்பட்ட துயரத்தைக் கொடுத்ததென்றால் இல்லறத்தார்களுக்கு அவர்களுடைய நெருங்கிய உறவினர்கள் இறந்து போனால் அந்தத் துக்கம் எவ்வளவு தாங்க முடியாததாக இருக்கும்? இதை எனக்கு உணர்த்தவே அன்னை, அட்சயனின் மரணத்திற்கு என்னை இப்படி வேதனைப் படும்படி வைத்தாள்.''

# 24. மதுர்பாபுவின் மரணம்

அட்சயன் இறந்த பிறகு அவன் நினைவால் பெரும் துயருற்றிருந்த ஸ்ரீராமகிருஷ்ணரின் மனத்தை மாற்ற மதுர் அவரைத் தொலைவிலிருந்த தம் ஜமீன் கிராமங்களுக்குப் பயணமாக அழைத்துச் சென்றார். இருதயனும் உடன் சென்றான். முன்பு, அவர் மதுருடன் புண்ணியத் தலங்களுக்கு சென்றபோது வைத்தியநாத் என்னுமிடத்தில் நடந்த நிகழ்ச்சிபோல் இங்கும் ஒன்று நடந்தது. இந்தக் கிராமம் ஒன்றில் மிகக் கடுமையான பஞ்சம் நிலவியது. மக்கள் உண்பதற்கும் உடுப்பதற்கும் இல்லாமல் மிகுந்த வேதனைப்பட்டனர். இதைக் கண்டு கண்ணீர் வடித்த குருதேவர் மதுரிடம் அவர்களுக்கெல்லாம் ஒரு வேளை வயிறார உணவும் அணிந்துகொள்ள ஆடையும் தரும்படி வேண்டினார். மதுரும் அவ்வாறே செய்தார். இந்தப் பயணத்தின் போது மதுர் குல்னு மாவட்டத்தில் இருந்த தன் சொந்த கிராமத்திற்குச் சென்று அங்குத் தம்முடைய குலகுருவின் வீட்டில் சில வாரங்கள் தங்கினார். குலகுருவின் குடும்பத்தினர் குருதேவரை மிகுந்த அன்போடு வரவேற்று உபசரித்தார்கள். அதன் பிறகு எல்லோரும் தட்சிணேசுவரம் திரும்பினர்.

கல்கத்தாவில் கலூடோலா என்னும் இடத்தில் காளிநாத் தத்தரின் வீட்டில் மிகுந்த எண்ணிக்கையில் வைஷ்ணவ பக்தர்கள் கூடி சங்கீர்த்தனமோ அல்லது பாகவதம் முதலான நூல்களைப் படிக்கவோ செய்வார்கள். அந்தக் கூட்டத்தின் நடுவில் நல்ல ஆசனம் ஒன்றை அவர்களுடைய இஷ்ட தெய்வமான சைதன்ய தேவருக்கு மலர்களாலும் மாலைகளாலும் அலங்கரித்து வைப்பார்கள். தாங்கள் சங்கீர்த்தனம் பாடும்போதும் அல்லது பாகவதம் படிக்கும்போதும் சைதன்யரே அங்கு வந்து அமர்ந்து அதனைக் கேட்பதாக அவர்கள் நம்பினர். எனவே அந்த இருக்கையை அவர்கள் மிகவும் புனிதமாகப் போற்றி வணங்கினர். அதற்கு 'சைதன்யர் இருக்கை' என்றே பெயர். ஒரு நாள் அவர்களுடைய அழைப்பின் பேரில் ஸ்ரீராமகிருஷ்ணர் இருதயனுடன் அங்கே சென்றார். ஸ்ரீராமகிருஷ்ணர் அங்கு நுழைந்தபோது பாக

வதம் படித்துக் கொண்டிருந்தார்கள். அனைவரும் ஆழ்ந்த அமைதியோடு மிகக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந் தனர். உள்ளே நுழைந்த ஸ்ரீராமகிருஷ்ணர் அமைதியாகக் கூட்டத்தின் ஒரு பகுதிக்குள் சென்று அமர்ந்து கொண் டார். இதயத்து உணர்ச்சிகளை எல்லாம் கிளர்ந்து எழச் செய்யும் பாகவதத்தின் பாடல்கள் சிறிது நேரத்திற்குள் ளாக ஸ்ரீராமகிருஷ்ணரின் மனத்தில் கட்டுப்படுத்த இயலாத தெய்விகப் பரவசத்தை எழுப்பிவிட்டன. அவர் தம்மை மறந்தவராய் வேகமாக எழுந்து சென்று சைதன்யருக்காக அமைக்கப்பட்டிருந்த புனிதமான இருக்கையில் போய் நின்று அப்படியே சமாதியில் மூழ்கிவிட்டார். அவர் உடல் உணர் வற்றுச் சிலைபோல் ஆகிவிட்டது. சைதன்யரின் படத்தில் காணப்படுவதுபோல் அவருடைய இரண்டு கைகளும் மேலே தூக்கியபடி நின்றன. காண்போர் மனத்தைக் கவரும் தெய்விகப் புன்னகை அவர் முகத்தில் தவழ்ந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணரை இந்த நிலையில் கண்ட அங்கிருந்த பக்தர்கள் அனைவரும் தங்களை மறந்து அவர்பால் ஈர்க்கப்பட்ட வர்களாக அவரைப்பார்த்தபடி அப்படியே இருந்தனர். மிகவும் தீவிரவாதிகளான சில வைஷ்ணவர்கள்கூட, ஸ்ரீராமகிருஷ் ணர் செய்த தெய்வ நிந்தனைபோல் தோன்றிய அந்தச் செயலுக்கு எதிர்ப்புத் தெரிவிக்க முன்வரவில்லை. எல்லோரும் அளவற்ற ஆனந்தப்பரவசம் அடைந்தவர் களாக, 'ஹரே ராம், ஹரே ராம்' என்று பக்தியாகப் பாடிய படி உணர்ச்சி பொங்க பஜனை செய்ய ஆரம்பித்தனர். இந்தச் சங்கீதம் ஸ்ரீராமகிருஷ்ணரின் உள்மனத்தைச் சென்று தாக்கச் சிறிது சிறிதாக அவர் புற உலக நினைவு பெற்றார். பிறகு அவர்களோடு அந்தச் சங்கீர்த்தனத்தில் சேர்ந்து கொண்டு தமக்கே உரிய தெய்விகப் பரவசத்தோடு சிறிது நேரம் காண்பவர் உள்ளமெல்லாம் ஆனந்தத்தில் மூழ்கும் படி அழகாக நடனமாடுவதும், சில நேரங்களில் தம்மை மறந்து சமாதியில் மூழ்குவதுமாக இருந்தார். நெடுநேரத் திற்குப் பிறகு சங்கீர்த்தனம் முடிவுக்கு வந்தது. எல்லோரும் பகவான் பெயரை மகிழ்ச்சியோடு முழங்கினர். பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் அங்கிருந்து தட்சிணேசுவரம் திரும்பினார்.

அவர் திரும்பிய பிறகு அங்குக் கூடியிருந்த பக்தர் களிடையே ஸ்ரீராமகிருஷ்ணர் சைதன்யர் இருக்கையில் நின்றது பற்றிய கோபமான விவாதம் துவங்கியது. சிலர் ஸ்ரீராமகிருஷ்ணரின் செயலைக் குறை கூறினர். சிலர் ஆமோ தித்தார்கள். நெடுநேரம் விவாதித்துக் கூச்சலிட்ட அவர்

களால் எந்தவிதமான முடிவுக்கும் வரமுடியவில்லை. அப்போது வங்காளத்தில் பர்த்துவான் மாவட்டத்தில் கல்னுவில் பகவன் தாஸ் பாபாஜி என்னும் மிகப் பெரிய வைஷ்ணவ பக்தர் இருந்தார். வங்காளம் முழுவதும் அவரைத் தெய்விக புருஷரெனப் பெரிதும் மரியாதை செலுத்தி வணங்கியது. அப்போது அவருக்கு எண்பது வயதிருக்கும். வங்காளம் முழுவதிலுமுள்ள வைஷ்ணவர்கள் தங்களுக்குள் சமயம் பற்றி எழும் சந்தேகங்களையும் சண்டை சச்சரவுகளைத் தீர்த்துக் கொள்ள எப்போதும் அவரிடமே சென்றனர். அவரைச் சுற்றி எப்போதும் பெரும் கூட்டம் இருக்கும். கலூடோலா வைஷ்ணவ சபையில் ஸ்ரீராமகிருஷ்ணர் சைதன்யரின் இருக்கையின் மேல் ஏறி நின்றதும் அவரிடம் கொண்டு வரப்பட்டது. அதைக் கேட்ட அவர் தம் இஷ்ட தெய்வமான ஸ்ரீசைதன்யருக்கான பீடத்தின் புனிதத் தன்மை பாழாக்கிவிட்டதாக மிகுந்த வருத்தம் அடைந்தார். முன்பின் தெரியாத ஒரு மனிதன் அப்படிச் செய்தவற்கு அனுமதிக்கப்பட்டதை மிகவும் கண்டித்து, இனிமேல் அப்படி நடக்காமல் மிகுந்த விழிப்போடு இருக்கும்படி எச்சரித்தார். ஸ்ரீராமகிருஷ்ணருக்கு இந்தச் செய்திகள் பற்றி எதுவும் தெரியாது.

இந்த நிகழ்ச்சி நடந்த கொஞ்ச காலத்திற்குப் பிறகு 1870-ஆம் ஆண்டு ஸ்ரீராமகிருஷ்ணர் மதுரோடும் இருதயனோடும் சைதன்யர் பிறந்த இடமாகிய நவத்வீபத்தைத் தரிசிக்கப் புறப்பட்டார். அந்த வழியில் பகவன்தாஸ் பாபாஜியைக் காணக் கல்னுவுக்கு வந்தார். அங்கு வந்ததும் மதுர் எல்லோரும் தங்குவதற்கும் உணவுக்குமான இடத்தைத் தேடுவதில் மூழ்கிவிட்டார். தனித்திருந்த ஸ்ரீராமகிருஷ்ணர் இருதயனோடு பாபாஜியைக் காணச் சென்றார். குருதேவர் யாராவது புகழ்பெற்றவர்களை முதலில் பார்க்கச் செல்லும் போது குழந்தைபோல் வெட்கமும் பயமும் கொள்வது அடிக்கடி நிகழும் ஒன்று. இப்போதும் அதேபோல் வெட்கம் அடைந்தவராய் இருதயனை முன்னே அனுப்பி விட்டு அவனுக்குப் பின் சிறிது தொலைவில் தம்மைத் துணியால் மூடிக்கொண்டு பாபாஜி இருக்குமிடத்திற்கு வந்தார். பாபாஜிக்கு யாரோ ஒரு பெரிய மகான் வரப் போகிறார் என்றும் எண்ணம் முதலிலேயே தோன்றியது. தம்முன் அமர்ந்திருந்த பக்தர்களிடையே அதைக் கூறிக் கொண்டிருந்தார். அந்த நேரத்தில் சாதாரண மனிதனை இருதயன் மட்டுமே வர, பக்தர்களிடம் அதுவரை பேசி

வந்த பேச்சைத் தொடர்ந்து பேசியபடி அங்கே விசாரித்துக் கொண்டிருந்த ஒரு வழக்கின் முடிவாகத் தவறு செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்ட வைஷ்ணவனைத் தங்கள் ஜாதியிலிருந்து வெளியேற்றி விட்டதாக உத்தரவிட்டார். இந்த நேரத்தில் இருதயன் அவரை மிகுந்த பணிவோடு வணங்கி கடவுளின் பெயரைச் சொன்னாலே பரவசநிலையை அடைந்துவிடும் பெரிய பக்தரான தன் மாமா அவரைப் பார்க்க விரும்புவதாகச் சொன்னான். அப்போது ஸ்ரீராம கிருஷ்ணர் உள்ளே நுழைந்து பாபாஜியை வணங்கி விட்டு மண்டபத்தில் ஒரு பக்கமாக அமர்ந்தார். அப்போது அவரது முகம் முழுவதும் துணியால் மூடப்பட்டிருந்தது. பாபா ஜியும் அவருக்கு எதிர் வணக்கம் செலுத்தி, ''அவர் யார், எங்கிருந்து வருகிறார்?'' என்றெல்லாம் கேட்டார். அப்போது பாபாஜி ஜபமாலையை உருட்டி ஜபம் செய் வதைக் கண்ட இருதயன் அவரிடம், ''கடவுளைக் கண்ட மகானாகிய நீங்கள் கூடவா இன்னும் ஜபம் செய்ய வேண் டும்?'' என்று கேட்டான். இதைக் கேட்ட பாபாஜி, ''இதை நான் எனக்காகச் செய்யவில்லை. எனக்குத் தேவை யும் இல்லை. மற்றவர்களுக்கு எடுத்துக் காட்டாக இருக்கவே ஜபம் செய்கிறேன். இல்லையென்றால் என்னைப் பார்த்து அவர்களும் ஜபம் செய்யாமல் கெட்டுப் போவார்கள்'' என்றார்.

இதைக் கேட்டதும் ஸ்ரீராமகிருஷ்ணரால் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. முழுக்க முழுக்க அன்னை காளியின் குழந்தையாகவே மாறி, 'நான்' என்றும் 'எனது' என்றும் நினைவே இல்லாதவராய் எல்லாவற்றுக்கும் காளியையே நம்பி வாழும் குருதேவர் மற்றவர்கள் அகங்காரத்தில் பேசுவதைக் கேட்டால் வேதனைப் படுவார். சாதாரணமாக மற்றவர்களோடு பேசும்போதுகூட 'நான்' என்று பேசுவதைத் தவிர்க்கவே செய்வார். பெரிய மகான் என்று புகழ்பெற்ற பாபாஜி, 'எனக்குத் தேவையில்லை. மற்றவர்கள் பின்பற்றுவதற்காகவே செய் கிறேன்.' என்றெல்லாம் பேசியது ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அள வற்ற எரிச்சலூட்டியது. எழுந்து நின்ற அவர் பாபாஜியைப் பார்த்து, ''என்ன! உங்களைப் பற்றி அப்படிப் பெரிதாக நினைத்துக் கொள்ள உங்களிடம் எவ்வளவு அகங்காரம் இருக்க வேண்டும்? நீங்கள் சமய சாதனைகளைச் செய்யலாம்; அல்லது செய்யாமல் போகலாம். உங்களைப் பார்த்துத் தான் உலகமே சமய சாதனை செய்து கொண்டிருக்கிறதா?

நீங்கள் இல்லையென்றால் எல்லாம் நின்றுபோய் விடுமா? உலகமனைத்தின் தலைவரும் அதனை ஆள்பவருமான கடவுளின் கருணை இல்லையென்றால் உங்களால் யாருக்குச் சாதனையைக் கற்றுத் தரமுடியும்?'' என்று தம்மை மறந்து உரக்கக் கேட்டார். அந்த நேரத்தில் அவர் அணிந்திருந்த ஆடையோடு அவர் முகத்தை மூடியிருந்த துணியும் கீழே விழுந்துவிட்டது. அவர் முகத்தைச் சுற்றி ஒளிப்பிரபை தோன்றிற்று. பேசி முடிந்ததும் அளவற்ற உணர்ச்சிப் பெருக்கால் அப்படியே சமாதியில் மூழ்கி உணர்வற்று நின்றார் அவர். எல்லோரும் அவருடைய தெய்விகம் பொருந்திய கம்பீரமான தோற்றத்தில் மந்திரத்தால் கட்டுண்டது போல் பார்த்தபடியே அமர்ந்திருந்தனர். யாருக்கும் ஒரு வார்த்தை பேசக்கூட தைரியம் எழவில்லை. எல்லோராலும் மிகுந்த மதிப்போடும் பயபக்தியோடும் நடத்தப் பட்டே பழக்கப்பட்டு வாழ்ந்த பாபாஜி, தம்மைப் பார்த்து அவமதிப்புடன் மிகுந்த கோபத்தோடு ஒருவர் பேசுவதைக் கேட்டதும் ஆச்சரியப்பட்டார். ஆனால் எதிர்க்க முடியாத அந்த வார்த்தைகளைப் பேசியவிதமும் யாரையும் கட்டுப்படுத்தக் கூடிய அதிகாரமும் நேராக அவர் நெஞ்சைத் தொட்டன. பக்தி நிறைந்த பெரிய மகானாகிய அவருடைய ஆன்மிகக் கண்கள் திறந்தன. தம் தவற்றை உணந்தார். தாம் கடவுளின் கையில் மிகமிகச் சாதாரணமான ஒரு கருவியே - அவருடைய மிகச் சாதாரணமான வேலைக்காரனே என்பதை உணர்ந்தார். கோபம் கொள்வதற்குப் பதில் குருதேவரின் அருகாமையில் சென்று அவரை உற்று நோக்கி அவரிடம் காணப்பட்ட தெய்விக அடையாளங்களைக் கண்டு அளவற்ற ஆனந்தமும் ஈடுபாடும் கொண்டார். பின்னர் அன்போடு அவருடன் உரையாடத் துவங்கினார். இந்த உரையாடலின்போது குருதேவர் அடிக்கடி சமாதியில் மூழ்கியது, பாபாஜி அவரைப் பற்றி முதலில் நினைத்த கருத்தை உறுதிப்படுத்தியது. கலூடோலா சைதன்யரின் இருக்கையில் ஏறி நின்றவர் இவர்தான் என்று சபையில் உள்ளவர்கள் கூறினார்கள். இதைக் கேட்ட பாபாஜி முன்பு அந்தச் செயலுக்காகக் குருதேவரைப் பல வாறாகத் தூற்றியதை எண்ணிப் பெரிதும் வருந்தி அவரிடம் மன்னிப்புக் கேட்டார். அவரிடம் விடைபெற்றுச் சென்ற ஸ்ரீராமகிருஷ்ணர் அங்கு நடந்ததையெல்லாம் மதுரிடம் கூறி, பாபாஜியின் மிக உயர்ந்த தெய்விக நிலையைப் பாராட்டினார். மதுர் அவருடைய ஆசிரமத்துக்குச் சென்று அவரைக் கண்டு பெரும் காணிக்கை அளித்துத் திரும்பினார்.

கல்னுவிலிருந்து அவர்கள் நாதியாவிற்குக் கங்கை வழியாகப் புறப்பட்டனர். நதியின் வழியாக அவர்கள் சென்ற படகு மணலோரம் ஒதுங்கி நகரத்தின் கரையை அடையும் போது ஸ்ரீராமகிருஷ்ணர் பரவச நிலையை அடைந்தவராய்ப் படகிலிருந்து எழுந்து நின்றார். இருதயன் உடனே அவரைப் பிடித்துக் கொள்ளவில்லையென்றால் கங்கையில் விழுந்து விட்டிருப்பார். படகு கரையை அடைந்ததும் முன்பு போலவே சாதாரண நிலையை அடைந்துவிட்டார். சைதன்யர் பிறந்த அந்த நகரத்தில் இறங்கி, தரிசனத்திற்காகப் பல கோயில்களுக்கும் அவர்கள் சென்றார்கள். வழக்கமாக மகான்கள் பிறந்த ஊர்களுக்கோ அல்லது புகழ் பெற்ற கோயில்களுக்கோ ஸ்ரீராமகிருஷ்ணர் சென்றால் பரவசநிலையும் சமாதிநிலையுமாக உயர்ந்த அனுபவங்களை அடைவார். ஆனால் சைதன்யர் பிறந்ததாகக் கூறப்படும் நாதியாவில் எந்த இடத்திலும் அவருக்கு இத்தகைய பரவசநிலையோ, சமாதியோ ஏற்படவில்லை. இதனால் அவர் பெரிதும் ஏமாற்றமுற்றார். பின்னர் அவர்கள் படகில் சென்றார்கள். படகு கரையிலிருந்து சற்றுத் தூரத்தில் சென்று கொண்டிருந்தது. அப்போது திடீரென்று அவருக்கு ஓர் அதிசயமான தெய்விகக் காட்சி கிட்டிற்று. இதைப் பற்றி அவர் குறிப்பிடும்போது, ''பொன்போன்ற அழகிய நிறத்தோடு இரண்டு கைகளையும் வானத்தை நோக்கித் தூக்கியவர்களாய் தலையைச் சுற்றி ஒளிபரவி நிற்க, புன்னகை செய்தபடியே காற்றின் வழியாக இரண்டு சிறுவர்கள்* என்னை நோக்கி ஓடிவந்தார்கள். 'அவர்கள் வருகிறார்கள், அவர்கள் வருகிறார்கள்' என்று நான் கத்தினேன், கண்களை இமைப்பதற்குள் அவர்கள் இந்த உடம்பிற்குள் (அதாவது அவருக்குள்) நுழைந்து மறைந்து விட்டனர். நான் நினைவற்றுச் சாய்ந்து விட்டேன். இருதயன் மட்டும் என்னைப் பிடித்துக் கொள்ளாமல் இருந்திருந்தால் நான் ஆற்றில் விழுந்திருப்பேன்'' என்று கூறியுள்ளார். இதைப் பற்றி மதுர் கேட்டதும் குருதேவர் அவரிடம், ''இப்போது உள்ளது புதிய நாதியா நகரம். சைதன்யர் பிறந்து வாழ்ந்த பழைய நகரம் கங்கையில் மூழ்கிவிட்டது! நாம் இப்போது கங்கையில் வந்த இடம்தான் சைதன்யர் வாழ்ந்த பழைய நாதியா. அதனால்தான் படகு அங்கு வந்ததும்

---

*ஸ்ரீசைதன்யரும் அவருடைய சீடரான நித்தியானந்தரும்.

எனக்குச் சமாதியும் சைதன்யரின் காட்சியும் கிடைத்தது'' என்றார்.*

மதுர் முதன் முதலில் ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்தித்துப் பதினறு ஆண்டுகள் கழிந்துவிட்டன. இந்தப் பதினறு ஆண்டுகளில் மதுரின் மனநிலையில் ஆச்சரியமான மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. 1871-ஆம் ஆண்டு ஜுலை மாதம் மதுர் திடீரென்று டைபாய்டு காய்ச்சலால் படுத்த படுக்கையானார். அவர் காய்ச்சலில் படுத்த அன்றே மதுரின் கடைசிக் காலம் வந்துவிட்டதை அன்னை காளி அவரைத் தன் மடிக்குத் திருப்பி அழைத்துக் கொள்ளும் நாள் நெருங்கி விட்டதைக் குருதேவர் அறிந்து கொண்டார். தாம் நேராகப் போகவில்லையென்றாலும் தினந்தோறும் இருதயனை அனுப்பி அவர் உடல் நிலையை விசாரித்து அறிந்து கொண்டார்.

நோய் முற்றிக்கொண்டே வந்தது. இறுதியில் விதியை நிர்ணயிக்கிற அந்த நாளும் வந்தது. மதுர் கங்கைக் கரைக்கு எடுத்துச் செல்லப்பட்டார். அன்றைக்கு மதுரிடம் குருதேவர் இருதயனை அனுப்பவில்லை. ஆனால் ஆழ்ந்த சமாதியில் மூழ்கினார். அது இரண்டு மூன்று மணி நேரம் நீடித்தது. அவருடைய உடல் தட்சிணேசுவரத்திலேயே இருந்ததென்றாலும் ஆன்மாவோ தன் பக்தனுக்கு ஆசிகள் அளிக்க அவன் அருகே இருந்தது. மாலை ஐந்து மணிக்கு ஸ்ரீராமகிருஷ்ணர் சமாதியிலிருந்து எழுந்து இருதயனை அழைத்தார். ''மதுரின் ஆன்மா தேவியின் உலகத்தை அடைந்துவிட்டது'' என்றார். இருதயன் மௌனமாயிருந்தான். இரவு நெடுநேரம் கழித்து, மதுர் ஐந்து மணிக்கு இறந்து விட்டதாகக் கோயிலுக்குச் செய்தி வந்தது.

பிற்காலத்தில் ஒரு பக்தர், மதுரின் ஆச்சரியமான தனிப்பண்பையும் ஸ்ரீராமகிருஷ்ணரோடு அவருக்கிருந்த நிகரற்ற உறவு முறையையும் நினைத்து மிகுந்த அவாக் கொண்டு ஸ்ரீராமகிருஷ்ணரிடமே, ''மரணத்திற்குப் பிறகு மதுர் என்னவானார்? அவர் சாதாரண மனிதர்கள் போல் மறுபடியும் பிறந்திருக்க மாட்டார் அல்லவா?'' என்று கேட்டார். இதைக்கேட்ட குருதேவர், ''ஒருவேளை அவர் ஓர் அரசனாகப் பிறந்திருக்கலாம். ஏனென்றால் உலகை அனுபவிக்க வேண்டும் என்று ஆசை அவருக்கு நிறைய இருந்தது''

---

*அதன்பின்பு மேற்கொண்ட ஆராய்ச்சியின் முடிவும் ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியதை உறுதிப்படுத்தியுள்ளது.

என்றார். பிறகு அந்தச் செய்தியை மேற்கொண்டு வளர விடாமல் அதோடு நிறுத்திவிட்டார்.

மதுரின் மரணத்தோடு ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கையில் முக்கியமான சம்பவங்கள் நிறைந்த சிறப்புமிக்க காலத்தில், அவரோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த ஒருவர் பிரிந்துவிட்டார். இரண்டு பேருக்கும் இடையே இருந்த மிக நெருங்கிய உறவு முன்கூட்டியே அன்னை காளியால் முடிவு செய்யப்பட்ட ஒன்றாகும். மதுர் அன்னை பராசக்தியின் அருமைப் புதல்வரான ஸ்ரீராமகிருஷ்ணரின் தேவைகளை மிகுந்த கவனத்தோடு பார்த்துக் கொள்வதற்காகவே அனுப்பப் பட்டவர். அந்தப் பொறுப்பை அவர் எவ்வளவு அருமையாக நிறைவேற்றினார் என்பதையும் கண்டோம். அவரது மறைவுக்குப் பின்னர் ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கையில் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது. புதிய பக்தர்கள் அவரை நாடி வந்தார்கள். இப்போது அவர்களை வாசகர்களுக்கு அறிமுகப் படுத்துகிறோம்.

## 25. தட்சிணேசுவரத்தில் தூய அன்னை

இதற்கு முன்னர் நாம் தூய அன்னை சாரதாதேவியைக் கமார்புகூரில் ஸ்ரீராமகிருஷ்ணரின் துணையுடன் வாழ்ந்ததைப் பார்த்தோம். அந்த வாழ்க்கை தூய்மையே வடிவான அந்தக் கிராமத்துப் பெண்ணின் இதயத்தை விவரிக்க முடியாத பேரானந்தத்தில் திளைக்க வைத்தது. இந்த வாழ்க்கையைப் பற்றி அவர் பிற்காலத்தில் சொல்லும் போது, ''அந்தக் காலங்களில் வார்த்தைகளால் வருணிக்க முடியாத பேரானந்தம் நிரம்பிய குடம் ஒன்று என் இதயத்தில் வைத்தது போலிருந்தது'' என்றுக் கூறியுள்ளார். சில மாதங்களுக்குப் பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரம் சென்றதும் உலகிலேயே மகிழ்ச்சி நிறைந்த பெண்ணாக சாரதாதேவி தம் தந்தையின் வீட்டிற்குத் திரும்பினார். இவ்வளவு காலம் ஸ்ரீராமகிருஷ்ணருடன் வாழ்ந்ததன் பயனாக அவருடைய குணத்தில் முழுக்க முழுக்க மாறுதல் ஏற்பட்டது. எப்போதும் அதிகமாகச் சிந்தனை வயப்பட்டவராகவும் சுயநலம் சிறிதுமே இல்லாதவராகவும் எல்லா உயிர்களிடத்தும் எல்லையற்ற கருணை உடையவராகவும் மாறிவிட்டார். வசதிக் குறைவுகளாலோ அல்லது வீட்டில் உள்ளவர்களின் அன்பில்லாத நடத்தைகளாலோ அவருடைய ஆழ்ந்த மன அமைதியைக் குலைக்க முடியவில்லை. அவருடைய இதயம் தட்சிணேசுவரத்தில் குருதேவரின் திருவடிகளில் இருந்தபோதிலும் ஜயராம்பாடியில் பெற்றோர்களுக்கும் சகோதரர்களுக்கும் அவர் மகிழ்ச்சியோடு சேவை செய்து வந்தார். குருதேவரோடு வாழ்ந்து அவர் அருகே இருந்து அவருக்குச் சேவை செய்யச் சாரதை மிகவும் விரும்பினார். உரியகாலத்தில் அவர் தம்மை நிச்சயம் அவரிடம் அழைத்துக் கொள்வார் என்ற நம்பிக்கையோடு எப்போதும் தட்சிணேசுவரம் செல்லத் தயாராக இருந்தார்.

நான்கு ஆண்டுகள் கழிந்தன. சாரதை இப்போது பதினெட்டு வயதுள்ள இளம் மங்கையாகி விட்டார். தம் இதயத்தில் பொங்கும் தெய்விக ஆனந்தத்தால் வாழ்வின் சாதாரண இன்ப துன்பங்களையெல்லாம் அவர் கடந்து நின்றாலும் கிராமத்து மக்கள் தம் கணவர் பைத்தியமாகி

விட்டதாகப் பேசும் பேச்சுக்கள் எல்லாம் காதில் விழாமல் போகவில்லை. சுகதுக்கங்களைக் கருதாது இரவு பகல் எந்த நேரத்திலும் இறைவனின் திருநாமங்களைப் பாடி, ஆன்மிக வாழ்வு வாழ்பவர்களைக் கண்டால், சாதாரண மக்கள் பைத்தியம் என்று பட்டம் கட்டிவிடுவார்கள். அவருடைய தோழிகளில் சிலர் அவரைப் பைத்தியக்காரனின் மனைவி என்று பரிதாபத்தோடும் சில சமயங்களில் கேவலமாகவும் பேசினார்கள். அவற்றை எல்லாம் பொறுமையோடு சகித்துக் கொண்டார் சாரதை. என்றாலும் அவர்களது வார்த்தைகள் சாரதையின் மனத்தைப் புண் படுத்தின. 'அவர் பைத்தியமாகி விட்டார் என்பது உண்மையாக இருக்குமா? நான் கமார்புகூரில் பார்த்த அவர் இப்போது மாறிவிட்டிருப்பாரா? உண்மையில் அவருக்குப் பைத்தியம் பிடித்திருக்குமானால் அவரைவிட்டு நான் இங்கு இருக்கவே கூடாது. அவரோடு இருந்து என்னால் முடிந்தவரை அவருக்குச் சேவை செய்ய வேண்டும்' என்று நினைத்தார். அது குறித்து மிக ஆழ்ந்து சிந்தித்த பிறகு தாமே தட்சிணேசுவரம் சென்று அவரைப் பார்ப்பது என்று முடிவு செய்தார். அதற்கான வாய்ப்பும் அவருக்கு விரைவில் வந்தது.

டோல்பூர்ணிமா என்னும் விழாக் காலத்தில் வங்காளம் எங்கும் உள்ள மக்கள் புனித கங்கைக்குச் சென்று நீராடுவது வழக்கம். அந்த விழா வந்தது. அதற்கு ஜயராம்பாடியில் இருந்த சாரதையின் உறவினர்கள் சிலர் கல்கத்தா சென்று கங்கையில் நீராடப் புறப்பட்டனர். சாரதையும் தான் அவர்களுடன் வருவதாகவும், தன்னையும் உடன் அழைத்துச் செல்லும்படியும் மிகவும் வேண்டினார். அவர்கள் சாரதையின் தந்தையிடம் இதுபற்றிக் கூறினர். சாரதை கல்கத்தா போக விரும்புவதன் உள் நோக்கத்தை அவர் உடனே புரிந்து கொண்டார். தாமும் மகளுடன் கல்கத்தாவிற்குப் புறப்பட்டார். அந்தக் காலத்தில் கல்கத்தா செல்ல ரயில் இல்லாததாலும் அவ்வளவு தூரம் பல்லக்கில் செல்ல வசதி இல்லாததாலும் எழுபது மைல் தொலைவையும் நடந்தே கடக்க அவர்கள் முடிவு செய்து ஒரு நாளில் பயணத்தைத் துவங்கினர். வழியில் நிறைந்திருந்த இயற்கைக் காட்சிகளைப் பார்த்தபடியும் உடன்வந்த உறவினர்களுக்கு உதவியபடியும் இரண்டு மூன்று நாட்கள் மகிழ்ச்சியோடு சாரதை அவர்களுடன் நடந்து சென்றார். நெடுந் தொலைவு நடந்து

பழக்கமில்லாத அவரால் அதற்குமேல் நடக்க முடிய வில்லை. அதோடு சாரதை மிகக் கடுமையான காய்ச் சலுக்கும் ஆளானர். எனவே ஒரு சத்திரத்தில் தங்க வேண் டியதாயிற்று. காய்ச்சல் வந்துவிட்டதே என்ன செய்வது என்று கலங்கியவராய் மிகுந்த ஜுரவேகத்தில் படுத்திருந் தார் சாரதை. அப்போது ஒரு தெய்விகக் காட்சியின் மூலம் அவருக்கு ஆறுதல் கிடைத்தது.

இதைப் பற்றி சாரதாதேவி பிற்காலத்தில் கூறும் போது, ''காய்ச்சலில் நான் படுத்திருந்தபோது இணையற்ற அழகுடைய கருநிறப் பெண்ணொருத்தி என் பக்கத்தில் உட்கார்ந்திருப்பதைக் கண்டேன். அவள் தன்னுடைய மென்மையான சில்லென்ற கைகளால் என் உடம்பின்மீது - தடவிக்கொண்டே வந்தாள். அவளது கை பட்ட உடனே கொதித்துக் கொண்டிருந்த காய்ச்சல் தணியத் தொடங்கியது. 'நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?' என்று நான் அவளைக் கேட்டேன். 'தட்சிணேசுவரத்தி லிருந்து' என்று அவள் சொன்னுள். நான் மிகுந்த ஆச் சரியத்தோடு, 'நான்கூட அங்கே போய் என் கணவரைச் சந்தித்து அவருக்குச் சேவை செய்வதற்காகவே விரைந்து வந் தேன். ஆனல் இந்தக் காய்ச்சல் எல்லாவற்றையும் கெடுத்து விட்டது' என்றேன். அதற்கு அவள், 'அதனலென்ன? உன் காய்ச்சல் தீர்ந்ததும் நீ அங்கே போய் அவரைச் சந்திக்க லாம். உனக்காகவே நான் அவரை அங்கே வைத்திருக் கிறேன்' என்ருள். அதைக் கேட்டதும் நான், 'நீங்கள் மிகுந்த கருணை உடையவர். நீங்கள் யார் என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?'' என்றேன். அதற்கு அவள் 'நான் உன் சகோதரி' என்ருள். 'ஆ! அதனல்தான் நீங்கள் இங்கே வந்திருக்கிறீர்கள்' என்றேன். பிறகு அயர்ந்து தூங்கி விட்டேன்'' என்று கூறினர்.

மறுநாள் காலை காய்ச்சல் முழுதும்நீங்கி தம் மகள் உற்சாகத்தோடு இருப்பதை இராமசந்திரர் கண்டார். பயணம் துவங்கியது. சிறிது தூரம் சென்றதும் எதிரில் பல்லக்கு ஒன்று வந்தது. சாரதையை அதில் ஏற்றி மற்ற வர்கள் நடந்து வர 1872-ஆம் ஆண்டு மார்ச் மாதம் இரவு ஒன்பது மணிக்கு எல்லோரும் தட்சிணேசுவரத்தை அடைந்தனர்.

சாரதையை மிகுந்த பலவீனமான நிலையில் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் மிகவும் வேதனைப்பட்டார். தம் அறை யில் அவருக்காக ஒரு படுக்கையை அமைத்துத் துணைக்கு ஒரு

பெண்ணையும் அமர்த்தினர். அவருக்கு மேலும் மேலும் வசதியும் உதவியும் .செய்யத் துடித்தவராய் ஸ்ரீராமகிருஷ்ணர் மறுபடியும் மறுபடியும், ''ஆ! நீ எவ்வளவு காலம் தாமதித்து வந்திருக்கிறாய்? உன்னைக் கவனித்து வசதி செய்து கொடுக்க என் மதுர் இல்லையே!'' என்று வேதனையோடு சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் நல்ல சிகிச்சையாலும் ஸ்ரீராமகிருஷ்ணர் தாமே முன்னின்று செய்த சேவையாலும் இரண்டு மூன்று நாட்களில் சாரதை நோய் தீர்ந்து பழையபடி உடல் நலம் பெற்றுவிட்டார். பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் தம் தாயுடன் தங்கியிருக்கும்படி அவரை நஹபத்துக்கு (வாத்திய அறை) அனுப்பினர்.

இந்தச் சில நாட்களிலேயே ஊரார் பேசிக் கொண்டது போல் தம் கணவர் பைத்தியம் இல்லை என்பதையும், கமார்புகூரில் முன்பு பார்த்தது போலவே அவர் இருப்பதையும் சாரதை உணர்ந்து கொண்டார். எனவே அவரோடு இருந்து அவருக்கும் அங்குத் தங்கியிருந்த அவருடைய தாய்க்கும் சேவை செய்வது என்று முடிவு செய்தார். மருமகன் நல்ல நிலையில் இருப்பதையும் தம் மகளை மிகுந்த அன்போடு நடத்துவதையும் கண்ட இராம சந்திரர் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். சாரதை அங்கேயே இருக்கப் போவதை அறிவித்ததும் மேலும் மகிழ்ச்சியும் மனநிறைவும் கொண்டவராக ஊர் திரும்பினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் இப்போது தட்சிணேசுவரத்தில் மீண்டும் சாரதைக்கு ஆன்மிகம் பற்றியும் உலகியல் பற்றியும் உபதேசிக்கத் துவங்கினர். அதே நேரத்தில் கணவன் என்ற நிலையில் தம்முடைய கடமைகளைச் செய்தபடி, மனைவி அருகில் இருந்தாலும் காமத்தின் வலையில் சிக்காத அளவிற்குத் தம் ஆன்மிகம் வலிமையானதா என்று தம்மையே சோதித்துக் கொள்ளவும் துவங்கினர். உலகில் முழுக்க முழுக்கக் கடவுளையே நம்பி வாழ்பவர்கள் தங்கள் எதிர்காலத் திட்டங்களைப் பற்றி ஒன்றுமே நினைப்பதில்லை. தாங்கள் செய்யும் ஒவ்வொரு காரியத்துக்காகவும் கடவுளையே அவர்கள் சார்ந்திருக்கின்றனர். அவருடைய வழி காட்டுதலிலேயே செயல்படுகின்றனர். எனவே அவர்கள் தாங்களாகவே எந்தவிதச் சோதனையையும் ஏற்றுக் கொள்வதில்லை; ஏற்றுக் கொள்ள வேண்டிய சூழ்நிலை நேரும்போது தயங்குவதும் இல்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் கமார்புகூரில் தம் மனைவிக்குப் பயிற்சி தரும் வேலையை

ஏற்றுக் கொண்டார். ஏனென்றால் அது சரியான நேரத்தில் செய்யப்பட வேண்டிய சரியான காரியமாகவே இருந்தது. அவர் தட்சிணேசுவரத்துக்குப் புறப்பட்டதும் அந்த வேலை தடைப்பட்டது. இப்போது முன்பு எங்கு விட்டாரோ அந்த இடத்திலிருந்து தொடர்ந்து பயிற்சிக்கான வேலையை ஆரம்பித்தார். அவருடைய உபதேசம் வீட்டு வேலைகளை எப்படிச் செய்வது என்பதிலிருந்து பிரம்மத்தை எப்படி அறிவது என்பதுவரை எல்லாவற்றையும் தழுவியதாக இருந்தது. வெறும் போதனையோடு நில்லாமல் சாரதை அவைகளைச் சிறந்த முறையில் பயிற்சி செய்கிறாரா என்பதிலும் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டார். தவறு நேர்ந்தபோது மிகுந்த அன்போடு திருத்தினார்.

அந்த நேரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் சாரதாதேவிக்குத் தந்த மிகச் சிறந்த உபதேசங்களில் ஒன்று, 'அம்புலி எல்லாக் குழந்தைகளுக்கும் அன்பான மாமாவாக இருப்பது போல கடவுளும் எல்லோருடைய அன்புக்கும் பாத்திரமானவர். எல்லோருக்குமே அவரைப் பிரார்த்திக்கச் சமமான உரிமை உண்டு. அவர் தம் கருணையின் காரணமாகத் தம்மைப் பிரார்த்திக்கும் எல்லோருக்கும் காட்சி அளிக்கிறார். நீயும் பிரார்த்தனை செய்தால் அவரைக் காணமுடியும்' என்பதாகும்.

தூய அன்னை தட்சிணேசுவரம் வந்த சில மாதங்களுக்கெல்லாம் ஸ்ரீராமகிருஷ்ணர் மனத்தில் ஒரு விசித்திரமான ஆசை எழுந்தது. அது 1872-ஆம் ஆண்டு மே மாதம் பௌர்ணமி. அன்று இரவு காளியை வழிபடுவதற்கு மிகச் சிறந்த நாளாகும். ஸ்ரீராமகிருஷ்ணர் அந்தப் பூஜைக்கான எல்லா ஏற்பாடுகளையும் தம் அறையில் செய்து விட்டு தூய அன்னையை அங்கு வரும்படி அழைத்தார். இரவு ஒன்பது மணி. தூய அன்னை ஸ்ரீராமகிருஷ்ணரின் அறைக்குள் நுழைந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் அர்ச்சகரின் ஆசனத்தில் அமர்ந்தார். ஆரம்பச் சடங்குகளுக்குப் பிறகு காளிக்காகப் போடப்பட்டிருந்த ஆசனத்தில் தூய அன்னையை அமரும்படிச் சாடை காட்டினார். இவ்வளவு நேரமாக ஸ்ரீராமகிருஷ்ணர் செய்யும் பூஜையை மிகுந்த பக்தியோடு பார்த்தபடி அரை நினைவு நிலையில் நின்றிருந்த தூய அன்னையும் ஸ்ரீராமகிருஷ்ணரின் கட்டளைக்குக் கட்டுப்பட்டவராகச் சுயநினைவே இல்லாமல் அந்த ஆசனத்தில் போய் அமர்ந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் சாரதா தேவியைச் சாட்சாத் தேவியாகக் கொண்டு மற்றொருவரின்

துணையோடு வழக்கமாகக் காளிக்குச் செய்யும் பூஜையைச் செய்யத் துவங்கினார். இந்தப் பூஜையின்போது அன்னை சமாதியில் மூழ்கினார். ஸ்ரீராமகிருஷ்ணரும் பூஜையை முடித்த உடனே ஆழ்ந்த சமாதியில் மூழ்கினார். பூஜாரியும் பூஜிக்கப்பட்ட தேவதையும் மனமும் புலன்களும் கடந்த வெளியில் - ஆத்மாவில் ஒன்றுபட்டு நின்றனர். நேரம் கடந்தபடியே இருந்தது. நள்ளிரவில் குருதேவருக்கு ஓரளவு உலக நினைவு திரும்பியது. அதன் பிறகு குறிப்பிட்ட மந்திரங்களைச் சொல்லியபடி தாம் செய்த சாதனைகள் அனைத்தின் பலன்களையும், தம்முடைய ஜபமாலையையும் அன்னையின் திருவடியில் இட்டு நெடுஞ்சாண் கிடையாக வீழ்ந்து வணங்கினார்.

தாந்திரிக சாதனையில் சோடசி பூஜை என்று (பெண்ணைப் பூஜிப்பது) அழைக்கப்படும் இந்தப் பூஜையோடு இதுநாள்வரை தாம் தொடர்ந்து செய்து வந்த சாதனைகளை ஸ்ரீராமகிருஷ்ணர் முடித்துக் கொண்டார். இந்த வழிபாட்டின் மூலம் தாம் இதுவரை செய்துவந்த சாதனையின் பலன்கள் அனைத்தையும் சாரதையின் உருவத்தில் வழிபட்ட உலகநாயகியான அன்னை காளியிடம் ஸ்ரீராமகிருஷ்ணர் சமர்ப்பித்து விட்டார். உள்ளத் தெளிவு பெற்ற அவருடைய கண்களுக்கு உலகில் இருக்கும் ஒவ்வொரு பொருளும் கடவுளாகவே காட்சியளித்தது. அவருடைய ஆன்மிகப் பார்வைக்கு உருவமும் குணமும் அற்றுக் கண்களுக்குப் புலப்படாத பிரம்மமும் கண்களுக்குப் புலப்படும்படி நிற்கும் உலகமும் தெளிவாகத் தெரிந்தது. இதனால் உபநிஷதகால முனிவர்கள்போல் அவர், 'பெண்ணும் நீயே! ஆணும் நீயே! இளைஞனும் நீயே! இளம் பெண்ணும் நீயே! தடி ஊன்றித் தடுமாறும் கிழவனும் நீயே! நீயே உலகம்! நீயே உலகில் உள்ள உயிர்கள்' என்று கடவுளைக் கூறினார்.

தூய அன்னை சாரதாதேவியார், குருதேவரின் தெய்விக சன்னிதியில் மகிழ்ச்சியோடு தட்சிணேசுவரத்தில் வாழ்ந்து வந்தார். கீழ் வருவன அந்த நாட்களைப் பற்றிய அவருடைய நினைவு அலைகளாகும்:

"நான் பல்வேறு தெய்விக நிலைகளில் அவரைக் கண்டபோது எனக்கு ஏற்பட்ட பரவசத்தைக் கூற வார்த்தைகளே இல்லை. பலவித தெய்விக உணர்ச்சிகளில் ஆழ்ந்து மூழ்கியவராய் அவர் சில நேரங்களில் என்னால் புரிந்து கொள்ள முடியாதவைகளைப் பற்றிக் கூறுவார்; சில நேரங்களில் அழுவார்; சில நேரங்களில் சிரிப்பார்:

சில வேளைகளில் சிறிதுகூட அசைவில்லாமல் சமாதியில் ஆழ்ந்து விடுவார். இது இரவு முழுவதும் தொடர்ந்தபடியே இருக்கும். அப்போது வார்த்தைகளில் விளக்க முடியாத தெய்விக உணர்வு அவரிடத்தில் பொங்கி எழும். பயத்தாலும் ஆச்சரியத்தாலும் நடுங்கியபடியே எப்போது பொழுது விடியும் என்று நான் காத்துக் கொண்டிருப்பேன். அப்போது அவருடைய சமாதியையும் பாவ நிலைகளைப் பற்றியும் எனக்கு அதிகமாகத் தெரியாது. ஒரு நாள் நெடுநேரம் வரை சமாதி கலையாமல் அவர் உடம்பு விறைத்து உயிர் போய்விட்டதுபோல் தோன்றியது. நான் அழுது அலறித் துடித்து இருதயனை அழைத்து வரும்படிச் செய்தேன். இருதயன் வந்து அவர் காதில் சிறிது நேரம்வரை கடவுளின் பெயரைச் சொல்லியதும் அவர் சுயநினைவு பெற்றார். பிறகு நான் இவ்வாறு இரவெல்லாம் தூக்கமில்லாமல் வேதனைப்படுவதை அறிந்ததும், குருதேவர் இந்த அடையாளமுள்ள சமாதியில் மூழ்கினால் இந்த மந்திரங்களைத் தம் காதில் சொல்லும்படிக் கற்றுத் தந்தார். அதற்குப் பிறகு என்னுடைய பயம் குறைந்தது. குறிப்பிட்ட மந்திரத்தைக் கூறியதும் அவருக்கு நினைவு வந்துவிடும். இப்படியாக மாதங்கள் கழிந்தன. எந்த நிமிடத்திலும் சமாதியில் ஆழ்ந்துவிடும் அவருக்கு எப்போது சமாதி வந்துவிடுமோ, அது ஆழ்ந்து போய் உலக நினைவே இல்லாமல் போய்விடுமோ என்ற பயத்தில், அந்த நேரத்தில் குறிப்பிட்ட மந்திரத்தை அவர் காதில் ஓதி உடனே உலக நினைவை அவருக்கு உண்டாக்க வேண்டுமே என்ற கவலையில் நான் தூங்காமல் இரவு முழுவதும் அவரையே கவலையோடு பார்த்தபடி உட்கார்ந்திருப்பேன். இப்படி இரவெல்லாம் நான் தூங்காமல் இருப்பதை ஒரு நாள் அறிந்து கொண்டு. இரவில் என்னை நஹபத்தில் தம் தாயுடன் படுத்துக் கொள்ளும்படி அனுப்பிவிட்டார்.''

அந்த நாட்களில் குருதேவர் அன்னைக்கு விளக்கில் திரியை முறுக்கிப் போடுவது முதலான எல்லாக் குடும்ப வேலைகளைப் பற்றியும், அவருடைய குடும்பத்தில் பலவேறான மனிதர்களிடம் அவரவர்களுடைய இயல்புக்குத் தக்கவாறு எவ்வாறு பழக வேண்டும் என்பதையும், யாரையாவது பார்க்கச் செல்லும்போது எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதையும் சொல்லிக் கொடுத்தார். மேலும் மிக உயர்ந்த ஆன்மிக சாதனைகளான பிரார்த்தனை, ஜபம், தியானம், சமாதி, மற்றும் பிரம்மத்தைப் பற்றி

யும்கூட உபதேசித்ததாக அன்னையார் கூறியுள்ளார். சாதாரண மனிதனின் குடும்ப வாழ்விலிருந்து இந்தக் குடும்பம்தான் எவ்வளவு வித்தியாசமானது! இந்த இணையற்ற உதாரணத்தின் முன் ஒருவர் வியந்து மண்டியிட்டே ஆக வேண்டும்!

ஒரு நாள் சாரதாதேவி ஸ்ரீராமகிருஷ்ணரின் அறையில் அவருடைய கால்களைப் பிடித்துவிட்டுக் கொண்டிருந்த போது ஸ்ரீராமகிருஷ்ணரிடம், ''என்னை எப்படி நீங்கள் கருதுகிறீர்கள்?'' என்று கேட்டார். ஸ்ரீராமகிருஷ்ணரும் ஒரு நொடிகூடத் தயங்காமல், சாரதாதேவியைப் பார்த்து, ''இந்தக் கோயிலில் எந்தக் காளி வணங்கப்படுகிறாளோ, இந்த உடம்பைப் (தம்மை) பெற்றெடுத்த எந்தத் தாய் இப்போது இங்கு நஹபத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறாளோ அவளேதான் இப்போது என் கால்களைப் பிடித்துவிட்டுக் கொண்டிருக்கிறாள். நான் உன்னை எப்போதும் ஆனந்த மயமான காளியாகவே கண்டு வருகிறேன்'' என்றார்.

ஒரு நாள் இரவு சாரதாதேவி ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்கத்தில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் எழுந்து உட்கார்ந்தார். உறங்கும் தம் இளம் மனைவியைப் பார்த்தபடி தம் மனத்திடம் சொல்ல ஆரம்பித்தார்: ''மனமே, எல்லோரும் இன்பமயமானது, இன்பமயமானது என்று சொல்லும் பெண்ணின் உடல் இதோ உன் பக்கத்தில் இருக்கிறது. இதில் யார் இன்பம் காண்கிறார்களோ அவர்கள் இந்த உடம்பின் சுகத்தோடு சுருண்டுப் போவார்களே தவிர அவர்களால் கடவுளைக் காண முடியாது. உண்மையாக - வெளிப்படையாகச் சொல். உனக்கு இந்த உடம்பு வேண்டுமா? கடவுள் வேண்டுமா? உடம்புதான் வேண்டுமென்றால் இதோ அது இங்கேயே இருக்கிறது. இதை அனுபவிப்பதற்குத் தடையேதும் இல்லை. இது உனக்குச் சொந்தமானது.'' இவ்வாறு சொல்லியபடியே அன்னையைத் தொடுவதற்காக மெல்லக் கைகளை நீட்டினார். தொடப்போகும் முன் தூய்மையில் ஊறி, தூய்மையே வடிவாகி, தூய்மையாக ஆகிவிட்ட அவரது கை அப்படியே நின்றுவிட்டது. உடம்பு விறைத்து விட்டது. மூச்சு நின்றுவிட்டது. ஆழ்ந்த, மிக ஆழ்ந்த சமாதியில் மூழ்கிவிட்டார். இரவு முழுவதும் அப்படியே அவர் உடல் விறைத்துப் போய் நீட்டிய கை நீட்டியபடியே கிடந்தது. விடிந்து வெகு நேரமாகியும் நினைவு

திரும்பவில்லை. மிகுந்த சிரமப்பட்டு....எவ்வளவோ முயற்சிகள் செய்த பிறகே - திரும்பத் திரும்ப மந்திரத்தை அவர் காதுகளில் ஓதிய பிறகே அவருக்கு உலக நினைவு திரும்பியது.

இப்படி மாதங்கள் கழிந்து கொண்டே இருந்தன. இந்தத் தெய்விகத் தம்பதிகளின் மனம் ஒரு நாள்கூடத் தெய்விக நிலையிலிருந்து உலக நிலைக்குக் கீழ் இறங்கி வரவே இல்லை. ஏனென்றால் இருவருடைய மனமும் கங்கு கரையற்ற பிரம்மத்தில் ஆழ்ந்துவிட்டதுதான் காரணம். இந்தக் காலத்தில் சாரதாதேவியிடம் வெளிப்பட்ட தெய்விகத் தன்மையைப் பற்றிப் பேசும்போது ஸ்ரீராமகிருஷ்ணர், ''திருமணமான பிறகு அன்னை காளியிடம் நான் என் மனைவியின் மனத்திலிருந்து உடலின்பத்தைப் பற்றிய எல்லா நினைவுகளையும் களைந்து எறியும்படிப் பிரார்த்தனை செய்து வந்தேன். என்னுடைய இந்தப் பிரார்த்தனையை அன்னை எந்த அளவிற்கு ஏற்றுக் கொண்டார் என்பதை நான் அவளோடு வாழ்ந்த இந்த இரவுகளில் கண்டு கொண்டேன்.'' என்று கூறியுள்ளார்.

அன்னை சாரதாதேவி ஓராண்டுக்கு மேல் தம்மோடு நெருக்கமாக வாழ்ந்து இரவில் ஒரே படுக்கையில் படுத்திருந்தபோதும் ஸ்ரீராமகிருஷ்ணர் மனத்தில் உடலின்பம் பற்றிய நினைவே எழவில்லை. சாரதாதேவியைச் சில நேரங்களில் அன்னை காளியாகவும், சில நேரங்களில் ஆத்மாவாகவும், சில நேரங்களில் பிரம்மமாகவும் அவர் கண்டார். அன்னை காளி தன் எல்லையற்ற கருணையால் இந்தக் கடும் சோதனையை வெற்றிகரமாகக் கடக்கும்படிச் செய்தாள் என்பதைக் குருதேவர் தெளிவாக அறிந்து கொண்டார். ஏனென்றால் இந்த நாட்களில் சுய முயற்சி சிறிதும் இல்லாமல் அவர் மனம் முற்றிலும் மிக உயர்ந்த நிலையிலேயே இருந்து வந்தது.

சாரதாதேவி ஒரு வருடமும் எட்டு மாதங்களும் தம் கணவரோடு தங்கிய பிறகு 1873-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் கமார்புகூர் திரும்பினர்.

## 26. சாதனைகளின் நிறைவு

அன்னை சாரதாதேவியார் கமார்புகூர் சென்ற பிறகு கல் கத்தாவில் வாழ்ந்த சம்புசரண்மல்லிக் என்பவரின் துணையோடு குருதேவர் கிறித்துவ சமயம் மூலம் கடவுளைக் காண முடிவு செய்தார். சம்புசரண் மற்ற இந்து சாஸ்திரங்களில் புலமை பெற்றிருந்தது போலவே பைபிளிலும் புலமை பெற்றிருந் தார். சம்பு தரும குணத்திற்குப் பெயர் பெற்றவர். அவருடைய மாளிகை காளி கோயில் தோட் டத்தை ஒட்டியிருந்தது. அங்கு ஸ்ரீராமகிருஷ்ணர் அடிக்கடி செல்வது வழக்கம். சம்பு ஸ்ரீராமகிருஷ்ணரோடு நெருங்கிப் பழக ஆரம்பித்ததும் அவரிடம் உண்மையான பக்தி கொண்டு பெரும் மதிப்போடு அவரைப் போற்றினார். மதுரின் மரணத்திற்குப் பிறகு ஸ்ரீராமகிருஷ்ணரின் தேவை கள் அனைத்தையும் நிறைவேற்றும் பணியை மிகுந்த மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணரை எப்போதும் 'குருஜீ' என்றே அழைப்பார். அவர் எப் போதும் அப்படி அழைப்பதைக் கண்ட குருதேவர் சில நேரங்களில் எரிச்சலுடன், ''யாருக்கு யார் குரு? நீதான் என் குரு'' என்று கூறுவார். ஆனால் சம்பு இதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படுவதில்லை. தம் இறுதிக் காலம் வரை அவர் ஸ்ரீராமகிருஷ்ணரை அப்படியே அழைத்து வந்தார்.

சம்பு கிறித்துவர் இல்லையென்றாலும் பைபிள் படிப் பார். குருதேவர் அதை மிகுந்த ஆர்வத்தோடு கேட்பார். அதன் மூலம் கிறித்துவைப் பற்றியும் கிறித்துவ சமயத் தைப் பற்றியும் அறிந்து கொண்டார். அதனால் கிறித்துவ சமயத்தைப் பின்பற்றிக் கடவுளைக் காணும் ஆசை அவர் மனத்தில் எழுந்தது. அன்னை காளியின் கருணையால் எந்தவிதச் சிரமும் இன்றி ஸ்ரீராமகிருஷ்ணர் ஏசுநாதரின் காட்சியைப் பெற்றார். ஒரு நாள் அவர் தட்சிணேசுவரத்தில் இருந்த யதுநாத் மல்லிக்கின் வீட்டிற்குச் சென் றிருந்தார். அங்கு வரவேற்பு அறையில் அழகான பல படங்கள் சுவரில் மாட்டப்பட்டிருந்தன. அவைகளில் ஒன்று குழந்தை ஏசு மேரியுடன் இருக்கும் படம். அந்தப் படத்தை உற்றுப் பார்த்தபடியே ஏசுவின் அற்புதமான

வாழ்க்கையில் ஆழ்ந்தவராய் சிந்தனையில் மூழ்கியிருந்தார். அப்போது அந்தப் படம் உயிர் பெற்று எழுவதை அவர் உணர்ந்தார். மேரியின் உருவத்திலிருந்தும் ஏசுவின் உருவத்திலிருந்தும் ஒளிக் கதிர்கள் எழுந்து அவருள் புகுந்தன. மூன்று நாட்கள்வரை இரவும் பகலும் இதே நினைவுகள் அவர் மனத்தை மூடிக் கிடந்தன. நான்காம் நாள் காலையில் பஞ்சவடியில் நடந்து கொண்டிருந்தார். அப்போது ஓர் அதிசயமான காட்சியைக் கண்டார். ஆச்சரியப்படத் தக்க அமைதியே வடிவான ஒரு மனித உருவம் தம்மையே உற்றுப் பார்த்தபடி தம்மை நோக்கி வருவதைக் கண்டார். அவர் வெளிநாட்டைச் சேர்ந்தவர் என்பது பார்த்த உடனே தெரிந்தது, அவருடைய கண்கள் மிக அழகாக இருந்தன. மூக்கு சிறிது தட்டையாக இருந்தும் அது எந்த விதத்திலும் அந்த முகத்தின் ஆழ்ந்த அமைதியையும் அழகையும் குலைக்கவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் அந்த வடிவத்தால் மிகவும் கவரப்பட்டவராய் அவர் யாராக இருக்கும் என்று ஆச்சரியத்தோடு சிந்தித்தார். அந்த நேரத்தில் அந்த வடிவம் அவர் அருகே நெருங்கி வந்து ஸ்ரீராமகிருஷ்ணரைத் தழுவி அவருள் கலந்து விட்டது. குருதேவர் குணம் உருவத்தோடு கூடிய பிரம்மத்தில் ஆழ்ந்தவராய் உலக நினைவற்றுச் சமாதியின் மூழ்கிவிட்டார். பிறகு நெடுநேரம் கழித்து அவருக்கு உலக நினைவு திரும்பியது. இந்தக் காட்சி, ஏசுவும் கடவுள் அவதாரமே என்ற நம்பிக்கையை ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அளித்தது.

மற்றொரு பெரிய சமயத்தை உருவாக்கிய புத்தரைப் பற்றிய ஸ்ரீராமகிருஷ்ணரின் அபிப்பிராயத்தை இங்கே தெரிந்து கொள்ளுவதும் பொருத்தமாகும். பொதுவான இந்து சமயக் கருத்துப்படி புத்தர் ஓர் அவதார புருஷர் என்பதே குருதேவரின் கருத்துமாகும். அவர் உண்மையான பக்தியோடு புத்தரை வழிபட்டார். பூரி ஜகந்நாதர் கோயிலில் இன்று வழிபட்டுவரும் மூன்று தெய்வங்களில் ஒருவர் புத்தர் என்பதே அவருடைய கருத்தாகும். பூரி ஜகந்நாதரின் பிரசாதத்தில் குருதேவருக்கு மிகுந்த மதிப்பிருந்தது. கங்கையைப் போலவே அதுவும் உண்பவர்களை மிகுந்த தூய்மையாக்குவது என்று உறுதியாக நம்பினார். பூரி ஜகந்நாதர் கோயிலில் எல்லாச் சமயத்தவரிடமும் காட்டப்படும் மதிப்பையும் அன்பையும் அறிந்து ஒரு முறை அங்கே செல்ல விரும்பினார். ஆனால் அவதார

புருஷராகிய ஸ்ரீ சைதன்யர் அங்கு வாழ்ந்து மறைந்த தால், தாம் அங்குச் சென்றதும் அவருடைய நினைவில் ஆழ்ந்துபோய் மனம் மிக வேகமாக இழுக்கப்பட்டு உயிர் உடலைவிட்டுப் பிரிந்துவிடும் என்பதால் அங்கே போவதைத் தவிர்த்தார். மற்றொரு முறை, ''புத்தர் கடவுளின் அவ தாரம் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. அவருடைய உபதேசங்களுக்கும் வேதத்தின் ஞான காண்டத்தில் கூறப்படும் உபதேசங்களுக்கும் வித்தியாசமே இல்லை'' என்று அவர் கூறியுள்ளார். இந்தக் கருத்துக்களையெல்லாம் அவர் தம்முடைய அளவற்ற ஆன்மிக அனுபூதியால் உணர்ந்தே கூறியுள்ளார் என்பதை உறுதியாக நம்பலாம்.

தம் வாழ்வின் பிற்காலத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் சமண சமயத்தைப் பற்றியும் அதை உண்டாக்கிய தீர்த்தங்கரர் களைப் பற்றியும், சீக்கிய சமயம் பற்றியும் அதனுடைய பத்து குருமார்களைப் பற்றியும் அந்தந்த சமய அறிஞர் களிடம் மிக அதிகமாகக் கேட்டு அறிந்தார். அவர் களிடமும் மிகுந்த மரியாதை வைத்திருந்தார். தட்சிணேசு வரத்தில் அவருடைய அறையில் தீர்த்தங்கரரான மகாவீரரின் சிறிய திருவுருவம் ஒன்றும் பல சமயப் பெரியவர்களின் படங்களும் மாட்டப்பட்டிருந்தன. காலையிலும் மாலையிலும் அதற்குச் சாம்பிராணி முதலான தூபங்கள் காட்டப் பட்டன. ஆனால் அவர் தீர்த்தங்கரர்களையோ அல்லது சீக்கிய குருமார்களையோ அவதார புருஷர்கள் என்று சொல்லி யாரும் கேட்டதில்லை. சீக்கிய குருமார் களைப் பற்றி அவர் சொல்லும்போது ''அவர்கள் எல்லோரும் ஜனக மன்னரின் அவதாரங்கள். ஜனகர் உடலை நீத்து, பிரம்மத்தோடு இணைவதற்கு முன் உலகத் திற்கு நன்மை செய்ய வேண்டும் என்ற எண்ணம் அவருக் குத் தோன்றியதாகவும், அதனால் அவரே அடுத்து அடுத்து பத்துத் தடவைகள் சீக்கிய குருக்களாகத் தோன்றிய தாகவும் சீக்கிய சமயத்தை நிறுவித் தம் ஆசையைப் பூர்த்தி செய்து கொண்டதும் அவர் பிரம்மத்தோடு சென்று இணைந்துவிட்டதாகவும் சீக்கிய சமய அறிஞர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். இதில் சந்தேகப்படுவதற்கு எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை'' என்று கூறியுள்ளார்.

பல வழிகளிலும் சாதனைகள் செய்து அவை அனைத் தின் மூலமும் ஒரே கடவுளைக் கண்டறிந்து அதே நினைவில் அவர் வாழும்போது எதிர்காலத்தைத் தம் உள்ளுணர்வால்

அறிந்துகொள்ளும் அற்புத ஆற்றல் அவருக்கு உண்டா கியது. அதன் காரணமாகத் தம்மைப் பற்றியும். மற்ற வர்களுடைய பொதுவான தெய்விக ஆற்றலைப் பற்றியும் அறிந்து கொண்டார். இவைகள் எல்லாம் மனிதனின் ஆராய்ச்சியைக் கடந்த உணர்வு நிலையிலேயே அவரால் காணப்பட்டன என்றாலும் நாம் அறிந்து கொள்ளும் வகையில் அதைப் பற்றிக் காண்போம்.

அவர் கீழ்வருமாறு தம்மைப் பற்றி அறிந்துகொண்டார்:

முதலாவதாக தாம் கடவுள் அவதாரம்; அதிலும் தாம் அடைந்திருக்கும் ஆன்மிகச் சொத்தால் உலக மக்களுக்கு நன்மை செய்ய விசேஷ அதிகாரம் கொடுக்கப் பட்டவர் என்பதாகும். தம் சொந்த வாழ்க்கையை மற்ற மகான்களின் வாழ்க்கையோடு ஒப்பிட்டு இரண்டிற்கும் உள்ள வேறுபாடு மலைக்கும் மடுவுக்கும் உள்ளதைப் போன்றது என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொண்டார். சாதாரண மகான்கள் வாழ்நாள் முழுவதும் சாதனை செய்து இறுதியாக ஒரே ஒரு வழியில் கடவுளைக் கண்டு அதோடு திருப்தி அடைந்துவிட்டார்கள். ஆனால் தாமோ எத்தனை வழிகளில் கடவுளைக் காணமுடியுமோ அத்தனை வழிகளிலும் கடவுளைக் காணும்வரை திருப்தி அடையவே இல்லை. அப்படிக் காண்பதும் மிகக் குறுகிய காலத்தி லேயே முடிந்துவிட்டது. இது மற்றவர்களிடம் இல்லாத தனித்த ஏதோ சில ஆற்றல்கள் தம்மிடம் இருந்ததால் மட்டும் முடிந்தது என்பதை அவர் உணர்ந்தார். இதுவே அவரை மற்றவர்களிடமிருந்து தாம் தனிப்பட்டவர், சிறந்தவர் என்று கட்டாயமாக நம்பும்படிச் செய்தது. தாம் செய்த அமானுஷ்யமான முயற்சிகளும் தவங்களும் கண்ட காட்சிகளும் அதன் மூலம் சேர்க்கப்பட்ட ஆன்மிகச் சொத் தும் தம் தனிப்பட்ட இன்பத்துக்காக அல்ல என்பதையும் மனித சமுதாயம் ஆன்மிக மறுமலர்ச்சி அடைய எதிராக நிற்கும் தடைகளை அகற்ற வழியைக் காட்டி ஒரு புதிய வரலாற்றைப் படைப்பதற்காகவே என்பதையும் அறிந்தார்.

இரண்டாவது, தாம் மற்ற மனிதர்கள்போல் கர்மவினைகளுக்கு உட்பட்டுப் பிறந்தவர் அல்ல; சுதந்தரமான ஆத்மா என்பதை அவர் எப்போதும் அறிந்தவராக இருந் தார். தாம் செய்த பல்வேறு கடுமையான சாதனைகளும் உண்மையில் தமக்கு அவசியமான ஒன்று அல்ல; மற்றவர் களுக்காகவேதான் என்பதை இப்போது உணர்ந்தார். எனவே முக்தி அல்லது விடுதலை என்பதெல்லாம் தமக்குப்

பொருந்தக் கூடியதல்ல என்று நினைத்தார். மற்றொரு கோணத்தில் பார்த்தால் இந்த உலகத்தின் தளைகளில் கட்டுண்ட மனிதர்கள் இருக்கும்வரை அவதார புருஷர்கள் தோன்றி அவர்களின் விடுதலைக்கு வழிகாட்டியாக வேண்டும். அந்த நிலையில், தாம் மீண்டும் மீண்டும் வர வேண்டி யிருக்கும் என்பதால் தம்மைப் பொறுத்தவரை முக்தி தமக்குக் கிடையாது என்பதை அறிந்தார். இதைக் குறித்து அவர் சொல்லும்பொழுது, ''ஒரு ஜமீன்தா ருடைய அதிகாரி, அவருடைய ஜமீனில் எங்கெங்கு தொந்தரவு இருக்கிறதோ அங்கெல்லாம் ஓட வேண்டும் என்பது போன்றது அவதார புருஷரின் வேலை'' என்று கூறியுள்ளார். தம் சீடர்களிடம் அவர் அடுத்த முறை தாம் வடமேற்கில் (கைகளால் அத்திசையை சுட்டிக் காட்டி) தோன்றப் போவதாகக் கூறுவது வழக்கம். அவ ருடைய சீடர்களில் ஒருவரும் புகழ்பெற்ற வங்காள நாடக ஆசிரியருமான கிரீஷ் சந்திரகோஷ் இது நடக்கப் போவதைப் பற்றிக் குறிப்பாக, ''இருநூறு ஆண்டுகளுக்குப் பிறகு நான் அங்கு தோன்றுவேன். அப்போது பலர் முக்தி பெறுவார்கள். அப்போதும் முக்தி பெறுதவர்கள் நெடுங் காலம் காத்திருக்க வேண்டும்'' என்று குருதேவர் தெரிவித்ததாகக் கூறியுள்ளார்.

மூன்றாவதாக, தாம் எப்போது மரணமடைவோம் என் பதையும் அவர் தெரிந்து கொண்டார். ஒரு நாள் பரவச நிலையில் இருந்தபோது இதை அவர் அன்னை சாரதாதேவி யிடம், ''பிராம்மணர் அல்லாதவர் தொட்ட உணவை நான் சாப்பிடுவதையும் கல்கத்தாவில் இரவு தங்குவதை யும், சாப்பிடுவதில் ஒரு பகுதியை மற்றொருவனுக்குக் கொடுத்துவிட்டு மீதியைச் சாப்பிடுவதையும் நீ எப்போது காண்கிறாயோ, அப்போது இந்த உடம்பிலிருந்து உயிர் பிரிவ தற்கான காலம் நெருங்கிவிட்டது என்பதைத் தெரிந்து கொள்'' என்றார். குருதேவர் இறப்பதற்குமுன் இந்த மூன்றும் வார்த்தைக்கு வார்த்தை அப்படியே நிறைவேறியது. மற்றொரு நாள் தட்சிணேசுவரத்தில் சாரதாதேவியிடம் ''என் இறுதிக் காலத்தில் நான் வெறும் கஞ்சியும் பாலும் மட்டுமே சாப்பிடுவேன்'' என்றார். இதுவும் அப்படியே நடந்தது.

பொதுவாக ஆன்மிகத்தைப் பற்றிக் கீழ்வருவன அவருடைய முடிவுகளாக இருந்தன.

முதலாவதாக, பல்வேறு சமயங்கள் மூலமாக அவர்

கடவுளைக் கண்டது, எல்லாச் சமயங்களும் அதன் கொள்கைகளும் கடவுளைக் காணும் பல பாதைகளே என்னும் உறுதியான நம்பிக்கையை அவருக்கு அளித்தது. இதை உலகிற்கு நிருபித்துக் காட்டியதே ஸ்ரீராமகிருஷ்ணருடைய அவதாரத்தின் சிறப்பான செய்தியாகத் தோன்றுகிறது. பல்வேறு சமயங்களையும் பின்பற்றி இந்த உண்மையை நடைமுறை வாயிலாக இதுவரையில் சரித்திர காலத்தில் நிருபித்தவர் ஸ்ரீராமகிருஷ்ணர் ஒருவரே. பெருமை என்பதற்கு எல்லைக்கல் உலகம் தழுவிய கொள்கை என்றால் அதற்கு முற்றிலும் உரியவர் ஸ்ரீராமகிருஷ்ணரே.

இரண்டாவதாக இதுவரையில் ஒன்றுக் கொன்று எதிரானதாகக் கருதப்பட்டு வந்த இந்து சமயத்தின் தத்துவங்களான துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் ஆகிய மூன்றும் மனிதன் கடவுளை அடைவதற்கான பல்வேறு வழிகள் என்பதை ஸ்ரீராமகிருஷ்ணர் தம் சாதனைகளின் மூலம் அறிந்தார். அவைகள் ஒன்றுக்கொன்று எதிரானதல்ல. பல்வேறு மனநிலைகளைக் கொண்ட மனிதர்களுக்குப் பொருத்தமான வகையில் ஒன்றுக்கொன்று துணையாக அமைந்தவைகளே என்பதையும் அறிந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் கண்டறிந்த இந்த உண்மை இந்து சமயத்தில் மிகச் சிறந்த நன்மையை ஏற்படுத்தியது. ஏனென்றால் இந்த மூன்று கொள்கைகளையும் ஒன்றுக்கொன்று வேறானதாகக் கொண்டு இந்த நாட்டில் சமய அறிஞர்கள் பெரும் சர்ச்சையிலும் சண்டையிலும் ஈடுபட்டிருந்தனர். இவைகளுக்குள் அமைந்துள்ள ஒற்றுமையைக் காணமுடியாத அவர்கள் தங்களுக்குப் பிடித்த ஒன்று மட்டுமே உயர்ந்தது என்று வாதிட்டு வெறியர்களாக மாறிவிட்டார்கள். எனவே தம்முடைய சொந்த அனுபவத்தின் மூலம் இந்த மூன்றையும் அறிந்து அதன் ஒற்றுமையை உணர்ந்து அதையொட்டி நாட்டில் எழுந்துள்ள தவறான கருத்தை நீக்க ஒரு தீர்க்கதரிசி தேவைப்பட்டார். அந்தத் தீர்க்கதரிசியாக ஸ்ரீராமகிருஷ்ணர் தோன்றினார். இந்த மூன்று சாதனைகளையும் பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் கீழ்வருமாறு கூறியுள்ளார்.

''அத்வைதம் ஆன்மிக அனுபவத்தின் கடைசி எல்லையாகும். இந்த அனுபவம் நினைவு, பேச்சு இரண்டையும் கடந்த ஒன்றாகையால் அதைச் சமாதி நிலையில் மட்டுமேதான் இதை உணர முடியும்.''

''விசிஷ்டாத்வைத அனுபவத்தை மனமும் அறிவும்

தெளிவாக உணரும். அதனை வார்த்தைகளிலும் விவரிக்க இயலும். இதன்படி பிரம்மமும் அதன் வெளிப்பாடான உலகங்களும் உண்மை. பகவான், அவரது திருநாமம், அவருடைய சிருஷ்டி ஆகிய மூன்றும் ஞான மயமான பொருளால் ஆனவை. உலகில் காணும் எல்லாமே கடவுள் மயம்தான். வேற்றுமைகள் எல்லாம் அவைகளின் வடிவங்களில்தாம். சாதாரண மனிதர்கள் உலகப் பொருள் களிடம் அதிக ஆசை கொண்டவர்களாதலால் அவர்களுக்குக் கீர்த்தனம், உருவ வழிபாடுகள் முதலிய வழிகளில் மட்டுமே பற்றுதல் ஏற்பட முடியும். துவைதம் அவைகளைக் கொண்டு அமைந்துள்ளது.''

செயல் புரிதல், செயல் புரியாதிருத்தல் பற்றி அவர் கூறும்போது, ''எந்த மனிதனின் மனம் முழுக்க முழுக்கத் தூய்மையாக இருக்கிறதோ அவனது மனம் செயல் களைக் கடந்து செல்கிறது. அவன் விரும்பினுல்கூட அவனுல் எந்தக் காரியமும் செய்ய முடியாது அல்லது கடவுள் அவனைக் காரியங்களைச் செய்யவிட மாட்டார். உதாரணமாகப் புதிதாகத் திருமணம் செய்த பெண் கர்ப்ப மாகிக் குழந்தை பெற்றெடுக்கும் நாள் நெருங்க நெருங்க அவளுக்குத் தரப்படும் வேலை சிறிது சிறிதாகக் குறைக்கப்படுகிறது. குழந்தை பிறந்தவுடனே வீட்டு வேலைகள் முழுவதும் அவளை விட்டு நீங்கிவிடும். குழந்தை யைப் பராமரிக்கும் வேலை ஒன்றே அவள் வேலையாகிவிடும். அது போன்றதுதான் தூய்மையே வடிவானவனின் நிலை. ஆனுல் சாதாரண மனிதன், வேலைக்காரி ஒருத்தி தன் எஜமானன் வீட்டில் எல்லா வேலைகளையும் தன் வேலையாக நினைத்துச் செய்வதுபோல் பற்றில்லாமல் தன் வேலைகளைச் செய்ய வேண்டும். வேலைக்காரி தான் வேலை செய்யும் வீட்டைத் தன் வீடு என்று கூறுகிறுள். ஆனுல் தன் வீடு இது இல்லை. வேறு இடத்தில் இருக்கிறது என்பது எப் போதும் அவளது நினைவிலிருக்கும். இதற்குத்தான் கர்ம யோகம் என்று பெயர். ஒருவர் அன்றுடம் தம் கடமை களைப் பற்றில்லாமல் செய்து கொண்டு முடிந்தவரையில் பகவான் பெயரை ஓதுவதையும் அவர்மீது தியானிப் பதையும் செய்ய வேண்டும்'' என்று கூறியுள்ளார்.

மூன்ருவதாக, தம் சாதனை மூலம் கண்ட உண்மை களைக் கொண்டு உலக மக்கள் அனைவரையும் தழுவிய இயக்கத்தை அன்னை காளி தம் மூலம் துவக்கப் போவதை ஸ்ரீராமகிருஷ்ணர் அறிந்தார்.

கடைசியாக, அவருடைய ஆழ்ந்த தெய்விக உள்நோக்கு, யாருக்கு இது கடைசிப் பிறவியோ-அதாவது யார் ஒரு முறையாவது கடவுளை உண்மையாக நினைக்கிறார்களோ அவர்கள் தம்மிடம் வருவார்கள் என்பதையும் அவருக்கு உணர்த்திற்று. இந்த வார்த்தைகளுக்கு வாசகர்கள் தங்கள் விருப்பத்தைப் பொறுத்து, பரந்து பட்ட பொருளான உலகம் முழுவதையும் தழுவிய அவருடைய இலட்சியத்தை ஏற்றுக் கொள்ளுவதைக் குறிப்பதாகவோ அல்லது அவரிடம் நேரே செல்வதைக் குறிப்பதாகவோ தங்கள் விருப்பப் படிப் பொருள் கொள்ளலாம்.

## 27. துயரங்கள்

இந்தக் காலத்தில் குருதேவரின் இரண்டாவது அண்ணனும் சட்டர்ஜி குடும்பத்தின் தலைவருமாகிய இராமேஸ்வர் கமார்புகூரில் காலமாகிவிட்டார். தட்சிணேசுவரக் காளி கோயில் பூசாரியாக இருந்த அவர் ஓய்விற்காக வீட்டிற்குச் சென்றார். அங்கே இரண்டு மகன்களையும் ஒரு மகளையும் விட்டுவிட்டுக் காலமானார். அவர் தட்சிணேசுவரத்தை விட்டுப் போகும்போது அவர் திரும்பி உயிரோடு வரமாட்டார் என்று குருதேவர் கூறினார். அதுபோலவே நடந்தது. தம் மரணம் பற்றி முன்பே குருதேவர் மூலம் அறிந்து கொண்ட இராமேஸ்வர் அதை எதிர்நோக்கித் தயாராகவே இருந்தார். அவருடைய விருப்பப்படி அவரது உடல் பூரி செல்லும் பாதையில் வைத்தே எரிக்கப்பட்டது. அதன் வழியாகச் செல்லும் பக்தர்களின் பாதங்கள் தம் சாம்பல்மீது பட்டுத் தமக்குப் புண்ணியம் கிடைக்கட்டும் என்று உயிர்விடுவதற்கு முன் இராமேஸ்வர் கூறியிருந்தார்.

இராமேஸ்வர் அரசனுக்குரிய பெரும் இதயம் படைத்திருந்தார். தம்மை நாடிப் பொருள் கேட்க வரும் எவருக்கும் ஏழைகளானாலும் சந்நியாசிகளானாலும் அவர் 'இல்லை' என்று சொன்னதே இல்லை. சில சமயங்களில் தம் வீட்டுச் சமையல் பாத்திரங்களைக்கூட எடுத்துக் கொடுத்துவிடுவார். யார் மற்றவர்களின் நலனுக்காகப் பாடுபடுகிறார்களோ அவர்கள் தேவையை பகவான் கவனித்துக் கொள்கிறார் என்பதில் அவருக்கு அளவற்ற நம்பிக்கை இருந்தது. அவருடைய மரணத்துக்காக அனைவரும் வருந்தினார்கள். அவர் செய்து வந்த காளி கோயில் பூசாரி வேலைக்கு அவரது மகன் இராம்லால் நியமிக்கப்பட்டான்.

இராமேஸ்வரின் மரணச் செய்தி தட்சிணேசுவரத்தில் எட்டியதும் ஸ்ரீராமகிருஷ்ணர் அங்குத் தம்மோடு வாழ்ந்து வந்த தம் வயதான தாய் சந்திரமணியைக் குறித்து மிகுந்த கவலைப்பட்டார். சந்திரா தேவிக்கு மிகவும் வயதாகிவிட்டது. அதோடு அவர் பல்வேறு மரணங்களைக் கண்டு வாழ்க்கையில் மிகுந்த வேதனைப்பட்டவர். மகன் இரா

மேஸ்வரின் மரணம் அவருக்குப் பெரிய அதிர்ச்சியாக இருக்கும் என்று குருதேவர் நினைத்தார். எனவே அன்னை காளியிடம் தம் தாயை இந்தத் துயரத்திலிருந்து காப்பாற்றும்படிப் பிரார்த்தனை செய்தார். அதன் பிறகு கண்களில் வழியும் நீரோடு சென்று தம் தாயிடம் செய்தியைக் கூறினார். அதைக் கேட்டதும் சந்திராதேவி மிகச் சாதாரணமாக, ''இந்த உலகம் நிலையில்லாதது. எல்லோரும் ஒரு நாள் இறந்துதான் ஆக வேண்டும். எனவே இதற்கு அழுவது பயனில்லாதது'' என்று கூறினார். இதைக் கேட்டு ஸ்ரீராமகிருஷ்ணர் ஆச்சரியப்பட்டார். அன்னை காளி பிரார்த்தனையை ஏற்று, தம் தாயின் மனத்தை மிக உயர்ந்த நிலைக்கு உயர்த்தி இந்தப் பெருந்துயரைச் சாதாரணமாக எடுத்துக் கொள்ளச் செய்ததற்காக அவளுக்கு மீண்டும் மீண்டும் நன்றி செலுத்தினார்.

தூய அன்னை சாரதாதேவி 1874-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் இரண்டாவது முறையாக தட்சிணேசுவரம் வந்தார். கிரகணத்தின்போது கல்கத்தாவில் கங்கையில் நீராட வந்த கிராமத்துப் பெண்களோடு இந்த முறை அவர் புறப்பட்டு வந்தார். அவர்களைப்போல இவரால் வேகமாக நடக்க முடியாததால் பின் தங்கியே நடந்து வந்தார். எவ்வளவு முயன்றும் அவர்களோடு தம்மால் நடக்க முடியாததை உணர்ந்த சாரதை, அவர்களை வேகமாக நடந்து வழியில் உள்ள தாராகேசுவரம் என்னும் ஊருக்குச் சென்று தங்கும்படியும் தாம் வந்து சேர்ந்து கொள்வதாகவும் கூறினார். அவர்களும் அப்படியே சென்று விட்டனர். வழியோ வழிப்பறிக் கொள்ளையர்கள் நிறைந்த காட்டு வழியாக இருந்தது. அன்னையார் எவ்வளவு வேகமாக நடக்க முயன்றும் முடியவில்லை. மாலை மறைந்து இரவு வந்துவிட்டது. வழியும் தெரியாமல் நடக்கவும் முடியாமல் துணையுமில்லாமல் என்ன செய்வதென்று திகைத்தார்.

அந்த நேரத்தில் கறுத்த நிறமுள்ள உயரமான ஒரு மனிதன் கையில் பெரிய தடியைப் பிடித்தபடி வேகமாகத் தம்மை நோக்கி விரைந்து வருவதைக் கண்டார். வருகின்ற மனிதன் கொள்ளைக்காரன் என்று முதலில் அச்சத்தால் நடுங்கிய அன்னையார் பிறகு தைரியமடைந்தவராய் அவனை அன்போடு, 'அப்பா' என்று அழைத்துத் தாம் தட்சிணேசுவரம் போகவேண்டும் என்பதையும் நடக்க முடியாமல் இருட்டில் தடுமாறுவதையும்

விளக்கிக் கூறி, அவனை உதவி செய்யும்படியும் வேண்டினார். இதற்குள் அந்தக் கறுத்த மனிதனின் பின்னே வந்த அவனுடைய மனைவியும் அங்கு வந்து சேர்ந்தாள். அவளைக் கண்டதும் அன்னையார் தம் சொந்தத் தாயைக் கண்டதைப் போல் பாசத்தோடு 'அம்மா' என்று அவளது கைகளைப் பிடித்துக் கொண்டு தம் கஷ்டநிலையை எடுத்துக் கூறி, "நல்ல வேளை நீங்களும் அப்பாவும் வந்தீர்கள். இல்லையென்றால் நான் இந்தக் காட்டு வழியில் என்ன ஆகி இருப்பேனோ? உங்கள் மருமகன் தட்சிணேசுவரக் காளி கோயிலில் இருக்கிறார். அங்கே என்னை அழைத்துச் செல்லுங்கள்'' என்றார்.

அன்னையின் அச்சம் சிறிதும் இல்லாத, கள்ளங்கபடமற்ற, பாசம் மிகுந்த அவ் வார்த்தைகள் அந்தக் கொள்ளைக்காரத் தம்பதியர் மனத்தை உருக்கிவிட்டன. அவருக்குப் பாதுகாப்பு அளித்ததுடன் அருகில் இருந்த கடைக்கும் துணையாகச் சென்று, பசி தீர உணவு வாங்கித் தந்தார்கள். அங்கேயே இரவு உறங்கச் செய்து மறுநாள் காலையில் தாரகேசுவரம் அழைத்துச் சென்று அங்கே தங்கியிருந்த கிராமத்துப் பெண்களோடு சேர்த்துவிட்டனர். அவர்கள் காட்டிய அன்புக்கும், பாசத்திற்கும் அன்னையார் மிகுந்த நன்றி சொல்லி அவர்களை வணங்கி அவசியம் தட்சிணேசுவரம் வரும்படிக் கேட்டுக் கொண்டு மற்றவர்களோடு புறப்பட்டார். தட்சிணேசுவரம் வருவதாகக் கூறிய அந்தத் தம்பதிகள் தாங்கள் சொல்லியது போலவே பலமுறை தட்சிணேசுவரம் வந்து அன்னையையும் குருதேவரையும் பார்த்துவிட்டுச் சென்றார்கள். குருதேவர் அவர்களை மிகுந்த அன்போடும் கனிவோடும் நடத்தி அவர்களுக்குப் பல பரிசுகளும் கொடுத்தார்.

அன்னையார் தட்சிணேசுவரத்தில் நஹபத்தில் சந்திரா தேவியுடன் வாழ்ந்தார். அந்த அறை மிகவும் சிறியது. இரண்டு பேர் இருக்கப் போதவே இல்லை. குருதேவரின் பக்தரான சம்பு சரண் மற்றொரு பக்தரான கேப்டன் விசுவநாத் என்பவர் கொடுத்த மரங்களைக் கொண்டு காளி கோயிலின் அருகே அன்னையார் வசிக்க வீடு ஒன்று கட்டினார். அன்னையார் ஒரு வேலைக்காரியின் துணையோடு அங்கே வசிக்கத் துவங்கினார். தினமும் ஸ்ரீராமகிருஷ்ணருக்கான உணவை அங்கே சமைத்து அதை அவருடைய அறைக்குக் கொண்டு வருவார். குருதேவரும் தினந்தோறும் அங்கு சென்று சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு வருவார். ஒருமுறை அவர் அங்கே சென்றிருந்தபோது

பயங்கரமான மழை பிடித்துக் கொண்டது. கோயிலுக்குத் திரும்ப முடியாததால் இரவு அங்கேயே தங்கினர். 1875-ஆம் ஆண்டு செப்டம்பரில் தமக்கு ஏற்பட்ட கொடிய பேதி நோயின் காரணமாக அன்னையார் ஜயராம்பாடி திரும்பினர். சிறிது நாட்களுக்குப் பிறகு இரண்டாவது முறையாக அந்த நோய் அவரைத் தாக்கியது. அவருடைய நிலை மிகுந்த கவலைக் கிடமாகியது. இதைக் கேட்டதும் ஸ்ரீராமகிருஷ்ணர் அளவற்ற வருத்தத்தோடு இருதயனிடம் ''இருதய்! தான் பிறந்த இலட்சியத்தை அடையாமலே அவள் இறந்து விடுவாளோ!'' என்று துயரத்துடன் கூறினர். நோய் பொறுக்க முடியாத நிலையில் தம் தம்பியின் ஆலோசனைப்படி சாரதா தேவி அந்தக் கிராமத்தில் இருந்த சிம்மவாஹினியின் கோயிலுக்குச் சென்றார். தம்மை நோயிலிருந்து காப்பாற்றும் படித் தேவியிடம் வேண்டியபடியே உணவில்லாமல் உயிரைப் போக்கிக் கொள்ளும் முடிவோடு அங்கே விழுந்து கிடந்தார். நெடுநேரம் கழிந்தது. அவரிடமும் அவர் தாயாரிடமும் அந்த நோய் குணமடைவதற்கான மருந்தைத் தேவியே கனவில் வந்து கூறினள். அந்த மருந்தைச் சாப்பிட் டதும், சில நாட்களில் அன்னையார் குணமடைந்தார்.

சாரதா தேவியார் தட்சிணேசுவரத்திலிருந்து புறப்பட்ட சில மாதங்களுக்குள் காளி கோயிலில் மிக முக்கியமான நிகழ்ச்சி ஒன்று நடந்தது. 1876-ஆம் ஆண்டு ஸ்ரீராமகிருஷ் ணரின் நாற்பதாவது பிறந்த நாளன்று அவரது அன்னை சந்திராதேவி காலமாகி விட்டார். அவர் இறக்கும் போது மிகவும் வயதாகிவிட்டது. நினைவாற்றலும் உடல் வலிமையும் போய்விட்டன. ஆன்மிக சக்தி மட்டுமே அவரிடம் எப்போதும் போல் இருந்தது. அவருடைய மரணத்தைப் பற்றிக் கீழ்க்காணும் விவரத்தை இருதயன் கூறியுள்ளான்: ஒரு நாள் இருதயன் நெடுந்தொலை வில் இருந்த தன் சொந்த கிராமத்திற்குப் புறப் பட்டான். ஆனல் புறப்பட முடியவில்லை. தயக்கம் ஏற்பட்டது. ஏதோ ஒரு விபரீத சம்பவம் நடக்க இருப் பதுபோல் தோன்றியது. அதுபற்றி ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கூறினன். அவர் போக வேண்டாம் என்று தடுத்துவிட் டார். மூன்று நாட்கள் அமைதியாகக் கழிந்தன. ஒவ்வொரு நாளும் ஸ்ரீராமகிருஷ்ணர் தம் தாயிடம் சென்று கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருப்பார். அவருடைய உடல் நலத் தையும், தேவைகளையும் விசாரிப்பார். நான்காவது நாள்

மாலை குருதேவர் வழக்கம்போல் தம் தாயிடம் சென்றார். நடு இரவுவரை அவருடன் இருந்துவிட்டுத் திரும்பினார். அப்போது சந்திரா தேவி நன்றாகவே இருந்தார்.

மறுநாள் காலை அவருடைய அறைக் கதவு காலை எட்டு மணி ஆகியும் திறக்கவில்லை. விடியற் காலையிலேயே எழுந்து விடும் பழக்கமுள்ளவர் அவர். வேலைக்காரி கதவைத் தட்டிப் பார்த்தாள். பதில் ஒன்றும் இல்லை. காதைக் கதவின்மேல் வைத்துப் பார்த்தவளுக்கு உள்ளே 'கொர்... கொர்' என்று மூச்சுவிடும் சப்தம் கேட்டது. அவள் ஓடிப் போய் ஸ்ரீராமகிருஷ்ணரிடமும் இருதயனிடமும் கூறினாள். இருதயன் வேகமாக ஓடிவந்து மிகவும் முயன்று கதவைத் திறந்தான். உள்ளே படுக்கையில் சந்திரா தேவி நினைவற்றுக் கிடந்தார். மிக மிகக் குறைவான அளவு பாலும் கங்கை நீருமே அவரை மூன்று நாட்கள் உயிரோடு வைத்திருந்தன. இறுதிவேளை நெருங்கியதும் அவர் கங்கைக்குத் தூக்கிச் செல்லப்பட்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் அவர் காலடியில் மலரிட்டு வணங்கினார். அந்தத் தாயின் உயிர் அமைதியாக உடலை விட்டுப் பிரிந்தது. அத்வைத சாதனை பழகும் போது சந்நியாசியாகிவிட்டதால் ஸ்ரீராமகிருஷ்ணர் தாயின் இறுதிச் சடங்கையோ அல்லது சிராத்தச் சடங்கையோ செய்ய முடியவில்லை. அண்ணன் மகன் இராம்லாலே அவைகளைச் செய்தான். குறைந்தபட்சம் தன் தாய்க்காகத் தர்ப்பணம் செய்யலாம் என்று தண்ணீரைக் கையிலெடுத்தார். கைகள் தாமாகவே பிரிந்து தண்ணீர் கைகளிலிருந்து கீழே ஒழுகியது. மகன் தன் தாய்க்குச் செய்யக் கூடிய அந்த இறுதிச் சடங்கை எவ்வளவோ முயன்றும் அவரால் செய்ய முடியவில்லை. மனம்கொண்ட மட்டும் தாயை நினைத்து அழுதார். சாஸ்திரங்களில் ஆழ்ந்த பயிற்சி உள்ள ஒருவர் 'ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் தெய்விக நிலையை அடைந்தவர்களால் சாதாரண மனிதர்கள்போல் இந்தச் சடங்குகளை எல்லாம் செய்ய முடியாது என்று சொல்வதைக் கேட்ட பிறகே குருதேவர், அமைதி அடைந்தார்

இந்த நேரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரிடத்தில் மிகுந்த அன்புடையவராகவும் அவருடைய தேவைகளைக் கவனித்துக் கொள்பவராகவும் இருந்த சம்புசரண் மல்லிக் சர்க்கரை வியாதியால் காலமானார். அதன் பிறகு கணவருக்கு ஏற்ற பதிவிரதையான அவரது மனைவி குருதேவருக்கும் சாரதா தேவிக்கும் மிகுந்த அன்புடன் சேவை செய்தார்.

குருதேவர் சம்புசரணை அவருடைய மரணப் படுக்கையில் சென்று பார்த்தார். திரும்பி வந்ததும் இருதயனிடம், ''சம்புவின் விளக்கில் எண்ணெய் தீர்ந்துவிட்டது'' என்றார். அவருடைய வார்த்தைப்படியே சம்பு விரைவில் இறந்து போனார். மேன்மையான குணங்களும் கடவுள் பக்தியும் நிரம்பப்பெற்ற சம்பு கடைசிவரையில் மரணத்தைக் குறித்துக் கவலைப்படாமல் மிகுந்த தைரியத்தோடு இருந்தார். காலமாவதற்குச் சில நாட்களுக்கு முன் இருதயனிடம் மிகுந்த உற்சாகத்தோடு, ''சாவைப் பற்றி நான் சிறிது கூடக் கவலைப்படவில்லை. அந்தப் பயணத்திற்கு நான் என் பெட்டிப் படுக்கையோடு தயாராக இருக்கிறேன்'' என்றார். மதுருக்குப் பிறகு, தம்முடைய தேவைகளைக் கவனிப் பதற்காக அன்னை காளியால் அமர்த்தப்பட்டவர் சம்பு என்று குருதேவர் சொல்வது வழக்கம். முதன் முதலில் சம்புவைப் பார்த்த உடனே காளி தெய்விகக் காட்சியில் காட்டிய அவரைக் குருதேவர் அடையாளம் கண்டு கொண்டார்.

இந்த நேரத்தில், ஸ்ரீராமகிருஷ்ணர் சத்தியத்திடம் எந்த அளவு பற்றுக் கொண்டிருந்தார் என்பதையும் கவன மில்லாமல் சத்தியத்திலிருந்து அவர் வழுவும் நேரத்தில் அன்னை காளி அவரை எப்படிக் காப்பாற்றினாள் என்பதையும் காட்டும்வகையில் நடந்த நிகழ்ச்சி ஒன்றை இப்போது காண்போம். சம்பு தம் வீட்டுத் தோட்டத்தில் ஏழை களுக்காக மருத்துவசாலை ஒன்று வைத்திருந்தார். ஸ்ரீராம கிருஷ்ணர் அடிக்கடிப் பேதியால் வேதனைப்படுவதைக் கண்ட சம்பு அவரைச் சிறிது அபின் சாப்பிடும்படிக் கூறி, அதைத் தாம் தருவதாகச் சொன்னார். ஸ்ரீராமகிருஷ்ண ரும் அதற்கு ஒப்புக் கொண்டார். நெடுநேரம் பேசிக் கொண்டிருந்த அவர்கள் பேச்சுச் சுவாரஸ்யத்தில் அபினைப் பற்றி மறந்து போனார்கள். சம்புவிடம் விடைபெற்று வெளியே வந்த உடனே குருதேவர் அபினை நினைத்துக் கொண்டு திரும்பி சம்புவின் வீட்டிற்குள் சென்றார். சம்பு அப்போது ஏதோ வேலையில் ஈடுபட்டிருக்கவே அவரைத் தொந்தரவு செய்ய விருப்பமில்லாமல் அந்த மருத்துவ நிலையத்தில் வேலை பார்த்து வந்தவர்களில் ஒருவரிடம் அபினை வாங்கிக் கொண்டு திரும்பினார். திரும்பியதுதான் தாமதம். காளி கோயிலுக்குப் போகும் வழி அவருக்குத் தெரியவில்லை. அந்த வழி அவருக்கு நன்கு பழக்கமானதாக இருந்தும் அவரது கால்கள்

வேறு எங்கோ நடந்து கொண்டிருந்தன. ஆச்சரியப்பட்ட அவர் தமக்குப் பின்னே திரும்பிப் பார்த்தார். சம்புவின் வீடும் தாம் அங்கிருந்து நடந்து வந்த பாதையும் தெளி வாகத் தெரிந்தன. ஆனால் எதிரே கோயிலுக்குப் போகும் பாதை மட்டும் தெரியவில்லை. திரும்பிச் சம்புவின் வீட் டிற்குச் சென்று அங்கிருந்து மிக எச்சரிக்கையாகக் கோயி லுக்குச் செல்லும் பாதை வழியே மறுபடியும் வரத் துவங் கினார். குறிப்பிட்ட அந்த இடத்துக்கு வந்ததும் மீண்டும் எதிரே பாதை தெரியவில்லை. ஒரே குழப்பமாக இருந்தது. தம்மை யாரோ பின்னால் பிடித்து இழுப்பது போலவும் உணர்ந்தார். சம்புவின் வீட்டிற்கு மறுபடியும் சென்றவர் திரும்பவும் அந்த இடத்திற்கு வந்ததும் அதேமாதிரித் தடுமாறி வழி தெரியாமல் நின்றார்.

பலமுறை இப்படி வேதனைப் பட்டவர் இதற்குக் கார ணம் என்னவாக இருக்கும் என்று யோசித்தார். திடீரென்று அதற்கான காரணம் நினைவிற்கு வந்தது. சம்பு குருதேவரைத் தம்மிடமிருந்து அபினை வாங்கிச் செல்லும்படிக் கூறினார். ஆனால் இவரோ அவருடைய வேலையாளிடமிருந்து அவருக்குத் தெரிவிக்காமல் வாங்கி வந்துவிட்டார். அந்தப் பொருள் சம்புவுக்குச் சொந்தம். சம்புவின் உத்தரவு இல்லாமல் அதைக் கொடுக்கும் அதிகாரம் வேலையாளுக்கு இல்லை. அப்படிக் கொடுத்தால் அது ஒருவகையான திருட்டு ஆகும். அதைக் குருதேவர் வாங்கிப்பயன்படுத்தினால் பொய் சொல்லி வாங்கிப் பயன்படுத்தியதாகும். காளி அவரை அந்தப் பொய்யான செயலைச் செய்ய அனுமதிக்கவில்லை. அதனா லேயே அவருக்கு வழி தெரியாமல் போய்விட்டது. இதை உணர்ந்து கொண்ட குருதேவர் சம்புவின் மருத்துவச் சாலைக்குச் சென்று சன்னல் வழியாக அபினை உள்ளே எறிந்து, ''இதோ பார், நான் அபினைத் திருப்பிப் போட்டு விட்டேன்'' என்று சொல்லிவிட்டுத் திரும்பி வந்தார். இப்போது கோயிலுக்குச் செல்லும் பாதை தெளிவாக அவருடைய கண்களுக்குத் தெரிந்தது. பத்திரமாகத் தம் முடைய அறைக்குத் திரும்பி வந்தார். இந்த நிகழ்ச் சியைப் பற்றி அவர் பிற்காலத்தில் சொல்லும்போது, ''இது ஏன் நடந்தது என்றால் என் பொறுப்பு முழுவதையும் நான் அன்னை காளியிடம ஒப்படைத்துவிட்டேன். அவள் என் கையைப் பிடித்துக் கொண்டு அழைத்துச் செல்கிறாள். அதனால் ஓர் அங்குலம்கூட நான் பாதையிலிருந்து விலக அவள் அனுமதிக்கவில்லை'' என்றார்.

நேபாளத்தைச் சேர்ந்த காப்டன் விசுவநாத்தைப் பற்றி முன்பு சிறிது பார்த்தோம். அவர் மிகுந்த தைரியமும் தூய்மையும் நிறைந்த பிராம்மணக் குடும்பத்தில் பிறந்தவர். அவருடைய தந்தை ராணுவ அதிகாரியாக இந்திய ராணுவத்தில் இருந்தவர். போர்க்களத்தில் சண்டை போட்டுக் கொண்டிருக்கும்போது கூடத் தம் இஷ்ட தெய்வமான சிவபெருமானை வழிபடுபவர். விசுவநாத் மிகச் சிறந்த அறிஞராகவும் பக்தராகவும் இருந்தார். சாஸ்திரங்களைப் படிப்பதில் அவருக்கு ஆர்வம் அதிகம். கீதையும் பாகவதமும் மற்றும் வேதாந்த நூல்களும் அவருக்கு மனப்பாடம். ஒவ்வொரு நாளும் அவர் இஷ்ட தெய்வத்தைச் சாஸ்திர விதிப்படிமிகக் கவனத்தோடு வழிபடுவார். அவர் நேபாள நாட்டின் புகழ்பெற்ற அதிகாரியாக இருந்ததோடு கல்கத்தாவில் இருந்த அந்த நாட்டு பெரிய மரக்கிடங்கின் பொறுப்பாளராகவும் இருந்தார். ஒருநாள் அவரது கனவில் ஒளியால் சூழப்பட்ட ஒரு மனிதன் அவரிடம் வந்து மிகச் சிறந்த ஞானத்தைப் பெற்றுச் செல்லுமாறு அழைப்பதைக் கண்டார். அதன் பிறகு ராணிராசமணியின் கோயில் தோட்டத்தில் ஒரு பெரிய மகான் வாழ்ந்து வருவதை அறிந்தார். அவரைக் காணப் புறப்பட்டார். கண்டதும் தாம் கனவில் கண்ட அதே மகானாக அவர் இருப்பது கண்டு எல்லையற்ற ஆச்சரியமடைந்தார். அவரிடம் அளவற்ற ஈடுபாடு அவருக்கு உண்டாகியது. அன்று இரவு அவருடனே தங்கிவிட்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் தாம் நெடுங் காலம் பழகிய நண்பர்போல் அவரை மிகுந்த அன்புடன் நடத்தினார். அன்றிலிருந்து விசுவநாத் தட்சுணேசுவரத்திற்கு அடிக்கடி வரத் துவங்கினார்.

அவர் உண்மையை எப்பொழுதும் மதிப்பவர். ஒரு முறை அவருடைய பொறுப்பிலிருந்த நேபாள நாட்டு மரங்கள் வேறு ஒரு இடத்திற்குக் கொண்டு செல்லக் கங்கையில் போடப்பட்டிருந்தன. திடீரென்று கங்கையில் தோன்றிய வெள்ளம் பெரும்பாலான மரங்களை அடித்துச் சென்றுவிட்டது. இதனால் நேபாள அரசாங்கத்துக்கு மிகுந்த நஷ்டம் ஏற்பட்டது. அது குறித்து அவர் அந்த ஆண்டு தலைமையகத்திற்கு எந்தவிதக் குறிப்பும் அனுப்ப வில்லை. அந்த ஆண்டு வியாபாரத்தில் வரும் லாபத்தைக் கொண்டு அந்த நஷ்டத்தை ஈடு செய்துவிடலாம் என்ற நினைப்பில் அவர் பேசாமல் இருந்துவிட்டார். ஆனால் அது குறித்து அவரைப் பற்றி அவதூறான பல செய்திகள்

நேபாள அரசாங்கத்திற்கு அனுப்பப்பட்டன. மரங்களை யாருக்கும் தெரியாமல் அவர் விற்று லாபம் தேடிக் கொண்டதாக அந்தச் செய்திகள் கூறின. எனவே அவர் உடனடியாகக் காட்மாண்டுவிற்குச் செல்லுமாறு நேபாள அரசாங்கத்தால் கட்டளையிடப்பட்டார். இதை அறிந்த ரேப்டன் மிகுந்த அச்சமடைந்தார். பிறகு நடந்த உண்மையைச் சொல்வது என்று முடிவு செய்தார். நேபாளத்திற்குப் புறப்படுமுன் தடசிணேசுவரம் சென்று ஸ்ரீராமகிருஷ்ணரிடம் எல்லாச் செய்திகளையும் சொன்னார். அதைக் கேட்ட ஸ்ரீராமகிருஷ்ணர், ''நீ அந்த மரங்களைத் திருடவில்லை. நடந்த விஷயங்களை அப்படியே அதிகாரிகளிடம் சொல். அவர்கள் நிச்சயம் உன்னை மன்னிப்பார்கள். பயப்படாதே. அன்னை காளி உன்னைக் காப்பாற்றுவாள்'' என்றார். இந்த உறுதிமொழியால் விசுவநாத் அச்சமும் கவலையும் நீங்கியவராய் உற்சாகத்தோடு காட்மாண்டு சென்றார். மரங்கள் கங்கையில் அடித்துச் செல்லப்பட்ட விஷயத்தை நடந்தது நடந்தது போல் அரச சபையில் கூறினார். தாம் செய்ய நினைத்ததையும் வெளிப்படையாக ஒப்புக் கொண்டார். அவருடைய நேர்மையான நடத்தையைக் கண்டு மகிழ்ந்த அரசாங்கம் கர்னல் என்னும் இராணுவ அதிகாரி பதவிக்கு அவரை உயர்த்திக் கல்கத்தாவிற்கு மறுபடியும் தன் தூதராக அனுப்பியது.

குருதேவர் இப்போது மிக உயர்ந்த ஆன்மிக நிலையில் மூழ்கியபடி, சில நேரங்களில் இரண்டு மூன்று நாட்கள் கூடத் தொடர்ந்து சமாதியில் வாழ்ந்தார். குருதேவரின் மிக உயர்ந்த ஆன்மிக நிலையைக் கண்ட விசுவநாத் அவரைத் தம் குருவாக ஏற்றுக் கொண்டார். ஒரு நாள் அவர் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றித் தம் நண்பரிடம், ''நான் வேதம் முதலான சாஸ்திரங்களை எல்லாம் படித்திருக்கிறேன். நான் பல இடங்களில் பல்வேறு பக்தர்களையும் சாதுக்களையும் கண்டிருக்கிறேன். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணரின் சாந்நித்தியமே என் எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றி வைத்தது. எனக்கு அவர் எல்லா சாஸ்திரங்கள், கூறும் சத்தியத்தின் உருவமாக இருக்கிறார். நீங்கள்கூட நிச்சயமாக ஒரு காலத்தில் இந்த உண்மையை உணர்வீர்கள்'' என்றார்.

# 28. கேசவசந்திர சென்னும் பிரம்ம சமாஜமும்

**1875**-ஆம் ஆண்டு மார்ச் மாதம், ஸ்ரீராமகிருஷ்ணரின் தாய் சந்திரா தேவி காலமாவதற்கு ஓராண்டிற்கு முன்னர் மிக முக்கியமான ஒரு நிகழ்ச்சி நடந்தது. அது ஸ்ரீராமகிருஷ் ணரின் வாழ்க்கையில் மிக முக்கியமான மாற்றத்தை உண் டாக்கியது. அந்த நிகழ்ச்சி குருதேவர் பிரம்ம சமாஜத் தலைவர் கேசவசந்திர சென்னைச் சந்தித்ததாகும்.

கேசவசந்திர சென் அந்தக் காலத்தில் வங்காளத்தி லும் வட இந்தியாவின் பல பகுதிகளிலும் தென் இந்தி யாவில் சில இடங்களிலும் இங்கிலாந்திலும்கூடப் பெரும் புகழ் பெற்றவராக விளங்கினார். அந்தக் காலத்தில் பல கடவுள் வணக்கங்களும் உருவ வழிபாடும் மிகவும் இழிவு படுத்தப்பட்டு ஆங்கிலம் கற்ற இளைஞர்கள், பெரியவர் களிடையே கிறிஸ்துவ மோகம் மிகுதியாக ஏற்பட்டிருந்தது அப்போது, கிறிஸ்துவ சமயத்தின் அடிப்படையோடு வங்காள அவதார புருஷரான சைதன்யரின் கீர்த்தனம், பஜனை, உபநிஷத மந்திரங்கள் இவற்றோடு உருவமில்லாத வழிபாட்டை உருவாக்கி, பெரிய வழிபாட்டு மண்டபம் கட்டி, காலை மாலை வழிபாடு, சொற்பொழிவு, தியானம் என்று மிகப் பெரிய சமய இயக்கத்தை நடத்தியவர் கேசவ சந்திரசென். இராஜாராம் மோகன் ராய் துவக்கி, தேவேந்திர நாத் தாகூரால் வளர்க்கப்பட்ட ஆதி பிரம்ம சமாஜத்தில் சேர்ந்து, பிறகுஅதிலிருந்து பிரிந்து தனியாக இந்திய பிரம்ம சமாஜம் என்று ஆரம்பித்தார். இங்கிலாந்தில் விக்டோரியா மகாராணியாலும் பாராட்டப்பட்டவர். ஆறு மாதங்கள் இங்கிலாந்தில் தங்கித் தம் சமயத்தைப் பற்றிச் சொற் பொழிவுகள் செய்து மிகுந்த பாராட்டுப் பெற்றவர். அவர் காலத்தில் வங்காள இளைஞர்களின் இலட்சிய வீரராக அவர் விளங்கினார். பெரும் எண்ணிக்கையில் இளைஞர் களும் நன்கு கற்ற இந்துக்களும் இந்தியக் கிறிஸ்துவர் களும்கூட இவரது சமாஜத்தில் பங்கு கொண்டனர். இவ் வளவு புகழோடு விளங்கிய கேசவரைத்தான் குருதேவர் சந்தித்தார்.

கேசவரின் சிறந்த குணங்களைப் பற்றிக் கேள்விப் பட்ட குருதேவர் அவரைச் சந்திக்கப் பெரிதும் விரும்

பினார். நெடு நாட்களுக்குமுன் ஆதி பிரம்ம சமாஜத்தில் கேசவர் தியானம் செய்து கொண்டிருந்தபோது ஒரு முறை குருதேவர் பார்த்திருக்கிறார். அவர் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கியிருப்பதைக் கண்டு, ஸ்ரீராமகிருஷ்ணர் "இங்கு தியானம் செய்யும் எல்லோரிலும் இந்த இளைஞனே தியானத்தில் வெற்றி கண்டிருக்கிறான்' என்று கூறியிருக்கிறார். ஒரு நாள் சமாதியில் மூழ்கியிருந்தபோது மயில் ஒன்று நிற்கும் காட்சியைக் கண்டார். இதைப் பற்றிப் பின்னால் அவர் சொல்லியபோது மயில் கேசவர் என்றும் விரிந்திருந்த அம்மயிலின் தோகை அவருடைய சீடர்கள் என்றும் மயிலின் தலையில் இருந்த சிவந்த இரத்தினக் கல் அவரிடமிருந்த ரஜோ குணத்தைக் குறித்தது என்றும் கூறியுள்ளார்.

இப்போது அவர் தட்சிணேசுவரத்துக்கு இரண்டு மைல் தொலைவில் உள்ள பெல்கோரியாவில் ஜயகோபால் சென் என்பவரின் பூந்தோட்ட மாளிகையில் தம் சீடர்களுடன் தங்கியிருந்தார். இதை அறிந்த ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு நாள் பிற்பகல் காப்டன் விசுவநாத்தின் வண்டியில் இருதயனோடு அவரைக் காணச் சென்றார். இருதயன் முதலில் சென்று கேசவரிடம் தன் மாமா அவரைக் காண வந்திருப்பதைக் கூறினான். பெரிய பக்தர் ஒருவர் தம் முடன் ஆன்மிகச் செய்திகளைப் பேச வந்திருப்பதாக நினைத்த கேசவர் அவரை உள்ளே அழைத்து வரச்சொன்னார். சாதாரணமான வேட்டி ஒன்றைக் கட்டிக்கொண்டு அதன் ஒரு முனையைத் துண்டுபோல் தோளில் போட்டபடி வந்த ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்ததும் கேசவருக்கு அவரிடம் முதலில் மதிப்பு ஏதும் தோன்றவில்லை. இறுதியாகக் குருதேவர் கேசவரைப் பார்த்து, ''நீங்கள் கடவுளைக் கண்டிருப்பதாக நான் கேள்விப்பட்டேன். அதனால் அதைப் பற்றிக் கேட்கத் தங்களிடம் வந்தேன்'' என்றார்.

அதைத் தொடர்ந்து உரையாடல் துவங்கியது. மழைப் பெருக்கென உயிரோட்டத்தோடு ஓடிவந்த ஸ்ரீராம கிருஷ்ணரின் தெய்விகப் பேச்சில் கேசவரும் அவருடைய சீடர்களும் தங்களை மறந்தனர். பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் உலகையே மயக்கும் இனிய குரலில் அன்னை காளியைப் பற்றிப் பாடினார். இடையிடையே உணர்ச்சி மிகுதியால் சமாதியில் மூழ்கி நினைவிழந்து போனார். இதுவரை சமாதி யையே காணாத கேசவரும் அவருடைய சீடர்களும் ஸ்ரீராம கிருஷ்ணரின் சமாதியைக் கண்டு எந்தவிதமான ஈடுபாடும் கொள்ளவில்லை. ஆனால் இருதயன் 'ஓம்' என்னும் மந்திரத்தை

அவர் காதில் ஓதி அவருக்கு உலக நினைவை உண்டாக்கி யதைக் கண்டதும் மிகுந்த ஆச்சரியமடைந்தார்கள். அப்போது ஸ்ரீராமகிருஷ்ணரின் முகம் தெய்விக ஆனந்தத்தால் பூரித்தது. அதைத் தொடர்ந்து மழைப்பெருக்குபோல் வார்த்தைகள் குருதேவரிடமிருந்து கிளம்பின. அது நேராக அவர்களின் உள்ளத்தில் பாய்ந்தன. கடவுள் ஒருவரே என்பதையும் அவரே கணக்கற்ற வடிவங்களை எடுக்கிறார் என்பதையும் பலவகையான உதாரணங்களோடு அவர் பேசினார்:

''சில குருடர்கள் யானையைப் பார்த்துவிட்டு வந்தார்கள். ஒருவர் அவர்களிடம், 'யானை எப்படி இருந்தது?' என்று கேட்டார். யானையின் காலைத் தொட்டுப் பார்த்தவன், 'யானை தூண்போல உள்ளது' என்றும் காதைத் தொட்டவன், 'முறம் போன்றது' என்றும் கூறினான். இது போலவே அதன் வயிறு முதலிய பாகங்களைத் தொட்டவர்கள் அவரவர்கள் அறிந்ததைக் கூறினார்கள். ஆனால் ஒருவரும் முழுமையாகக் கூறவில்லை. கடவுளைப் பற்றிய உண்மையும் இதுவே. ஒவ்வொருவரும் தங்களால் முடிந்த அளவே அவரைப் புரிந்து கொள்கிறார்கள்.

''ஒரு மரத்தின் அடியில் ஓணான் ஒன்றைப் பார்த்த ஒருவன், 'நான் அங்கே சிவப்பு ஓணான் ஒன்றைப் பார்த்தேன்' என்றான். மற்றொருவன், 'நான் உனக்கு முன்பே அங்கே போயிருந்தேன். அந்த ஓணான் சிவப்பல்ல; பச்சை' என்றான். இன்னொருவன், 'நான் என் கண்களால் பார்த்தேன். அது சிவப்புமல்ல, பச்சையுமல்ல, அது நீலம்' என்றான். இவ்வாறு ஒவ்வொருவரும் தாங்கள் கண்ட பல்வேறு நிறங்களைக் கூறினார்கள். சிறிது நேரத்திற்குள் தாங்கள் சொன்னதுதான் சரி என்று அவர்கள் தங்களுக்குள் சண்டை போட்டுக்கொள்ள ஆரம்பித்தார்கள். அப்போது அங்கே வந்த ஒருவன் அவர்களின் சண்டைக்குக் காரணத்தைக் கேட்டான். இவர்கள் காரணத்தைச் சொன்னார்கள். அதைக் கேட்டதும் அவன், 'நான் அந்த மரத்தின் அடியிலேயே வசித்துக் கொண்டிருப்பவன். நீங்கள் ஒவ்வொருவரும் சொல்வது உண்மைதான். அது சில சமயம் சிவப்பாகவும், சில சமயம் பச்சையாகவும் சில நேரம் மஞ்சள், நீலம் இப்படிப் பல நிறங்களிலும் இருக்கும். சில நேரங்களில் நிறமில்லாமலும் இருக்கும்' என்றான்.''

மனிதர்கள் கடவுளின் வடிவத்தையும் குணங்களையும் வரையறை செய்வதுபற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் கேலி செய்வார்.

'ஓர் எறும்பு சர்க்கரைக் குன்று ஒன்றை அப்படியே தன் வாயால் தூக்கிச் செல்ல விரும்பியதைப் போன்றது அது' என்பார் அவர். கடவுளின் கருணையால் ஒருவன் அவரைக் காணவும் அவரைப்பற்றி அறியவும் முடியும். ஸ்ரீராம கிருஷ்ணர் பேசிய முறை அவர் கடவுளைக் கண்டவர் என்ற நம்பிக்கையைக் கேசவருக்கு ஊட்டியது. அவருடைய பேச்சில் மயங்கி சிறு குழந்தையைப்போல் அவர்முன் ஒன்றுமே பேச முடியாத நிலையை அடைந்த கேசவர் அவரிடம் மிகுந்த மதிப்புக் கொள்ள ஆரம்பித்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் கூறிய ஒவ்வொரு சொல்லும் கேசவரின் நெஞ்சில் பசுமரத்தாணி போல் பாய்ந்து அவரது அகக் கண்களைத் திறந்தது. நெடு நேரம் பேசிய குருதேவர் இறுதியாகக் கேசவரைப் பார்த்து, ''உங்களுடைய வால் விழுந்துவிட்டது'' என்றார். யாருக்குமே இது புரியாமல் போகவே குருதேவரே அதை விளக்கினார். 'தவளையின் குஞ்சான தலைப்பிரட்டையை நீங்கள் பார்த்திருக்கலாம். வால் இருக்கும்வரை அது தண்ணீரில் மட்டும்தான் வசிக்க முடியும். வால் விழுந்துவிட்டால் அதனால் நீர், நிலம் இரண்டிலுமே வசிக்க முடியும். அதுபோலவே மனிதனுக்கு அறியாமையாகிய வால் விழுந்து விட்டால் அவன் உலக வாழ்விலும் இருக்கலாம். கடவுளின் பேரின்பத்தையும் அனுபவிக்கலாம். கேசவரே, உங்கள் மனம் இப்போது அந்த நிலையில் இருக்கிறது. நீங்கள் இந்த உலக வாழ்க்கையிலும் ஈடுபடலாம். கடவுளின் பேரானந்தத்தையும் அனுபவிக்கலாம்'' என்றார். இவ்வாறே மேலும் சில மணி நேரம் மகிழ்ச்சியுடன் பேசிக் கொண்டிருந்துவிட்டு ஸ்ரீராமகிருஷ்ணர் கேசவரிடம் விடை பெற்றுத் தட்சிணேசுவரம் திரும்பினார்.

கேசவர் ஸ்ரீராமகிருஷ்ணரால் வசீகரிக்கப்பட்டார். அவரைப் பற்றி மேலும் தெரிந்துகொள்ள விரும்பி, கேசவர் தம் சீடர்களில் சிலரைத் தட்சிணேசுவரத்துக்கு அனுப்பி அவரை நன்கு கண்காணித்து, அவரைப் பற்றிய விஷயங்களை அறிந்து வரச் செய்தார். அதன் பிறகு சில பக்தர்களுடன் அடிக்கடி ஸ்ரீராமகிருஷ்ணரிடம் சென்று நீண்டநேரம் ஆன்மிகச் செய்திகளைப்பற்றி விவாதித்தார். நாளடைவில் இருவரும் மிக நெருங்கிப் பழகலானார்கள். ஸ்ரீராமகிருஷ்ணரும் அடிக்கடிக் கல்கத்தா சென்று கேசவரைச் சந்தித்தார். ஒவ்வோர் ஆண்டும் நடக்கும் பிரம்ம சமாஜத்தின் ஆண்டு விழாவின்போது, கேசவர் தம் சீடர்களுடன் தட்சிணேசுவரம் சென்று அவரோடு அங்கே ஆண்டு விழாவை

நடத்துவார். அல்லது கல்கத்தாவில் சமாஜக் கோயிலில் நடக்கும் விழாவிற்கு ஸ்ரீராமகிருஷ்ணரை அழைத்து வருவார். பல நேரங்களில் கேசவர் தம் பக்தர் கூட்டத்தோடு நீராவிப் படகில் தட்சிணேசுவரத்திற்கு வந்து ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்திப்பார். பிறகு, அவரையும் படகில் ஏற்றிக் கொண்டு கங்கையில் நெடு நேரம் பயணம் செய்தபடியே பேசிக் கொண்டிருப்பார்கள்.

கேசவர் மேல்நாட்டு நாகரீகத்தில் மிகுதியாக மூழ்கி யிருந்தார் என்றாலும் கடவுளிடம் அவருக்கிருந்த பக்தி அழிந்துவிடவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணரின் கூட்டுறவால் அவருடைய ஞானம் மேலும் வளர்ந்தது. தாம் அறிந்துகொண்ட விஷயங்களைப் பிறரோடு பகிர்ந்து கொள்ளச் சமாஜத்தின் சொற்பொழிவு மேடையிலும் அப்போது வெளி வந்து கொண்டிருந்த பிரபல ஆங்கில, வங்காளப் மொழிப் பத்திரிகைகளில், ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றித் தொடர்ந்து எழுதியும் வந்தார். ஒரு நாள் தட்சிணேசுவரத்தில் குருதேவர் கேசவருக்கு, 'நெருப்பும் அதன் சுடும் தன்மையும் போன்று பிரம்மமும் அதன் சக்தியும், ஒன்றே' என்ற உண்மையை விளக்கிக் காட்டினார். இதைக் கேசவர் மிகத் தெளிவாகப் புரிந்து கொண்டார். அதன் பிறகு இறைவன், அவரைப் பற்றிக் கூறும் சாஸ்திரம், அவரது பக்தன் ஆகிய மூன்றும் ஒன்றே என்பதை விளக்கினார். கேசவர் அதையும் ஏற்றுக் கொண்டார். அதன் பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் குரு, கடவுள், பக்தன் இந்த மூன்றும் ஒன்றே என்பதை விளக்க ஆரம்பித்தார். கேசவரால் இதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. கேசவரின் நம்பிக்கையை உடனே அழிக்க விரும்பாமல் ஸ்ரீராமகிருஷ்ணர் அதுபற்றிய விளக்கத்தை அதனோடு நிறுத்திக்கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணருடைய தொடர்பினால் நாளாக நாளாக வைதிக சமயத்தின் ஆழ்ந்த உண்மைகளைப் புரிந்து கொண்டு அதை அனுபவத்தில் காணும் முயற்சிகளில் ஈடுபட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணரிடம் மிகுந்த மரியாதை வைத் திருந்த கேசவர் தட்சிணேசுவரம் செல்லும் ஒவ் வொரு முறையும் அவருக்குப் பழங்களோ இனிப்புகளோ வாங்கிச் செல்வார். அவைகளை மிகுந்த பணிவோடு ஸ்ரீராமகிருஷ்ணரின் முன் வைத்துவிட்டு அவருடைய காலடி களில் பணிவு மிகுந்த சீடன்போல் அமர்ந்து அவர் வாயி லிருந்து வரும் அமுதமொழிகளைப் பருகுவார். ஒரு நாள் குருதேவர் கேசவரிடம், "நீங்கள் உங்களுடைய அற்புதமான சொற்பொழிவால் மக்களை அப்படியே கவர்ந்திருக்கிறீர்கள்.

எனக்குக்கூட அதைக் கேட்க மிகவும் ஆசையாக இருக்கிறது'' என்ருர். இதைக் கேட்ட கேசவர் மிகுந்த பணிவோடு, ''கொல்லன் தெருவில் என்னை ஊசி விற்கச் சொல்கிறீர்களா? நீங்கள் என்னிடம் என்ன பேசுகிறீர்களோ, உங்களுடைய அந்த வார்த்தைகளை நான் திரும்பக் கூறுவதையே மக்கள் பாராட்டுகிருர்கள்'' என்ருர்.

1878-ஆம் ஆண்டு கேசவர், பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் பெண்களுக்குத் திருமண வயதாக வரையறை செய்திருந்த பதினுன்கு வயதுக்கும் குறைந்த வயதில் தம் மகளைக் கூச்பிகார் ராஜாவிற்குத் திருமணம் செய்து கொடுத்தார். இது பிரம்ம சமாஜத்தில் பெரும் கலவரத்தையும் குழப்பத்தையும் உண்டாக்கியது. அவருடைய செயலை மிகக் கடுமையாகக் கண்டித்தும் அவரை மிக இழிவாகத் தூற்றிவிட்டும் சமாஜத்திலிருந்த பலர் பிரிந்து சென்று தனியாக சாதாரண் பிரம்ம சமாஜம் என்று மற்ருெரு சமாஜத்தை ஏற்படுத்திஞர்கள். இதைக் கண்டு ஸ்ரீராமகிருஷ்ணர் மிகவும் வருந்திஞர். ''பிறப்பு, இறப்பு, திருமணம் முதலியவைகள் கடவுளின் விருப்பப்படி நடப்பவை. திருமணத்தைப் பற்றிக் கடுமையான விதிகளை உண்டாக்கிக் கேசவர் தவறு செய்துவிட்டார்'' என்று கூறிஞர். யாராவது கேசவர் தம் மகளைத் திருமணம் செய்து கொடுத்தது பற்றிக் குறை கூறிஞல் உடனே கேசவருக்குப் பரிந்து, ''கேசவர் செய்ததில் தவறென்ன? அவர் இல்லறத்திலிருப்பவர். ஒரு தந்தையின் கடமை தன் மகளை முறையோடு சாஸ்திரங்களுக்கு மாறுபடாமல் திருமணம் செய்து கொடுப்பதுதான். கேசவரும் அதைத்தான் செய்திருக்கிருர்'' என்பார்.

இந்த நிகழ்ச்சியால் கேசவரின் புகழ் பெரிதும் பாதிக்கப்பட்டது. அதஞல் அவர் மனத்தை உடனே கடவுளைக் காணும் தீவிர முயற்சிகளில் திருப்பிக் கொண்டார். இதன் விளைவுகள் அவருடைய சமாஜத்தின் கொள்கைகளிலும் படியத் துவங்கின. ஸ்ரீராமகிருஷ்ணர் இந்தக் காலத்தில் கடவுளைப் பற்றிய கேசவரின் கொள்கைகள் உருவாகப் பெரிதும் துணையாக இருந்தார். இதற்குமுன் உருவமற்ற கடவுள் வழிபாடும் சடங்குகள் அற்ற விழாக்களும் நடத்தி வந்த கேசவர், ஹோமம், தீட்சை தருதல், காவி உடை அணிதல், மொட்டையடித்தல் முதலான வெளிச் சடங்குகள் அவசியம் என்பதை உணர்ந்தார். அதில் சிலவற்றைத் தம் சமாஜத்திலும் புகுத்திஞர். மகான்களான

புத்தர், சைதன்யர், முதலியவர்கள் உலகை உய்விக்க வந்த டவுளின் அம்சங்களாக, ஆன்மிகத்தைப் பரப்பும் கால்வாய் களாகத் தோன்றியவர்கள் என்பதையும் அவர்கள் இன்னும் தங்களுடைய தெய்விக வடிவத்தில் வாழ்ந்து அந்தக் குறிப்பிட்ட தத்துவத்தைப் பரப்பிக் கொண்டிருக்கிருர்கள் என்பதையும் புரிந்து கொண்டார். அவர்களின் கருத்துக்களை நேரடியாக அனுபவித்து அறிய அவர்கள் சிலரின் கருத்துக்களை ஏற்று அதன்படி தியானம் செய்துவந்தார். இதற்குக் காரணம் ஸ்ரீராமகிருஷ்ணர் ஆரம்பக் காலத்தில் சாதனைகள் புரியும் போது பல்வேறு நெறிகளில் இறைவனைத் தியானம் செய்து அந்தந்த தெய்வத்தையும், அவர்களது தத்துவங் களையும் அனுபவத்தில் அறிந்ததே ஆகும். கேசவர் ஸ்ரீராமகிருஷ்ணரின் எல்லாச் சமயங்களையும் ஏற்றுக் கொள் ளும் கொள்கையையும் ஒவ்வொரு சமயமும் கடவுளை அடை யும் ஒவ்வொரு பாதையே என்பதையும் அறிந்துகொள்ள இரண்டு ஆண்டுகள் பெரிதும் முயன்ருர். பிறகு, தாம் ஏற்றுக் கொண்ட இந்தக் கருத்துக்களை நவ விதான் (புதிய நெறி) என்ற பெயரில் பிரசாரம் செய்தார்.

கேசவர் ஸ்ரீராமகிருஷ்ணரிடத்தில் கொண்டிருந்த அன்பும் மரியாதையும் வார்த்தைகளால் விளக்க முடியாததாகும். பிரம்ம சமாஜக் கோயிலில் பெருங் கூட்டத்தின் நடுவே கேசவர் சொற்பொழிவு நடத்திக் கொண்டிருப்பார். குருதேவர் அந்த நேரத்தில் அங்கு சென்றுவிட்டால், உடனே தம் சொற்பொழிவை நிறுத்திவிட்டு மேடையிலிருந்து கீழே இறங்கி மிகுந்த பணிவோடும் மரியாதையோடும் ஸ்ரீராமகிருஷ்ணரை வரவேற்று மேடைக்கு அழைத்துச் செல்வார். ஒருநாள் தம்முடைய வீட்டில் தாம் உண்டு, உறங்கி, உட்கார்ந்து எழுதும் இடங்களுக்கெல்லாம் குருதேவரை அழைத்துச் சென்று அந்த இடங்களையெல்லாம் ஆசீர்வதிக்கும்படிக் கூறினர். அங்கே இருக்கும் போதெல்லாம் குருதேவரின் ஆசியால் தெய்விக எண்ணங்களே அவருள் எழும் என்று அவர் நம்பினர். தன்னுடைய தியான அறைக்கும் குருதேவரை அழைத்துச் சென்று அங்கே அவரை மலரிட்டு கேசவர் வழிபட்டார் என்றும் விஜயகிருஷ்ண கோசுவாமி கூறியுள்ளார்.

ஆனல், கேசவருக்கு ஸ்ரீராமகிருஷ்ணருடைய எல்லாக் கொள்கைகளையும் அப்படியே ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அவர் தம்முடைய கொள்கையான நவ விதானில் எல்லா

மதங்களிலும் உள்ள மிக உயர்ந்த நல்லதான கருத்துக்களை எடுத்து சேர்த்துக் கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணருடைய இலட்சியமோ, ஒவ்வொருவரும் அவரவர்களுடைய பாதை யிலேயே, எந்தவிதமான குறுக்கீடுமின்றிச் சுயவிருப்பத் துடன் இதய பூர்வமாகச் செல்ல வேண்டும் என்பதே.

கேசவர் மட்டுமல்லாமல் பிரம்ம சமாஜத்தில் இருந்த சிறந்த அறிஞர்கள் அனைவருமே ஸ்ரீராமகிருஷ்ணரால் பெரிதும் கவரப்பட்டனர். ஸ்ரீராமகிருஷ்ணரின் தொடர்பால் மிகுந்த மாற்றம் பெற்றனர். நவ விதான், சாதாரண் பிரம்ம சமாஜம் ஆகிய இரண்டும் கடுமையாக ஒன்றுக்கு ஒன்று எதிராகப் போரிட்டுக் கொண்டாலும் இரண்டு இயக்கத்தையும் சார்ந்தவர்கள் குருதேவரைத் தங்களுடைய வராக நினைத்துத் தங்கள் பிரார்த்தனைகளிலும் சங்கீர்த் தனங்களிலும் விழாக்களிலும் அவரை மிகுந்த அன்போடு அழைத்துச் சென்று மகிழ்ச்சி அடைந்தார்கள். குருதேவர் தம் சாதனைகளின் மூலம் இறைவனின் பல்வேறு நிலைகளையும் கண்டவராதலால் பிரம்ம சமாஜத்தவர்கள் தங்களுக்குள் எந்தவிதமான பாரபட்சமுமின்றித் தங்களுடைய முழுச் சக்தியையும் செலுத்தி அவரவர்கள் செல்லும் மார்க்கத்தில் முன்னேற சிறந்த வழி காட்டியாக இருந்தார். அவருடைய கொள்கையை முழுதாக அவர்களால் ஏற்றுக் கொள்ள முடியாதபோது முடிந்தவரைக்கும் பின்பற்றும்படிக் கூறினார்.

குருதேவரால் பிரம்ம சமாஜம் மிகுந்த நன்மையைப் பெற்றது. கடவுளைத் தாயாக வணங்கும் முறையை பிரம்ம சமாஜத்தில் புகுத்தி, நிலைபெறும்படிச் செய்தவர் அவரே. அவர்கள் இறைவனின் பல்வேறு பெருமைகளைப் பாடி வழிபட்டு வந்தார்கள். ஸ்ரீராமகிருஷ்ணர் அந்த முறையை மாற்றி இறைவனிடம் தீவிர அன்பு செலுத்தும்படிக் கூறினார். ஒரு நாள் கேசவரிடமும் அவரது சீடர்களிடமும், ''நீங்கள் ஏன் இறைவனின் பெருமைகளில் இவ்வளவு கவனம் செலுத்துகிறீர்கள்? மகன் ஒருபோதும் தந்தையின் வீடு, நிலம், சொத்து இவற்றைப் பற்றிச் சிந்திப்பது இல்லை. அவன் அவரது அன்பை மட்டுமே நினைக்கிறான். குழந்தைகளுக்கு வேண்டியதை வேண்டிய நேரம் கொடுக்கத் தந்தைக்குத் தெரியும். மகன் தந்தையிடம் தனக்குள்ள உறவின் காரணமாகத் தனக்கு வேண்டியதை நேரே கேட்பதுபோல் கடவுளிடம் தனக்கு வேண்டியதை உரிமையுடன் கேட்கலாம்'' என்று கூறினார். ஸ்ரீராம

கிருஷ்ணரின் தொடர்பால் பிரம்ம சமாஜத்தவர்கள் கடவுளைப் பற்றிய பரந்த, மிகத் தெளிவான கருத்தைப் பெற்றனர். அதோடு உருவ வழிபாட்டின் பின்னணியில் அமைந்துள்ள ஆழ்ந்த தத்துவத்தையும் அவர்கள் குரு தேவரால் உணர்ந்தனர். அவர் மூலம் அவர்கள், இதுவரை தாங்கள் வணங்கிய உருவமில்லாத பிரம்மமும் உருவக் கடவுளும் ஒன்றே என்பதை உணர்ந்தனர்

கேசவசந்திர சேனரின் நெருங்கிய நண்பரும் பிரம்ம சமாஜத்தின் தலைவர்களில் ஒருவருமான பிரதாப் சந்திர மஜூம்தார் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றி ஒரு பத்திரிகையில் சிறந்த கட்டுரை ஒன்று எழுதினார்:

''அவருடைய சமயம்தான் என்ன? அது சனாதன இந்து சமயம்தான்; ஆனாலும் புதுமையான இந்து சமயம். ஸ்ரீராமகிருஷ்ணர் குறிப்பிட்ட ஒரு கடவுளை மட்டுமே வணங்குபவர் அல்ல. அவர் சைவர் அல்ல; சாக்தர் அல்ல; வைஷ்ணவர் அல்ல; வேதாந்தியும் அல்ல. என்றாலும் இவை அனைத்தும் சேர்ந்தவர்தான் அவர். அவர் சிவனை வணங்குகிறார்; காளியை வணங்குகிறார்; இராமனை வணங்குகிறார்; கிருஷ்ணனை வணங்குகிறார்; வேதாந்தத் தத்துவத்திலும் ஆழ்ந்து அதைப் பின்பற்றுபவராகவும் விளங்குகிறார். அவர் உருவங்களை வழிபடுபவராக இருக்கிறார். அதே நேரத்தில் அகண்ட சச்சிதானந்தம் என்று அவர் பெயரிட்டு அழைக்கும் உருவமற்ற கடவுளிடம் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டு தம்மை மறந்து தியானம் செய்பவராகவும் இருக்கிறார். அவருக்கு இந்தப் பல்வேறு உருவங்கள் மாற்றமே இல்லாத பேரானந்தமும் பேரறிவு மயமுமான வடிவமற்ற ஒரே கடவுளின் பல்வேறு சக்திகளும் அவதாரங்களாகவும் விளங்குகின்றனர். இவை அனைத்தும் அந்த ஒரே ஆற்றலான அகண்ட சச்சிதானந்தத்தின் விளையாடல்களை உலகில் நடத்தும் பல்வேறு வடிவங்களாக உள்ளன. .... எவ்வளவு நேரம் நாம் அவருடைய திருவடிகளில் அமர்ந்திருக்கும் வாய்ப்புக் கிடைக்கிறதோ அவ்வளவு நேரம் அவரிடமிருந்து பளிங்கு போன்ற மிக உயர்ந்த தூய்மையையும் உலக ஆசைகள் முற்றிலும் நீங்கிய தெய்விகத்தையும் கடவுளிடம் பெரும் பக்தியையும் பேரின்பத்தையும் அனுபவிக்கிறோம்.'' இவரே மற்றொரு கட்டுரையில் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்: ''குழந்தை போன்று ஆழ்ந்த நம்பிக்கையுடன் கூடிய பக்தியாலும், அன்னையாக விளங்கும் கடவு

ளிடம் கொண்டுள்ள அளப்பரும் நம்பிக்கையாலும் கடவுள் நம் எல்லோருக்கும் தாய் என்ற எண்ணத்தை ஆச்சரியமான வகையில் நம் மனத்திலும் உண்டாகும்படிச் செய்கிறார்.... அவரோடு பழகியதன் மூலம் இந்துப் புராணங்களிலும் கதைகளிலும் கூறப்பட்டுள்ள முப்பத்து முக்கோடி தேவர்களின் தெய்விகச் சிறப்புக்களைச் சிறப்பாக அறிந்து கொள்ளும் ஆற்றல் பெற்றோம்.'' இதிலிருந்து பிரம்ம சமாஜத்தவர்களை ஸ்ரீராமகிருஷ்ணர் எவ்வளவு மாற்றி விட்டார் என்பது தெரிகிறது.

ஸ்ரீராமகிருஷ்ணரால் மிகவும் கவரப்பட்ட மற்றொரு பிரம்ம சமாஜத் தலைவர் பண்டித விஜயகிருஷ்ண கோசுவாமி ஆவார். அவர், அவதார புருஷர் சைதன்யரின் சீடரான அத்வைத ஆசார்யரின் குடும்ப வழியில் வந்தவர். பழமையான சமயச் சூழலில் வளர்க்கப்பட்ட கோசுவாமி இளம் வயதிலேயே கடவுளிடம் மிகுந்த பற்றுக்கொண்டு தெய்விக வாழ்வில் மிகுந்த தாகம் கொண்டார். அந்தக் காலத்தில் அவரைப் போன்று கடவுளை அடையும் ஆர்வம் கொண்டவர்கள் அனைவரும் மகரிஷி தேவேந்திரநாத் தாகூரிடம் வந்து சேர்ந்து, குறிப்பாக அப்போது அவரோடு இருந்த கேசவ சந்திரசேனரால் மிகவும் கவரப்பட்டனர். கேசவ சந்திரரால் விஜயருடைய ஆன்மிக வாழ்க்கை மிகுந்த பலனைப் பெற்றது. கடவுளைக் காண்பதற்காகவே அவர் கேசவரோடு பிரம்ம சமாஜத்தில் சேர்ந்து, அவருக்கு மிகச் சிறந்த தொண்டராக விளங்கி, அதன் காரணமாகத் தம் சுற்றத்தினரையும், தான் ஒரு பிராம்மணர் என்ற பெருமையையும் கூட உதறி எறிந்தார். கேசவரது மகளின் திருமணத்திற்குப் பிறகு அவர் கேசவரிடமிருந்து பிரிந்தார். அதன் பிறகு கடவுளைக் காண வேண்டும் என்ற அளவற்ற தாகமும் துடிப்பும் கொண்டு தன் மனத்தில் மிக மரியாதை கொண்ட ஸ்ரீராமகிருஷ்ணரை வந்தடைந்தார். இருவரும் நெருங்கிய நண்பர்களானார்கள். குருதேவர் அடிக்கடி கோசுவாமியைக் காண விரும்பினார்.* அவரும் தமக்கு நேரம் கிடைத்த போதெல்லாம் தட்சிணேசுவரம் வந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரோடு கோசுவாமி கொண்ட தொடர்பால் அவருக்குக் கடவுளைக் காண வேண்டும் என்னும் தாகம் தீவிரமாகியது. அவர் பல்வேறு சாதனைகளில் ஈடுபட்டார். அதன் மூலம், இதுவரை பிரம்ம சமாஜத்தின் கொள்கையைப் பின்பற்றி எந்தக் கடவுள்களை எல்லாம் கண்மூடித்தனம் என்று நினைத்திருந்தாரோ அவைகளின் தெய்விகத்தைத்

தெள்ளத் தெளிவாக நேராக அனுபவித்து உணர்ந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அவருக்குப் பக்தியும் பணிவும் எல்லையற்றுப் பெருகியது. அவரால் தாம் பெற்ற ஆன்மிகப் பேரின்பத்தை எல்லோரிடமும் கூறுவார். குருதேவரைப் பிரிந்து நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பால் இருந்த போதும் அவரைத் தெய்விகக் காட்சியில் நேராகக் காணும் பெரும் பேற்றையும் பெற்ருர் விஜயர்.

கேசவரும் விஜயரும் கொள்கைகளில் வேறுபட்ட சமாஜங்களின் தலைவர்கள் என்ருலும் ஸ்ரீராமகிருஷ்ணர் இருவரிடமும் ஒரே அன்பும் பரிவும் காட்டினுர். இருவருக்கும் இடையில் எழுந்த கருத்து வேற்றுமைக்காக வருந்திய அவர் அவர்களது மனக்கசப்பை நீக்கவும் முயற்சிகள் செய்தார்.

நாட்கள் செல்லச் செல்ல தனது கொள்கைகள் பிரம்ம சமாஜக் கொள்கைகளினின்று மிகவும் வேறுபடுவதைக் கண்ட விஜயர், அதிலிருந்து முற்றிலும் விடுபட்டு தனியிடம் ஒன்றில் தங்கி ஆன்மிக சாதனைகளில் ஈடுபட்டார்.

இவரைப் போலவே பிரம்ம சமாஜத்தின் புகழ்பெற்ற மற்றத் தலைவர்களான சிவநாத் சாஸ்திரியும் திரைலோக்ய நாத் சன்யாலும் ஸ்ரீராமகிருஷ்ணரின் மாசு மறுவற்ற தூய்மையாலும் அளவிட முடியாத தெய்விகத்தாலும் இணையற்ற அவருடைய அன்பாலும் பெரிதும் கவரப்பட்டதைப் பற்றித் தாங்கள் எழுதிய நூல்களில் மிகச் சிறப்பாக எழுதியுள்ளனர்.

## 29. கமார்புகூருக்குப் பயணங்கள்

கேசவ சந்திரசேனரை முதன் முதலில் சந்தித்த பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் ஓர் ஆச்சரியமான தெய்விகக் காட்சியை கண்டார். இதற்கு முன்பு வங்காளத்தில் தோன்றிய அவதார புருஷரான ஸ்ரீசைதன்ய மகாப்பிரபு சங்கீர்த் தனத்தின் மூலமே பக்தியைப் பரப்பினர். பெருந்திரளான மக்கள் அவரோடு சங்கீர்த்தனம் செய்தபடியே நாடு முழு வதும் சென்றனர். அந்தச் சங்கீர்த்தனத்தின் அலை வங் காளம் முழுவதும் பரவி, வங்காளத்தையே பக்தி வெள்ளத் தில் மூழ்கடித்தது. அவர் நடத்திய அந்தச் சங்கீர்த்தன ஊர்வலங்களைக் கண்ட மக்கள் மிகுந்த பக்தி வசப்பட்ட வர்களாக அவர் பின்னே சென்றனர். அந்த ஊர்வலங் களைக் காணும் ஆவல் இப்போது ஸ்ரீராமகிருஷ்ணரின் மனத் தில் ஆழமாக எழுந்தது.

ஒரு நாள் அவர் தட்சிணேசுவரத்தில் தம் அறைக்கு வெளியே நின்று கொண்டிருந்தார். அப்போது ஒரு தெய் விகக் காட்சி தோன்றியது. பெரும் திரளான கூட்டம் பக்தி சொட்டும் சங்கீர்த்தனங்களைப் பாடியவாறே பஞ்சவடி யிலிருந்து ஊர்வலமாக அவர் அறைக்கு எதிரே தெரிந்த வழி யாகச் சென்று கோயிலின் பெரிய வாசல் அருகே இருந்த மரங்களுக்குப் பின்னல் மறைந்துவிட்டது. அந்தக் கூட்டத் தின் நடுவில் ஸ்ரீசைதன்யர், தம் இரண்டு சீடர்களான நித்யானந்தரும் அத்வைதரும் இரண்டு பக்கங்களிலும் வர, தெய்விக ஆனந்தத்தால் தம்மையே மறந்து சங்கீர்த் தனம் செய்தவாறே நிதானமாக நடந்து செல்வதையும், அவருக்குப் பின்னே கூட்டத்தினர் முழுவதும் தெய்விகப் பரவசத்தில் திளைத்தவர்களாய் அவரைப் பின் தொடர்ந்து செல்வதையும் கண்டார். இதில் பலர் ஆனந்தமிகுதியால் நடனமாடியபடியே சென்றார்கள். பலர் தங்களை மறந்து அப்படியே நின்று கொண்டிருந்தார்கள். நான்கு நூற் றாண்டுகளுக்கு முன் வங்காளம் முழுவதும் நடந்த இந்தத் தெய்விக ஊர்வலம் இப்போது குருதேவரின் முன் சென்ற படியே இருந்தது. அந்தக் கூட்டத்தில் இருந்த சிலருடைய முகங்கள் அவர் நினைவில் நன்றாக பதிந்துவிட்டன. பிற்காலத்தில் தம்மிடம் வந்த சீடர்களில் சிலரை உடனே

அடையாளம் தெரிந்து கொண்டார் குருதேவர். இப்போது தமது முக்கியச் சீடர்களாக இருக்கும் அவர்கள் சைதன்யரின் கூட்டத்தைச் சேர்ந்த பக்தர்கள் என்பதை குருதேவர் உணர்ந்தார்.

இதற்குப் பிறகு சில நாட்கள் கழித்துச் சிறிது காலம் தங்கி வருவதற்காக அவர் கமார்புகூர் சென்ருர். அப்போது கமார்புகூரைச் சுற்றியிருந்த பல கிராமங்களுக்குச் சென்று அங்குள்ள வைஷ்ணவர்கள் நடத்திய பல்வேறு சங்கீர்த்தனங்களில் கலந்து கொண்டார். அந்தச் சங்கீர்த்தனங்களில் எழுந்த அளவற்ற தெய்விக பரவசத்தால் குருதேவர் உலகை மறந்து ஆழ்ந்த சமாதியில் மூழ்கியது அங்குள்ள மக்களின் மனத்தைக் கவர்ந்தது. இந்தச் செய்தி எங்கும் பரவியது. இதனுல் மற்றும் பல சங்கீர்த்தனக் குழுக்கள் அவர் இருக்கும் இடத்தைத் தேடி வந்தன. குருதேவர் தங்கியிருந்த இடத்திற்கு இடம் கொள்ளாத அளவிற்கு ஆண்களும் பெண்களும் இரவும் பகலும் கூட்டம் கூட்டமாக வந்தனர். சங்கீர்த்தனம் இரவும் பகலும் இடைவிடாமல் நடந்து கொண்டே இருந்தது. அந்த நிகழ்ச்சியைப் பற்றி குருதேவர் கீழ்வருமாறு கூறியிருக்கிருர்.

''நான் இருதயனின் வீட்டில் தங்கியிருந்த போது அவர்கள் என்னை சியாம்பஜாருக்கு அழைத்துச் சென்ருர்கள். அந்தக் கிராமத்திற்குள் நுழைவதற்குச் சற்றுமுன் நான் சைதன்யரைத் தெய்விகக் காட்சியில் கண்டேன். உடனே அந்தக் கிராமத்தில் உள்ளவர்கள் சைதன்யருடைய பக்தர்கள் என்பதைப் புரிந்து கொண்டேன். அங்கு சங்கீர்த்தனத்தின் கவர்ச்சி அளவிட்டுக் கூறமுடியாதபடி இருந்தது. ஏழு நாட்கள் இரவும் பகலும் எந்த நேரமும் கூட்டம் இருந்தபடியே இருந்தது. எப்போதும் சங்கீதமும் நடனமும் தொடர்ந்து நடந்தன. இதைத் தவிர அங்கு ஒன்றுமே இல்லை. மக்கள் இந்தக் காட்சியைக் காண சுவர்களின் மீதும் மரங்களின் மீதும் ஏறி நின்றனர். நான் நடவர் கோசுவாமியின் வீட்டில் மறைந்துகொண்டேன். அங்கும் இரவும் பகலும் கூட்டம் வந்து கூடிவிட்டது. சிறிது ஓய்வெடுக்கக் காலை நேரங்களில் பக்கத்தில் இருந்த நெசவாளியின் வீட்டிற்கு யாருக்கும் தெரியாமல் நழுவி விடுவேன். ஆனுல் அங்கும் என்னைக் கண்டு பிடித்து கூட்டமாக டம்டம் என்று தங்கள் மத்தளத்தோடும் தாளம் தட்டும் சிப்ளாக் கட்டைகளோடும் வந்துவிடுவார்கள். மறுபடியும் அதே

அற்புதமான காட்சி. தொடர்ந்து சங்கீர்த்தனம், நடனம் தான். பிற்பகல் மூன்று மணிக்கே நாங்கள் நாள்தோறும் குளிப்பதும் சாப்பிடுவதும் வழக்கமாகிவிட்டது. சங்கீர்த்தனத்தின் தெய்விக உணர்ச்சியில் நான் சமாதியில் ஆழ்ந்து மூழ்கி நினைவும் இழந்து மூச்சும் விடாமல் இருப்பதைப் பார்த்து சுற்றுப்புற கிராமம் எங்கும் 'ஒரு நாளில் ஏழு முறை செத்து, ஏழு முறை பிழைக்கும் மனிதர் ஒருவர் வந்திருக்கிறார்' என்ற வதந்தி பரவியது. இதன் விளைவாகக் கணக்கிட முடியாத அளவு மக்கள் வெறிபிடித்தவர்களாக என்னைப் பார்க்க வந்து கூடினர்.

''இந்த இடைவிடாதக் கூட்ட நெரிசலாலும் சங்கீர்த்தனம், நடனம் முதலியவைகளாலும் எங்கே எனக்கு வலிப்புநோய் வந்துவிடுமோ என்று என்னை அங்கிருந்த கூட்டங்களை எல்லாம் தள்ளிவிட்டு, காற்றோட்டமான பரந்த வெளிக்கு இருதயன் அழைத்து வருவான். சிறிது நேரத்திற்கெல்லாம் அங்கும் கூட்டம் சாரை சாரையாக மத்தளம், சிப்ளாக் கட்டையுடன் வந்து கூடிவிடும். 'டம்டம்' என்ற மத்தள ஓசையும் சிப்ளாக்கட்டை ஒலியும் மறுபடியும் ஆரம்பமாகிவிடும். இதைக் கண்டு இருதயன் மிகுந்த கோபத்தோடு அந்தக் கூட்டத்தைப் பார்த்து, 'எங்கே போனாலும் ஏன் இப்படிப் பின்னாலேயே வருகிறீர்கள்? இதற்கு முன் நீங்கள் சங்கீர்த்தனம் கேட்டதில்லையா?' என்று துரத்துவான். நெடுந்தொலைவில் உள்ள கிராமங்களிலிருந்தும் மக்கள் வந்து நான் பாடும் சங்கீர்த்தனத்தையும் ஆடும் நடனத்தையும் பார்த்தபடி இரவில்கூட அங்கேயே தங்கி விட்டனர். இங்குதான் நான் தெய்விகக் கவர்ச்சி என்றால் எப்படி இருக்கும் என்பதைப் புரிந்து கொண்டேன். கடவுள் அவதாரபுருஷராகப் பூமிக்கு வரும்போது யோக மாயை எனப்படும் கடவுளின் கண்டறியமுடியாத இந்தச் சக்தியால் எல்லோருடைய இதயமும் அவர்பால் வசீகரிக்கப் படுகிறது; அவருடைய தெய்விக லீலை பூமியில் நடக்கிறது.''

இந்த நேரத்தில் நடந்த மற்றும் சில சுவையான அனுபவங்களையும் குருதேவர் கூறியிருக்கிறார்:

''அந்த ஊரில் இருந்த வைஷ்ணவத் தலைவர்கள் நான் அந்தக் கிராமங்களில் அவர்களுக்குத் தரப்படும் காணிக்கைகளை வாங்கிக் கொள்ள வந்திருப்பதாக நினைத்து என்னோடு சண்டையிட வந்தனர். ஆனால் நான் சிறு துணியோ ஒருபைசாவோகூட வாங்கிக் கொள்ளாததைக் கண்ட அவர்களில் ஒருவர் நான் பிரம்மத்தை அறிந்தவன் என்று கூறினார்.

பிறகு என்னைப் பரிசோதனை செய்ய நினைத்து 'இவர் நெற்றி யில் ஏன் நாமம் இல்லை? கழுத்தில் ஏன் ஜபமாலை இல்லை?' என்று கேட்டார். அவர்களில் இன்னொருவரே இதற்கு விடை யாக, 'அவைகள் எல்லாம் உலர்ந்த தென்னை ஓலை மரத்தி லிருந்து தானே விழுவதுபோல் விழுந்துவிட்டன' என்றார்.''

ஸ்ரீராமகிருஷ்ணர் யாரிடமிருந்தெல்லாம் சிறந்த கருத் துக்களை அழகான உவமைகளோடு கேட்கிறாரோ அதைக் கூறியவரின் பெயரோடு அப்படியே அடிக்கடி எல்லோரிடமும் எடுத்துக் கூறுவார். வைஷ்ணவர் கூறிய இந்த அழகான உவமையை, தம்மிடமிருந்து சடங்குகளும் சம்பிரதாயங் களும் தாளுக மறைந்து போனதற்குக் காரணமாக அடிக்கடி உதாரணமாக எடுத்துக் காட்டுவார். முட்டாள்தனமான குறுகிய சமயக் கொள்கைகளில் அவருக்கு எப்போதும் நம்பிக்கையில்லை. அவைகளைப் பல சமயங்களில் கூறியிருக் கிறார். ஒரு முறை அதைப் பற்றிக் கூறும்போது, ''சியாம் புகூரிலும் அதைச் சுற்றியிருக்கும் கிராமங்களிலும் நெசவாளிக் குடும்பங்கள் வாழ்கின்றன. அவர்களில் பெரும்பாலோர் வைஷ்ணவர்கள். அவர்கள்தாம் என்னவெல்லாம் பேசுவார்கள்! அவர்கள் என்னைப்பற்றி, 'அவர் எந்த விஷ்ணுவைக் கும்பிடுகிறார்? உலகத்தையெல்லாம் காப்பாற்று கிறாரே அந்த விஷ்ணுவையா? ஆ! அவர் நாங்கள் கும்பிடு வதற்குத் தகுதியில்லாதவர். சிவனைக் கும்பிடுகிறாரா? எந்தச் சிவனை? எங்களுக்கு ஆத்மராம சிவனிலும் ஆத்மராமேஸ்வர சிவனிலும்தான் நம்பிக்கை' என்று கூறினார்கள். இன்னொருவன், 'நீ வணங்கும் விஷ்ணுவைப் பற்றி அவருக்கு விளக்கிக் கூறு' என்றான். இதைக் கேட்ட ஒருவன், 'ஏனப்பா நீ இதில் எங்கள் எல்லோரையும் இழுக்கிறாய்? இது உனக்கும் அவருக்குமான பேச்சு. நீங்கள் இருவருமே முடிவு செய்து கொள்ளுங்கள்' என்றான். அவர்கள் வெறும் நெசவாளிகள். வேறு ஒன்றும் தெரியாத வர்கள். ஆனாலும் பெரிய அறிஞர்கள்போல் என்ன பேச்சுப் பேசுகிறார்கள்!'' என்றார்.

இந்த நேரத்திலோ அல்லது இதற்கு முன்போ அல்லது பின்போ அவர் கமார்புகூர் வந்திருந்தபோது குறிப்பிடத் தக்க சில நிகழ்ச்சிகள் நடந்தன. மழைக்காலத்தில் தட்சிணே சுவரத்தில் பெருக்கெடுத்து வரும் கங்கை நீர் அவர் உடம்பிற்கு ஒத்துக் கொள்ளாததால் அப்போதெல்லாம் ஆண்டுதோறும் குருதேவர் கமார்புகூர் சென்று விடுவார். அப்போது நடந்த இந்த நிகழ்ச்சிகள் ஸ்ரீராமகிருஷ்ணரின்

முக்கியமான இயல்பை அறிந்து கொள்ளத் துணை செய்வதால் அவற்றை இங்கே குறிப்பிடுகிறோம். ஒரு முறை உணவு செரிக்காமல் குருதேவர் அவதிப்பட்டார். வெறும் கஞ்சி போன்றவற்றையே சாப்பிட்டுக் கொண்டிருந்தார். ஒரு நாள் இரவு, பாலோடு கலந்த பார்லி கஞ்சியைச் சாப்பிட்டுவிட்டு அவர்படுக்கச் சென்றார். வீட்டுப் பெண்களும் தங்கள் உணவை முடித்துக் கொண்டு படுக்கச் சென்றனர். நடு இரவில் திடீரென்று தம் அறையிலிருந்து தடுமாறியவராக அவர் வெளியே வந்து ''என்ன! எல்லோரும் தூங்கிக் கொண்டா இருக்கிறீர்கள்? எனக்குப் பயங்கரமாகப் பசிக்கிறது. ஏதாவது கொடுங்கள்'' என்றார்.

''என்ன? நீங்கள்தான் பாலும் பார்லி கஞ்சியும் நிறையச் சாப்பிட்டீர்களே! இப்போது எப்படிப் பசிக்கும்?'' என்றார் வீட்டு பெண்களுள் ஒருவர்.

''நான் எப்போது சாப்பிட்டேன்? நான் இப்போதுதான தட்சிணேசுவரத்திலிருந்து வருகிறேன்'' என்றார்.

இதைக் கேட்ட பெண்கள் அசந்து போனார்கள். அவர் இந்த உலக நினைவே இல்லாமல் பேசுகிறார் என்பதைப் புரிந்து கொண்டார்கள் என்றாலும் இந்த நேரத்தில் அவர் சாப்பிட அவர்களால் எதைத் தரமுடியும்? வீட்டில் சமைத்த உணவு எதுவும் இல்லை. எல்லாமே காலியாகி விட்டது. ஆனால் அவர்களில் ஒருவர் கொஞ்சம் துணிச்சலோடு ஸ்ரீராமகிருஷ்ணரிடம், 'செய்த சாப்பாடெல்லாம் ஆகிவிட்டது. இப்போது ஒன்றும் இல்லை. பொரிதான் இருக்கிறது. அதைக் கொஞ்சம் சாப்பிடுங்கள். உங்கள் உடம்பிற்கும் ஒன்றும் செய்யாது' என்றார். இப்படிச் சொல்லியபடியே உள்ளே போய்க் கொஞ்சம் பொரியைக் கொண்டு வந்து கொடுத்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் வெறுப்போடு முகத்தைத் திருப்பிக் கொண்டு அது தனக்கு வேண்டாம் என்றார். எல்லோரும் அவருக்கு உடம்பு சரியில்லை என்றும் வேறு எதைச் சாப்பிட்டாலும் நோய் அதிகமாகிவிடும் என்றும் பொரியையே சாப்பிடுமாறும் பலவாறு வற்புறுத்தினார்கள். அவர் ஏற்றுக் கொள்ளவே இல்லை. வேறுவழி இல்லாத அவர்கள் அந்த நடு இரவில் நிறைய இனிப்புகளைக் கொண்டு வந்தார்கள். அந்த இனிப்பு முழுவதையும் சாப்பிட்டுவிட்டு தட்டில் இருந்த பொரியையும் சாப்பிட்டார். இதைக் கண்ட எல்லோரும் ஏற்கனவே அஜீரணத்தால் துன்பப்படும் அவர் இதனால் மேலும் துன்பப்படப் போகிறார் என்று பயந்தார்கள். ஆனால் மறுநாள் காலையில் எல்லோரும் ஆச்சரியப்படும்

படி ஸ்ரீராமகிருஷ்ணருடைய அஜீரணம் தீர்ந்து போய்விட்டது. அவர் சாப்பிட்ட இரண்டு பவுண்டு இனிப்பும் அவர் நோயைத் தீர்த்து விட்டது!

மற்ருெரு முறை ஜயராம்பாடியில் தம் மாமனுர் வீட்டில் தங்கியிருந்த போது ஒரு நாள் இரவு மிகக் கடுமையான பசி அவருக்கு ஏற்பட்டது. அன்று இரவுதான் அங்கே ஒரு பெரிய விருந்து நடந்தது. நிறையப்பேர் சாப்பிட்டனர். சமைத்ததெல்லாம் தீர்ந்து போய்விட்டன. வீட்டுப்பெண்களுக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. அப்போது தண்ணீர் ஊற்றி வைத்த கொஞ்சம் சோறு மட்டுமே இருந்தது. ஸ்ரீராமகிருஷ்ணரும் உறங்கச் செல்வதற்கு முன் விருந்தில் குறைந்தது மூன்றுபேர் சாப்பிடும் சாப்பாட்டை ஒருவராக வயிறு நிறையச் சாப்பிட்டு விட்டுத்தான் சென்ருர். அவர் அந்த நேரத்தில் தம்மை மறந்தவராக பாவநிலையில் இருந்ததால் அந்த உணவு அவரை ஒன்றும் செய்யவில்லை. வேறு யாராவதாக இருந்தால் அஜீரணம் ஏற்பட்டு மிகுந்த வேதனைபட்டிருப்பார்கள். இந்த நிகழ்ச்சிகள் மூலம் மனம் தான் உடலை இயக்குகிறது. உடலில் தானே எதுவும் நடைபெறுவது இல்லை என்பதை ஸ்ரீராமகிருஷ்ணர் மிகச் சிறப்பாக நடைமுறைப்படுத்திக் காட்டினுர்.

அவருடைய உடலழகு ஆண்களையும் பெண்களையும் எப்படிக் கவர்ந்தது என்பதை முன்பே பார்த்திருக்கிருேம். ஒரு நாள் அவர் ஜயராம்பாடி வழியாக இருதயனின் ஊருக்குச் செல்ல வேண்டியிருந்தது. அவர் உடம்பு மிகவும் மென்மையாக இருந்ததால் கொஞ்ச தூரம்கூட அவரால் நடக்க முடியவில்லை. எனவே அவர் ஏறிச் செல்ல பல்லக்கொன்றை அமர்த்திஞர்கள். சிவந்த பட்டாடைகளை அணிந்து, கையில் தங்கத் தாயத்தைக் கட்டிக் கொண்டு, வெற்றிலைப் பாக்கு போட்டதால் உதடுகள் செக்கச்செவேலென்று இருக்க பல்லக்கில் ஏறவந்த அவருடைய அளவற்ற அழகால் கவரப்பட்டுப் பெரிய கூட்டம் ஒன்று அவரைச் சுற்றித் திரண்டு நின்றது. தம்மைச் சுற்றி இவ்வளவு பெரிய கூட்டம் நிற்பதைக் கண்ட குருதேவர் இருதயனிடம், ''என்ன விசேஷம்? ஏன் இவ்வளவு பெரிய கூட்டம் இங்கே நிற்கிறது?'' என்று கேட்டார். இருதயன், ''இப்பொழுது நீங்கள் வெளியூருக்குப் போகிறீர்கள். இன்னும் பலநாட்கள் அவர்கள் உங்களைப் பார்க்க முடியாது. அதனுல்தான் நீங்கள் ஊருக்குப் புறப்பட்டுப் போகும்போது இவ்வளவு கூட்டமாகப் பார்க்க வந்திருக்கிருர்கள்'' என்ருன். ''அவர்கள் தான் இத்

தனே நாட்களாக நாள்தோறும் என்னே இங்கே பார்த்துக் கொண்டிருக்கிருர்களே! இன்றுமட்டும் ஏன் இவ்வளவு கூட்டமாக அவர்கள் வந்திருக்கிருர்கள்?'' என்ருர் ஸ்ரீராமகிருஷ்ணர். அதற்கு இருதயன், ''இப்போது நீங்கள் இந்த உடையில் மிகமிக அழகாக இருப்பதுதான் காரணம். அதனுல் தான் இவ்வளவு பேரும் உங்களேப் பார்க்க வந்திருக்கிருர்கள்'' என்ருன். இதைக் கேட்டதும் ஆச்சரியமும் எரிச்சலும் கொண்டவராக குருதேவர், 'என்ன! ஒரு மனிதனேப் பார்க்கவா இவ்வளவு கூட்டம்?' என்று சொல்லிக் கொண்டே பல்லக்கினுள் ஏருமல் வீட்டிற்குத் திரும்பி தன் மிகுதியான அழகிற்குக் காரணம் என்று கூறப்பட்ட ஆடைகளே எல்லாம் களேந்து எறிந்தார். இருதயனும் மற்றவர்களும் எவ்வளவு வற்புறுத்தியும் அவர் போகவே இல்லே. இந்தச் சிறிய நிகழ்ச்சி பணம் சொத்துக்களில் மட்டுமல்லாது புற அழகைப் பற்றியும் கூட அவருக்கு எவ்வளவு வெறுப்பு இருந்தது என்பதைக் காட்டுகிறது.

கமார்புகூரில் சில மாதங்கள் தங்கிய பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரம் திரும்பினுர். தட்சிணேசுவரத்தில் பல பக்தர்களும் செல்வந்தர்களும், அறிஞர்களும் குருதேவரை வந்து கண்டனர். அவர்களில் ஒருவர் மிகப்பெரிய பணக்காரரான இலட்சுமிநாராயணன் என்னும் மார்வாரி. ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அவர் மிகுந்த மரியாதை கொண்டிருந்தார். ஒரு நாள் அவர் ஸ்ரீராமகிருஷ்ணரின் அறைக்குள் நுழைந்ததும் ஸ்ரீராமகிருஷ்ணரின் படுக்கை மீது விரிக்கப்பட்டிருந்த போர்வை கிழிந்தும் அழுக்குப் படிந்தும் இருப்பதைக் கண்டார். மதுர்பாபு காலமான பிறகு குருதேவரின் தேவைகளேக் கவனிப்பவர்கள் அவரைப் போல் யாரும் இல்லே. இதைக் கண்ட இலட்சுமிநாராயணன் மிகவும் மனம் வருந்தி குருதேவரின் தனிப்பட்ட செலவிற்காகப் பத்தாயிரம் ரூபாயை உடனடியாகக் கொடுக்க முன்வந்தார். அந்தப் பணத்தைத் வங்கி ஒன்றில் ஸ்ரீராமகிருஷ்ணரின் பெயரில் தான் கட்டி விடுவதாகவும் தேவைப்படும் போது தேவையான பணத்தை ஸ்ரீராமகிருஷ்ணர் எடுத்துச் செலவழிக்கும்படியும் கூறினுர். இதைக் கேட்ட குருதேவர் மிகுந்த வேதனேயும் கோபமும் அடைந்தார். இரண்டு கைகளேயும் குவித்து இலட்சுமிநாராயணனேக் கும்பிட்டு மறுமுறையும் இது போன்ற பேச்சைத் தம்மிடம் பேசவேண்டாமென்று கேட்டுக் கொண்டார். மார்வாரி எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தார். ஒன்றும் பயனில்லாமல் போகவே இருதயனிடம் சென்று அன்னே

சாரதா தேவியாரிடம் அந்தப் பணத்தைக் கொடுக்கும்படி மிகவும் வற்புறுத்தினர். இதைக் கேட்ட குருதேவர் அப்போதும்கூட அந்தப்பணம் தனக்கே தரப்பட்டதாகும் என்றும் பணத்தை வைத்துக் கொள்வது என்ற எண்ணமே தனக்கு மிகவும் வேதனை தரக்கூடியது என்றும் கூறி அப்படிக்கூடச் செய்யக்கூடாது என்று மறுத்தார். மார்வாரி மேலும் மேலும் வற்புறுத்தவே ஸ்ரீராமகிருஷ்ணர் அளவற்ற வேதனையுடன் காளியிடம், ''தாயே! இத்தகைய மனிதர்களை எல்லாம் இங்கே ஏன் அழைத்து வருகிறாய்? பணத்தைக் காட்டி இவர்கள் என்னை உன்னிடமிருந்து பிரிக்கப் பார்க்கிறார்களே'' என்று கதறினர். குருதேவரின் இந்தக் கதறலைக் கேட்ட பிறகு மார்வாரி தன் முயற்சியைக் கைவிட்டார். இநத நிகழ்ச்சியைப் பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் பிற்காலத்தில் குறிப்பிடும்போது, ''மதுரும் இலட்சுமிநாராயணனும் இப்படி எனக்குச் சொத்தும் பணமும் தரமுன் வந்து என்னை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டிய போது என் தலையை யாரோ வாளால் அரிவதுபோல் நான் துடித்தேன்'' என்று கூறியிருக்கிறார்.

அன்னை காளியை முழுவதுமாக நம்பி வாழாமல் எதிர்காலத்திற்காகத் திட்டமிடுவது குருதேவருக்கு எவ்வளவு அருவருப்பும் எரிச்சலும் வேதனையும் தருவதாக இருந்தது என்பதை மேற்கண்ட நிகழ்ச்சி காட்டுகிறது. பின்னர் ஒரு சமயம் இருதயன் ஒரு கன்றுக் குட்டியைப் பலநாட்களாக மேய்ப்பதும் குளிப்பாட்டுவதுமாகக் கவனித்துக் கொள்வதில் மும்முரமாக இருப்பதைக் கண்டார். இதைக் கண்ட குருதேவர் ஆர்வத்தோடு இருதயனிடம், ''அந்தக் கன்றுக் குட்டியை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறாய்? ஏன் இப்படி எப்போதும் அதனோடு இருக்கிறாய்?'' என்று கேட்டார். இருதயன், ''என்ன மாமா இப்படிக் கேட்கிறீர்கள்? இந்தக் கன்றை நான் வாங்கி இருக்கிறேன். இன்னும் சில நாட்கள் கழித்து நான் இதை என் கிராமத்திற்கு அனுப்பப் போகிறேன். அங்கே சில ஆண்டுகளில் இது வளர்ந்து காளையாகும்போது ஏரில் பூட்டி உழப்போகிறேன்'' என்றான். இதைக் கேட்டதும் ஸ்ரீராமகிருஷ்ணர் மயக்கமடைந்து 'தடாலென்று' கீழே விழுந்துவிட்டார். நெடுநேரம் கழித்து மயக்கம் தெளிந்து எழுந்ததும் உடம்பெல்லாம் பதைத்தவராக, ''உலக ஆசை கொண்ட மனிதர்களிடம் பொருளைப் பதுக்கி வைக்கும் ஆசைதான் எவ்வளவு பயங்கரமாக இருக்கிறது! இப்போது இது சிறு கன்றாக இருக்கிறது. இது பெரிய

காளையாக வளரவேண்டும். அதன் பிறகு நிலத்தில் பூட்டி உழவேண்டும். இவர்கள் எத்தனை வருடங்களுக்குப் பிறகு நடக்கும் நிகழ்ச்சிகளுக்குத் திட்டம் தீட்டுகிறார்கள். கடவுளை நம்பி இவர்களால் இருக்க முடியவில்லையே! ஆ! இதுதான் மாயை!'' என்று கூறினார். இருதயன் கூறிய வார்த்தைகள் அவர் தலைமீது பெரியதடி கொண்டு தாக்கியது போல் இருந்தது.

அன்னை அவருக்குத் தெய்விகக் காட்சியில் அவரைத் தேடி வரப்போவதாகக், காட்டிய பக்தர்களையும் சீடர்களையும் காணும் பேராவல் அடக்க முடியாததாக இந்தக் காலத்தில் குருதேவரிடம் எழுந்தது. தம் அனுபவங்களை எல்லாம் உலகத்திற்குத் தருவதற்கான கருவிகளுக்கு அவர் பயிற்சிதர வேண்டிய காலம் வந்து விட்டது. அன்னையின் அன்பு மயமான குழந்தைகளுக்குத் தம் அனுபவங்களை எல்லாம் கூறுவதற்கு அவர் மிகுந்த ஆவல் கொண்டார். இதைப்பற்றி அவர் பிற்காலத்தின் கூறும்போது, ''அந்தப் பக்தர்களைக் காண என்மனத்தில் எழுந்த துடிப்பிற்கு அளவே இல்லை. பகல் நேரத்தில் நான் மிகவும் துன்பப்பட்டு அந்தத் துடிப்பை ஒருவகையாக அடக்கிக் கொள்வேன். உலக ஆசை கொண்ட மனிதர்களின் பேச்சுக்கள் என்னைப் பெரிதும் வேதனைப்படுத்தின. எனவே தெய்விகத்தையே பற்றிப் பேசப் போகும் என்னுடைய அன்பான தோழர்களின் வருகைக்காக நான் துடித்தேன். அவர்களிடம் நான் என் தெய்விகக் காட்சிகளையும் ஆன்மிக அனுபவங்களையும் கூறி என் மனத்தில் இவ்வளவு நாட்களாக நான் சுமந்து கொண்டிருக்கும் சுமையைக் குறைத்துக் கொள்ளலாம் என்று நம்பினேன். நான் காணும் ஒவ்வொரு சிறிய நிகழ்ச்சியும் எனக்கு அவர்களைப் பற்றிய நினைவுகளையே என் மனத்தைச் சூழ்ந்து கொள்ளும்படிச் செய்துவிடும். அவர்களில், 'அவனுக்கு அப்படி உபதேசம் செய்ய வேண்டும், இவனுக்கு இப்படி உபதேசம் செய்ய வேண்டும்' என்றெல்லாம் ஒவ்வொருவருக்கும் எப்படி உபதேசம் செய்ய வேண்டும் என்பதை நான் மனத்தில் சொல்லிச் சொல்லிப் பார்த்துக் கொள்வேன். இப்படிப் பகல் முழுவதும் கழியும். பகல் முடிந்து இரவு வந்ததும் அவர்களைக் காணத்துடிக்கும் என் மன ஆவலை அடக்கவே முடியாது. 'ஐயோ மற்றொரு நாளும் போய்விட்டதே. அவர்கள் இன்றும் வரவில்லையே! என்ற நினைவு என் நெஞ்சை அடைக்கும். மாலை பூஜையின்போது கோயிலில் ஒலிக்கும் சங்கு, மணி இவைகளின் ஓசையைக்

கேட்டதும் தோட்டத்தில் உள்ள மாளிகையின் உச்சிக்குச் சென்று என் மனத்தைத் துடிதுடிக்க வைக்கும் என் வேதனையை வாய்விட்டு உரத்தக் குரலில் 'ஓ! என் குழந்தைகளே! எங்கே இருக்கிறீர்கள்? உங்களைப் பிரிந்து என்னால் இருக்க முடியவில்லையே. என்னிடம் வாருங்கள், வாருங்கள்' என்று கதறுவேன். ஒரு தாய் தன் மகனைக் காண வோ, ஒரு நண்பன் தன் நண்பனைக் காணவோ, ஒரு காதலன் தன் காதலியைக் காணவோ கூட நான் என் பக்தர்களைக் காணத் துடித்ததுபோல் துடித்திருக்க மாட்டார்கள்'' என்று கூறியுள்ளார். இதற்குச் சில நாட்களுக்குப் பின்னர் பக்தர்கள் ஒவ்வொருவராக வரத் தொடங்கினர்.

# 30. இராமசந்திர தத்தாவும் மனமோகன் மித்ராவும்

ஸ்ரீராமகிருஷ்ணர் காளிகோயில் தோட்டத்து மாடியில் நின்றுக் கதறி அழைத்த குரலுக்கு முதலில் வந்தவர்கள் இராமசந்திர தத்தாவும் மனமோகன் மித்ராவும். இரண்டு பேரும் ஒன்று விட்ட சகோதரர்கள். கல்கத்தாவில் வாழ்ந்து வந்தார்கள். ராம் என்று ஸ்ரீராமகிருஷ்ணராலும் அவருடைய பக்தர்களாலும் அன்போடு அழைக்கப் பட்ட இராமசந்திரர் கல்கத்தா மருத்துவக் கல்லூரியில் வேலை செய்து வந்தார். அவர் காலத்தில் ஆங்கிலக் கல்வி கற்ற எல்லோரையும் போலவே அவர் கடவுள் நம்பிக்கை இல்லாத நாத்திகராக இருந்தார். தான் எழுதிய 'ஸ்ரீராம கிருஷ்ணரின் வரலாறு' என்ற நூலில் அந்தக் காலத்தில் தன் நிலையைப் பற்றி எழுதும்போது, ''அந்தக் காலத்தில் நாங்கள் கடவுளை நம்பியதில்லை. நம்மைச் சுற்றி இருக்கும் இயற்கையே உலகத்தைப் பற்றி விளக்குவதற்குப் போதுமானதாகக் கருதப்பட்டது. கண்ணில் காணும் இந்த உலகம் மட்டுமே நிலையானது என்றும் வசதியும் இன்பம் மட்டுமே வாழ்வின் இலட்சியம் என்றும் கொண்டவர்களாக நாங்கள் எல்லோரும் இருந்தோம்.'' என்று எழுதியுள்ளார். ஆனால் அவர் மன அமைதி இழந்து தவித்தார். என்ன முயன்றும் அவரால் மனத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அப்போது ஒருநாள் அவர் கேசவ சந்திரசென் நடத்தி வந்த பத்திரிகை ஒன்றைப் பார்த்தார். அதில் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றி எழுதப் பட்டிருந்தது. உடனே மனமோகனோடு அவரைப் போய்க் காண முடிவு செய்தார்.

1897-ஆம் ஆண்டு ஒரு நாள் பிற்பகலில் ராமும் மனமோகனும் தட்சிணேசுவரம் சென்றனர். ஸ்ரீராமகிருஷ்ணருடைய அறைக்கதவு மூடப்பட்டிருந்தது. கதவைத் தட்டினார்கள். அவர்கள் உள்ளேயிருந்து காவி உடை அணிந்த ஒரு சந்நியாசி கதவைத் திறப்பார் என்று நினைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் அதற்கு மாறாக வெள்ளை உடையணிந்த மிகச் சாதாரண ஒரு மனிதர் கதவைத் திறந்தார். ஆனால் அவர் முன்னிலையில் நின்ற சில நிமிடங்களில் ஒரு மகானின் முன் நிற்கிறோம் என்ற உணர்வை இருவரும்

பெற்றார்கள். முதலில் அவர்களைக் கண்ட அந்த விநாடியி லிருந்தே ஸ்ரீராமகிருஷ்ணர் அவர்கள் இருவரையும் தம் நெருங்கிய சொந்தக்காரர்களாகவே நடத்தத் துவங்கினர். அவர்களைப் பற்றி மிகவும் நுட்பமாகக் கேட்டறிந்த ஸ்ரீராம கிருஷ்ணர், இராமசந்திரர் ஒரு டாக்டர் என்று அறிந்ததும் அறையில் காய்ச்சலோடு படுத்துக் கொண்டிருந்த இருத யனிடம், ''டேய் இருதய்! ஓடிவா, ஓடிவா. இங்கே ஒரு டாக் டர் வந்திருக்கிறார். அவர் உன் நாடியைப் பரிசோதிக்கட்டும்'' என்றார். இருதயன் எழுந்து வந்தான். ராம் அவருடைய நாடியைப் பார்த்து அவனுடைய உடல்நிலையைப் பற்றிக் கூறினர். அதன் பிறகு இரண்டு சகோதரர்களும் பிற்பகல் முழுவதையும் ஸ்ரீராமகிருஷ்ணரோடு ஆன்மிகம் பற்றிப் பேசு வதிலேயே கழித்தனர். மாலையில் அவர்கள் வீட்டிற்குப் புறப்பட்ட போது அவர்களிடம் சிறிது பிரசாதம் கொடுத் தார். அவர்கள் குருதேவரின் கால்களைத் தொட்டு வணங்கி புறப்படத் துவங்கியதும் மிகுந்த அன்போடு அவர்களை மறு படியும் வருமாறு கூறினர். இருவரும் குருதேவரின் அளவற்ற அன்பையும் கருணையையும் கண்டு மிகுந்த மகிழ்ச்சி அடைந் தனர். முதல் சந்திப்பிலேயே இத்தகைய அன்பையும் பரிவையும் அவர்கள் இதுவரை யாரிடமும் அனுபவித் ததில்லை. ஸ்ரீராமகிருஷ்ணரின் அன்பு இதுவரை காணாத புது மையானதாகவும், உண்மையானதாகவும் இருந்தது. ஏனென் றால் அந்த அன்பு சுயநலமில்லாதது.

வாரம் முழுவதும் தங்கள் வேலைகளில் ஈடுபடவேண்டி யிருந்ததால் விடுமுறை நாட்களான ஞாயிற்றுக்கிழமை களில் அவர்கள் ஸ்ரீராமகிருஷ்ணரைச் சென்று கண்டுவந்த னர். ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்தித்ததிலிருந்து அவர்கள் வாழ் வில் ஒரு புதிய திருப்பம் உண்டாகியது. உலக வாழ்விலிருந்து அவர்கள் சிந்தனை திரும்பியது. தட்சிணேசுவரம், ஸ்ரீராம கிருஷ்ணர் பற்றிய சிந்தனைகள் அவர்கள் மனத்தை ஆட் கொள்ள ஆரம்பித்தன. நாளாக நாளாகக் குடும்ப வாழ் வில் அவர்களுடைய பற்று குறைய ஆரம்பித்தது. எப்போ தும் கடவுளைப் பற்றியும் சமயத்தைப் பற்றியுமே பேச ஆரம்பித்தனர். இதைக் கண்ட அவர்களுடைய குடும்பத்தி னர்களும் உறவினர்களும் அச்சம் கொண்டனர். ஒரு நாள் மனமோகன் தட்சிணேசுவரம் புறப்பட்டார். அங்கே போகக்கூடாது என்று அவருடைய அத்தை தடுத்தார். ஆனல் மனமோகன் அதைப் பற்றிக்கவலைப்படாமல் இராமசந்திர ரோடு தட்சிணேசுவரம் சென்றார். அறைக்குள் சென்ற இரு

வரும் ஸ்ரீராமகிருஷ்ணர் மிகுந்த மனக்கலக்கத்தோடு உட்கார்ந்திருப்பதைக் கண்டனர். அவர்கள் காரணம் கேட்டதும் ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு குழந்தையைப் போல், ''ஒரு பக்தர் இங்கே வர விரும்புகிறார். அவருடைய அத்தையோ அதை விரும்பவில்லை. அவர் இங்கே வராமல் இருக்கப் பலவாறாகத் தடுக்கிறார். நாளாவட்டத்தில் அந்த அத்தையின் பிடிவாதத்தில் அவர் இங்கே வருவதை நிறுத்தி விடுவாரோ என்று நினைத்தேன். அதனால்தான் இப்படி வேதனையோடு உட்கார்ந்து கொண்டிருக்கிறேன்'' என்றார். இதைக் கேட்ட மனமோகன் தன் வீட்டில் நடந்த நிகழ்ச்சி இவருக்கு எப்படித் தெரிந்தது என்று ஆச்சரியப்பட்டார். அதோடு யார் எப்படித் தடுத்தாலும் தட்சிணேசுவரம் வருவதை மட்டும் நிறுத்தக் கூடாது என்று உறுதியும் செய்து கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் தம் பக்தர்களிடம் காட்டிய இத்தகைய தூய்மையான, அளவுகடந்த அன்பும் அவர்களுடைய நன்மையில் அவர் காட்டிய ஆர்வமும் அவர்களை எப்போதும் அவரிடம் இணைத்து வைத்தன.

மற்றொருநாள் மனமோகன் தட்சிணேசுவரம் புறப்பட்டார். அவர்களுடைய பெண் குழந்தை, காய்ச்சலால் வேதனைப்பட்டுக் கொண்டிருந்ததால் அவர் மனைவி அவரைத் தடுத்தாள். ஆனால் அவளது வேண்டுகோளையும் மறுத்து மனமோகன் தட்சிணேசுவரம் சென்றார். தான் கடவுளை அடையும் பாதையில் தன் நெருங்கிய உறவினர்களே இப்படித் தடையாக இருப்பதைக் கண்டு மிகவும் மனம் வருந்தினார். தட்சிணேசுவரம் சென்றதும் குருதேவர் தன் அறையில் முன்புபோலவே மிகுந்த வேதனையோடு அமர்ந்தபடி அழுது கொண்டிருப்பதைக் கண்டார். மிகுந்த பரபரப்போடு மனமோகன் அவர் அருகே சென்று அவருடைய அழுகைக்குக் காரணம் கேட்டார். குருதேவர் மனமோகனைக் கண்டதும் ''ஓ! என்மகனே! ஓர் உண்மையான பக்தர் அடிக்கடி இங்கே வருகிறார். இச்செயல் அவருடைய மனைவிக்குக் கோபத்தையும் வெறுப்பையும் உண்டாக்கி இருக்கிறது. அவள் அவரை இங்கு வராமல் தடுக்கிறாள். ஒருவேளை அவளுடைய கோபத்தையும் பிடிவாதத்தையும் கண்டு இங்கு அவர் வருவதை விட்டுவிடுவாரென்று நினைத்தேன். என்னால் அதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அதனால்தான் அழுகிறேன்'' என்றார். மனமோகனால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவேமுடியவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் அவருக்காகச் சிந்திய கண்ணீர் அவர் மனத்திலிருந்து ஊர், உலகம், உற்றார்

உறவினரிடமிருந்த பாசத்தையெல்லாம் அடியோடு அழித்து விட்டது. முழுக்க முழுக்கத் தன்னை ஸ்ரீராமகிருஷ்ணரின் திரு வடிகளில் அவர் ஒப்படைத்து விட்டார். தான் மட்டும் தட்சி ணேசுவரம் வந்து போவதோடு தன் உறவினர்களையும் நண்பர் களையும் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அடிக்கடி அழைத்து வந்து அவருடைய தெய்விகத் தொடர்பையும் ஆசிகளையும் பெறும் படிச் செய்தார். இப்படி மனமோகன் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கொண்டு வந்து சேர்த்த இரண்டு பேர் ஸ்ரீராமகிருஷ்ணரின் மிக மிக முக்கியமான சீடர்களாக மாறினர். அவர்களில் ஒருவர் நரேந்திரர் (பிற்காலத்தில் சுவாமி விவேகானந்தர்) மற்றொருவர் ராக்கால் (பிற்காலத்தில் சுவாமி பிரம்மா னந்தர்.)

இந்த நேரத்தில் மற்றும் பல பக்தர்கள் ஸ்ரீராமகிருஷ் ணரிடம் வரத் துவங்கினார்கள். இதனால் ஞாயிற்றுக்கிழமை களில் அவருடைய அறையில் மிகுந்த கூட்டம் கூடத் துவங் கியது. இந்த பக்தர்கள் தங்களுக்குள் மிகுந்த அன்போடு பழகத் துவங்கினர். ஸ்ரீராமகிருஷ்ணரின் வழிகாட்டுதலோடு ஆன்மிக சாதனை பழகத் துவங்கிய இவர்கள் தங்களுக்குள் ஒரு கூட்டமாக மாறினர். இவ்வாறு ஸ்ரீராமகிருஷ்ணரின் ஆன்மிக இயக்கம் உருவாகியது. குருதேவர் அவர்களுக்குள் சகோதர பாசத்தையும் அன்பையும் வளர்த்தார். அந்த பக்தர்கள் தம்மைக் கல்கத்தாவில் தங்கள் வீட்டிற்கு அழைக்கும் அழைப்பை ஏற்றுக் கொண்டு குருதேவர் அங்கேயும் செல்வார். அப்போது கல்கத்தாவில் உள்ள மற்ற எல்லா பக்தர்களையும் அந்த வீட்டிற்கு வருமாறு கூறுவார். இந்தக் கூட்டம் மெல்ல மெல்ல ஒரு விழா போலவே மாறத் துவங்கியது. சங்கீர்த்தனமும் விருந்தும் ஆன்மிகப் பேச்சுமாக பக்தர்கள் நாள் முழுவதையும் பேரானந்தத்தில் கழிக்கத் துவங்கினர். இந்த விழாக்கள் மூலம் கல்கத்தாவில் உள்ள பலரும் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றி அறிய முடிந்தது. தட்சிணேசுவரம் சென்று அவரைக் காண முடியாத பல பக்தர்களும் கல்கத்தா வந்து அவரைக் கண்டு மகிழ்ந்தனர்.

ஒரு நாள் மனமோகன் ஸ்ரீராமகிருஷ்ணர் கேட்டுக் கொண்டதன் பேரில் இத்தகைய விருந்தோடு கூடிய விழா ஒன்றுக்குத் தன் வீட்டில் ஏற்பாடு செய்தார். கேசவரும் அவருடைய பிரம்ம சமாஜ பக்தர்களும் அழைக்கப்பட்டனர். அந்த விழா ஆனந்த மயமாக, கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. பக்தர்களின் சங்கீர்த்தனத்தில் ஸ்ரீராமகிருஷ்ண ரும் சேர்ந்து கொண்டார். பாட்டின் ஆனந்த மிகுதியால்

அடிக்கடி சமாதியில் ஆழ்ந்து விட்டார். பக்தர்கள் தெய்விக போதையால் தங்களை மறந்து அழுவதும் சிரிப்பதுமாக ஆனந்தப் பரவசமானார்கள். சங்கீர்த்தனத்திற்குப் பிறகு எல்லோரும் குருதேவரைச் சுற்றியமர்ந்து ஆன்மிகப் பேச்சில் மூழ்கினர். சுவையான இரவு விருந்திற்குப் பிறகு ஆனந்தத்தோடு தங்கள் வீடுகளுக்குச் சென்றனர்.

மனமோகன் தனக்குள்ள பக்தியைப் பற்றி மிகுந்த பெருமை கொண்டிருந்தார். ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணர் பெரிய பக்தர்களின் கூட்டத்தில் தன் மற்றொரு பக்தரான சுரேந்திரைப் பற்றிக் கூறி, ''சுரேஷைப் பாருங்கள், அவருடைய பக்தி ஈடு இணையில்லாதது'' என்றார். இது மனமோகனின் மனத்தைப் பெரிதும் வாட்டியது. இனி தட்சிணேசுவரம் போவது இல்லையென்று முடிவு செய்தார். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் அவர் தவறாமல் தட்சிணேசுவரம் செல்பவர். கடந்த சில வாரங்களாகத் தொடர்ந்து அவர் வராதது ஸ்ரீராமகிருஷ்ணரின் மனத்தில் ஆவலையும் கவலையையும் தூண்டியது. இராமசந்திரரிடம் அது பற்றிக் கேட்டார். அவரால் சரியான பதில் சொல்ல முடியவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் அவரிடம் மனமோகன் வராத காரணம் ஒருவேளை அவருக்கு உடல்நிலை சரியில்லாததாலோ என்று நினைத்து அதை அறிந்து தமக்குத் தகவல் அனுப்பும்படிக் கூறினார். மனமோகன் உடல்நலத்தோடு இருப்பதை அறிந்த இராமசந்திரர் அந்தச் செய்தியை குருதேவருக்குச் சொல்லி அனுப்பினார். குருதேவர் தன்னை உடனே வந்து காணும்படி மனமோகனுக்குச் சொல்லி அனுப்பினார். மனமோகன் வரவில்லை. ''நீங்கள் உங்களுடைய சிறந்த பக்தர்களோடு மகிழ்ச்சியாக இருங்கள். நான் யாரோ அல்லவா! நான் ஏன் வரவேண்டும்?'' என்று கோபத்தோடும் ஆற்றாமையோடும் தனக்குள் பொருமிக் கொண்டிருந்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் பலபேர் முன்னிலையில் கூறியதை நினைக்க நினைக்க அவருக்கு ஸ்ரீராமகிருஷ்ணரின் மீது அளவற்ற கோபம் எழுந்தது. குருதேவர் மனமோகனைத் தம்மிடம் வரும்படி. ஆளுக்கு மேல் ஆளாகஅனுப்பிக் கொண்டே இருந்தார். அந்த அழைப்புகள் அனைத்தையும் மனமோகன் நிராகரித்துவிட்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் அனுப்பும் ஆட்களைக் கூடப் பார்க்கக் கூடாது என்ற வெறியில் கல்கத்தாவிலிருந்து தன்குடும்பத்தை நான்கு மைலுக்கு அப்பால் உள்ள கொன்னகருக்கு அழைத்துச் சென்று விட்டார். அங்கிருந்து நாள் தோறும் தன் அலுவலகத்திற்கு ரயில் மூலம் வந்து சென்றார். இவ்வாறு தன்னை

யும் வருத்திக் கொண்டு தன் குடும்பத்தையும் வருத்திக் கொள்ளும் எல்லாச் செயல்களுக்குமான பழி முழுவதையும் அவர் ஸ்ரீராமகிருஷ்ணர் மீதே போட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணரை மறக்கவும் அவருடைய தொடர்பிலிருந்து முற்றிலுமாகத் தன்னைத் துண்டித்துக் கொள்ளவும் அவர் என்னென்னவோ செய்தார். இதனால் மன அமைதியை இழந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றிய நினைப்புகளைத் தன் மனத்திலிருந்து விலக்க முயன்ற அளவிற்கு அவருடைய மனவேதனையும் கூடவே அதிகரித்தது. அலுவலகத்தில் வேலையில் மூழ்கி ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றிய நினைப்பை மறக்க நினைத்தார். எவ்வளவு முயன்றும் அவரால் வேலையே செய்ய முடியவில்லை. மனத்தைக் கட்டாயமாக வேலையின் மீது திருப்பியது தான் தாமதம், அது உடனடியாகத் தட்சிணேசுவரத்திற்கும் ஸ்ரீராமகிருஷ்ணரிடமும் திரும்பியது. முயன்று முயன்று தோற்ற அவர் ஒரு பைத்தியம் போலவே மாறி விட்டார். அப்போதுதான் தம் மனம் முழுவதும் எந்த அளவு ஸ்ரீராமகிருஷ்ணரிடம் பதிந்து இருக்கிறது என்பது அவருக்குத் தெரிந்தது.

இந்த நிலையில் ஒரு நாள் அவர் கங்கைக்குக் குளிக்கச் சென்றார். கங்கையில் இறங்கியதும் குருதேவர் கங்கை நீரின் புனிதம் பற்றிக் கூறிய வார்த்தைகள் அவர் நினைவிற்கு வந்தன. உடனே ஸ்ரீராமகிருஷ்ணரின் அமைதிமயமான முகம் அவர் மனக்கண் முன் தோன்றியது. ஸ்ரீராமகிருஷ்ணரின் நினைவைத் தம் மனத்திலிருந்து நீக்க மிகவும் முயன்றார். அந்த நேரத்தில் அவருடைய கண்கள் எதிரே கங்கையில் சிறிது தூரத்தில் தம்மை நோக்கி வந்து கொண்டிருக்கும் நாட்டுப்புறப் படகு ஒன்றின்மீது படிந்தன. ஓ! அதில் ஸ்ரீராமகிருஷ்ணர் அல்லவா உட்கார்ந்திருக்கிறார்! பக்கத்தில் இருக்கும் ஒருவரிடம் மனமோகனைச் சுட்டிக்காட்டி என்னவோ சொல்கிறார். ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்கத்தில் இருந்தவர் அவருடைய சீடரான நிரஞ்ஜன். மனமோகன் இதைக் கண்டு அதிர்ச்சியும் ஆச்சரியமும் அடைந்தார். இதற்குள் படகு மனமோகனின் அருகில் வந்தது. நிரஞ்ஜன் மனமோகனைப் பார்த்து, ''நீங்கள் ஏன் தட்சிணேசுவரம் வருவதில்லை? ஸ்ரீராமகிருஷ்ணர் உங்களைப் பார்க்க மிகவும் ஆவல் கொண்டு காத்திருந்து காத்திருந்து கடைசியாக இன்றைக்கு தாமே உங்களைப் பார்க்க படகில் புறப்பட்டு வந்துவிட்டார்.'' என்றார்.

அன்று மிகவும் கடுமையான வெயில். மிகவும் மென்மை யான உடல் கொண்ட குருதேவர் வெயில் தாளமுடியா மல் விசிறிக் கொண்டிருந்தார். அவர் உடல் முழுவதும் வியர்வை வழிந்து கொண்டிருந்தது. மனமோகனை நெருங் கியதும் அவர் சமாதியில் ஆழ்ந்து விட்டார். இந்தக் காட்சியைச் சிறிது நேரமாக அமைதியோடு கவனித்து வந்த மனமோகனின் மனம் உருகியது. கண்களில் நீர் பெருகி காட்சியை மறைக்க, 'ஆ! எனக்காக அல்லவா இவர் இவ்வளவு வேதனைகளை மேற்கொண்டார்! நான் அவ ருக்கு எவ்வளவு துன்பத்தைக் கொடுத்து விட்டேன்' என்று நினைத்தார். அந்த நினைவால் எழுந்த உணர்ச்சிப் பெருக்கால் அப்படியே நினைவிழந்து விட்டார். இதற்குள் படகில் அருகில் வந்துவிட்ட நிரஞ்ஜன் தண்ணீரில் குதித்து மனமோகனைத் தாங்கிக் கொண்டார். இந்த நேரத்தில் சமாதியிலிருந்து உலக நினைவை அடைந்த குருதேவர் நிரஞ்ஜனிடம், மனமோகனைப் படகிற்குக் கொண்டு வரும்படிக் கூறினார். மனமோகன் படகை அடைந்ததும் குருதேவர் அவரிடம் மிகுந்த அன்போடு, ''மனமோகன் உன்னைப் பற்றியே எனக்கு மிகவும் கவலை யாகிவிட்டது. நீ வருவாய், வருவாய் என்று காத்திருந்து பார்த்தேன். கடைசியில் நானே உன்னைப் பார்க்க வந்து விட்டேன்'' என்றார். மனமோகன் குருதேவரின் காலடியில் நெடுஞ்சாண் கிடையாக விழுந்தார். ''ஐயா! இவை எல்லாம் என் கர்வத்தால் விளைந்தவை'' என்று சொல்லிக் குழந்தை யைப் போல் தேம்பித் தேம்பி அழுதார். அதற்குமேல் அவரால் ஒன்றுமே பேசமுடியவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் மறு படியும் சமாதியில் மூழ்கிவிட்டார். படகு தட்சிணேசுவரம் நோக்கித் திரும்பியது.

இராமச்சந்திர தத்தா நாத்திகர் என்பதை முன்பே கண்டோம். ஸ்ரீராமகிருஷ்ணரோடு அவர் கொண்ட தொடர்பால் அவருடைய இந்த நாத்திகக் கொள்கை கொஞ்சம் கொஞ்சமாக மாறியது. என்றாலும் அவரு டைய சந்தேகம் முற்றிலுமாக நீங்கவில்லை. ஒருநாள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வெளிப்படையாக, ''உண்மையிலேயே கடவுள் என்று ஒருவர் இருக்கிறாரா?'' என்று கேட்டார். இதைக் கேட்ட ஸ்ரீராமகிருஷ்ணர், ''நிச்சயமாகக் கடவுள் இருக்கிறார். பகலில் நீ நட்சத்திரங்களைப் பார்க்க முடிவ தில்லை. அதனால் நட்சத்திரங்களே இல்லை என்று கூறிவிட முடியுமா? பாலில் வெண்ணெய் நிச்சயம் இருக்கிறது.

ஆனுல் பாலில் அதை யாராவது பார்த்துவிட முடியுமா? பாலில் வெண்ணெயைப் பார்க்க வேண்டுமானுல் அதைக் காய்ச்ச வேண்டும். தயிராக்க வேண்டும். பின்னர் ஓரிடத்தில் அமைதியாக அமர்ந்துகொண்டு தயிரைக் கடைய வேண்டும். அப்போதுதான் வெண்ணெயைப் பார்க்கலாம். அதுபோலதான் கடவுளும். நினைத்த உடனே அவரைப் பார்த்துவிட முடியாது. சில குறிப்பிட்ட சாதனைகளைப் பழகவேண்டும்'' என்ருர்.

இராமால் இந்தக் கருத்தை அப்படியே ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அவருடைய எண்ணத்தை அறிந்து கொண்ட குருதேவர் புன்சிரிப்போடு, ''நிச்சயமாகக் கடவுள் இருக்கிருர். உலகில் கடவுளின் படைப்பான உயிர்களைப் பார். அவைகளின் பிறப்பு, வளர்ச்சி, மறைவு இவைகள் எல்லாம் காரண காரியங்களோடு எவ்வளவு துல்லியமாக அமைந்துள்ளன. இத்தகைய உயிர்களைப் படைத்த அவர் வெறும் கற்பனையாக இருந்துவிட முடியாதல்லவா?'' என்ருர். ராமும் 'ஆமாம்' என்ருர். சிறிது நேர ஆழ்ந்த சிந்தனைக்குப் பிறகு 'இந்தப் பிறவியி லேயே நான் அவரைப் பார்க்க முடியுமா?'' என்ருர். 'நீ எதற்கு ஆசைப்படுகிருயோ அதை அடையலாம்'' என்ருர். குருதேவர் சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு ''நம்பிக்கைதான் வெற்றியின் உயிர் நாடி'' என்ருர். பிறகு ஒரு பாட்டைப் பாடி, ''இதோ பார்! நீ கிழக்கை நோக்கிப் பத்தடி சென்ருல் மேற்கைவிட்டுத் தானுகவே பத்து அடி விலகிச் செல்கிருய்'' என்ருர். என்ருலும் ராமிற்கு முழுமையான நம்பிக்கை வரவில்லை. கடவுள் இருக் கிருர் என்பதற்கு உறுதியான ஆதாரம் வேண்டும் என்று வாதிடத் துவங்கினுர். அவருடைய வாதத்தைக் கேட்ட குருதேவர், ''இதோ பார்! டைபாய்ட் காய்ச்சல் வந்த வனுக்கு குடம் குடமாகத் தண்ணீரும் குவியல் குவிய லாகச் சோறும் வேண்டும். இவை வேண்டுமென்று அவன் கெஞ்சும் கெஞ்சலைப் பற்றி டாக்டர் கவலைப்படவே மாட்டார். அவன் விரும்பும் மருந்தையும் அவனுக்குக் கொடுக்க மாட்டார். அந்த நோயாளியின் நிலையில் நீ இருக்கிருய்'' என்ருர். குருதேவரின் இந்த வார்த்தைகளும் ராமிற்கு ஆறுதலை அளிக்கவில்லை.

இந்தப் பேச்சு நடந்த சிறிது நாட்களுக்குள் ராமிற்குக் கடவுளைக் காணவேண்டும் என்னும் வெறி உண்டாயிற்று. கடவுளைக் காணுமல் இருப்பது பொறுக்க

முடியாத வேதனையாக அவருக்கு இருந்தது. இந்த நிலையில் ஒருநாள் இரவு அவர் கனவொன்று கண்டார். அதில் ஸ்ரீராமகிருஷ்ணர் தோன்றி இராமசந்திரரைக் குளித்து விட்டு வரச் சொன்னார். பிறகு அவர் காதில் மந்திரம் ஒன்றை ஓதி, தினந்தோறும் அதைக் குறிப்பிட்ட எண்ணிக்கை ஜபம் செய்யச் சொன்னார். விழித் தெழுந்த ராம் படுக்கையில் எழுந்து உட்கார்ந்துகொண் டார். அளவற்ற மகிழ்ச்சி அவர் மனமெங்கும் பொங்கிப் பெருகியது. அடுத்த நாள் காலை வேகமாக தட்சிணேசுவரம் சென்று குருதேவரிடம் தன் கனவைப் பற்றிக் கூறினார். ஸ்ரீராமகிருஷ்ணர் மிகுந்த மகிழ்ச்சியோடு அந்தக் கன விற்காக ராமின் அதிர்ஷ்டத்தைப் பாராட்டினார். ஆனால் ராம் தான் கனவில் பெற்ற இந்த மந்திர தீட்சை யைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. அது தன் மனக் கற்பனையின் விளைவாக உண்டானது என்று நினைத்துக் கொண் டார். ஆனால் கடவுளைக் காணவேண்டும் என்னும் அவருடைய துடிப்பு பொறுக்க முடியாதபடி அவருள் எழுந்தது. எவ்வளவு முயன்றும் என்ன செய்தும் அதனால் ஏற்பட்ட மனக்குழப்பத்தை அவரால் நீக்க முடியவில்லை. எனவே இவையனைத்திற்கும் காரணமான, ஸ்ரீராம கிருஷ்ணரை முதன் முதலில் சந்தித்த நாளைச் சபிக்கத் துவங்கினார். ஏனென்றால் அவரால் உலக சுகத்தை அனு பவிக்க முடியவில்லை. தெய்விக சுகத்தையும் அடைய முடியவில்லை. இரண்டிற்கும் நடுவில் நிறுத்தி வைக்கப் பட்டார்.

அவருடைய நிலை இருதலைக்கொள்ளி எறும்புபோல் இருந்தது. உலக சுகபோகங்களை அனுபவிக்க முடிய வில்லை. அதே சமயம் கடவுளிடமிருந்து எப்போதும் போலவே தான் மிக தூரத்தில் இருப்பதாகவே நினைத் தார். இதே நிலையில் சில நாட்கள் கழிந்தன. ஒருநாள் காலை பதினொருமணி இருக்கும், ராம் தம்முடைய நண்பர் ஒருவரோடு தன் மனக் குழப்பத்தைப் பற்றித் (காலேஜ் ஸ்கொயர், கல்கத்தா) தெருவில் நின்று பேசிக் கொண்டிருந்தார். அப்போது திடீரென்று கரியநிறமுள்ள ஒருவர் அவர்கள் முன் தோன்றி சிரித்தபடி, ''ஏன் இப்படிக் கவலைப்படுகிறீர்கள்? பொறுமையாக இருங்கள்'' என்று சொன்னார். இதைக் கேட்ட இருவரும், ''இந்த மனிதர் யார்? நாம் பேசிக் கொண்டிருந்தது அவருக்கு எப்படித் தெரியும்?'' என்று ஆச்சரியப்பட்டனர்.

பிறகு தங்களுக்கு அறிவுரைகூறி மன அமைதி கொடுக்க வந்த அவரைப் பற்றி அறிந்துகொள்ள அந்த புதியவரைப் பார்த்தனர். எதிரில் நின்றிருந்த அவர் காணப்பட வில்லை. நாலா பக்கமும் பார்த்தனர். யாருமே இல்லை. அந்தப் புதியவர் எங்கு போய்விட்டார்? ஒரே புதிராக இருந்தது அவர்களுக்கு. ஏனென்றால் அந்த மனிதர் வந்ததும் பேசியதும் வெறும் பிரமையல்ல. இருவரும் மிகத் தெளிவாக அவரைப் பட்டப்பகலில் பார்த்தார்கள். ராம் அந்த மனிதர் சொல்லியதைக் கடவுளிடமிருந்து வந்த செய்தியாக ஏற்றுக் கொண்டார். இதை ஸ்ரீராம கிருஷ்ணரிடம் சென்று கூறினார். இதைக் கேட்ட ஸ்ரீராம கிருஷ்ணர், ''இது மட்டுமல்ல. இதுபோன்ற காட்சிகளை இன்னும் நீ அதிகமாகக் காண்பாய்'' என்றார்.

இந்த நிகழ்ச்சி நடந்த சிறிது காலத்திற்குப் பிறகு ராம் மிகுந்த மன அமைதியை அனுபவித்தார். பக்தி யிலிருந்து கிடைக்கும் பரிபூரணமான ஆனந்தத்தை அவர் சுவைத்தார். உலக இன்பங்கள் இப்போது அவருக்குச் சுவை இழந்து போயின. அவற்றின் மீது வெறுப்பும், சலிப்பும் தோன்றியது. ஒருநாள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் தனக்குச் சந்நியாச தீட்சை தரும்படி வேண்டினார். அவருடைய வேண்டு கோளை ஸ்ரீராமகிருஷ்ணர் ஏற்றுக் கொள்ளவில்லை. ''உணர்ச்சி வசத்தில் எதையும் செய்துவிடக் கூடாது. ஒரு குறிப் பிட்ட மனிதன் மூலம் என்ன காரியத்தை நிறைவேற்றுவது என்பதைக் கடவுள் மட்டுமே அறிவார். நீ சந்நியாசி ஆகிவிட்டால் உன் மனைவியும் மக்களும் எங்கே யாரிடம் போய் நிற்பார்கள்? உனக்கென்று கடவுள் அமைத்துக் கொடுத்துள்ள வாழ்க்கையை நீ தகர்த்துக் குழப்பம் ஏற்படுத்தக் கூடாது. எல்லாம் உரிய நேரத்தில் நடக்கும்'' என்றார். ராம் அந்த நேரத்திற்கு அமைதியடைந்தார். ஆனால் சிலநாள் கழித்துத்தான் சந்நியாசி ஆகும் ஆசையை மறுபடியும் குருதேவரிடம் வெளியிட்டுத் தனக்குச் சந்நியாச தீட்சை தரும்படி வேண்டினார். இதைக் கேட்ட குருதேவர் ''சந்நியாசியாகி உலகைத் துறந்து நீ என்ன லாபத்தை அடையப் போகிறாய்? குடும்ப வாழ்க்கை ஒரு கோட்டை. கோட்டைக்கு வெளியிலிருந்து பகைவனோடு சண்டை செய்வதை விட் கோட்டைக்கு உள்ளேயிருந்து சண்டை யிடுவது எவ்வளவு மேல். உன் மனத்தில் முக்கால் பங்கு எப்போது கடவுளிடம் சென்றுவிடுகிறதோ அப்போதுதான் உலகத்தைத் துறக்க வேண்டும். அதற்கு முன் துறக்கக் கூடாது'' என்றார். ராம் அமைதியானார்.

ராம் வைஷ்ணவக் குடும்பத்தில் பிறந்தவர். சைதன்யரின் வாழ்க்கை வரலாற்றைப் படித்த அவர் அவருக்கும் ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் அமைந்திருக்கும் ஒற்றுமைகளைக் கண்டு மிகுந்த ஆச்சரியமடைந்தார். ஒருமுறை குருதேவர் கேட்டுக் கொண்டதால் ஒருநாள் மாலை அவரோடு தட்சிணேசுவரத்தில் தங்கிப் பேசிக் கொண்டிருந்தார். அப்போது அவர்களோடு யாரும் இல்லை. அப்போது ராம் குருதேவரை அசையாது கூர்ந்து பார்த்தார். இதைக் கண்ட குருதேவர், ''என்ன பார்க்கிறாய்?'' என்றார். ''உங்களைத் தான்'' என்றார் ராம். ''சரி! என்னைப் பற்றி என்ன நினைக்கிறாய்?'' என்றார் குருதேவர். ''உங்களைச் சைதன்யராகவே நான் நினைக்கிறேன்'' என்றார் ராம். இதைக் கேட்டுச் சிறிது நேரம் அமைதியாக இருந்த குருதேவர், ''ஆமாம்! பிராம்மணிகூட அடிக்கடி இப்படிச் சொல்வது வழக்கம்'' என்றார். ஸ்ரீராமகிருஷ்ணர் கூறிய இந்த பதில் ராமின் மனத்தில் ஆழப் பதிந்துவிட்டது.

நாளாக நாளாக ஸ்ரீராமகிருஷ்ணரின் அசாதரணமான ஆற்றல்களை ராம் மேலும் மேலும் உணரத் துவங்கினார். ஒருநாள் கொஞ்சம் இனிப்புப் பண்டங்களை எடுத்துக் கொண்டு குருதேவரைச் காணத் தட்சிணேசுவரம் புறப்பட்டார். தெருவில் ஒரு சிறுவன் இனிப்பு கேட்டுக் கெஞ்சவே கையிலிருந்த கூடையிலிருந்து ஒரு சிறிய மிட்டாயை அவனிடம் கொடுத்துவிட்டு, தட்சிணேசுவரம் சென்றார். கூடையை குருதேவரின் அறையில் வழக்கமாகக் வைக்கின்ற இடத்தில் கொண்டு வைத்தார். மாலை நேரமாயிற்று. பசி எடுக்கவே குருதேவர் ஏதாவது சாப்பிட விரும்பினார். ராம் தான் கொண்டுவந்த இனிப்புக் கூடையை அவர் முன் வைத்தார். ஆவலோடு அதிலிருந்து சில இனிப்புக்களை எடுத்த குருதேவர் கையில் வைத்தபடியே சிறிது நேரம் அதை உற்றுப் பார்த்தார். பிறகு வேண்டாம் என்பதுபோல் தலையை ஆட்டியபடியே கையில் எடுத்தவைகளைக் கூடையில் போட்டுவிட்டுக் கையைக் கழுவிக் கொண்டார். குருதேவரின் இந்தச் செயல் ராமின் மனத்தை மிகவும் வேதனைப்படுத்தியது. அடுத்தமுறை ராம் தட்சிணேசுவரம் வந்தபோது குருதேவர் அவரிடம், ''இதோபார், ராம். எப்போதாயிருந்தாலும் எனக்காக எடுத்துவரும் எந்தப் பொருளிலிருந்தும் வேறு யாருக்கும் கொடுக்காதே. கடவுளுக்கு அர்ப்பணம் செய்யாமல் நான் எதையும் சாப்பிடுவதில்லை. யாருக்காவது கொடுத்து

எஞ்சியதை என்னால் கடவுளுக்கு அர்ப்பணம் செய்ய முடிவ தில்லை'' என்றார். இது போன்ற நிகழ்ச்சிகள் குருதே வரின் அற்புதமான தெய்விக சக்தியில் ராமிற்கு ஆழ்ந்த நம்பிக்கையை ஏற்படுத்தியது.

இதன் பிறகு சில நாட்கள் கழிந்ததும் முன்பு போலவே ராமின் மனம் அமைதியில்லாமல் அல்லல் படத் துவங்கியது. இந்த உலகம் இருண்ட பாலைவனமாகக் காட்சியளித்தது. அதிலிருந்து மீளமுடியாத அவர் தம் வேதனையைத் தீர்த்துக் கொள்ளக் குருதேவரிடம் ஓடி வந்தார். இந்த முறை குருதேவர் அவருக்குச் சுருக்கமாக பதிலளித்ததோடு பேச்சையும் அதிகம் வளர்த்தாமல் அவ ரிடம், ''அதற்கு நான் என்ன செய்ய முடியும்? அதெல் லாம் இறைவனின் விருப்பம்'' என்று இரண்டொரு சொற்களில் தன் பேச்சை முடித்துக் கொண்டார். குருதேவரின் இத்தகைய நடத்தையைக் கண்டு ஆச்சரியப் பட்ட ராம், ''என்ன இப்படிப் பேசுகிறீர்கள்? நான் எப்போதும் உங்கள் உதவியை நாடி அல்லவா இருக்கிறேன். நீங்கள் என்னை இப்படி நடத்தினால் இப்பொழுது நான் என்ன செய்வது?'' என்றார். இதைக் கேட்ட குருதேவர் ''நான் எதற்கும் கடமைப்பட்டவன் அல்ல. உனக்கு விருப்ப மானால் இங்கே வா. விருப்பம் இல்லையென்றால் வர வேண் டாம்'' என்றார். தன் மீது ஆகாயத்திலிருந்து இடி விழுந்தால் கூட ராம் ஆச்சரியப்பட்டிருக்கமாட்டார். இவ்வளவு நாட்கள் அன்பு மயமாகக் கண்ட குருதேவரின் இந்தப் பேச் சால் அவர் நடுநடுங்கிப் போனார். அந்தப் பயங்கர அதிர்ச்சி யிலிருந்து அவரால் மீள முடியவில்லை. மீண்டதும் அவருக்கு முதலில் தோன்றிய எண்ணம் கங்கையில் மூழ்கி உயிரை விடவேண்டும் என்பதுதான். இப்படி நினைத்தபடியே குரு தேவரின் அறையைவிட்டு வெளியே வந்தவருக்கு மறுபடி யும் வேறு நினைவு தோன்றியது. ''நான் ஏன் முட்டாள் போல் தற்கொலை செய்து கொள்ளவேண்டும்? ஸ்ரீராம கிருஷ்ணர் கனவில் தீட்சை பெறுவது மிகுந்த அதிர்ஷ்ட மானது என்று சொன்னார். நான் என் கனவில் பெற்ற மந்திரத்தை ஜபித்து அதன் பலன் அளிக்கும் சக்தியை இன்று பரீட்சை செய்து பார்க்கப்போகிறேன். கடவுளை விடவும் அவரின் திருநாமம் உயர்ந்தது என்று சொல் கிறார்களே!'' என்று நினைத்தவராய் ஸ்ரீராமகிருஷ்ணரின் அறைக்கு வடக்கே இருந்த வராந்தாவில் படுத்துக்கொண்டு கனவில் பெற்ற மந்திரத்தை மௌனமாக ஜெபிக்க ஆரம்பித்தார்.

இரவு நெடு நேரம் கழிந்துவிட்டது. எல்லாவற்றையும் மறந்தவராய் ராம் வராந்தாவில் படுத்தபடி 'மந்திரத்தை ஜெபித்துக் கொண்டே இருந்தார். அப்போது மூடியிருந்த ஸ்ரீராமகிருஷ்ணரின் அறைக் கதவுகள் திறந்தன. ஸ்ரீராம கிருஷ்ணர் அறையிலிருந்து எழுந்து ராமிடம் வந்தார். பக்தர்களுக்குச் சேவை செய்யும்படி அவரிடம் சொல்லி விட்டு தன் அறைக்குத் திரும்பிவிட்டார்.

ராம் கொஞ்சம் கஞ்சப் பேர்வழி. பணம் செலவழிக்க மாட்டார். பக்தர்களுக்கு விருந்து வைத்து சேவை செய்யும் படி ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியதைச் செய்யாமல் சாமர்த் தியமாக நாள் கடத்திக் கொண்டே வந்தார். ஆனால் குரு தேவர் அவருக்கு அதை நினைவூட்டி, தாம் அவருடைய வீட்டிற்கு வருவதாக ஒரு நாளையும் அறிவித்து அன்று பக்தர்களை அழைத்து விருந்துக்கு ஏற்பாடு செய்யும்படிக் கூறினர். ராம் தயக்கத்தோடு ஒப்புக் கொண்டார். ஆனால் மறுநாளே அவருடைய இதயக் கதவுகள் திறந் தன; குருதேவர் தன்பால் அளவற்ற கருணைகொண்டு எல் லோருக்கும் அழைப்புக் கொடுக்க, கட்டாயப்படுத்தியதை தெரிந்து கொண்டார். கஞ்சத்தனம் அவரை விட்டு நீங் கியது. மிகுந்த செலவில் பக்தர்களுக்குச் சுவையான விருந் திற்கு ஏற்பாடு செய்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் தம் பக்தர் களோடு ராமின் வீட்டிற்குச் சென்று மகிழ்ச்சியோடு சங்கீர்த்தனம் நிகழ்த்தினர்; ஆன்மிக விஷயங்களைப் பற்றி அவர்களுக்குக் கூறினர். அவர் அளித்த சுவையான விருந்தை எல்லோரும் சாப்பிட்டனர்.

மறுநாள் மாலை ராம் தட்சிணேசுவரம் சென்றார். ஸ்ரீராமகிருஷ்ணர் மிகுந்த அன்போடு இரவு பத்து மணி வரையில் அவரோடு பேசிக் கொண்டிருந்து அவருக்கு வேண்டிய உபதேசங்களை எல்லாம் கூறினர். ராம் குருதேவரிடம் விடுபெற்றுக் கொண்டு வீட்டிற்குப் புறப்பட அவருடைய அறையிலிருந்து வெளியே வந்தவர் அறைக்கு வெளியே தாழ்வாரத்தில் சிறிது நேரம் நின்றார். அப் போது ஸ்ரீராமகிருஷ்ணர் பாவ சமாதியில் ஆழ்ந்தபடி தன் அருகே மிகவும் நெருங்கி வந்து ''நல்லது! உனக்கு என்ன வேண்டும்?'' என்றார். இதைக் கேட்டு ராம் ஒன்றும் புரியாமல் குழம்பினர். எதைக் கேட்டாலும் கொடுக்கின்ற மகா சக்தியொன்றின் முன் தான் இப்போது நிற்கிறேம் என் பது அவருக்குத் தெளிவாகப் புரிந்தது. உணர்ச்சிப் பெருக் கால் நெஞ்சும் அடைத்தவராக ''பகவானே! என்ன வேண்டும்

என்றே எனக்குத் தெரியவில்லை. எனக்கு எது நல்லதோ அதை நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள்'' என்றார். ஸ்ரீராம கிருஷ்ணர் தம் கையை அவருக்கு முன்னே நீட்டியபடி, 'நான் கனவில் கொடுத்த மந்திரத்தைத் திருப்பிக் கொடு' என்ற கூறியபடியே சமாதியில் மூழ்கிவிட்டார். ராம் மந் திரத்தை அவரிடம் திருப்பித் தந்துவிட்டு அவர் காலடியில் நெடுஞ்சாண்கிடையாக வீழ்ந்து வணங்கினார். குருதேவர் தம் காலின் பெருவிரலை அவர் தலைமேல் வைத்தார். எவ் வளவு நேரம் அதே நிலையில் குருதேவரை வணங்கி கியபடி இருந்தார் என்று ராமுக்குத் தெரியவில்லை. நீண்ட நேரம் கழிந்தது. குருதேவர் உலக நினைவு பெற் றுத் தன் விரலை ராமின் தலையிலிருந்து எடுத்துக் கொண்டார். ராம் எழுந்து நின்றார். குருதேவர் அவரைப் பார்த்தபடி ''நீ எதையாவது பார்க்க விரும் பினால் இங்கே என்னைப் பார்'' என்றார். ராம் குருதேவரை நிமிர்ந்து பார்த்தார். அங்கே குருதேவர் இல்லை. தன் இஷ்ட தெய்வம், தன்னுடைய தியானத்தில் தான் காண வேண்டுமென்று பெரும் முயற்சி செய்த தெய்வம் அங்கே நிற்பதைக் கண்டார். ''இனிமேல் நீ ஜபம், தியானம் எதுவும் செய்ய வேண்டியதில்லை. அடிக்கடி இங்கே வா. அது ஒன்றே உனக்குப் போதும். அப்படி வரும்போது ஏதாவது காலணா மதிப்புடைய பொருளையேனும் காணிக்கை யாக வாங்கி வா'' என்றார்.

இப்படி அவரைத் தேடி முதலில் வந்த இரண்டு பக்தர்களின் ஆன்மிக தாகங்கள் தீர்த்து வைக்கப் பட்டன.

## 31. சுரேந்திரரும் கேதாரும்

இராமசந்திரருக்கும் மனமோகனுக்கும் சுரேந்திரநாத் மித்ரா என்றொரு நண்பர் இருந்தார். இவர்களுடைய வீட்டிற்கு அருகிலேயே அவர் வசித்து வந்தார். சுரேந்திரர் நன்கு படித்தவர். ஆங்கிலக் கம்பெனி ஒன்றில் முக்கிய வேலையில் இருந்தார். அதன் மூலம் நல்ல வருமானம் அவருக்கு இருந்தது. பதினெட்டாம் நூற்றாண்டில் ஆங்கிலக் கல்வி கற்று சமயப்பற்றோ நாட்டுப்பற்றோ இல்லாதிருந்த இளைஞர்களில் குறிப்பிடத் தக்கவராக இருந்தார் அவர். அவருக்குக் கடவுள் நம்பிக்கை என்பது சிறிதும் கிடையாது. ஆனால் ஏழைகளுக்கும் துன்பப்படுகிறவர்களுக்கும் உதவி அவர்களுடைய துன்பங்களைத் தீர்ப்பதில் இயல்பாகவே ஆர்வம் இருந்தது. அதன் மூலம் மிகுந்த மகிழ்ச்சியும் அடைந்தார். அவரிடம் குடிப் பழக்கமும் விலைமாதர்களின் வீடுகளுக்குச் செல்லும் பழக்கமும் மிகுதியாக இருந்தது. 'எல்லாமே ஒருவனுடைய மன உறுதியால் தான் நடக்கிறது. ஒவ்வொருவனையும் உருவாக்குவது அவனுடைய சுதந்திரமான மனமே. ஒவ்வொருவனும் தன் மனம்போன போக்கிலேயே நடக்கலாம்' என்ற எண்ணமுடையவராகவும் அவர் இருந்தார்.

சில நாட்களாக அவர் சொலல முடியாத வேதனையை அனுபவித்து வந்தார். கீழ்த்தரமான எண்ணங்களை அவரால் விடமுடியவில்லை. தீராத மனப் போராட்டம் ஏற்பட்டு அது அவரைத் தற்கொலை செய்து கொள்ளும்படியான நிலைமைக்கு அழைத்துச் சென்று விட்டது. இந்த நிலையில் ஒரு நாள் தன் இரண்டு நண்பர்களிடமும் மனவேதனையைச் சொல்ல ஆரம்பித்தார். அதனோடு சில நாட்களுக்கு முன்பு நடந்த ஒரு நிகழ்ச்சியையும் அவர்களிடம் கூறினார். ஒருநாள் சுரேந்திரர் பகல் உணவைச் சாப்பிட்டுவிட்டு அவர் வீட்டின் முன் நின்றிருந்தார். அப்போது கம்பீரத் தோற்றத்துடன் தெருவழியாகச் சென்று கொண்டிருந்த ஒரு சந்நியாசினி அவரை அணுகி ''மகனே! இந்த உலகத்தில் கடவுள் ஒருவர்தான் நிலையானவர். மற்ற எல்லாம் வெறும் மாயை'' என்று கூறிவிட்டுச் சென்றார். அமைதி இழந்து துடித்துக் கொண்டிருந்த சுரேந்திரரின் மனத்தில்

சந்நியாசினியின் இந்த வார்த்தைகள் ஆழமாகப் பதிந்தன. சுரேந்திரர் கூறியவற்றை எல்லாம் அனுதாபத்தோடு கேட்ட இரண்டு நண்பர்களும் அவரைத் தட்சிணேசுவரத்துக்கு ஸ்ரீராமகிருஷ்ணரைக் காணவரும்படி அழைத்தனர். ஆங்கிலக் கல்வியும் நாத்திக எண்ணங்களுமாக வாழ்ந்த சுரேந்திரர் மறுத்துவிட்டார். ஆனால் ராமும் மனமோகனும் சுரேந்திரரை விடுவதாக இல்லை. சுரேந்திரரிடம் ஸ்ரீராமகிருஷ்ணரின் பெருமைகளை எல்லாம் கூறி ஒருமுறை தங்களோடு வந்து அவரைக் காணும்படி வற்புறுத்தினர். ''உங்களுடைய பரமஹம்சரைக் காண வருகிறேன். அவர் ஏமாற்றுப் பேர்வழியாயிருந்தால் அங்கேயே அவர் காதைப் பிடித்து திருகி விடுவேன்'' என்றார் சுரேந்திரர். சரி என்று இருவரும் சம்மதிக்கவே ஒருநாள் அவர்களோடு தட்சிணேசுவரத்துக்குச் சென்றார்.

மூவரும் ஸ்ரீராமகிருஷ்ணரின் அறைக்குள் நுழைந்தனர். அறையில் சில பக்தர்கள் அமர்ந்து ஸ்ரீராமகிருஷ்ணர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தனர். கட்டிலின்மேல் உட்கார்ந்தபடி ஸ்ரீராமகிருஷ்ணர் பேசிக் கொண்டிருந்தார். ராமும் மனமோகனும் குருதேவரை வணங்கி அறைக்குள் அமர்ந்தனர். சுரேந்திரரோ குருதேவரை வணங்கவில்லை. வணங்க வேண்டும் என்ற எண்ணமும் அவருக்குத் தோன்றவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணரின் சாதாரணத் தோற்றம் அவர் மனத்தில் எந்தவிதமான மரியாதை உணர்வையும் எழுப்பவில்லை. அறையில் ஒரு மூலையில் உட்கார்ந்து குருதேவர் பேசுவதைக் கவனித்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் தம்மிடம் யார் வந்தாலும் முதலில் அவர்களைத் தலைதாழ்த்தி வணங்குவார். அதன்படி சுரேந்திரரையும் வணங்கிவிட்டுத் தான் பேசிக் கொண்டிருந்ததைத் தொடர்ந்து பேசத் துவங்கினார்.

''ஆமாம்! மனிதன் ஏன் பூனைக் குட்டியாக ஆகாமல் குரங்குக் குட்டியாக இருக்கிறான்? பூனைக்குட்டி தானாக எதுவும் செய்வதில்லை. எல்லாவற்றுக்கும் தாயையே நம்பி இருக்கிறது. தாய்தான் அதை வாயில் கவ்வித் தூக்கிச் செல்கிறது. தாய் எந்த இடத்தில் வைத்தாலும், அது அடுப்பாக இருந்தாலும் சரி அல்லது நல்ல படுக்கைமீதாயினும் சரி பூனைக்குட்டி அங்கே இருக்கிறது. தனக்கு ஏதாவது துன்பம் வந்தால் ''மியாமியா'' என்று தன் தாயை அழைப்பதை மட்டுமே செய்கிறது. உடனே தாய்ப் பூனை ஓடிவந்து குட்டியைக் காப்பாற்றுகிறது. ஆனால் குரங்குக் குட்டி விஷயம் அப்படியல்ல. அது தன் தாயை தானே பிடித்துக்

கொள்ளுகிறது. தாய்க் குரங்கு மரங்களுக்கு மரம் தாவும் போது சில நேரங்களில் குரங்குக் குட்டி தன் பிடியை விட்டுவிடுமானல் கீழே விழுந்து காயப்படுத்திக் கொள்ளு கிறது. பூனைக் குட்டிக்கு இத்தகைய ஆபத்து எதுவும் இல்லை. ஏனென்றல் அது முழுக்க முழுக்கத் தன் தாயை மட்டுமே நம்பியே இருக்கிறது. மனிதர்களுக்கும் இதே நிலைதான். யார் கடவுளையே நம்பியிருக்கிறர்களோ அவர் களுக்கு எந்தவித ஆபத்தும் இல்லை. கடவுள் அவர்களைப் பார்த்துக் கொள்கிறர். குரங்குக் குட்டியைப் போல் தன்னை மட்டுமே யார் நம்பியிருக்கிறர்களோ அவர்கள் கீழே விழுந்து தங்களைக் காயப்படுத்திக் கொள்கிறர்கள்'' என்றர்.

குருதேவரின் இந்த வார்த்தைகள் சுரேந்திரர் மனத்தில் நேராகச் சென்று தைத்தன. 'நானும் இந்தக் குரங்குக் குட்டி போல்தான் இருக்கிறேன். என் துன்பங் களுக்கெல்லாம் இதுதான் காரணம். இந்த விநாடியி லிருந்து நான் கடவுளின் விருப்பத்திற்கு எதிராக நடக்க மாட்டேன். நான் நினைப்பதுபோல் காரியங்கள் நடக்க வில்லையானல் தற்கொலை செய்து கொள்ளவும் சிந்திக்க மாட்டேன். அன்னை காளி என்னை எந்தநிலையில் வைக் கிறளோ அந்த நிலையில் திருப்தி கொள்வேன்'' என்று நினைத்தார். குருதேவர் தொடர்ந்து சொல்லிய மற்றெரு உருவகக் கதை அவர் மனத்திலிருந்து வேதனை முழுவதை யும் அகற்றியது. அன்னை காளியிடம் தன்னை முழுவதுமாக ஒப்படைத்துவிட்டு அவருடைய குழந்தையாக இருப்பது எப்படி என்பதை அவர் குருதேவர் மூலம் அறிந்து கொண் டார். குருதேவரின் ஒவ்வொரு வார்த்தையையும் மனப் பொக்கிஷத்தில் பத்திரப்படுத்திக்கொண்டார். வீட்டிற்குப் புறப்பட எழுந்தபோது சுரேந்திரர் முற்றிலும் மாறுபட்ட மனிதராகிவிட்டார். முதலில் அறைக்குள் நுழைந்தபோது ஸ்ரீராமகிருஷ்ணர் வணங்கியபோதும் அதைப் பற்றிக்கவலைப் படாதவராக அறைக்குள் சென்று அமர்ந்தவர் இப்போது அவர் திருவடிகளை வணங்கி விடை கேட்டார். குருதேவர் காளியின் பிரசாதத்தை அளித்து அவரிடம் மிகுந்த அன் போடு, ''மறுபடியும் இங்கு அவசியம் வாருங்கள். வரு வீர்கள் இல்லையா?'' என்றர். ஸ்ரீராமகிருஷ்ணரின் அன்பு சுரேந்திரரின் மனத்தை அவருக்கு அடிமையாக்கிவிட்டது. வீடு திரும்பிய சுரேந்திரர் வழியில் தன் நண்பர்களிடம் ''அவரிடம் போனதும் எல்லாமே மாறிவிட்டது. நான்

அவரது காதைப் பிடித்துத் திருகுவதற்கு பதில் அவர் என் காதைப் பிடித்துத் திருகி விட்டார். என் அந்தரங்கத்தில் உள்ள எண்ணங்களைக்கூட அவர் அறிந்திருப்பார் என்று எனக்கு எப்படித் தெரியும்? வாழ்க்கைக்கும் ஒரு பொருள் இருப்பதை உணர்கிறேன்'' என்றார்.

சுரேந்திரர் குருதேவரைச் சந்தித்த இந்த முதல் சந்திப்பே அவரைப் பெரிதும் மாற்றிவிட்டது. ஸ்ரீராம கிருஷ்ணரிடத்தில் அளவற்ற பக்தி கொண்ட அவர் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் தவறாமல் தட்சிணேசுவரம் சென்று நாள் முழுவதும் குருதேவருடனே கழித்தார். கடவுளைக் காண அவருக்கு ஏற்பட்ட துடிப்பைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். குருதேவர் அவரை அன்போடு 'சுரேஷ்' என்று அழைப்பார். இவருடைய பக்தியைப் பற்றிப் பாராட்டியதுதான் மனமோகன் மனத்தில் வெறுப்பை உண்டாக்கியது. ஒருநாள் ஸ்ரீராமகிருஷ்ணர், பக்தர் ஒருவரிடம், ''ஒவ்வொருவருக்கும் சிறிதாவது ஆண்மை வேண்டும்'' என்று கூறினார். இதைக் கேட்ட சுரேந்திரர், ''எனக்கிருக்கும் வியாதியே இதுதான். கடவுள் இதிலிருந்து என்னைக் காப்பாற்றவேண்டும்'' என்று நினைத்தார். உடனே ஸ்ரீராமகிருஷ்ணர் அவரிடம், ''ஆண்மை என்று நான் சொல்வது உடலின்பத்தில் ஒருவனை ஆழ்த்தி அவனை நாசப் படுத்திவிடும் ஆண்மையைச் சொல்லவில்லை. அர்ஜுனனைப் போன்று இறுதி மூச்சு வரை உன் இலட்சியத்தை அடைவதில் ஆண்மையுள்ள மனிதனாக இருக்கவேண்டும் என்பதே'' என்றார்.

சிறிது காலத்திற்குள் சுரேந்திரர் ஸ்ரீராமகிருஷ்ணரின் மிகச் சிறந்த பக்தராகிவிட்டார் என்றாலும் அவருடைய பழைய வாழ்க்கையிலிருந்து அவரால் முற்றிலும் விடுபட முடியவில்லை. எவ்வளவோ முயன்றும் முடியாமல் தீய காரியங்களில் ஈடுபட்டுவிடுவார். அதன் பிறகு ஸ்ரீராம கிருஷ்ணரைக் காண்பதைப் பெரிதும் தவிர்ப்பார். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் தட்சிணேசுவரம் சென்று குருதேவரைக் காணும் சுரேந்திரர் ஒரு ஞாயிற்றுக்கிழமை அலுவலகத்தில் வேலை இருப்பதாகச் சொல்லிவிட்டுத் தட்சி ணேசுவரம் போகவில்லை. இவ்வாறு பொய் சொல்லிவிட்டு அவர் மோசமான இடங்களுக்குச் சென்றதை நண்பர்கள் அறிந்து மிகுந்த வேதனையோடு ஸ்ரீராமகிருஷ்ணரிடம் சென்று கூறினார்கள். அவர்கள் சொல்வதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த குருதேவர் அமைதியாக, ''அவருக்கு உலக

இன்பங்களை அனுபவிக்கும் ஆசை இன்னும் இருக்கிறது. கொஞ்ச நாட்கள் அனுபவிக்கட்டும். பிறகு அவர் தூய்மையானவராகி விடுவார்'' என்றார். சுரேந்திரரின் தீய செயல்களைக் கேட்டதும் கோபத்தால் குருதேவர் பொங்கி எழுவார் என்று நினைத்த நண்பர்கள் அவருடைய இந்த பதிலைக் கேட்டதும் ஆச்சரியமடைந்தார்கள். குருதேவரின் இந்த வார்த்தைகள் சுரேந்திரரின் காதுகளுக்கு எட்டின. அடுத்த ஞாயிற்றுக்கிழமையே தட்சிணேசுவரத்துக்கு வந்த அவர் ஸ்ரீராமகிருஷ்ணரைக் காண மிகவும் வெட்கப் பட்டவராக நெடுந்தொலைவில் ஒரு மூலையில் போய் உட் கார்ந்திருந்தார். இதைக் கண்ட குருதேவர் மிகுந்த அன்போடு அவரை அழைத்து அருகில் அமர்த்திக் கொண் டார். பிறகு பாவ சமாதியில் மூழ்கி, நினைவு சற்று இழந்த நிலையில், ''நல்லது, ஒரு மனிதன் மோசமான இடங்களுக்குப் போகும்போது அவன் ஏன் அன்னை காளி யையும் உடன் அழைத்துச் செல்லக்கூடாது! அப்படிச் செய்தால் அவன் அங்கு ஏற்படும் தீமைகளிலிருந்து தப் பித்துக் கொள்ளலாம்'' என்றார். இதைக் கேட்டதும் சுய மதிப்பு மிகுந்தவரான சுரேந்திரர் தான் அத்தகைய இடங்களுக்குச் சென்றதை எல்லோர் முன்பும் குருதேவர் எங்கே சொல்லிவிடுவாரோ என்று பயந்தார். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர் அதற்கு மேல் ஒன்றும் பேசவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் கூறி நிறுத்திக் கொண்ட அந்தச் செய்தி களே சுரேந்திரரின் கண்களைத் திறந்துவிட்டன. தன் தீய பழக்கங்களை விட்டுத் தொலைப்பதற்கு அவர் மிகவும் முயன்று வந்தார். குருதேவர் கூறிய வார்த்தைகள் அவருக்குச் சுலபமான வழியைக் காட்டின.

ஒரு நாள் சுரேந்திரர் தன் அலுவலகத்தில் வேலை செய்து கொண்டிருந்தார். திடீரென்று குருதேவரைக் காண வேண்டும் என்னும் ஆவல் அவருக்கு ஏற்பட்டது. செய்து கொண்டிருக்கும் வேலையோ முடியவில்லை. மிக முக்கியமான அந்த வேலையை அரைகுறையாக விட்டுவிட்டுப் போகவும் முடியாது. ஆனால் குருதேவரைக் காண வேண்டும் என்று அவர் மனத்தில் எழுந்த ஆவலை அவரால் அடக்க முடிய வில்லை. எனவே வேலையை அப்படியே விட்டுவிட்டுத் தட்சி ணேசுவரம் சென்றார். அங்கே ஸ்ரீராமகிருஷ்ணர் கல்கத்தா விற்கு வருவதற்காகத் தயாராக இருந்தார். சுரேந்திரரைப் பார்த்ததும் மிகவும் மகிழ்ச்சி அடைந்தவராக, ''ஓ! நீங்களே வந்து விட்டீர்களா? மிகவும் நல்லதாயிற்று. உங்களைப் பார்க்க

வேண்டுமென்று எனக்கு ஆவல் உண்டாயிற்று. அதனால் உங்களைப் பார்க்கவே கல்கத்தாவிற்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன்'' என்றார். இதைக் கேட்டு சுரேந்திரர் ஆச்சரியமடைந்தார். தான் குருதேவரைச் சந்திக்க நினைத்து இங்கே வரும்வேளையில் அவரும் தன்னைச் சந்திக்க நினைத்துக் கல்கத்தாவிற்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறாரே என்று நினைத்தார். பிறகு மிகுந்த பணிவோடு, ''என்னைப் பார்ப்பதற்குத்தான் நீங்கள் புறப்படுகிறீர்கள் என்றால் அருள் கூர்ந்து கல்கத்தாவிற்கு என் வீட்டிற்கு வாருங்கள்'' என்றார். குருதேவர் சம்மதித்தார். சுரேந்திரர் அளவற்ற மகிழ்ச்சியோடு அவரைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றார்.

இந்த நாட்களிலிருந்து சுரேந்திரர் ஸ்ரீராமகிருஷ்ணரின் அந்தரங்க பக்தர்களில் ஒருவராகப் போற்றப்பட்டார். அடிக்கடி சுரேந்திரர் குருதேவரையும் அவருடைய பக்தர்களையும் தன் வீட்டிற்கு அழைத்து, முன்பு நாம் கண்டது போல் சிறிய விழாவை நடத்தினார். இத்தகைய விழா ஒன்றில் தான் முதன் முதலாக குருதேவர் தமது அன்புச் சீடரான நரேந்திரரைச் சந்தித்தார். சுரேந்திரரின் பணம் ஸ்ரீராமகிருஷ்ணரின் செலவுக்காக எப்போதும் தயாராக எடுத்து வைக்கப்பட்டிருந்தது. பிற்காலத்தில் பக்தர்கள் தட்சிணேசுவரத்தில் குருதேவருடன் இரவும் பகலும் தங்கிச் சாதனைகள் செய்த போது அவர்களுடைய உணவுக்கும் மற்றவைகளுக்குமாகும் எல்லாச் செலவுகளையும் சுரேந்திரரே ஏற்றுக் கொண்டார். குருதேவர், தம்மைக் கவனித்துக்கொள்வதோடு, தம் பணச் செலவுகளையும் ஏற்கும் பொருட்டு அன்னை காளியால் நியமிக்கப்பட்டவர்களில் ஒருவர் என்று அவரைக் கூறுவார்.

சுரேந்திரரின் பலவீனங்களில் ஒன்று குடிப்பதில் அவருக்கிருந்த ஆசையாகும். அவருடைய நண்பர்கள் அந்தத் தீய பழக்கத்திலிருந்து அவரை மீட்க எவ்வளவோ முயன்றனர். இவர்களில் மிக முக்கியமானவர்—இராமசந்திரர். குடி சுரேந்திரரின் உடல்நலத்தைக் கெடுக்கிறது என்பதோடல்லாமல் ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தராகிவிட்ட அவர் இப்போதும் குடிகாரராக இருப்பதால், ஸ்ரீராமகிருஷ்ணருக்கு வரும் இழிவையும் நினைத்துக் குடியை விடும்படி மேலும் மேலும் வற்புறுத்தினார். மது அருந்துவது தாந்திரிக வழிபாட்டு முறைப்படி ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்றாகும். சுரேந்திரர் காளியை வழிபடும் தாந்திரிக பக்தராக இருந்ததால் இந்தக் குடிப் பழக்கத்தை அவர் மற்றவர்கள் நினைத்ததுபோல்

மிகப் பெரிய பாவமாக நினைக்கவில்லை. குடிப்பதை நிறுத்தும் படி தன்னை மிகுதியாக வற்புறுத்திய இராமசந்திரரிடம் அவர், ''ஏன் இப்படி மதுவை விட்டுவிடும்படி என்னை வற் புறுத்துகிறீர்கள். நான் குடிப்பது குருதேவருக்குத் தெரியும். குடிப்பது எனக்குத் தீமை செய்யும் என்றால் அவர் என்னைத் தடுத்திருக்க மாட்டாரா?'' என்றார். இதைக் கேட்ட ராம், ''நல்லது. இப்போதே வா. அவரிடம் போவோம். அவர் உன் னிடம் குடிப்பதை விட்டுவிடும்படிச் சொல்கிறாரா இல்லையா பார்' என்றார். 'சரி' என்று ஒத்துக் கொண்ட சுரேந்திரர், "ஒரு நிபந்தனை. அவரிடம் இதுபற்றி நீங்கள் வாயைத் திறக்கக் கூடாது. அவர் தானாகவே அது பற்றி என்னிடம் சொல்ல வேண்டும். அப்படிச் சொல்லியதும் மதுவை விட்டுவிடு கிறேன்'' என்றார்.

இருவரும் தட்சிணேசுவரம் சென்றார்கள். மகிழமரத்தடி யில் தெய்விகப் பரவசத்தோடு உட்கார்ந்திருந்த குருதேவ ரை வீழ்ந்து வணங்கினார்கள். அதே பரவசத்தில் ஆழ்ந்தவ ராக குருதேவர் சுரேந்திரரிடம், ''நல்லது சுரேஷ். நீ ஏன் மதுவை வெறும் மதுவென்று குடிக்கிறாய். குடிப்பதற்கு முன் காளிக்கு அர்ப்பணம் செய். அதன் பிறகு அவள் பிரசாதம்மாக அதைச் சாப்பிடு. ஆனால் உன் சுயநினைவை இழக்காமல் பார்த்துக் கொள். உன் கால்கள் தடுமாறக் கூடாது. நினைவு தவறக் கூடாது. இப்படிக் காளிக்குக் காணிக்கையாக்கி விட்டு நீ மதுவைக் குடித்தால், முதலில் மதுவைக் குடிக்கும்போது எழும் சாதாரணக் கிறுகிறுப்பே வரும். ஆனால் விரைவில் அது உன்னைத் தெய்விக ஆனந்தத்திற்கு அழைத்துச் செல்லும்'' என்றார். இதைக் கேட்ட இருவரும் அசந்து போனார்கள். சுரேந் திரர் அதன் பிறகு குருதேவர் கூறியபடியே சுரேந்திரர் மது அருந்தத் துவங்கினார். கண்ட நேரங்களில் குடிப்பதை விட்டுவிட்டார். ஒவ்வொரு நாள் மாலையிலும் குடிப்பதற்கு முன் காளிக்கு அதைப் படைத்து விட்டுக் குடிக்க ஆரம்பித் தார். ஆச்சரியப்படும் வகையில் இந்தப் பழக்கம் அவரிடம் அளவற்ற வகையில் பக்தியைப் பெருக்கியது. சின்னஞ் சிறு குழந்தையைப் போல் அன்னைக் காளியைக் காண அழுது துடித்தார். எப்போதும் கடவுளைப் பற்றி மட்டுமே பேச ஆரம்பித்தார். சில நேரங்களில் உலகை மறந்தவராக நெடு நேரம் ஆடாமல் அசையாமல் தியானத்தில் அமர்ந்திருப்பார். ஒவ்வொருவரும் அவருடைய பக்தியையும் உறுதியையும் கண்டு திகைத்து நின்றனர். குடிப்பதால் ஏற்படும் தீய விளைவுகள் அவரைத் தொடக்கூட முடியவில்லை.

எல்லாச் சமயங்களும் சிறந்தவையே என்னும் ஸ்ரீராம கிருஷ்ணரின் உபதேசத்தை ஓர் அழகான ஓவியமாக பெரிய அளவில் தீட்டி அதை வீட்டில் மாட்டியிருந்தார் சுரேந்திரர். ஸ்ரீராமகிருஷ்ணர் அந்தக் காட்சியைக் கேசவருக்குக் காட்டியபடி எல்லாச் சமயங்களின் ஒற்றுமையையும் பற்றிக் கூறினார். சுரேந்திரர் இந்த ஓவியத்தின் ஒரு பிரதியை கேசவருக்கு அனுப்பினார். இதை மகிழ்ச்சியோடு வாங்கிக் கொண்ட கேசவர், 'இந்த ஓவியத்தை எந்த மனிதன் கற்பனை செய்தானோ அவன் புண்ணியசாலி' என்று எழுதி அனுப்பினார்.

கேதார் என்று அழைக்கப்பட்ட கேதார்நாத் சட்டர்ஜி முதலில் பிரம்ம சமாஜத்தில் சேர்ந்திருந்தார். பிறகு பல்வேறு நெறிகளைப் பின்பற்றினார். இவர் உணர்ச்சி மிகுந்த பக்தர். யாராவது கடவுளைப் பற்றிப் பேசினாலோ பாடினாலோ அவர் கண்களில் கண்ணீர் வழியும். இது எல்லோருடைய கவனத்தையும் கவரும். பல்வேறு நெறிகளைப் பின்பற்றி அமைதி பெறாத அவர் இறுதியில் தட்சிணேசுவரத்துக்கு வந்து ஸ்ரீராமகிருஷ்ணரிடம் சரணடைந்தார். குருதேவர் அவருடைய பக்தியின் வேகத்தைக் கண்டு மகிழ்ச்சி அடைந்துத் தம்முடைய இல்லற பக்தர்களில் ஒருவராக அவரை ஏற்றுக் கொண்டார்.

கல்கத்தாவிற்கு வெகு தொலைவிலுள்ள கிழக்கு வங்காளத்தின் தலைநகரான டாக்காவிலேயே கேதார் அதிகமாக வசித்து வந்தார். அங்குள்ள மக்களுக்கு ஸ்ரீராமகிருஷ்ணரின் கருத்துக்களை உபதேசித்து வந்தார். பிற்காலத்தில் அளவற்ற பக்தர்கள் நாள்தோறும் தம்மிடம் வருவதைக் கண்ட குருதேவர், அவர்கள் அனைவருக்கும் உபதேசம் செய்து தாளமுடியாத களைப்படைந்தவராய் அன்னை காளியிடம், 'தாயே! இவர்கள் அனைவருக்கும் எல்லா உபதேசங்களையும் நானே செய்ய முடியாது. கேதார், கிரீஷ், ராம், விஜயர், மகேந்திரர் முதலியோர்களிடம் பிறருக்கு அடிப்படையான உபதேசங்களைத் தரும் சக்தியைக் கொடு. அதற்குப் பிறகு நான் தரும் கொஞ்ச உபதேசம் அவர்களுக்கு எல்லாவற்றையும் தரட்டும்' என்று பிரார்த்தனை செய்தார். இதன் பலனாகக் கேதார் குருதேவரின் கருத்துக்களை பக்தர்களுக்குப் பரப்பும் ஆற்றலைப் பெற்றார்.

எல்லோருடைய உண்மையான பக்தியையும் மதித்துப் போற்றும் குருதேவர் தம் பக்தர்களில் பக்தி, ஞானம்,

யோகம் முதலிய பலவற்றிலும் ஆர்வம் உள்ளவர்களை அது குறித்து அவர்களுக்குள் வாதிடும்படிச் சொல்வார். கேதார் சாதுரியமாகப் பதில் சொல்வதில் வல்லவர். ஒருநாள் கடவுளைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்த போது ஒரு பக்தர் கேதாரிடம், ''கடவுள் கருணையே வடிவான நம் தந்தை என்கிறீர்களே அப்படியென்றால் இந்த உலகத்தில் ஏன் இவ்வளவு துன்பம் இருக்கிறது? இதற்கு விளக்கம் சொல்லுங்கள்'' என்றார். இதைக் கேட்ட கேதார், ''உங்கள் கேள்வி மிகவும் நல்ல கேள்வி. ஆனால் கடவுள் இது பற்றிப் பேசி முடிவு செய்த கூட்டத்திற்கு எனக்கு அழைப்பே அனுப்பவில்லை'' என்றார். கேதாரின் இந்தப் பதிலை ஸ்ரீராமகிருஷ்ணர் மிகவும் பாராட்டினார். அடிக்கடி அதை எல்லோருக்கும் சொல்லி மகிழ்வார்.

கேதார் பிருந்தாவனத்து கோபியர்களின் பிரேமபக்தி உடையவராக இருந்தார். இதன் விளைவால் அவரைப் பார்த்த உடனே ஸ்ரீராமகிருஷ்ணர் பரவச நிலையை அடைவார். இவ்வளவு உயர்ந்த பக்தி இருந்த கேதாரிடம் உலக ஆசைகளும் அதிகமாக இருப்பதை குருதேவர் அறிந்தார். எனவே அதிலிருந்து அவரைக் காப்பாற்ற முனைந்தார். ஒருநாள் பரவசத்தில் மூழ்கியவராய் அவரைப் பார்த்து, ''உனக்குக் இன்னும் பெண்ணாசை, பொருளாசை இருக்கிறது, அவைகளை எல்லாம் கடந்து விட்டதாக நீ சொல்லிக் கொள்வதில் அர்த்தம் இல்லை. ஆழ்ந்து சாதனையில் மூழ்கு. பல்வேறு விலைமதிப்புள்ள பொருள்கள் கிடைக்கும். சந்தனக் காட்டை அடுத்து மேலும் விலை உயர்ந்த வெள்ளிச் சுரங்கம், தங்கச் சுரங்கம், வைரச் சுரங்கமெல்லாம் இருக்கின்றன. அவைகளையெல்லாம் கண்டு எடு'' என்றார்.

# 32. சில சுவையான நிகழ்ச்சிகள்

ஸ்ரீராமகிருஷ்ணரின் புகழ் பரவப் பரவ ஏழைகள், பணக்காரர்கள், நடுத்தரமானவர்கள், படித்தவர்கள், படிக்காதவர்கள் என்று கூட்டம் கூட்டமாக மக்கள் அவரைக் காண வந்தனர். ஒருமுறை கல்கத்தாவிலிருந்து படிப்பும், செல்வமும், செல்வாக்கும் பெற்ற பலர் குருதேவரைக் காண யதுமல்லிக்கின் தோட்டமாளிகைக்கு வந்தனர். அவர்களோடு பணத்திற்கும் தானத்திற்கும் பெயர் பெற்ற மகாராஜா யதீந்திரமோகன் டாகூரும் வந்திருந்தார். அந்தக் கூட்டத்தில் குருதேவரைப் பேசும்படி வேண்டினர்கள். தம் பேச்சில் துறவு, வைராக்கியம் இவைகளின் முக்கியம் பற்றி குருதேவர் வலியுறுத்திப் பேசினர்: ''நீங்கள் இரவும் பகலும் கடவுள் பெயரைச் சொல்லலாம். ஆனல் உங்கள் மனம் உலகச் சுகங்களையே நினைத்துக் கொண்டிருந்தால் உங்களுக்கு அதனுல் பயன் ஒன்றும் இல்லை'' என்ருர். இதைக் கேட்ட மகாராஜா யதீந்திரர், ''ஐயா! இல்லறத்தார்களால் இப்படி இரவும் பகலும் எந்த நேரமும் உண்மையாக உறுதியான உள்ளத்தோடு கடவுளை அழைப்பது என்பது முடிகிற காரியமா? புண்ணிய ஆத்மாவாகிய தருமபுத்திரரும் கூட இந்த உலக வாழ்க்கைகாகப் பொய் சொல்லும்படி நேர்ந்ததே'' என்ருர். மகாராஜாவின் இந்தப் பேச்சு குருதேவருக்கு மிகுந்த எரிச்சலைத் தந்தது. குருதேவர் அவரிடம், ''நீங்கள் எப்படிப்பட்ட மனிதராக இருக்கிறீர்கள்? தருமர் தன் வாழ்வில் அளவற்ற உறுதியோடு சத்தியத்தைக் கடைப்பிடித்த எத்தனையோ நிகழ்ச்சிகளை மறந்துவிட்டீர்கள். அவர் செய்த அளவற்ற தான தருமங்களை மறந்துவிட்டீர்கள்! சாஸ்திர விதிகளில் அவருக்கிருந்த பக்தியை மறந்து விட்டீர்கள். ஆனல் அவர் வாழ்க்கையில் பொய் சொன்ன ஒரு நிகழ்ச்சியை மட்டும் அப்படியே நினைவில் வைத்துக் கொண்டீர்கள். வெட்கக் கேடு!'' என்ருர்.

பத்திரிகை ஆசிரியரும், இந்திய தேசீய இயக்கத்தை வளர்த்தவர்களின் முன்னணியில் நின்றவரும் ஆங்கிலேயர்களாலும் இந்திய மக்களாலும் ஒருசேர மதித்துப் போற்றப் பட்டவருமான பாபு கிருஷ்ணதாஸ்பால் ஒருமுறை குருதேவ

ரைக் காணவந்தார். இருவரும் பேசிக் கொண்டிருந்தபோது தியாகம் பற்றிய பேச்சு வந்தது. பால், குருதேவரிடம் ''ஐயா! தியாகம் என்னும் போலியான வாதம் நம் நாட்டையே நாசப்படுத்திவிட்டது. இந்த வாதத்தால்தான் இன்று நாடு அன்னியர்களின் அடிமையாக இருக்கிறது. மற்றவர்களுக்கு நன்மை செய்வது, படிப்பறிவில்லாதவர்களுக்குப் படிப்பைத் தருவது, இவைகளும் எல்லாவற்றையும் விட நாட்டு மக்களின் பொருளாதார வளத்தை அதிகப்படுத்துவதுமே இப்போது நம்முடைய கடமைகளாகும். இதை விட்டுவிட்டுச் சமயம், துறவு, என்பதெல்லாம் நம்மை வலிமையில்லாதவர்களாக்கிவிடும். அதனுல் நீங்கள் நம்நாட்டை உயர்த்தும் மேற்கண்ட காரியங்களேச் செய்யும்படி வங்காள இளேஞர்களுக்கு அறிவுரை கூறுங்கள்'' என்ருர்.

இதைக் கேட்ட ஸ்ரீராமகிருஷ்ணர் கடுமையான குரலில் அவரிடம், ''நம் சாஸ்திரங்கள் எல்லாம் மகத்தான குணங்கள் என்று போற்றும் தியாகத்தையும் சமயத்தையும் பற்றி இவ்வளவு இழிவாகப் பேச உங்களுக்கு எவ்வளவு தைரியம் இருக்கவேண்டும்? ஆங்கிலத்தில் இரண்டு பக்கங்களேப் படிக்கத் தெரிந்ததால் உடனே உங்களுக்கு உலகமே தெரிந்துவிட்டதாக எண்ணமா? எல்லாம் அறிந்த கடவுள் என்று உங்களே நினேத்துக் கொண்டீர்களா என்ன? மழைக்காலம் துவங்கியதும் இந்தக் கங்கையில் நூற்றுக்கணக்காக பிறக்கின்ற சின்னஞ்சிறு நண்டுக் குஞ்சுகளேப் பார்த்திருக்கிறீர்களா? இந்தப் பெரிய அண்டசராசரங்களில் நீங்கள் அந்தச் சின்னஞ்சிறு நண்டுக் குஞ்சைவிட மிகமிக அற்பமானவர்கள். உலகத்துக்கு உதவுகிருேம் என்று சொல்வதற்கு உங்களுக்கு எவ்வளவு தைரியம் இருக்கவேண்டும்? இந்த உலகைப் படைத்த கடவுள் அந்தக் காரியத்தைப் பார்த்துக் கொள்வார். அதைச் செய்வதற்கான ஆற்றல் உங்களிடம் கிடையாது'' என்று கூறியவர் சிறிது நேரம் நிறுத்திவிட்டு மேலும் தொடர்ந்தார். ''மற்றவர்களுக்கு உதவுவதாகச் சொல்கிறீர்களே, அதுபற்றி விளக்கமாக எனக்குச் சொல்கிறீர்களா? மற்றவர்களுக்கு உதவுவது என்பது பற்றி நீங்கள் என்ன சொல்லப் போகிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். பசியோடு இருக்கும் கணக்கற்ற மக்களுக்கு உணவளிப்பது, நோயாளிக்கு மருத்துவம் செய்வது, சாலேகள் போடுவது, கிணறு தோண்டுவது இப்படியெல்லாம் செய்வது என்றுதானே

சொல்லுவீர்கள்? இல்லையா? இவைகள் எல்லாம் நல்ல காரியங்கள்தாம். இதில் சந்தேகமே இல்லை. இந்தக் காரியங்கள் எல்லாம் பரந்த இந்தப் பிரபஞ்சத்தோடு ஒப்பிடும் போது எவ்வளவு அற்பத்தனமானவை. இந்த வேலைகளின் மூலம் ஒரு மனிதன் எந்த அளவிற்கு முன்னேற்றமடைவான்? எத்தனை மக்களை உங்களால் பஞ்சத்திலிருந்து காப்பாற்ற முடியும்? மலேரியா இந்த மாகாணம் முழுவதையுமே நாசமாக்கிவிட்டது. அதைத் தடுக்க உங்களால் என்ன செய்ய முடிந்தது? கடவுள் ஒருவரால்தான் உலகத்தைக் காப்பாற்ற முடியும். மனிதன் முதலில் கடவுளை அறிந்து கொள்ளட்டும். அவரிடமிருந்து உலகத்திற்கு உதவி செய்யும் அதிகாரத்தையும் ஆற்றலையும் பெறட்டும். அதன் பிறகு மட்டுமே அவன் மற்றவர்களுக்கு நன்மை செய்வதைப் பற்றி நினைக்க வேண்டும். முதலில் மனிதனின் அகங்காரம் முழுவதும் அழிந்து நாசமாக வேண்டும். அதன் பிறகுதான் ஆனந்த மயமான அன்னை காளி உலகத்திற்குப் பாடுபடக்கூடிய ஆற்றலை அவனுக்கு அளிப்பாள்'' என்ருர்.*

கல்கத்தாவின் ஒரு பகுதியான காசிப்பூரில் வாழ்ந்த மகிமாசரண் சக்கரவர்த்தி என்பவர் குருதேவரிடம் ஆரம்பகாலத்திலேயே வந்தவர்களில் ஒருவர். குருதேவரைத் தேடி அவருடைய சீடர்கள் வருவதற்கு வெகு காலத்திற்கு முன்பே அவர் குருதேவரிடம் வந்து போகத் துவங்கினுர். ஆன்மிக வாழ்க்கையை மேற் கொள்ள வேண்டும் என்ற விருப்பத்தோடு பேருக்கும் புகழுக்கும் மிகவும் ஆசைப்படும் குணம் அவரிடம் இருந்தது. இதனுல் அவர் பல முறை ஆன்மிக வாழ்க்கைக்கு எதிரான, பொய் சொல்லுவதிலும் சில நேரங்களில் பலருடைய கேலிக்கும் ஆளாக்கும்

---

*குருதேவரின் இந்த வார்த்தைகள் ஒரு குருவோ அல்லது தலைவரோ தான் சேவை செய்கிறேன் என்ற அகம்பாவத்தோடு வேலை செய்வதையும் தான் என்ற நினைவே இல்லாமல் கடவுள் வழிபாடாகச் சேவை செய்வதையும் பற்றித் தெளிவாகக் கூறுகின்றன. மற்றவர்களுக்கு யாரும் உதவி செய்ய முடியாது; சேவை மட்டுமே செய்ய முடியும். இதுதான் செயல் புரியும் சரியான மனப்பான்மை. சாதாரண மனிதன் தான் உதவி செய்கிறேன் என்ற நினைத்து அகங்காரத்திற்கு அடிமையாகி, அதன் விளைவாகத் தானும் துன்பப்பட்டு மற்றவர்களுக்கும் துன்பம் தருகிருன். கடவுளை உணர்ந்தவனே தன்னைக் கடவுளின் கருவியாக நினைத்து, தான் என்ற நினைப்பே இல்லாமல் சேவை செய்து தானும் நன்மை அடைந்து மற்றவர்களுக்கும் நன்மை செய்கிருன்.

செயல்களிலும் ஈடுபட நேர்ந்தது. அவருக்கு ஆடம்பரமான பெயர்களில் மிகவும் விருப்பம் அதிகம். தான் நடத்திய பள்ளி ஒன்றுக்கு பிராச்ய-ஆர்ய-சிக்ஷா-கண்ட-பரிஷத் என்று பெயர் வைத்தார். தன் ஒரே மகனுக்கு 'சந்திரசேகரன்' என்று எல்லோருக்கும் புரியும் வகையில் பெயர் வைக்காமல், அதே பொருளைத் தரும் 'மிருகங்க மௌலிபூததுண்டி' என்ற பெயரைச் சூட்டினார். அவர் ஒரு மான் வளர்த்து வந்தார். அதற்கு கபிஞ்ஜலா என்று பெயர் வைத்தார். தன் குருவைப் பற்றிக் கூறும் போது அவருடைய பெயர் ஆகமாச்சார்யா டமரு வல்லபர் என்று கூறுவார். சில நேரங்களில் ஸ்ரீராமகிருஷ்ண ரின் வேதாந்த குருவான தோதாபுரியிடம் தான் தீட்சை பெற்றுக் கொண்டதாகச் சொல்வார். இதைப் பற்றிக் கூறும் போது, ''நான் வட இந்திய புண்ணியத்தலங்களில் யாத் திரை செய்து கொண்டிருந்த போது அவரைச் சந்தித்தேன். அங்கே அவரிடம் தீட்சை பெற்று அவரையே என் குருவாக ஏற்றுக் கொண்டேன். அவர் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் பக்தி நெறியைப் பின்பற்றும்படிக் கூறினார். என்னை ஞான நெறியைப் பின் பற்றிக் கொண்டு இல்லறத்திலேயே இருக்கும்படிக் கூறினார்'' என்று கூறுவார். இது எந்த அள விற்கு உண்மை என்பது அவருக்கும் கடவுளுக்கும் தான் தெரியும். அவர் ஒரு சிறந்த நூல்நிலையம் வைத்திருந்தார். அதில் மிகுதியான ஆங்கில நூல்களும் சம்ஸ் கிருத நூல்களும் இருந்தன. அவைகள் எல்லாவற்றையுமே படித்து முடித்துவிட்டதாக எல்லோரிடமும் சொல்லிக் கொள்வார். ஒரு நாள் நரேந்திரர் அந்த நூல்நிலையத்துக்குச் சென்று ஒரு பீரோவில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த ஒரு புத்தகங்களில் ஒன்றை எடுத்துப் புரட்டினார். அது வாங்கிய போது ஒட்டிக் கொண்டிருந்த பக்கங்கள் கூட வெட்டப் படாமல் புத்தம் புதியதாக இருந்தது. அதைப் பற்றி நரேந் திரர் கேட்டதும் தான் வாங்கிப் படித்த அந்தப் புத்தகத்தின் முதல் பிரதியை நண்பர் ஒருவர் வாங்கிக் கொண்டு போய்த் தொலைத்து விட்டதாகவும் அதனால் இரண்டாவதாக அதே புத்தகத்தை வாங்கிப் புத்தம் புதியதாக வைத்திருப்பதாகவும் கூறினார். ஆனால் நரேந்திரர் அந்தப் புத்தகப் பீரோவில் பல புத்தகங்கள் வாங்கியது போலவே ஒட்டிய பக்கங்கள்கூட வெட்டப்படாமல் புத்தம் புதியதாக இருக்கக் கண்டார். எனவே வெறும் பகட்டிற்காகவே மகிமாசரண் அவைகளை எல்லாம் வாங்கி வைத்திருந்தார் என்பது வெளிப்படை யாகத் தெரிந்தது.

சிறப்பான திருவிழா நாட்களில் தட்சிணேசுவரக் காளி கோயிலுக்கு மிகுந்த கூட்டம் வரும். அப்போது மகிமாசரண் காவி உடை அணிந்து கழுத்தில் ருத்ராட்ச மாலைகள் தொங்க புலித்தோல் ஆசனத்தில் கையில் தம்புராவுடன் பெரிய பக்தர்போல பஞ்சவடியில் உட்கார்ந்திருப்பார். மாலையில் வீட்டிற்குப் போகும்போது அந்தப் புலித்தோல் ஆசனத்தை குருதேவரின் அறைச் சுவரில் ஓர் ஆணியில் மாட்டிவிட்டுச் செல்வார். இதை ஸ்ரீராமகிருஷ்ணர் பார்த்தும் பார்க்காதவர் போல் இருந்து விடுவார். ஒரு முறை ஒரு பக்தர் அந்தப் புலித்தோலைப் பற்றிக் கேட்டதற்கு குருதேவர், ''மகிமாசரண் அதை மாட்டி விட்டுச் சென்றிருக்கிறார். அதன் காரணம் உனக்குத் தெரியுமா? அந்தப் புலித்தோலை அங்கே மாட்டினால் அதைப் பார்ப்பவர்கள் நீ கேட்பது போல், 'அது யாருடையது? எப்படி வந்தது' என்று கேட்பார்கள்! அப்போது நான் அது மகிமாசரணுடையது என்று சொல்லுவேன். அதற்காகத்தான் அவர் இங்கே மாட்டி விட்டுச் சென்றிருக்கிறார்.'' இப்படி எல்லாம் பெயர் வாங்குவதில் மகிமாசரண் தீராத ஆசை கொண்டிருந்தார்.

மகிமாசரண் வேதங்களிலும் மற்ற சாஸ்திரங்களிலிருந்தும் மிக இனிமையான பாடல்களைப் பாடுவார். இதைக் கேட்டு குருதேவர் மிகுந்த மகிழ்ச்சி அடைவார். ஸ்ரீராமகிருஷ்ணர் பக்தர்களிடம் இருக்கும் மிகச் சிறிய நல்ல குணத்தையும் பெரிதும் புகழ்வார். எனவே மகிமாசரணிடம் பலவிதமான குறைபாடுகள் இருந்தாலும் அவரை ஆன்மிகச் சாதனை செய்யும்படி உற்சாகப்படுத்துவார். மகிமாசரண் எப்போதும் வேதாந்தத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பதைக் கண்ட குருதேவர் அந்தத் தத்துவத்தின் உண்மையை அவர் அறிந்து கொள்ள அடிக்கடி உபதேசம் செய்வார். உலகைத் துறப்பது என்பது அவரால் முடியாத காரியம் என்பதை நன்கு தெரிந்து கொண்ட குருதேவர் அவரிடம், ''இந்த உலகத்தைத் துறக்க வேண்டும் என்பது அவசியமில்லை. உலகப் பற்றை நீக்கினாலே போதும். ஆனால் ஒவ்வொருவரும் அவசியம் சாதனைகள் பழக வேண்டும். புலன்களை அடக்க வேண்டும்'' என்று கூறுவார்.

மகிமாசரண் சாஸ்திரங்களைப் படிப்பதில் மிகுந்த ஆர்வம் கொண்டு அதற்காகப் பெரும் நேரத்தைச் செலவிடுவார். இதைக் கண்ட குருதேவர், ''எவ்வளவு நாட்கள் தான் இப்படிச் சாஸ்திரங்களையே படித்துக் கொண்டிருக்கப் போகிறீர்கள்? இந்த வெறும் படிப்பாலும் வாதங்க

ளாலும் என்ன பயன்? முதலில் கடவுளைக் காணுங்கள். குருவின் மேல் நம்பிக்கை வைத்துக் கொஞ்சம் சாதனை செய்யுங்கள். குரு இல்லையென்றால் கடவுளிடமே நேரிடையாகப் பிரார்த்தனை செய்யுங்கள். அவரே தன்னை உங்களுக்குக் காட்டுவார். வெறும் புத்தகங்களையே படித்துக் கொண்டிருப்பதால் எந்தப் பலனையும் நீங்கள் அடையமுடியாது'' என்பார்.

கமார்புகூருக்கு அருகில் உள்ள ஓர் ஊரைச் சேர்ந்த நடுத்தர வயதுடைய பிரதாப் சந்திர ஹாஸ்ரா என்பவர் சில ஆண்டுகள் தட்சிணேசுவரக் கோயிலில் வசித்து வந்தார். திடீரென்று ஏற்பட்ட வைராக்கியத்தால் கிராமத்தில் தன் வயதான தாயையும் குடும்பத்தையும் விட்டு விட்டுச் சந்நியாசியாக அவர் கோயிலுக்கு வந்து விட்டார். அவர்களோ கவனிப்பவர் யாருமில்லாமல் மிகுந்தத் துன்பப்பட்டார்கள். அவருக்குக் கொஞ்சம் கடனும் இருந்தது. தட்சிணேசுவரக் கோயிலில் ஒரு பெரிய முனிவர்போல் பலரும் பார்க்கும்படி ருத்ராட்ச மாலையைக் கையில் வைத்துக் கொண்டு ஜபம் செய்வார். அங்கு வரும் பணக்கார பக்தர்களில் யாராவது தன்னுடைய பக்தியைக் கண்டுத் தனக்குப் பணம் கொடுத்து உதவுவார்கள் என்றும் அதைக் கொண்டுக் கடனை அடைத்து விடலாம் என்றும் நினைத்து அதற்கான காரியங்களில் இரகசியமாக ஈடுபட்டார். குருதேவர் ஹாஸ்ராவின் இந்த இரகசியமான எண்ணத்தை அறிந்து கொண்டு, அவரை அந்த பலவீனத்திலிருந்து திருத்த முயன்றார். பிரார்த்தனைகள் சுயலாபம் கருதாமல் செய்யப்பட வேண்டும் என்று அறிவுறுத்தினார்.

ஹாஸ்ரா சாஸ்திர ஞானமோ அல்லது கடவுளைக் கண்ட அனுபவமோ சிறிதும் இல்லாதவரானாலும் தான் ஒரு பெரிய ஞானியைப் போல நடிப்பார். சமயம் என்றால் கடவுளையோ எந்தச் சக்தியையோ ஒருவன் சார்ந்திருக்க வேண்டியதில்லை. தன்னுடைய மனத்தை மட்டுமே சார்ந்திருந்தால் போதும் என்று கூறுவார். கடவுளிடம் பக்தி கொண்டு அவரையே சார்ந்திருப்பதைக் கேவலமாகப் பேசிக் கேலி செய்வார். தான் ஒரு பெரிய வேதாந்தி போல் நடித்துக் கொண்டு அந்தக் கருத்தையே எல்லோர் மீதும் திணிக்க முயல்வார். இதற்காக குருதேவர் அவரைச் சில நேரங்களில் மிகவும் கண்டிப்பார். சில நேரங்களில் மனிதர்களின் பலவித மன இயல்புக்கு ஏற்பப் பலவாறாக கடவுளை வணங்குவதை உற்சாகப்படுத்த வேண்டும்; ஒரே மாதிரியான கருத்தை

எல்லோர் மீதும் திணிக்கக் கூடாது என்று அன்போடு அறி வுரை கூறுவார். ஹாஸ்ரா குருதேவர் கூறும் எதையும் ஏற்றுக் கொள்ள மாட்டார். எதற்கெடுத்தாலும் வாதம் செய்வார். தான் சொல்வதே உண்மை என்பார். குருதேவர் தமது சீடர் களுக்குக் கூறும் உபதேசங்களை எல்லாம் தவறானது என்று சொல்லி அவர்களுடைய மனத்தில் குழப்பத்தை உண்டாக்கி விடுவார். இதனால் மிகவும் மன வேதனை அடைந்த குருதேவர் அன்னை காளியிடம் இதுபற்றி முறையிடுவார். அவர் காளிகோயிலில் இருந்து இப்படித் தன் உபதேசங்களுக்கெல்லாம் எதிராகப் பிரசாரம் செய்ததன் காரணம் தமது உபதேசத்தின் உண்மையைச் சோதனை செய்து அதன் சிறப்பை வெளிப்படுத்தவே என்று குருதேவர் கூறு வது வழக்கம். ஹாஸ்ரா இப்படியெல்லாம் செய்தாலும் ஸ்ரீராமகிருஷ்ணர் அவரிடம் மிகுந்த அன்பு செலுத்தி அனு தாபம் காட்டினார்.

நரேந்திரர் ஹாஸ்ராவிடம் மிகுந்த அன்பு கொண்டு அவருக்கு மிக நெருங்கிய நண்பராக விளங்கினார். ஸ்ரீராம கிருஷ்ணர் ஹாஸ்ராவைப் பற்றிக் கூறும் குறைகளை நரேந்திரர் ஏற்றுக் கொள்வதே இல்லை. அவர் குருதேவரை மிகவும் வற்புறுத்தி ஹாஸ்ரா இறக்கும் தருவாயில் இறைக் காட்சியைப் பெறும்படியான வரத்தைத் தரும்படிச் செய் தார். ஆச்சரியப்படும் வகையில் இந்த வரமும் ஹாஸ்ரா வுக்குப் பலித்தது. ஹாஸ்ரா குருதேவரின் உபதேசங்களைக் கேலிசெய்வதும், குறை கூறுவதும், நாளுக்கு நாள் அதி கரித்தது. குருதேவரால் பொறுத்துக் கொள்ளவே முடியாத படி வளர்ந்தது. வெறுப்பும் வேதனையும் அடைந்த குருதேவர் அன்னை காளியிடம் ஹாஸ்ரா நல்லவரில்லையென்றால் கோயிலை விட்டு நீக்கும்படி வேண்டினார். சில நாட்களுக்குப் பிறகு ஹாஸ்ரா கோயிலை விட்டு வெளியேற வேண்டி வந்தது.

## 33. லாட்டு, ராக்கால், மூத்த கோபால்

''நீங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரின் அற்புத சக்தியை அறிய வேண்டுமானால் இந்த லாட்டுவைப் பாருங்கள். இது போன்ற அற்புதத்தை நான் பார்த்ததே இல்லை'' என்று லாட்டுவைப் பற்றிச் சொல்லும்போது சுவாமி விவேகானந்தர் கூறினார். லாட்டு பீஹாரில் சாப்ரா மாவட்டத்தில் மிகவும் ஏழ்மையான பெற்றோர்களுக்குப் பிறந்தவர். ஆடு மேய்த்து உணவு உண்ணும் நிலையில் இருந்த அவரது தாயும் தந்தையும் இளமையிலேயே இறந்து போய்விட்டார்கள். பிழைப்புத் தேடி அவர் தன் உறவினருடன் கல்கத்தா வந்தார். குருதேவரின் இல்லறச் சீடரான இராமசந்திர தத்தா வீட்டில் வேலைக்காரனாகச் சேர்ந்தார். சில நாட்கள் கழித்து இராம் மூலம் குருதேவரைப் பற்றிக் கேள்விப்பட்ட லாட்டு அவரைக் காண தட்சிணேசுவரம் சென்றான். கல்கத்தாவிற்கும் அதன் சுற்றுப்புற ஊர்களுக்கும் புதியவனான லாட்டு மிகுந்த துன்பப்பட்டு தட்சிணேசுவரக் காளி கோயிலை அடைந்தான். ஸ்ரீராமகிருஷ்ணர் இருக்கும் அறையை நெருங்கியதும் அங்கே சாதாரண உடையணிந்த ஒருவர் வராந்தாவின் மேலும் கீழுமாக உலவிக்கொண்டிருப்பதைக் கண்டான். ஸ்ரீராமகிருஷ்ணர் காவி உடை அணிந்து ஒரு சந்நியாசியாக இருப்பார் என்று நினைத்துக் கொண்டிருந்தார். ஆனால் சாதர்ரண உடை அணிந்த அவரைப் பார்த்ததும் வேறு எந்த எண்ணமும் இன்றி அவர் காலில் வீழ்ந்து வணங்கினான். ''எங்கிருந்து வருகிறாய்?'' என்று கேட்டார் ஸ்ரீராமகிருஷ்ணர். ''கல்கத்தாவில் இராமசந்திர தத்தா வீட்டிலிருந்து வருகிறேன்'' என்றான் லாட்டு. ஸ்ரீராமகிருஷ்ணர் அவரை அன்போடு தம் அறைக்கு அழைத்துச் சென்றார். உண்பதற்குக் கொஞ்சம் தின்பண்டங்கள் தந்தார். பலவேறு செய்திகளை அவரோடு பேசிக் கொண்டிருந்தார். அவர்தான் தாம் தேடிவந்த பரமஹம்சர் என்பது லாட்டுக்குத் தெரியாது. அவர் அதைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொள்ளவுமில்லை. தன் எதிரில் இருப்பவரோடு பேசுவதிலும் அவரோடு இருப்பதிலும் அவன் அளவற்ற ஆனந்தம் அடைந்தான். குருதேவர் லாட்டுவிடம் அளவற்ற அன்பு காட்டினார். அதுவே லாட்டுவுக்குப் போதுமானதாக இருந்தது.

மாலை வந்ததும் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் விடைபெற்றுக் கொண்டு லாட்டு புறப்படத் துவங்கினன். குருதேவர் அவனிடம் கல்கத்தாவிற்கு நெடுந்தூரம் நடந்து போக வேண்டாம் என்றும் தன்னிடம் சில்லறை வாங்கிக் கொண்டு படகில் போகும்படியும் கூறினர். 'மிகவும் நன்றி' என்று கூறிய லாட்டு, 'என்னிடம் சில காசுகள் இருக்கின்றன' என்ருன். குருதேவர் புன்சிரிப்போடு ''உண்மையாகவா, சரியாகப் பார், நான் தருகிறேன், வெட்கப்படாதே.'' என்ருர். லாட்டு சிரித்தபடியே தன் பையினுள் இருந்த சில்லறைக் காசுகளை கலகல என்று ஒலி எழுப்பும்படி ஆட்டிக் காட்டி ''இதோ வைத்திருக்கிறேன்'' என்ருன். ''சரி பத்திரமாகப் போ. மறுபடியும் இங்கே வா'' என்ருர் ஸ்ரீராமகிருஷ்ணர். 'நிச்சயம் வருவேன்' என்ருன் லாட்டு.

ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றிய நினைவுகள் முதல் சந்திப்பிலேயே லாட்டுவின் மனதில் ஆழப்பதிந்தன. வீட்டிற்குத் திரும்பியதும் அவன் ஸ்ரீராமகிருஷ்ணர் தன்னிடம் காட்டி அன்பைப் பற்றியே திரும்பத் திரும்பப் பேசிக் கொண்டிருந்தான். பிறகு இரண்டு மூன்று நாட்கள் கழித்து லாட்டு மறுபடியும் குருதேவர் சாப்பிடுகின்ற நேரத்தில் தட்சிணேசுவரம் சென்ருன். குருதேவர் அவனை அன்போடு வரவேற்று, 'சாப்பிட்டாயா?' என்று கேட்டார். அவன் இல்லையென்று சொல்லியதும் தம்முடன் சாப்பிட அழைத்தார். பீகாரிகளில் வைதீகமானவர்கள் வங்காளிகள் சமைத்த உணவைச் சாப்பிட மாட்டார்கள். லாட்டுவும் குருதேவர் சாப்பிட அழைத்தும் சாப்பாடு வேண்டாம் என்ருன். இதைக் கண்ட குருதேவர் அவனுக்காக வாழை இலையும் பெரிய பாத்திரத்தில் கங்கை நீரும் கொண்டு வந்தார். இதைக் கண்ட லாட்டு தனக்காக அவர் சிரமப்பட வேண்டாம் என்று கூறினன். ''ஏன் சிரமப் படக் கூடாது. இதோ பார்! இந்த உணவு புனிதமான கங்கை நீரால் சமைக்கப்பட்டது. அதோடு காளிக்குப் படைக்கப்பட்ட புனிதமான பிரசாதம். எனவே இதைச் சாப்பிடுவதில் தீட்டு ஒன்றும் இல்லை'' என்ருர். லாட்டுவோ அந்த உணவு தனக்கு வேண்டவே வேண்டாம் என்ருன். ஸ்ரீராமகிருஷ்ணர் சாப்பிடச் சொல்லி அவனை மேலும் வற்புறுத்தினர். அதைக் கேட்டதும் அவன் திடீரென்று, ''உங்களுடைய பிரசாதமாக இந்த உணவைக் கொடுத்தால் நான் சாப்பிடுவேன்'' என்ருன். லாட்டுவுக்குத் தான் சொன்னது என்னஎன்பதே தெரியாது.

ஒரு நிமிடத்திற்கு முன்பு வங்காளி தொட்டுச் சமைத்த உணவைச் சாப்பிடத் தயங்கினுர். இப்பொழுது ஸ்ரீராம கிருஷ்ணரின் பிரசாதமாக அதையே சாப்பிடத் தயங்க வில்லே. ஸ்ரீராமகிருஷ்ணர் தன் தட்டிலிருந்து கொஞ்சம் உணவை எடுத்துப் பிரசாதமாக லாட்டுவிடம் கொடுத் தார். அவன் உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்தான்.

இராம், லாட்டுவிடம் அடிக்கடிப் பழங்களும் இனிப்புப் பண்டங்களும் தந்து, அவைகளேத் தட்சிணேசுவரம் எடுத் துச் சென்று ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கொடுத்து விட்டு வரச் சொல்வார். லாட்டு மிகுந்த மகிழ்ச்சியோடு எடுத்துக் கொண்டு செல்வான். அத்தகைய சந்தர்ப்பங்களே எதிர் நோக்கிக் காத்துக் கொண்டிருப்பான். ஸ்ரீராமகிருஷ்ணர் முதல் பார்வையிலேயே லாட்டுவிடம் மறைந்து கிடந்த ஆன்மிகத்தை உணர்ந்து கொண்டார். லாட்டுவும் ஸ்ரீராம கிருஷ்ணரிடம் மிகுந்த பாசம் வைத்திருந்தான். சில சமயங் களில் சேர்ந்தாற்போல் இரண்டு மூன்று நாட்கள்கூட ஸ்ரீராமகிருஷ்ணரோடு தங்கினுன். ஸ்ரீராமகிருஷ்ணர் அவ னுடைய ஆன்மிக நிலேயைப் புகழ்ந்து அவன் தன்னுடன் நிலேயாகவே தங்கியிருக்க ஏற்பாடு செய்யும்படி இராமிடம் கூறினுர். இராம் இதை லாட்டுவிற்குக் கிடைத்த மிகப் பெரிய பாக்கியமாக நினேத்தார். அதன் பிறகு லாட்டு எப்போதும் குருதேவருடனே இருந்தான். குருதேவருக்காக உலகைத் துறந்து அவரிடம் வந்த தூய் மையே வடிவான சீடர்களில் லாட்டுவே ஸ்ரீராமகிருஷ்ண ரிடம் வந்த முதல் சீடராகும்.

லாட்டு கீர்த்தனங்களேயும் பக்திப் பாடல்களேயும் மிகவும் விரும்பினுன். தட்சிணேசுவரக் கோயிலில் நடக் கும் கீர்த்தனங்களிலும் பாடல்களிலும் மிகுந்த ஆர்வத் தோடு கலந்துகொண்டு அந்தப் பரவசத்தில் தன்னே மறந்து நடனம் ஆடுவான். லாட்டுவின் மிக ஆழ்ந்த இந் தப் பக்தி அப்போது ஸ்ரீராமகிருஷ்ணரிடம் சென்று கொண்டிருந்த அவர் வயதொத்த இளேஞர்களிடம் மிகுந்த அன்பையும் மதிப்பையும் உண்டாக்கியது. ஸ்ரீராமகிருஷ் ணர் இந்த இளேஞர்கள் அனேவரும் ஏதாவது ஒருவகை யில் தெய்விக ஆனந்தத்தை அனுபவிக்கச் செய்யும்படி அன்னே காளியை வேண்டினுர். சிறிது நாட்களுக்குப் பிறகு லாட்டுவும் மற்ற இளேஞர்களும் தங்களுடைய தியானத் தின்போது ஆன்மிகப் பேரின்பத்தை அனுபவிக்கத் துவங் கினுர்கள். லாட்டுவும் குருதேவருடைய கண்காணிப்பில்

வேகமாக ஆன்மிகத்தில் வளர்ச்சி பெறத் துவங்கினன். குருதேவர் அவனுக்கு தியானம், ஜபம் முதலியவற்றிலும் பல்வேறு ஆன்மிகச் சாதனைகளிலும் பயிற்சி தந்தார்.

லாட்டுவுக்குப் படிப்பு என்ருல் என்னவென்றே தெரியாது. ஸ்ரீராமகிருஷ்ணர் அவருக்கு அ, ஆ, எழுத்தாவது தெரிந்திருக்க வேண்டுமென்று நினைத்து வங்காள எழுத்துக்களைத் தாமே கற்றுத்தரத் துவங்கினர். லாட்டுவோ பீகாரி. பீகாரி மொழிக்கும் வங்காள மொழிக்கும் உச்சரிப்புகளில் வேற்றுமை உண்டு. ஸ்ரீராமகிருஷ்ணர் வங்காள எழுத்துக்கள் சிலவற்றை எழுதி அதை வங்காள முறைப்படி எப்படிச் சொல்ல வேண்டுமென்று சொல்லிக் கொடுத்தார். லாட்டுவோ வங்காள முறையில் அந்த எழுத்துக்களை உச்சரிக்காமல் சமஸ்கிருத முறைப்படி உச்சரிக்கத் துவங்கினன். அவன் உச்சரிப்பைக் கேட்டு சிரித்த ஸ்ரீராமகிருஷ்ணர் பலமுறை திருத்தி உச்சரிக்கச் சொன்னர். ஒவ்வொரு முறையும் லாட்டு முன்னைப் போலவே பிழையாக உச்சரித்தான். ஆசிரியரும் மாணவனுமாக இதை வேடிக்கையாகக் கொண்டு சிரித்தார்கள். இரண்டு மூன்று நாட்கள் முயற்சியைத் தொடர்ந்த ஸ்ரீராமகிருஷ்ணர் முடிவில் நம்பிக்கையிழந்தவராய் தம் ஆசிரியர் வேலையை நிறுத்திக் கொண்டுவிட்டார். லாட்டுவின் படிப்பும் அந்த அளவோடு நின்றுவிட்டது. இவர் பிற்காலத்தில் சுவாமி அத்புதானந்தர் என்ற பெயருடன் துறவியானர்.

ராக்கால் என்று சுருக்கமாக அழைக்கப்படும் ராக்கால் சந்திரகோஷ் முதன் முதலில் 1880-ஆம் ஆண்டு நரேந்திரர் ஸ்ரீராமகிருஷ்ணரை சந்திப்பதற்குச் சில மாதங்களுக்கு முன் சந்தித்தார். அவர் கல்கத்தாவிற்கு அருகே பஷீர்ஹாட் என்னும் கிராமத்தில் பிறந்தவர். அவருடைய தந்தை ஒரு ஜமீன்தார். ராக்கால் சிறுவனக இருக்கும் போதே மிகுந்த தெய்வபக்தி உடையவராக இருந்தார்.

இளம் வயதிலேயே ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தரான மனமோகனின் தங்கையை அவருக்குத் திருமணம் செய்து வைத்திருந்தார்கள். முதன் முதலில் ராக்காலைச் சந்தித்ததுமே குருதேவர் ராக்காலுக்கும் தமக்கும் வாழ்நாள் முழுவதும் அமையப் போகும் நெருக்கமான உறவைப் புரிந்து கொண்டார். இதைப் பற்றி குருதேவர் குறிப்பிடும்போது, ''ராக்கால் என்னிடம் வருவதற்குச் சில நாட்களுக்கு முன்பு நான் ஒரு தெய்விகக் காட்சியைக் கண்டேன். அதில் அன்னை காளி ஒரு குழந்தை

யைக் கொண்டு வந்து என் மடியில் வைத்து, 'இவன் உன் மகன்' என்று கூறினுள். இதைக் கேட்ட உடனே நான் நடுநடுங்கிப்போய் அன்னையிடம், 'அம்மா, நீ என்ன சொல்லு கிருய்! நான் கூடவா ஒரு பிள்ளையைப் பெற்றுக் கொள்ள வேண்டும்?' என்று ஆச்சரியத்தோடு கேட்டேன். அதைக் கேட்ட அன்னை சிரித்துவிட்டு, 'இவன் உன்னுடைய ஆன் மிக வாரிசாக விளங்கப் போகிற மகன்' என்று சமாதானப் படுத்தினுள். இதைக் கேட்ட பிறகுதான் எனக்கு ஆறுதல் உண்டாகியது. இந்தக் காட்சிக்குப் பிறகு சில நாட்கள் கழித்து ராக்கால் வந்தான். அவனைப் பார்த்த உடனே காளி எனக்களித்தமகனே அவன்என்பதைத் தெரிந்துகொண்டேன். ராக்காலை குருதேவர் மற்ருெரு தெய்விகக் காட்சியிலும் கண் டார். ஒருநாள் ஸ்ரீகிருஷ்ணன் பிருந்தாவனத்து மாடுமேய்க் கும் சிறுவன் வடிவில் ஓர் ஏரியில் நடுவே மலர்ந்த தாமரை மலர் ஒன்றில் நின்று கொண்டிருப்பதைக் கண்டார். அவருக்குப் பக்கத்தில் ராக்கால் சிறுவனுக கிருஷ்ணனைப் பார்த்து விளையாட்டாகச் சிரித்தபடியே நின்றுகொண் டிருப்பதைக் கண்டார். இந்தக் காட்சி கிருஷ்ணனுடைய விளையாட்டுத் தோழனுக முன் பிறவியில் அவதாரம் செய்த ஒரு தூய்மையான ஆத்மா இந்தப் பிறவியில் தம் சீடனுகப் வரப்போவதை அவருக்குத் தெரிவித்தது.

ராக்கால், ஸ்ரீராமகிருஷ்ணருடன் வாழ்ந்து வந்த ஐந்து ஆண்டுகளில் அவருக்கும் ராக்காலுக்கும் இடையே ஏற்பட்ட நெருக்கமான உறவைக் கூற வார்த்தைகளே இல்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் ராக்காலின் முழுமையான ஆன் மிக வாழ்விற்குத் தம்மைப் பொறுப்பாக்கிக் கொண்டு இரவும் பகலும் அவருடைய ஆன்மிக வளர்ச்சிக்காகப் பாடுபட்டார். ராக்காலோ தன் மனைவி, பெற்ருேர், உற்ருர், வீடு எல்லாவற்றையும் விட்டுவிட்டுத் தன் ஒரே உறவாகவும் உயிராகவும் ஸ்ரீராமகிருஷ்ணரையே நினைத்து அவரோடு வாழ்ந்து அவருடைய உடல்நலனைக் கவனித்துக் கொண்டார். ராக்கால் இந்தக் காலங்களில் ஸ்ரீராமகிருஷ் ணரோடு இருக்கும்போது தன்னை இளைஞனுக நினைக் கவே இல்லை; மூன்று நான்கு வயதான குழந்தை யாகவே எண்ணிக் கொண்டார். ஒரு சிறு குழந்தை தன் பெற்ருேரிடம் எப்படிப் பழகுமோ அப் படியே பழகினுர். இதைப் பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் கூறும்போது, ''என்னைவிட்டுக் கொஞ்ச நேரம் விலகிப் போவான். உடனே சிறிய குழந்தையைப் போல் என்

னிடம் ஓடி வருவான். என்மேல் ஏறிக் குதிப்பான். மடியில் உட்கார்ந்து கொள்வான். என்னைவிட்டுப் போகவே மாட்டான். எந்த நேரமும் என்னுடனே இருப்பான். என்னைப் பார்க்காதவரை இளைஞனாக இளைஞனுடைய உணர்வோடு இளைஞனைப் போலவே இருப்பான். என்னைப் பார்த்த மறுகணமே அவனிடமிருந்து அந்த இளைஞனுடைய உணர்வுகள் முற்றிலும் நீங்கிவிடும். அப்போது அவனிடம் பீறிட்டுவரும் குழந்தைத் தனத்தை என்னால் விவரிக்கவே முடியவில்லை. அந்த நேரத்தில் அவனைப் பார்க்கும் ஒருவரும் அவனை இளைஞன் என்றே நினைக்க மாட்டார்கள்; சின்னஞ் சிறு குழந்தையாகவே நினைத்து அவன் செய்யும் குழந்தை விளையாட்டையெல்லாம் தங்களை மறந்து ரசிப்பார்கள். என்னுடைய காட்சி அவனுக்கு குழந்தைத் தனத்தை உண்டாக்குவது போலவே அவனைக் கண்ட உடனே நான் ஒரு ஆண் என்பதையே மறந்து போய் அவனுடைய தாயாகவே மாறிவிடுவேன். என்ன முயன்றும் என்னால் அந்த உணர்வை மாற்ற முடியாது. அவனை மடியில் அமர்த்திக் கொண்டு ஒரு தாயைப் போல் அவனுக்கு இனிப்புக்களை ஊட்டுவேன். ஒரு தாய் தன் குழந்தையோடு விளையாடுவது போல் அவனோடு விளையாடிக் கொண்டிருப்பேன்'' என்று கூறுவார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தம் சீடர்கள் எவருக்குமே கொடுக்காத உரிமைகளை எல்லாம் ராக்காலுக்கு அளித்திருந்தார். ராக்காலைத் தோளில் தூக்கிக் கொண்டு காளி கோயிலில் இங்கும் அங்கும் சுற்றியிருக்கிறார். ஒரு வயது வந்த இளைஞனாக இருந்தபோதும் சிறு குழந்தையைப் போல் சாப்பிடவும் குளிக்கவும் இங்கும் அங்கும் போகவும்கூட ராக்கால் தன்னையே எதிர்பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர். 'டேய் இன்னும் உலகமறியாத குழந்தையாகவே இருக்கிறாயே! நான் இறந்து போய்விட்டால் உன்னை யாரடா கவனித்துக் கொள்வார்கள்'! என்று கண்ணீர் விட்டு அழுவார். அன்னை காளி ஸ்ரீராமகிருஷ்ணரைக் கவனித்துக் கொள்வதற்காக அவரிடம் ராக்காலை கொண்டுவந்து சேர்த்தார். 'ஆனால் உண்மையில் ஸ்ரீராமகிருஷ்ணர்தான் அடிக்கடி ராக்காலைக் கவனித்துக் கொள்ள வேண்டியதாயிற்று.

ஆன்மிகம் பற்றி அதிகம் தெரியாத, பணம், சொத்து, மதிப்பு, மரியாதை இவைகளில் மிகுந்த ஆசையுள்ள பணக்காரரான ராக்காலின் தந்தை தன் மகன் சாதாரண கோயில்

பூசாரியாக இருந்த ஒருவருடன் இவ்வளவு நெருக்கமாக இருப்பதை விரும்பவில்லை. அவர் பலமுறை ராக்காலை ஸ்ரீராமகிருஷ்ணரிடம் போக வேண்டாமென்று தடுத்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் எப்படிப்பட்டவர் என்பதைப் பார்ப்பதற்காக ஓரிரு முறை அவர் நேராகவே தட்சிணேசுவரம் வந்தார். பணத்திலும், பதவியிலும், படிப்பிலும், புகழ் பெற்ற பலர் கல்கத்தாவிலிருந்து ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வந்து செல்வதைக் கண்ட அவர் தன் மகன் ஒரு மதிப்பு வாய்ந்தவரிடம்தான் வருகிறார் என்று திருப்தியும் மகிழ்ச்சியும் அடைந்தார். அதோடு குருதேவர், அவர் வரும்போது மிகுந்த அன்போடும் கவனிப்போடும் நடந்து கொண்டார். காளி கோயில் முழுவதையும் தாமே அவருக்குச் சுற்றிக் காட்டினார். நல்ல உணவிற்கும் ஓய்வு கொள்வதற்கும் ஏற்பாடுகள் செய்தார். அதற்குப் பிறகு ராக்காலின் தந்தை தம் மகன் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் செல்ல எந்த விதமானத் தடையும் சொல்லவில்லை.

ராக்காலுக்குத் திருமணமாகிவிட்டது என்பதைக் கேள்விப்பட்டதும் அதனால் அவருடைய ஆன்மிக வாழ்விற்கு ஆபத்து ஏற்படுமோ என்று பயந்தார் குருதேவர். ஒருநாள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் மிகுந்த பக்தி கொண்ட ராக்காலின் மாமியார் தம் மகளைத் (ராக்காலின் மனைவியை) தட்சிணேசுவரத்துக்கு அழைத்து வந்தார். அந்தப் பெண்ணின் முகம், கண், உடல் அமைப்புகளை எல்லாம் கூர்மையாக ஆராய்ந்து பார்த்து, அவளிடம் மிகுந்த தெய்விக இயல்புகள் இருப்பதைக் கண்டு திருப்தியும் மகிழ்ச்சியும் அடைந்தார் குருதேவர். ராக்காலின் ஆன்மிக வாழ்விற்கு அவள் தடையாக இருக்க மாட்டாள் என்பதை எல்லோரிடமும் கூறி மிக்க மகிழ்ச்சி அடைந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் ராக்காலிடம் அளவுக்கு மிஞ்சிய வகையில் பாசத்தோடும் கனிவோடும் நடந்து கொண்டாலும் அவர் ஏதாவது தவறு செய்தால் மிகக் கடுமையாகத் தண்டிக்கச் சிறிதும் தயங்கமாட்டார். ஒருமுறை அறையில் வைத்திருந்த வெண்ணெயை ஸ்ரீராமகிருஷ்ணரைக் கேட்காமல் எடுத்துச் சாப்பிட்டுவிட்டார் ராக்கால். இதைக் கண்ட குருதேவர் ராக்காலைப் பார்த்து மிகுந்த கோபத்துடன், ''வெட்கமாக இல்லை! நாக்கின் ருசியை அடக்கக் கற்றுக் கொள்வதை விட்டு என்னைக் கேட்காமல் வெண்ணெயைத் தின்றுவிட்டாயே?'' என்று கண்டித்தார். ராக்கால் தன் தவறுக்காக மிகவும்

வருந்தினர். பிறகு அதுபோன்ற செயல்களைச் செய்வதே இல்லை. ஒருமுறை குழந்தைகளுக்கே உரிய இயல்பில் மற்ற இளைஞர்களிடம் ஸ்ரீராமகிருஷ்ணர் அன்பாக இருப்பதைக் கண்டு ராக்கால் பொறாமை கொண்டார். குருதேவருடைய அன்பு முழுதும் தன் ஒருவனுக்கே சொந்தமாக இருக்கவேண்டும் என்று நினைத்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் ராக்காலின் மீது மிகுந்த அக்கறையும் பொறுமையும் கொண்டு இந்தக் குறைபாடுகளை நீக்கி அவரை ஈடு இணையில்லாத ஒரு மாபெரும் மகானாக மாற்றினர்.

குருதேவரால் ராக்காலைப் பிரிந்திருக்கவே முடியாது. அவர் பிரிந்து போய்விட்டால் கதறி அழுவார். ஒருமுறை பிருந்தாவனம் சென்ற ராக்கால் அங்கே உடல்நலமில்லாமல் படுத்துவிட்டார். இதைக் கேட்ட ஸ்ரீராமகிருஷ்ணர் மிகுந்த கவலை கொண்டார். முற்பிறவியில் பிருந்தாவனத்தில் அவர் ஸ்ரீகிருஷ்ணனின் தோழனாக ஆடிப்பாடி விளையாடியவராதலால், அந்த நினைவில் அவர் மனம் மூழ்கி உயிரை விட்டு விடுவாரோ என்று கலங்கினர். காளியிடம் அவருடைய உடல்நலத்திற்காக மனமுருகி அழுது பிரார்த்தித்தார். ராக்காலுக்கு ஒன்றும் ஆகாது என்று காளி உறுதி அளித்த பின்னர்தான் அமைதியடைந்தார். ஒருநாள் ராக்கால் குருதேவரின் கருணையால் தன் இஷ்ட தெய்வத்தின் அற்புதமான காட்சியைக் கண்டார். ராக்காலே பிற்காலத்தில் சுவாமி பிரம்மானந்தர் என்ற பெயரோடு குருதேவரின் அற்புதமான ஆன்மிகச் சக்தியை உலகம் முழுவதற்கும் கொடுப்பவரானர்.

மூத்த கோபால் கல்கத்தா அருகே சிந்தி என்னும் ஊரில் வாழ்ந்து வந்தார். அவர் ஒரு வியாபாரி. உலகத்தின் இன்பங்களையும் பற்றையும் பாசத்தையும் விரும்பும் ஒரு சராசரி மனிதனகவே அவர் இருந்தார். மகிமாசரண் குருதேவரை முதன் முதலில் சந்தித்த போதே இவரும் குருதேவரைச் சந்தித்தார். மனைவியின் மரணத்தால் ஏற்பட்ட துயரால் மனம் நொந்து போயிருந்த இவரை நண்பர் ஒருவர் ஆறுதல் பெற தட்சிணேசுவரம் போகும்படிக் கூறினர். முதலில் இவர் ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்தித்த போது அவரிடம் அதிசயமான ஆற்றல் எதுவும் இருப்பதாக இவருக்குத் தெரியவில்லை. ஆனல் அவருடைய நண்பர் ஸ்ரீராமகிருஷ்ணர் மிகச் சிறந்த மகான் என்றும் முதல் சந்திப்பிலேயே மகான்கள் தங்கள் தெய்விகத்தை வெளிப்படுத்தமாட்டார்கள் என்றும் மீண்டும்

கூறி அவரை மறுபடியும் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் போகும் படிக் கூறினார். அதன்படி கோபால் குருதேவரிடம் வந்தார். இவ்வேளையில்தான் அவர் குருதேவரின் ஆச்சரிய மான தெய்விகத்தால் பெரிதும் ஈர்க்கப்பட்டார். உலகம் நிலையில்லாதது பற்றி குருதேவர் மிக எளிமையாகக் கூறிய கருத்துக்கள் அவர் மனத்தில் ஆழச்சென்று பதிந்தன. அதன் விளைவாக அவர் முற்றிலும் மாறிவிட்டார். கடவுளைக் காண்பதற்காக உலக வாழ்க்கையைத் தியாகம் செய்து விடுவது என்ற முடிவுக்கு வந்தார். இந்த முடிவு கடைசி யில் உண்மையாகவே மாறிவிட்டது. குருதேவரின் இறுதிக் காலத்தில் சந்நியாசம் பெற்று இறுதிவரை அவருக்குச் சேவை செய்தார். பொருள்களை ஒழுங்காக வைத்துக் கொள்ளும் அவருடைய திறமையைக் கண்டு குருதேவர் அவரைக் 'கண்காணிப்பாளர்' என்றும் எல்லோரையும்விட வயதானவராக இருந்ததால் 'மூத்த கோபால்' என்றும் அன்போடு அழைப்பார். இவரே பிற்காலத்தில் சுவாமி அத்வைதானந்தர் என்ற பெயருடன் விளங்கினார்.

# 34. நரேந்திரநாதர்

கல்கத்தாவின் ஒரு பகுதியான சிம்லா என்னும் பகுதியில் வாழ்ந்த தத்தா குடும்பம் மிகுந்த பண்பாடு பெற்ற பிரபுக் குடும்பமாகும். அந்தக் குடும்பத்தில் மிகச் சிறந்தவராக விளங்கிய துர்காசரண்தத்தா தனக்கு மகனொருவன் பிறந்ததும் உலகைத் துறந்து சந்நியாசியாகிவிட்டார். அந்த மகன் விசுவநாத் தாயின் அன்பான பாதுகாப்பில் வளர்ந்து கல்கத்தா உயர்நீதி மன்றத்தில் தலைசிறந்த வழக்கறிஞராக விளங்கினார். ஏராளமான பணத்தை அவர் சம்பாதித்தார். சம்பாதித்ததைத் தண்ணீரைப் போலப் பெரும்பாலும் தரும காரியங்களுக்காகவே செலவழித்தார். அவருடைய மனைவி புவனேசுவரி தேவி பல்வேறு திறமைகளும் நல்ல குணங்களும் பொருந்தியவராக இருந்தார். குடும்பக் காரியங்களில் மிகுந்த திறமையும் ஆழ்ந்த கடவுள் பக்தியும் பொறுமையும் நிறைந்தவராக அவர் இருந்தார். இந்த மகிழ்ச்சியான தம்பதிகளுக்கு 1863-ஆம் ஆண்டில் இறைவனின் திருவருளால் ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அந்தக் குழந்தை நரேந்திரன்தான் பிற்காலத்தில் உலகம் போற்றும் உத்தமரான சுவாமி விவேகானந்தரெனப் புகழ்பெற்றான்.

இளம் வயதிலிருந்தே நரேந்திரன் தன் நண்பர்கள், விளையாட்டுத் தோழர்கள், இவர்கள் மத்தியில் தனித் திறமை பெற்றவனாக விளங்கினான். நல்ல வலிமையான உடலோடும், வீரியமுள்ள அறிவாற்றலோடும். அதே நேரத்தில் மிகவும் இரக்கமுள்ள சிந்தையோடும் நரேந்திரன் பிறந்திருந்தான். சிறந்த புத்திக் கூர்மை, அசாதாரண நினைவாற்றல், ஆழ்ந்த சிந்தனை, தெளிவான ஞானம், சத்தியத்திடம் அளவற்ற பற்று, யாரையும் மதிக்காத - யாருக்கும் கட்டுப்படாத சுதந்திரத் தன்மை, துணிச்சலான செயல் திறமை, இவற்றோடு ஏழைகளிடம் அளவு கடந்த கருணை - ஆகிய குணங்களால் நரேந்திரன் எல்லோரும் கண்டு அதிசயிக்கத் தக்கவனாக விளங்கினான். படிக்கத் துவங்கியதும் பல துறைகளிலும், குறிப்பாக வரலாற்றிலும், தத்துவத்திலும் மிகுந்த தேர்ச்சி பெற்று விளங்கினான். உடற் பயிற்சியிலும் சிறந்த நிபுணனாக

விளங்கியதோடு, இசையிலும் நல்ல திறமை பெற்றிருந்தான். அவனுடைய தந்தைதான் இப்படி அவன் எல்லா வகையான ஆற்றலிலும் சிறந்து விளங்க உற்சாகம் ஊட்டுபவராக இருந்தார்.

மன ஒருமைப்பாடே அடிப்படையாக அமைந்த சமய வாழ்வில் இயல்பாகவே நரேந்திரனுக்கு ஆழ்ந்த ஈடுபாடு இருந்தது. சிறுவனாக இருக்கும்பொழுதே மண்ணால் செய்த இறைவன் திருவுருவங்களை வாங்கி, பூஜை செய்து அதன் முன் அமர்ந்து தியானத்தில் ஈடுபடுவான். ஒருநாள் வீட்டின் உட்பகுதியில் தனியாக இருந்த அறைக்குள் சென்று தாளிட்டுக்கொண்டு தியானத்தில் அமர்ந்தான். நெடு நேரமாகியும் அவனைக் காணாத பெற்றோர்களும் மற்றவர்களும் வீடு முழுவதும் அவனைத் தேடிக் காணாமையால் இறுதியில் வீட்டின் மூலையில் தனியாக இருந்த அந்த அறையின் கதவு உள்புறமாக மூடப்பட்டிருப்பதைக் கண்டு, அதை உடைத்து உள்ளே சென்று பார்த்தபோது நரேன் உலகையே மறந்து தியானத்தில் ஆழ்ந்திருந்தான். அவனைப் பிடித்து அசைத்து உலுக்கி உலக நினைவிற்குக் கொண்டுவந்தார்கள். அந்த அளவிற்கு சிறு வயதிலேயே தியானத்தில் ஆற்றல் பெற்றவனாக விளங்கினான். அந்தக் காலத்து இளைஞர்கள்போல் அப்போது மிகுந்த புகழோடு விளங்கிய சமய இயக்கமான பிரம்ம சமாஜத்தில் அவன் சேர்ந்திருந்தான். அதன் தலைவரான மகரிஷி தேவேந்திரநாத் தாகூரிடம் உபதேசத்திற்காகச் சென்றான். நரேனிடம் யோகிக்குரிய பல அடையாளங்களைக் கண்ட தேவேந்திரர் அவனை ஆழ்ந்து தியானம் செய்யுமாறு உற்சாகமூட்டினார்.

அப்படி ஆழ்ந்து தியானம் செய்தபோது தெய்விகக் காட்சி ஒன்று நரேந்திரனுக்குத் தோன்றியது. அதுபற்றி அவர் பிற்காலத்தில் கூறும்போது, "ஒவ்வொரு நாளும் நான் படுக்கைக்குப் போகும்போது இரண்டு காட்சிகள் என் மனக் கண்முன் வந்து நிற்கும். ஒன்றில் நான் இந்த உலகத்திலேயே மிகச் சிறந்த ஆற்றல் கொண்டவனாகவும் பெரும் செல்வமும் ஆட்களும் அரண்மனையும் உடையவனாகவும் உலகம் முழுவதும் என்னை புகழ்ந்து வரவேற்கும் உன்னத நிலையில் இருப்பேன். உண்மையிலேயே அத்தகைய நிலையை அடையும் ஆற்றல் என்னிடம் இருப்பதை அப்போது திடமாக உணர்ந்தேன். அடுத்த விநாடியே மற்றொரு காட்சி தோன்றும். அதில் நான்

கௌபீனம் அணிந்தவனாய் பிச்சையெடுத்து உண்டு மரத்தடிகளிலும் மற்ற இடங்களிலும் இரவுகளைக் கழித்து, உலகம் முழுவதும் சுற்றும் துறவியாக, கடவுள் ஒருவரையே நம்பி வாழ்பவனாக இருப்பேன். இந்த வாழ்க்கையையும் என்னால் நடத்த முடியும் என்ற ஆழ்ந்த உணர்வு எனக்குத் தோன்றும். இந்த இரண்டு காட்சிகளில் இரண்டாவது காட்சியே என் மனத்திற்கு மிகவும் பிடித்திருந்தது. ஒரு துறவியைப் போன்று பெருந்தன்மையாக வாழும் வாழ்க்கை உலகிலேயே புனிதமானது என்றும் அதனால் சந்நியாசி ஆகிவிடுவது என்றும் எண்ணினேன்'' என்று கூறினார்.

ஆழ்ந்த படிப்பாலும், கூர்மையான அறிவாலும் நரேந்திரன் வாதம் புரிவதில் இணையற்ற திறமை பெற்றிருந்தான். தனக்குச் சாதகமான கருத்துக்களை வரிசை வரிசையாக அடுக்கி எதிரிகளைத் திணற அடித்து எப்படிப் பட்டவர்களையும் வாயடைத்து நின்று விடும்படிச் செய்வான். கல்லூரியில் படிக்கும்போது நாத்திக வாதம் நிறைந்த மேல் நாட்டுத் தத்துவ நூல்களை ஆழ்ந்து கற்றான். பிறவியிலேயே கடவுள் நம்பிக்கை மிகுந்த நரேந்திரனின் கடவுள் நம்பிக்கையில் இந்த நாத்திக நூல்கள் பெரும் அதிர்ச்சியைக் கொடுத்தன. சில காலம்வரை அவனைக் கடவுள் நம்பிக்கையையே இழக்கும்படிச் செய்தன. அவன் வெறும் சாஸ்திரப் படிப்பை மட்டும் சமயம் என்று கொள்ளவில்லை. கடுமையான பிரம்மசரியத்தையும், மற்றும் பல கடுமையான சாதனைகளையும் கைக் கொண்டான். சாஸ்திரங்களில் கூறியபடி எளிய உணவை உண்டு வெறும் தரையிலே படுத்துக் கடினமானத் தவங்களைச் செய்து கடவுளைக் காண விரும்பினான். உலகையே மறந்து மணிக்கணக்காக தியானம் செய்வான். இந்த நேரத்தில் அவன் மனத்தில் சந்தேகம் எழுந்து பெரிய போராட்டத்தை உருவாக்கி அவனை அமைதியில்லாதவனாக்கியது.

ஆங்கிலத் தத்துவ வாதிகள் இந்து சமயம் கூறும் உருவக் கடவுளை ஏற்றுக்கொள்ளவில்லை. பகுத்தறிவு-பகுத்தறிவு என்று அவர்கள் நுணுகி ஆராய்ந்து அதையே சுவையாகக் காரண காரியங்களோடு, படிப்பவர் மனங்கவரும்வகையில் எழுதி ஒவ்வொரு மனிதனிடமும் உள்ள சுய சிந்தனையும் பகுத்தறிவும் மட்டுமே கடவுள் என்று கூறினர். எப்போதுமே காரண காரிய வாதத்தில் அதிக விருப்பம் கொண்ட நரேந்திரன் அந்தக் கருத்துக்களை விருப்பத்தோடு ஏற்றுக் கொண்டான். அதே நேரத்தில் இளமையிலிருந்து அவன் கற்று

வந்த இந்து சமயக் கருத்துக்களும் அவன் செய்துவரும் ஆழ்ந்த தியானமும் இந்த மேல் நாட்டுத் தத்துவக் கருத்துக்கு எதிராக மனத்தில் எழுந்தன. சத்தியத்தைக் காண்பதில் ஆவலும் எதற்கும் துணிச்சலும் கொண்ட நரேனால் இரண்டு தத்துவங்களிலுமே அமைதி காண இயலவில்லை. மேல் நாட்டுத் தத்துவங்கள் படிப்பதற்குச் சுவையாக ஒரு போதை மருந்துபோல் இருந்ததே தவிர முடிவான கருத்தைத் தரவில்லை. இந்தியத் தத்துவங்கள் மேலும் மேலும் விளக்கங்களையும் விரிவுரைகளையும் தந்ததே தவிர அனுபவபூர்வமாக - நடைமுறையில் அதை நடத்திக் காட்டும் ஆற்றலைப் பெற்றிருக்கவில்லை.

இந்த நிலையில் சத்தியத்தைக் காணும் துடிப்பு மேலிட்டு அது ஏக்கமாகவே மாற தனக்கு அந்தக் கடவுளைக் காட்டுபவரைத் தேட ஆரம்பித்தான். அவன் சேர்ந்திருந்த பிரம்ம சமாஜம் அவனுக்கு இதில் உதவும் நிலையில் இல்லை. எனவே, கடவுளைக் காணவேண்டும் என்னும் ஆவலில் அப்போது வங்காளம் முழுவதும் ஆன்மிகச் சாதனைக்குப் பெயர் பெற்று விளங்கிய எல்லோராலும் மகரிஷி என்று அழைக்கப்பட்ட தேவேந்திரநாத் டாகூரிடம் சென்றார். ''ஐயா! நீங்கள் கடவுளைப் பார்த்திருக்கிறீர்களா?'' என்று கேட்டான். அவர் தந்த பதில் அவனுக்குத் திருப்தியைத் தரவில்லை. மறுபடியும் கடவுளிடம் தன்னை அழைத்துச் செல்பவரைத் தேடிக் கொண்டிருந்த அந்த நெருக்கடியான நேரத்தில்தான் நரேன் ஸ்ரீராமகிருஷ்ணரை சுரேந்திரநாத் மித்ராவின் வீட்டில் 1880-ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் சந்தித்தான். அப்போது அவன் கல்லூரியில் பி.ஏ.முதலாண்டுத் தேர்விற்குப் படித்துக் கொண்டிருந்தான் நரேன். அவன் சில பாடல்கள் பாடினான். அவனைப் பார்த்த குருதேவர் அவனுடைய தோற்றத்தை நன்கு உற்று கவனித்து அவனைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் கேட்டுத் தெரிந்துகொண்டார். பிறகு அவனை தட்சிணேசுவரத்துக்கு வரும்படி அழைத்தார்.

பரீட்சையில் நரேன் தேறிவிட்டான். நரேந்திரனின் தந்தை அவனுடைய திருமண ஏற்பாடுகளில் முனைந்தார். நரேன் திருமணத்திற்குப் பிடிவாதமாக மறுத்ததால் பேசிய திருமணப் பேச்செல்லாம் நின்றுவிட்டன. அவனுடைய உறவினரான இராமசந்திர தத்தா, நரேனின் நோக்கத்தை அறிந்து அவனைப் பாராட்டினார். ஒரு நாள் அவனிடம், ''ஏன் கடவுளைக் காணவேண்டுமென்று நீ இங்கும் அங்கும்

அலைகிறாய்? உனக்கு உண்மையிலேயே கடவுளைக் காண வேண்டுமென்ற எண்ணம் இருந்தால் தட்சிணேசுவரத்துக்கு ஸ்ரீராமகிருஷ்ணரிடம் போ'' என்றார். கொஞ்ச நாட்களுக்குப் பிறகு சுரேந்திரர் தட்சிணேசுவரம் போக அழைத்ததும், தன்னுடைய சில நண்பர்களுடன் நரேன் தட்சிணேசுவரம் புறப்பட்டான். ஸ்ரீராமகிருஷ்ணர் தம்முடைய மகத்தான சீடன் தன்னை முதன் முதலில் சந்தித்தது பற்றிக் கீழ்வருமாறு கூறியிருக்கிறார்.

''நரேந்திரன் மேற்கு வாசல் வழியாக இந்த அறைக்குள் வந்தான். அவனோடு வந்தவர்கள் உடல், உடை இவற்றின் அழகில் நல்ல கவனம் செலுத்தி இருந்தனர். இவனோ அதைப் பற்றிச் சிறிதும் கவலைப்பட்டவனாகத் தெரியவில்லை. வெளித் தோற்றம், வெளி உலகம் பற்றிச் சிறிதும் அக்கறை இல்லாதவனாக அவன் இருந்தான். அவனுடைய மனம் உள்ளாழ்ந்து, மனத்தின் ஒரு பகுதி எப்போதுமே தியானத்தில் மூழ்கிக் கிடப்பது அவனது கண்களிலிருந்து தெளிவாகத் தெரிய வந்தது. உலக ஆசைகள் நிறைந்த கல்கத்தா நகரிலிருந்து இப்படிப் பட்ட ஆன்மிகம் நிறைந்த இளைஞன் வருவதைக் கண்டு நான் ஆச்சரியப்பட்டேன். தரையில் ஒரு பாய் போடப் பட்டிருந்தது. நான் அவனை அதன் மேல் உட்காரச் சொன்னேன். அவனோடு வந்த நண்பர்கள் உலக இன்பங்களை விரும்பும் சராசரி இளைஞர்களாக இருந்தார்கள். என் வேண்டுகோளுக்கு இணங்கி நரேன் சில வங்காள பாடல்களைப் பாடினான். அவன் ஆத்மாவோடு கலப்பதற்காகத் துடிக்கும் துடிப்பைப் பொங்கி வரும் உணர்ச்சியோடு வெளிப்படுத்தும் பாடல்களாக அவை இருந்தன. அளவற்ற ஏக்கத்தை அவன் அந்தப் பாடல்களில் வெளிப்படுத்தினான். அதைக் கேட்டு என்னால் என் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ளவே முடியவில்லை. உலகை மறந்து நான் சமாதியில் ஆழ்ந்துவிட்டேன்.''

இதன் பிறகு என்ன நடந்தது என்பதை நரேந்திரநாத்தின் வார்த்தைகளில் காண்போம்.

''நான் பாடல்களைப் பாடினேன். சிறிது நேரம் கழித்து திடீரென்று அவர் எழுந்தார். என் கையைப் பிடித்து என்னை அறைக்கு வெளியே தனியாக அந்த அறையின் வடக்கு வராந்தாவிற்கு அழைத்து வந்தார். பிறகு கதவை மூடிவிட்டார். அங்கே நாங்கள் இருவருமே தனியாக இருந்தோம். அவர் எனக்கு ஏதோ

தனியாக உபதேசம் செய்யப்போகிறார் என்று நினைத்தேன். ஆனால் அவரோ நான் சற்றும் எதிர்பாராத வகையில் என் கைகளைப் பிடித்துக்கொண்டு அளவற்ற மகிழ்ச்சியால் ஆனந்தக் கண்ணீர் சிந்தத் துவங்கினார். பின்னர் அளவற்ற பரிவுடன் என்னிடம், 'ஓ! நீ எவ்வளவு காலம் கழித்து வந்திருக்கிறாய்? என்னை இவ்வளவு காலம் காக்கவைக்கும் கடினமான மனம் உனக்கு எப்படி உண்டாயிற்று? உலக ஆசை பிடித்த மக்களின் பேச்சைக் கேட்டுக் கேட்டு என் காதுகள் எரிந்து போய் விட்டன. என்னுடைய மனத்தில் பொங்கும் ஆன்மிகத்தை, அதைப் புரிந்து கொள்ளும் ஒருவரிடம் சொல்ல நான் எவ்வளவு துடித்துக் கொண்டிருக்கிறேன்! இப்படியே தேம்பித் தேம்பி அழுதபடி அவர் பேசிக் கொண்டிருந்தார். பிறகு இரண்டு கைகளையும் கூப்பி என்னை வணங்கியபடி என்னைப்-பார்த்து, 'பிரபோ! நாராயணனின் அவதாரமாகிய நர முனிவரே நீர்! மனித குலத்தின் துயர் தீர்க்கவே இப்போது பிறந்துள்ளீர் என்பதை நான் அறிவேன்.' என்றார்.

''அவருடைய பேச்சுக்களையும் நடத்தையையும் கண்டு ஆச்சரியமடைந்த நான், 'எப்படிப்பட்டப் பைத்தியத்தை நான் காணவந்திருக்கிறேன்? இவர் நிச்சயம் பைத்தியமாகத்தான் இருக்க வேண்டும். இல்லையென்றால் விசுவநாத தத்தாவின் மகனாகிய என்னைப் பார்த்து இப்படியெல்லாம் பேசுவாரா?' என்று நினைத்தேன். அப்போது அவர் திடீரென்று அறைக்குச் சென்று இனிப்பு, கற்கண்டு, வெண்ணெய் முதலியன கொண்டுவந்து தன் கையாலேயே என் வாயில் ஊட்டத் துவங்கினார். 'என் கையில் கொடுத்து விடுங்கள். என் நண்பர்களோடு நான் சாப்பிடுகிறேன்.' என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். அவர் கேட்கவே இல்லை.

''உன் நண்பர்களுக்கு நான் வேறு தருகிறேன்' என்று சொல்லியபடி அந்த இனிப்பு முழுவதையும் அவரே என் வாயில் ஊட்டி நான் தின்று முடித்த பிறகே என்னை விட்டார். பிறகு என் கைகளைப் பிடித்துக் கொண்டு, 'கூடியவரையில் நீ மட்டும் என்னிடம் தனியாக வருவதாகச் சத்தியம் செய்' என்று கெஞ்சினார். அவருடைய கெஞ்சலைத் தாங்காமல் 'சரி வருகிறேன்' என்று சொல்லிவிட்டு என் நண்பர்களிடம் திரும்பினேன்.

''நண்பர்களோடு உட்கார்ந்து கொண்டு அவர் மற்ற வர்களிடம் பேசும் பேச்சையும் அவரது நடவடிக்கை களையும் கூர்ந்து கவனித்தேன். அவருடைய ஆன் மிகப் பேச்சிலிருந்தும் ஆனந்த நிலையிலிருந்தும் அவர் உலக இன்பங்களை முற்றிலும் துறந்தவர் என்பதையும் அவருடைய பேச்சுக்கும் நடத்தைக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதையும் புரிந்து கொண்டேன். 'கடவுளைக் காண முடியும். நான் உன்னைப் பார்த்து உன்னோடு பேசுவது போல் அவரைப் பார்க்கவும் அவரோடு பேசவும் முடியும். மனிதர்கள் தங்கள் மனைவிகளுக்காகவும் பிள்ளைகளுக்காக வும் பணத்திற்காகவும் குடங்குடமாகக் கண்ணீர் வடிக் கிறார்கள். ஆனால் கடவுளைக் காண்பதற்கு யார் கண்ணீர் வடிக்கிறார்கள்? ஒருவன் அவரைக் காண உண்மையாக அழுது துடித்தால் அவர் அவனுக்குத் தன்னைக் காட்டி யருள்கிறார்' என்று அவர் கூறினார். அவர் கூறிய இந்தப் பேச்சுக்களைக் கேட்டதும் என்னால் நம்பாமல் இருக்க முடியவில்லை. ஏனென்றால் அது சாதாரணச் சமயச் சொற் பொழிவாளரின் பேச்சாக இருக்கவில்லை. அவருடைய அனுபவத்தின் ஆழத்திலிருந்து அந்தச் சொற்கள் பாய்ந்து வந்தன. ஆனால் என்னால் அவருடைய இந்தப் பேச்சோடு அவருடைய நடத்தையை இணைத்துப் பார்க்க முடிய வில்லை. அதே நேரத்தில் அவருடைய துறவின் அளவை யும் என்னால் குறைத்து மதிப்பிட முடியவில்லை. அவர் ஒரு பைத்தியமாக இருக்கலாம். ஆனால் அதிர்ஷ்டம் செய்த சிலரே அவரைப் போல் உலகத்தைத் துறக்க முடி யும் என்று நினைத்தேன். அவர் பைத்தியமாக இருந் தாலும் அவர் துறவிகளுக்கெல்லாம் துறவி, உண்மையான ஒரு மகான். அதற்காக மட்டுமே மனித சமுதாயம் முழு வதும் அவரைப் போற்றி வணங்க வேண்டும்' என்று நினைத்தேன். இத்தகைய ஒன்றுக்கொன்று மாறுபாடான எண்ணங்களோடு அவரை வணங்கி கல்கத்தா போக என்னை அனுமதிக்கும்படி வற்புறுத்தி அவரிடம் விடை பெற்றுக் கொண்டு திரும்பினேன்.''

மறுபடியும் நரேந்திரர் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்க்க வருவதற்குள் ஒருமாதம் கழிந்தது. இந்த முறை அவர் தனியாகச் சென்றார். அவருடைய சந்திப்பைக் குறித்து அவரே கூறியதைக் காண்போம். ''நான் அறைக் குள் நுழைந்தபோது அவர் மட்டுமே தனியாகக் கட்டிலில் உட்கார்ந்திருந்தார். என்னைப் பார்த்ததும் அவர்

மகிழ்ச்சி அடைந்தார். மிகுந்த அன்போடு என்னை அழைத்துப் பக்கத்தில் அமர்த்திக் கொண்டார். அடுத்த விநாடியே அவர் ஒருவித உணர்ச்சிப் பெருக்கால் தம்மையே மறந்து போனதைக் கண்டேன். அந்த நிலையில் காற்றில் நடப்பவர்போல் தமக்குள் ஏதோ முணுமுணுத்தபடி தன் பார்வையை என் மீது பதித்தபடியே என்னை நோக்கி மெதுவாக வந்தார். முன்பு நடந்ததுபோல் இப்போதும் ஏதாவது விசித்திரமான காரியத்தைச் செய்யப் போகிறார் என்று நான் நினைத்தேன். கண்ணை இமைப்பதற்குள் தம்முடைய வலது பாதத்தை என் மீது வைத்தார். அவரது கால் என் மீது பட்டதுதான் தாமதம். பேரதிசயமான அனுபவம் ஒன்று எனக்கு ஏற்பட்டது. கண்களைத் திறந்து கொண்டிருக்கும்போதே என் எதிரில் இருந்த சுவர்களும் அறையும் அந்த அறையில் இருந்த எல்லாப் பொருள்களும் அத்துடன் இந்தப் பிரபஞ்சமே பயங்கர வேகத்தில் சுற்ற ஆரம்பித்து சூன்யத்தில் மறைந்து விட்டன. அந்த அறை மட்டுமல்லாமல் உலகம் முழுவதும் உலகத்தை உணரும் 'நான்' என்றும் என் உணர்ச்சியும் கூட மர்மமான சூன்யத்தில் ஒன்றிக் கலந்தது. நான் பயந்து நடுங்கிவிட்டேன். அந்த நிலை, மூச்சு நின்றுபோய்விடும் சாகும்நிலை என எண்ணி அதைத் தாங்கிக் கொள்ளமுடியாமல் 'ஓ!' என்று நான் அலறியபடி, 'என்னை என்ன செய்கிறீர்கள்? வீட்டில் என் அப்பா அம்மா இருக்கிறார்கள்!' என்று கத்தினேன். அவர் உரக்கச் சிரித்தபடி என்மார்பின் மீது தன் கையால் தடவியபடியே 'நல்லது. இப்போது இதோடு நிற்கட்டும். சரியான காலத்தில் எல்லாம் நடக்கும்'' என்றார். அவர் இப்படிச் சொன்ன உடனே ஆச்சரியப்படும்வகையில் அந்த விநோதமான அனுபவம் என்னைவிட்டுத் திடீரென மறைந்துவிட்டது. நான் மறுபடியும் பழைய நிலையை அடைந்தேன். முன்பு போலவே அறைச் சுவர்களும் அறையில் உள்ள பொருள்களும் எப்பொழுதும்போல் இருக்கக் கண்டேன்.

''நான் இதை உங்களுக்குச் சொல்ல எவ்வளவு நேரம்பிடித்ததோ அதைவிட மிகக் குறைவான காலத்திலேயே இவையாவும் நடந்து முடிந்துவிட்டன. ஆனால் அந்த நிகழ்ச்சி என் மனத்தில் பெரிய புரட்சியையே உண்டாக்கி விட்டது. வியப்பினால் அதிர்ந்து போய்விட்ட நான் இப்படி நடப்பது முடியக்கூடிய காரியமா என்று நினைத்தேன். அந்த ஆச்சரியகரமான மனிதரின் வெறும் நினைப்பிலேயே அது வரவும் போகவும் செய்தது. அது ஆட்களை மயக்குகின்ற

மெஸ்மரிசமாகவோ ஹிப்னடிசமாகவோ இருக்கலாம் என்று நான் நினைத்தேன். ஆனல் அவைகளாக இருக்க முடியாது. ஏனென்றல் பலவீனமானவர்கள் மீதே இவைகளையெல்லாம் செய்ய முடியும். ஆனல் நானே என்னுடைய மனவலிமை யில் மிகுந்த பெருமை கொண்டிருப்பவன். நான் என்னை எத்தகைய வலிமையான மனிதனின் விருப்பத்திற்கும் உட்படுத்தமாட்டேன். அந்த மனிதரை நான் இதற்கு முன் பைத்தியக்காரர் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். இப்போது இத்தகைய காரியத்தை எப்படி அவரால் செய்ய முடிந்தது? என்னல் எந்த முடிவிற்கும் வர இயல வில்லை; இது என்னல் புரிந்து கொள்ள முடியாத புதிராக இருந்தது. மற்றொரு முறை இதுபோல் அவருடைய விருப்பப்படி நடக்க இடம் கொடுக்கக் கூடாது என்று நான் தீர்மானித்துக் கொண்டேன்.

''அடுத்த விநாடியே என்னைப் போன்ற மிக வல்லமை யான மனம்படைத்த ஒருவனை இப்படி மாற்றும் ஒருவர் எப்படிப் பைத்தியமாக இருக்க முடியும் என்று நினைத்தேன். நான் அப்படி நினைத்ததன் காரணம் முதன் முதலில் நான் அவரைச் சந்தித்தபோது அவர் பேசியதும் நடந்து கொண்ட முறையுமாகும். அவர் பைத்தியக்காரர் இல்லையென் றல் இப்போது அவர் செய்த காரியத்தை நினைத்தால் அவர் கடவுளின் அவதாரமாக இருக்கவேண்டும். இது நடக்கக் கூடிய காரியமல்ல. எனவே எனக்கு ஏற்பட்ட நிலையைக் குறித்தும் அதே நேரத்தில் ஒரு குழந்தையைப் போல் தூய்மையும் எளிமையுமே வடிவாக இருக்கும் இந்த ஆச்சரியமான மனிதரைக் குறித்தும் நான் குழப்பத்தில் மூழ்கிப் போனேன். இதைக் குறித்துச் சரியான முடிவுக்கு வர முடியாததால் எதையும் பகுத்தறிவால் கண்டு பிடித்து விட முடியும் என்ற என் உறுதிக்கு வேண்டாவெறுப்பாகத் தோல்வியே கிடைத்தது. ஆனல் இதன் மர்மத்தை ஆராய்ந்து உண்மையை எப்படியும் கண்டு பிடித்து விடுவது என்று நான் தீர்மானம் செய்து கொண்டேன்.

''அன்று முழுவதும் என்மனம் இந்த நிகழ்ச்சியைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தது. இந்த நிகழ்ச்சி நடந்து முடிந்ததும் அவர் முற்றிலும் வேறு மனிதராக மாறிவிட்டார். முதல் முறையைப் போலவே மிகுந்த அன்போடும் பாசத்தோடும் என்னை நடத்தினர். அப்போது அவர் என்னை நடத்திய முறை நெடுநாட்கள் பிரிந்து சென்று அப்போதுதான் சந்தித்த தன் அன்பிற்குரிய நண்பனை

நடத்துவதுபோல் இருந்தது. என்னிடம் காட்டிய இந்த அளவு கடந்த அன்பாலும்கூட அவர் திருப்தியடையாதவர் போல் இருந்தார். இந்த ஆச்சரியமான மனிதரின் அள வற்ற அன்பு என்னை அவருடன் ஈர்த்துக் கொண்டது. மாலை கழிந்து இரவு துவங்குவதை அறிந்ததும் வீட்டிற்குப் புறப்பட முயன்றேன். இது அவருக்கு மிகுந்த வருத்தத் தைத் தந்தது. கூடிய விரைவில் நான் மறுபடியும் வருவ தாக வாக்குக் கொடுத்த பிறகு தான் அவர் நான் போக விடை தந்தார்.''

இரண்டாவது முறையின்போது ஏற்பட்ட அனுபவம் போல் மறுமுறையும் ஏற்பட விடக்கூடாது என்பதில் நரேன் மிகவும் உறுதியாகத்தான் இருந்தார். ஆனால் அடுத்த முறையும் அவரால் அதைத் தடுத்துவிட முடியவில்லை. நரேன் மூன்றாவது முறையாக வந்தபோது குருதேவர் அவருடன் பேசியபடியே காளி கோயிலின் பக்கத்தில் இருந்த யதுமல்லிக்கின் தோட்டத்திற்குச் சென்றார். சிறிது நேரம் அந்தத் தோட்டத்தில் உலவிவிட்டு அந்த வீட்டின் முற்றத்தில் அமர்ந்தார்கள். சுற்றிலும் யாரும் இல்லை. இருவர் மட்டுமே தனியாக இருந்தார்கள். சிறிது நேரத்தில் குருதேவர் தெய்விகப் பரவசத்தில் ஆழ்ந்தார். அந்தக் காட்சியை வியப்போடு நரேந்திரர் பார்த்துக் கொண்டிருந்தபோது திடீரென்று அவரைத் தொட்டார். உடனே நரேந்திரன் உலக நினைவை இழந்தார். அவருக்கு நினைவு வந்தபோது குருதேவர் அவர் மார்பின் மீது தம் கையால் தடவிக் கொண்டிருப்பதைக் கண்டார்.

நரேந்திரன் நினைவற்றிருந்தபோது என்ன நடந்தது என்பதை அறிந்து கொள்ளவில்லை. ஆனால் அந்த நிலையில் அவரிடமிருந்து குருதேவர் பல செய்திகளைத் தெரிந்து கொண்டார். இதைப் பற்றி குருதேவர் பிற் காலத்தில் கூறும்போது, ''அவன் அந்த நிலையில் இருந்த போது நான் பல கேள்விகள் கேட்டேன். அவனுடைய முன் வரலாறு என்ன? எங்கிருந்து வந்தான்? இந்த உல கத்தில் அவன் செய்ய இருக்கும் பணி என்ன? என் பவைகளைக் கேட்டேன். அவனும் தன் மனத்துள் ஆழ்ந்து மூழ்கி என்னுடைய இந்தக் கேள்விகளுக்கெல்லாம் பொருத் மான பதில்களைச் சொன்னான். அந்தப் பதில்கள் நான் அவனைப் பார்த்தும் ஊகித்தும் உணர்ந்த செய்திகளை உறுதிப் படுத்தின. அவைகள் எல்லாம் மிகவும் இரகசியமாகக் காக்கப்பட வேண்டியவை. சிலவற்றை மட்டும் சொல்லலாம்.

அவன் முன் பிறவிகளிலேயே பூரண நிலை எய்திய முனிவன்; தியானம் கைவரப் பெற்றவன். தான் யார் என்பதை என்று அவன் புரிந்து கொள்ளுகிறானோ அன்றைக்கே யோகத்தின் மூலம் தன் உடலை விட்டுச் சென்று விடுவான்'' என்று கூறினார்.

நரேன் தட்சிணேசுவரத்துக்கு வந்து குருதேவரைக் காண்பதற்கு முன் அவருக்கு நரேனைப் பற்றி ஏற்பட்ட காட்சிகளை இந்த நேரத்தில் தெரிந்து கொள்ளுவது சுவையானதாகும். அதைப் பற்றிக் கீழ் வருமாறு குருதேவர் கூறியுள்ளார்:

''ஒருநாள் நான் சமாதியில் மூழ்கியிருந்தபோது என் மனம் ஒளிமயமான பாதை வழியே மிக மிக உயரமாகச் சென்றது. விரைவில் அது நட்சத்திர மண்டலங்களை எல்லாம் கடந்து நினைவு மயமான உலகிற்குள் நுழைந்தது. என் மனம் மேலும் மேலும் அந்த நினைவு மயமான உலகைக் கடந்து சென்றுகொண்டே இருந்தபோது அந்தப் பாதையின் இரண்டு பக்கங்களிலும் தேவ தேவியர்கள் நிற்பதைக் கண்டேன். சிறிது நேரத்தில் என் மனம் மனத்தையும் கடந்த மிக நுட்பமான மற்றொரு உலகிற்குள் நுழைந்தது. அங்கே மனத்தால் உணரும் இடங்களும், மனமே செல்லாத இடமும் தனியாக ஒளிமயமான ஒரு சுவர் போன்ற தடையால் பிரிக்கப்பட்டிருந்தது. அதைத் தாண்டி என் மனம் அதையடுத்திருந்த மிக உயர்ந்த உலகத்திற்குள் நுழைந்தது. தேவர்கள்கூட அந்த மிக உயர்ந்த உலகத்தை எட்டிப் பார்க்கப் பயந்து அதற்குக் கீழான உலகத்திலேயே மிகுந்த மனத்திருப்தியோடு இருந்து விட்டனர். ஆனால் அடுத்த விநாடி அந்த இடத்தில் ஏழு முனிவர்கள் சமாதியில் மூழ்கி உட்கார்ந்து கொண்டிருப்பதைக் கண்டேன். இந்த முனிவர்கள் துறவிலும் ஞானத்திலும் தூய்மையிலும் அன்பிலும் எல்லா மனிதர்களையும் எல்லாத் தேவர்களையும் கூடக் கடந்து சென்று விட்ட மிக உயர்ந்தவர்கள் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

''அவர்களுடைய மகோன்னதத்தைப் பற்றி நான் சிந்தித்துக் கொண்டிருந்தபோது வேறுபாடு தெரிந்து கொள்ளமுடியாத ஒளிமயமான அந்த உலகின் ஒரு பகுதி ஒன்றாகச் சேர்ந்து ஓர் அழகிய குழந்தையாக மாறியது. அந்தக் குழந்தை சமாதியில் மூழ்கிப் புறநினைவிழந்திருந்த முனிவர்களில் ஒருவரிடம் வந்து, தன் மென்மை

யான கைகளால் அவருடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு இனிமையான குரலில் ஏதோ பேசி அவர் மனத்தை ஆழ்ந்த சமாதியிலிருந்து வெளி உலகிற்குத் திருப்பியது. முனிவரின் முகம் அப்போது அளவற்ற மகிழ்ச்சியால் பூரித்ததைக் கண்ட நான் அந்தக் குழந்தையின் செயலால் அவர் மகிழ்ந்ததை அறிந்தேன். மந்திரத்தால் கட்டுண்டது போல் முனிவரின் பாதி திறந்த கண்கள் அந்த ஆச்சரிய மான குழந்தையின் மீது பதிந்தன. அந்தக் குழந்தையே அவரது இதயப் பொக்கிஷம் என்பதுபோல் மகிழ்ச்சிப் பூரிப்பு அவர் முகத்தில் பொங்கிப் பெருகியது. மிகுந்த மகிழ்ச்சியுடன் அந்தக் குழந்தை அவரிடம், 'நான் கீழே போகிறேன். நீயும் என்னுடன் வரவேண் டும்' என்று கூறியது. முனிவர் அசையாமல் அப்படியே இருந்தார். ஆனால் கருணை பொங்கும் அவரது கண்கள் தன் சம்மதத்தைத் தெரிவித்தன. அந்தக் குழந்தையைப் பார்த்தபடியே இருந்த அவர் மறுபடியும் சமாதியில் மூழ்கிவிட்டார். அவருடைய உடம்பின் ஒரு பகுதியும் மனத்தின் ஒரு பகுதியும் கண்ணைப் பறிக்கும் ஒளிவடிவில் கீழே இறங்கிச் செல்வதைக் கண்டேன். நரேந்திரனை முதலில் பார்த்ததுமே அவன்தான் அந்த முனிவர் என் பதை நான் புரிந்து கொண்டேன்.''*

ஸ்ரீராமகிருஷ்ணரின் மூலம் அளவற்ற வலிமையான ஒரு சக்தி செயல்படுகிறது என்பதில் நரேந்திரருக்கு இப்போது உறுதியான நம்பிக்கை ஏற்பட்டது. இதற்கு முன் அவரைப் பைத்தியம் என்று நினைத்த அவர் மனத்தில் அவரிடம் மிகுந்த மதிப்பு ஏற்பட்டது. கடவுளைக் காண்பதற்கு குரு அவசியம் என்பதில் நரேந்திரர் நம் பிக்கை இல்லாதவர். பலவீனத்திற்கும் குறுகிய நினைவு களுக்கும் ஆளாகும் ஒரு மனிதன் மற்றொரு மனிதனுக்குத் தெய்வத்தை எப்படிக் காட்ட முடியும் என்று அவர் நினைத்தார். அவருடைய இந்த நம்பிக்கை அவர் சேர்ந் திருந்த பிரம்ம சமாஜக் கொள்கைகளால் மேலும் வலி மைப் பெற்றது. குருதேவரைப் பார்த்ததும் அத்தகைய மனிதர்கள் உண்மையில் இருக்கிறார்கள் என்பதை அவர் அறிந்து கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணரால் தனக்குக் கடவுளைக் காட்ட முடியும் என்ற நம்பிக்கை அவருக்கு

---

*இதைத் தொடர்ந்து 'அந்தக் குழந்தை யார்?' என்று கேட்கப்பட்ட கேள்விக்கு தாமே அந்தக் குழந்தை என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறினார்.

உண்டாகியது. என்றாலும் தன்னுடைய பகுத்தறிவாலும் சொந்த அனுபவத்தாலும் மேலும் சோதித்துப் பார்த்தால் அன்றி ஸ்ரீராமகிருஷ்ணரின் கருத்துக்களை ஏற்றுக்கொள்ளக் கூடாது என்பதில் அவர் உறுதியாயிருந்தார். அவரிடம் இயல்பாகவே இருந்த துறவு, தியாகம் ஆகிய குணங்கள் குருதேவரின் தொடர்பினால் மேலும் வலிமை பெற்றது.

வாசகர்கள் குருதேவருக்கும் நரேந்திரருக்கும் இடையில் அமைந்த அற்புதமான உறவு பற்றி, இதற்கு முன்பே சிறிது அறிந்திருக்கிறார்கள். நரேந்திரர் ஸ்ரீராம கிருஷ்ணரைச் சந்தித்த நேரத்தில் இந்து சமயக் கடவுள் களிடம் நம்பிக்கையே இல்லாத சந்தேக வாதியாக, நாத்தி கராக இருந்தார். இந்து சமயச் சாஸ்திரங்களில் கூறப் பட்ட பல விதிமுறைகளைக் கேலி செய்து சிரிப்பார். ஸ்ரீராம கிருஷ்ணர் மிகச் சிறந்த ஒரு குருவிற்கே உரிய அன்போடும் பொறுமையோடும் அவை எல்லாம் உண்மையானதும் பின்பற்றுவதற்கு உரியதும் என்று உபதேசித்தார். நரேந் திரனின் தூய்மையான மனத்தையும் மன வலிமையையும் குறித்துக் குருதேவருக்கு அவரிடம் மிகுந்த மதிப்பேற்பட்டது. யாரிடமும் காணமுடியாத அரிய ஆற்றலும் திறமைகளும் உடையவனாக அந்த இளைஞன் இருந்ததையும் அவனிடம் இருந்த திறமையிலும் ஆற்றலிலும் ஒரு சிறு பகுதியே அவனை உலகிலேயே பெருமையும் புகழும் வாய்ந்த ஒருவனாக ஆக்கி விடும் என்பதையும் குருதேவர் தெளிவாக உணர்ந்தார். அவனுடைய இந்த ஆற்றல் ஆன்மிக வழியில் செலுத்தப் படாவிட்டால் தவறாகப் பயன்பட்டு, அதன் காரணமாக அவன் ஒரு தனி சமயத்தையோ அல்லது ஓர் அரசியல் கட்சியையோ உருவாக்கிவிடுவான். ஆனால் அவன் பிறந்த இலட்சியம் அதற் காக அல்ல. மனித சமுதாயத்திற்கு ஆன்மிக விழிப்பைக் கொண்டுவரக் கடவுளின் ஒரு கருவியாக அவன் படைக்கப் பட்டிருக்கிறான். எனவே ஸ்ரீராமகிருஷ்ணர் நரேனு டைய இலட்சியத்தை நிறைவேற்ற அவனைக் கடவுளைக் காணும் வழியில் செலுத்தத் துவங்கினார். இதுவே அவர்களிரு வருக்கும் அமைந்த மிகுந்த நெருக்கமான உறவுக்குக் காரண மாகும். அவர்கள் இருவருக்கும் இடையே இருந்த உறவின் நெருக்கத்தைச் சொல்லவே முடியாது. ஏனென்றால் வார்த் தைகளால் விளக்கிச் சொல்ல முடியாதது அந்த உறவு. ஸ்ரீராமகிருஷ்ணர் தம் சீடனிடம் செலுத்திய அன்பு களங்கம் அற்ற, எந்த விதமான எதிர்பார்ப்புகளும் இல்லாத தூய அன்பாகும். நரேன் சில நாட்கள் தட்சிணேசுவரம் வரவில்லை

என்றால் குருதேவரால் தாங்கவே முடியாது. கண்ணீர்விட்டு அழுவார்; காளியிடம் சென்று நரேனைத் தட்சிணேசுவரத்துக்கு அழைத்து வரும்படி வேண்டுவார். நரேன் வரும்வரை பலரிடமும் அதைப்பற்றிச் சொல்லியபடியும் அழுதபடியும் துயருற்றிருப்பார். அப்போது யாராலும் அவரைச் சமாதானப் படுத்த முடியாது.

ஒருமுறை நரேந்திரன் பல நாட்களாகத் தட்சிணேசுவரம் வரவில்லை. அந்தப் பிரிவைக் குருதேவரால் தாங்கவே முடியவில்லை. அப்போது அங்கிருந்த சீடரிடம் நரேந்திரரின் அற்புதமான குணாதிசயங்களைப் பற்றிப் புகழ்ந்து பேசியபடி அதில் லயித்திருந்தார். என்றாலும் அவர் வரவில்லையே என்ற துக்கம் தொண்டையை அடைக்க அவர் அறையை அடுத்திருந்த வராந்தாவிற்குச் சென்று அன்னை காளியிடம், ''தாயே! அவனைப் பார்க்காமல் என்னால் உயிர்வாழ முடியாது. அவனை இங்கே அழைத்து வா'' என்று சொல்லியபடியே தேம்பித் தேம்பி அழுதார். பிறகு ஒருவாறு தம்மைத் தேற்றிக் கொண்டு அறைக்குத் திரும்பினார். அங்கு அமர்ந்திருந்த பக்தர்களிடம் துயரச் சுமையோடு, ''நான் எவ்வளவோ அழுதும் பார்த்துவிட்டேன். அப்பொழுதும் அவன் வரவில்லையே. அவனைக் காணாததால் என் மனத்தில் தாள முடியாத வலி உண்டாகியிருக்கிறது. என் இதயத்தை அப்படியே கசக்கிப் பிழிவதுபோல் இருக்கிறது. ஆனால் அவனோ இதைப்பற்றிக் கவலையே படுவதில்லை'' என்று சொல்லிவிட்டு வேதனையைத் தாள முடியாதவராய் அங்கிருந்து வராந்தாவிற்குச் சென்றார். சிறிது நேரத்தில் அங்கிருந்து மறுபடியும் அறைக்குள் திரும்பி அங்கிருந்த பக்தர்களிடம், ''ஒரு கிழவன் இப்படி யாரோ ஒருவனுக்காக அழுவதையும் புலம்புவதையும் பார்த்தால் மற்றவர்கள் என்ன நினைப்பார்கள்? நீங்கள் என்னுடையவர்கள். உங்கள் முன்னால் அழுவதில் ஒன்றும் அவமானம் இல்லை. ஆனால் மற்றவர்கள் என்ன நினைப்பார்கள்? ஆனால் என்னால் வேதனையைத் தாங்க முடியவில்லையே!'' என்று கண்ணீர் வடித்தார். அவருக்குநரேனிடம் இருந்த அன்பைக் கண்டு பக்தர்கள் வாயடைத்துப் போனார்கள். தாம் நரேனுக்காக ஏங்கித் துடித்ததைப்பற்றி ஸ்ரீராமகிருஷ்ணரே கூறியிருக்கிறார். ''ஆறு மாதங்கள் வரை அவனுக்காக இப்படிப்பட்ட வேதனையால் நான் துடித்தேன். மற்ற இளஞ்சீடர்களிடமும் நான் மிகுந்த அன்பு செலுத்தினேன்.ஆனால் நரேந்திரனிடம் செலுத்திய அன்போடு ஒப்பிடும் போது அவையெல்லாம் மிக மிகச் சாதாரணமானதாகும்.''

பெரிய மனிதன்போல் நடிக்கும் நடிப்பு, அநீதி இவைகளுக்கெல்லாம் நரேந்திரர் பயங்கரமான எதிரி. அப்படிப் பட்டவர்கள் யாராயிருந்தாலும் அவர்களைத் துணிவுடன் எதிர்ப்பார். அவரது இந்தச் செயல் கள்ளம் கபடம் அற்ற தன்மையாலேயே என்பதை அறியாதவர்கள் அவர் அகங்காரம் பிடித்தவர் என்று கூறுவார்கள். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர் நரேந்திரனின் இந்தக் குணத்தை முற்றிலும் மாறுபட்ட கண்ணோட்டத்தில் கண்டு பாராட்டினார். அதைப் பற்றிக் கூறும்போது, ''நரேன் மாசு மறுவற்ற தங்கம் போன்றவன். அவனுடைய இந்தக் கோபமும் பிடிவாதமும் அவன் தன்னிடம் கொண்டுள்ள தன்னம்பிக்கையிலும் மனக்கட்டுப்பாட்டிலுமிருந்தே தோன்றியவை. தன்னுடைய ஆத்மாவின் தூய்மையில் அவன் நிலை பெற்றிருப்பதால் மற்றவர்கள் தன்னைப்பற்றிப் பேசுவதைக் குறித்து அவன் இலட்சியம் செய்வதில்லை'' என்று கூறுவது வழக்கம். இன்னும் சில ஆண்டுகளில் நரேன் உலகில் எல்லோரையும்விட உயர்ந்தவனாகப் போவதையும் அப்போது உலக குருவாக விளங்கப் போகும் அவனிடம் இந்தக் குணங்கள் எல்லாம் மனித சமுதாயத்தின் துயரை நீக்க அரும் பெரும் குணங்களாகப் பயன்படப் போவதையும் குருதேவர் தெளிவாக அறிந்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணருக்கு நரேனிடம் அளவில்லாத நம்பிக்கை இருந்தது. அவனுடைய தூய்மையை மாசுபடுத்த எதனாலும் முடியாது என்பதை அவர் திடமாக நம்பினார் அவர் நரேனிடம் பழகுவது விசித்திரமாக இருக்கும். ஒருவனை அவன் முன்னிலையில் புகழ்ந்தால் அவன் கர்வத்தால் அழிந்து விடுவான் என்பது உலகில் காணும் சாதாரண நடைமுறையாகும். இந்த நடைமுறையை நன்கு அறிந்த குருதேவர் நரேந்திரனைப்பற்றி பலருடைய நடுவில் ஏன், நரேந்திரனின் முன்பே மிகவும் புகழ்ந்து பேசுவார். ஒரு முறை குருதேவரின் அறையில் இந்தியாவிலும் இங்கிலாந்திலும் மிகுந்த புகழ் பெற்றிருந்த கேசவசந்திர சென், அவருடைய தோழரும் வங்காளமும் முழுவதும் பெரும் புகழ் பெற்றவருமான விஜயகிருஷ்ண கோசுவாமி, மற்றும் பல பிரம்ம சமாஜ பக்தர்களும் நரேனும் கூடியிருந்தனர். குருதேவர் கட்டிலின்மேல் பரவச நிலையில் அமர்ந்தபடி புகழ் பெற்ற அந்தப் பிரம்ம சமாஜத் தலைவரான கேசவரையும் நரேனையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்தார். அவரது உள் மனத்தில்பிற்காலத்தில் நரேந்திரர் எய்தப் போகும் பேரும்புகழும்

சிறப்பும் தோன்றின. கூட்டம் முடிந்ததும் குருதேவர் அங்கிருந்த பக்தர்களைப் பார்த்து, ''இதோ பாருங்கள். கேசவரிடம் ஒரே ஒரு கலைதான் இருக்கிறது. அதுவே அவரை இவ்வளவு புகழும் பெருமையும் உடையவராக ஆக்கி இருக்கிறது. ஆனால் நரேனிடமோ அதைப்போல் பதினெட்டுக் கலைகள் இருக்கின்றன. கேசவரிடமும் விஜயரிடமும் ஞானம் ஒரு மெழுகு வர்த்திபோல் ஒளிர்வதை நான் கண்டேன். நரேந்திரனிடமோ அது சூரியனைப்போல ஒளிவீசி அறியாமையையும் மனமயக்கத்தையும் அதன் சுவடுகூட இல்லாமல் நீக்குகிறது'' என்றார். நரேந்திரரும் அப்போது அந்தப் பக்தர்களோடு உட்கார்ந்திருந்தார். குருதேவரின் இந்தப் புகழ்ச்சியைக் கேட்டதும் நரேந்திரர் மகிழ்ச்சி அடைவதற்குப் பதில் மிகவும் கூனிக் குறுகியவராய் அவரிடமே, ''எதற்காக இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்? புகழ்பெற்ற கேசவரும், ஞானியான விஜயரும் எங்கே? ஒன்றும் தெரியாத சிறுவனான நான் எங்கே? நீங்கள் இப்படியெல்லாம் பேசுவதைக். கேட்டால் எல்லோரும் உங்களைப் பைத்தியம் என்று சொல்லுவார்கள். தயவு செய்து இனிமேல் இப்படிப் பேசாதீர்கள்'' என்றார்.

இதைக் கேட்ட ஸ்ரீராமகிருஷ்ணர் நரேனைப் பார்த்து, ''நான் அதைச்சொல்லாமல் இருக்க முடியவில்லை. அதெல்லாம் எனது சொந்த வார்த்தைகள் என்று நினைக்கிறாய்? அன்னை காளி எனக்குச் சில காட்சிகளைக் காட்டுகிறாள். நான் அவற்றை அப்படியே திருப்பிச் சொல்லுகிறேன். அவள் உண்மையைத் தவிர எனக்கு வேறு எதையும் காட்டுவதில்லை'' என்றார். குருதேவர் தாம் கூறிய வார்த்தைகளை அன்னை காளியோடு தொடர்புபடுத்திப் பேசியது நரேந்திரருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. "அது காளியின் வார்த்தையா அல்லது உங்கள் மூளையின் விசித்திரமான கருத்தா? நான் உங்கள் நிலையில் இருந்தால் எனக்கு இப்படித் தோன்றுவதையெல்லாம் காளியின் பேச்சு என்று சொல்ல மாட்டேன். அதெல்லாம் முழுக்க முழுக்க என் மனத்தில் தோன்றும் கற்பனை என்றே சொல்வேன்.'' மேல் நாட்டுத் தத்துவஞானிகள் புலன்களால் நாம் அடிக்கடி ஏமாற்றப்படுகிறோம் என்று கூறுகின்றார்கள். அதுவும் யாரையாவது ஒருவரைப் பற்றியதாக இது இருக்கும்போது இந்த ஏமாற்று அதிகமாக இருப்பதாகக் கூறுகிறார்கள். நீங்கள் என்னை மிகவும் விரும்புகிறீர்கள். நான் மிகச் சிறந்தவனாக வரவேண்டுமென்று எப்போதும் ஆசைப்படுகிறீர்கள். இவைகளால் அப்படிப்பட்ட எண்ணங்கள் தோன்றுவது மிகவும்

இயற்கையானதாகும்'' என்ருர். இவ்வாறு நரேந்திரர் குரு தேவரின் மனத்தில் உறுதியாக உருவான நம்பிக்கைகளையெல் லாம் அடிக்கடி நொறுக்க முயன்ருர். குருதேவர் தெய் விகப் பரவசத்தில் இருக்கும்போது நரேந்திரர் இப்படிப் பேசினுல், அவர் அதைக் காதிலேயே போட்டுக் கொள்ள மாட்டார். ஆனுல் சாதாரண நிலையில் இருக்கும்போது மிகுந்த கவலையடைந்து நரேனைப் போன்ற தூய்மையான வர்களே தம்முடைய தெய்விகக் காட்சியில் சந்தேகம் கொள் வதுபற்றி மனம் பதறுவார். அந்தப் பதற்றத்தில் காளியி டம் சென்று, ''நரேன் இப்படி எல்லாம் பேசுகிருனே!'' என்று அழுவார். காளி, ''நீ ஏன் அவன் சொல்வதையெல் லாம் கேட்கிருய்? அவன் இன்னும் சில நாட்களில் நீ சொன்ன ஒவ்வொரு வார்த்தையையும் உண்மையென்று ஏற்றுக் கொள்ளப்போகிருன்-பார்'' என்பாள். அதன்பிறகே குரு தேவர் அமைதி அடைவார்.

இதன் தொடர்பான மற்ருெரு சுவையான நிகழ்ச்சி யையும் காணலாம். ஒரு முறை நரேன் ஓரிரு வாரங்கள் தட்சிணேசுவரத்துக்கு வராமல் இருந்து விட்டார். குருதேவர் அவரை வரச் சொல்லி ஆளுக்கு மேல் ஆளாக அனுப்பினுர். நரேன் வரவே இல்லை. எனவே ஒரு ஞாயிற்றுக்கிழமை மாலை நரேனைப் பார்க்க குருதேவரே கல்கத்தாவிற்குப் புறப்பட்டு விட்டார். மாலை வேளைகளில் நரேன் பிரம்ம சமாஜப் பிரார்த் தனைக் கூட்டத்தில்தான் இருப்பார் என்பது அவருக்குத் தெரி யும். தாம் அங்கு போவது சமாஜ அங்கத்தினர்களுக்கு மகிழ்ச்சியைத் தராது என்பதையும் எண்ணுமல் நரேந் திரனைத் தேடி அவர் அங்குச் சென்ருர். அவர்கள் எப்போதும் அவரிடம் அன்போடும் மரியாதையோடும் நடந்து கொள்வ தால் தம்மைக் கண்டதும் அவர்கள் மகிழ்ச்சி அடைவார்கள் என்றே நினைத்தார். ஸ்ரீராமகிருஷ்ணர் பாவ நிலையில் மூழ் கியபடி சமாஜக் கோயிலுக்குள் நுழைந்தபோது அங்கு ஆரம்ப வழிபாடுகள் முடிந்து சொற்பொழிவு ஆரம்ப மாக இருந்தது. ஸ்ரீராமகிருஷ்ணரின் எதிர்பாராத வருகை யானது அதன் உறுப்பினர்களுக்கிடையே பெரும் குழப்பத் தை ஏற்படுத்திவிட்டது. உட்கார்ந்திருந்தவர்கள் அனைவரும் அவரைப் பார்க்க எழுந்து நின்ருர்கள். நரேந்திரர் அங்கே பாடிக் கொண்டிருந்த இடத்திலிருந்தே குரு தேவரைப் பார்த்துவிட்டார். அவர் அங்கே வந்திருப்பதன் நோக்கமும் அவருக்குப் புரிந்துவிட்டது. எனவே விரைந்து அவரிடம் சென்ருர். பேச எழுந்த சொற்பொழிவாளர்

பேச்சை நிறுத்தி விட்டார். அங்கிருந்த முக்கியத் தலைவர்கள் ஸ்ரீராமகிருஷ்ணருக்குச் சாதாரண மரியாதைகூடக் காட்டாமல் அவரிடம் கோபமும் வெறுப்பும் கொண்டார்கள். ஏனென்றால் பிரம்ம சமாஜம் அப்போது இரண்டாகப் பிரிந்ததற்கும், கேசவரும் விஜயரும் பழைய பிரம்ம சமாஜக் கொள்கையிலிருந்து விலகியதற்கும் குருதேவரே காரணம் என்று அவர்கள் நினைத்தார்கள். அவருடைய உபதேசத்தாலேயே அவையெல்லாம் நடந்ததாக முடிவு செய்தார்கள். ஆனால் குருதேவர் அந்த உறுப்பினர்களின் இந்த எண்ணங்களையோ அது குறித்துக் கூட்டத்தில் ஏற்பட்ட கலவரத்தையோபற்றி சிறிதும் நினைக்காமல் பரவச நிலையில் பிரசங்க மேடைக்குச் சென்று அங்கே சமாதியில் மூழ்கிவிட்டார். இது இன்னும் அதிகமான கலவரத்தை உண்டாக்கிவிட்டது. கூடியிருந்த பெருங்கூட்டம் ஒருவரை ஒருவர் தள்ளவும் முன்னும் பின்னும் செல்லவும் கூச்சலிடவும் ஆரம்பித்தது. கலவரம் அதிகமாகவே அவர்களைக் கோயிலிலிருந்து வெளியேற்றக் கோயிலில் எரிந்து கொண்டிருந்த விளக்கை அணைக்க வேண்டி வந்தது. இதனால் திடீரென்று கோயில் முழுவதும் இருள் சூழ்ந்தது. இது குழப்பத்தையும் கூச்சலையும் மேலும் அதிகப் படுத்தியது. ஒவ்வொருவரும் மற்றவர்களைத் தள்ளிக் கொண்டு வாயிலை நோக்கி ஓடிவர ஆரம்பித்தனர்.

குருதேவருக்கு இழைக்கப்பட்ட அவமானத்தைக் கண்டு நரேந்திரர் மிகவும் வருந்தினார். இந்த இருட்டு வேளையில் அவரை யாராவது ஏதாவது செய்துவிடுவார்களோ என்று அச்சம் கொண்ட நரேந்திரர் குருதேவரின் சமாதி கலைந்ததும் அவரை இருட்டில் சிரமத்துடன் கோயிலின் பின்புற வழியாக வெளியே அழைத்து வந்தார். பிறகு அவரோடு தட்சிணேசுவரம் புறப்பட்டார். நரேன் இந்த நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டுப் பிற்காலத்தில் சொல்லும்போது, ''என் பொருட்டு குருதேவர் அன்றைக்குப் பட்ட அவமானத்தைக் கண்டு என் மனம் துடித்த துடிப்பை என்னால் சொல்ல முடியாது. முன் யோசனையில்லாமல் அங்கு வந்ததற்காக அவரை நான் மிகவும் கடிந்துக் கொண்டேன். அவரோ அந்த நிகழ்ச்சியைப் பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. என் வார்த்தைகளுக்கும் காது கொடுக்கவில்லை. அவருடைய சுயமதிப்பையும் விட்டுவிட்டு என்னைத் தேடிக்கொண்டு அங்கு வந்ததைப் பற்றி நான் அவரிடம் கடுமையாகப் பேசினேன். இனிமேல் அவர் என்னைப் பற்றியே எந்நேரமும் நினைத்துக் கொண்டிருந்தால் பரதனைப் போலாகிவிடுவார் என்று சொன்னேன். அரசரான

பரதன் கடவுளை அடைவதற்காக அரசைத் துறந்து காட்டிற்கு வந்து தவம் செய்து கொண்டிருந்தார். ஆனால் அங்கே அவர் வளர்த்த மான் குட்டியையே எப்போதும் நினைத்துக் கொண்டிருந்ததால் அடுத்த பிறவியில் அவர் மானாகப் பிறக்க வேண்டிவந்தது என்பதையும் கூறினேன். குழந்தையைப் போன்ற குருதேவர் மனத்தில் நான் சொல்லியவை மிகுந்த கலகத்தை உண்டாக்கின. 'நீ சொல்வது முற்றிலும் உண்மை என்றாலும் உன்னை நினைக்காமல் இருக்க முடியவில்லை. இதன் முடிவு என்ன ஆகும்?' என்று பரபரப்போடும் பயத்தோடும் கூறியபடியே காளி கோயிலுக்குச் சென்றார். பிறகு சிறிது நேரத்தில் புன்சிரிப்போடு திரும்பி வந்தார். 'போக்கிரிப் பயலே! இனிமேல் நீ சொல்வதைக் கேட்கவே மாட்டேன். நான் உன்னிடம் கடவுளைக் காண்கிறேன். அதனால்தான் உன்னை நினைக்கிறேன். உன்னிடம் கடவுளை நான் காணவில்லையென்றால் நீ என்முன் நின்றால்கூட உன் முகத்தை ஏறெடுத்தும் பார்க்கமாட்டேன் என்று அன்னை காளி கூறுகிறாள். அதனால் நீ சொல்லும் ஒரு வார்த்தையைக் கூடக் கேட்க மாட்டேன்' என்று அவ்வளவு நேரம் நான் பேசியதையெல்லாம் தள்ளிவிட்டுப் போய் விட்டார்'' என்று கூறினார்.

குருதேவர் நரேந்திரரைக் கண்ட அன்றே அத்வைத ஞானத்திற்கு அவர் ஏற்றவர் என்பதை உணர்ந்து கொண்டார். அதனால் நரேனை அஷ்டவக்ர சம்ஹிதா முதலான அத்வைத நூல்களைப் படிக்கும்படிக் கூறினார். பிரம்ம சமாஜக் கொள்கையில் ஊறிய நரேந்திரனுக்கு அந்த நூல்கள் சமயக் கருத்துக்கு முரணானவைகளாகத் தோன்றின. ''அந்தத் தத்துவத்திற்கும் நாத்திக வாதத்திற்கும் வேற்றுமையே இல்லை. அதைப் படிப்பது கடவுள் நிந்தனை. கடவுளும் நானும் ஒன்று என்று சொல்லும் இந்த வேதாந்தத்தைப் போன்ற பாவமான கருத்து உலகத்தில் எதுவும் இல்லை. நானும் கடவுள். நீங்களும் கடவுள். உலகில் படைக்கப்பட்டுள்ள எல்லாமே கடவுள் என்னும் இந்த அத்வைதத்தை விட மோசமான, சிரிக்கத் தகுந்த கொள்கை வேறு எதுவும் இருக்காது. இதை எழுதிய முனிவர்கள் நிச்சயம் பைத்தியக் காரர்களாகத்தான் இருப்பார்கள்'' என்று அடிக்கடிக் கூறி அத்தகைய நூல்களைப் படிப்பதற்கு மறுப்பார். ஸ்ரீராம கிருஷ்ணர் இம்மாதிரி தூக்கி எறிந்து பேசும் தம் சீடனின் பேச்சைக் கேட்டுச் சிரிப்பார். ஆனால் அவருடைய இந்தக் கருத்துத் தவறு என்று நேருக்கு நேர் சொல்லாமல், ''அந்த

முனிவர்களின் கருத்துக்களை நீ ஏற்றுக்கொள்ளாமல் போக லாம். ஆனால் அதற்காக நீ ஏன் அவர்களைத் திட்ட வேண் டும்? அதோடு அந்தக் கருத்துக்கு எதிராகக் கடவுளின் இருப்பை நீ ஏன் ஒரு வரையறைக்குள் கொண்டுவர வேண் டும்? தொடர்ந்து கடவுளிடம் பிரார்த்தனை செய். அவர் எந்த வடிவத்தை உனக்குக் காட்டுகிறாரோ அதில் நம்பிக்கை வை'' என்று கூறுவார். ஆனால் நரேந்திரர் இதையெல்லாம் ஏற்றுக் கொள்ளவே இல்லை. அறிவாராய்ச்சிக்கு ஒத்து வராதவற்றை எல்லாம் அவர் தவறு என்று கூறுவார். ஒன்று பொய்யென்று அவருக்குத் தோன்றினால் யார் என்ன சொன்னாலும் அதைத் தூக்கி எறிந்து பேசுவது அவர் வழக்கம். எனவே சமயம் கிடைக்கும் போதெல்லாம் அத்வைதத் தத்துவத்தைக் கேலியாகப் பேச அவர் தவறுவதே இல்லை.

ஆனால் குருதேவர் நரேந்திரருக்குரிய பாதை ஞான நெறியே என்பதையும் இறுதியில் அத்வைதத் தத்துவத்தால் கவரப்பட்டு அதன் மூலம் மிக உயர்ந்த ஆன்மிக நிலையை அடையப் போகிறார் என்பதையும் அறிவார். அதனால்தான் அவரிடம் அடிக்கடி அத்வைதத் தத்துவத்தைப் பேசி அவர் மனத்தை அதன்மீது திருப்ப முயன்றார். ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணர் நரேந்திரரிடம் அத்வைதத் தத்துவத்தின் உயிர் நாடியான ஜீவாத்மா பிரம்மத்தோடு ஒன்றாகி எல்லாமே பிரம்மமாகி விடுகிற கருத்தைக் கூறிக் கொண்டிருந்தார். அதில் கொஞ்சமும் அக்கறை செலுத்தாதவராக நரேந்திரர் அறையை விட்டு வெளியே வந்து பக்கத்து வராந்தாவில் உட்கார்ந்திருந்த ஹாஸ்ராவிடம் சென்றார். அவரோடு ஹுக்கா பிடித்தபடியே ஸ்ரீராமகிருஷ்ணர் சற்றுமுன் அறைக்குள் சொல்லிய அத் வைதக் கருத்தைப் பற்றிக் கூறி, ''இது எப்படி உண்மையாக இருக்க முடியும்? இந்தக் கூஜாவும் கடவுளாம். இந்தக் கோப் பையும் கடவுளாம். நாம் எதையெல்லாம் பார்க்கிறோமோ அவையெல்லாம் கடவுளாம். நாம்கூடக் கடவுளாம். இதைவிட அபத்தமான பேச்சு வேறு ஏதாவது இருக்க முடியுமா?'' என்றார். ஹாஸ்ராவும் நரேந்திரரின் கேலிப் பேச்சில் சேர்ந்து கொண்டார். இருவரும் உரக்கச் சிரித்தார்கள். இந்தச் சிரிப்பொலி அறைக்குள் இருந்த குரு தேவரின் காதில் விழுந்தது. அவர் தம் துணியைக் கையில் குழந் தையைப்போல் சுற்றிக் கொண்டு பாவ சமாதியில் மூழ்கிய வராக அவர்களிடம் வந்தார். ''எதற்காகச் சிரிக்கிறீர்கள்?''

என்று கேட்டபடியே புன்சிரிப்போடு நரேந்திரரைத் தொட்டுவிட்டுச் சமாதியில் ஆழ்ந்து விட்டார். நரேந்திரர் அந்த ஸ்பரிசத்தால் ஏற்பட்ட விளைவைக் கூறினார்:

''குருதேவரின் அந்த மந்திர சக்தி வாய்ந்த ஸ்பரிசம் என் மனத்தில் மகத்தான மாற்றத்தைத் தோற்றுவித்தது. அண்ட சராசரங்களிலும் கடவுளைத் தவிர எனக்கு எதுவுமே தெரியவில்லை. இதைக் கண்டு நான் வாயடைத்துப் போனேன். இதை நான் என் கண்களால் தெளிவாகப் பார்த்தேன். என்றாலும் இது நிலைத்து இருக்கிறதா என்று பார்க்க இது பற்றி யாரிடமும் எதுவும் சொல்லாமல் அமைதியாக இருந்தேன். அன்று முழுவதும் இந்த நிலை நீடித்திருந்தது. அங்கிருந்து வீட்டிற்கு வந்தேன். அங்கும் நான் காண்பதெல்லாம் பிரம்மமாகவே தோன்றியது. சாப்பிடுவதற்கு அமர்ந்தேன். அங்கும்கூட எல்லாம்-உணவும் அது வைத்திருக்கும் தட்டும் உணவைப் பரிமாறுபவரும் ஏன், நானும்கூட பிரம்மமாகவே தெரிந்தன. நான் ஒன்றிரண்டு பிடி உணவை மட்டும் சாப்பிட்டேன். அதன் பிறகு ஒன்றுமே செய்ய முடியவில்லை. சாப்பிடாமல் அப்படியே உட்கார்ந்து கொண்டிருந்தேன். 'ஏனிப்படிச் சாப்பிடாமல் உட்கார்ந்திருக்கிறாய்? சீக்கிரம் சாப்பிட்டுவிட்டு எழுந்திரு' என்று என் தாய் கூறுவதைக் கேட்டு மறுபடியும் சாப்பிடத் துவங்கினேன். சாப்பிட்டாலும் படுத்துக் கொண்டிருந்தாலும் கல்லூரிக்குச் சென்றாலும் எல்லாம் எனக்கு ஒரே மாதிரியாக இருந்தது. நான் எப்போதும் ஒருவித மயக்க நிலையில் இருப்பதை உணர்ந்தேன்.

''தெருக்களில் நடந்து செல்வேன். வண்டிகள் என்முன் ஓடிக் கொண்டிருக்கும். நானும் அந்த வண்டிகளும் ஒரே பொருளால் செய்யப்பட்டிருப்பதைக் கண்டேன். என் உடம்பில் உணர்ச்சியே இல்லை. உடம்பு முழுவதும் உணர்ச்சியற்றுக் கொண்டு வருகிறதோ என்று நான் நினைத்தேன். சாப்பிடுவதில் எனக்குத் திருப்தியே ஏற்படவில்லை. நான் சாப்பிட்டேன் என்றாலும் எனக்குள்ளிருந்து யாரோ சாப்பிடுவது போல் தோன்றியது. சில நேரங்களில் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது அப்படியே படுத்து விடுவேன். பிறகு சிறிது நேரம் கழித்து எழுந்து உட்கார்ந்து மறுபடியும் சாப்பிடத் தொடங்குவேன். இதன் விளைவாக ஒரே நாளில் பல முறை அளவுக்கு மிக மிக அதிகமாக உண்டு விடுவேன். ஆனால் எவ்வளவு சாப்பிட்டாலும் எனக்கு எந்தத் துன்பமும் உண்டாகவில்லை. இதைக் கண்டு என் தாய் மிகவும் பயந்து போனார். எனக்கு என்னவோ ஆகிவிட்டது என்றும்

ஒரு வேளை நான் அதிக நாள் உயிரோடு இருக்க மாட்டேனே என்றும் கலங்கி அழத் துவங்கினார். சில நாட்கள் கழித்து இந்த நிலை சிறிது குறைந்தது. உலகம் கனவில் தெரிவதுபோல் தோன்றியது. கல்கத்தா நகரில் கார்ன் வாலிஸ் சதுக்கத்தில் நடந்து செல்லும்போது அந்தச் சதுக்கத்தைச் சுற்றிப் போடப்பட்டிருந்த இரும்புச் சட்டங்கள் உண்மையா, அல்லது வெறும் கனவுத் தோற்றமா என்று தெரிந்து கொள்ள அவற்றின்மீது என் தலையை மோதிக் கொண்டேன். இந்த நிலை சில நாட்கள் தொடர்ந்து இருந்தது. பிறகு நான் சுயநிலையை அடைந்ததும் இவ்வளவு நாட்கள் நான் அனுபவித்து வந்தது அத்வைத நிலை என்பதைத் தெரிந்து கொண்டேன். இதன் பிறகு அத்வைத சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள எல்லாமே பிரம்மம் - என்ற முடிவை-கடவுள் பொய்யல்ல-என்பதை உணர்ந்து கொண்டேன். அதிலிருந்து அத்வைதத் தத்துவத்தை நான் குறை கூறுவதில்லை.''

நரேந்திரர் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அனுபவித்த உரிமை வேறு யாருக்குமே கிடைக்காததாகும். அதைக் கீழ்வரும் நிகழ்ச்சி மூலம் காணலாம். நரேன் எப்போதும் உருவ வழிபாட்டையும் காளியையும் பற்றிய குருதேவரின் கருத்துக்களை எதிர்த்து அவர் மனம் புண்படும்படிப் பேசுவார். ஒரு நாள் நரேனின் வாதத்தில் வெறுப்பும் கோபமும் கொண்ட குருதேவர், ''என் தாய் காளியை நீ நம்பவில்லை என்றால் பிறகு ஏன் இங்கே வருகிறாய்?'' என்று கேட்டார். இதைக் கேட்ட நரேந்திரர், ''நான் இங்கே வருகிறேன் என்பதற்காக உங்கள் காளியை நம்பிவிட வேண்டுமா?'' என்றார். ''மிகவும் நல்லது. இப்போது ஆனந்த மயமான என் தாயை நம்ப மறுக்கிறாய். ஆனால் கூடிய சீக்கிரத்தில் அவளை ஏற்றுக் கொண்டு அவள் முன்னால் கதறி அழப் போகிறாய், பார்'' என்றார். இப்படி நரேந்திரனிடம் கூறிவிட்டு, எதிரில் இருந்த பக்தர்களிடம், ''இதோ பாருங்கள், இந்தப் பையனுக்கு உருவக் கடவுளில் நம்பிக்கையே இல்லை. பாவ சமாதியில் காணும் கடவுள் வடிவங்களை எல்லாம் என் மூளைக் கொதிப்பால் தோன்றும் கோளாறுகள் என்று கூறுகிறான். ஆனால் இவன் மிகவும் அருமையானவன். தூய்மையே வடிவானவன்; ஆனால் நேரான ஆதாரம் இல்லாமல் எதையும் நம்ப மறுக்கிறான். அவன் நிறையப் படித்திருக்கிறான். அதனால் மிகுந்த விவேகமும் சரியான கருத்துத் தெளிவும் கொண்டிருக்கிறான்'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தம் சீடர்களின் தகுதியை ஆராய்வதில் மிகுந்த திறமை உடையவர். அதற்காக அவர் பல்வேறு முறைகளைக் கையாளுவார். ஒருவரை முழுமையாக எடை போடாமல் தம் சீடராகச் சேர்த்துக்கொள்ள மாட்டார். நரேந்திரரைக்கூட அப்படி முழுமையாகச் சோதித்த பிறகே குருதேவர் அவர்மீது முழுமையான நம்பிக்கையை வைத்தார். அதைப் பற்றிய நிகழ்ச்சியைக் காண்போம்.

நரேந்திரர் தட்சிணேசுவரம் வரும்போதெல்லாம் குருதேவர் அளவற்ற ஆனந்தமும் ஆன்மிகப் பரவசமும் அடைவார். தொலேவில் பார்க்கும்போதே ஓடிப்போய் அவரைக் கட்டிக்கொள்ள வேண்டும்போல் குருதேவரிடம் அன்பு பொங்கும். அவரைப் பார்த்தவுடனே பொங்கும் அளவற்ற பரவசத்தால் அவர் பெயரைக் கூப்பிட நினைப்பார். நரேந்திரன் 'என்று அழைக்க 'ந' என்ற ஒலிமட்டுமே வரும். அதற்குள் பரவசத்தில் மூழ்கி, சமாதியில் ஆழ்ந்து விடுவார். ஒரு நாள் இந்த நிலை அடியோடு மாறிவிட்டது. ஸ்ரீராமகிருஷ்ணர் நரேந்திரரைக் கண்டும் காணாதது போல் இருக்க ஆரம்பித்தார். நரேந்திரர் வந்தார். வணங்கிவிட்டு அவர்முன் அமர்ந்தார். ஆனால் வழக்கம் போல் குருதேவர் அவரிடம் அன்பு காட்டவில்லை. அவரை வரவேற்கவோ அவருடைய நலத்தைப் பற்றிக் கேட்கவோ இல்லை. நரேனைப் பார்த்த பிறகும் அவரை யாரோ முன்பின் தெரியாதவரைப் போல் பார்த்துவிட்டு அமைதியாகத் தம் சிந்தனையில் மூழ்கிவிட்டார். குருதேவர் ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டிருப்பதைக் கண்ட நரேந்திரர் அறையிலிருந்து எழுந்து வெளியே வந்து வராந்தாவில் அமர்ந்திருந்த ஹாஸ்ராவிடம் சென்று ஹுக்கா பிடித்தபடிப் பேசிக் கொண்டிருந்தார். பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் தம் அறையில் யாருடனோ பேசுவதைக் கேட்டதும் அங்கிருந்து அவருடைய அறைக்குள் வந்தார். இப்போது குருதேவர் நரேனுடன் பேசாதது மட்டுமல்ல, அவரைக் கண்டதும் முகத்தையும் திருப்பிக் கொண்டார். அன்று முழுவதும் குருதேவர் நரேனிடம் இப்படியே நடந்து கொண்டார். மாலையில் நரேந்திரர் வழக்கம்போல் குருதேவரை வணங்கி விட்டுக் கல்கத்தா புறப்பட்டார்.

ஒரு வாரம் கழித்து நரேன் மறுபடியும் தட்சிணேசுவரம் வந்தார். அன்றும் குருதேவர் அவரிடம் முன்பு போலவே நடந்து கொண்டார். எனவே அவர் ஹாஸ்ரா

விடம் பேசிக் கொண்டிருந்துவிட்டு மாலை வந்ததும் குரு தேவரை வணங்கிவிட்டுக் கல்கத்தா திரும்பினார். மூன்றா வது முறையும் நான்காவது முறையும் இதே நிலை தொடர்ந்தது. குருதேவர் தம்மை வரவேற்காததோ பேசாததோ நரேனிடம் கோபத்தையோ அல்லது எந்த விதமான மாற்றத்தையுமோ உண்டாக்கவில்லை. அவர் வழக்கம்போல் தட்சிணேசுவரம் வந்து குருதேவரைப் பார்த்துவிட்டுப் போய்க் கொண்டிருந்தார்.

இதற்கிடையே குருதேவர் சிலரை நரேனுக்குத் தெரியாமல் அவர் வீட்டிற்கு அனுப்பி நரேனின் நலத்தை அறிந்து வரச் சொல்வார். ஆனால் அவர் தம் எதிரே வந்ததும் முன்புபோல் பேசாமல் முகத்தைத் திருப்பிக் கொள்வார். ஒரு மாதத்திற்கும் மேலாக இந்த நிகழ்ச்சிகள் தொடர்ந்தன. ஒரு நாள் தட்சிணேசுவரம் வந்து கோயி லில் இருந்த நரேனைக் கூப்பிட்டு அனுப்பினார். வந்ததும், "ஆமாம்! நீ இங்கே வரும்போதெல்லாம் நான் ஒரு வார்த்தைகூட உன்னோடு பேசுவதில்லை. உன்னைப் பார்த்த தும் முகத்தைத் திருப்பிக் கொள்கிறேன். அப்படி யிருந்தும் நீ தொடர்ந்து வந்துக் கொண்டிருக்கிறாயே! அது ஏன்?" என்று கேட்டார்.

இதைக் கேட்ட நரேன் புன்னகைத்தபடி, "ஐயா! உங்களை நான் நேசிக்கிறேன்; பார்க்க விரும்புகிறேன். அதனால் வருகிறேன். நீங்கள் பேசுகிறீர்களா, இல்லையா என்பது உங்களைப் பொறுத்த விஷயம். அதைப் பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும்?" என்றார்.

நரேந்திரரின் இந்தப் பதில் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அளவற்ற மகிழ்ச்சியை ஊட்டியது. முகமெல்லாம் ஆனந் தம் பொங்க, "நான் உன்னிடம் அன்பும் அக்கறையும் காட்டவில்லை என்றால் தொடர்ந்து நீ என்னை வந்து பார்ப்பாயா என்பதை அறிய உன்னைச் சோதனை செய்தேன். உன்னைப் போல் மன வலிமையும் ஆழ்ந்த அன்பும் கொண்டவர்களைத் தவிர வேறு யாராலும் என்னுடைய கொடூரமான புறக்கணிப்பைத் தாங்கிக் கொண்டிருக்க முடியாது. வேறு யாராவது இருந்தால் என்னைவிட்டுப் போய்விட்டிருப்பார்கள். மறுபடியும் இந்தப் பக்கமே திரும்பி இருக்கமாட்டார்கள்" என்றார்.

மற்றொரு முறை ஸ்ரீராமகிருஷ்ணர் நரேந்திரரைத் தனியாகப் பஞ்சவடிக்கு அழைத்துச் சென்றார். அங்குச்

சென்றதும், ''இதோ பார்! கடுமையான சாதனைகள் பலவற்றை நான் செய்ததன் பலனாக மிக உயர்ந்த சித்திகளைப்* பெற்றிருக்கிறேன்! ஆனால் அவைகளால் எனக்கு எந்தப் பயனும் இல்லை. ஆடையைக் கூட உடம்பின்மீது ஒழுங்காகப் போட்டுவைக்க முடியாத வன் நான். அப்படிப்பட்டவனால் இந்தச் சித்திகளைக் கொண்டு என்ன செய்ய முடியும்? எனவே அன்னை காளி யின் அனுமதியோடு அவைகளை நான் உனக்குக் கொடுத்து விட விரும்புகிறேன். அன்னைக்காக நீ எதிர்காலத்தில் பெரும் செயல்களைச் செய்யப் போவதை அன்னை எனக் குக் காட்டியிருக்கிறாள். நான் கொடுக்கும் இந்தச் சித்திகள் அன்னையின் பணியைச் செய்ய மிகவும் துணையாக இருக்கும். என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் அற்புதமான சித்திகளைப் பெற் றிருப்பது நரேந்திரருக்குத் தெரியும். ஆனால் கடவுளைக் காணவேண்டும் என்பதில் அவருக்கிருந்த விருப்பம் இந்தச் சித்திகளிடத்தில் அவருக்கு இல்லை. ஒரு கணம் சிந்தனையில் ஆழ்ந்த நரேந்திரர் குருதேவரிடம், ''இந்தச் சித்திகள் கடவுளைக் காண எனக்கு உதவுமா?'' என்று கேட்டார். ஸ்ரீராமகிருஷ்ணர், ''உதவாது. அத்தகைய காரியங்களுக்கு இவை பயன்படாது. ஆனால் நீ கடவுளைக் கண்ட பிறகு செய்யப் போகும் திருப்பணிகளுக்கு மிகவும் உதவியாக இருக்கும்'' என்றார். இதைக் கேட்டதும் நரேந்திரர், ''அப்படியென்றால் அவை எனக்கு வேண்டாம். முதலில் நான் கடவுளைக் காண்கிறேன். அதன் பிறகு உங்களுடைய சித்திகள் எனக்கு வேண்டுமா, வேண்டாமா என்பதுபற்றி நான் முடிவு செய்கிறேன். இப்போது இவற்றை நான் பெற்றுக்கொண்டால், என் குறிக்கோளையே மறந்து, தன்னலத்துக்காக அவற்றைப் பயன்படுத்தி, நானே அழிந்துவிட நேரிடும்'' என்றார்.

குருதேவர் உண்மையில் தம்மிடமுள்ள சித்திகளை எல்லாம் நரேந்திரருக்குக் கொடுக்க விரும்பினாரா அல்லது சோதிக்க விரும்பினாரா என்பது நமக்குத் தெரியாது. ஆனால் நரேந்திரர் இப்படிச் சித்திகளைப் பெற மறுத்த தும் அவர் அளவற்ற மகிழ்ச்சியடைந்தது மட்டும் நமக் குத் தெரியும்.

---

*சித்திகள் என்பவை சாதாரண மனித ஆற்றலை மீறிய சில சக்திகள். (தண்ணீரில் நடப்பது, நினைத்த உருவம் கொள்வது போன்றவை).

நரேந்திரர் குருதேவரின் திருவடியில் மகிழ்ச்சியாக நாட்களைக் கழித்தார். குருதேவரும் அமைதியான முறையில் படிப்படியாக அவருடைய இதயம் முழுவதையும் கவர்ந்தார். குருதேவர் தம் சீடர்களுக்கு ஆன்மிக போதனைகளைச் செய்யும் விதமே அற்புதமானதாகும். ஒரு பார்வையிலேயே சீடனின் மனநிலையை அவர் தெளிவாகப் புரிந்து கொண்டு இவனுக்கு இந்த உபதேசம் பொருத்தமானது என்று முடிவு செய்து விடுவார். பிறகு அதற்கு ஏற்ப அந்தச் சீடனின் மனத்தைப் பக்குவப்படுத்துவார். பெரிய பயில்வான் ஒருவன் தன்னிடம் புதியதாகக் குத்துச் சண்டை கற்க வந்தவனிடம் எப்படி மிகுந்த எச்சரிக்கையோடும் கட்டுப்பாட்டோடும் சில சமயம் அவனுக்கு உற்சாகமூட்ட அவனிடம் தோற்றுப் போயும் சில முறை அவன் தன்னுடைய வலிமையை அறிந்து கொள்ளச் சற்றுக் கடுமையாகத் தாக்கியும் பயிற்சி கொடுப்பதுபோல் குருதேவரும் தம் சீடர்களுக்குப் பயிற்சி தந்தார். மேலும் தம் சீடர்களிடம் தம்மைச் சோதனை செய்து பார்த்து நம்பும்படியும் கூறுவார். அவர் நரேந்திரரிடம், ''நாணயத்தைப் பரிசோதிப்பவன் அது செல்லுமா செல்லாதா என்பதைச் சுண்டிப் பார்த்துத் தெரிந்து கொள்வதுபோல் என்னை நன்றாகச் சோதித்துப் பார்த்த பிறகு ஏற்றுக்கொள்'' என்று கூறுவார்.

ஒரு முறை குருதேவர் கல்கத்தாவிற்குப் போயிருந்த சமயத்தில் நரேந்திரர் தட்சிணேசுவரம் வந்திருந்தார். குருதேவரின் அறையில் யாரும் இல்லாததைக் கண்டதும் நரேந்திரருக்கு, தம் கையால் பணத்தைத் தொடவே முடியாது என்று அவர் சொல்லுவதைச் சோதித்துப் பார்க்க வேண்டும் என்னும் எண்ணம் உண்டாயிற்று. எனவே ரூபாய் நாணயம் ஒன்றை எடுத்து யாருக்கும் தெரியாமல் அவருடைய படுக்கையின் கீழ் வைத்துவிட்டு, பஞ்சவடிக்குத் தியானம் செய்யப் போய்விட்டார். சிறிது நேரம் கழித்து ஸ்ரீராமகிருஷ்ணர் கல்கத்தாவிலிருந்து திரும்பினார். அறைக்குள் நுழைந்து படுக்கையைத் தொட்டாரோ இல்லையோ வலியால் அலறினார். அதன் காரணம் தெரியாமல் சுற்றுமுற்றும் அவர் பார்த்துக் கொண்டிருந்தபோது நரேந்திரர் அறைக்குள் நுழைந்து நடப்பதை அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தார். குருதேவர் அறையிலிருந்த ஒருவரிடம் படுக்கையைச் சோதிக்கும்படிக் கூறினார். அவர் சோதனை செய்ததும்

மெத்தையின் கீழ் ஒரு ரூபாய் நாணயம் இருப்பது தெரிந்தது. குருதேவரும் சோதித்தவரும் அதைப் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். நரேந்திரர் மெதுவாக அறையிலிருந்து நழுவினர். அவரைச் சோதிக்க அந்த ரூபாய் நாணயத்தைப் படுக்கையில் வைத்தது நரேந்திரரே என்பதைப் பிறகு அறிந்ததும் குருதேவர் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார்.

1884-ஆம் ஆண்டின் முற்பகுதியில் நரேந்திரரின் தந்தை திடீரென்று மாரடைப்பால் காலமானர். அவர் தாம் குடும்பம் முழுவதற்கும் சம்பாதித்தவர். அவர் நிறையச் சம்பாதித்தது போலவே நிறையச் செலவும் செய்தார். எனவே அவர் மரணமடைந்ததும் குடும்பம் கொடிய வறுமையில் சிக்கியது. கடன்காரர்கள் கதவைத் தட்டத் துவங்கினர். எந்த உறவினர்களைக் காப்பாற்று வதற்காக நரேந்திரரின் தந்தை தாம் சம்பாதித்தப் பணம் முழுவதையும் செலவு செய்தாரோ அவர்களே இப்போது கொடிய பகைவர்களானர்கள்; நரேந்திரரின் குடும் பத்தை அவர்கள் வாழ்ந்து வந்த வீட்டிலிருந்தே துரத்தி விடுவதாகப் பயமுறுத்தினர்கள். தாயும் சகோதர சகோதரிகளுமாக ஆறு ஏழு பேரைக் காப்பாற்றும் பொறுப்பு நரேந்திரர்மீது விழுந்தது. வேலை தேடி அலைந்த அவருக்குச் சென்ற இடமெல்லாம் தோல்வியும் ஏமாற்ற முமாகவே இருந்தன. இப்படியே மூன்று நான்கு மாதங்கள் கழிந்தன. இந்த வேதனை மிகுந்த நாட்களை நரேந்திரரே சொல்லக் கேட்போம்:

''என் தந்தை இறந்து சில நாட்களுக்குள்ளாகவே குடும்பத்தைப் பசியிலிருந்து காப்பாற்ற நான் வேலை தேடி அலையும் நிலை ஏற்பட்டது. பசியோடும் காலில் செருப்புக் கூட இல்லாமல் கொளுத்துகின்றவெயிலில் ஒவ்வோர் அலு வலகமாக வேலை கேட்டு ஏறி இறங்க ஆரம்பித்தேன். சில நாட்களில் என் நெருங்கிய நண்பர்கள் இரண்டொருவர் துணையாக உடன் வருவார்கள். ஆனல் ஒவ்வொரு அலு வலகத்திலும் என்னை முகத்தில் அடிக்காத குறையாக வெளியே போகச் சொன்னர்கள். முதன் முதலில் எனக்கு எற்பட்ட இந்த அனுபவம் இந்த உலகத்தில் சுயநலமில்லாத அன்பு என்பது எங்குமே கிடையாது என்பதையும் ஏழை களுக்கும் ஆதரவற்றவர்களுக்கும் பலவீனமானவர்களுக்கும் இந்த உலகத்தில் இடமே இல்லை என்பதையும் தெள்ளத் தெளிவாக உணர்த்தியது. சில நாட்களுக்கு முன்பு எனக்கு

உதவுவதில் மிகுந்த பெருமைப் படுவதாகக் கூறியவர்கள் எல்லாம் இப்போது எனக்கு உதவப் போதுமான வசதிகள் இருந்தும் என்னைக் கண்டு முகம் சுளித்தார்கள். இதையெல்லாம் கண்ட எனக்கு இந்த உலகமே சாத்தானின் கைவேலை போல் தோன்றியது. ஒரு நாள் வெயிலில் நடந்து நடந்து அலைந்த களைப்பின் மேலீட்டாலும் மிகுந்த கால்வலியாலும் கல்கத்தா மைதானத்திலுள்ள ஒரு சிலையின் (Ochterlony Monument) நிழலில் உட்கார்ந்து விட்டேன். அப்போது என்னுடன் சில நண்பர்களும் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் எனக்கு ஆறுதல் தருவதற்காகக் கடவுளின் கருணையின் பெருமையைப்பற்றி ஒரு பாட்டுப் பாடினன். அது என் தலைமீது பெரிய அடிபோல் விழுந்தது. என் தாய் தம்பிகளின் ஆதரவற்ற வேதனையான நிலையை நினைத்தபடியே அந்த நண்பனைப் பார்த்து ஆத்திரத்தோடு, 'தயவு செய்து அந்தப் பாட்டை நிறுத்து. கடவுள் கருணை மிகுந்தவர், அருள் மயமானவர் என்னும் வேடிக்கை எல்லாம் பணக்காரக் குடும்பத்தில் பிறந்து சுற்றத்தார்கள் ஒருவரும் பட்டினியால் துடிக்காத ஒருவனுக்குத்தான் சுவைக்கும். ஆமாம்; ஒரு காலத்தில் நானும் இதேபோல நினைத்தவன்தான். ஆனல் இன்று வாழ்க்கையில் கொடூரமாகச் சிக்கிப் போராடிக் கொண்டிருக்கும்போது அது வெறும் கேலிப் பேச்சாக இருக்கிறது' என்றேன்.

''அதைக் கேட்டு என் நண்பனின் மனம் வருந்தியது. ஆனல் இத்தகைய வார்த்தைகளை என்னைப் பேசும்படி வைத்த என் துயரத்தின் ஆழத்தை அவன் எப்படி அறிவான்? சில நேரங்களில் வீட்டில் சமைத்த உணவு மிகவும் குறைவாக இருக்கும். சமைக்கவும் வேறு பொருள் இருக்காது. என்னிடமும் பணம் இருக்காது. அந்த நேரத்தில் நான் வெளியில் சாப்பிட்டு விட்டதாகச் சொல்லிவிட்டுச் சாப்பிடாமலே எழுந்துவிடுவேன். வெளியில் சாப்பிடவும் இடம் கிடையாது. ஒன்றும் சாப்பிடாமலே பட்டினியாக இருப்பேன். சுய கௌரவத்தின் காரணமாக இதை யாரிடமும் நான் சொல்லவும் மாட்டேன். சில நேரங்களில் என் பணக்கார நண்பர்கள் தங்களுடைய வீடுகளுக்கோ தோட்டங்களுக்கோ வரும்படி அழைத்துப் பாடுமாறு கூறுவார்கள். தவிர்க்க முடியாதமல் போவேன்; பாடுவேன். அவர்களில் ஓரிருவரைத் தவிர மற்றவர்களுக்கு என் நிலையை அறிந்து கொள்ளும் ஆர்வம் கிடையாது. ஒருவன் மட்டும் என்னுடைய உண்மையான நிலையை அறிந்து கொண்டு என்னிடம் நேராக உதவி

செய்தால் நான் வாங்க மறுப்பேன் என்பது தெரிந்துத் தன் பெயரைத் தெரிவிக்காமல் என் தாயிடம் பணத்தை அனுப்பி என்னை அவனுக்கு எல்லையில்லா நன்றிக் கடன் படும்படிச் செய்தான்.

''தவறான வழிகளில் பணம் சம்பாதித்துக் கொண்டிருந்த நண்பர்கள் சிலர் என்னுடைய துயர நிலையை அறிந்ததும் என்னையும் அவர்களோடு சேரச் சொன்னார்கள். என்னைப் போல் வாழ்வில் மிகுந்த கசப்பைக் கண்ட ஒரு சிலர் என்னிடம் அனுதாபம் காட்டினர். மற்றும் பல்வேறான துன்பங்களும் எனக்கு நேர்ந்தன. ஒரு பணக்கார விதவை எனக்கு உதவ மிகக் கேவலமான வழியொன்றை எனக்குச் சொன்னாள். மிகுந்த வெறுப்போடு மறுத்துவிட்டு வறுமையில் என் நாட்களைக் கழித்து வந்தேன். அது போலவே தவறான நோக்கத்தோடு எனக்கு உதவ வந்த மற்றொரு பெண்ணின் உதவியையும் உதறித் தள்ளினேன்.

''இவ்வளவு வேதனைகளுக்கு இடையிலும் நான் கடவுளின் கருணையில் வைத்திருந்த நம்பிக்கையை இழக்கவில்லை. ஒவ்வொரு நாளும் அவர் பெயரைச் சொல்லியபடியே படுக்கையிலிருந்து எழுவேன். காலைக் கடன்களை முடித்து விட்டு வேலை தேடிக் கிளம்புவேன். ஒரு நாள் நான் அப்படிக் கடவுளை வணங்கும்போது என் தாய் கேட்டு விட்டார். என்னிடம் கோபத்தோடு, 'முட்டாளே! குழந்தையிலிருந்தே கடவுளின் கருணைக்காகக் கதறிக் கொண்டிருக்கிறாய். அந்தக் கடவுள் உனக்கு என்ன நன்மை செய்து விட்டார்?' என்றார். அது என்னைக் கடுமையாகத் தாக்கியது. . உடனே, 'கடவுள் இருக்கிறாரா? உண்மையில் அவர் இருந்தால் மனம் உருகிச் செய்யும் ஒரு மனிதனின் பிரார்த்தனையை அவர் கேட்க மாட்டாரா? பிறகு ஏன் என் பிரார்த்தனைகளுக்குப் பதிலே இல்லை? கருணை மயமான இந்தக் கடவுளின் மேலான ஆட்சியில் ஏன் இவ்வளவு துன்பங்கள் இருக்கின்றன?' என்று நினைத்தேன். பண்டித வித்யாசாகர் கூறிய, 'கடவுள் உண்மையிலேயே நல்லவராகவும் கருணை மிகுந்தவராகவும் இருந்தால் இலட்சக் கணக்கான மக்கள் ஒருபிடி சோறுக் கூடக் கிடைக்காமல் சாவது ஏன்?' என்னும் வார்த்தைகள் மிகுந்த வேதனையோடு என் காதுகளில் எதிரொலித்தன. கடவுளிடம் எனக்கு அளவு கடந்த வெறுப்பு ஏற்பட்டது. இந்த நேரத்தில்தான் என் மனத்தில் கடவுள் இருக்கிறாரா என்ற சந்தேகமும் புகுந்துகொண்டது.

''எதையும் இரகசியமாகச் செய்வது என்பது என் இரத்தத்திலேயே இல்லை. என் சிறுவயதிலிருந்தே

நான் ஒன்றைச் சொல்ல விரும்பினுல் பயமோ வேறு எதுவுமோ என்னைத் தடுத்துவிட முடியாது. எனவே இப்போதும் கடவுள் என்பதே இல்லை. இருக்கிருர் என்று சொல்வதெல்லாம் மாய மந்திர வேலை. ஒரு வேளை அவர் இருக்கிருர் என்ருலும் நம்மைக் காப்பாற்றுவதற்காக அவரை அழைப்பது வெறும் ஏமாற்று வேலை' என்பதை நான் கண்ட உண்மையான அனுபவத்தின் மூலம் உலகிற்கு நிரூபித்துக் காட்டத் துவங்கினேன். உடனே என்னைப் பற்றிய உண்மைக்கு மாருன பல செய்திகள்—நான் குடிக்கிறேன் என்றும் விலைமாதர்களின் வீடுகளுக்குச் செல்லுகிறேன் என்றும் செய்திகள் கிளம்பத் துவங்கின. இந்தப் பொய்யான அவதூறுகள் என் மனத்தில் அதிகமான வெறுப்பை உண்டாக்கி என்னை மேலும் கடினமானவனுக ஆக்கின. 'இந்தத் துன்பமயமான உலகில் தவருன வழிகளில் தாற்காலிகமான இன்பம் பெறுவதும் தவறு இல்லை' என்று வெளிப்படையாகவே அடித்துக் கூறினேன். அது மட்டுமல்லாமல், 'நான் அத்தகைய வழியில் பயன் இருப்பதாக நம்பினுல் பயத்தின் காரணமாக அதைப் பின்பற்றுவதிலிருந்து பின்னடைய மாட்டேன்' என்றும் கூறினேன்.

''என்னுடைய இந்தப் பேச்சுக்களும் இதைப் பற்றிய பொய்யான வதந்திகளும் குருதேவருக்கும் கல்கத்தாவில் இருக்கும் அவருடைய பக்தர்களின் காதுகளுக்கும் எட்டின. அவர்களில் சிலர் என்னிடமே அதைப்பற்றிக் கேட்டுத் தெரிந்துகொள்ள வந்தார்கள். அப்படி வந்தவர்கள் அந்த வதந்திகளைத் தாங்கள் நம்புவதாகவும் குறிப்பாக என்னிடம் சொன்னுர்கள். என்னை இவ்வளவு கேவலமாக அவர்கள் நினைப்பதை அறிந்ததும் எனக்குச் சொல்ல முடியாத கோபம் ஏற்பட்டது. அடக்க முடியாத ஆத்திரத்தில் நான் அவர்களிடம் நரக பயத்திற்காகக் கடவுளை நம்புவதுபோல் கடைந்தெடுத்தக் கோழைத்தனம் வேறு எதுவும் இல்லை என்றும் கடவுள் என்று ஒருவர் இல்லவே இல்லை என்றும் மேல் நாட்டுத் தத்துவங்களையெல்லாம் ஆதாரம் காட்டி அவர்களிடம் அடித்துக் கூறினேன். இதன் விளைவு என்ன ஆயிற்று என்ருல் நான் திருத்த முடியாத அளவிற்குக் கெட்டு நாசமாகப் போய்விட்டதாக அவர்கள் முடிவு செய்துகொண்டு அங்கிருந்து புறப்பட்டார்கள். அதைக் கண்டு நான் மகிழ்ச்சி அடைந்தேன். ஒரு வேளை ஸ்ரீராமகிருஷ்ணர் கூட இதை நம்பிவிடுவாரோ என்று நினைத்தேன். இந்த நினைப்புத் தோன்றியதும் என் கோபமும் வெறுப்பும் எல்லை

யற்றுப் போயின. முதலில் அதைத் தாங்க முடியாது துடித்தேன். பிறகு, 'சரி, மற்றவர்கள் பேச்சைக் கேட்டு அவர் அப்படித்தான் நினைத்துக் கொள்ளட்டுமே. அதனால் எனக்கு என்ன?' என்று நினைத்துக்கொண்டேன். ஆனால் பிறகு, என்னைப் பற்றிச் சொல்லப்பட்ட இந்தச் செய்திகளையெல்லாம் குருதேவர் அமைதியாக பதில் ஒன்றும் சொல்லாமல் கேட்டுக் கொண்டார் என்பதை அறிந்து நான் ஆச்சரியப் பட்டேன். அதோடு அவருடைய சீடர் பவநாத் கண்களில் நீர் வழிய, 'ஐயா! நரேன் இவ்வளவு கீழ்த்தரமாகப் போய் விடுவான் என்று நான் கனவில்கூட நினைக்கவில்லை' என்று சொல்லியதும் குருதேவர் மிகுந்த கோபத்தோடு, 'முட்டாளே! அன்னை காளி அவன் அப்படிப் போகவே மாட்டான் என்று கூறியிருக்கிறாள். மறுபடியும் அவனைப் பற்றி இப்படிப் பேசினால் உன் முகத்தில்கூட விழிக்க மாட்டேன்' என்றாராம்.

''சூழ்நிலையின் காரணமாக, கடவுள் இல்லை என்னும் நாத்திக வாதம் என்மீது அப்போது கட்டாயமாகத் திணிக்கப்பட்ட போதும் என் உள்மனம் மட்டும் நான் சிறுவனாக இருந்த காலத்திலிருந்து அனுபவித்து வந்து ஆன்மிக அனுபவமும் குருதேவரின் தொடர்பால் ஏற்பட்ட தெய்விக விழிப்பும் 'கடவுள் நிச்சயம் இருந்தே ஆக வேண்டும். அவரைக் காண்பதற்குரிய வழியும் நிச்சயம் இருந்தே ஆக வேண்டும்' என்று கூறிக் கொண்டிருந்தன. இல்லையென்றால் உயிரோடு இருப்பதிலேயே பயனில்லை. இந்தக் கொடிய துன்ப துயரங்களுக்கு நடுவே கடவுளைக் காண வழியை நான் கண்டு பிடித்தே ஆகவேண்டும் என்று நினைத்தேன். நாட்கள் கழிந்து கொண்டே வந்தன. என் மனமும் கடவுள் இருக்கிறார் என்ற நம்பிக்கைக்கும் இல்லை என்ற சந்தேகத்திற்கும் இடையில் ஆடியபடியே இருந்தது. என் குடும்பத்து வறுமையோ சிறிதும் மாறாமல் அப்படியே இருந்தது.

''வெயில் காலம் கழிந்தது. மழைக்காலம் துவங்கிற்று. வேலைக்காக நான் அலையும் அலைச்சல் தொடர்ந்துகொண்டே இருந்தது. ஒரு நாள் மாலையில், பகல் முழுவதும் வேலை தேடி அலைந்து பட்டினியோடு, பயனற்ற சிந்தனையோடு ஆங்காங்கே மழையில் நனைந்தபடி உடம்பெல்லாம் வலி எடுக்க மிகுந்த களைப்போடு திரும்பிக் கொண்டிருந்தேன். இப்படிக் கொஞ்ச நேரம் நடந்ததும் என்னால் ஓர் அடிகூட எடுத்துவைக்க முடியவில்லை. தெருவில் இருந்த ஒரு வீட்டின் ஓரத்தில் அப்படியே சாய்ந்து உட்கார்ந்து விட்டேன். எனக்கு நினைவு இருக்கிறதா, இல்லையா என்றுகூடக் கவனிக்க முடியவில்லை.

அவ்வளவு களைப்பாக இருந்தது. பல்வேறு எண்ணங்கள் என் மனத்தில் எழுந்தன. எந்தவொரு எண்ணத்தின்மீதும் மனத்தைச் செலுத்தி என்னவென்று அறிய முடியவில்லை. திடீரென்று ஏதோ ஒரு தெய்விக சக்தியால் என் ஆன்மாவை மூடியிருக்கும் திரைகள் ஒன்றன் பின் ஒன்ருக நீக்கப் படுவதை உணர்ந்தேன். என் மனத்தில் இவ்வளவு நாட்களாக இருந்து வந்த, கடவுள் இருக்கிருரா, இல்லையா என்ற நினைவு களும் அவருடைய தெய்விகக் கருணையைப் பற்றிய சந் தேகமும் இந்த உலகத்தில் வேதனையை மட்டுமே அவர் படைத்திருப்பதாக நினைத்த நினைவும் முற்றிலும் நீங்கிவிட் டன. நீண்ட நேரம் இதுபற்றிச் சிந்தித்தபடியே இருந்தேன். என் மனத்தில் ஆழ்ந்த அமைதியும் ஆனந்தமும் தோன்றின. உடம்பிலிருந்த களைப்பு முழுவதுமாக நீங்கிவிட்டது. புத்தம் புதிய உற்சாகத்தோடும் வலிமையோடும் மனம் விளங்கு வதைக் கண்டேன். அந்த உற்சாகத்தோடும் மகிழ்ச்சியோடும் வீடு திரும்பினேன். அன்றைய இரவு மிகுந்த அமைதியாகவும் மகிழ்ச்சியோடும் கழிந்தது.

''அது முதற்கொண்டு உலக மக்களின் புகழ்ச்சிக்கும் இகழ்ச்சிக்கும் கவலைப்படாதவனுகி விட்டேன். சாதாரண மனிதர்கள்போல் பணம் சம்பாதிப்பதற்கும் குடும்பம் நடத் துவதற்கும் இன்பம் தேடி அலையவும் நான் பிறக்கவில்லை என்ற நம்பிக்கை எனக்கு வந்துவிட்டது. என் பாட்டனுரைப் போல இந்த உலகத்தைத் துறந்து சந்நியாசியாகி விட இரகசியமாக ஏற்பாடுகள் செய்யத் துவங்கினேன். நான் அதற்கான நாளையும் முடிவு செய்து விட்டேன். அந்த நாளில் கல்கத்தாவிற்குக் குருதேவர் வருவதாகச் செய்தி வந்தது. 'இதுகூட நல்லதுதான். என் குருவின் ஆசிகளோடு நான் இந்த உலகத்தைத் துறந்து சந்நியாசியாவேன்' என்று நினைத்துக் கொண்டேன். குருதேவரை நான் சந்தித்த உடனே தம்மோடு தட்சிணேசுவரம் வந்து இரவு அங்கேயே தங்க வேண்டு மென்று அவர் மிகவும் வற்புறுத்தினுர். தடுக்க முடியாமல் அவரோடு சென்றேன். வண்டியில் அதிகமாக ஒன்றும் பேசிக் கொள்ளவில்லை. தட்சிணேசுவரம் சென்றதும் அவர் அறை யில் அமர்ந்தேன். என்னுடன் சிலர் அமர்ந்திருந்தார்கள். கட்டிலின் மேல் அமர்ந்த அவர் சிறிது நேரத்தில் பாவ சமாதியை அடைந்தார். உடனே என்னை அருகே இழுத்து அமர்த்திக்கொண்டு மிகுந்த கனிவோடு கண்களில் நீர் வழிய உள்ளம் உருகும் வகையில் பாடத் துவங்கினுர்.

''அவர் பாடிய அந்த பாடலைக் கேட்டதும் என் உள்ளக்

கிடக்கையை அவர் அறிந்து விட்டார் என்பதை அறிந் தேன். நெடுநேரம் மிகுந்த துன்பப்பட்டு என் உணர்ச்சிகளை அடக்க முயன்றேன். அடங்காமல் அது கண்ணீராக வழிந்தது. அவர் அழ, நானும் அழுதேன். இப்படி நாங்கள் இரண்டு பேரும் அழுவதைப் பார்த்து எதிரில் இருந்தவர்கள் ஆச்சரி யம் அடைந்தார்கள். குருதேவர் சாதாரண நிலையை அடைந் ததும் சிலர் அவரிடம் எங்கள் இரண்டு பேருடைய அழுகைக் கும் காரணம் கேட்டார்கள். குருதேவர் சிரித்துக்கொண்டே, 'ஓ! அது எங்கள் இரண்டு பேருக்கும் மட்டுமே உள்ள ஒன்று' என்றார். இரவு வந்ததும் அவர்கள் அனைவரையும் அனுப்பி விட்டு என்னை அருகே அழைத்தார். 'நீ அன்னை காளியின் வேலையைச் செய்வதற்காகவே பிறந்திருக்கிறாய் என்பதை நான் அறிவேன். இந்த உலக வாழ்க்கையில் உன்னால் இருக்க முடியாது. ஆனால் எனக்காக, நான் உயிரோடு இருக்கும் வரை இந்த உலக வாழ்வில் இரு' என்று சொல்லிக்கொண்டே மறுபடியும் கண்ணீர் வடித்தார். அடுத்த நாள் அவருடைய அனுமதியோடு கல்கத்தா திரும்பினேன்.

''என் குடும்பத்தைக் காப்பாற்றுவது பற்றிய ஆயிரம் எண்ணங்கள் என் மனத்தில் தோன்றி அலைக்கழித்தன. மறு படியும் வேலை தேட முயன்றேன். ஒரு வக்கீலிடம் வேலை செய்தும் புத்தகம் ஒன்றை மொழிபெயர்த்துக் கொடுத்தும் கொஞ்சம் பணம் சம்பாதித்தேன். இதனால் அன்றாடம் குடும் பம் நடத்துவதற்கு மட்டுமே கொஞ்சம் பணம் கிடைத்தது. அதுவும் நிலையாக இருக்கவில்லை. குடும்பம் நடத்த நிலையான வருமானம் இல்லை. என் தாயையும் தம்பிகளையும் காப்பாற் றும் வழி அறியாமல் திகைத்தேன்.

''ஒரு நாள் திடீரென்று ஓர் எண்ணம் எழுந்தது. ஸ்ரீராம கிருஷ்ணரின் பிரார்த்தனைகளைக் கடவுள் கேட்கிறார். அவரிடம் ஏன் என் குடும்பத்தின் வறுமை நீங்கப் பிரார்த்தனைச் செய் யும்படிக் கேட்கக் கூடாது? நான் கேட்டால் அவர் நிச்சயம் செய்வார் என்ற எண்ணம் தோன்றியது. உடனே வேகமாக தட்சிணேசுவரம் சென்றேன். குருதேவரிடம் வறுமையில் வாடும் என் குடும்பத்திற்காகப் பிரார்த்தனை செய்யும்படி வற்புறுத்தினேன். அதைக் கேட்ட அவர், 'மகனே! அத் தகைய பிரார்த்தனைகளை என்னால் செய்ய முடியாது. ஏன், நீயே அன்னையிடம் இதைக் கேட்கக் கூடாது? உனக்கு வந்தி ருக்கும் துன்பங்களுக்கெல்லாம் காரணம் நீ அவளை மதிக் காததுதான்!' என்றார். நான், 'அன்னையை எனக்குத் தெரி யவே தெரியாது. எனக்காக நீங்கள்தான் செய்ய வேண்டும்'

என்று மிகவும் வற்புறுத்தினேன். அதற்கு அவர் மிகுந்த கனிவோடு, 'மகனே! இதற்கு முன்பே பலமுறை உனக்காக அவளிடம் மறுபடியும் மறுபடியும் வேண்டினேன். நீ அவளை வெறுத்து ஒதுக்குவதால் 'என் பிரார்த்தனைகளை ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்கிறாள். இன்று செவ்வாய்க் கிழமை. அன்னைக்கு விருப்பமான நாள். இன்று இரவு காளி கோயிலுக்குச் சென்று அன்னையின்முன் வீழ்ந்து பணிந்து உனக்கு விருப்பமான வரத்தைக் கேள். நீ கேட்ட வரத்தை அவள் நிச்சயம் தருவாள். அவள்தான் ஞானம். அவள்தான் பிரம்மம். அவளுடைய வெறும் நினைப்பினாலேயே இந்த உலகங்கள் எல்லாம் தோன்றுகின்றன. கொடுப்பது எல்லாம் அவளுடைய அதிகாரத்தில்தான் உள்ளன' என்றார்.

''அவர் சொன்ன ஒவ்வொரு வார்த்தையையும் நான் அப்படியே நம்பினேன். எப்போது இரவு வரும் என்று காத்துக் கொண்டிருந்தேன். இரவு மணி ஒன்பதாயிற்று. குருதேவர் என்னைக் கோயிலுக்குப் போகும்படிக் கூறினார். நான் கோயிலுக்குள் நுழையும் போது என் மனம் என் வசத்தில் இல்லை. கால்கள் தள்ளாடின. ஏதோ பரவசத்தில் மூழ்கியவனாகக் கோயிலுக்குள் சென்றேன். என் இதயம் அன்னையைக் காணப்போவதிலும் அவளுடைய பேச்சைக் கேட்கப் போவதிலுமான ஆனந்தத்தில் படபடத்துத் துடித்தது. கோயிலுக்குள் நுழைந்தேன். பார்வையைத் திருவுருவின்மீது செலுத்தினேன். அங்கே அன்னை காளி உண்மையில் உணர்வு மயமாக, அழகும் அன்பும் வற்றாது பெருக்கெடுத்தோடும் தெய்விகத்துடன் இருப்பதைக் கண்டேன். பொங்கிப் பாய்ந்து ஓடிவந்த பக்தி அலைகளில் நான் சிக்கி விட்டேன். அளவற்ற பரவச நிலையில் அவளுடைய திருவடிகளில் மறுபடியும் மறுபடியும் வீழ்ந்து வீழ்ந்து வணங்கி அவளிடம், 'தாயே! எனக்கு விவேகத்தைக் கொடு. வைராக்கியத்தைக் கொடு! ஞானத்தையும் பக்தியையும் கொடு. உன்னை எப்போதும் இடைவிடாமல் பார்த்துக் கொண்டே இருக்கும் வரத்தைக் கொடு' என்று பிரார்த்தனை செய்தேன். சொல்லமுடியாத அமைதியும் ஆனந்தமும் என் மனத்தில் நிலைத்தது. உலகமே மறந்து போய்விட்டது. அன்னை காளி மட்டுமே என் இதயத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்தாள்.

''சிறிது நேரத்திற்குப் பிறகு கோயிலிலிருந்து திரும்பியதும் குருதேவர், 'என்ன? உன் குடும்பத்தின் வறுமை நீங்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்தாயா?'

என்று கேட்டார். அதைக் கேட்டதும் துணுக்குற்றேன். அவரிடம், 'இல்லை. நான் அதையெல்லாம் மறந்தே போய் விட்டேன். இப்போது என்ன செய்ய?' என்றேன். குருதேவர் 'மறுபடியும் அன்னையிடம் போ. உன் தேவையை அவளிடம் சொல்' என்றார். மறுபடியும் கோயிலுக்குள் நுழைந்தேன். மறுபடியும் அன்னையின் அதே தோற்றம். அவளைக் கண்டவுடன் எல்லாவற்றையும் மறந்துவிட்டேன். மறுபடியும், 'தாயே! எனக்கு விவேகத்தைக் கொடு, வைராக்கியத்தைக் கொடு. பக்தியைக் கொடு, ஞானத்தைக் கொடு' என்று பிரார்த்தனை செய்தேன். பிறகு கோயிலிலிருந்து திரும்பினேன். குரு தேவர் மறுபடியும், 'என்ன கேட்டாயா?' என்றார். நான் நடந்ததைச் சொன்னேன். அதைக் கேட்ட குருதேவர், 'என்ன யோசனை இல்லாதவனாக இருக்கிறாய்! அவள் முன்னே உன் தேவையைச் சொல்லுமளவிற்குக் கொஞ்சம் மனத்தை இழுத்துப் பிடித்துக் கொண்டிருக்கக் கூடாதா? சரி, சரி. மறுபடியும் அன்னையிடம் போ. உன் குடும்பத்தின் வறுமையை நீக்கும்படிக் கேள், சீக்கிரம் போ' என்றார்.

''மூன்றாவது முறையாகக் கோயிலுக்குள் சென்றேன். கோயிலுக்குள் நுழைந்ததுமே சொல்ல முடியாத அவமானம் எனக்குள் பொங்கிஎழுந்து, என்னை மிகவும் வெட்கப்படும்படிச் செய்தது. என் முட்டாள்தனத்தைப்பற்றி நானே வேதனைப் பட்டேன். 'அண்ட சராசரங்களுக்கும் தலைவி அவள். அவளி டம் போய் எவ்வளவு சாதாரணப் பொருளை நான் கேட்க நினைத்தேன்! அன்னையிடம் என் குடும்ப் வறுமையை நீக்கும் படிக் கேட்பது, எல்லாமே கொடுக்க நினைக்கும் ஓர் அரசனி டம் போய், சுத்தரிக்காயையும் புடலங்காயையும் கேட்பது போன்றது என்று நினைத்தேன். அன்னையை மிகுந்த பய பக்தியோடு வணங்கிவிட்டுக் கோயிலுக்கு வெளியே வந்த தும் இதெல்லாம் குருதேவரின் வேலை என்பதைப் புரிந்து கொண்டேன். இல்லையென்றால் மூன்று முறை அன்னையிடம் கேட்கப் போனதைக் கேட்காமல் எப்படித் திரும்புவேன்? அவரிடம், 'ஐயா! நீங்கள்தான் என்மீது ஏதோ மந்திரத்தை ஏவி நான் கேட்கச் சென்றதை மறக்கும்படிச் செய்து விட் டீர்கள். என் வீட்டில் உள்ளவர்கள் எப்போதும் வறுமையால் வாடக் கூடாது என்று நீங்கள் இப்போது வரம் தந்தே ஆக வேண்டும்' என்று கேட்டேன். இதைக் கேட்டதும் அவர், 'அது மாதிரியான பிரார்த்தனைகள் என் வாயிலிருந்து வரவே வராது. அதனால்தான் நான் உன்னையே போய்க் கேட்கச் சொன்னேன். நீ கேட்காமல் விட்டு விட்டாய். இதிலிருந்து

என்ன தெரிகிறது என்றால் நீ இந்த உலக இன்பங்களை அனுபவிக்கப் பிறக்கவில்லை. என்னால் எதுவும் செய்ய முடியாது' என்றார். நான் விடவில்லை. 'வரம் கொடுத்தே ஆக வேண்டும்' என்று முரண்டு பிடித்தேன். கடைசியில் 'சரி! அவர்கள் எந்தக் காலத்திலும் சாதாரண உணவிற்கும் உடைக்கும் துன்பப்பட மாட்டார்கள்' என்றார்.''

மேற்கண்ட நிகழ்ச்சி நரேந்திரரின் வாழ்வில் ஒரு புதிய அத்தியாயத்தைத் துவக்கியது. அவர் இதுவரை அன்னை காளி இருப்பதையும் அவர் ஆற்றலையும் உணரவில்லை. இறைவனை அன்னையாக வழிபடுவதும், உருவ வழிபாடும் அவருக்குப் பிடிக்கவே இல்லை. ஆனால் இப்போது அதெல்லாம் மாறி விட்டது. இஷ்ட தெய்வம் என்று ஒரு கடவுளை ஏற்றுக் கொள்வதும் அதை உருவத்தில் வணங்குவதுமான பேரின்ப நிலை முழுதாக அவருக்குத் தெரிந்து விட்டது. இதைக் கண்டு ஸ்ரீராமகிருஷ்ணர் அடைந்த அளவற்ற மகிழ்ச்சியை நேரே கண்ட ஒருவருடைய (வைகுந்தநாத் சன்யால்) வார்த்தைகளில் கீழே காண்போம்:

''நண்பகலில் தட்சிணேசுவரம் வந்த நான் குருதேவர் மட்டும் அறையில் இருப்பதையும் நரேன் அறைக்கு வெளியே தூங்கிக் கொண்டிருப்பதையும் கண்டேன். குருதேவர் மகிழ்ச்சியுடன் இருந்தார். நான் அவரை வணங்கிய உடனே நரேனைச் சுட்டிக் காட்டி, 'இங்கே பார். அந்தப் பையன் மிகவும் நல்லவன். அவன் பெயர் நரேந்திரன். இவன் இதற்கு முன் காளியை ஏற்றுக் கொள்வதே இல்லை. நேற்றுத்தான் ஏற்றுக் கொண்டான். இப்போது அவன் மிகவும் துன்ப நிலையில் இருக்கிறான். அதனால் நான் அவனைக் காளியிடம் பிரார்த்திக்கச் சொன்னேன். அவனால் பிரார்த்திக்க முடியவில்லை. கோயிலிலிருந்து திரும்பியதும் என்னிடம், ''அப்படிப் பிரார்த்தனை செய்யும்படிக் கூறி என்னை அவமானப்படுத்தி விட்டீர்களே'' என்றான். பிறகு என்னிடம் காளியைப்பற்றி ஒரு பாட்டு சொல்லித் தரும்படிக் கேட்டான். நான் அப்படியே சொல்லிக் கொடுத்தேன். நேற்று இரவு முழுவதும் அவன் அந்தப் பாட்டைப் பாடிக் கொண்டிருந்தான். எனவே இப்போது தூங்குகிறான்' என்றார். பிறகு அடக்க முடியாத ஆனந்தத்தோடு, 'நரேன் காளியை ஏற்றுக் கொண்டது ஆச்சரியமில்லையா? ஆச்சரியமில்லையா?'' என்றார். நான் 'ஆமாம்' என்றேன். கொஞ்ச நேரத்திற்குப் பிறகு அவர் மறுபடியும் அதே கேள்வியைக் கேட்டார். நெடுநேரம் வரை அவர் இப்படிக் கேட்பது தொடர்ந்து கொண்டே இருந்தது.

''மாலை நான்கு மணிக்குக் கல்கத்தாவிற்குப் புறப் படுவதற்கு முன் நரேன் குருதேவரிடம் வந்தான். அவன் அருகில் வந்ததைப் பார்த்தாரோ, இல்லையோ அவனிடம் மேலும் மேலும் நெருங்கிக் கொண்டே போய் அவன் மடியிலேயே உட்கார்ந்து கொண்டவர்போல் தம்மையும் நரேனையும் காட்டி, 'நானே இதுவாகவும் இருக்கிறேன். அதுவாகவும் இருக்கிறேன். உண்மையில் இரண்டுக்கும் வித்தியாசமே இல்லை. ஓடும் கங்கை நீரில் ஒரு குச்சி மிதக்கும்போது அது தண்ணீரை இப்படியும் அப்படியுமாகப் பிரித்து விட்டதுபோல் தெரிகிறது. ஆனால் உண்மையில் தண்ணீர் ஒன்றுதான். நான் சொல்வது விளங்குகிறதா? எது வாக இருந்தாலும் அது அன்னைதான் இல்லையா?' என்றார். இவ்வாறு சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்த அவர் புகை குடிக்க விரும்பினார். நான் தயார் செய்து ஹுக்காவைக் கொடுத்தேன். இரண்டு மூன்று முறை புகையை இழுத்துவிட்ட பிறகு நான் குழாய் மூலம் புகை பிடிக்கப் போகிறேன் என்று ஹுக்காவின் குழாயில் வாயை வைத்து இரண்டு இழுப்பு இழுத்தார். பிறகு அந்தக் குழாயைத் தம் கையால் பிடித்துக் கொண்டு நரேனைப் புகை பிடிக்கும்படிச் சொன்னார். குருதேவர் தம் கையில் பிடித்துக் கொண் டிருக்கும் போது நரேன் புகை பிடித்தால் நரேனின் எச்சில் அவர் கையில் படும். அதனால் நரேன் தயங்கினார். இதைக் கண்ட குருதேவர் நரேனிடம், 'இன்னும் நீ என்ன முட்டாள் தனமான எண்ணங்களை எல்லாம் வைத்துக் கொண்டிருக் கிறாய்? நான் உன்னிலிருந்து வேறா? இந்த உடம்பும் நான் தான். அந்த உடம்பும் நான்தான்' என்ற சொல்லியபடியே நரேனின் வாயருகே ஹுக்காவின் குழாயையும் அவனைக் குவித்துப் பிடித்துத் தன் கையையும் கொண்டு சென்றார். நரேனால் இப்போது ஒன்றும் செய்ய முடியவில்லை. புகையை இரண்டு மூன்று இழுப்பு இழுத்தார். பிறகு குருதேவர் நரேன் வாய்வைத்து இழுத்த அதே குழாயில் தம் வாயை வைத்துப் புகை உறிஞ்ச முற்பட்டார். உடனே நரேன் தடுத்து 'முதலில் கழுவிவிட்டு உறிஞ்சுங்கள்' என்று தடுத்தார். ஸ்ரீராம கிருஷ்ணர் அதைக் கேட்கவே இல்லை. 'என்ன முட்டாள் தனமான வேற்றுமை உணர்ச்சியை நீ வைத்திருக்கிறாய்?' என்று கூறியபடி ஹுக்காவையும் நரேனின் எச்சில் படிந்த தம் கையையும் கழுவாமலேயே ஹுக்கா பிடிக்க ஆரம்பித் தார். பரவச நிலையில் குடித்துக்கொண்டே இருந்தார். இதைக் கண்டு நான் மிகவும் ஆச்சரியப்பட்டேன். ஏனென்றால் தமக் குக் கொண்டு வரும் உணவில் கொஞ்சம் யாருக்காவது

கொடுத்துவிட்டாலும் குருதேவர் அதில் கையை வைக்க மாட்டார். அப்படிப்பட்டவர் இப்போது நரேன் பிடித்த ஹுக்காவில் தாமும் பிடிக்கிறார். இது நரேனிடம் அவர் கொண்டிருந்த அன்பையும் உறவையும் எனக்கு விளக்கியது. இரவு எட்டு மணிக்குக் குருதேவர் சாதாரண நிலையை அடைந்தார். நானும் நரேனும் அவரிடம் விடைபெற்றுக் கல்கத்தாவுக்குப் புறப்பட்டோம்.''

அதன் பிறகு நரேந்திரர் அடிக்கடி, ''என்னைச் சந்தித்த நாள் முதல் இறுதிவரையிலும் என்னிடம் ஒரே மாதிரி நம்பிக்கை வைத்திருந்தவர் ஸ்ரீராமகிருஷ்ணர் ஒருவர்தான். என் தாயும் தம்பிகளும்கூட அப்படிப்பட்ட நம்பிக்கையை என்மீது வைக்கவில்லை. அவர் என்னிடம் கொண்ட ஈடு இணையற்ற நம்பிக்கையும் அன்புமே என்னை என்றென்றும் அவருக்கு அடிமையாக்கி விட்டன. அவர் ஒருவருக்குத்தான் மற்றவர்கள்மீது அன்பு செலுத்தத் தெரியும். உலக மக்கள் சுயநலத்திற்காக அன்பு காட்டுவது போல் நடிப்பார்கள்'' என்று கூறுவார்.

## 35. இருதயன் வெளியேறல்: ஹரீஷ், பவநாத்

இப்போது நம் கவனத்தைத் தட்சிணேசுவரத்தில் 1881-ஆம் ஆண்டின் நடுவில் நடந்த நிகழ்ச்சியின்மீது திருப்புவோம். அந்த நிகழ்ச்சி இருதயன் காளி கோயிலிலிருந்து வெளியேற்றப்பட்ட நிகழ்ச்சியாகும். ஆரம்பம் முதல் இருதயன் குருதேவருக்கு மிகுந்த அன்போடு சேவை செய்து வந்தான். ஆனால் பிற்காலத்தில் அவன் குருதேவரிடம் செலுத்திய அன்பில் பெரிதும் மாறுபாடு ஏற்பட்டது. வரவர அவன் பேராசைக்காரனாக மாறி விட்டான். ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்க்க வருபவர்கள் அவன் அனுமதியில்லாமல் அவரைப் பார்க்கக் கூடாது, பார்க்க முடியாது என்ற நிலையை அவன் உருவாக்கிக் கொண்டான். அதற்காக வருபவர்களின் தகுதிக்கு ஏற்றாற்போல் பணமும் மற்றப் பொருள்களும் வாங்கத் துவங்கினான். குருதேவர் அவனுடைய இந்தச் செயலை மிகவும் கண்டித்தார். கொடுப்பவர்களையும் கொடுக்க வேண்டாமென்று தடுத்தார். குருதேவரின் இந்தச் செய்கைகளோடு மார்வாரி இலட்சுமிநாராயணன் கொடுக்க வந்த பத்தாயிரம் ரூபாயையும் குருதேவர் மறுத்தது பணத்தாசை பிடித்த இருதயனுக்குக் குருதேவரிடம் பெரும் எரிச்சலை மூட்டியது. இந்தப் பணத்தாசை அவனுக்குத் தன் மாமாவிடம் இருந்த பாசத்தையும் அன்பையும் துரத்தி விட்டது. பலபேர் முன்னிலையில் குருதேவரை அதட்டவும், கண்டபடி தாக்கிப் பேசவும் துவங்கினான். சில நேரங்களில் அவனுடைய கடுமையைக் கண்டு கண்ணீர் விட்டு அழுதாலும் ஆரம்ப காலத்தில் அவன் தனக்கு அன்போடு செய்த சேவைகளை எண்ணிக் குருதேவர் அவனுடைய இந்த அவமரியாதையை எல்லாம் பொறுத்துக் கொண்டார். இப்போதெல்லாம் அவன் வருபவர்களிடம் குருதேவரைவிடத் தான் பெரிய பக்தன்போல் நடித்து அவரைப் போல் அவர்கள் முன் ஆடுவதும் பாடுவதும் சமாதியில்கூட மூழ்குவதும் போல் நடித்து அவரை விடப் பெரிய மகானாக—மற்றொரு பரமஹம்சராகக் காட்டி கொள்ள ஆரம்பித்தான். அதோடு அங்கு வருபவர்களிடம் பலவந்தமாக வெகுமதிகளைக் கேட்டு வாங்க ஆரம்பித்தான். அதே சமயம் எல்லா விஷயங்களிலும் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தம் இஷ்டப்படியே செய்ய

வேண்டுமென்று கட்டாயப்படுத்தி அதன் காரணமாகக் கோயிலுக்கே பெரிய தொந்தரவாக மாறிவிட்டான்.

ஒரு முறை ஸ்ரீராமகிருஷ்ணர் காய்ச்சலோடு படுத்துக் கொண்டிருந்தார். அப்போது அவரைக் காண வந்த சில பக்தர்கள் சமையலுக்குப் பயன்படும் ஒரு பூவை (Cauliflower) அவருக்குக் கொடுத்தார்கள். அதை மிகுந்த திருப்தியோடு வாங்கிக் கொண்ட குருதேவர் அதைப்பற்றி இருதயனிடம் ஒன்றும் சொல்ல வேண்டாமென்றும், சொன்னால் அவன் தன்னை ஏசுவான் என்றும் அவர்களிடம் கூறினார். பிறகு இருதயன் ஆரம்பக் காலத்தில் தனக்குச் செய்த உண்மையான சேவைகளைப் பற்றியெல்லாம் பாராட்டிச் சொல்ல ஆரம்பித்தார். ''எனக்கு அவன் அவ்வளவு உண்மையாகச் சேவை செய்ததற்காக அன்னை காளி அவனுக்கு ஏராளம் சொத்துக்களை வழங்கி இருக்கிறாள். இப்போது அவன் ஊரில் நிலங்களை வாங்கி இருக்கிறான். வட்டிக்குக் கடன் கொடுக்கிறான். கோயிலிலும் மிகவும் செல்வாக்குள்ளவனாக மாறிவிட்டான். அவனை இங்கே மிகவும் மதிக்கிறார்கள்'' என்றார். இதைச் சொல்லி முடித்தாரோ இல்லையோ, அதற்குள் அறைக்குள் இருதயன் வந்து விட்டான். அவனைப் பார்த்து அதிர்ச்சியும் அச்சமும் அடைந்த குருதேவர் தம் கையிலிருந்த அந்தப் பூவை அவனுக்குக் காட்டி, ''இதோ பார். இதை நான் கேட்கவில்லை. அவர்களாகவேதான் கொண்டு வந்து கொடுத்தார்கள். நிச்சயமாகச் சொல்லுகிறேன், நம்பு. நான் அவர்களைக் கொண்டு வரச் சொல்லவே இல்லை'' என்று குழந்தையைப் போல் அவனிடம் கூறினார். ஆனால் இருதயனுக்கு அளவு கடந்த கோபம் வந்துவிட்டது. மிகக் கடுமையாகக் குருதேவரை அதட்டினான். இதைப் பொறுக்காமல் குருதேவர் அழுதபடியே காளியிடம், ''ஓ! தாயே! நீ என்னுடைய எல்லா பந்தங்களையும் நீக்கி விட்டாய். ஆனால் இந்த இருதயனிடம் இவ்வளவு அவமானப் படவேண்டுமென்று வைத்திருக்கிறாய்'' என்று பிரார்த்தித்தார். திடீரென்று அவருடைய அழுகை நின்றது. சோகம் முழுவதும் மாறிவிட்டது. புன்னகையோடு, ''அம்மா! என்னை அவன் மிகுந்த அன்போடு நேசிக்கிறான். அதனால்தான் என்னைத் திட்டுகிறான். அவன் சின்னப் பையன். அதனால்தான் என்ன செய்கிறோம் என்பதே அவனுக்குத் தெரியவில்லை. அம்மா! நீ அவன் மீது கோபம் கொள்ளாதே!'' இப்படிக் கூறியபடியே அவர் சமாதியில் மூழ்கி விட்டார்.

வரவர இருதயனின் நடத்தை யாராலுமே தாங்கிக்

கொள்ள முடியாததாயிற்று. தன்னிடம் வரும் அத்தனை பேரையும் அவமானப் படுத்தத் துவங்கினான்; காளி கோயில் அதிகாரிகளைக் கூட அவன் விட்டுவைக்கவில்லை. அப்படியெல்லாம் நடந்துகொள்ள வேண்டாமென்று அவனிடம் ஸ்ரீராம கிருஷ்ணர் பல முறை சொன்னார். ஆனால் அவன் அதைக் கேட்கவே இல்லை. இறுதியில் அவனுடைய பாவங்களுக்கான பலனை அனுபவிக்க வேண்டிய காலம் வந்து விட்டது. அன்று கோயிலின் ஆண்டுவிழா மிகுந்த சிறப்போடு கொண்டாடப் பட்டது. அந்த விழாவிற்கு மதுரின் மகனும் அப்போது கோயிலின் மேற்பார்வையாளராகவும் இருந்த திரைலோக்கியநாத் தம் மனைவியுடனும் குழந்தைகளுடனும் விழாவிற்கு வந்திருந்தார். அப்போது இருதயன் காளி கோயில் பூசாரியாக இருந்தான். அவன் காளி கோயிலில் பூஜை செய்து கொண்டிருந்தபோது திரைலோக்கியரின் எட்டு வயது மகள் காளி கோயிலுக்குள் இருந்தாள். அந்தப் பெண்ணைப் பார்த்ததும் இருதயனின் உள்ளத்தில் திடீரென்று ஓர் ஆசை எழுந்தது. வங்காளத்தில் இளம் பெண்களைக் காளியின் வடிவமாக எண்ணி, முறையாகப் பூஜித்து வழிபடுவார்கள். இதற்குக் குமாரி பூஜை என்று பெயர். சக்தி வழிபாட்டைக் கூறும் தாந்திரிக சாஸ்திரத்தில் இதுபற்றிச் சிறப்பாகக் கூறப்படுகிறது. பேராசை பிடித்தவனான இருதயன் அந்தப் பெண்ணைக் காளியாக நினைத்துப் பூஜை செய்தால் திரைலோக்கியர் தன்மீது மிகுந்த அன்பு கொள்வார்; அதன் மூலமாக ஆதாயம் தேடலாம் என்று நினைத்தான்.

அந்தப் பெண்ணின் கால்களில் சந்தனம், குங்குமம் முதலியன இட்டுப் பூஜை செய்தான். பூஜை முடிந்ததும் இந்தப் பெண் பெற்றோர் தங்கியிருந்த மாளிகைக்குச் சென்றாள். திரைலோக்கியரின் மனைவி தன் மகளின் கால்களில் சந்தனமும் குங்குமமும் இருப்பதைக் கண்டு காரணம் கேட்டாள். அந்தப் பெண் காரணத்தைச் சொல்லியதும் அவர்கள் யாவரும் பயந்துவிட்டனர். பிராம்மணனான இருதயன் சூத்திரப் பெண்ணாகிய திரைலோக்கியரின் மகளைப் பூஜித்ததால் அந்தப் பெண்ணுக்குத் தீமை ஏற்படும் என்றும் அதனால் திருமணம் ஆனதும் அவள் விதவையாகி விடுவாள் என்றும் கூறப்பட்டது. திரைலோக்கியரின் மனைவி அழுது புலம்பினாள். கோயிலுக்குள் ஒரே குழப்பம் ஏற்பட்டது. திரைலோக்கியர் இருதயனைக் கோவிலை விட்டுத் துரத்தும்படியும் அவனை இனிமேல் கோவிலுக்குள்

நுழையவிட வேண்டாமென்றும் உத்தரவிட்டார். இருதயன் குருதேவரிடம் ஓடிப் போய் எல்லாவற்றையும் கூறினன். குருதேவர், ''ஏனடா அப்படிச் செய்தாய்? துரத்திவிட்டார் களே, இப்போது என்ன செய்யப் போகிருய்?'' என்ருர். குரு தேவர் கூறியதைக் காதில் போட்டுக் கொள்ளாத இருதயன் தன் தவற்றைச் சிறிதும் நினைக்காமல் அவரிடம், ''மாமா! என்னைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். இன்று என்னை இப்படிக் கோயிலை விட்டுத் துரத்தி அவமானப்படுத் தியவர்கள் நாளைக்கு உங்களையும் வெளியே துரத்தி அவ மானப்படுத்துவார்கள். அதனுல் இப்போதே என்னேடு இந்தக் கோயிலை விட்டு வந்து விடுங்கள்'' என்ருன். அதைக் கேட்ட குருதேவர், ''நான் ஏன் இங்கிருந்து வர வேண்டும்? நான் வர மாட்டேன்'' என்ருர். மிகுந்த மனக்கஷ்டத்தோடு இருதயன் கோயிலிலிருந்து வெளியே சென்ருன்.

சிறிது நேரம் கழிந்தது. யாரோ ஒருவன் ஸ்ரீராமகிருஷ் ணரிடம் வந்து அவரும் கோயிலை விட்டுப் போக வேண்டும் என்ருன். ஏறக்குறைய இருபது ஆண்டுகளுக்கும் மேலாக அங்கே தங்கியிருந்து, தம்முடைய தவத்தால் காளியையே கோயிலில் எழுந்தருளும்படிச் செய்து, அந்தக் கோயிலின், ஏன், அந்தக் கோயிலைக் கட்டிய குடும்பத்தின் நல்வாழ்விற்கே பலவகைகளிலும் காரணமாக இருந்த தம்மைக் கோயிலைவிட்டு உடனடியாகப் போகச் சொல்கிருர்களே என்று ஒரு கணம் கூட எண்ணுமல், ஒரு வார்த்தைகூட முணுமுணுக்காமல், அறையில் இருந்த ஒரு பொருளைப் பற்றியும் கவலைப்படாமல் மேல்துண்டைத் தோளில் போட்டுக்கொண்டு வெளியே போகும் வாசலை நோக்கி நடந்தார் குருதேவர். வாசலைக் கடந்து செல்லும் நேரம். திரைலோக்கியர் அவரைத் தொலை விலிருந்து பார்த்துவிட்டு வேகமாக அவரிடம் வந்து 'எங்கே போகிறீர்கள்?' என்ருர். குருதேவர் அமைதியோடு 'நீதான் என்னை இந்தக் கோயிலை விட்டுப் போகச் சொன்னுயாமே!' என்ருர். இதைக் கேட்ட திரைலோக்கியர் தான் அப்படிச் சொல்லவில்லையென்று கூறிக் கோயிலுக்குள் வரும்படியும் தன் மகளுக்கு எந்தவித ஆபத்தும் நேராமல் அன்னை காளி யிடம் பிரார்த்திக்கும்படியும் வேண்டினர். ''அன்னையின் அருளால் உன் மகளுக்கு ஓர் ஆபத்தும் வராது'' என்று கூறியவாறு ஒன்றுமே நடக்காதது போல் அமைதியாகக் குருதேவர் தம் அறைக்குத் திரும்பினர். இருதயன் வெளி யேற்றப்பட்டதைக் குறித்து குருதேவர் பிறகு சொல்லும் பொழுது, ''அவனுடைய ஆணவம் பிடித்த செயல்கள் தாங்க

முடியாததாயிற்று. அவன் கோயிலிலிருப்பது அன்னையின் வழிபாடுகளுக்குத் தடையாகவும் ஆகியது. எனவே அன்னை அவனைக் கோயிலிலிருந்து வெளியேற்றிவிட்டாள்'' என்று கூறினார். இருதயன் கோயிலிலிருந்து துரத்தப்பட்டது குரு தேவரிடம் அப்போது வரத் துவங்கிய இளம் சீடர் களுக்கு அவரோடு நெருங்கிப் பழகவும் அவருடன் தங்கி யிருக்கவும் பெரிய வாய்ப்பாக அமைந்தது. அவர்கள் பிற்காலத்தில் அன்னையின் பணியைச் செய்வதற்கு ஏற்ப, பயிற்சிகள் தரவும் குருதேவரால் முடிந்தது.

இருதயன் கோயிலிலிருந்து வெளியேற்றப் பட்டதும் கோயிலின் பக்கத்தில் இருந்த யதுமல்லிக்கின் தோட்ட மாளி கையில் தங்கினான். ஸ்ரீராமகிருஷ்ணர் கோயிலிலிருந்து அவ னுக்கு உணவு அனுப்பினார். தாமும் அடிக்கடி அங்கே சென்று அவனைப் பார்த்து வந்தார். இருதயன் அவரைக் கோயிலை விட்டு வந்துவிடும்படியும் தான் புதிதாக ஒரு காளி கோயிலைக் கட்டுவதாகவும் அங்கே இரண்டு பேரும் மகிழ்ச்சி யாக வசிக்கலாம் என்றும் மீண்டும் அழைத்தான். இதைக் கேட்ட குருதேவர். ''ஏன், என்னை அதிசயப் பொருள் போல் இழுத்துக் கொண்டு போய் வீடு வீடாகக் காட்டப் போகிறாயா?'' என்று கேட்டார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு மூன்று ஆண்டுகள் கழித்து ஒரு நாள் குருதேவர் தம் அறையில் பக்தர்கள் பலரோடு பேசிக் கொண்டிருந்தார். அப்போது, இருதயன் வந்து யதுமல்லிக்கின் தோட்டத்தில் இருப்பதாகவும் அவரைப் பார்க்க விரும்புவதாகவும் கூறினார்கள். தமக்கு இருதயன் செய்த அன்பான சேவைகளை மறக்காத குருதேவர், பக்தர்களைக் கொஞ்ச நேரம் இருக்கச் சொல்லி விட்டு அவனைப் பார்க்கச் சென்றார். தோட்டத்தில் கைகளைக் குவித்தபடி நின்று கொண்டிருந்த இருதயன் குருதேவரைப் பார்த்ததும் தரையில் உடல்படிய வீழ்ந்து வணங்கினான். குருதேவர் எழுந்திருக்கச் சொன்னார். எழுந்த இருதயன் சிறுவனைப் போல் தேம்பித்தேம்பி அழுதான்.

இதைக் கண்டு குருதேவரும் மனம் கலங்கினார். கண் களிலிருந்து வழிந்த கண்ணீரை யாரும் பார்க்காதபடிக் கைகளால் துடைத்துக் கொண்டார். அந்தக் காட்சி, காண்பவரின் மனத்தை மிகவும் உருக்குவதாக இருந்தது. பிறகு இருவருக்குமிடையே கீழ்க்கண்ட உரையாடல் நடந்தது:

குருதேவர்: நல்லது! ஊரிலிருந்து ஏன் வந்து விட்டாய்?

இருதயன் (அழுதபடியே): ''உங்களைப் பார்க்கவே வந்தேன். என் துயரங்களை எல்லாம் நான் வேறு யாரிடம் போய்ச் சொல்வேன்?

குருதேவர் (ஆறுதல் அளிக்கும் வகையில் புன்முறுவல் செய்தபடி): உலகத்தில் எங்குப் பார்த்தாலும் துன்பங்களும் துயரங்களும்தாம். அவற்றைத் தவிர்க்க முடியாது. உனக்கு என்ன துன்பம்?

இருதயன்: உங்களோடு இருக்க முடியாமல் போய்விட்டது. அதுவே பெரும் துன்பம். அந்தத் துன்பமே என்னை வாட்டிக் கொண்டிருக்கிறது.

குருதேவர்: ஏன்? நீதான் 'உன் வழி வேறு, என் வழி வேறு. அவரவர் வழியை அவரவர் பார்த்துக் கொள்வோம்' என்று சொன்னாயே!

இருதயன்: ஆமாம், அப்படித்தான் சொன்னேன். நான் ஒரு முட்டாள்.

குருதேவர்: சரி! இன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை. நிறைய பக்தர்கள் வந்திருக்கிறார்கள். இப்போது போய் வா. இன்னொரு முறை நாம் ஓய்வாகப் பேசுவோம். ஆமாம், ஊரில் பயிரெல்லாம் எப்படி?

இருதயன்: பரவாயில்லை. நல்ல விளைச்சல்.

குருதேவர்: நல்லது. இன்னொரு நாள் வா.

இருதயன் மறுபடியும் ஸ்ரீராமகிருஷ்ணரை வீழ்ந்து வணங்கினான். குருதேவர் பக்தர்களிடம் இருதயன் தமக்குச் செய்த அன்பான சேவைகளையும் பிறகு தம்மைத் துன்புறுத்தியதையும் பற்றிக் கூறியபடியே கோயிலுக்குத் திரும்பினார்.

இருதயன் கோயிலிலிருந்து போன பிறகு குருதேவருடன் வாழ்ந்த முதல் பக்தன் ஹரீஷ் என்பவனாகும். அவன் பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவன்; இளைஞன். மனைவியும் ஒரு குழந்தையும் இருந்தனர். குருதேவரை ஓரிருமுறை சந்தித்த ஹரீஷ் உலக வாழ்க்கையில் மிகுந்த வெறுப்புக் கொண்டு குடும்பத்தையும் உறவினர்களையும் துறந்துவிட்டுத் தட்சிணேசுவரத்திலேயே குருதேவருடன் வாழ்ந்து வந்தான். ஸ்ரீராமகிருஷ்ணர் அவனுடைய உறுதியான உள்ளத்தையும் அமைதியான இயல்பையும் கடவுளிடம் உள்ள உண்மையான பக்தியையும் கண்டு மகிழ்ந்து, தம்மோடு இருக்க அனுமதித்தார்.

குருதேவரின் தேவைகளைக் கவனித்து, அவருக்கு நாள் முழுவதும் சேவை செய்து கொண்டு; இடையே கிடைக்கும் ஓய்வு நேரங்களில் தியானமும் பிரார்த்தனையும் செய்தபடி ஹரீஷ் நெடுநாட்களாகத் தட்சிணேசுவரத்திலேயே வசித்து வந்தான். உறவினர்கள் அங்கு வந்து மிரட்டிய மிரட்டல்களையும் பேசிய பேச்சுக்களையும் அமைதியாகப் பொறுத்துக் கொண்டான். அவர்கள் காட்டிய ஆசைகளுக்கெல்லாம் சஞ்சலம் அடையாமல் தன் இலட்சியமான, கடவுளைக் காண்பதில் உறுதியாக இருந்தான். ஹரீஷின் உறுதியான, சிறிதும் மனங் கலங்காத அமைதியான மனத்தைப் பற்றிக் குருதேவர் கூறும்போது; ''உண்மையான மனிதன் உயிரோடு இருக்கும் போதே இந்த உலகத்திற்குச் செத்தவனாகி விடுகிறான். ஹரீஷைப் பார்! அவன் அப்படிப்பட்டவன்'' என்றார்.

தான் வீட்டையும் குடும்பத்தையும் விட்டு வந்துவிட்டதால் தன் உறவினர்கள் அனைவரும் மிகமிக வருந்துவதாகவும், தனது மனைவி சாப்பிடாமலே பட்டினியாகக் கிடப்பதாகவும் ஒரு நாள் ஹரீஷ் அறிந்தான். அறிந்த பிறகும் அதைப்பற்றிக் கவலைப்படாமல் அமைதியாகத் தன் காரியங்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். இதைக் கண்ட குருதேவர் அவனைச் சோதிப்பதற்காகத் தனியாக ஒரு பக்கம் அழைத்துச் சென்று, ''உன் மனைவி மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறாள். நீ வீட்டிற்குப் போய் அவளை அமைதிப் படுத்தேன். பாவம், அந்தச் சிறிய பெண்ணிடம் கொஞ்சம் அனுதாபம் காட்டுவதால் உனக்கு என்ன நேர்ந்துவிடும்?'' என்றார். இதைக் கேட்ட ஹரீஷ் ''ஐயா! கருணை காட்டுவதற்குச் சரியான நேரம் இதுவல்ல. அவளுக்கு நான் கருணை காட்ட முயன்றால் கடவுளைக் காணும் என் இலட்சியத்தை மறந்துவிட்டு உலக ஆசைகளில் மூழ்கிவிடுவேன். அருள் கூர்ந்து என்னை மன்னித்து விடுங்கள்'' என்றான். ஸ்ரீராமகிருஷ்ணர் அந்தப் பதிலைக் கேட்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். ஹரீஷின் மிக உயர்ந்த துறவு மனப்பான்மையை மற்றவர்களிடமும் கூறிப் பாராட்டினார்.

1881-ஆம் ஆண்டில் குருதேவரைச் சந்தித்த மற்றொரு பக்தன் பவநாத். அவன் குருதேவரைச் சந்திக்கும் போது மிகவும் இளைஞனாகவே இருந்தான். அவனுடைய பெற்றோரும் உறவினரும் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பைத்தியம் என்றே நினைத்தார்கள். அதனால் அடிக்கடி அவனைக் குருதேவரிடம் போக வேண்டாமென்று தடுத்தனர். ஆனால் அவன் அதை எல்லாம் பொருட்படுத்தாமல் அடிக்கடித் தட்சிணேசுவரம்

வந்து இரவில்கூடக் குருதேவருடன் தங்கினன். அவன் பிரம்ம சமாஜத்தில் உறுப்பினனாக இருந்தான். அந்தச் சங்கத்தின் கொள்கையான அருவ வழிபாடு அவன் மனத்திற்கு மிகவும் உகந்ததாக இருந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர் அவனுடைய உண்மையான கடவுள் பக்திக்காகவும் ஆர்வத்திற்காகவும் அவனை மிகவும் விரும்பினர். நரேந்திரரிடம் அவனுக்கு ஏற்பட்ட நெருங்கிய நட்பைக் கண்ட குருதேவர் நரேந்திரர் அவனுக்குப் பொருத்தமான துணை என்றும் அவனோடு நெருக்கமான பழக்கத்தை வைத்துக் கொள்ளும் படியும் கூறினர். ஸ்ரீராமகிருஷ்ணர் 'ஈசுவர கோடிகள்' (என்றும் பூரணமானவர்கள்) என்று குறிப்பிடும் தம் சீடர்களுள் பவநாத்தும் ஒருவனாக விளங்கினன். அவன் தட்சிணேசுவரத்துக்கு அடிக்கடி வர ஆரம்பித்ததும் வங்காளிகளின் இயல்பான உணவான மீன் முதலியவற்றை விட்டு விட்டான். வெற்றிலைப் பாக்குப் போடுவதையும் விட்டு விட்டான். அது தன் ஆன்மிக வாழ்விற்கு மிகுதியாக உதவும் என்றும் நம்பினன். ஆன்மிக வாழ்விற்கு வெளி ஒழுக்கங்களைவிட மனப் பயிற்சியைப் பெரிதும் விரும்பும் குருதேவர், இதை அறிந்ததும் அவனிடம் சிரித்துக் கொண்டே, ''டேய்! மீனையும் வெற்றிலையையும் விட்டு விடுவதால் மட்டும் என்ன பயன்? அவை எல்லாம் ஆன்மிக வாழ்விற்கு முக்கியமல்ல. மிக முக்கியமானது, காமத்தையும் பணத்தாசையையும் துறப்பதுதான்'' என்றார்.

பவநாத் அந்தக் கால வங்காள வழக்கப்படி மிகவும் இளமையிலேயே திருமணம் செய்து வைக்கப்பட்டான். ஆனல் குடும்ப வாழ்க்கை அவனுக்கு வேம்பாகக் கசந்தது. மனைவி இருக்கும் பக்கம் அவன் போவதே இல்லை. குருதேவர் ஒரு நாள் அவனைச் சோதிப்பதற்காக, ''பவநாத், நீ ஏன் குடும்ப வாழ்வின் இன்பத்தையும் சிறிது அனுபவிக்கக் கூடாது?'' என்றார். இதைக் கேட்டு மிகுந்த கோபமும் வெறுப்பும் கொண்ட பவநாத், ''ஐயா, நான்கூட அந்தக் கேவலமான இன்பத்தில் மூழ்க வேண்டுமா?'' என்று கேட்டான். இந்தப் பதில் குருதேவரை மிகவும் மகிழ்வித்தது. பவநாத்தைப் பார்த்ததுமே அவனுடைய எல்லையற்ற தூய்மை குருதேவரைத் தெய்விகப் பரவசம் அடையும்படிச் செய்துவிடும்.

## 36. தாரக்நாத்தும் நித்திய கோபாலும்

வங்காளத்தில் இருபத்து நான்காவது பர்காஞ எனப் படும் மாவட்டத்தைச் சேர்ந்தவர் தாரக்நாத். அவரு டைய தந்தை ராம்கஞய் கோஷால், ராணி ராசமணியின் வழக்கறிஞராக இருந்து வந்தார். அவர் சிறந்த காளி பக்தர். ஸ்ரீராமகிருஷ்ணர் சாதனைகளில் மூழ்கியிருந்தபோது காளி கோயிலுக்கு ராம்கஞய் அடிக்கடி வந்திருக்கிரார். அப் போது குருதேவரிடம் அவருக்கு நெருங்கிய பழக்கம் ஏற் பட்டது. அப்போது குருதேவர், தாம் செய்து வந்த கடின சாதனைகளின் காரணமாக பயங்கரமான உடம்பெரிச்சலால் துன்பப்பட்டுக் கொண்டிருந்தார். அவர் செய்து கொண்ட எந்த மருத்துவமும் பலன் தரவில்லை. ஒரு நாள் ஸ்ரீராம கிருஷ்ணர் ராம்கஞய் வந்தபோது தம்முடைய பொறுக்க முடியாத உடம்பெரிச்சலைப் பற்றிக் கூறி அதற்கு ஏதாவது மருந்து இருக்கிறதா என்று கேட்டார். ராம்கஞய் குருதேவரி டம் அவருடைய இஷ்ட தெய்வத்தின் பெயரை எழுதிய தாயத் தைக் கையில் கட்டிக் கொள்ளும்படிக் கூறினர். இது உடனடி யாகக் குருதேவரின் உடல் எரிச்சலைக் குணப்படுத்தியது.

சிறு வயதிலிருந்தே தாரக் தியானம் செய்து வந்தார். இளம் வயதிலேயே உலக ஆசைகள் முற்றிலும் இல்லாதவராய் இயல்பாகவே கடவுளை நாடி நிற்கும் மனம் படைத்தவராக அவர் இருந்தார். அந்தக் காலத்தில் சமயப் பற்று மிகுந்த இளைஞர்கள் கேசவ சந்திரரின் பிரம்ம சமா ஜத்தில் உறுப்பினர்களாக இருந்தது போலவே தாரக்கும் பிரம்ம சமாஜ உறுப்பினராக இருந்தார். குருதேவரைப் பற்றிக் கேசவர் தம் பத்திரிகையில் எழுதியதைப் படித்தே குருதேவரைப்பற்றி தாரக் தெரிந்து கொண்டார்.

இந்த நேரத்தில் அவர் கல்கத்தாவிலிருந்து முகல்சராய் என்னும் இடத்திற்குச் சென்று வாழ்ந்தார். அங்கும் தம் நண்பர் ஒருவரோடு சமயத்தையும் கடவுளையும்பற்றிப் பேசு வதும் தியானம் செய்வதுமாகவே இருந்தார். ஒரு நாள் இருவரும் பேசிக் கொண்டிருந்தபோது அவருடைய நண்பர், ''இந்தக் காலத்தில் சமாதியில் மூழ்குபவர்களைக் காண்பது மிக மிக அரிதாகிவிட்டது. ஆனல் அந்த அற்புதமான நிலை யை அடையும் ஒரு மனிதரை எனக்குத் தெரியும். அவர்

ஸ்ரீராமகிருஷ்ணர்'' என்று கூறி ஸ்ரீராமகிருஷ்ணருடைய வாழ்க்கையிலிருந்து சில நிகழ்ச்சிகளேயும் கூறினர். அதைக் கேட்ட தாரக் குருதேவரிடம் மிகுந்த பற்றுக் கொண்டு அவரைக் காணப் பெரிதும் ஆவல் கொண்டார். சில நாட்கள் கழித்துத் தாரக் கல்கத்தா திரும்பினர். அப்போது நடந்து வந்த பிரம்ம சமாஜ விழாக்களில் கலந்து கொண்டார். அப்போது குருதேவரின் பக்தரான இராமசந்திர தத்தாவின் உறவினர் ஒருவரிடமிருந்து குருதேவரைப்பற்றிப் பல செய்திகளைத் தெரிந்து கொண்டார். நாளாக நாளாக, பிரம்ம சமாஜக் கருத்துக்களில் அவருக்கு ஆர்வம் குறைந்தது. ஆன்மிகத்தில் மிக மிக ஆழ்ந்து மூழ்கிக் கடவுளை நேராகக் காணும் துடிப்பும் வேகமும் அவரிடம் அதிகமாயின. அந்த நேரத்தில் குருதேவர் கல்கத்தாவில் இராமசந்திரர் வீட்டிற்கு வரப்போவதை அறிந்தார். குருதேவரை நேரில் காண முடிவு செய்து அவர் வரப் போகும் நாளை எதிர்பார்த்து ஆவலோடு காத்திருந்தார். அன்று மாலை குருதேவர் வந்ததும் ராமின் வீட்டிற்குச் சென்றார் தாரக். அங்கு பெருங் கூட்டம் கூடியிருந்தது. குருதேவர் பரவசத்தோடு பேசிக் கொண்டிருந்தார். சமாதி நிலையைப்பற்றி அறிந்துகொள்ள ஆவலாயிருந்த ராக் குருதேவர் பேசிய வார்த்தைகளை மிகுந்த கவனத்தோடு கேட்டார். அவை சமாதியைப்பற்றிய விஷயமாக இருக்கவே, அவர் மிகுந்த ஆச்சரியமடைந்தார். அவருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. அடுத்த சனிக்கிழமை எப்படியும் தட்சிணேசுவரம் சென்று அவரைச் சந்திப்பது என்ற தீர்மானத்துடன் வீடு திரும்பினர்.

தட்சிணேசுவரம் போகும் வழி தாரக்கிற்குத் தெரியாது. அவருடைய நண்பர் வழிகாட்டியாக உடன் வந்தார். அவர்கள் கோயிலை அடைந்த பொழுது மாலை பூஜை துவங்கத் தயாராக இருந்தது. குருதேவர் பவநாத்துடன் கங்கைக் கரையில் உலவிக் கொண்டிருந்தார். தாரக் அவரிடம் சென்று அவருடைய கால்களைத் தொட்டு வணங்கினர். அவர் கல்கத்தாவிலிருந்து வருவதை அறிந்ததும் தம்மைப்பற்றி இவர்களுக்குத் தெரியுமா, தெரியாதா என்பதைப்பற்றி எல்லாம் கவலைப்படாமல் கல்கத்தாவில் இராமசந்திரர், நரேந்திரர் முதலியவர்களேயும் அவர்களின் நலத்தைப் பற்றியுமே விசாரித்துக் கொண்டிருந்தார். குருதேவர் தம் பக்தர்களிடம் கொண்டுள்ள அளவற்ற அக்கறையைக் கண்டு வியப்படைந்த தாரக், ''அவர்களைப் பற்றி எனக்கு அதிகமாகத் தெரியாது. அவர்கள் நன்றாகவே இருக்கிறார்கள்'' என்றார்.

பிறகு குருதேவர் தாரக்கிடம் தாம் கழிந்த சனிக்கிழமை ராமின் வீட்டிற்கு வந்தபோது தம்மை அவர் பார்த்தாரா என்று கேட்டார். பார்த்ததாகத் தாரக் கூறியதும் தம்மோடு அவரை வரும்படிக் கூறிவிட்டுக் குருதேவர் தம் அறைக்கு வடக்கே இருந்த தாழ்வாரத்திற்குச் சென்றார். பவநாத் அங்கே பாய் ஒன்றைக் கொண்டு வந்து விரித்தார். எல்லோரும் உட்கார்ந்தனர். குருதேவர் தாரக்கிடம், 'உனக்கு எதில் நம்பிக்கை? உருவக் கடவுளிடமா? அருவக் கடவுளிடமா?'' என்று கேட்டார். ''அருவக் கடவுளிடம்'' என்றார் தாரக். ''உருவமில்லாத அருவக் கடவுளிடம் உனக்கு நம்பிக்கை இருக்கலாம். ஆனால் நீ உருவத்திலும் நம்பிக்கை கொள்ள வேண்டும்'' என்று கூறியபடி அவரைக் காளி கோயிலுக்கு அழைத்துச் சென்றார். அப்போது கோயிலில் மாலை வழிபாடு நடந்து கொண்டிருந்தது. உடல் தரையில் படிய குருதேவர் காளியின் திருமுன்னர் வீழ்ந்து வணங்கினார். திருவுருவங்கள் எல்லாம் வெறும் கல்லும் உலோகங்களும் என்னும் பிரம்ம சமாஜக் கொள்கையில் ஊறி இருந்த தாரக் காளியின்முன் வீழ்ந்து வணங்க முதலில் தயங்கினார். அப்போது அவர் மனத்தில் திடீரென்று, ''கடவுள் எங்கும் நிறைந்தவர் என்று கேட்டிருக்கிறேன். அவர் எங்கும் நிறைந்தவராக இருந்தால் இதிலும் நிச்சயமாக இருப்பார். இது வெறும் கல் என்று நினைப்பது எவ்வளவு குறுகிய புத்தி'' என்ற எண்ணம் தோன்றியது. உடனே காளியின் திருமுன்னர் வீழ்ந்து வணங்கினார்.

இருவரும் திரும்பிக் குருதேவரின் அறைக்கு வந்தனர். தாரக்கைத் தம்மோடு இரவு தங்கும்படிக் கூறிய குருதேவர், ''பகல் நேரத்தில் ஏதோ கொஞ்ச நேரம் இங்கே வந்துவிட்டுப் போவதால் ஒன்றும் நிலையான பலன் கிடைக்காது. அடிக்கடி வர வேண்டும். இங்கே தங்க வேண்டும்'' என்றார். நண்பர் ஒருவரின் வீட்டிற்கு இரவில் வருவதாக தாரக் வாக்களித்திருந்ததால் குருதேவருடன் தங்க முடியாததற்கு அவரிடம் மன்னிப்புக் கேட்டு, மறு நாள் மாலையில் வருவதாக அவரிடம் வாக்குறுதி அளித்து விட்டுக் கல்கத்தா புறப்பட்டார். குருதேவர் அவரிடம் மறுநாள் வரும்போது தமக்கு 'ஐஸ்' வாங்கி வரும்படிக் கூறினார். தாரக்கிற்கு அது எங்கே கிடைக்கும் என்று தெரியவில்லை. ஒரு நண்பரிடம் கேட்டார். அந்த நண்பர் சுரேந்திரரின் நண்பரும்கூட. எனவே அவர் சுரேந்திரரிடம் சொல்லி கொஞ்சம் 'ஐஸ்' வாங்கி ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அனுப்பிவைத்தார்.

நாளாக நாளாகத் தாரக் குருதேவருடன் மிக நெருங்கிப் பழகத் துவங்கினார். ஒரு நாள் குருதேவர் தாரக்கிடம், ''என்னிடம் வருபவர்களிடம் அவர்களுடைய தந்தை யார், எங்கே இருக்கிறார்கள், என்ன வேலை செய்கிறார்கள் என்றெல்லாம் பொதுவாகக் கேட்பதில்லை. அவர்களுடைய உள்ளத்தையும் மனநிலையையும் மட்டுமே காண விரும்புவேன். ஆனால் நான் உன் தந்தையைப் பற்றியும் உன் வீட்டில் உள்ளவர்களைப் பற்றியும் கொஞ்சம் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்'' என்றார். தாரக் தம் தந்தையின் பெயரைச் சொன்னதும் குருதேவர் ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்தார். அவர் தமக்குத் தெரிந்தவர் என்பதைக் கூறித் தம் உடல் எரிச்சல் அவரால் தீர்ந்ததையும் கூறி, அவரைத் தாம் பார்க்க விரும்புவதாகவும் கூறினார். சில நாட்கள் கழித்து ராம்கனாய் காளி கோயிலுக்கு வந்து நிலத்தில் வீழ்ந்து குருதேவரை வணங்கினார். அவருடைய தலைமீது தம் கால்களை வைத்தபடியே குருதேவர் ஆழ்ந்த சமாதியில் மூழ்கிவிட்டார். ராம்கனாய் மிகுந்த ஆர்வத்தோடு குருதேவரின் கால்களைப் பற்றிக்கொண்டு கண்ணீர் வடித்தார்.

குருதேவரிடம் மிகுந்த பற்றுக் கொண்ட தாரக் அவரை எப்போதும் காண்பதற்கு விரும்பினார். ஒரு நாள் தாரக் குருதேவரைப் பார்க்க வந்திருந்தார். அப்போது அவர் குருதேவரிடம் வருவது மூன்றாவதோ அல்லது நான்காவது முறையோ ஆகும். குருதேவர் அவரைத் தனியாக அழைத்துச் சென்று நாக்கை நீட்டச் சொல்லி அதன் மேல் ஏதோ எழுதினார். உடனே தாரக் விசித்திரமான உணர்ச்சியில் மூழ்கினார். அவர் மனம் உலக நினைவுகளில் இருந்து முற்றிலும் நீங்கியது. ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்து விட்டார். மற்றொரு முறை குருதேவர் அவர் நாக்கில் முன்பு போலவே எழுதியபோதும் அவர் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கினார்.

அந்த நேரத்தில் இருந்த தம் மனநிலையைப் பற்றித் தாரக் கூறும்போது, ''எனக்கு அடிக்கடி குருதேவர் முன்னால் அழ வேண்டும்போல் இருக்கும். ஓர் இரவு காளிகோயிலின் முன் நின்று கொண்டு தேம்பித் தேம்பி அழுதேன்! அறையில் நான் இல்லாததைக் கண்ட குருதேவர் மிகுந்த கவலை அடைந்தார். நான் அவரிடம் சென்றதும், 'யார் கடவுளுக்காக அழுகிறார்களோ அவர்களைக் கடவுள் பெரிதும் விரும்புகிறார். அவர்கள் வடிக்கும் கண்ணீர் முன் பிறவிகளில் செய்த பாவத்தையெல்லாம் கரைத்துச் சென்று விடுகிறது' என்றார். மற்றொரு நாள் நான் பஞ்சவடியில் தியானம் செய்து கொண்டிருந்தேன். அப்போது குருதேவர் என்ன

ருகே வந்தார். அவர் பார்வை என்மீது பட்ட உடனே நான் அழுது கண்ணீர் வடிக்கத் துவங்கினேன். ஒரு வார்த்தை கூடப் பேசாமல் அவர் என்முன் நின்ருர். ஒருவகை யான உணர்ச்சி என் உடம்பு முழுவதும் பரவுவதுபோல் இருந்தது. என் உடம்பு முழுவதும் நடுங்கியது. என்னுடைய இந்த நிலையைக் குருதேவர் பாராட்டினுர். தெய்விக உணர்வு உடலில் தோன்றும்போது உடம்பு இப்படி நடுங்கும் என்று கூறினுர். பிறகு அவர் என்னைத் தம் அறைக்கு அழைத்துச் சென்று சாப்பிடுவதற்கு ஏதோ கொடுத்தார். தம் பார்வை யாலேயே ஒருவரிடம் மறைந்திருக்கும் ஆன்மிக உணர்ச்சியை எழுப்பும் ஆற்றல் அவரிடம் இருந்தது'' என்று கூறினுர்.

கடவுளை நேரில் காணும் தம் இலட்சியத்தை அடையும் படிச் செய்யும் ஒருவரிடம் தான் இப்போது வந்திருக் கிருேம் என்பதைத் தாரக் உணர்ந்தார். ஸ்ரீராமகிருஷ்ண ரிடம் நெருங்கிப் பழகப் பழகத் தம்முடைய உலகப் பற்றும் பாசங்களும் அறுந்து கொண்டே வருவதை உணர்ந்தார். அவர் திருமணமானவராக இருந்தாலும் உலக வாழ்வில் சிறிதும் அவருக்கு ஆசை இல்லாது போயிற்று. குருதேவர் எல்லாச் சமயங்களும் ஒன்று சேரும் இடம் என்பதைத் தெளிவாக அவர் உணர்ந்தார். அவரை முழுமையாக அறிவதே கடவுளை முழுமையாக அறிவது என்பது புரிந்தது. இந்த விழிப்புத்தோன்றியவுடன் குருதேவரிடம் அவருக்கிருந்த பக்தி ஆயிரம் மடங்காகப் பெருகியது. ஸ்ரீராமகிருஷ்ணரும் தாரக்கிடம் மிகுந்த அன்பு கொண்டார். அவரு டைய பொறுப்பு முழுவதையும் தாமே ஏற்றுக் கொண்டு தெய்விக வாழ்க்கைக்கு ஏற்ப அவருடைய வாழ்க்கையைப் பல வழிகளிலும் செம்மைப் படுத்தத் துவங்கினுர். இவர் பிற்காலத்தில் சுவாமி சிவானந்தர் என்ற பெயரோடு ஸ்ரீராம கிருஷ்ணரின் புகழ் பெற்ற துறவிச் சீடராக விளங்கினுர்.

இந்த நேரத்தில் நித்திய கோபால் என்னும் இளைஞனும் குருதேவரிடம் அடிக்கடி வந்து கொண்டிருந்தான். குரு தேவரிடம் உயர்ந்த மதிப்பும் அன்பும் கொண்டிருந்த அவன், கடவுளின் பெயரைக் கேட்டவுடனே மிகுந்த பரவசம் அடைபவனுக இருந்தான். கீர்த்தனங்களையும் பஜனை களையும் கேட்கும்போது சமாதியில் மூழ்கி விடுவான். ஸ்ரீராம கிருஷ்ணர் அவனை மிகவும் விரும்பினுர்; அவன் பரமஹம்ச நிலையை அடைந்திருப்பதாகவும் கூறுவார். இரவும் பகலும் அவன் பிரார்த்தனையிலும் தியானத்திலும் மூழ்கி இருப்பான். அப்போது தெய்விகப் பரவசத்தால் அவன் மார்பு

செக்கச் செவேலென்று ஆகிவிடும். உண்மையிலேயே அவன் மகோன்னதமான ஓர் ஆத்மா. அவனோடு கைகளைக் கோத்துக் கொண்டு குருதேவர் ஆனந்தப் பரவச நிலையில் நடனமாடுவதைப் பலரும் பார்த்தபடி நிற்பார்கள். இது நித்திய கோபாலிடம் இருந்த அளவற்ற தூய்மை, துறவு முதலியவற்றின் அடையாளமாகும். குருதேவரும் நித்திய கோபாலும் மிக உயர்ந்த ஆன்மிக நிலையில் இருக்கும்போது இரண்டுபேரும் பேசிக் கொள்வது அருகிலிருக்கும் யாருக்கும் புரியாது. ஒரு நாள் குருதேவர் தம் பக்தர்கள் பலரோடு இராமசந்திரரின் வீட்டிற்கு வந்தார். கீர்த்தனம் துவங்கிய உடனே சமாதியில் மூழ்கிய குருதேவர் தம் அருகில் அமர்ந்திருந்த நித்திய கோபாலின்மீது காலை வைத்தார். உடனே அளவற்ற பரவசமும் உணர்ச்சியும் அடைந்த நித்திய கோபாலின் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்தது. சிறிது நேரத்திற்குள் குருதேவர் உலக நினைவைச் சிறிது அடைந்தார்.

ஒரு பக்தை நித்திய கோபாலைத் தன் மகனாக எண்ணி அவனை அடிக்கடிக் தன் வீட்டிற்கு அழைத்துச் செல்வாள். இதைக் கவனித்த குருதேவர், ''அவள் வீட்டிற்கு அடிக்கடிப் போகாதே. ஒரு துறவி கடினமான விதிகளைப் பின்பற்ற வேண்டும். அவன் ஒரு பெண்ணின் படத்தைக்கூடப் பார்க்கக் கூடாது. பெரிய பக்தையாக இருந்தாலும் கூட அவளோடு பழகக் கூடாது. ஒரு துறவி உலக ஆசைகளையெல்லாம் முழுதும் துறந்தவராக இருந்தாலும் மற்றவர்கள் தம் மிடமிருந்து துறவையும் தூய்மையையும் கற்றுக் கொள் வதற்காக இத்தகைய விதிகளைக் கண்டிப்பாகப் பின்பற்ற வேண்டும். இல்லையென்றால் துறவிகள் ஆசைகளுக்கு இரையாவார்கள். இது இல்லறத்தார்களுக்குப் பெரும்பாலும் பொருந்தாதுதான். ஆனால் துறவிகளோ உலகிற்கு வழி காட்டுபவர்கள்'' என்றார். குருதேவர் சாதனை செய்துவந்த காலத்தில் இரண்டு சிறுவர்கள் அவரிடம் வந்தது பற்றியும் அவர்களில் கோபால் என்பவன் இந்த உலகம் தனக்கு மிகச் சிறிய இடமாக இருப்பதால் தான் இந்த உலகத்தைவிட்டுப் போவதாக ஒரு நாள் கூறிவிட்டு மிகவும் இளமையிலேயே இறந்து போனது பற்றியும் வாசகர்கள் மறந்திருக்க மாட்டார்கள். அந்தச் சிறுவனே நித்திய கோபாலாகப் பிறந்திருப்பதாகக் குருதேவர் சில சமயங்களில் கூறுவார். நித்திய கோபால், சுவாமி ஞானானந்த அவதூதர் என்ற பெயரோடு பிற்காலத்தில் சந்நியாசி ஆனார். அவரிடம் பலர் சீடர்களாகச் சேர்ந்தனர்.

# 37. பலராம்போஸ்

கல்கத்தாவில் பாக்பஜாரில் வாழ்ந்து வந்த பலராம் போஸ் ஒரிசாவில் பல எஸ்டேட்டுகள் உடைய ஒரு பெரிய பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவர். அவருடைய குடும்பம் பக்திக்கும் தருமச் செயல்களுக்கும் பெரும் புகழ் பெற்றது. இளமையிலிருந்தே அவர் மிகுந்த கடவுள் பக்தி கொண்டவர். குடும்பத்தை விட்டு நீங்கித் தனியாகப் புண்ணியத் தலங்களில் சாதனைகளில் ஈடுபட்டு வாழ்ந்தவர். ஒரிசாவில் அவர் பங்கிற்காக வந்த சொத்துக்களைத் தம் உறவினரின் பராமரிப்பில் விட்டுவிட்டு அதன் மூலம் கிடைத்த குறைந்த வருவாயை வைத்துக் கொண்டு வாழ்ந்து வந்தார். அவர் தம்முடைய நேரத்தைத் தியானத்திலும், பிரார்த்தனையிலும் வைஷ்ணவ நூல்களைப் படிப்பதிலும் செலவிட்டார். அவர் பூரியில் இருந்தபோது கேசவர் தம் பத்திரிகையில் ஸ்ரீராம கிருஷ்ணரைப் பற்றியும் அவருடைய உபதேசங்களைப் பற்றியும் எழுதியதைப் படித்தார். அவை அவர் மனத்தை மிகவும் கவர்ந்தன. அவரை நேரில் காண வேண்டுமென்று மிகுந்த துடிப்பு ஏற்பட்டது. அந்த நேரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரை நேரில் கண்டு அவருடைய தெய்விக வாழ்க்கையாலும் உபதேசங்களாலும் பெரிதும் கவரப்பட்ட அவருடைய நண்பர் ஒருவர் எழுதிய கடிதம் கிடைத்தது. அதில் அவர் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பெரிதும் புகழ்ந்து எழுதி, பலராம் உடனே வந்து அந்த மகானைத் தரிசிக்கும்படிக் கூறியிருந்தார். அப்போது பலராமின் மகளுடைய திருமணம் கல்கத்தாவில் நடத்துவது என்று ஏற்பாடு ஆகியது. எனவே கல்கத்தா வந்த அவர் மறுநாளே தட்சிணேசுவரம் புறப்பட்டார். இது நடந்தது 1882-ஆம் ஆண்டிலாகும்.

அப்போது கேசவரும் அவருடைய சீடர்களும் குருதேவரைக் காண வந்திருந்தார்கள். அதனால் கோயிலில் பெரும் கூட்டம் இருந்தது. பலராம் அமைதியாகக் குருதேவரின் அறையில் ஒரு மூலையில் அமர்ந்தபடி அங்கு நடப்பதைக் கவனித்துக் கொண்டிருந்தார். கேசவரும் அவருடைய சீடர்களும் சாப்பிடுவதற்காக அறையிலிருந்து சென்றார்கள். அப்போது தனியாக அமர்ந்திருந்த பலராமைக் குருதேவர் அழைத்து தம்மிடம் ஏதாவது

கேட்க வேண்டுமா என்று கேட்டார். ஆமாம் என்று தலை அசைத்த பலராம் அவரிடம், ''ஐயா! கடவுள் உண்மையில் இருக்கிறாரா?'' என்று கேட்டார். ''நிச்சய மாக இருக்கிறார்'' என்றார் குருதேவர். ''அப்படியானால் அவரை யாராவது காண முடியுமா?'' என்று கேட்டார் பலராம்.

''நிச்சயம் காண முடியும். எந்தப் பக்தர் அவரைத் தமக்கு மிக மிக நெருக்கமான சொந்தமாக நினைத்து அழைக்கிறாரோ அவருக்குக் கடவுள் தம்மைக் காட்டியருள்கிறார். ஒரு முறை நீ அவரை அழைத்து அவர் வராததாலேயே கடவுள் இல்லை என்று முடிவு செய்து விடாதே'' என்றார் குருதேவர். இதைக் கேட்ட பலராம், ''நான் எவ்வளவோ பிரார்த்தனை செய்தும் என்னால் ஏன் கடவுளைப் பார்க்க முடியவில்லை?'' என்றார். ஸ்ரீராமகிருஷ் ணர் அன்போடு சிரித்தபடியே பலராமிடம், ''ஆமாம். நீ உன் பிள்ளைகளை உனக்கு எவ்வளவு நெருக்கமானவர் களாகக் கொண்டு அவர்களிடம் அன்பு செலுத்துகிறாயோ அப்படிக் கடவுளையும் உன் பிள்ளையாக நினைத்து அன்பு செலுத்தியது உண்டா?'' என்று கேட்டார். சிறிது நேரம் யோசித்த பலராம், ''இல்லை ஐயா! இல்லை. என் பிள்ளை களைக் குறித்து நான் ஏங்குவதுபோல் அவர்களிடம் பாசம் செலுத்துவதுபோல் கடவுளுக்காக ஏங்கவோ அவரிடம் பாசம் கொள்ளவோ இல்லை'' என்றார். இதைக் கேட்ட குருதேவர் மிகுந்த அன்போடு, ''கடவுள் உன்னைவிடவும் உனக்கு மிகவும் வேண்டியவர் என்று நினைத்து அவரிடம் பிரார்த்தனை செய். நான் உறுதியாக உனக்குச் சொல் கிறேன். அவர் தம் பக்தனிடம் மிகுந்த பற்றும் பாச மும் உடையவர். அவனுக்குக் காட்சி அளிக்காமல் அவரால் இருக்க முடியாது. பக்தன் அழைப்பதற்கு முன்பே அவர் ஓடி வருவார். கடவுளைவிட ஒருவருக்கு மிகவும் நெருக்க மானவரும் அன்பானவரும் யாருமே இல்லை'' என்றார். பலராம் குருதேவரின் இந்த வார்த்தைகளிலிருந்து புதிய விளக்கத்தைப் பெற்றார். குருதேவர் கூறிய ஒவ்வொரு வார்த்தையும் சத்தியம்போல் அவருக்குத் தோன்றியது. இதுவரை யாரும் அவரிடம் கடவுளைப் பற்றி இத்தகைய உறுதியோடும் தெளிவோடும் பேசியதே இல்லை. குருதேவரின் பேச்சைவிட அவர் காட்டிய அன்பு பலராமை மிகவும் கவர்ந்தது. மனத்திற்குள் அன்றே குருதேவரைத் தம் வழி காட்டியாகவும் நண்பராகவும் ஏற்றுக் கொண்டார். இவ்வாறு

குருதேவரை முதன் முதலில் கண்டபோதே பலராமின் மனத்தில் அவரைப் பற்றிய மிக உயர்ந்த எண்ணமும் நம்பிக்கையும் ஆழப் பதிந்துவிட்டன. பிறகு வீட்டிற்குப் புறப்பட்ட பலராம் குருதேவரைப் பணிவோடு வணங்கினர். ''மறுபடியும் கட்டாயம் வா'' என்று சொல்லியபடி குருதேவர் விடை தந்தார்.

பலராம் வீடு திரும்பினலும் அவர் மனம் முழுவதும் தட்சிணேசுவரத்திலேயே இருந்தது. மறுநாள் காலையிலேயே தட்சிணேசுவரம் சென்றார். அப்போது குருதேவர் தனியாகத் தம் அறையில் அமர்ந்திருந்தார். பலராமைக் கண்டதும், ''ஓ! வந்து விட்டாயா? மிகவும் நல்லது. வா, உட்கார். கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள். நான் இப்போது உன்னைப் பற்றித்தான் நினைத்துக் கொண்டிருந்தேன். நீ எங்கே வசிக்கிருய்?'' என்றார். ''பாக் பஜாரில் வசிக்கிறேன்'' என்றார் பலராம். ''ஆமாம், பாக்பஜாரிலிருந்து இங்கே நடந்தா வந்தாய்?'' என்று கேட்டார் குருதேவர். ''ஆமாம்'' என்றார் பலராம். அதன் பிறகு பலராமின் குடும்பத்தில் எத்தனை பேர் இருக்கிறார்கள், அவருக்குப் பிள்ளைகள் எத்தனை போன்ற பல விவரங்களையும் குருதேவர் கேட்டார். பிறகு, ''இதோ பார். நான் இவற்றையெல்லாம் ஏன் உன்னிடம் கேட்கிறேன் என்றால் அன்னை காளி, நீ எங்களில் ஒருவன் என்பதைக் காட்டியிருக்கிறாள். இந்த இடத்துக்குச் (அதாவது தமக்கு) சொந்தமான பல பொருள்கள் உன்னிடம் இருக்கின்றன. ஏதாவது வாங்கி என்னிடம் அனுப்பு'' என்றார். பலராம் குருதேவர் இப்படிக் கூறியதைத் தம் அதிர்ஷ்டம் என்று நினைத்தார். உடனே ஏதாவது வாங்கி வரப் புறப்பட்டார். தம்மிடம் வரும் பக்தர்களிடம், ஏதாவது ஒரு பொருளைத் தமக்கு வாங்கி வரும்படிச் சொல்வது குருதேவரின் பொதுவான ப்ழக்கமாகும். கோயிலுக்கோ அல்லது சாதுக்களையோ பார்க்கச் செல்லும்போது வெறும் கையோடு செல்லக் கூடாது. ஏதாவது ஒரு பொருளை, அது எவ்வளவு விலை குறைந்ததானலும் வாங்கிப் போகும்படிக் கூறுவார். ஒரு சிறு பொருள் வாங்கிச் செல்வதுகூடக் கடினமாக இருக்கும் ஏழை பக்தர்களைக் கண்டால், ''ஏன் அடிக்கடிப் பணம் செலவு செய்கிறீர்கள்? ஒரு பைசாவிற்குப் பாக்கு வாங்கி நறுக்கி வைத்துக் கொண்டு அதில் சிறிதளவு இங்கே வரும்போது கொண்டு வாருங்கள்'' என்பார்.

கல்கத்தாவிற்குச் சென்ற பலராம் தின்பண்டங்களை வாங்கிக் கொண்டு ஒரு வண்டியில் தட்சிணேசுவரம்

திரும்பினர். வைஷ்ணவரான அவருக்கு ஸ்ரீராமகிருஷ்ணர், பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு வங்காளத்தில் தோன்றிய அவதார புருஷரான சைதன்யர் போலவே தோன்றினர். ஆனாலும் அந்தக் கருத்தை உடனடியாக ஏற்றுக் கொள்ளவும் தயங்கினர். பலராம் கொண்டு வந்த தின்பண்டங்களைக் குருதேவர் அன்போடு வாங்கிக் கொண்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் பலராமைக் கண்டதும் சில ஆண்டுகளுக்கு முன்பு தாம் தெய்விகக் காட்சியில் கண்ட பஞ்சவடியிலிருந்து வந்த சைதன்யரின் கீர்த்தனைக் குழுவில் பலராமும் ஒருவராக இருந்ததை அடையாளம் கண்டு கொண்டார். குருதேவர் பலராமை மிகுந்த அன்போடு நேசித்தார். அவரைப் பற்றி அடிக்கடி, ''பலராமின் வீட்டு உணவு மிகவும் தூய்மையானது. அவருடைய குடும்பத்தினர்கள் பல தலைமுறைகளாகப் பக்தர்களாக இருந்து வருகிறார்கள். சாதுக்களையும் ஏழைகளையும் ஆதரித்து வருகிறார்கள். பலராமின் தந்தை குடும்ப வாழ்விலிருந்து விடுபட்டுப் பிருந்தாவனத்தில் ஜபத்திலும் தியானத்திலுமாக நாட்களைக் கழித்து வருகிறார். அவர் வீட்டு உணவை நான் சாப்பிடுவது மட்டுமல்ல; மிகவும் சுவைத்துச் சாப்பிடுவேன். அவருடைய குடும்பத்தில் உள்ள எல்லோரும் ஒரே விதமான இலட்சியம் உடையவர்கள். அவர் வீட்டில் குழந்தைகள் முதல் பெரியவர்கள்வரை அனைவரும் பிரார்த்தனை செய்யாமல் தண்ணீர்கூடக் குடிக்க மாட்டார்கள். தினமும் பலராமின் குலதெய்வமான பூரி ஜகந்நாதருக்கு முதலில் உணவை நிவேதம் செய்த பின்னர் வீட்டில் யாவரும் அதையே சாப்பிடுவார்கள். அவர்கள் எவ்வளவு பக்திமான்களோ அந்த அளவுக்கு விருந்தினர்களை ஆதரிப்பவர்கள்கூட'' என்று கூறுவது வழக்கம். குருதேவர் பக்தி நிறைந்த இந்தக் குடும்பத்தில் இருக்கும்போது மிகுந்த மகிழ்ச்சி அடைவார். குருதேவர் பிராமணர்கள் வீட்டைத் தவிர வேறு எங்கும் மதிய உணவு சாப்பிடமாட்டார். அப்படிச் சாப்பிட்டாலும் வெறும் தின்பண்டங்களாகவோ அல்லது பழங்களாகவோதான் இருக்கும். ஆனல் பலராம் பிராமணர் அல்லாதவராக இருந்தபோதும் அவர் வீட்டில் பகல் உணவு, சோறு மற்றும் பலவகையான காய் கறிகளோடு குருதேவர் உண்பார். இது ஒரு அசாதாரண விஷயமாகும். பலராம் குருதேவரைச் சந்தித்த நாள் முதல் குருதேவர் உயிரோடு இருந்தவரை அவருடைய உணவிற்கான செலவு முழுவதையும் பலராமே ஏற்றுக் கொண்டார். குருதேவரும் கல்கத்தாவில் நடுப்பகலோ அல்லது இரவோ எப்போது

தங்க நேருகிறதோ அந்த நேரங்களில் எல்லாம் பலராமின் வீட்டில்தான் தங்கி ஓய்வெடுத்துக் கொள்வார்.

பலராம் ஏறக்குறைய நாள்தோறும் தட்சிணேசுவரம் சென்று குருதேவரைக் காண்பார். தவறவே மாட்டார். குருதேவர் எல்லா அவதார புருஷர்களையும் வணங்குவதையும் காளி, சிவன், ராதா என்று இறைவனின் திருநாமங்களைச் சொல்லும்போது பரவச நிலையில் கண்ணீர் வடிப்பதையும், பிரம்மத்தைப் பற்றிப் பேசும்போது ஆழ்ந்த சமாதியில் மூழ்கி விடுவதையும் கண்டார். கடவுளிடம் அவருடைய அன்பு எவ்வளவு தீவிரமானதாக இருந்ததோ அதே அளவில் அது மிகவும் பரந்ததாகவும் இருந்தது. குருதேவரின் அற்புத மான தனிப் பண்புகளை வெளிப்படையாகக் காணக் காண, பலராம் மேலும் மேலும் ஆச்சரியமடைந்தார். ஒரு நாள் தம் வீட்டில் இருக்கும்போது குருதேவர் காளியிடம் கீழ்க்காணும் உணர்ச்சி நிறைந்த பிரார்த்தனை செய்வதைக் கேட்டார். ''அம்மா! உன் அளவற்ற கருணையையே எனக் குத் துணையென்று நம்புகிறேன். உன்னையே எப்போதும் நினைக்கும் மனத்தை எனக்குக் கொடு. தாயே, எனக்குப் புலன் இன்பங்கள் வேண்டாம். பெயர் வேண்டாம். புகழ் வேண்டாம். சித்திகளும் எனக்கு வேண்டாம். தூய் மையான பக்தியே - உலக ஆசைகளால் மாசுபடாத பக்தியே, உலகச் சுகங்களைத் தேடாத கலப்படமற்ற பக்தியே எனக்கு வேண்டும். அதற்காகவே நான் உன்னைப் பிரார்த் திக்கிறேன். அதை எனக்கு அருள்கூர்ந்து கொடு. ஓ! தாயே, உன் குழந்தை நான். இந்த உலகத்தின் மாயையால் அலைக்கழிக்கப்பட்டு உன்னை மறந்து விடாதபடி என்னைக் காப்பாற்று. பணத்தாசையும் காமமும் என்னிடம் தோன் ருதபடி என்னைக் காப்பாற்று. உன்னைத் தவிர இந்த உலகத் தில் வேறு எதையும் காணுத நிலையை எனக்கு அருள். எனக்கு எப்படி உன் பெயரைப் பாட வேண்டும் என்றும் தெரியவில்லை. உன்னை அடையச் செய்யும் பக்தியையும் ஞானத்தையும் மட்டுமே கொடு. உன் எல்லையற்ற கரு ணையை என்மீது பொழியும்படிச் செய்.'' பலராம் இது போன்று உள்ளத்தை உருக்கும் ஒரு பிரார்த்தனையை இதற்கு முன்பு கேட்டதே இல்லை. இதைக் கேட்டு அவர் மனம் அப்படியே நெகிழ்ந்துவிட்டது. கண்களில் நீர் வழிந்தது. நாளடைவில் குருதேவரின் தொடர்பால் பலராமின் மனம் மிகப் பெரிய மாற்றத்தை அடைந்தது. குருதேவரின் உபதேசங்களைக் கடைப்பிடித்ததால் ஆன்மிகப் பாதையில் மிக வேகமாக பலராம் முன்னேறினர்.

பலராம் ஒரு அஹிம்சாவாதி. ஒரு கொசுவைக் கொல்வதைக்கூட அவர் விரும்பமாட்டார். அப்படிப் பட்டவர். ஞானியைப் போன்ற மனநிலை கொண்டவராய், கடவுளை அடைய வேண்டுமானால் ஆழ்ந்த தியானம் ஒன்றே முக்கியமான வழியென்றும் நினைத்தார். தியானம் செய்யும் போது கல்கத்தா நகரத்திற்கே உரிய மிகப் பெரிய கொசுக்கள் அவரை மொய்த்துக் கடித்துத் தியானத்தைக் கலைத்தன. அவைகளில் சிலவற்றைக் கொல்வதால் சமய வாழ்வு ஒன்றும் பாதிக்கப்படாது என்று நினைத்தார். ஆனால் காலம் காலமாகப் பக்தியில் மூழ்கி, அஹிம்சையைக் கடைப் பிடித்து வந்த வைஷ்ணவரான அவரால் ஓர் உயிரான கொசுவைக் கொல்லுவதை அவ்வளவு எளிதாகச் செய்ய முடியவில்லை. அவருடைய மனமும் அதற்கு இடம் கொடுக்க வில்லை. ஞானம், கொசுவைக் கொல்லும்படி வற்புறுத் தியது. இந்த இரண்டிற்கும் இடையே சிக்கிக் கொண்டு எந்தவித முடிவிற்கும் வரமுடியாமல் மிகுந்த வேதனை அடைந்தார். இதைத் தீர்த்துக் கொள்ள குருதேவரிடம் சென்றார். அவர் இதுவரை குருதேவரை அஹிம்சையை பின்பற்றுபவராகவே பார்த்திருக்கிறார். அதனால் அவர் எப்போதாவது கொசுக்களையோ வேறு பூச்சிக்களையோ கொன்றதைப் பார்த்திருக்கிறோமா என்று நினைத்துப் பார்த்தபடியே சென்றார். ஆனால் அத்தகைய நிகழ்ச்சி எதுவும் நினைவிற்கு வரவில்லை. அதற்குப் பதில் தம்மைவிட அவர் மிக அதிகமாக எல்லா உயிர்களிடமும் மிகுந்த அன்புடையவராகவும் ஒரு சிறு உயிருக்கும் துன்பம் தராதவருமாகவே அவர் இருப்பதைக் கண்டிருக்கிறார். எனவே உயிர்க் கொலை செய்வது சரியென்று தம் மனம் தம்மை ஏமாற்றுகிறது என்றும் இதைப் போல் குரு தேவரிடம் கேட்பது தேவையில்லாதது என்றும் நினைத்துக் கொண்டே சென்றார். ஆனால் குருதேவருடைய அறைக் குள் நுழைந்ததும் அங்கே அவர் ஒரு விசித்திரமான காட் சியைக் கண்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் தம் தலையணையின் கீழிருந்து மூட்டைப்பூச்சியை ஒவ்வொன்றாகப் பிடித்துக் கொன்று கொண்டிருப்பதைக் கண்டார். பலராம் அவர் அருகில் சென்று அவரை வணங்கியதும்: ''பலராம். இந்தத் தலையணை நிறைய மூட்டைப் பூச்சிகள். தியானம் செய்யும் போது என்னைக் கடித்து என் மனத்தைக் கலைக்கின்றன. அதனால்தான் அவைகளைக் கொன்று கொண்டிருக்கிறேன்'' என்றார். தாம் என்ன செய்யவேண்டும் என்பதற்குப் பதில் பலராமிற்கு கிடைத்துவிட்டது.

## 38. பாபுராமும் நிரஞ்ஜனும்

பாபுராம்கோஷ் ஸ்ரீராமகிருஷ்ணரைக் கல்கத்தாவில் முதன்முதலில் ஒரு பாகவதச் சொற்பொழிவின்போது சந்தித்தார். அந்த நிகழ்ச்சியைக் கேட்க பாபுராம் சென்றது போலவே ஸ்ரீராமகிருஷ்ணரும் அங்கு வந்திருந்தார். அதற்குச் சில நாட்களுக்கு முன் பாபுராம் தம் அண்ணன் மூலம் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தார். கல்கத்தாவில் நேரில் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்த பிறகு அவரை மறுபடியும் காணவும் பேசவும் விரும்பினர். ராக்காலும் பாபுராமும் ஒரே வகுப்பில் படித்துக் கொண்டிருந்தார்கள். அடிக்கடி ராக்கால் தட்சிணேசுவரம் சென்று வருவதை அறிந்த பாபுராம் தாமும் அவரோடு சென்று குருதேவரைச் சந்திக்க விரும்பினர். சனிக்கிழமையன்று இருவரும் தட்சிணேசுவரம் செல்ல முடிவுசெய்து அதன் படியே படகில் புறப்பட்டனர். குருதேவரைக் காணச் சென்று கொண்டிருந்த ராம்தயாள் என்னும் பக்தருடன் வழியில் சேர்ந்து கொண்டனர். போகும்போது வழியில் ராக்கால், பாபுராமிடம், ''இன்று இரவு தட்சிணேசுவரத்திலேயே தங்குகிறுயா?'' என்று கேட்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் மற்ற சந்நியாசிகள்போல் ஒரு குடிசையில் இருப்பார் என்று நினைத்த பாபுராம், ''இரவு நாம் எங்கே தங்குவது? சாப்பாட்டிற்கு என்ன வழி? அங்கு உணவிற்காக ஏதாவது கடை இருக்கிறதா''? என்றெல்லாம் கேட்டார். ராக்கால், தட்சிணேசுவரக் கோயில் பற்றியும் அங்குள்ள வசதிகள் பற்றியும் ஒன்றும் சொல்லாமல், 'எல்லாவற்றையும் சமாளித்துக் கொள்ளலாம்' என்றுர்.

அவர்கள் தட்சிணேசுவரத்தை அடைந்தபோது சூரியன் மறைந்துவிட்டது. தட்சிணேசுவரக் கோயிலேயும் கங்கையையும் பூந்தோட்டத்தையும் கண்டு, தேவலோகம் போன்றிருந்த அதன் அழகில் பாபுராமின் மனம் லயித்து விட்டது. இருவரும் குருதேவரின் அறைக்குள் நுழைந்தார்கள். குருதேவர் அங்கே இல்லே. காளி கோயிலுக்குச் சென்றிருந்தார். பாபுராமையும் மற்றவர்களேயும் அறையில் இருக்கச் செய்துவிட்டு, தான் போய் குருதேவரை அழைத்து வருவதாகக் கூறி ராக்கால் அங்கிருந்து சென்றுர். சிறிது

நேரத்திற்குள் மிக எச்சரிக்கையாக ராக்கால் வழி காட்டி அழைத்துவர, குருதேவர் தெய்விகப் பரவசத்தில் உலகைப் பாதி மறந்த நிலையில், கால்கள் தடுமாறியவராய் படிகளில் ஏறி அறைக்குள் நுழைந்து கட்டிலின் மீது அமர்ந்தார். சிறிது நேரத்திற்குள் முழுமையான உலக நினைவைப் பெற்றதும் புதியவரான பாபுராமைப் பற்றி விசாரித்தார். உடன் இருந்த ராம்தயாள் என்னும் பக்தர் அவர் பலராம் போஸின் மைத்துனர்—மனைவியின் தம்பி என்று கூறினார். அதைக் கேட்ட உடனே ஸ்ரீராமகிருஷ்ணர், ''ஆ! நீ பலராமின் சொந்தக்காரனா? அப்படியென்றால் எனக்கும் சொந்தக்காரன்தான். நல்லது. உன்னுடைய சொந்த ஊர் எது?'' என்றார். பாபுராம் ''ஆண்ட்பூர்'' என்றார். இதைத் தொடர்ந்து இருவரும் பேசத் துவங்கினர்.

சிறிது உரையாடலுக்குப் பின்னர் குருதேவர் பாபுராமின் கைகளைப் பிடித்துக் கொண்டு, 'இங்கே விளக்கிற்கு அருகில் வா. உன் முகத்தைப் பார்க்க வேண்டும்' என்றார். அங்கே இருந்த அகல் விளக்கின் வெளிச்சத்தில் குருதேவர் பாபுராமின் முகத்தைக் கவனமாக ஆராய்ந்தார். அந்த ஆராய்ச்சியில் மிகவும் திருப்தி அடைந்தவராக மகிழ்ச்சியோடு தலையை மேலும் கீழும் ஆட்டினார். பிறகு பாபுராமின் கைகளையும் கால்களையும் கூர்ந்து கவனித்தார். கடைசியாக, 'உன் உள்ளங்கையைக் காட்டு' என்றார். அதைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தவர் பிறகு அந்தக் கையைத் தன் கைமேல் வைத்துக் கொண்டு சிறிது நேரம் எடைபோடுவது போல் நிறுத்துப் பார்த்தார். பிறகு 'சரி! சரி மிகவும் சரி' என்று சொல்லியபடியே ராம்தயாள் பக்கம் திரும்பி, ''நரேன் எப்படி இருக்கிறான் தெரியுமா? அவன் கொஞ்சம் உடம்பு சரியில்லாமல் இருப்பதாக நான் கேள்விப்பட்டேன்'' என்றார். நரேன் நன்றாக இருப்பதாகத்தான் கேள்விப்பட்டதாக ராம்தயாள் கூறினார். அதைக் கேட்ட ஸ்ரீராமகிருஷ்ணர், 'அவன் நெடுநாட்களாக இங்கே வரவில்லை. அவனைப் பார்க்க வேண்டுமென்று எனக்கு மிகவும் ஏக்கமாக இருக்கிறது. அவனை ஒரு நாள் இங்கே வரச் சொல்லுகிறாயா? மறக்காமல் சொல்கிறாயா?'' என்றார். ராம்தயாள் மறக்காமல் நரேனிடம் சொல்வதாகக் கூறினார்.

இரவு மணி பத்தாயிற்று. ராம்தயாள் ஸ்ரீராமகிருஷ்ணருக்காக நிறைய உணவைக் கொண்டு வந்திருந்தார். அதில் சிறிதளவே எடுத்துக் கொண்ட குருதேவர் மூன்றுபேரையும் அந்த உணவைச் சாப்பிடச் சொன்னார். ராக்கால் அறைக்குள்

படுத்துக் கொண்டார். ராம்தயாளும் பாபுராமும் அறைக்கு வெளியே படுத்துக் கொண்டார்கள். அது வெயில் மிகுந்த ஏப்ரல் மாதம். பாபுராமும் ராம்தயாளும் கண் அயர்ந் தார்களோ இல்லையோ கோயில் காவலாளிகள் காவலுக் காகக் கொடுத்த குரலில் இரண்டு பேரும் எழுந்து கொண் டார்கள். அந்த நேரத்தில் குருதேவர் தம் அறையிலிருந்து குடிகாரன்போல் கால்கள் தள்ளாட ஆடை முழுவதையும் அக்குளில் இடுக்கியவராக ராம்தயாளிடம் வந்து, ''ஏய்! என்ன தூங்குகிறுயா?'' என்ருர். ''இல்லே'' என்ருர் ராம் தயாள். உடனே அவர் பக்கத்தில் குனிந்து மிகுந்த ஆர்வத் தோடு, ''தயவு செய்து நரேனே இங்கே வரச்சொல். அவனேப் பார்க்காததால் ஈரத் துணியைப் பிழிவதைப் போல் என் மனத்தை யாரோ பிழிவது போல் இருக்கிறது'' என்று சொல் லியபடி தன் கையிலிருந்த துணியைப் பிழிந்து காட்டினுர். அவருடைய பேச்சும் முகமும் அவருடைய மற்ற செயல் களும் நரேனின் பிரிவால் அவர்படும் சொல்லமுடியாத துய ரத்தைக் காட்டின.

விழித்துக்கொண்டே இதைப் பார்த்த பாபுராம், 'எவ்வளவு அன்பு! ஆனுல் என்ன வேடிக்கை, இப்படிப் பட்ட குருதேவரைக் காண அவன் ஏன் வர வில்லே!' என்று நினேத்தார். குருதேவர் தம் அறைக்குள் சென்றவர் மறுபடியும் ராம்தயாளிடம் வந்து, ''என்ன? நரேனிடம் மறக்காமல் சொல்'' என்ருர். மறுபடியும் மறு படியும் அதே வார்த்தைகளேத் திரும்பத் திரும்பச் சொன் னுர். பிறகு கால்கள் தடுமாறத் தம் அறைக்குள் சென்று படுத்துக் கொண்டார். ஒரு மணி நேரம் கழிந்தது. மறுபடி யும் குருதேவர் படுக்கையிலிருந்து எழுந்து ராம்தயாளிடம் வந்து தன் மனவேதனேயைச் சொல்லத் துவங்கினுர். ''இதோ பார். நரேன் தூய்மையே வடிவானவன். அவனே நான் சாட்சாத் நாராயணனின் வடிவமாகவே நினேக்கிறேன். அவனில்லாமல் என்னுல் உயிர்வாழவே முடியாது. அவன் இங்கே வராதது என்மனத்தை இது போல் பிழிந்து எடுக் கிறது'' என்று கூறி முன்பு போலவே துணியைப் பிழிந்து காட்டினுர். பிறகு மிகுந்த மனவருத்தத்தோடு, ''அவனேப் பார்க்காததால் சித்திரவதைக்கு உபயோகிக்கும் இயந்திரத் தில் போடப்பட்டு நான் நசுங்கிக் கொண்டிருக்கிறேன். சும்மாவாவது ஒரு முறை அவனே இங்கே வரச்சொல்'' என்ருர். இவ்வாறு ஒரு மணி நேரத்துக்கு ஒரு முறையாக இரவு முழுதும் நடந்தது.

மறுநாள் காலையில் பாபுராம் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பஞ்சவடியில் சந்தித்தபோது அவர் முற்றிலும் வேறுபட்ட மனிதராக இருந்தார். இரவில் இருந்த வேதனையோ கவலைக் குறியோ அவர் முகத்தில் இல்லை. அவர் பாபுராமிடம் பஞ்ச வடியையும் அதன் சுற்றுப்புறங்களையும் சுற்றிப் பார்க்கச் சொன்னார்.

அந்த நேரத்தில் பாபுராமிற்கு வயது ஏறக்குறைய இருபது இருக்கும். ஆனால் தன் வயதுக்கு மிகவும் இளைய வராக அவர் தோற்றம் இருந்தது. பார்ப்பதற்கு மிகவும் அழகாகவும் இருந்தார். அவருடைய இளம் வயதிலேயே யாராவது அவரிடம் கல்யாணம் செய்ய வேண்டும் என்று விளையாட்டுக்காகக் கூறினாலும் உடனே, 'மறுபடியும் அப் படி வற்புறுத்தினால் தற்கொலை செய்து கொள்வேன்' என் பார். எட்டு வயதிலேயே ஒரு துறவியோடு மரங்கள் அடர்ந்த இடத்தில் யாருடைய கண்ணிலும் படாத குடிசையில் வாழப் பெரிதும் விரும்பினார். காளி கோயிலையும் பஞ்சவடியையும் பார்த்ததும் அவருக்கு அந்த நினைவு மறுபடியும் தோன்றியது. தாம் சிறுவயதில் வாழ நினைத்த இடத்தைப் போலவே பஞ்சவடி இருப்பதைக் கண்டார். பஞ்சவடி முழுவதையும் சுற்றிப் பார்த்துவிட்டு குருதேவரின் அறைக்குள் வந்தார். தன் மனத்தில் தோன்றிய எண்ணங்களை அவர் குருதேவரிடம் கூறவில்லை. அந்த இடமெல்லாம் எப்படி இருக்கிறது என்று குருதேவர் கேட்டதற்கு, 'அழகாக இருக்கிறது' என்றார். குருதேவர் அவரைக் காளி கோயிலுக்குப் போகச் சொன்னார். காளி கோயிலுக்குச் சென்று பாபுராம் திரும்பிக் கல்கத்தா புறப்பட்டதும் மிகுந்த வாஞ்சையோடு மறுபடியும் வரும்படிக் கூறினார்.

பாபுராமிற்கு குருதேவரை மிகவும் பிடித்து விட்டது. 'எவ்வளவு நல்ல மனிதராக விளங்குகிறார்! நரேனிடம்தான் எத்தகைய அன்பை வைத்திருக்கிறார்! ஆனால் நரேன் அவ ரைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் இருப்பதுதான் அதி சயம்' என்று நினைத்தார். அடுத்த ஞாயிற்றுக்கிழமை காலை எட்டு மணிக்கு பாபுராம் தட்சிணேசுவரம் சென்றார். குரு தேவர் கட்டிலில் உட்கார்ந்து கொண்டிருந்தார். அறை யில் ஒரு சில பக்தர்கள் உட்கார்ந்திருந்தார்கள். ஸ்ரீராம கிருஷ்ணர் பாபுராமை அன்போடு வரவேற்று, "நீ வந்தது மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. பஞ்சவடிக்குப் போ. அங்கே எல்லோரும் பொழுதை உல்லாசமாகக் கழித்துக் கொண்டிருக்கிறார்கள். நரேனும் வந்திருக்கிறான். அவனோடு

பேசு'' என்றார். பஞ்சவடிக்குச் சென்ற பாபுராம் அங்கே ராக்காலைப் பார்த்தார். ராக்கால் பாபுராமை நரேந்திர ருக்கும் அங்கிருந்த மற்ற நண்பர்களுக்கும் அறிமுகப்படுத்தி னார். நரேனைப் பார்த்ததுமே பாபுராமிற்கு நரேனிடம் மிகுந்த மரியாதை ஏற்பட்டது. நரேனைப் பார்த்துக் கொண்டிருப்பதே பாபுராமிற்கு மிகுந்த ஆனந்தமாக இருந்தது. தம் நண்பர் களோடு பேசிக் கொண்டிருந்த நரேன் மிசு உருக்கமாக ஒரு பாட்டைப் பாடினார். அந்தப் பாடல் பாபுராமின் மனத்தை மிகவும் கவர்ந்தது. மூச்சு விடவும் மறந்து பாபுராம் அந்தப் பாடலைக் கேட்டுக்கொண்டே தமக்குள், ''ஆஹா! எல்லாத் துறைகளிலும் இவர் மிகவும் கெட்டிக்காரராக இருக்கிறாரே' என்று நினைத்தார்.

பாபுராம் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் மிக நெருங்கிப் பழக ஆரம்பித்தார். சிறிது காலத்தில் அவரிடமே சரணடைந்து விட்டார். குருதேவர் பாபுராமைப் பற்றி மிக உயர்ந்த எண்ணம் கொண்டிருந்தார். அவர் தூய்மையே வடிவானவர் என்றும் ஈசுவர கோடிகளில் ஒருவர் என்றும் அறிந்திருந்தார். தம்முடைய தெய்விகக் காட்சி ஒன்றில் குரு தேவர், கழுத்தில் அட்டிகை அணிந்திருக்கும் ஒரு தேவதை யாக பாபுராமைக் கண்டிருந்தார். இது பாபுராமைப் பற்றிய இரகசியத்தைக் குருதேவருக்கு உணர்த்தியது. ''அவன் புத்தம் புதிய பாத்திரம். அதில் பாலைப் பயமின்றி ஊற்றி வைக்கலாம். கெட்டுப் போகாது'' என்று பாபுராமைப்பற்றிக் குருதேவர் சொல்வது வழக்கம். அவரது அளவற்ற தூய்மையால் மிகவும் மகிழ்ச்சி அடைந்த குருதேவர், பாபுராம் தம் அருகில் தமக்கு உதவியாளனாக எப்போதும் இருக்க வேண்டும் என்று விரும்பினார். பாபுராமைத் தொட்ட மாத்திரத்தில் குரு தேவர் உலகை மறந்து சமாதியில் மூழ்கி விடுவார். பாபு ராமின் தாய் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் மிகுந்த அன்பு கொண்ட பக்தையாவார். அவரிடம் குருதேவர் பாபுராமைத் தமக் குத் துணையாகத் தம்மிடமே விட்டுவிடும்படிக் கேட்டதும் அளவற்ற மகிழ்ச்சியோடு அவர் சம்மதித்தார். ஸ்ரீராமகிருஷ் ணர் சமாதியிலிருக்கும்போது தூய்மையற்றவர்கள் தொட் டால் துடிதுடித்துப் போவார். தூய்மையான ஒரு சிலர் தொட்டால் மட்டுமே அவரால் பொறுத்துக் கொள்ள முடியும். அத்தகைய பெரும் பேறு பெற்றவர் களில் பாபுராமும் ஒருவராக இருந்தார். குருதேவர் சமாதி யில் ஆழ்ந்து உலகை மறந்த நிலையில் நிற்கும்போது அவர்

கீழே விழுந்து கைகால்களை முறித்துக் கொள்வாரோ என்று பல நேரங்களில் பாபுராம் அவரைத் தாங்கிக் கொண்டு நிற்பார். முதல் நாள் பார்த்ததிலிருந்தே குருதேவர் பாபுராமைத் தம் சொந்தமாகவே எண்ணி, அவர் கடவுளைக் காண்பதற்காக மிகுந்த முயற்சிகளை எடுத்துக் கொண்டார். ஒரு முறை பாபுராம் தாம் பக்தியின் உயர்ந்த எல்லையாகிய பாவ நிலையை அடையச் செய்யுமாறு குருதேவரை மிகவும் வற்புறுத்தினர். ஸ்ரீராமகிருஷ்ணர் அன்னையிடம் வேண்டினர். அதற்கு அன்னை காளி, 'அவனுக்கு பாவ நிலை கிடைக்காது. ஆனல் உயர்ந்த அத்வைத நிலையைப் பெறுவான்' என்று அறிவித்ததும் ஸ்ரீராமகிருஷ்ணர் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார்.

ஒரு நாள் காளி கோயிலில் தங்கியிருந்த ஹாஸ்ரா அவனுக்கே உரிய குறுக்குப் புத்திப்படி ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வரும் பாபுராமையும் அவரைப் போன்ற இளைஞர்களையும் இப்படி வெறுமனே ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வந்து விளையாடிவிட்டு நிறையத் தின்றுவிட்டுப் போவதால் பலன் ஏதும் இல்லை என்றும் உருப்படியாக எதையாவது அவரிடமிருந்து கேட்டு வாங்கிக் கொள்ளும்படியும் கூறினன். ஹாஸ்ரா அவர்களைக் கேட்கும்படிக் கூறியது அஷ்டமா சித்திகளையாகும். ஹாஸ்ரா இதைப் 'பாபுராமிடம் கூறுவதைத் தொலைவில் இருந்து கவனித்த ஸ்ரீராமகிருஷ்ணர் அவர் என்ன கூறுகிருர் என்பதைப் புரிந்து கொண்டார். பாபுராமை உடனே அருகில் அழைத்து, ''ஆமாம்! என்னிடம் எதைக் கேட்கப் போகிருய்? என்னிடம் இருப்பதெல்லாம் ஏற்கனவே உன்னுடையதாகி விடவில்லையா? நான் கடவுள் காட்சியென்றும், ஞானமென்றும் என்னென்னவெல்லாம் சம்பாதித்து வைத்திருக்கிறேனே அவை எல்லாம் உங்களுக்காகத்தானே! நீ என் மகன் போன்றவன். என்னுடையதெல்லாம் உன்னுடையதே. எனவே, 'எனக்கு அது வேண்டும், இது வேண்டும்' என்று பிச்சைக்காரன்போல் கேட்காதே. அது நமக்கிடையே உள்ள நெருக்கமான உறவை அழித்துவிடும். அதற்குப் பதிலாக என்னிடம் உனக்கு இருக்கும் உறவை மிகவும் நெருக்கமாக்கி, அதன் மூலம் என்னுடைய சொத்துக்களுக்கான சாவியை என்னிடமிருந்து பெற்றுக் கொள்'' என்ருர். இது போன்று ஆயிரக்கணக்கான வழிகளில் ஒரு தாயைப் போன்று மிகுந்த விழிப்போடு தம்மிடம் வந்த இளைஞர்களைப் பழக்கி, அவர்களிடமுள்ள சுயநலங்களை நீக்கி, தெய்விகத் தன்மையைப் பெறும்படிச் செய்தார் குருதேவர். பாபுராம் பிற்காலத்தில் சுவாமி பிரேமானந்தர் என்ற பெயரோடு துறவியானர்.

ஸ்ரீராமகிருஷ்ணரைத் தேடி வந்து அவரைத் தம் இலட்சியமாக ஏற்றுக்கொண்ட மற்றொரு இளைஞர் நிரஞ்ஜன் எனப்படும் நித்திய நிரஞ்ஜன கோஷ். ஸ்ரீராம கிருஷ்ணரை வந்து அடைந்தபோது இவர் பதினெட்டு வயது இளைஞராக இருந்தார். பயம் என்பதையே சிறிதும் அறியாத இவர் அந்தக் காலத்தில் கல்கத்தாவில் ஆவிகளை யும் சிறு தேவதைகளையும் வரவழைத்துக் குறி சொல் லும் ஒரு கூட்டத்தில், மனிதனுக்கும் ஆவிகளுக்கும் மத்தி யில் நடுவராகத் தம் மீது ஆவிகளை வரவழைத்துக் கொண்டு குறி சொல்பவராக இருந்தார். ஸ்ரீராம கிருஷ்ணரின் தெய்விகச் சக்திகளைப் பற்றிக் கேள்விப் பட்டதும் ஒரு நாள் அவரைக் காணத் தட்சிணேசுவரம் வந் தார். அப்போது குருதேவர் தம் அறையில் வழக்கம்போல் அமர்ந்து எதிரே இருந்த பக்தர்களுடன் பேசிக் கொண் டிருந்தார். மாலை வந்ததும் பக்தர்கள் அனைவரும் கலைந்து சென்றனர். அறையில் தனித்து இருந்த நிரஞ்ஜனிடம் குருதேவர் அவரைப் பற்றிய விவரங்களைக் கேட்டார். நிரஞ்ஜன் தமக்கு முன்பே பழக்கமானவர்போல் மிகவும் சகஜமாக குருதேவர் அவருடன் பேசினார். பிறகுக் கடைசி யாக, ''மகனே! நீ எப்போதும் ஆவிகளைப்பற்றியே நினைத் துக் கொண்டிருக்கிறாய். இப்படியே நினைத்துக் கொண் டிருந்தால் நீயும் ஒரு நாள் ஆவியாகவே மாறிவிடுவாய். கடவுளைப்பற்றி நினை. அப்போது கடவுளாக மாறுவாய். இந்த இரண்டில் உனக்கு எது வேண்டும்?'' என்று கேட் டார். நிரஞ்ஜன், ''எனக்கு இரண்டாவதுதான் வேண்டும்'' என்றார். உடனே ஸ்ரீராமகிருஷ்ணர் நிரஞ்ஜனிடம் அவருக்கு மந்திரவாதிகளோடும் ஆவிகளோடும் இருந்த உறவையெல்லாம் அறவே நீக்கி விடும்படிக் கூறினார். நிரஞ்ஜனும் ஏற்றுக் கொண்டார். இருள் கவியத் துவங்கியதும் ஸ்ரீராமகிருஷ்ணர் வெகு தூரமுள்ள கல்கத்தாவிற்கு நடந்து செல்லாமல் இரவு தம்முடன் தங்கிவிடும்படிக் கூறினார். தம் மாமா தம் வருகைக் குறித்துப் பெரிதும் கவலைப்படுவார் என்றும் மற்றொரு நாள் நிச்சயம் வருவதாகவும் நிரஞ்ஜன் குருதேவரிடம் விடைபெற்றுக் கல்கத்தா புறப்பட்டார்.

இந்தச் சந்திப்பு மிகவும் குறுகியதாகவே இருந்தாலும் நிரஞ்ஜனின் மனத்தில் ஆழப் பதிந்துவிட்டது. அவர் எந்த நேரமும் குருதேவரையும் தட்சிணேசுவரக் கோயிலையும் நினைத்தபடியே இருந்தார். இரண்டு, மூன்று நாட்கள் இப்படிக் கழிந்தன. மறுபடியும் தட்சிணேசுவரம் சென்றார். நிரஞ்

ஜனைக் கண்டதும் குருதேவர் அளவற்ற ஆனந்தம் அடைந்து ஓடி வந்து அவரைக் கட்டி அணைத்துக் கொண்டார். பிறகு நிரஞ்ஜனிடம், ''என்மகனே! நாட்கள் வேகமாக ஓடிக் கொண்டே இருக்கின்றன. நீ எப்போது கடவுளைக் காணப் போகிறாய்? கடவுளைக் காணவில்லை என்றால் இந்த வாழ்க்கை மிக மிக வீணானதாகி விடும். நீ எப்போது உன் மனத்தைக் கடவுளை நோக்கித் திருப்பப் போகிறாய்? ஆ! உனக்காக நான் எவ்வளவு கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறேன், தெரியுமா?'' என்றார். குருதேவரின் செயலையும் பேச்சையும் கேட்டு நிரஞ்ஜனுக்கு மிகுந்த வியப்பு ஏற்பட்டது. 'என்னுடைய ஆன்மிக நலன் குறித்து எவ்வளவு கவலைப்படுகிறார்? இவர் நிச்சயம் விசித்திரமானவரே' என்று நினைத்தார். குரு தேவரின் கேள்விக்கு என்ன பதில் சொல்லுவதென்று அவருக்குத் தெரியவில்லை. ஆனால் குருதேவரின் பேச்சில் இருந்த அளவற்ற ஆற்றலை அவரால் உணர முடிந்தது. அன்று இரவு குருதேவருடன் தங்கினார் அவர்; அடுத்த இரண்டு நாட்களும் குருதேவருடனே தங்கினார். அவருடைய உறவினர்கள் அவரைப்பற்றி மிகுந்த கவலை கொண்டார்கள். மூன்றாவது நாள் அவர் வீடு திரும்பியபோது அவர்கள் அவரை மிகவும் கண்டித்து வீட்டைவிட்டு எங்கும் செல்லாதபடிக் கண்காணித்தார்கள். நிரஞ்ஜன் தட்சிணேசுவரம் போக முடியாததால் மிகுந்த துன்பப் பட்டார். அதன் பிறகு அவரது மாமா கோபம் தணிந்தவ ராய் அவர் தட்சிணேசுவரத்திற்கு விரும்பியபடி போய் வர அனுமதியளித்தார்.

சில நாட்கள் கழிந்தன. நிரஞ்ஜன் தமக்கும் ஸ்ரீராம கிருஷ்ணருக்கும் இடையே உள்ள உறவைக் கண்டு கொண் டார். குருதேவரும் அவரைத் தம்முடைய மிக நெருங்கிய அந்தரங்க பக்தர் குழுவில் ஒருவராக ஏற்றுக் கொண்டார். கவனத்தைக் கவரும் எளிமை, உலக ஆசைகள் அனைத்தையும் உதைத்து வீசியெறிந்து அவைகளுக்குச் சிறிதும் ஆட்படாமல் இருக்கும் நிலை, மாசுமறுவற்ற தூய்மை போன்ற குணங்களால் நிரஞ்ஜன் ஈசுவரகோடிகளில் ஒருவர் என்பதை ஸ்ரீராம கிருஷ்ணர் கண்டு கொண்டார்; அவரிடம் மிகுந்த அன்பைச் செலுத்தினார். அவருடைய உறவினர்கள் திருமணம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்தியபோது தம்மை அவர்கள் நாசம் செய்ய விரும்புவதாகக் கூறி அடியோடு மறுத்து விட்டார். இதைக் கேட்டு மிகவும் மகிழ்ந்த குருதேவர் பலருக்குமுன் நிரஞ்ஜனைப் புகழ்ந்து பக்தர்களிடம், ''யார் உலகப் பற்று

இல்லாமல் இருக்கிறார்களோ அவர்கள் பேறு பெற்றவர்கள். நிரஞ்ஜன் ஒளிப் பந்து ஒன்றின்மேல் உட்கார்ந்திருப்பதை நான் காண்கிறேன். இந்த உலகத்தில் அவன் எதைப்பற்றியும் கவலைப்படுவதில்லை. இந்த உலகத்தைவிட்டுப் போக வேண்டிய அழைப்பு வந்ததும், ஒரு நிமிடம்கூடத் தயங்காமல் மிகுந்த மகிழ்ச்சியோடு இந்த உலகத்தை விட்டுப் போய்விடுவான்'' என்றார்.

நிரஞ்ஜன் பயங்கரமான கோபம் கொள்ளும் மன இயல்பு உடையவர். தவறான காரியங்களைத் தடுக்க மிக மிகப் பலாத்காரமான நடவடிக்கைகளில் அடிக்கடி இறங்கி விடுவார். ஒரு நாள் கல்கத்தாவிலிருந்து தட்சிணேசுவரத்துக்குப் படகில் வந்து கொண்டிருந்தார். படகில் இருந்த சிலர் ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றி அவதூறு பேச ஆரம்பித்தார்கள். நிரஞ்ஜன் அதைக் கடுமையாக எதிர்த்தார். ஆனால் அவர்கள் அதற்கெல்லாம் கவலைப்படவில்லை. மேலும் இழிவாக ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றிப் பேச ஆரம்பித்தார்கள். இதனால் பெரும் கோபம் கொண்ட நிரஞ்ஜன் அவர்களுக்குச் சரியான பாடம் கற்பிக்க விரும்பினார். அப்போது படகு நடு ஆற்றில் போய்க் கொண்டிருந்தது. நல்ல உயரமும் அதற்கேற்ற பருமனும் பலம் பொருந்திய உடற்கட்டும் உடைய அவர் படகின் குறுக்காகக் கால்களைப் பரப்பி வைத்துக்கொண்டு அடக்க முடியாத பெரும் கோபத்தோடு அந்தச் சின்னஞ் சிறிய நாட்டுப் படகை அதில் உட்கார்ந்திருக்கும் அனைவரோடும் கங்கையில் மூழ்கடித்துவிடப் போவதாகக் கூறிக் கால்களால் பலமாக இடது புறமும் வலது புறமும் அசைக்கத் துவங்கினார். படகு கவிழ்ந்து விடுவதுபோல் பயங்கரமாக ஆடியது. இதைக் கண்ட யாவரும் மிகுந்த அச்சம் கொண்டு அவரிடம் தங்கள் செயலுக்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர். நிரஞ்ஜனும் அமைதி அடைந்து படகைக் கவிழ்க்காமல் விட்டுவிட்டார். ஸ்ரீராமகிருஷ்ணர் இந்தச் சம்பவம் பற்றிக் கேள்விப்பட்டதும் நிரஞ்ஜனைக் கண்டித்தார். ''கோபம் மிகப்பெரிய பாவம். நீ ஏன் அந்தப் பாவத்திற்கு ஆளாகிறாய்? நல்லவர்களின் கோபம் தண்ணீரில் மேல் கிழித்த கோடு போன்றது. அது உடனே மறைந்துவிடும். முட்டாள்கள் எதைப்பற்றியும் எப்படி வேண்டுமானாலும் பேசுவார்கள். கேட்கக் கூடாதவை என்று அவைகளை ஒதுக்கி விட வேண்டும். அதை விட்டுவிட்டு அவர்களோடு சண்டையிடுவது என்றால் உன் வாழ்நாள் முழுவதும் சண்டை போட்டுக்

கொண்டிருக்க வேண்டியதுதான். தலைகால் தெரியாத உன் கோபத்தால் எவ்வளவு பெரிய கெடுதலை நீ செய்ய இருந்தாய் என்பதை நினைத்துப் பார்!'' என்றார்.

தம் தாயாரைக் காப்பாற்றும் பொருட்டு கம்பெனி ஒன்றில் வேலையில் சேர வேண்டிய கட்டாயம் நிரஞ்ஜனுக்கு ஏற்பட்டது. அதைக் கேட்டதும், ''அவன் இறந்து போய் விட்டான் என்று கேள்விப் பட்டிருந்தால்கூட நான் இவ்வளவு வருந்த மாட்டேன்'' என்றார் குருதேவர். சில நாட்கள் கழித்து நிரஞ்ஜனைக் கண்டதும் தாயைக் காப்பாற்ற வேறு வழி ஏதும் இல்லாததாலேயே அவர் அந்த வேலையை ஏற்றுக் கொண்டதை அறிந்த ஸ்ரீராமகிருஷ்ணர் அப்பாடா என்று பெருமூச்சு விட்டபடி, ''அதுவா விஷயம், அப்படியென்றால் சரி. அது உன் மனத்தை நாசப்படுத்தாது. ஆனால் உன் சுகத்திற்காக அந்த வேலையை நீ ஏற்றுக் கொண்டிருந்தால் என்னால் உன்னைத் தொடக்கூட முடியாது, நீ அவ்வளவு கேவலமாகப் போய்விடுவாய். இது என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாதது. என் நிரஞ்ஜன் உண்மையிலேயே நிரஞ்ஜன்* என்பது எனக்குத் தெரியாதா?'' என்றார். நிரஞ்ஜன் வேலையில் சேர்ந்ததைப்பற்றிக் குருதேவர் இப்படிப் பேசியதைக் கேட்ட அங்கிருந்த பக்தர் ஒருவர், ''ஐயா! வேலையில் சேருவதுபற்றி இவ்வளவு கேவலமாகப் பேசிக் கண்டிக்கிறீர்களே. வேலையில் சேர்ந்து பணம் சம்பாதிக்கவில்லை என்றால் குடும்பத்தை எப்படிக் காப்பாற்ற முடியும்?'' என்று கேட்டார். இதற்குக் குருதேவர், ''யார் அப்படிப் பணம் சம்பாதித்துக் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டுமோ அவர்கள் சம்பாதிக்கட்டும். வேலையில் சேர வேண்டாம் என்று எல்லோரையும் நான் தடுக்கவில்லையே. நிரஞ்ஜனைப் போன்றவர்கள் தனியான கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். அதனால்தான் அவர்களுக்கு அப்படிச் சொல்லுகிறேன்'' என்றார். நிரஞ்ஜனும் அந்த வேலையில் அதிக நாள் இருக்கவில்லை. வேலையை விட்டு விட்டு முழுக்க முழுக்கக் குருதேவரின் சேவைக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டார். இவர் பிற்காலத்தில் சுவாமி நிரஞ்ஜனானந்தர் என்ற பெயரோடு துறவியாக விளங்கினார்.

---

*நிரஞ்ஜன் என்ற சொல்லுக்கு மாசு மறுவற்றவன் என்பது பொருள்.

# 39. யோகீந்திரநாதர்

மிகச் சிறந்த தெய்விக இயல்புகளை உடைய யோகீந்திரநாதர் என்னும் இளைஞர் 1882-ஆம் ஆண்டு குரு தேவரை வந்தடைந்தார். இவர் பிரபுக்களின் வழியில் வந்த சிறந்த வைதிகப் பரம்பரையைச் சேர்ந்த பிராமணக் குடும்பத்தில் பிறந்தவர். இவருடைய வீடு தட்சிணேசு வரத்திலேயே இருந்தது. இந்தக் குடும்பத் திற்கு வாழ்க்கையை நடத்திச் செல்வதற்கு ஏற்பச் சிறிதளவு சொத்தே இருந்தது. அவர்களின் எதிர்கால நம்பிக்கை எல்லாம் அறிவு மிகுந்த இந்த இளைஞன் யோகீந்திரனையே சார்ந்திருந்தது. யோகின் இளம் வயதி லிருந்தே மிகுந்த பக்தி உடையவராக இருந்தார். ஐந்து வயதுக் குழந்தையாக இருக்கும் பொழுதே ஒருவித விசித்திரமான உணர்வில் அவர் அடிக்கடி மூழ்கிவிடுவார். விளை யாடிக் கொண்டே இருப்பார், இடையில் திடீரென்று விளையாட்டில் இருந்த விருப்பமெல்லாம் போய்விடும். விளையாடுவதை விட்டுத் தனியான இடத்துக்குப் போய் விடுவார். வானத்தைப் பார்த்தபடியே, ‘நான் யார்? நிச்சயமாக நான் இந்த உலகத்தைச் சேர்ந்தவன் அல்ல. இவர்கள் எல்லாம் என் விளையாட்டுத் தோழர்களோ, நண்பர்களோ அல்ல. நான் அதோ அந்த வானத்தில் தெரியும் நட்சத்திரங்களில் ஏதாவது ஒன்றிலிருந்து வந் திருக்க வேண்டும். எந்த நட்சத்திரத்திலிருந்து வந்திருப் பேன்? நான் ,வேறு உலகத்தவனாக இருந்தால் இந்த உலகத்தில் ஏன் இருக்கிறேன்? இதெல்லாம் கனவா?’ என் றெல்லாம் நினைப்பார். இதுபோன்ற எண்ணங்கள் அடிக் கடித் தோன்றி அவர் மனத்தை அலைக்கழிக்கும். இந்த உலகத்தை விட்டுத் தமக்குச் சொந்தமான பிரதேசத்திற் குச் செல்ல வேண்டுமென்ற விருப்பம் பற்றிக் கொள்ளும். வளர வளர இத்தகைய குழந்தைத்தனமான கற்பனைகள் அவர் மனத்தைவிட்டு மறைந்தன. குறிப்பாகக் கடவுளைப் பூஜை செய்வதில் அவருக்கு மிகுந்த ஆர்வம் இருந்தது. தினந்தோறும் மூன்று அல்லது நான்கு மணி நேரம் ஆழ்ந்து தியானம் செய்வார். அவர் தம் பாடப் புத்தகங் களைவிடப் பக்தி நூல்களையே மிகவும் விரும்பினார். ஸ்ரீராம

கிருஷ்ணரைச் சந்திக்கும்போது அவர் உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தார்.

அவருடைய வீடு தட்சிணேசுவரத்திலேயே இருந்த தால் அடிக்கடி ராணி ராசமணியின் தட்சிணேசுவரக் கோயிலுக்குச் செல்வார். அப்படிச் சென்றவர் ஒரு நாள் கோயிலின் மூலையில் இருந்த ஓர் அறையின் முன்னும் அறைக் குள்ளும் ஆடவர்கள் பெரும் கூட்டமாகக் கூடியிருந்து உள்ளே யாரோ பேசுவதை மிகக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருப்பதைக் கண்டார். இந்தக் கோயிலில் பூசாரி யாக இருந்த ஒரு 'பைத்தியக்காரப் பிராமணன்' அந்த அறைக்குள் தங்கி இருப்பதாக அவர் கேள்விப் பட்டிருந்தார். எனவே அறையில் என்ன நடக்கிறது என்பதைக் காண மிகுந்த ஆர்வம் கொண்டவராய் அதனுள் நுழைந்ததும், ''பைத்தியக்காரப் பிராமணன்'' என்று அந்த ஊர் மக்கள் யாரைக் கூப்பிடுகிறார்களோ அவர்தான் பேசுகிற மனிதர் என்பதை அறிந்து கொண்டார். அவர் மிக எளிமையான கிராமிய மொழியில் பக்தியைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். யோகின் அந்த வார்த்தை களைக் கேட்டதும் மந்திரத்தால் கட்டுப்பட்டவர்போல் ஆனார். தம்மை மறந்தவராய் அங்கேயே நின்றுவிட்டார். கூட்டம் முடிந்ததும், 'இந்த மனிதர் கடவுளை நேரில் கண்ட மகானாக இருக்க வேண்டும். ஊர் மக்கள் இதைப் புரிந்து கொள்ளாமல் இவரைப் பைத்தியம் என்று சொல்லி கேலி செய்கிறார்கள். அவருடைய அளவு கடந்த பக்தியையும், பாவங்களையும் தெய்விகப் பேச்சையும் சாதா ரண மனிதர்கள் வேறு எப்படி எடுத்துக் கொள்வார்கள்? இருந்தாலும் இன்னும் சில நாட்கள் மேலும் நெருக்கமாக இவரைக் கவனித்து வரலாம்' என்று நினைத்தபடியே வீடு திரும்பினார்.

மறுநாள் நேராக ஸ்ரீராமகிருஷ்ணரின் அறைக்குச் சென்றார். ஸ்ரீராமகிருஷ்ணர் யோகினின் குடும்பத்தைப் பற்றி அறிந்ததும் மகிழ்ச்சி அடைந்தவராய், ''ஓ, எனக்கு நன்கு தெரிந்த குடும்பத்தைச் சேர்ந்தவனாக நீ இருக்கிறாய். முன்பெல்லாம் பாகவதமும் மற்றும் பல சாஸ்திரங்களும் கேட்க அடிக்கடி உன் வீட்டிற்கு வருவேன்'' என்று கூறித் தம்மிடம் அன்பு காட்டிய யோகினின் குடும்பத்துப் பெரிய வர்களின் சில பெயர்களைச் சொன்னார். பிறகு, ''நாம் இரண்டு பேரும் இப்போது சந்தித்தது மிகவும் நல்லது. நீ அடிக்கடி இங்கே வா. நீ மிக நல்ல குடும்பத்தில்

பிறந்திருக்கிறாய். உன்னிடம் ஆழ்ந்த தெய்விகம் இருப்ப தற்கான பல அடையாளங்கள் உள்ளன. நீ விரைவாகச் சிறந்த தெய்விக நிலையை அடைவாய்'' என்றார்.

யோகின் ஸ்ரீராமகிருஷ்ணர் தம்மிடம் காட்டிய அன்பால் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். எனவே நாள் தோறும் அவரிடம் சென்றார். அந்த ஊர் மக்களைப் போலவே யோகினின் பெற்றோர்களும் ஸ்ரீராமகிருஷ்ண ரைப் பைத்தியக்காரர் என்று பேசி வந்ததால் யோகின் தாம் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் சென்று வருவதைத் தெரி விக்கவில்லை. அவரது தந்தை தினமும் செய்யும் பூஜைக்கு காளிகோயில் பூந்தோட்டத்திலிருந்து நல்ல மலர்களைப் பறித்துவரவே கோயிலுக்குச் சென்று வருவதாகக் கூறினார். ஸ்ரீராமகிருஷ்ணரிடம் யோகின் கொண்ட நெருக்கமான பழக்கத்தால் அவருடைய மன நிலையில் பெரிய மாற்றம் ஏற்பட்டது. கடவுளை அடைவது ஒன்றே தம் வாழ்வின் இலட்சியம் என்பதை உணர்ந்து கொண்டார். அதற்குக் காமம், பொருளாசை இரண்டுமே தடைகள் என்பதை அவர் ஸ்ரீராமகிருஷ்ண ரிடமிருந்து அறிந்திருந்தார். முதலில் இறைவனையும் பணத் தையும் ஒரு சேரத் தேடலாம் என எண்ணிய அவர் அம் முயற்சியில் தோல்வி அடைந்ததும் அதனைக் கைவிட்டார். திருமணமே செய்யக்கூடாது என்று அவர் முடிவு செய்தார். வீட்டிற்கு வெகு தொலைவில் ஏதாவது வேலை தேடிக் கொண்டு குடும்பத்திற்கு வேண்டிய பணத்தை அனுப்புவது என்றும் அந்த வேலையைப் பார்த்தபடி குடும்பத்தைவிட்டுத் தனியாகவே வாழ்ந்து ஆன்மிகச் சாதனைகளில் ஈடுபடுவது என்றும் முடிவு செய்தார். தம் தந்தையிடம் மாமா இருக்கும் கான்பூர் சென்று ஏதாவது வேலை தேடப் போவதாகக் கூறினார். தந்தையும் மிகுந்த மனநிறை வோடு அதற்குச் சம்மதித்து அனுப்பி வைத்தார்.

கான்பூரில் யோகினுக்கு வேலை கிடைக்கவில்லை. தம் மாமா வீட்டில் தங்கியபடியே நேரம் முழுவதையும் தியானத்திலும் பிரார்த்தனையிலும் கழித்துவந்தார். இது அவ ரது மாமாவுக்குப் பயத்தை உண்டாக்கியது. உடனே அவர் யோகினின் நிலையை அவருடைய தந்தைக்கு எழுதி உடனடி யாக யோகினுக்குத் திருமண ஏற்பாட்டைச் செய்யச் சொன்னார். முன்பு ஒரு முறை திருமண ஏற்பாட்டிற்கு முனைந்தபோது யோகின் வீட்டைவிட்டே ஓடிவிட்டதை அறிந்திருந்த பெற்றோர், இப்போது அவருக்குத் தெரியாமல்

திருமண ஏற்பாடுகள் அனைத்தையும் முடித்துவிட்டுப் பிறகு யோகினின் தாய் உடல்நிலை சரியில்லாமல் இருப்பதாக எழுதி, யோகினை வீட்டிற்கு உடனே வரச் செய்தார்கள். தாயின் உடல் நிலையை நினைத்து மிகுந்த கவலையோடு வீடு வந்த யோகின் தம் தாய் உள்பட எல்லோரும் தம் திருமணம் குறித்து மிகுந்த மகிழ்ச்சியோடு இருப்பதைக் கண்டார். செய்தி அறிந்ததும் மிகுந்த கோபம் கொண்டு பிடிவாதமாக எதிர்த்தார். யார் எவ்வளவு கூறியும் உடன்படவே இல்லை. இதனால் யோகினின் தந்தை மிகுந்த சங்கடத்திற்கு ஆளானார். அவர் பெண்ணின் தந்தையிடம் வாக்குக் கொடுத்துவிட்டார். இறுதியாக யோகினின் தாய் அவரிடம் வந்தார். திருமணம் நின்றுவிட்டால் அவர் தந்தையின் கௌரவம் பாழாகப் போய், குடும்பத்திற்கே பெரிய அவமானம் வரும் என்று கண்ணீர்விட்டு அழுதார். அவருக்கு விருப்பமில்லையென்றாலும் தமக்காகவாவது திருமணம் செய்து கொள்ளச் சொன்னார். இளகிய மனம்படைத்த யோகின் தாயாரின் கண்ணீரைக் கண்டு மனம் உருகித் திருமணத்திற்கு இசைந்தார்; திருமணமும் முடிந்தது.

தாயின் விருப்பத்திற்காகத் திருமணம் நடந்தது என்றாலும் அதன் விளைவு என்ன என்பதை அவர் உணர்ந்து கொண்டார். திருமணம் அவர் ஆன்மிக வாழ்வை முழுவதாகச் சீர்குலைத்துவிட்டது. அதோடு அவருக்கும் ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் இடையே ஒரு பெரிய தடைச் சுவரை எழுப்பிவிட்டது. மனம் உடைந்தவராய் அவர் தனக்குள்ளே, 'என்னைவிட மோசமானவன் யார் இருக்க முடியும்? ஸ்ரீராமகிருஷ்ணருக்குக் கொடுத்த வாக்கை நான் காப்பாற்றாமல் அல்லவா போய்விட்டேன். இப்போது அவர் முன்புபோல் என்னை விரும்புவாரா? அவரோ துறவின் வடிவம். நானோ இனி என் வாழ்நாள் முழுவதும் புலன் இன்பங்களில் கழித்தாக வேண்டியவன். இனிமேல் நான் அவரிடம் போவதில்தான் பயன் என்ன? அவரோ தெய்வத்தைக் கண்டு அடையும்படி என் வாழ்க்கையை உருவாக்கினார். நான் அவரிடம் திருமணமே செய்து கொள்ளாமல் சந்நியாச வாழ்க்கை நடத்தப் போவதாகக் கூறினேன். அதைக் கேட்டு மகிழ்ந்து அவர் எவ்வளவு என்னைப் புகழ்ந்தார்? இப்போது அவர் முன்னால் போய் எப்படி நிற்பேன்?' என்றெல்லாம் நினைத்தார்;

நினைத்து நினைத்து மனம் புழுங்கினர். இனி ஸ்ரீராம கிருஷ்ணரைப் பார்க்கப் போகவே கூடாது என்று முடிவு செய்து தன் கவனம் முழுவதையும் குடும்ப விஷயங்களில் செலுத்த ஆரம்பித்தார்.

குருதேவர் யோகினின் திருமணத்தைப் பற்றித் தெரிந்து கொண்டார். அவரைப் பார்க்கப் பெரிதும் ஆவல் கொண்டார். பலமுறை பலரிடம் சொல்லி அனுப்பினர். யோகினே வரவில்லை. திருமணத்திற்குப் பிறகு அவர் முற்றிலும் மாறிவிட்டதாக எல்லோரும் கூறினர்கள். ஒருநாள் குருதேவர் யோகினின் நண்பன் ஒருவனிடம், ''இந்த யோகின் என்ன மனிதனுக இருக்கிறுன்? அவன் கான்பூருக்குப் போவதற்கு முன்னல் ஏதோ பொருள் வாங்கக் கோயிலிலிருந்து பணம் வாங்கிக் கொண்டுச் சென்றுன். அந்தப் பணத்துக்குக் கணக்கும் அனுப்பவில்லை. எத்தனை முறை சொல்லி அனுப்பியும் அவன் நேரில் வரவில்லை. இதைப் போய் அவனிடம் கொஞ்சம் சொல்'' என்றுர். குருதேவர் கூறியதை நண்பன் மூலம் யோகின் அறிந்தார். அவர் கான்பூர் போவதற்குமுன் கோயிலுக்கு ஏதோ சில பொருள் வாங்கிவரக் கோயில் அலுவலகத்தில் கொஞ்சம் பணம். வாங்கிச் சென்றுர். பொருளை வாங்கி அனுப்பியவர் கான்பூர் செல்லும் அவசரத்தில் மீதமான சில்லறையைக் கோயிலில் கொண்டுவந்து கொடுக்காமலே போய்விட்டார் ஊருக்குத் திரும்பியதும் அதைத் தானே நேரில் கொண்டு வந்து கொடுக்க நினைத்தார். அதற்குள் திருமணமாகி விடவே யார் மூலமாகவாவது கொடுத்தனுப்ப நினைத்தார். இப்படியே காலம் கடந்துவிட்டது. ஸ்ரீராமகிருஷ்ணர் நண்பனிடம் கூறிய வார்த்தைகள் அவர் மனத்தை வாட்டின. ''என்னிடம் அவர் கொண்ட மிக உயர்ந்த நம்பிக்கைகள் எல்லாம் பொய்யாகி விட்டிருக்கலாம், ஆனுல் அவர் என்னை ஏமாற்றுக்காரன் என்று நினைக்கும் அளவிற்குத் தாழ்ந்துவிடவில்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் என்னைப் பற்றி அவ்வளவு கேவலமாகவா நினைத்துவிட்டார். சரிதான். நான் இன்றே போய் அவரிடம் பணத்தைக் கொடுத்துவிட்டு வருகிறேன்'' என்று தனக்குள் சொல்லிக்கொண்டார்.

அன்று பிற்பகலிலேயே காளி கோயிலுக்குச் சென்றுர். இதற்குமுன் பலவகையான தெய்விக நினைவுகளோடும் மிகுந்த மகிழ்ச்சியோடும் சென்ற அந்த இடத்

தில் எல்லா நம்பிக்கைகளையும் ஆசைகளையும் இழந்து செல்லும் இன்றைய நிலையை நினைத்தவராய் குருதேவரின் அறைக்குக் கிழக்கே இருந்த வராந்தாவிற்கு வந்தார். தொங் கும் ஆடையை மடியில் எடுத்துச் செருகியபடி குருதேவர் அமர்ந்திருப்பதைக் கண்டார். யோகினைப் பார்த்தவுடனே அவர் மிகுந்த மகிழ்ச்சியோடு ஒரு சின்னஞ்சிறு பையன்போல் அந்த ஆடைகளைக் கையில் சுற்றிக் கொண்டு அறைக்கு வெளியே ஓடிவந்தார். அவருடைய முகம் தெய்விகப் பரவசத்தில் மூழ்கி ஒளி வீசியது. வேகமாக ஓடிவந்தவர் யோகினின் அருகில் வந்ததும் அவர் கைகளைப் பிடித்துக் கொண்டு, ''உனக்குக் கல்யாணமாகிவிட்டால் என்ன? ஏன் நான் திருமணம் செய்து கொள்ளவில்லையா? அதில் பயப்படுவதற்கு என்ன இருக்கிறது? உன் உள்ளம் மட்டும் தூய்மையாக இருந்தால் ஆயிரம் திருமணங்கள் கூட உன்னை ஒன்றும் செய்துவிட முடியாது. நீ சந்நியாசி யாகாமல் குடும்ப வாழ்க்கையை நடத்திக் கொண்டே பக்தனாக வாழவிரும்பினால் உன் மனைவியை இங்கே அழைத்துவா. அவள் மனத்தை உன் பக்தி வாழ்க்கைக்கு உதவும் வகையில் திருப்பிவிடுகிறேன். அப்படியில்லாமல் குடும்ப வாழ்வைத் துறந்து வாழ விரும்பினால் உன் உலகப் பற்றை விலக்கி விடுகிறேன்'' என்றார். அவர் சொற்கள் நெருப்புக் கனலாக வெளி வந்தன.

யோகின் இதைக் கேட்டு வாயடைத்துப் போனார். 'காதில் விழும் அந்த வார்த்தைகளை நம்பவே முடிய வில்லையே! இது நடக்கக்கூடிய காரியமா!' நம்பிக்கை இழந்திருந்த அவரது மனம் ஆழ்ந்த துயரத்திலிருந்து அளவில்லாத இன்பத்திற்குப் பறந்து சென்றது. என்ன,நான் இங்கு வரவேண்டுமென்பதற்காகவே என்னைக் குற்றம் சாட்டி னாரா? இவ்வளவு நாட்களாக அழுத்திக் கொண்டிருந்த பெரிய பாரம் அவர் மனத்தை விட்டு நீங்கியது. குரு தேவர் பணத்தைப் பற்றி ஒரு வார்த்தையும் பேசவில்லை. யோகின் அதைப் பற்றிப் பேசத் துவங்கியதும், 'அதை அந்த ஓட்டைப் பெட்டியில் போடு' என்று அறையில் இருந்த ஒரு இரும்பு டப்பாவைக் காண்பித்தார்.

அது முதல் யோகின் குருதேவரிடம் தினமும் வர ஆரம் பித்தார்.அவருடைய அன்பான வழிகாட்டுதலின் கீழ் கடவுளைக் காணும் சாதனையில் இறங்கினார். குடும்பத்தை மறந்து விட்டார். புதிய வாழ்க்கையில் உற்சாகமும், அளவற்ற

ஆனந்தமும் பெற்ருர். அவருடைய இந்த நிலையைக் கண்டு பெற்ருேர்கள் முணுமுணுத்துப் பேசத் துவங்கினுர்கள். ஒருநாள் அவருடைய தாய், ''சம்பா தித்துக் குடும்பம் நடத்த வழியில்லாதவன் ஏன் திருமணம் செய்துகொண்டாய்?'' என்று கேட்டார். இதைக் கேட்ட யோகின், ''நான் திருமணம் செய்து கொள்ள விருப்பம் இல்லை என்றுதான் முன்பே சொன் னேன். நீ கண்ணீர்விட்டு அழுததைப் பொறுக்க முடியா மல் உனக்காகத் தானே திருமணம் செய்து கொண்டேன்'' என்ருர். இதைக் கேட்ட அவருடைய தாய் ஆச்சரிய மடைந்தவராய், ''என்ன பேச்சுப் பேசுகிருய்? உனக்கு ஆசையில்லை என்ருல் திருமணம் செய்து கொள்வாயா?'' என்ருர். இதைக் கேட்டு யோகின் திகைத்து நின்று விட்டார். 'கடவுளே என் தாயின் கண்ணீருக்காக மட்டுமே நான் இந்தத் திருமணத்திற்கு இணங்கினேன். ஆனுல் அவர் இப்போது என்ன பேச்சுப் பேசுகிருர்? சே, என்ன கேவலமான உலகம்! நான் சந்தித்தவர்களில் சொல்லும் செயலும் ஒன்ருக இருக்கும் ஒரே ஒருவர் ஸ்ரீராமகிருஷ்ணர் தான்' என்று நினைத்தார். அன்றையிலிருந்து இந்த உலகத்தின் மீது அவருக்கு அளவற்ற வெறுப்பு ஏற்பட்டு விட்டது. பகல் முழுவதும் சில நேரங்களில் இரவிலும்கூட, குருதேவரோடு தங்கி ஆன்மிகச் சாதனையில் ஈடுபட்டார்.

குருதேவர் விரைவில் யோகினிடமிருக்கும் பலவீன மான மிக மிக மென்மையான மனத்தை அறிந்துகொண்டு அதைப்பற்றி எச்சரிக்கை செய்தார். ஒரு நாள் குருதேவர் வாணலி ஒன்று வாங்கிவரும்படி யோகினைக் கடைத் தெருவிற்கு அனுப்பினுர். யோகின் கடைக்காரனின் புறத் தோற்றத்தைப் பார்த்து அவன் பெரிய பக்தன் என எண்ணி நல்ல வாணலியாகக் கொடுக்கும்படி அவனையே கேட்டார். கடைக்காரன் கொடுத்ததைக் கொண்டு வந்து பார்த்தால் அது ஓட்டையாக இருந்தது. யோகின் மூலம் நடந்ததை அறிந்ததும் குருதேவர் கோபம் கொண்டு, ''ஒரு பக்தன் எந்தக் காரணத்துக்காகவும் முட்டாளாக இருக்கக் கூடாது. கடைக்காரன் பொருளை விற்கும்போது கடவுளை நினைத்துக் கொண்டிருக்க மாட்டான். நீயே பலவற்றை நன்ருகப் பார்த் தல்லவா வாங்கி வரவேண்டும்! இனிமேல் இதுபோல் ஏமாந்து போகாதே. நீ ஒரு பொருளை வாங்க வேண்டுமென்ருல் முதலில் பல கடைகளுக்குப் போய் அதன் உண்மையான விலையைக் கண்டறிய வேண்டும். வாங்கு வதற்கு முன் அந்தப் பொருளை நன்ருகச் சோதித்துப்

பார்க்க வேண்டும். அது மட்டுமல்ல, சில கடைகளில் பொருளை வாங்கினுல் கொசுறு கொடுப்பார்கள். அதை மறக்காமல் கேட்டு வாங்க வேண்டும்'' என்ருர். சில விநாடிகளுக்கு முன் உலகை மறந்து சமாதியில் மூழ்கியிருந்த ஸ்ரீராமகிருஷ்ணர் இப்போது இப்படிப் பேசுவது ஆச்சரியமாக இருக்கலாம். ஆனுல் இப்படி ஆச்சரியப் படும்படியான குணங்கள் நிரம்பியவர்தான்ஸ்ரீராமகிருஷ்ணர்.

இளகிய மனம் படைத்த யோகின் சிறு உயிர்களைக் கொல்வதைக்கூட விரும்ப மாட்டார். ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணர் தம் துணியின் நடுவே இருந்த கரப்பான் பூச்சியை அறைக்கு வெளியே கொண்டு போய்க் கொன்று விட்டு வரும்படிச் சொன்ஞர். யோகினே அதைக் கொல்ல மனமில்லாமல் உயிரோடு விட்டுவிட்டு வந்தார். இதையறிந்ததும் குருதேவர், ''நான் அதைக் கொல்லச் சொன்னேன். என் பேச்சை மீறி உன் விருப்பம்போல் விட்டுவிட்டு வந்தாய். இதுபோல் இனிச் செய்யாதே. நான் சொன்னபடியே எதையும் செய்யாவிட்டால், முக்கியமான பல காரியங்களுக்காகப் பின்னுல் நீ வருத்தப்பட நேரிடும்'' என்று கடிந்துகொண்டார்.

மற்ருெரு நாள் யோகின் கல்கத்தாவிலிருந்து தட்சிணேசுவரம் வந்து கொண்டிருந்தார். படகிலிருந்த பலர் ஸ்ரீராமகிருஷ்ணரைக் காண யோகின் போவதை அறிந்ததும் குருதேவரைப் பற்றிப் பலவாறு இழிவாகப் பேசினுர்கள். இதைக் கேட்டு யோகின் மிகவும் வருந்திஞர். பிறகு அவர்கள் அறியாமையின் காரணமாக இப்படிப் பேசுகிருர்கள் என்று நினைத்துப் பேசாமல் இருந்துவிட்டார். குருதேவரைக் கண்டதும், படகில் நடந்ததைச் சொன்னுல் அவர் சிரித்து மகிழ்வார் என்று யோகின் அந்த நிகழ்ச்சியைப் பற்றிச் சொன்ஞர். ஆனுல் குருதேவருக்கு அளவற்ற கோபம் வந்துவிட்டது. ''என்னைத் தூற்றியிருக்கிருர்கள். நீ பேசாமல் உட்கார்ந்திருந்தாய்! இதைப் பற்றிச் சாஸ்திரங்களில் கூறப்பட்டிருப்பது என்னவென்று உன்க்குத் தெரியுமா? தன் குருவை யாராவது கேவலமாகப் பேசினுல் சீடன் அவனைக் கொன்றுவிட வேண்டும்; அல்லது அந்த இடத்தை விட்டுப் போய்விட வேண்டும் என்று கூறியிருக்கிறது. நீ இரண்டையும் செய்யாமல் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தாயா?'' என்று கோபத்துடன் கேட்டார். குருதேவர் யோகினிடம் இப்படிச் சொல்லியதன் காரணம் அவரிடம் சிறிது உறுதியையும் உள்திறனையும் உண்டாக்குவதற்காகத்தான்.

இதுபோன்ற நிகழ்ச்சியில் மற்ருெரு சீடரான நிரஞ்

ஜனுக்குக் குருதேவர் இத்ற்கு நேர் எதிரான அறிவுரை கூறியதை முன்பு கண்டோம். இதன் காரணம் ஒவ்வொரு சீடர்களுக்கேற்ற பயிற்சி தருவதில் குருதேவர் வல்லவராக இருந்தார்.

குருதேவர் தம் சீடர்களை முதலில் தம்மை நன்ருகச் சோதனை செய்த பிறகு நம்பும்படிக் கூறுவதை முன்பே கண்டோம். 'குரு ஒருவர், தாம் உபதேசிப்பதை முதலில் தாமே கடைப்பிடிக்கிருரா' என்பதைப் பார்க்க வேண்டும்' என்று 'குருதேவர், அடிக்கடி சொல்வது வழக்கம். ஒரு நாள் இரவு யோகின் குருதேவரோடு தங்கியிருந்தார். இருவரும் படுத்து உறங்கினர். நடு இரவில் யோகின் கண் விழித்தார். அறையில் குருதேவர் இல்லை. கதவுகள் திறந்து இருந்தன. குருதேவர் காற்றுக்காக வெளியில் உலவிக் கொண்டிருப்பார் என்று நினைத்து யோகின் வெளியே வந்து பார்த்தார். அங்கும் அவர் இல்லை. திடீரென்று யோகின் மனத்தில் ஓர் எண்ணம் எழுந்தது. ஒரு வேளை நடு இரவில் யாருக்கும் தெரியாமல் எதிரே நகபத்தில் இருக்கும் மனைவியிடம் சென்றிருப்பாரோ என்று நினைத்தார். அவ்வளவுதான்; அவர் மனத்தில் பெரிய நடுக்கம் ஏற்பட்டது. 'அவர் போயிருப்பாரா? நிச்சயம் போயிருக்க மாட்டார்.' என்று நினைத்தார். என்ருலும் அவரது சந்தேகம் தீரவில்லை. எனவே நகபத்தின் வாசற் படியைப் பார்த்தபடி மறைவாக ஓர் ஓரமாக நின்றிருந் தார். திடீரென்று காலடி ஓசை கேட்டது. சிறிது நேரத்தில் குருதேவர் நகபத்திற்கு அப்பால் இருந்த பஞ்ச வடியிலிருந்து வந்து யோகினின் பக்கத்தில் நின்ருர். குருதேவரைப் பார்த்ததும் யோகினின் மனம் அவமானத் தால் குன்றியது. குருவின்மீது சந்தேகம் கொண்ட தற்காக மிகுந்த வேதனை அடைந்து அவர் முகத்தைக் கூடப் பார்க்க முடியாமல் தலைதாழ்ந்து நின்ருர். குருதேவர் நிலைமையைப் புரிந்து கொண்டார். பிறகு மிகுந்த அன்போடு, ''நல்ல காரியம் செய்தாய். ஒரு சாதுவை நம்புவதற்கு முன் இப்படி இரவும் பகலும் அவரை நன்ருகச் சோதிக்க வேண்டும்'' என்ருர். யோகினின் நடத்தையைக் குருதேவர் மன்னித்து விட்டபோதும் யோகி ஞல் அதை மறக்கவே முடியவில்லை. இரவெல்லாம் தூங்காமல் அதையே நினைத்து வருந்திஞர்.

காளி கோயிலின் விதிப்படி நாள்தோறும் காளியின் பிரசாதத்தில் ஒரு பகுதி குருதேவருக்குக் கொடுக்கப் பட வேண்டும். வழக்கம்போல் குருதேவர் அறைக்கு வரும்

பங்கு ஒரு நாள் வரவில்லை. அவர்கள் ஒழுங்காகப் பிரசாதத்தை அனுப்பாததன் காரணத்தைக் கேட்டு வர குருதேவர் தம் அறையிலிருந்து கோயில் அலுவலகத்திற்குச் சென்றார். குருதேவர் அந்த உணவைப் பெரும் பாலும் சாப்பிடுவதே இல்லை என்பதைக் கண்டறிந்த யோகினுக்கு அவருடைய இந்தச் செயல் ஆச்சரியத்தை ஊட்டியது. இதன் காரணம் அவருக்குப் புரியவில்லை. இறுதியில், கோயில் பிரசாதத்தில் எப்போதும் பங்கை எதிர்பார்க்கும் பூசாரிகளின் இயல்பான புத்தியே இவரை இப்படிப் பிரசாதத்திற்காகக் கவலைப்பட வைக்கிறது என்று நினைத்தார். அந்த நேரத்தில் தம் அறைக்குத் திரும்பினார் ஸ்ரீராமகிருஷ்ணர். திரும்பியவர் யோகினைப் பார்த்து, ''இங்கே பார். ராணி ராசமணி தம் சொத்தை இந்தக் கோயில் பணிகளுக்காகவும் இங்கே படைக்கப் படும் உணவைச் சாதுக்களுக்கு அளிக்கவும் ஏற்பாடு செய்திருக்கிறார். இங்கே பங்காக வரும் சிறு பகுதி உணவைப் பக்தர்களும் கடவுள் நாட்டம் கொண்டவர்கள் மட்டுமே சாப்பிடுகிறார்கள். இதனால் அதன் மூலம் வரும் புண்ணியம் ராசமணியைச் சென்றடைகிறது. ஆனால் கோயில் பூசாரிகளின் பங்காகப் போகும் மிகுதியான பிரசாதத்தின் கதி என்ன? அவர்கள் அதைக் கடைத் தெருவில் விற்கிறார்கள். சிலர் தங்கள் ஆசைநாயகி களுக்கும் கொண்டுபோய்த் தருகிறார்கள். அதனால் இங்கே அனுப்பப்படும் உணவால்தான் ராசமணி என்ன நினைத்து இந்த ஏற்பாட்டைச் செய்தாரோ அந்த ஏற்பாட்டின் சிறிதளவு பயனாவது கிடைக்கிறது. அதனால்தான் அந்த உணவு இங்கே அனுப்பப்பட வேண்டும் என்பதில் இவ்வளவு ஆவலும் பரப்பரப்பும் உடையவனாக இருக்கிறேன்'' என்றார். இதைக் கேட்ட யோகின் குருதேவரின் ஒவ் வொரு சிறு செயலிலும்கூட எவ்வளவு ஆழ்ந்த முக்கியத்து வம் இருக்கிறது என்பதை உணர்ந்தார்.

அன்னை காளி தன் பணிகளைச் செய்யத் தேர்ந் தெடுத்த சிலருள் யோகினும் ஒருவர் என்பதை ஸ்ரீராம கிருஷ்ணர் அறிந்திருந்தார். குருதேவர் தம் சீடர்களில் ஈசுவர கோடிகள் என்று குறிப்பிட்ட ஆறு பேர்களில் யோகினும் ஒருவராவார். ஸ்ரீராமகிருஷ்ணரின் அன்பான கவனிப்பில் சாதனைகள் செய்த யோகின் தம் மனத்திலிருந்து ஆண்-பெண் வித்தியாசத்தை அறவே நீக்கி, துறவின் உருவமாகவே மாறிவிட்டார். பிற்காலத்தில் இவர் சுவாமி யோகானந்தர் என்ற பெயரில் துறவியானார்.

## 40. நாக மகாசயரும் மகேந்திரநாத் குப்தரும்

குருதேவரின் இல்லறச் சீடர்களில் மிகச் சிறந்தவர் நாக மகாசயர் என்று அழைக்கப்பட்ட துர்காசரண் நாகர் ஆகும். 1846-இல் ஏழைப் பெற்றோருக்குப் பிறந்த அவர் இளமையிலேயே தாயை இழந்து, தம் தந்தையாலும் அத்தையாலும் வளர்க்கப்பட்டார். சிறு வயதிலிருந்தே அள வற்ற கடவுள் பக்தியும் சத்திய நாட்டமும் கொண்ட வர். எல்லாரோடும் இணங்கிச் செல்லும் அரிய குண முடையவர். அதனால் எல்லோரும் அவருடன் இருக்க விரும்புவார்கள். குடும்பத்து வறுமையின் காரணமாகப் பள்ளிக் கல்வியை அவரால் அதிகம் பெறமுடியவில்லை. என்றாலும் தம் கிராமத்திலிருந்து பத்து மைல் தொலைவி லிருந்த டாக்காவிற்கு நாள்தோறும் நடந்து உயர்நிலைப்பள்ளி வரையில் படித்து முடித்தார். பிறகு ஹோமியோபதி மருத்துவம் பயின்று, மருத்துவரானார். சிறந்த மருத்துவராக இருந்த அவர் நோயாளிகளிடம் இவ்வளவு என்று பணம் வாங்கமாட்டார். அவர்கள் கொடுப்பதை வாங்கிக் கொள்வார். அது மட்டுமல்லாமல் அவர்களு டைய வறுமையைக் கண்டு மனம் இளகி அவர்களுக்கு இனமாகவும் கடனாகவும் தாமே பணம் தருவார். பிறகு இந்தப் பணத்தைப்பற்றி நினைக்கவே மாட்டார். இப்படி வாழ்க்கை நடத்தியதால் புகழ் மிகுந்த மருத்துவராக இருந்தும் பல நேரங்களில் தம் சொந்தச் செலவிற்கே பணம் இல்லாமல் திண்டாடுவார். அவருக்கு ஏழை களிடமும் நலிவுற்றோர்களிடமும் இருந்த அன்பும் பாச மும் வார்த்தைகளால் கூற முடியாததாகும். அவர்களுடைய சேவைக்காகத் தம்மிடமிருக்கும் எல்லாவற்றையும் அவர் மகிழ்ச்சியோடு தியாகம் செய்வார். விலங்குகளும் அவரு டைய அன்புக்குப் பாத்திரமாயின. வங்காளத்தில் மீன்கள் அதிகம். அதனால் மீன்களை உயிரோடு பிடித்து வந்து விற்பனை செய்வார்கள். அவர் அப்படிப்பட்ட மீன்களைப் பானை யோடு வாங்கிக் குளங்களில் கொண்டுபோய் விட்டு விடுவார். நல்ல பாம்புகளைக் கண்டு சிறிதும் பயப்படமாட்டார். 'மனிதனைக் கொல்வது காட்டுப் பாம்புகள் அல்ல; அவனிடம் இருக்கும் துராசைகளே' என்று கூறுவார்.

இளமையிலேயே அவருக்குத் திருமணம் நடந்தது. ஆனால் குடும்ப வாழ்க்கையில் இயல்பாகவே அவருக்குப் பயம் இருந்தது. முதல் மனைவி இறந்த பிறகு தம் தந்தையின் வற்புறுத்தலால் இரண்டாவது மணம் புரிந்து கொண்டார். ஆனால் உடலாசை என்பது அவர் மனத்தில் சிறிதும் எழவில்லை. அழியும் உலக இன்பங்கள் ஒரு மனிதனை மிகக் கொடிய நரகத்தில் ஆழ்த்திவிடும் என்பதை அவர் தெளிவாக உணர்ந்திருந்தார். திருமணமானவராக இருப்பதால் குடும்பம் நடத்துவதற்குப் பணம் சம்பாதிக்க வேண்டி, உலகத்தோடு கட்டுப்பட்டிருக்க வேண்டுமே என்று பயந்தார். அத்தகைய பிடியில் இருந்து எப்படித் தப்பித்துக் கொள்வது என்பதே அவருடைய சிந்தனையாக இருந்தது. கடவுளைக் காணவில்லை என்றால் மனித வாழ்வால் பயனே இல்லை என்பதைக் கேள்விப்பட்ட அவர், அன்றிலிருந்து கடவுளைக் காணும் முயற்சியில் தம்மை மறந்து ஈடுபட்டார். இரவும் பகலும் பிரார்த்தனையிலும் தியானத்திலும் மூழ்கினார். பலன் கிடைக்கவில்லை. குருவின் துணையில்லாமல் கடவுளைக் காண முடியாது என்பதை ஒரு சந்நியாசியின் மூலம் கேள்விப்பட்டவர் அன்றிலிருந்து தினந்தோறும் கங்கைக் கரையில் அமர்ந்து அன்னை காளியிடம் தமக்கு ஒரு குருவை அனுப்பும்படி பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தார். கங்கையில் குளிக்க நிறைய சாதுக்கள் வருவார்கள். அவர்களில் யாராவது ஒருவர் தமக்குத் தீட்சையளிக்க மாட்டாரா என்று ஆவலோடு காத்திருப்பார்.

ஒரு நாள் கங்கைக் கரையில் அமர்ந்திருக்கும்போது அவரை நோக்கி ஒரு படகு கங்கையில் வருவதைக் கண்டார். அதில் அவருடைய குல குரு இருந்தார். அவரைக் கண்ட மகாசயர் கிராமத்திலிருந்து கல்கத்தாவிற்கு அவர் வந்த காரணத்தைக் கேட்டார். ''எதற்காகவும் நான் வரவில்லை. அன்னை காளி உனக்குத் தீட்சை, தரச் சொன்னாள். அவளுடைய கட்டளையின் பேரிலேயே இங்கே வந்தேன்'' என்றார். இந்தக் குரு தந்த தீட்சை, மகாசயரை ஆன்மிக வாழ்வில் வேகமாக முன்னேற்றியது. அவர் பகலெல்லாம் நோயாளிகளைக் கவனிப்பதிலும் இரவெல்லாம் கங்கைக் கரையில் பிரார்த்தனையிலும் தியானத்திலும் செலவிட்டார். பல நேரங்களில் உடல் நினைவே இல்லாமல் ஆழ்ந்த தெய்விக நிலையில் இருந்தார். இதைக் கண்டு அவரது தந்தை மிகவும் துயருற்றார்;

மருமகளிடம் இரக்கம்கொண்டு மேலும் அதிகமாக வருந்தினார். அந்தப் பெண் எதற்காகவும் சஞ்சலப்படவில்லை. தன் கணவர் உலகப் பற்றுக்களை எல்லாம் விட்டவர் என்பதை நன்கு உணர்ந்திருந்தாள். நாக மகாசயர் தம் மனைவியிடம், ''மனிதனிடம் கொள்ளும் அன்பு நிலைக்காதது. கடவுளிடம் இதய பூர்வமாகக் கொள்ளும் அன்பே நிலைத்தது. அத்தகைய அன்பைக் கொண்டவர்களே பாக்கியசாலிகள். இந்த உடம்பின்மீது சிறிது பற்று இருந்தாலும் பல பிறவிகள் எடுத்து வேதனைப்பட வேண்டும். எனவே தசையாலும் எலும்பாலுமான இந்தக் கூட்டிடம் ஆசை கொள்ளாதே. அன்னை காளியிடம் சரணடை. அவளை மட்டுமே நினை. இதுவே இந்த உலகிலும் மறு உலகிலும் உனக்குப் பேரின்பத்தை அளிக்கும்'' என்று உபதேசித்தார்.

சுரேஷ்சந்திர தத்தா என்பவர் மகாசயரின் சிறந்த நண்பர். அவர்கள் பக்தியையும் கடவுளையும் பற்றிப் பேசுவதில் பெரும் பொழுதைக் கழிப்பார்கள். மகாசயருக்கு வெறும் பேச்சில் ஆர்வம் தோன்றவில்லை. அதில் மிகவும் வெறுப்படைந்தவர் ஒரு நாள் சுரேஷிடம், ''வெறும் பேச்சால் நேரம்தான் வீணாகிறது. நேராகக் கடவுளைக் கண்டால் அன்றி வேறு எதனாலும் பயன் இல்லை'' என்றார்.

இது நடந்த சிறிது காலத்திற்கெல்லாம் மகாசயர் ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய்விக அன்புக்குப் பாத்திரமானார். மகாசயரின் நண்பர் சுரேஷ், கேசவர் மூலம் குருதேவரைப் பற்றி அறிந்திருந்தார். ஆனால் உடனடியாக நாக மகாசயரிடம் அதைப்பற்றிச் சொல்லவில்லை. இரண்டு மாதங்கள் கழித்துக் கூறினார். ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றிக் கேள்விப்பட்ட உடனே மகாசயர் அவரைப் பார்க்கப் பெரிதும் ஆவல் கொண்டார். மறுநாளே தம் நண்பரோடு தட்சிணேசுவரத்திற்கு வந்தார். குருதேவருடைய அறைக்கு முன்னால் அமர்ந்திருந்த ஒருவரிடம் அவர் இருக்கிறாரா என்று விசாரித்தார். குருதேவர் கல்கத்தாவிற்குப் போய் விட்டதாக அவர் கூறினார். மிகுந்த ஏமாற்றத்தோடு இருவரும் திரும்பிப் போக முற்பட்டபோது அறைக்குள் யாரோ உட்கார்ந்திருப்பதையும் அவர் கையை அசைத்துத் தங்களை அழைப்பதையும் கண்டார். அவர் ஸ்ரீராமகிருஷ்ணர் தான். உள்ளே சென்ற இருவரையும் குருதேவர் அன்போடு வரவேற்றார். புதியவர்கள் தம்மை வந்து தொந்தரவு கொடுக்காமல் இருக்க அங்கு அமர்ந்திருந்த ஹாஸ்ரா

தான் இப்படிக் கூறியதாகச் சொல்லி, தம் அருகில் வந்து அமரச் சொன்னார். அருகில் உட்கார்ந்த மகாசயர் குருதேவரின் திருவடிகளைத் தொட்டு வணங்க முயன்றார். குருதேவர் உடனே கால்களை இழுத்துக் கொண்டார். இதைக் கண்ட மகாசயர் குருதேவரின் கால்களைத் தொடும் தகுதி தமக்கு இன்னும் வரவில்லை என்று நினைத்தவராய் குருதேவரை உற்றுப் பார்த்தபடியே இருந்தார். இதைக் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர் அவரிடம், ''ஏன் இப்படிப் பார்க்கிறாய்?'' ''என்று கேட்டார். ''உங்களைப் பார்ப்பதற்காகத் தான் இங்கே வந்தேன். இப்போது பார்த்துத் தீர்த்துக் கொள்ளுகிறேன்'' என்றார் மகாசயர். குருதேவர் அவர்கள் இருவரையும் பஞ்சவடியில் சென்று தியானம் செய்யும்படிக் கூறினார். பிறகு அவர்களைக் கோயிலுக்கு அழைத்துச் சென்றார். மாலை ஐந்து மணிக்கு இருவரும் புறப்பட்டனர். ''நல்லது. போய்வாருங்கள். அடிக்கடி வந்தால்தான் நமக்குள் நெருக்கம் ஏற்படும். அடிக்கடி வாருங்கள்'' என்றார். அடுத்த வாரம் வந்து குருதேவரைச் சந்திக்கும் வரை மகாசயர் எந்த நேரமும் குருதேவர் நினைவாகவே அவரைக் காணத் துடித்துக் கொண்டிருந்தார். தட்சிணேசுவரத்துக்கு வந்து அளவற்ற ஆர்வத்தோடு குருதேவரின் அறைக்குள் மகாசயர் நுழைந்தார். உள்ளேயிருந்த குருதேவர், ''ஓ! நீ வந்துவிட்டாயா? நல்ல காரியம் செய்தாய். இப்போது உனக்காகத்தான் நான் காத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றார். சிறிது நேரம் கழித்து, ''மகனே! எதற்கும் பயப்படாதே. நீ மிகச் சிறந்த ஆன்மிக நிலையை அடைந்திருக்கிறாய்'' என்றார். புகை குடிக்கத் தம் ஹுக்காவைத் தயார் செய்யச் சொன்னார். மகாசயர் ஹுக்காவைத் தயார் செய்ய வெளியே சென்றதும் உடன் வந்திருந்த சுரேஷிடம் குருதேவர், ''இவனைக் கவனித்தாயா? எரியும் நெருப்புப் போன்றவன் இவன்'' என்றார்.

அடுத்த முறை மகாசயர் தட்சிணேசுவரம் சென்றபோது குருதேவர் தம் அறையில் தனியாக இருந்தார். மகாசயரைக் கண்டதுமே குருதேவர் திடீரென்று பாவ நிலையில் மூழ்கியவராய் எழுந்து அறையில் முன்னும் பின்னுமாய் வேகமாக நடக்க ஆரம்பித்தார். இதைக் கண்டு மகாசயர் பயந்தபடியே அறையில் நின்றிருந்தார். சிறிது நேரம் சென்றதும் குருதேவர் பழைய நிலையை அடைந்தவராய் மகாசயரிடம், ''நீ ஒரு டாக்டர் இல்லையா? என் காலில் வலி இருக்கிறது. என்னவென்று பார்'' என்றார்.

மகாசயர் அவருடைய கால்களை மெதுவாக அழுத்திப் பார்த்தார். ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. ''நன்ருக அழுத்தி, கவனமாகப் பார்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் மறுபடியும் கூறினுர். மறுபடியும் மகாசயர் குனிந்து குருதேவரின் கால்களை நன்ருக அழுத்திப் பார்த்தார். காலில் ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. அப்போது திடீரென்று மகாசயரின் மனத்தில் முன்பு தாம் குருதேவர் கால்களைத் தொட்டு வணங்க முயன்றதையும் குரு தேவர் சட்டென்று கால்களை எடுத்துக் கொண்டு அவருடைய ஆசையை நிறைவேற்ருமல் செய்ததும் நினைவிற்கு வந்தது. அதன் பிறகும் அவருடைய மனம் குரு தேவரின் திருவடிகளைத் தொட்டு வணங்குவதில் மிகுந்த ஆவல் கொண்டிருந்தது. அந்த ஆசையையும் ஆவலையும் குருதேவர் இப்போது தீர்ப்பதை மகாசயர் அறிந்தார். அவருடைய கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொங்கியது. குருதேவரின் திருவடிகளை இரண்டு கைகளாலும் மெல்ல அழுத்தியபடியே தம் தலையையும் அந்தத் திருவடிகளில் வைத்து நெடுநேரம் தம்மை மறந்து வணங்கியபடியே இருந்தார். இந்த நிகழ்ச்சியைப் பற்றி மகாசயர் பிற் காலத்தில் குறிப்பிடும்போது, ''ஸ்ரீராமகிருஷ்ணரிடம் யாரும் தனக்கு இது வேண்டும் என்று கேட்க வேண்டிய தில்லை. எல்லோருடைய உள் மனத்தின் ஆசைகளையும் அவர் தாமே அறிந்து கொள்கிருர். அவைகளைத் தீர்த்தும் வைக்கிருர்'' என்று கூறுவது வழக்கம். இதன் பிறகு மகாசயர் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தமது இஷ்ட தெய்வமாகவே ஏற்றுக்கொண்டார். இதைப்பற்றிச் சொல்லும்போது, ''குரு தேவர் தம் அளவற்ற கருணையாலும் அன்பாலும் தாம் யார் என்பதை நான் அறிந்து கொள்ளும்படிச் செய் தார். அவருடைய கருணை இல்லாமல் அவரை யாரும் புரிந்துகொள்ள முடியாது'' என்று கூறுவார். ஒரு நாள் குருதேவர் திடீரென்று மகாசயரிடம் தம் உடம் பைச் சுட்டிக் காட்டி, ''இதைப்பற்றி என்ன நினைக்கிருய்?' என்று கேட்டார். இதைக் கேட்ட மகாசயர் கைகள் இரண்டையும் கூப்பியவராய் உணர்ச்சி பொங்க, ''என் தெய்விகக் குருவே! உங்களால் என்னை ஏமாற்ற முடியாது. உங்களின் எல்லையற்ற கருணையின் மூலம் நீங்கள் யார் என்பதை நான் தெரிந்து கொண்டேன்'' என்ருர். இதைக் கேட்ட குருதேவர் உடனே சமாதியில் மூழ்கியவராய், தம் வலது காலை மகாசயரின் மார்பின்மீது எடுத்து வைத்தார். மகாசயரின் உடலெங்கும் வார்த்தைகளால்

விளக்க முடியாத ஆனந்தப் பரவச உணர்ச்சி தோன்றியது. அந்த உணர்ச்சியில் அண்ட சராசரங்கள் முழுவதும் கங்கு கரையில்லாத ஆனந்தக் கடலில் மிதப்பதைக் கண்டார்.

மகாசயர் அடிக்கடித் தட்சிணேசுவரம் வருபவர்களில் ஒருவராகி, குருதேவரின் மிக நெருங்கிய சீடராகவும் ஆகிவிட்டார். ஆனால் குருதேவரைக் காணப் பெரும் கூட்டம் வரும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் மற்றச் சிறப்பான நாட்களிலும் அவர் வரமாட்டார். அன்று குருதேவரைக் காணவரும் பெரிய பக்தர்கள், அறிஞர்கள் இவர்கள் கூட்டத்தோடு தாம் சேர்ந்திருக்கத் தகுதியில்லாதவர் என்னும் பணிவான எண்ணமே அதற்குக் காரணம். ஆனால் சில நாட்கள் சென்றதும் எல்லோரும் மகாசயரின் பெருமையை அறிந்து அவரைப் பெரிதும் மதிக்கத் துவங்கினர். குருதேவரின் வாயிலிருந்து வரும் ஒவ்வொரு சொல்லையும் மகாசயர் பெருங் கட்டளையாக எண்ணி உடனே செயல்படுவார். ஸ்ரீராமகிருஷ்ணர் விளையாட்டாக எதையாவது சொன்னாலும் அதிலும் ஆழ்ந்த கருத்து இருக்கும் என்று கூறுவார். ஒரு நாள் குருதேவர் யாரிடமோ பேசும்போது, ''டாக்டர்கள், வழக்கறிஞர்கள், தரகர்கள் இவர்கள் யாரும் ஆன்மிகத்தில் முன்னேறுவது மிகவும் கடினம்'' என்று கூறினார். பிறகு அதை விளக்கும்போது குறிப்பாக டாக்டர்கள் கடவுளை நினைப்பது மிக மிகக் கடினமான காரியம். அவர்கள் மனமெல்லாம் துளித் துளியாக விழும் மருந்திலேயே மூழ்கிக் கிடக்கும்போது எல்லையே இல்லாத கடவுளை எப்படி அவர்களால் நினைத்துப் பார்க்க முடியும்?'' என்றார். டாக்டரான மகாசயர் இதைக் கேட்டு உடனே ஒரு தீர்மானத்திற்கு வந்து விட்டார். மருத்துவத் தொழிலில் அவருக்கு விருப்பம் இல்லை. என்றாலும் தம் தந்தையின் விருப்பத்திற்காகவே அதைச் செய்து வந்தார். குருதேவரின் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் உடனடியாக அந்தத் தொழிலை விட்டுவிட முடிவு செய்தார். அன்று மாலையே மருத்துவத்திற்குத் தேவையான கருவிகளையும் மருத்துவ நூல்களையும் கங்கையில் தூக்கி எறிந்துவிட்டார். அதன் பிறகு நேரம் முழுவதையும் பிரார்த்தனையிலும் தியானத்திலுமே கழிக்க ஆரம்பித்தார். நாட்கள் செல்லச்செல்ல உலகைத் துறந்து சந்நியாசியாகிவிட வேண்டும் என்னும் தணிக்கமுடியாத ஆசை அவருக்கு ஏற்பட்டது. ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் சென்று தாம் சந்நியாசி ஆக அனுமதி

அளிக்கும்படிக் கெஞ்சிக் கேட்டார். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர், ''இல்லறத்தில் இருப்பதில் இப்போது உனக்கு என்ன துன்பம் இருக்கிறது? மனத்தை மட்டும் கடவுளிடம் நிலை நிறுத்திக்கொள். அரசர் ஜனகர் வாழ்ந்ததுபோல் இல்லறத்தில் வாழ்ந்து வா. உன் வாழ்க்கை இல்லற பக்தர்களுக்கு ஓர் உதாரணமாக இருக்கட்டும்'' என்று கூறி, சந்நியாசத்திற்கு அனுமதி தர மறுத்துவிட்டார். வேறு வழி யின்றி நாக மகாசயர் இல்லறவாசியாக இருந்தார். இதைப் பற்றிக் குறிப்பிடும்போது, ''குருதேவரின் வார்த்தைகளை மீறுவது என்பது முடியாத காரியம். தம் பக்தர்கள் ஒவ்வொருவருக்கும் உள்ள சரியான கடமையை அவரவர் களுக்கு அவர் உணர்த்துவார்'' என்று கூறினார்.

மகாசயர் இல்லறத்தில் இருந்தாலும் நாளில் பெரும் பாலான நேரத்தைப் பிரார்த்தனையிலும் தியானத்திலுமே கழித்தார். வேறு எதிலும் மனத்தைச் செலுத்து வது என்பது அவருக்கு முடியாத காரியமாகிவிட்டது. அவருடைய தந்தை தாம் செய்துவந்த வேலையிலிருந்து ஓய்வு பெற்றார். அந்தப் பெரிய கம்பெனியில் தந்தையின் இடத்தில் மகாசயர் வேலைக்கு அமர்த்தப்பட்டார். ஆனால் உணவையும் உடையையும்பற்றிக்கூடக் கவலைப் படாத அளவிற்கு தெய்விக நிலையில் வளர்ந்துவிட்ட மகா சயரால் அலுவலகத்தின் அன்றாட வேலைகளில் எப்படி மனத்தைச் செலுத்த முடியும்? அதே அலுவலகத்தில் வேலை செய்துவந்த அவரது நண்பர் அடிக்கடி அவருக்கு உதவியாக வேலைகளைச் செய்து தருவார். மகாசயரின் கண்டிப்புள்ள துறவு மனப்பான்மையைக் கண்ட ஸ்ரீராம கிருஷ்ணர் ஒரு நாள் அவரிடம், ''எந்த வேலைக்கும் போகாதே. வீட்டிலேயே இரு. உனக்கு வேண்டிய சாதாரண உணவும் உடையும் கிடைக்கும்'' என்றார். அதைத் தொடர்ந்து இருவருக்கும் பேச்சு வார்த்தை துவங்கியது.

மகாசயர்: இந்த உலகத்தில் நான் எப்படி வாழ் வது? என்னால் மற்றவர்கள் படும் துன்பங்களைச் சகிக்கவே முடியவில்லையே.

ஸ்ரீராமகிருஷ்ணர்: நான் சொல்வதை நம்பு. இந்த உலகத்தில் - குடும்பத்தில் நீ வாழ்வதால் தவறு ஏதும் இல்லை. உன் வாழ்க்கையைப் பார்த்து மக்கள் ஆச்சரியப் படுவார்கள்.

மகாசயர்: நாட்களை நான் எப்படிக் கழிப்பது?

ஸ்ரீராமகிருஷ்ணர்: நீ ஒன்றும் செய்ய வேண்டாம். சாதுக்களோடு மட்டும் பழகிவா. அதுவே போதும்.

மகாசயர்: நான் ஒரு முட்டாள் என்பது உங்களுக்குத் தெரியும். நான் சாதுக்களை எப்படி அடையாளம் கண்டு கொள்வேன்?

ஸ்ரீராமகிருஷ்ணர்: நீ சாதுக்களைத் தேடிக் கொண்டு போக வேண்டியதில்லை. வீட்டிலேயே தங்கி இரு. உண்மையான சாதுக்கள் உன் வீடு தேடி வந்து, உனக்கு மரியாதை செய்வார்கள்.

எந்தச் சந்நியாசியும் மகாசயரை விடக் கடினமான வாழ்க்கை வாழ்ந்திருக்க முடியாது. வெறும் கரடுமுரடான, மிக மலிவான ஆடையையே அவர் அணிவார். மழை, வெயில் முதலான எல்லாக் காலங்களிலும் செருப்பு அணியாமல் வெறுங்காலுடனேயே நடப்பார். மிகச் சாதாரணமான உணவை, அதையும் மிகக் குறைந்த அளவே உட்கொள்வார். அடிக்கடி நாள் கணக்கில் சாப்பிடாமல் நோன்பிருப்பார். நண்பர்கள் யாராவது இதைக் கண்டித்தால், ''ஒரு மனிதன் இரவும் பகலும் சாப்பிடுவதையே நினைத்துக் கொண்டிருந்தால் அவன் எப்போது கடவுளைப்பற்றி நினைப்பான்? ஒருவன் எப்போதும் சாப்பாட்டைப்பற்றி நினைத்துக் கொண்டிருப்பதுகூட ஒரு நோயாக மாறிவிடும்'' என்பார். பிரசாதத்தைக் கூட, அது இனிமையாக இருந்தால் சாப்பிடவே மாட்டார். 'அது சுவையான பொருள்கள்மீது ஆசையை உண்டாக்கிவிடும்' என்பார். 'நான்' என்னும் நினைவே முற்றிலும் நீக்கியவராய் எல்லோருடைய வேலைக்காரனுகத் தம்மைக் கருதிக்கொண்டு எல்லோருக்கும் சேவை செய்தார். அவருடைய மாசு மறுவற்ற தூய்மையைக் கண்டு அவரது மனைவி, ''பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் பெயரைச் சொல்லியே அவர் எல்லாவகையான கீழான குணங்களையும் தம் காலடியில் போட்டு மிதித்து அழித்துவிட்டார். அவர் எந்த நேரமும் நெருப்பின் நடுவே வாழ்ந்து கொண்டிருந்தாலும் அந்த நெருப்பு அவரைச் சுடவே இல்லை'' என்று கூறுவது வழக்கம்.*

ஸ்ரீராமகிருஷ்ணரின் முக்கியமான இல்லறச் சீடர்களில் ஒருவர் ம-, எனும் புனைபெயர் கொண்ட மகேந்திர நாத் குப்தர். மனிதகுலம் முழுமையும் அவருக்குக் கடமைப் பட்டிருக்கிறது என்று கூறினல் அது மிகையாகாது. இளமை

---

*இவரது விரிவான வாழ்க்கை வரலாற்றை எமது வெளியீடான 'மகான் துர்க்கா சரண நாகர்' என்னும் நூலில் படித்து அறிந்து கொள்ளலாம்.

யிலேயே நாட்குறிப்பு எழுதும் பழக்கத்தைக் கொண்டிருந்த இவர், ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்தித்த பிறகு, ஸ்ரீராமகிருஷ்ண ருக்கும் பக்தர்களுக்கும் இடையில் நடந்த உரையாடல்களைச் சிறு சிறு குறிப்புக்களாக எழுதிக் கொள்வார். இந்த நாட் குறிப்புக்களே இன்று இதற்கிணை இல்லை எனக் கூறப்படும், **'ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுத மொழிகள்.'** இவரது விரிவான வரலாறும், ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்தித்த விவரங்களும் மேலே கூறிய நூலில் விரிவாகத் தரப்பட்டுள்ளது. எனவே இங்கு அது தவிர்க்கப் பட்டுள்ளது.

குருதேவர் தட்சிணேசுவரத்தில் காளி கோயிலின் ஓர் அறையில் உலக ஆரவாரங்களிலிருந்தும் ஆசைகளிலிருந் தும் அவசரங்களிலிருந்தும் விடுபட்டுத் தனித்து வாழ்ந் தாலும் கடவுள் பக்தியும் கடவுளைப் பற்றிய சாஸ்திரங் களில் ஆழ்ந்த அறிவும் தரும சிந்தனையும் உடையவர்கள் எங்கிருந்தாலும் அவர்களைத் தாமே சென்றும் அல்லது அவர்களைக் காளி கோயிலுக்கு வரவழைத்தும் பெரிதும் மகிழ்ந்தார். பகவத் கீதையில், ''யாரிடமாவது, எந்த வகையிலாவது சராசரி மனிதர்களை விடவும் சிறந்த ஆற்றல் இருக்குமானால் அங்கே நான் இருக்கிறேன் என்பதைத் தெரிந்து கொள்'' என்னும் ஸ்ரீகிருஷ்ணரின் வாக்கைச் சத்திய வாக்காகக் கொண்டு அப்படிப்பட்டவர்களை எல்லாம் சந்தித்து உரையாடினார். அந்தப் பட்டியல் மிக மிக நீண்டதாகும். ஏற்கெனவே கேசவ சந்திரர், கௌரி பண்டிதர், வைஷ்ணவ சரண் முதலானவர்களை அவர் சந்தித்ததைக் கண்டோம்.

அடுத்து மிகச் சிறந்த தேச பக்தரான அசுவினிகுமார் தத்தா; சிறந்த பரோபகாரி, படித்தவர், பண்புள்ளவர் என்று வங்காளம் முழுவதிலும் பிரசித்தி பெற்றிருந்த பண்டித வித்யாசாகரர்; பங்கிம் சந்திரர்; பண்டித சசதர்; தேவேந்திர நாத் டாகூர்; முதலானவர்களை ஸ்ரீராமகிருஷ்ணர் சந்தித்தார். அரசாங்கத்தில் உயர்ந்த பதவியில் இருந்த, செல்வாக் குள்ள, தெய்வ பக்தி கொண்டிருந்த வைகுந்தநாத் சன்யால், காளிபாத கோஷ், அதர் முதலான பலரையும் குருதேவர் சென்று பார்த்தார். சென்ற இடமெல்லாம் தம் அளவற்ற தெய்விகத்தாலும் ஞானத்தாலும் அவர் களின் ஆன்மிக வளர்ச்சிக்குப் பெரிதும் உதவினார்.*

---

*இவர்களைப் பற்றியும் குருதேவரோடு இவர்களுடைய சந்திப்பு நிகழ்ந்ததுபற்றியும் **'ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுத மொழிகள்'** என்ற நூலில் விரிவாகக் காணலாம்.

# 41. கிரீஷ்சந்திர கோஷ்

கிரீஷ்சந்திர கோஷ் என்னும் பெயர் வங்காளத்தில் வீட்டிற்கு வீடு நன்கு தெரிந்த ஒன்ருகும். மிகச் சிறந்த வங்காள நாடக ஆசிரியராகவும் வங்காள நாடக மேடையின் தந்தையாகவும் அவர் விளங்கினுர். அவர் காலத்து ஆங்கிலக் கல்வியாலும் அயல்நாட்டு நாகரிக மோகத்தாலும் மிக மிகச் சீரழிந்த மனிதனுக அவர் இருந்தார். அந்தக் காலத்தில் மேல்நாட்டு நாகரிகம் என்று போற்றபட்ட அனைத்தும் ஒரு வார்த்தைகூட எதிர்த்துப் பேசாமல் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அந்த நாகரிகத்தின் நல்ல பகுதிகளை விட மது அருந்துதல் முதலான தீய பகுதிகளையே இவர்கள் தங்கள் கண்களை மூடிக்கொண்டு பின்பற்றினுர்கள். அதைப் போலவே அந்தக் கால மேல்நாட்டு அறிஞர்கள் எழுதிய நாத்திகம் பற்றிய நூல்களைப் படித்துவிட்டு, கடவுளே இல்லை என்ற முடிவுக்கு வந்தவர்களாய், பேசவும் வாழவும் ஆரம்பித்தார்கள். இத்தகைய சூழ்நிலையில் உருவானவர்களில் ஒருவர்தான் கிரீஷ். அவருக்குக் கடவுள் நம்பிக்கை சிறிதும் இல்லை. புதிய கொள்கைகளும் அவருக்கு ஏமாற்றமே தந்தன. எனவே எல்லாவிதத் தீய பழக்கங்களிலும் மூழ்கி, தம் மனத்தைக் குடைந்து கொண்டிருந்த, ‘கடவுள் இருக்கிருரா? இருந்தால் அவரை எப்படி அடைவது?’ என்னும் கேள்விகளுக்கு விடையைத் தேடிக் கொண்டிருந்தார். இந்த உலகத்தில் உடம்பின் தேவைக்கான எல்லாமே எங்கும் அளவில்லாமல் இருக்கின்றன. பிறகு தெய்விகத்தை அடையப் பாடுபட வேண்டிய அவசியம் என்ன? கடவுளைத் தேடுபவர்கள் இந்தச் சுகமான உலக வாழ்க்கையை ஏன் அனுபவிக்கக் கூடாது? உலக சுகத்தைத் தேடுபவர்களே புத்திசாலிகள். அவர் கொள்கைகளே சரியானவை. ஏனென்ருல் அவர்கள் தாம் இந்த உலகத்தில் ஏதாவது சிறிது இன்பத்தையாவது அனுபவிக்கிருர்கள். கிடைக்குவரைக்கும் உலக இன்பத்தை அனுபவிப்பதே புத்திசாலித்தனம்'' என்று அவர் அடிக்கடி கூறுவார். பதினுன்கு ஆண்டுகளாக இதே கொள்கையோடு மனம் போனபடி வாழ்ந்து கொண்டும் வந்தார்.

ஆனால் அடுத்தடுத்து வந்த துன்பங்கள் அவரைத் தாக்கி நிலைகுலையச் செய்தன. இந்தத் துன்பங்களிலிருந்து விடுபடப் பல்வேறு வழிகளில் முயன்றார். வங்காளத்தில் தாரகேசுவரம் என்னும் இடத்தில் புகழ் வாய்ந்த சிவன் கோயில் உள்ளது. அவரிடம் பிரார்த்தனை செய்து கொள்பவர்களின் துன்பங்கள் தாமாகவே மறைந்தன. நோயுற்றவர்கள் அங்கே பெரும் எண்ணிக்கையில் பிரார்த்தனை செய்து நலமடைவார்கள். அப்போது கிரீஷ் மிகக் கொடிய நோயால் பீடிக்கப்பட்டிருந்தார். மருத்துவம் எதுவும் பலனளிக்கவில்லை. இறுதியில் தாரகேசுவர சிவனை நினைத்தார். ''எனக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை. ஆனால் பலர் தாரகேசுவரச் சிவனைப் பிரார்த்தித்துக் குணமடைகிறார்கள். நானும் அவரிடம் பிரார்த்திக்கிறேன். நோய் தீர்ந்தால் அவர் உண்மையான கடவுள் என்பதை நம்புகிறேன்'' என்று நினைத்தார். தம் நோய் தீர, தாரகநாதனைப் பிரார்த்தித்தார். ஆச்சரியப்படும்வகையில் அவருடைய நோய் தீர்ந்துவிட்டது. எனவே அவருக்குக் கடவுள் நம்பிக்கை - சிவபெருமான் மீது நம்பிக்கை-ஏற்பட்டது. இந்த நம்பிக்கை நாளாக நாளாகக் கடவுளைக் காண வேண்டும் என்னும் அடங்காத ஆர்வத்தை அவரிடம் வளர்த்தது. எல்லோரும் 'குருவின் மூலமே கடவுளைக் காண முடியும்; குருவையே கடவுளாக நினைத்து அவர் உபதேசங்களைப் பின்பற்றினால் மட்டுமே கடவுளை அடைய முடியும்' என்றனர். மனிதனைக் குருவாக - கடவுளாக ஏற்றுக் கொள்வதா? இந்தக் கொள்கையே அவருக்குப் பெரிய வெறுப்பைத் தந்தது. நோய் தீர்த்த தாரகநாதரின் பெயரையே மந்திரமாக எடுத்துக் கொள்வோம். அவரே வழியைக் காட்டுவார் என்று ஒவ்வொரு நாளும் காலையில் தாரகநாதரின் பெயரை ஜபம் செய்து, பலன் கிடைக்கிறதா என்று பார்த்து வந்தார்.

இந்த நாளில் ஒரு நாள் கேசவசந்திர சேனர் நடத்திய ஒரு பத்திரிகையில் (Indian Mirror) அவர் ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றி எழுதிய செய்திகளைப் படித்தார். அதைப் படித்ததும் பிரம்ம சமாஜத்தவர்கள் ஊரை ஏமாற்ற ஒரு புதிய பரமஹம்ஸரை உருவாக்கி இருப்பதாக நினைத்துக் கேலி செய்தார். இது நடந்த சிறிது நாட்களுக்கெல்லாம் அந்தப் பரமஹம்ஸர் பக்கத்து வீடுகளில் ஒன்றுக்கு வரப் போவதை அறிந்தார். அவர் எப்படிப்பட்டவர் என்று பார்க்கும் ஆர்வத்தால் அங்குச் சென்றார். அப்போது

மாலை நேரம். வீடு முழுவதும் விளக்கு ஏற்றப் பட்டிருந்தது. குருதேவரின் எதிரிலும் ஒரு விளக்கு வைக்கப்பட்டிருந்தது. தெய்விகப் பரவசத்தில் மூழ்கியிருந்த குருதேவரால் எதிரே இருந்த விளக்கைக்கூடப் பார்க்க முடியவில்லை. அருகில் இருந்தவர்களிடம், ''இது என்ன' மாலை நேரமா? இருட்டிவிட்டதா?' என்று அவர் பலமுறை கேட்டுக் கொண்டிருந்தார். இதைக் கண்ட கிரீஷ் இது ஊரை ஏமாற்றுவதன் உச்சகட்டம் என்று நினைத்து, வெறுப்போடு அங்கிருந்து போய்விட்டார்.

இந்த நிகழ்ச்சி நடந்த சில ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ்ணர் பலராமின் வீட்டிற்கு வந்தார். அருகில் இருந்த கிரீஷுக்கும் அழைப்பு வந்தது. இரண்டாம் முறையாக குருதேவரைக் காண கிரீஷும் அங்கே போனார். குருதேவர் இருந்த அறையில் கூட்டம் மிகுதியாக இருந்தது. கூட்டத்தின் நடுவே இருந்த குருதேவரின் நடவடிக்கைகள் மறுபடியும் கிரீஷுக்கு ஆச்சரியமாகப்பட்டது. யோகிகளையும் பரமஹம்ஸர்களையும் பற்றி கிரீஷ் கொண்டிருந்த கருத்தே வேறு. அவர்கள் யாரோடும் பேசவோ, யாரையும் வணங்கவோ மாட்டார்கள் என்றும் மிகவும் வற்புறுத்தினால் மட்டுமே பிறரிடமிருந்து சிறிதளவு சேவைகளை ஏற்றுக் கொள்வார்கள் என்றும் நினைத்திருந்தார். ஆனால் இங்கே ஸ்ரீராமகிருஷ்ணரின் செயல்களோ அதற்கு நேர்மாறாக இருந்தன. அவர் எல்லாரோடும் பேசிக் கொண்டிருந்தார். வந்தவர்கள் எல்லோருக்கும் வணக்கம் செலுத்திக் கொண்டும் இருந்தார். சிறிது நேரம் அங்கு அமர்ந்திருந்த கிரீஷ் தம் நண்பர் கூப்பிடவே எழுந்து போய்விட்டார்.

சில நாட்கள் கழிந்தன. கிரீஷ் 'ஸ்டார் தியேட்டர்' என்னும் தம் நாடக அரங்கில் தாமே எழுதிய 'சைதன்ய லீலை' என்னும் நாடகத்தை நடத்திக் கொண்டிருந்தார். ஒரு நாள் மாலை அவர் நாடக அரங்கில் இருந்தபோது ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர்களில் ஒருவர் வந்து, ''பரமஹம்ஸர் நாடகம் பார்க்க வந்திருப்பதாகவும் அவர் இலவசமாகப் பார்க்கலாமா, அல்லது அவருக்கும் சீட்டு வாங்க வேண்டுமா?'' என்றும் கேட்டார். பரமஹம்சருக்குச் சீட்டு வாங்க வேண்டாமென்றும் மற்ற எல்லோருக்கும் வாங்க வேண்டும் என்றும் கிரீஷ் கூறினார். அதற்குள் குருதேவர் வண்டியிலிருந்து இறங்கி நாடக அரங்கிற்குள் வந்துவிட்டார். எதிரே வந்த கிரீஷை ஸ்ரீராமகிருஷ்ணர் தலை

தாழ்த்தி வணங்கினார். கிரீஷும் வணங்கினார். மறுபடியும் ஸ்ரீராமகிருஷ்ணர் வணங்கினார். கிரீஷும் வணங்கினார். மறுபடியும் ஸ்ரீராமகிருஷ்ணர் வணங்கவே, தாம் பதிலுக்கு வணங்கினால் இந்த வணக்கங்கள் நீண்டு கொண்டே போகும் என்று நினைத்த கிரீஷ் வணங்குவதை நிறுத்திவிட்டு அவரை நாடக அரங்கிற்குள் அழைத்துச் சென்றார். இது கிரீஷுக்கு ஸ்ரீராமகிருஷ்ணருடன் ஏற்பட்ட மூன்றாவது சந்திப்பாகும்.

இந்த நேரத்தில் கிரீஷ், ஓவியர் ஒருவரைச் சந்தித்தார். வைஷ்ணவரான அவர் தாம் தினந்தோறும் தம் இஷ்ட தெய்வத்திற்கு உணவு படைப்பதாகவும் அவர் உண்மையில் அதைச் சாப்பிடுவதாகவும் இதெல்லாம் குருவின் அருள் இல்லாமல் நடக்காது என்றும் கூறினார். அவர் கூறியது உண்மையோ, பொய்யோ! ஆனால் அந்த வார்த்தைகள் கிரீஷின் மனத்தில் ஒரு பெரும் மாற்றத்தை ஏற்படுத்தின. தம் அறையின் கதவைத் தாளிட்டுக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதார் அவர்.

இது நடந்த மூன்று நாட்கள் கழித்து ஸ்ரீராமகிருஷ்ணர் தம் பக்தர்கள் இரண்டு மூன்று பேரோடு தம் வீட்டைக் கடந்தபடி நடந்து செல்வதைக் கண்டார் கிரீஷ். வீட்டின் வெளியே இருந்த கிரீஷைக் கண்டதும் ஸ்ரீராமகிருஷ்ணர் அவருக்கு வணக்கம் செலுத்தினார். கிரீஷும் திரும்ப அவரை வணங்கினார். இந்த முறை கிரீஷுக்கு ஸ்ரீராமகிருஷ்ணரிடம் சொற்களால் விவரிக்க முடியாத ஒரு வகையான கவர்ச்சி எழுந்தது. தம் வீட்டைத் தாண்டித் தொலைவில் போய்விட்ட அவரைப் போய்ச் சந்திக்க ஒரே ஓட்டமாக ஓட வேண்டும் என்ற வேகம் எழுந்தது. ஆனாலும் அசையாமல் தம் வீட்டின் முன்னாலேயே நின்று கொண்டிருந்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் ஸ்ரீராமகிருஷ்ணர் அழைப்பதாக ஒருவர் அவரிடம் வந்தார். அவரோடு கிரீஷ் அருகிலிருந்த பலராமின் வீட்டிற்குச் சென்றார். அங்கு அமர்ந்திருந்த ஸ்ரீராமகிருஷ்ணரிடம் நேராகச் சென்று, ''குரு என்பவர் யார்?'' என்று கேட்டார். ''அவர் கடவுளையும் பக்தனையும் இணைத்து வைப்பவர்! உனக்கும் ஒரு குரு கிடைப்பார்'' என்றார் ஸ்ரீராமகிருஷ்ணர். பிறகு மந்திரம் என்றால் என்ன என்று கேட்டார் கிரீஷ். ''இறைவனின் திருநாமம்தான் மந்திரம்'' என்றார் குருதேவர். இதைக் கபீரின் வாழ்க்கை மூலம் குருதேவர் விளக்கிக் காட்டினார். கபீர் இராமானந்

தரைக் குருவாக அடைய எண்ணி அவரிடம் சென்றார். என்ன காரணத்தினாலோ இராமானந்தர் அவரைச் சீடராக ஏற்று, மந்திர தீட்சை தர மறுத்தார். இராமானந்தர் நாள்தோறும் விடியற்காலையில் கங்கையில் குளிப்பது வழக்கம். ஒரு நாள் கபீர் அவர் குளிக்கச் செல்லும் படித்துறையில் அவருக்குத் தெரியாமல் படுத்திருந்தார். இருட்டில் இராமானந்தரின் பாதம் கபீரின் மீது பட்டது. உடனே அவர், ''ராமா! ராமா!'' என்று கூறினார். அவர் கூறிய நாமத்தையே கபீர் மந்திர உபதேசமாக ஏற்றுக் கொண்டார். அதன்மூலம் கடவுளையே நேரில் கண்டார்.

பிறகு அவர்களுடைய பேச்சு நாடக அரங்கைப்பற்றித் திரும்பியது. ''நான் மறுபடியும் உன் நாடகத்தைப் பார்க்க வரலாமா?'' என்று கேட்டார் குருதேவர். ''மிகவும் நல்லது. என்றைக்கு விரும்புகிறீர்களோ அன்றைக்கு வாருங்கள்'' என்றார் கிரீஷ். ''ஆனால் டிக்கட்டிற்காக ஏதாவது கொஞ்சம் பணம் என்னிடமிருந்து வாங்கிக் கொள்ள வேண்டும்'' என்றார் குருதேவர். ''சரி, எட்டணா கொடுங்கள்'' என்றார் கிரீஷ். ''எட்டணாவிற்கு நல்ல இடத்தில் உட்கார முடியாதே'' என்றார் குருதேவர். ''எட்டணா கொடுத்தாலும் கூட நீங்கள் முன்பு அமர்ந்த நாற்காலியிலேயே உட்கார்ந்து கொள்ளலாம்'' என்று கிரீஷ் கூறினார். ''அப்படியென்றால் ஒரு ரூபாய் வாங்கிக்கொள்'' என்றார் ஸ்ரீராமகிருஷ்ணர். அதோடு அந்த விவகாரம் முடிந்தது. பலராம் குருதேவருக்கு இனிப்பு வழங்கினார். அதில் சிறிது மட்டும் எடுத்துக் கொண்ட குருதேவர் சுற்றிலுமிருந்த பக்தர்களுக்குத் தரும்படிக் கூறினார். தாமும் சிறிது கேட்கலாம் என்று நினைத்த கிரீஷ் யாராவது கேலி செய்வார்களோ என்று நினைத்துக் குருதேவரை வணங்கிவிட்டுப் பக்தர் ஒருவரோடு புறப்பட்டார். அப்போது அந்தப் பக்தர், 'அவரைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?' என்று கேட்டார். அதற்கு ''பெரிய பக்தர்'' என்று கூறினார் கிரீஷ். இப்போது கிரீஷின் மனத்தில் அளவற்ற அமைதியும் ஆனந்தமும் பொங்கின. குருவைப் பற்றிய அவருடைய மனப் போராட்டம் தீர்ந்துவிட்டது.

கிரீஷின் அகங்காரம் மனிதனைக் குருவாக ஏற்றுக் கொள்ள மறுத்தது. சாதாரண மனிதனைக் குருவாக எண்ணி அவனைப் பணிந்து வணங்குவதும் அடிமை போல் அவர்முன் கைகட்டி நிற்பதும் அவருக்கு மிகக் கேவலமாக இருந்தன. ஆனால் இங்கே நடந்தது என்ன? ஸ்ரீராமகிருஷ்

ணர்தான் கிரீஷை முதலில் வணங்கினூர். கிரீஷ் வணங்க வில்லை. ஸ்ரீராமகிருஷ்ணரின் இந்தப் பணிவு கிரீஷின் அகங் காரத்தையே அகற்றிவிட்டது. இதற்குச் சில நாட்கள் கழித்து ஒரு நாள் மாலையில் கிரீஷ் தம் நாடக அரங்கில் வேடம் புனையும் அறையில் அமர்ந்திருந்தார். அப்போது குருதேவரின் பக்தர் ஒருவர் வந்து ஸ்ரீராமகிருஷ்ணர் நாடகம் பார்க்க வந்திருப்பதாகச் சொன்னூர். கிரீஷ் அங்கேயே அமர்ந்தபடி, ''மிகவும் நல்லது. அழைத்துப் போய் நாற்காலியில் உட்காரவையுங்கள்'' என்றூர். பக்தர், ''அவரை வரவேற்க நீங்கள் வரவில்லையா'' என்று கேட்டார். கிரீஷ் அதற்கு, ''ஏன், அவருக்குத் தாமாகவே வண்டியி லிருந்து இறங்கத் தெரியாதா?'' என்று கூறியபடியே வெளியே வந்தார். அதற்குள் ஸ்ரீராமகிருஷ்ணர் வண்டியி லிருந்து இறங்கிவிட்டிருந்தார். ஆழ்ந்த அமைதியும் ஆனந்தமும் தவமும் அவருடைய குழந்தை போன்ற முகத் தைக் கண்டதும் அவரைக் குறித்துச் சற்றுமுன் பேசிய பேச்சுக்காக மிகவும் வருத்தப்பட்டார் கிரீஷ். குருதேவரை மாடிக்கு அவரே அழைத்துச் சென்றூர். தம்மை அறியா மலேயே அவர் கால்களைத் தொட்டு வணங்கி அவரிடம் ஒரு ரோஜா மலரைக் கொடுத்தார். குருதேவர், ''மலர்கள் கடவுளுக்கும் அலங்காரப் பிரியர்களுக்குமே வேண்டும். நான் இரண்டு வகையிலும் சேராதவன்'' என்று சொல்லியபடி அவரிடம் திருப்பிக் கொடுத்துவிட்டார்.

கிரீஷ் குருதேவரையும் பக்தர்களையும் வசதியான மற்றூர் அறைக்கு அழைத்துச் சென்றூர். அங்கே ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு நாற்காலியில் அமர்ந்தார். கிரீஷும் அருகில் இருந்த ஒரு நாற்காலியில் அமர்ந்தார். அவ்வறை யில் மேலும் பல நாற்காலிகள் இருந்தன. பக்தர்களிடம் கிரீஷ் எவ்வளவோ கூறியும் அவர்கள் நாற்காலிகளில் உட்கார மறுத்து விட்டார்கள். இதைப்பற்றிப் பிற்காலத்தில் கிரீஷ் கூறும்போது, ''குருவிற்குச் சமமாகச் சீடர்கள் உட்கார மாட்டார்கள் என்பதுகூடத் தெரியாத முட்டாளாக நான் இருந்தேன்'' என்றூர். ஸ்ரீராமகிருஷ்ணர் கிரீஷைப் பார்த்து, ''உன்னிடத்தில் குறுக்குப் புத்தி இருக்கிறது'' என்றூர். ''அதை எப்படிப் போக்குவது?'' என்று கேட்டார் கிரீஷ். ''உறுதியான நம்பிக்கை வை'' என்றூர் குருதேவர்.

சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் பிற்பகல் கிரீஷ் நாடக அரங்கில் இருந்தபோது குருதேவர் அருகில் உள்ள இராமசந்திரரின் வீட்டிற்கு வருவதாகச் செய்தி வந்தது.

போவதற்கு மிகவும் விரும்பினுர் கிரீஷ். ஆனல் அழைப்பு வரவில்லை. மிகுந்த தன்மானமும் தற்பெருமையும் உடைய கிரீஷ் அழைப்பில்லாமல் போகத் தயங்கினுலும் இறுதியில் சென்று விட்டார்.

அப்போது மாலை நேரம். இசை ஒலித்துக் கொண் டிருந்தது. அளவற்ற ஆனந்தத்தில் தம்மை மறந்தவராய் குருதேவர் ஆடிக் கொண்டிருந்தார். அவரைச் சுற்றி பக்தர்களும் பாடியவாறே ஆடிக் கொண் டிருந்தனர். கண்கொள்ளா இக் காட்சி கிரீஷின் கண் களில் கண்ணீரை வரவழைத்துவிட்டது. இந்த நடனத் தின் நடுவே குருதேவர் சமாதியில் ஆழ்ந்து அப்படியே நிலைத்து நின்றுவிட்டார். பக்தர்கள் உடனே அவருடைய திருப் பாத துளியைத் தங்கள் தலைமேல் வைத்துக் கொண்டனர். கிரீஷின் மனம் அப்படிச் செய்யவேண்டு மென்று துடித்தது. ஆனல் அவருடைய போலி கௌரவம் அதற்கு இடம் கொடுக்கவில்லை. தான் அப்படிச் செய் தால் எல்லோரும் தன்னைப் பார்த்துச் சிரிப்பார்கள் என்று நினைத்தார். இந்த எண்ணம் அவர் மனத்தில் தோன்றிய உடனே குருதேவர் சமாதியிலிருந்து விடுபட்டு மறுபடியும் நடனமாடியபடியே தொலைவில் நின்றிருந்த கிரீஷின் முன் வந்து நின்று சமாதியில் மூழ்கிவிட்டார்.

நடனம் முடிந்ததும் குருதேவர் வீட்டின் உள் கூடத் திற்கு அழைத்துச் செல்லப்பட்டார். கிரீஷும் உடன் சென்றுர். எல்லோரும் அமர்ந்ததும் கிரீஷ் குருதேவரிடம், ''என்னுடைய குறுக்கு புத்தி நீங்குமா?'' என்று கேட்டார். 'நீங்கும்' என்றுர் குருதேவர். அதே கேள்வியை கிரீஷ் மறுபடியும் கேட்டார். குருதேவர் அதே பதிலைச் சொன்னுர். மீண்டும் கிரீஷ் மூன்றுவது முறையாக அதே கேள்வியைக் கேட்டார். குருதேவரும் முன்பு போலவே அதே பதிலைச் சொன்னுர். இதைக் கண்ட அங்கிருந்த குருதேவரின் பக்தர் மனமோகன் மித்ரா கிரீஷிடம், ''உன் கேள்விக்குத்தான் பதில் சொன்னுரே. ஏன் திரும்பத் திரும்ப அதையே கேட்டு அவரைத் தொந்தரவு செய்கிறுய்?'' என்றுர். பலர் முன்னிலையில் இப்படித் தன்னை மனமோகன் அவமானப்படுத்தியதை கிரீஷ் அமைதியாக ஏற்றுக் கொண்டு, ''அவர் சொல்வது சரிதானே. ஒருமுறை சொல்வதை நம்பாத மனிதன் நூறுமுறைச் சொன்னுலும் நம்பவா போகிறுன்?'' என்று நினைத்தார். குருதேவரை வணங்கிவிட்டு நாடக அரங்கிற்குச் சென்றுர்.

இந்த நிகழ்ச்சி நடந்த சில நாட்கள் கழித்து கிரீஷ் தட்சிணேசுவரம் சென்ருர். அப்போது குருதேவர் தன் அறைக்குத் தெற்கில் உள்ள வராந்தாவில் விரிப்பின்மேல் அமர்ந்து பவநாத்துடன் பேசிக் கொண்டிருந்தார். கிரீஷ் 'குருவே பிரம்மம்' முதலான சுலோகங்களைத் தனக்குள் உச்சரித்தபடியே குருதேவரை வணங்கினுர். ஸ்ரீராமகிருஷ்ணர் கிரீஷை அருகில் உட்காரச் சொல்லி, ''நீ நம்புகிருயோ இல்லையோ, இவனைக் கேட்டுப்பார். இப்போது உன்னைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தேன்'' என்ருர். பிறகு ஆன்மிக அறிவுரைகளைக் கூறத் துவங்கினுர். சிறிது நேரம் அதைக் கேட்ட கிரீஷ் இடையில் தடுத்து, ''இத்தகைய் அறிவுரைகள் எனக்குத் தேவையில்லை. இதைப் போல் நானே என் நாடகங்களில் நிறைய எழுதி இருக்கிறேன். தயவு செய்து இந்த அறிவுரைகளைவிட உருப்படியான ஏதாவது ஒரு வழியை எனக்குக் காட்டுங்கள்'' என்ருர். கிரீஷின் இந்தப் பேச்சு ஸ்ரீராமகிருஷ்ணருக்கு மிகவும் பிடித்தது. அருகில் இருந்த தன் அண்ணன் மகன் இராம்லாலை ஒரு சமஸ்கிருதச் சுலோகத்தைச் சொல்லச் சொன்னுர். அதன் பொருள்: 'ஒரு மனிதன் தன்னந்தனியாக இருந்தாலும், மலைக் குகைக்குள் இருந்தாலும் அவனுக்கு உறுதியான நம்பிக்கை இல்லையென்ருல் அவனுல் எதையும் அடைய முடியாது' என்பதாகும். இந்த நேரத்தில் கிரீஷ் தன் பாவங்கள் அனைத்தும் மறைந்து தான் தூய்மை வடிவாக இருப்பதுபோல் உணர்ந்தார். 'என்னைப் போன்ற கர்வம் பிடித்தவனைக்கூட தம் முன்னர் தலைதாழ்த்தி வணங்கும்படி இவர் செய்து விடுகிருரே! இந்த மனிதர் யாராக இருப்பார்? இவருடைய திருவடிகளில் சரணடைந்து என் பயத்தையெல்லாம் போக்கிக் கொண்டேன்' என்று நினைத்து மிகுந்த ஆவலுடன் குருதேவரிடம், ''உண்மையைச் சொல்லுங்கள், நீங்கள் யார்?'' என்று கேட்டார். குருதேவர் அதற்கு, ''என்னைச் சிலர் பக்தர் இராம்பிரசாத் என்று கூறுகிருர்கள். சிலர் ராஜா ராமகிருஷ்ணர் என்று கூறுகிருர்கள்'' என்ருர். இப்படிச் பேசிக் கொண்டே குருதேவர் கிரீஷோடு அங்கிருந்து வடக்குத் தாழ்வாரத்துக்குச் சென்ருர். நாடக அரங்கம்தான் தன் பாவச் செயல்களுக்குக் காரணமாக இருப்பதாக நினைத்த கிரீஷ், ''ஐயா! நான் இப்போது நடத்திக் கொண்டிருக்கும் நாடகத் தொழிலைத் தொடர்ந்து நடத்தலாமா?'' என்று கேட்டார். ''ஏன்? தாராளமாக நடத்திவரலாம்'' என்ருர். இதைக் கேட்டதும் கிரீஷ் மிகுந்த ஆறுதல் அடைந்தார்.

நாளாக நாளாக கிரீஷ் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் மாறாத பக்தராகிவிட்டார். குருதேவர் அவருடைய நம்பிக்கையைப் பற்றி மிக உயர்வாகப் பேசினார். இது கிரீஷிடமிருந்து பல தீய மன இயல்புகளை நீக்கி நல்ல உயர்ந்த குணங்களைத் தரத் துவங்கியது. கிரீஷுக்கும் குருதேவருக்கும் இடையே அமைந்த உறவுமுறை ஆச்சரியமானதாக இருந்தது. பிறரிடம் சிறிதளவு குறை இருந்தாலும் பொறுத்துக் கொள்ளாத குருதேவர் கிரீஷிடம் அந்தத் தீமைகள் மிகுதியாக இருந்தும் அவைகளைப் பொறுமையோடு சகித்துக் கொண்டார். கிரீஷின் கெட்ட பழக்கங்களில் ஒன்று அவருடைய மிதமிஞ்சிய மதுப் பழக்கமாகும். ஒருநாள் அந்தக் குடிவெறியில் குருதேவரை நாடக அரங்கில் பலர் முன்னிலையில் நிந்தனை செய்தார். இதைக் கேட்டு குருதேவரின் பக்தர்கள் மிகுந்த சீற்றம் கொண்டனர். இந்த நிகழ்ச்சிக்குக் காரணம் குருதேவரோடு நெருங்கிய உறவு கொள்ள நினைத்த கிரீஷ் அவர் தனக்கு மகனாக வந்து பிறப்பதாக வாக்குக் கொடுக்கும்படிக் கேட்டார். அதன் மூலமாகத் தன்னிடம் இப்போது இல்லாத பக்தியை வளர்த்துக் கொள்ளலாம் என்பது கிரீஷின் விருப்பம். ஆனால் குருதேவர் கிரீஷின் இந்தச் சொற்களுக்கு இணங்கவில்லை. ''நான் ஏன் உன் மகனாகப் பிறக்க வேண்டும்? என் தந்தை தூய்மையே வடிவான பக்தர். அதனால் அவருக்கு நான் மகனாகப் பிறந்தேன். நான் உனக்கு குருவாக, இஷ்டதெய்வமாக இருக்கிறேன்'' என்றார். இது கிரீஷின் கோபத்தை அதிகப்படுத்தி அவரை வாயில் வந்தபடிப் பேச வைத்துவிட்டது.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு குருதேவர் மிகுந்த மன வேதனை அடைந்தார். தன்னிடம் வரும் பக்தர்களிடமெல்லாம் கிரீஷ் தன்னைக் கேவலமாகப் பேசியதைச் சொல்லி வருந்தினார். ஒருநாள் ராம் குருதேவரைப்பார்க்கச் சென்றார். அவரிடமும் கிரீஷ் தன்னை வேண்டுமென்றே இழிவாகப் பேசியதைக் குறித்துச் சொன்னார் குருதேவர். இதைக் கேட்ட ராம் ''நீங்கள் அதையெல்லாம் பொறுத்துக் கொள்ளவேண்டும்'' என்றார். குருதேவர் ''ஆமாம்! நாளை அவன் என்னை அடித்தால் என்ன செய்வது'' என்றார். ''அதைக்கூட நீங்கள் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும், மனத்தில் அவரிடம் என்ன இருக்கிறதோ அதை உங்களுக்குத் தருகிறார். பாகவதத்தில் கிருஷ்ணன் காளிங்கன் பாம்பின் மீது மிதித்து அடித்து 'நீ ஏன் உயிர்களையெல்லாம் இப்படி

விஷத்தால் வதைக்கிருய்?' என்ற கேட்டபோது காளிங்கன், 'பகவானே நான் என்ன செய்வேன்? நீ எனக்கு விஷத்தைக் கொடுத்திருக்கிருய். அதையே நான் உலகத்திற்குக் கொடுக்கிறேன்' என்று கூறியது அல்லவா? அதே கதைதான் கிரீஷின் கதையும். உங்களைத் தவிர அவரது விஷத்தை யாரால் தாங்க முடியும்?' என்ருர். இந்த வார்த்தைகள் குருதேவரின் மனத்தில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தின. அவர் கிரீஷிடம் கொண்ட கோபமெல்லாம் தீர்ந்துவிட்டது; இரக்கம் பிறந்தது. உடனடியாக அவரைக் காணவேண்டும் என்னும் ஆவல் உந்தவே வண்டியைக் கொண்டு வரச் சொல்லி கிரீஷின் வீட்டிற்குப் புறப்பட்டார். கிரீஷோ, தான் ஸ்ரீராமகிருஷ்ணரை ஏசிவிட்டதற்காக இத்தனைநாட்களும் சாப்பிடாமலும், தூங்காமலும் வேதனையாலும் தன்மேல் கொண்ட கோபத்தாலும் பைத்தியம் பிடித்தாற்போல் இருந்தார். குருதேவரைக் கண்டதும் ஓடிவந்து கால்களில் வீழ்ந்தார். குருதேவர் தன் முரட்டுச் சீடனிடம் அன்பாகவும் பாசத்துடனும் பேசி அவனுடைய துக்கத்தைப் போக்கினுர். அன்று மாலை முழுவதும் பாட்டிலும் நடனத்திலும் ஆனந்தத்திலுமாகக் கழிந்தது. அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு கிரீஷ் முழுமையாகத் தன்னை குருதேவரின் திருவடிகளில் ஒப்படைத்துவிட்டார்.

ஒருநாள் பக்தர் ஒருவர் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கிரீஷின் நிதானமின்றி மது அருந்தும் பழக்கத்தையும் மற்றவற்றையும் கூறி அவைகளை விட்டுவிடுமாறு அவரிடம் புத்தி சொல்லும்படி வேண்டினுர். இதைக் கேட்ட ஸ்ரீராமகிருஷ்ணர் அவரைக் கண்டித்து ''நீ உன் வேலையைப் பார். அவனைப் பற்றி ஏன் உன் மண்டையைப் பிளந்துகொள்கிருய்? அவனுடைய பொறுப்பை யார் ஏற்றுக் கொண்டார்களோ அவர்கள் அவனை கவனித்துக் கொள்வார்கள். கிரீஷ் வீர பக்தன். குடிப்பழக்கம் அவனை ஒன்றும் செய்யாது'' என்ருர்.

வெறும் வார்த்தைகள் ஒரு மனிதனிடம் நெடுநாட்களாக ஊறிப்போன தீய பழக்கங்களை நீக்கிவிடாது என்பது குருதேவருக்கு நன்ருகத் தெரியும். ஆனுல் அவருடைய அளவற்ற அன்பு, சொற்களால் செய்ய முடியாத அற்புதத்தைச் செய்து காட்டின. கிரீஷ் தன் குடிப்பழக்கத்தை விடுவதற்குப் பெரிதும் முயன்ருர்.

ஓரளவு வெற்றியும் பெற்ருர். ஒருநாள் உடல் நிலை சரியில்லாமல் இருந்த தனக்குத் தெரிந்த நடிகை ஒருத்தியைப் பார்த்துவிட்டு வரச் சென்ருர். அங்கே அளவுக்கு அதிகமாகக் குடித்துவிட்டு அந்த நடிகை வீட்டிலேயே படுத்துக் கொண்டார். அது போன்ற இடத்தில் அவர் உறங்கியது அதுதான் முதல்தடவை. பொழுதுவிடிந்து தெளிவு பெற்றதும் தன் செயலுக்காக வருந்தினுர். பெரிய பிராந்திப் புட்டியோடு நேராக குருதேவரிடம் தட்சிணேசுவரத்துக்குச் சென்ருர். வண்டியிலிருந்து இறங்கிய உடனே ஓடிப்போய் குருதேவரின் கால்களைப் பிடித்துக் கொண்டு அழத் துவங்கினுர். பிறகு அமைதி அடைந்ததும் பிராந்தி குடிக்க விரும்பினுர். தான் கொண்டு வந்த பிராந்திப்புட்டியை வண்டியிலேயே விட்டுவிட்டதையும், வண்டி திரும்பிச் சென்று விட்டதையும் அறிந்து சஞ்சலப் பட்டார். கிரீஷின் இயல்பை அறிந்திருந்த குருதேவர் வண்டியிலிருந்து புட்டியை ஏற்கனவே எடுத்து வரச் செய்திருந்தார். அதை கிரீஷிடம் கொடுத்தார். பரபரப்போடு அதை எடுத்து கிரீஷ் எல்லோர் எதிரிலும் குடித்து முடித்தார். பின்னர் தான் செய்த காரியத்துக்காக - தன் குருவின் முன்னுலேயே, குருவிடமிருந்தே மதுவை வாங்கி அருந்திய மிக இழிவான செயலுக்காக வெட்கமடைந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரோ மிகுந்த அன்போடு, ''பரவாயில்லை. உனக்குத் திருப்தி ஏற்படும்வரை குடித்து மகிழ்ச்சி அடை. இந்தக் குடிப்பழக்கம் நீண்டநாட்கள் இருக்கப் போவதில்லை'' என்ருர். கூடிய விரைவில் கிரீஷின் மாசுகள் அகற்றப்பட்டுவிடும் என்பதை குருதேவர் அறிந்திருந்தார். இந்தச் சம்பவத்திற்குப் பிறகு வெகு அபூர்வமாகவே கிரீஷ் மது அருந்தினுர்.

ஒருநாள் குருதேவர் கிரீஷிடம் பேசிக் கொண்டிருந்த போது அவருடைய வேலைகளுக்கு இடையிலும் காலையிலும் மாலையிலுமாகக் கடவுளைக் குறைந்தது இரண்டு முறை நினைக்கும்படி கூறினுர். கிரீஷோ அது சுலபமான காரியம் தான் என்ருலும் குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட காரியம் செய்யும் பழக்கமில்லாத தன்னுல் அதைச் செய்ய முடியுமா என்று தயங்கினுர். கிரீஷின் எண்ணத்தை அறிந்து கொண்ட குருதேவர், ''சரி! உன்னுல் அதைச் செய்ய முடியவில்லை என்ருல் சாப்பிடுவதற்கு முன்பும் உறங்கச் செல்வதற்கு முன்புமாவது கடவுளை நினைத்துக் கொள்'' என்ருர். கிரீஷால் அதைக்கூடச் செய்ய முடியவில்லை.

அவர் உண்பதும் உறங்குவதும்கூட நேரப்படி நடப்ப தில்லை. அதோடு ஏதாவது ஒரு குறிப்பிட்ட விதிமுறையைப் பின்பற்ற வேண்டும், சிலவற்றை செய்யக் கூடாது என்ற கட்டுப்பாடுகள் அவருக்குப் பிடிக்காது. எனவே அதுவும் தன்னால் முடியாது என்று கூறினார். கிரீஷின் நிலையை அறிந்த ஸ்ரீராமகிருஷ்ணர் கடைசியாக ''சரி. உனது பொறுப்பை என்னிடம் ஒப்படைத்து விடு. அதாவது நீ செய்ய வேண்டியவை முழுவதையும் நான் ஏற்றுக் கொள்கிறேன். நீ எதுவும் செய்ய வேண்டியதில்லை'' என்றார். இதைச் சொல்லும் போது குருதேவர் மிக உயர்ந்த தெய்வீக நிலையில் இருந்தார்.

கிரீஷ் இப்படிப்பட்ட ஏற்பாட்டைத்தான் விரும்பினார். குருதேவரின் இந்த ஏற்பாடு அவருக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தந்தது. உடனே இணங்கிவிட்டார். ஆனால் இப்படித் தனக்காக குருதேவரே எல்லாக் காரியங்களையும் செய்யும் அதிகாரத்தைக் கொடுத்து விட்டதன் மூலம் தான் சுயமாக எதையும் செய்ய முடியாத நிலை ஏற்பட்டுவிட்டதை அப்போது கிரீஷ் உணரவில்லை. அவருடைய நினைப்பெல்லாம் தன் வாழ்விற்கான பொறுப்புக்களை எல்லாம் குருதேவர் ஏற்றுக் கொண்டு விட்டார் என்பது மட்டுமே.

அதன் பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் கிரீஷை இந்தப் புதிய மனப்பான்மையிலேயே நடந்து கொள்வதற்குப் பயிற்சி அளித்தார். ஒருநாள் கிரீஷ் குருதேவரிடம் ஒரு சாதாரண காரியத்தைப் பற்றிப் பேசும்போது, ''நான் அதைச் செய்வேன்'' என்று கூறினார். உடனே குருதேவர் அப்படி அவர் கூறுவதைத் தடுத்து, ''நீ உன் பொறுப்பு முழுவதையும் என்னிடம் கொடுத்திருக்கிறாய். எனவே 'இறைவன் விரும்பினால் நான் அதைச் செய்வேன்' என்று சொல்'' என்றார். இவ்வாறே ஒவ்வொன்றையும் கூறி கிரீஷின் 'நான்' என்ற எண்ணத்தையே குருதேவர் மாற்றி அன்னை காளியின் கருவியாக அவர் செயல்படுவதை உணரும்படிச் செய்தார். இதன் காரணமாக கிரீஷின் மனம் எப்போதும் நிலையாக ஸ்ரீராமகிருஷ்ணரிடமே பதிந்து நின்றது. அல்லும் பகலும் இந்த நினைவே மிகச் சிறந்த தியானமாக அமைந்தது; அவரைத் தெய்வீகத்தில் கொண்டு போய் சேர்த்தது.

## 42. சில துறவிச் சீடர்கள்

சசி எனப்படும் சசிபூஷண், சரத் எனப்படும் சரத் சந்திர சக்கரவர்த்தி ஆகிய இருவரும் கல்கத்தாவில் பக்தி மிகுந்த ஒரு பிராமணக் குடும்பத்தில் பிறந்த ஒன்றுவிட்ட சகோதரர்கள். இருவருமே கேசவசந்திரரின் பிரம்ம சமாஜத்தில் உறுப்பினர்களாக இருந்தார்கள். பிரம்மசமாஜ உறுப்பினர்கள் மூலம் இருவரும் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றி அறிந்தார்கள். 1883-ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் ஒருநாள் இருவரும் தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்தார்கள். குருதேவர் அவருடைய அறையில் கட்டிலின் மேல் அமர்ந்திருந்தார். இருவரும் அறைக்குள் நுழைந்தார்கள். குருதேவர் அன்போடு அவர்களை வரவேற்று அறையில் விரிக்கப்பட்டிருந்த பாயின் மீது அமரச் சொன்னார். அவர்கள் யார், எங்கே வசிக்கிறார்கள், என்பது போன்ற விவரங்களைக் கேட்டறிந்த குருதேவர் அவர்கள் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை அறிந்து மிகவும் மகிழ்ந்தார். பிறகு அவர்களிடம் பேச ஆரம்பித்தார். ''செங்கல்லின் மீதும் ஓட்டின் மீதும் அவை நெருப்பில் சுடப்படுவதற்குமுன் முத்திரையிட்டுவிட்டால் பிறகு அழியவே அழியாது. அதுபோலவே நீங்கள் இருவரும் இந்த உலக வாழ்வில் புகுவதற்கு முன் ஆன்மிக வாழ்வின் முத்திரையைப் பெற்றுவிட வேண்டும். அப்போதுதான் உங்களுக்கு உலகப் பற்று ஏற்படாது. ஆனால் இப்போதெல்லாம் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு சிறு வயதிலேயே திருமணம் செய்து வைத்துவிடுகிறார்கள். படிப்பை முடிப்பதற்குள் குழந்தைகளுக்குத் தந்தையாகிவிடும் அவர்கள் படிப்பு முடிந்ததும் குடும்பத்தைக் காப்பாற்ற வேலைதேடி இங்கும் அங்கும் அலைகிறார்கள். குடும்பத்தைக் காப்பாற்றப் போதுமான வருவாய் கிடைக்கும் வேலை கிடைக்காமல் துன்பப்படுகிறார்கள். இந்த நிலையில் அவர்களுக்குக் கடவுளை நினைக்க அதிக நேரம் ஏது!'' என்றார். அப்போது அவர்களோடு இருந்த ஓர் இளைஞன், ''அப்படியென்றால் திருமணம் செய்து கொள்வதே தவறா? அது கடவுளின் விருப்பத்திற்கு எதிரானதா?'' என்று கேட்டான். இதைக் கேட்ட குருதேவர், ''யார் திருமணம் செய்துகொள்ள விரும்புகிறார்களோ அவர்கள் திருமணம் செய்து கொள்ளலாம்.

எங்களுக்குள் சிலருக்கு நான் என்ன சொல்லவேண்டுமோ அதை இப்போது சொல்லுகிறேன். நீங்கள் அதில் எவ்வளவு எடுத்துக் கொள்ளுகிறீர்களோ அவ்வளவு எடுத்துக்கொள்ளுங்கள்'' என்ருர். பிறகு சசியிடம் அவருக்கு உருவக் கடவுளில் நம்பிக்கை இருக்கிறதா அல்லது அருவக் கடவுளில் நம்பிக்கை இருக்கிறதா என்று கேட்டார். மனத்தில் உள்ளதை அப்படியே கூறும் இயல்புடைய சசி இதைக் கேட்டதும், ''கடவுள் என்று ஒருவர் இருக்கிருரா என்பதிலேயே என் கருத்து இன்னும் முடிவாகவில்லை. எனவே நான் எந்தக் கடவுளில் நம்பிக்கை இருப்பதாகக் கூறுவேன்'' என்ருர். இந்தப் பதில் குருதேவரை மிகவும் மகிழ்ச்சி அடையச் செய்தது.

பிறகு இருவரும் வீடு திரும்பினர். இருவருமே குருதேவரால் மிகவும் கவர்ந்திழுக்கப்பட்டனர். ''இனி நாம் இவரிடம் செல்வோம். உண்மையான ஆன்மீக இரகசியங்களை அறிந்து கொள்ள வேண்டுமானல் இந்தப் புண்ணிய புருஷரிடம் போகவேண்டும் என்று தங்களுக்குள் முடிவு செய்து கொண்டார்கள். சிறு வயதிலிருந்தே சசி சமய நூல்களைப் படிப்பதில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார். பிரார்த்தனை, தியானம், பூஜை முதலியன அவருடைய அன்ருட வாழ்வின் ஒரு பகுதியாக இருந்தது. கல்லூரியிலும் அவர் மிகச் சிறந்த மாணவராக இருந்தார். குருதேவரைச் சந்தித்தபோது பி. ஏ. படிப்பில் முதலாண்டுத் தேர்வுக்காகத் தயார் செய்து கொண்டிருந்தார். அவருடைய பெற்ருேர்கள் தங்கள் குடும்பத்தின் எதிர்காலச் செழிப்பிற்காக சசியின்மீது மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தார்கள். இது இயல்பானதுதான். ஆனல் சசி ஸ்ரீராமகிருஷ்ணர் மூலம் இந்த உலக வாழ்வைவிட மிகச் சிறந்த வாழ்வு ஒன்று இருப்பதை அறிந்ததும் அதற்காக இந்த உலகை வாழ்விலிருந்து விடைபெற்று விரைவிலேயே குருதேவரின் மிக நெருங்கிய அந்தரங்கக் குழுவைச் சேர்ந்தவர்களில் ஒருவரானர்.

சரத்தும் சசியைப் போலவே ஸ்ரீராமகிருஷ்ணரின் சிறந்த பக்தரானர். முதல் பார்வையிலேயே குருதேவர், அவருடைய உறுதியான துறவு மனப்பான்மையை அறிந்து கொண்டார். ஒருநாள் குருதேவர் தம் அறையில் பக்தர்கள் சூழ்ந்திருக்கக் கட்டிலின்மீது அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார். அப்போதைய பேச்சு விநாயகரைப் பற்றியதாக இருந்தது. சரத்தும் அறையில் இருந்தார். குரு

தேவர் விநாயகரை மிக உயர்வாகப் புகழ்ந்து அவருடைய குணாதிசயங்களையும் காமம் தீண்டா மனத்தையும், தன் தாயான துர்க்காதேவியிடம் அவர் கொண்ட அசை யாத பக்தியையும், மிக விரிவாகவும் தெளிவாகவும் விளக்கினார். அப்படிச் சொல்லும்போது விநாயகரின் தெய்வீகக் குணங்களை விளக்கச் சில புராணக் கதைகளையும் கூறினார். இவைகளைக் கேட்டுக் கொண்டிருந்த சரத் தன்னை மறந்தவராய்த் திடீரென்று, ''நான் விநாயகரையே விரும்புகிறேன். அவரே என் இலட்சியம்'' என்றார். உடனே குருதேவர், ''இல்லை. விநாயகர் உன் இலட்சியம் இல்லை. நீ சிவாம்சம் நிறைந்தவன். சிவபெருமான்தான் உன் இலட்சியக் கடவுள்'' என்றார். பிறகு நிதானமாகச் சரத்தைப் பார்த்தபடி, ''உன்னை எப்போதும் சிவனாகவும் என்னைச் சக்தியாகவும் நினைத்துவா, நானே உன் ஆற்றல் அனைத்திற்கும் ஊற்று'' என்றார். இவ்வார்த்தைகள் சாதாரண மனிதர்களாகிய நமக்குப் புரியாமல் இருக்க லாம். ஆனால் பிற்காலத்தில் சிவபெருமானுக்குரிய ஆழ்ந்த அமைதி, தைரியம், பொறுமை, சகிப்புத் தன்மை, எல்லோரிடமும் எல்லையற்ற கருணை, பிறருடைய கஷ்டங்களையும் தாமே தாங்கிக் கொள்ள எப் போதும் தயாராக இருப்பது முதலான விசேஷ குணங் களைக் பெற்றுச் சரத் விளங்கினார். தன்னுடைய தனிப்பட்ட ஆன்மிக வாழ்விற்கும் பிற்காலத்தில் ஸ்ரீராம கிருஷ்ண இயக்கத்திற்குத் தொண்டாற்றுவதற்கும் ஆற்றல் முதலிய எல்லாம் குருதேவரிடமிருந்தே வருகிறது என் பதைச் சரத் மிகத் தெளிவாக உணர்ந்திருந்தார்.

ஒருநாள் குருதேவர், ''நீ எப்படிக் கடவுளைக் காணவிரும்புகிறாய்; தியானத்தில் எந்தெந்த தெய்வீகக் காட்சிகளை காண விரும்புகிறாய்?'' என்று கேட்டார். சரத், ''இறைவனின் எந்தத் தனிப்பட்ட வடிவத்தையும் நான் தியானத்தில் காண விரும்பவில்லை. அவரே உலக உயிர்கள் அனைத்திலும் உறைவதையே நான் பார்க்க விரும்புகிறேன். எனக்கு தெய்வீகக் காட்சிகள் தேவை இல்லை'' என்றார். குருதேவர் அதைக் கேட்டு புன்சிரிப் புடன் நீ கேட்கும் அதுதான் ஆன்மிக வாழ்வில் கடைசிப் படி. உடனே நீ அதை அடைந்துவிட முடியாது'' என்றார். சரத் உடனே, ''அதைத் தவிர வேறு எதனாலும் என்னால் திருப்தி அடைய முடியாது. அந்த நிலையை நான் எப்படி யும் போராடி அடைந்தே தீருவேன்'' என்று பதிலிறுத்தார்.

முந்தைய அவதாரத்தில் சசி, சரத் இருவரும் ஏசுநாதரின் சீடர்களாக வந்தவர்கள் என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். பிற்காலத்தில் சசி, சுவாமி ராமகிருஷ்ணனந்தர் என்ற பெயரிலும் சரத், சுவாமி சாரதானந்தர் என்ற பெயரிலும் துறவியானுர்கள்,

குருதேவரால் கவர்ந்திழுக்கப்பட்ட மற்ருெரு மகத்தான சீடர் ஹரி என்று அழைக்கப்பட்ட ஹரிநாத்சட்டர்ஜி. இவர் கல்கத்தாவில் பாக்பஜாரைச் சேர்ந்தவர். இளம் வயதிலேயே அனுதையாகிவிட்ட இவரை அவருடைய அண்ணன் வளர்த்து வந்தார். அறிவும் ஆற்றலும் நிரம்பிய இவர் இளம் வயதில் எல்லோராலும் விரும்பப் பட்டார். இவருடைய வயதிற்கொத்த சிறுவர்கள் இவரைத் தங்கள் தலைவனுகக் கொண்டாடினுர்கள். இவருடைய உறவினர்களோ சிறுவனுக இருக்கும்பொழுதே இவருடைய பக்தியையும் ஞானத்தையும் கண்டு வியந்தார்கள். இளம் வயதிலேயே ஓர் உண்மையான வைதிக பிராமணருக்குரிய வாழ்க்கையை இவர் நடத்தி வந்தார். ஒரு நாளைக்கு மூன்றுமுறை குளிப்பார். தன் உணவைத் தானே சமைத்துக்கொள்வார், அதைக் கடவுளுக்கு நிவேதனம் செய்த பிறகே உண்பார். ஒவ்வொரு நாளும் விடியற்காலையில் எழுந்து கீதை முழுவதையும் தன் நினைவிலிருந்தே பாராயணம் செய்வார். வேதாந்தத்தில் அவருக்கு மிகுந்த ஆர்வம் இருந்தது. அத்வைதத் தத்துவம் அவர் வாழ்வில் நிலையான முத்திரையைப் பதித்திருந்தது. சங்கரரின் வேதாந்தத் தத்துவத்தைப் பின்பற்றி அதில் ஓரளவு வெற்றியும் பெற்றிருந்தார். ஒருநாள் அவர் கங்கையில் குளித்துக் கொண்டிருந்தார். எதிரே சிறிது தூரத்தில் தண்ணீரில் ஏதோ மிதந்து வருவதுபோல் தெரிந்தது. கரையில் இருந்தவர்கள், 'முதலை, முதலை' என்று கத்தினுர்கள். இதைக் கேட்டதும் ஹரி வேகமாகக் கரையேறினுர். கரையில் வந்து சேர்ந்த அவர் தனக்குள் ''நான் எவ்வளவு பெரிய கோழை! நாள்தோறும் வேதாந்தத்தில் 'நான் மரணமே இல்லாதவன். அழியாத ஆத்மா' என்று படிக்கிறேன். இப்போது இந்த முதலைக்குப் பயந்து இப்படி ஓடி வருகிறேன்'' என்று நினைத்து மறுபடியும் கங்கைக்குள் இறங்கிச் சென்ருர். பயமாக இருந்த போதும் குளித்துவிட்டுக் கரையேறினுர். இப்படி ஆபத்து வேளையிலும் தன் தத்துவத்தைச் செயல்படுத்தும் துணிச்சல் அவரிடம் இருந்தது.

உறவினர்களும் நண்பர்களும் ஹரியின் விசித்திர மான இந்த வேதாந்த வாழ்க்கையைப் பற்றி அவருடைய அண்ணனிடம் புகார் செய்தார்கள். ஆனால் அவர் தம்பியின் விருப்பப்படியே சமய வாழ்வில் ஈடுபடும்படி விட்டுவிட்டார். கீழே வருவது, ஹரி தான் ஸ்ரீராம கிருஷ்ணரை முதன் முதலில் சந்தித்த நிகழ்ச்சியைக் பற்றித் தாமே கூறியதாகும். ''நான் பதினான்கு அல்லது பதினைந்து வயது சிறுவனாக இருக்கும்போது ஸ்ரீராமகிருஷ் ணரை முதன் முதலில் கல்கத்தா பாக்பஜாரில் தீனநாத் போஸின் வீட்டில் பார்த்தேன். அப்போது குருதேவர் பெரும்பாலான நேரம் சமாதியிலேயே மூழ்கி இருந்தார். பரமஹம்சர் வருகிறார் என்ற செய்தி நாங்கள் இருந்த பகுதியில் எல்லோருக்கும் தெரிவிக்கப்பட்டது. குறிப்பிட்ட நாளில் அவரைக் காண்பதற்காக நான் சென்றேன். சிறிது நேரத்திற்குள் வாடகை வண்டி ஒன்று அந்த வீட்டின் முன் வந்து நின்றது. இரண்டு பேர் வண்டியிலிருந்து இறங்கினார் கள். கனமான நல்ல உடல் வலிவோடு கூடிய நெற்றியில் நாமமும் வலது கையில் தாயத்தோடும் ஒரு மனிதர் இறங்கினார். அவர் இருதயர் என்று பின்னால் தெரிந்து கொண்டேன். அவர் மற்றொரு மனிதரான ஸ்ரீராம கிருஷ்ணரைக் கையைப் பிடித்து வண்டியிலிருந்து இறக் கினார். குருதேவர் மெலிந்தவராக இருந்தார். சட்டை அணிந்திருந்தார். அவருடைய வேட்டியின் ஒரு பகுதி இடுப்பில் சுட்டப்பட்டிருந்தது. உலக நினைவே முழுவதும் இல்லாதவர்போல் அவர் காணப்பட்டார். நான் நெருங்கி நன்றாக அவர் முகத்தைப் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தபோது அவர் முகத்தைச் சுற்றி ஒளிவீசுவதைக் கண்டேன். உடனே என்மனத்தில் புத்தகத்தில் சுக தேவரைப் பற்றிப் படித்திருக்கிறோமே அவர் இவரைப்போல் தான் இருந்திருப்பாரோ என்ற எண்ணம் தோன்றியது. இருதயன் தன் கைகளால் தாங்கிவர குருதேவர் தள்ளாடிய படியே நடந்து வீட்டிற்குள் சென்றார். வீட்டில் சென்ற பின்னர் ஓரளவு அவருக்கு உலக நினைவு வந்தது. சுவரில் மாட்டப்பட்டிருந்த காளியின் பெரிய படத்தைப் பார்த்து வணங்கினார். பிறகு கிருஷ்ணனுக்கும் காளிக்கும் உள்ள ஒற்றுமையைக் கூறும் பாட்டொன்றைப் பாடினார். கூடி யிருந்தவர்களுக்கு மெய்சிலிர்த்துவிட்டது.''

இதற்குப் பிறகு இரண்டு அல்லது மூன்று ஆண்டுகள் கழித்து ஹரி குருதேவரைத் தட்சிணேசுவரத்தில் சந்

தித்தார். அன்று விடுமுறை நாள். குருதேவரின் அறையில் மிகுந்த கூட்டம்இருந்தது. குருதேவர் அவரைத் தனியாக அழைத்துச் சென்று விடுமுறை நாட்களைத் தவிர மற்ற நாட்களில் வரும்படியும், அப்போதுதான் அவரோடு தனியாகப் பேச முடியும் என்றும் கூறினார். ஹரிநாத் குருதேவரிடம் மிகுந்த பாசம் கொண்டார். அவரிடம் கேட்டதைப் போல ஞானமொழிகளை அவர் யாரிடமும் கேட்டதில்லை. அவர் படிப்பறிவில்லாதவராக இருந்த போதும் சாஸ்திரங்கள் கூறும் சத்தியத்தை நேரில் கண் டறிந்தவர்போல் தோன்றினார். குருதேவருடன் நெருங்கிப் பழகிய பிறகு ஒருநாள் ஹரி அவரிடம், ''இந்தக் கோயிலும் இங்குள்ள ஒவ்வோர் இடமும்தான் எவ்வளவு மகிழ்ச்சிகர மாவும் ஆனந்தமாகவும் உள்ளது, கல்கத்தா இதோடு ஒப்பிடும்போது நரகம் போன்றிருக்கிறது!'' என்றார். இதைக் கேட்ட குருதேவர் ஹரிக்கு உற்சாகமூட்டு வதற்காக, ''அது எப்படி? நீ பகவானின் தொண்டன். பகவானின் தொண்டன் எங்கிருந்தாலும் மகிழ்ச்சியோடு அல்லவா இருப்பான்!'' என்றார். 'நான் பகவானின் தொண்டன் என்பது எனக்குத் தெரியாது'' என்றார் ஹரி. குருதேவர் ''சத்தியத்தை ஒருவர் தெரிந்து கொண்டாக வேண்டுமென்பது அவசியம் இல்லை. உனக்குத் தெரிந் தாலும் தெரியாவிட்டாலும் நீ பகவானின் தொண்டன் தான்'' என்றார். இது ஹரிக்கு நம்பிக்கையையும் உற்சாகத்தையும் தந்தது.

சிறுவயதிலிருந்தே ஹரிக்குப் பெண்களைக் கண்டாலே ஒருவித வெறுப்பும் பயமும் இருந்து வந்தது. சிறுமி களைக் கூட அவர் தன் அருகில் வர விடமாட்டார். ஒருநாள் இது பற்றி குருதேவரோடு பேசிக் கொண்டிருந்த போது ஹரி பெண்களைப் பற்றிய தன் மன நிலையை வெளி யிட்டு, ''ஓ! அவர்களைப் பார்க்கவே எனக்குப் பிடிப்ப தில்லை'' என்றார். இதைக் கேட்ட குருதேவர் கண்டிப் பான குரலில், ''நீ முட்டாளைப்போல் பேசுகிறாய். பெண் களை வெறுத்து இழிவுபடுத்துவதா? அவர்கள் காளியின் வடிவங்கள். அவர்களை உன் தாயாக நினைத்து வணங்கு. அவர்களுக்கு மரியாதை செலுத்து. அவர்களின் பிடியி லிருந்து தப்பிக்க அது ஒன்றுதான் வழி. நீ எந்த அளவு அவர்களை வெறுக்கிறாயோ அந்த அளவு அவர்களின் வலையில் சிக்கிக் கொள்வாய்'' என்றார். குருதேவரின் இந்தக் கனல்பறக்கும் வார்த்தைகள் ஹரியின் மனத்தில்

ஊடுருவிப் பாய்ந்து சென்று பெண்களைப் பற்றி அவர் இது வரை கொண்டிருந்த எண்ணத்தையே மாற்றிவிட்டது. மற்றொருநாள் ஹரி குருதேவரிடம், ''ஒருவரிடம் ஞானம் தோன்றி இருக்கிறது என்பதை எப்படி அறிந்து கொள்வது?'' என்று கேட்டார். அதற்கு குருதேவர், ''ஒருவனுக்கு ஞானம் ஏற்படுமானால் அவன் குதித்துத் திரிய மாட்டான். வெளிப் பார்வைக்கு அவன் எப்போதும் போல்தான் இருப்பான். ஆனால் அவன் உலகைப் பார்க்கின்ற காட்சி மாறிவிடும். இரசவாதக் கல்பட்டு இரும்பு வாள் பொன்வாளாக மாறினாலும் பார்ப்பதற்கு உருவத்தில் முன்பு போலவேதான் இருக்கும். ஆனால் அதனால் யாரையும், எதையும் கொல்லமுடியாது. மிகவும் மென்மையாகிவிடும்'' என்றார்.

உண்மையான வேதாந்தியைப் போல் ஹரி கடினமான தவத்தையும் பிரம்மச்சரியத்தையும் கைக்கொண்டு வாழ்ந்தார். வேதாந்தத்தில் ஆழ்ந்து மூழ்க மூழ்க அதன் உயர்ந்த உன்னதமான இலட்சியம் அவர் உள்ளத்தைக் கொள்ளைகொண்டது. வேதாந்த நூல்களில் மூழ்கிய அவர் பல நாட்கள் தட்சிணேசுவரத்திற்குக் கூட வரவில்லை. இதைக் கவனித்த குருதேவர் ஒருநாள் ஹரி வந்ததும் ''ஏய்! என்ன இப்போதெல்லாம் நீ முன்புபோல் அடிக்கடி வருவதில்லை. வேதாந்த நூல்களைப் படிப்பதும் தியானம் செய்வதுமாக இருப்பதாகச் சொல்லுகிறார்களே. அது நல்லதுதான். வேதாந்தம் என்ன சொல்லுகிறது? பிரம்மம் மட்டுமே சத்தியம். மற்ற எல்லாமே பொய். இது தானே வேதாந்தம். இதைத் தெரிந்து கொண்டாயல்லவா! பொய்யை விட்டுவிட்டு சத்தியத்தைத் தேடு'' என்றார். குருதேவரின் இந்த மொழிகள் ஹரியின் மனத்தில் புதிய ஒளியைப் பாய்ச்சியது.

சில நாட்கள் கழித்து கல்கத்தா சென்ற குருதேவர் ஹரியை அவரது வீட்டிலிருந்து அழைத்து வரச் சொன்னார். அவர் வந்ததும் பாவநிலையில் மூழ்கி உலகைப் பாதி மறந்த நிலையில், ''இந்த உலகம் பொய் என்று பார்ப்பது அவ்வளவு சுலபமானதல்ல.'' என்று கூறிவிட்டுக் கூடியிருந்த பக்தர்களிடம், ''கடவுளின் மிகச் சிறந்த கருணையில்லாவிட்டால் இத்தகைய ஞானம் சாத்தியமானதல்ல. வெறும் சொந்த முயற்சிமட்டும் இதற்குப் போதாது. மனிதன் என்பவன் குறைவான ஆற்றலோடு கூடிய ஒரு சின்னஞ்சிறு பிராணி. அளவே கூற இயலாத ஞானத்தின்

பகுதியை எவ்வாறு அவனால் அறிந்து கொள்ள முடியும்?'' என்றார். குருதேவரின் இந்த வார்த்தைகள் தனக்காகவே சொல்லப்பட்டது போல் ஹரிக்குத் தோன்றியது. ஏனென்றால் அளவே இல்லாத வேதாந்த ஞானத்தைப் பெறுவதற்காக அவர் மிகவும் முயற்சி எடுத்துக் கொண்டு, தன் உடம்பில் ஒவ்வொரு அணுவையும்கூட அதற்காகவே தயார் செய்து கொண்டிருந்தார். குருதேவர் கடவுள் அருளின் அற்புதமான ஆற்றலைப் புகழ்ந்து ஒரு பாட்டுப் பாடினார். குருதேவரின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகித் தரையை நனைத்தது. ஹரியின் மனம் மிகவும் உருகியது. அவர் கண்களிலிருந்தும் கண்ணீர் வழிந்தது. அதன் பிறகு அவர் குருதேவரின் திருவடிகளில் பூரணமாகச் சரணடைந்து விட்டார்.

குருதேவர் ஹரியை மிகவும் நேசித்தார். அவரிடம் மறைந்து கிடக்கும் தெய்விக ஆற்றலைப் பற்றி மிகவும் உயர்வாகப் பேசுவார். ஒருமுறை ஹரி பல நாட்களாக தட்சிணேசுவரம் வரவில்லை. கடைசியில் ஒருநாள் அவர் வந்ததும் குருதேவர் துக்கம் தொண்டையை அடைக்க, 'ஏன் நீ இங்கே வருவதில்லை. உங்கள் எல்லோரையும், பார்ப்பதற்கு நான் மிகவும் விரும்புகிறேன். ஏனென்றால் நீங்கள் எல்லாம் கடவுளின் செல்லப்பிள்ளைகள் என்பதை நான் அறிவேன். இல்லையென்றால் உங்கள் வரவை எதற்காக நான் இப்படி எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்? உன்னால் எனக்கு ஒரு பைசாவுக்கு வெற்றிலை வாங்கக்கூட வழியில்லை. உன் வீட்டிற்கு வந்தால் நான் உட்காரத் தரையில் போடுவதற்கு உன்னிடம் ஒரு கிழிந்த பாய் கூடக் கிடையாது. இருந்தாலும் நான் உங்களை எவ்வளவு அதிகமாக நேசிக்கிறேன். இங்கே வராமலிருக்காதீர்கள். இங்கு வருவதன் மூலம் நீங்கள் எல்லாவற்றையும் அடையலாம். கடவுளை வேறு எங்காவது சென்று பார்க்க உங்களால் முடியுமானால் தாராளமாக அங்கே செல்லுங்கள். நான் வேண்டுவதெல்லாம் நீங்கள் கடவுளைக் காண வேண்டும். இந்த உலகத்தின் துன்பங்களைக் கடக்க வேண்டும். இறைவனின் ஆனந்தமான அழகை அனுபவிக்க வேண்டும் என்பதுதான். எப்படியாவது இந்தப் பிறவிக்குள் அதை அடைய முயலுங்கள். ஆனால் அன்னை காளி, நீங்கள் இங்கே (அதாவது தம்மிடம்) வருவீர்களானால் எந்தவித முயற்சியும் இல்லாமல் கடவுளைக் காணலாம் என்று கூறியிருக்கிறாள். அதனால்தான் உங்களை. நான் இங்கே

வரும்படி வற்புறுத்துகிறேன்'' என்று கூறிக் கண்ணீர்விட்டு அழுதார். ஹரி, பிற்காலத்தில் சுவாமி துரியானந்தர் என்னும் பெயரில் துறவியானுர்.

கங்காதர் ஹரியின் நண்பர். ஹரி குருதேவரை முதலில் பார்த்த அந்த நாட்களிலேயே கங்காதரும் குரு தேவரைப் பார்த்தார். ஹரியைப் போலவே இவரும் சிறு வயதிலிருந்தே கடுமையான தவப் பயிற்சிகளை மேற் கொண்டிருந்தார். தினந்தோறும் மூன்று வேளையும் குளிப் பார். உணவைத் தானே சமைத்துக் கொள்வார். நாள் முழுவதும் கீதை முதலான சமய நூல்களைப் படித்துக் கொண்டிருப்பார். ஒருநாள் யாரிடமும் சொல்லாமல் ஒரு சாதுவுடன் வீட்டை விட்டுப் போய்விட்டார். இந் தியா முழுதும் உள்ள புண்ணியத் தலங்களை எல்லாம் பார்க்க வேண்டும் என்பது அவர் விருப்பம். ஆனால் தன் பெற்ரோரைப் பார்க்க வேண்டும் என்னும் ஏக்கத் தால் ஒரு மாதத்திற்குப் பிறகு திரும்பிவிட்டார். இதற் குள் இவரது நண்பர் ஹரி குருதேவரிடம் போய் வரத் துவங்கியிருந்தார். ஒருநாள் கங்காதர் அவருடன் 1884-ஆம் ஆண்டில் குருதேவரைக் காணத் தட்சிணேசுவரம் சென்ருர். குருதேவர் அவரை இதற்கு முன்பே மிகவும் தெரிந்தவர் போல் மிகுந்த அன்புடன் வரவேற்று மனம்விட்டுப் பேசினுர். அவர் சென்ற ஊர்களைப் பற்றியும் அவர் இதற்குமுன் தம்மைப் பார்த்திருக்கிருரா என்பது போன்ற செய்திகளையெல்லாம் கேட்டார்.

அதன் பிறகு கங்காதர் அடிக்கடித் தட்சிணேசுவரம் வரத் துவங்கினுர். அவர் மிகவும் வைதீகமான வாழ்க்கை நடத்தியதால் பகலில் சென்ருல் எங்கே காளிகோயில் பிர சாதத்தைத் தன்னைச் சாப்பிடச் சொல்வாரோ என்று நினைத்து மாலையிலேயே தட்சிணேசுவரம் செல்வார். குரு தேவர் இதைக் கவனித்து வந்தார். ஒருநாள் பகல் நேரத் தில் கங்காதர் காளி கோயிலில் தங்கும்படி ஆகிவிட்டது. பகல் உணவைத் தானே சமைக்கத் துவங்கினுர். இதைக் கண்ட குருதேவர், ''காளியின் பிரசாதம் கங்கைநீரில் சமைக்கப்படுவது; மிகவும் தூய்மையானது. ஏன், மிகப் புனிதமானதாகக் கருதப்படும் ஹவிஸ் அன்னத்தை* விடத் தூய்மையானது. எனவே அதைச் சாப்பிடு. தனியாகச்

*அரிசியையும் காய்கறிகளையும் சேர்த்து தாளிக்காமல் சமைக்கப்படும் உணவு. இது மிகவும் தூய்மையானதாகக் கருதப்படுகிறது.

சமைக்க வேண்டாம்'' என்றார். ஸ்ரீராமகிருஷ்ணரின் சொற்களைத் தட்டமுடியாமல் சாப்பிடுவதற்குக் காளி கோயிலுக்குச் சென்றார். வழியில் திரும்பிப் பார்த்தவர், தான் காளி கோயிலுக்குப் போகிறாரோ இல்லையா என்பதைக் குருதேவர் பின்னால் நின்று பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டார். காளி கோயிலுக்குச் சென்றவர் அங்கே தனக்குப் பரிமாறப்பட்ட உணவில் மீனையும் இறைச்சியையும் தவிர்த்து மற்ற உணவு முழுவதையும் உண்டார். பிறகு அங்கிருந்து குருதேவரின் அறைக்குத் திரும்பியவர், அங்கே குருதேவர் தனக்காக வெற்றிலையோடு தயாராக நின்றுகொண்டிருப்பதைக் கண்டார். வெற்றிலைப் போட்டுப் பழக்கமில்லாத கங்காதர் வேண்டாமென்று மறுத்தார். இதைக் கண்ட குருதேவர், ''ஏன்? ஏன் வேண்டாமென்று மறுக்கிறாய்? இதனால் என்ன தீங்கு வரப்போகிறது? நரேந்திரன் ஒருநாளைக்கு நூறுமுறை வெற்றிலை போட்டுக் கொள்வான். எப்போது சாப்பிடச் சொன்னாலும் மீனும் இறைச்சியும் சாப்பிடுவான். ஆனாலும் அவன் மனம் எப்போதும் மிக உயர்ந்த நிலையிலேயே இருக்கிறது. எல்லாப் பொருள்கள்ிலும் அவன் பிரம்மத்தையே காண்கிறான். நீ சிறுவன். வெற்றிலைப் போடுவது மீன் சாப்பிடுவது இவற்றையெல்லாம் விட்டுவிடக் கூடாது. தனியாக ஹவிஸ் உணவு சமைத்துச் சாப்பிட வேண்டிய அவசியமும் இல்லை. நரேந்திரனைப் போய் பார். அவனோடு சேர்ந்து பழகு'' என்றார்.

குருதேவரின் அறிவுரைப்படி நரேனைப் பார்க்க கங்காதர் ஒருநாள் அவர் வீட்டிற்குச் சென்றார். நரேந்திரரின் தோற்றம், பேச்சு, வெளிப்படையாகத் தாராளமாகப் பழகும் குணம் இவைகளால் மிகவும் கவரப்பட்ட அவர், நரேந்திரரோடு எப்போதும் இருக்கப் பெரிதும் ஆவல் கொண்டார். நரேந்திரருக்கும் கங்காதரை மிகவும் பிடித்து விட்டது. அவரிடம் மிகுந்த அன்பு கொண்டார். 'கங்கா' என்று அவரைச் செல்லமாக அழைப்பார். கங்காதர் தன்னுடைய வைதீக வாழ்வைச் சிறிதும் மாற்றாமல் வாழ்ந்து வந்தார். ஸ்ரீராமகிருஷ்ணரோ அவருடைய இந்தப் பழக்கத்தை மாற்றிக் கொள்ளும் படிக் கூறி வந்தார். இதற்கான காரணம் கங்காதருக்குப் புரியவில்லை. 'வைதீக வாழ்க்கையைச் சாஸ்திரங்கள் உயர்வாகப் பேசுகின்றன. அதைக் கடைப்பிடிக்க வேண்டும் என்றும் கூறுகின்றன. பிறகு ஏன் குருதேவர் அதை

விட்டு விடும்படித் தன்னிடம் கூறுகிறுர்? இவருக்கு வைதீக வாழ்வில் நம்பிக்கை இல்லையா?'' என்று நினைத்தார்.

சில நாட்கள் கழித்து கங்காதர் தட்சிணேசுவரம் சென்றுர். குருதேவரின் அறையில் பக்தர்கள் கூட்டமாக இருந்தனர். குருதேவர் பேசிக் கொண்டிருந்தார். அப்போது பக்தர்களில் ஒருவர் குருதேவரிடம், ''ஐயா, உங்களிடம் வரும் இளைஞர்களுக்கு நீங்கள் உலகைத் துறந்து சந்நியாசியாகும்படி உபதேசிக்கிறீர்களே, இது சரியா?'' என்று கேட்டார். அதற்கு குருதேவர், ''இங்கே வரும் இளைஞர்கள் தூய்மையே வடிவானவர்கள். சிறு வயதிலிருந்தே கடவுளைக் காண ஆவல் கொண்டிருப்பவர்கள். சிலர் இந்தச் சிறுவயதிலேயே ஒரு நாளைக்கு மூன்றுமுறை குளிக்கிறுர்கள். தாங்களே ஹவிஸ் உணவு சமைத்துச் சாப்பிடுகிறுர்கள். நாள் முழுவதையும் சாஸ்திரங்களைப் படிப்பதிலும் மற்றச் சாதனைகளிலும் செலவழிக்கிறுர்கள். இயல்பாக வாழ்க்கையின் சுகங்களைத் தேடி ஓட வேண்டிய இந்தச் சிறு பையன்கள் அவற்றை உதறிவிட்டு இப்படிச் சந்நியாசி போல் வாழ்கிறுர்களே. இது ஒரே பிறவியில் அடையக் கூடியதா? சிறுவயதிலேயே அவர்கள் இத்தகைய சமய உணர்வைப் பெற வேண்டுமென்றுல் அவர்கள் சென்ற பிறவிகளில் எவ்வளவு தவமும் சாதனையும் பழகியிருக்க வேண்டும்? அவர்களிடம் துறவு சந்நியாசம் முதலியவற்றைப் பேசாமல் வேறு யாரிடம் போய்ப் பேசுவது?'' என்றுர். இதைக் கேட்ட கங்காதரின் உள்ளம் மகிழ்ச்சியால் பூரித்தது. குருதேவருக்கு வைதீக வாழ்க்கையில் நம்பிக்கை இல்லையோ என்ற சந்தேகமும் நீங்கியது.

முடிந்த போதெல்லாம் கங்காதர் குருதேவரைச் சந்தித்தார். காசிப்பூரில் குருதேவர் நோய்வாய்ப்பட்டிருந்த போதும் அவருக்குச் சேவை செய்தார். அப்போதும் கூடத் தன் வைதீக வாழ்க்கையை விடாமல் தானே சமைத்துச் சாப்பிட்டு வந்தார். குருதேவருடன் அவர் பழகிய பழக்கம் அவரிடம் இயல்பாக இருந்த தெய்விக உணர்வை வலிமைபெறச் செய்தது. அதன் விளைவாகப் பிற்காலத்தில் மிகச் சிறந்த துறவியாக விளங்க முடிந்தது. அவரது சந்நியாசப் பெயர் சுவாமி அகண்டானந்தர் என்பதாகும்.

சாரதா எனப்படும் சாரதா பிரசன்னமித்ரா ஒரு பணக்கார ஜமீன்தார் குடும்பத்தில் பிறந்தவர். குழந்தைப்

பருவத்திலிருந்தே ஆழ்ந்த கடவுள் பக்தி உடையவரா கவும் பூஜை செய்வதில் மிகுந்த ஆர்வம் கொண்டவராக வும் இருந்தார். இளம் வயதிலேயே இவர் ஸ்ரீராம கிருஷ்ணரிடம் வந்துவிட்டார். ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய் வீகக் கண்களுக்கு சாரதாவின் மனத்திலிருந்த பலமும் பலவீனங்களும் தெளிவாகத் தெரிந்தன. அவருடைய பல வீனங்களை வெளிப்படையாக நீக்கச் சரியான வழி முறை களை குருதேவர் அவருக்குச் சொல்லித் தந்தார்.

சாரதாவின் வீட்டில் நிறைய வேலைக்காரர்கள் இருந்தார்கள். அவருடைய காலில் உள்ள செருப்பைக் கழற்றுவது, போடுவது முதல் எல்லா வேலைகளையும் வேலைக்காரர்களே செய்வார்கள். தான் ஒரு பெரிய ஜமீன்தார் என்ற உணர்வும் தனக்குத்தான் மற்றவர்கள் வேலை செய்ய வேண்டுமே தவிர தான் யாருக்கும் எதுவும் செய்யக் கூடாது என்றும், அப்படிச் செய்வது மிகவும் இழிவு என்றும் அவர் மனத்தில் ஆழமாகப் பதிந்திருந்தது. இந்தப் பலவீனத்தோடு அவர் குருதேவரிடம் வந்தார்.

அன்று வெயில் மிகவும் கடுமையாக இருந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர் சாரதாவிடம், ''பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வந்து என் கால்களைக் கொஞ்சம் கழுவிவிடு'' என்றார். இதைக் கேட்ட சாரதா திகைத்து நின்றுவிட்டார். கோபத்தாலும் அவமானத்தாலும் அவர் முகமெல்லாம் ஜிவ்வென்று சிவந்துவிட்டது. வேலைக்காரர் கள் செய்ய வேண்டிய வேலையைத் தன்னிடம் செய்யச் சொல்லுகிறாரே என்று நினைத்தார். இதையெல்லாம் கவனிக்காததுபோல் குருதேவர் பேசாமல் நின்று கொண் டிருக்கும் சாரதாவிடம் திரும்பத் திரும்பத் தன் வேண்டு கோளைச் சொல்லிக் கொண்டிருந்தார். சாரதாவின் நண்பர்களும் மற்றவர்களுமாக அறையில் பலர் நின்று கொண்டிருந்தார்கள். ஒன்றும் செய்ய முடியாத சாரதா இறுதியில் ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வந்து குருதேவரின் கால்களின் மீது ஊற்றித் தமது கைகளால் கழுவினார். இந்த ஒரு சிறிய செயலால் சாரதாவிடம் இருந்த குலப்பெருமை தூள்தூளாகி விட்டது. சாதி, மதம், ஏழை, பணக்காரன் என்ற வித்தி யாசமெல்லாம் பாராது எல்லோருக்கும் தன்னலமற்ற சேவை செய்யும் அவரின் இயல்பான மனப்பான்மை வெளிப்படத் துவங்கியது. குருதேவருக்கும் ஏன், மனிதச்

சமுதாயத்திற்காகவும்கூட எந்தவிதச் சேவையையும் செய்ய எப்போதும் தயாராகிவிட்டார்.

சாரதா குருதேவரோடு வாழ்ந்தபோது பல அற்புத மான அனுபவங்களைப் பெற்ருர். அவற்றில் ஒன்று ஆண் பெண் என்னும் வேற்றுமை நினைவு அவர் மனத்தி லிருந்து முற்றிலும் நீங்கிவிட்டதாகும். முதலில் அந்த நிலையை அடைய அவர் மிகவும் பாடுபட்டார். இறுதியில் ஒரு குறிப்பிட்ட நாளில் தியானத்தில் ஆழ்ந்திருந்தபோது குருதேவரின் அருளால் அந்த நிலையை அடைந்தார். கானல் நீர்போல், காமம் என்பது அவருடைய மனத்திலிருந்து மறைந்தது. இவர் பிற்காலத்தில் சுவாமி திரிகுணுதீதானந்தர் என்ற பெயருடன் துறவியானுர்.

துளசி எனப்படும் துளசிசரண்தத்தா கல்கத்தாவில் போஸ்பரா பகுதியில் வாழ்ந்துவந்தார். ஒருநாள் அவர் தன் வீட்டின் அருகே நின்று கொண்டு தன் நண்பர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். அப்போது பரமஹம்சர் ஒருவர் அருகில் உள்ள பலராம்போஸின் வீட்டிற்கு வரப் போவ தாகக் கேள்விப்பட்டார். அவரைப் பார்க்கப் பலர் செல்லப் போவதை அறிந்த துளசி, தானும் அங்கே செல்லத் தீர்மானித்தார். அவர் பலராமின் வீட்டிற்குச் சென்றபோது அங்கு கூடத்திலும் தாழ்வாரத்திலும் கூட்டம் நிறைந்திருப்பதைக் கண்டார். கூடத்தின் நடுவே தலையணை போடப்பட்ட ஓர் இருக்கை காலியாக இருப்பதைக் கண்டார். சிறிது நேரத்தில் ஒரு மனிதர் முழுவதுமாகத் தம்மை மறந்த நிலையில் குடிகாரனைப்போல் கால்கள் தடுமாற வீட்டிற்குள்ளிருந்து கூடத்திற்கு வருவதைக் கண்டார். வழியில் நின்றிருந்த துளசியை ஒரு கணம் நின்று உற்றுப் பார்த்துவிட்டு தள்ளாடியபடியே கூடத்திற் குள் சென்று அமர்ந்தார் அவர். துளசியின் மூச்சே நின்றது போலாகிவிட்டது. குருதேவரை வணங்குவதைக் கூட மறந்து துளசி அப்படியே நின்று கொண்டிருந்தார். அவருடைய மார் புக்குள் இனம் காண முடியாத ஒருவகையான உணர்வு பாய்ந்து சென்று இதயத் துடிப்பையே நிறுத்துவதுபோல் இருந்தது. இந்த நிலையிலிருந்து விடுபட்டதும் அங்கிருந்து தன் வீட்டுக்கு ஓடிவிட்டார். அப்போது அவருக்குப் பதி னெட்டு வயதிருக்கும்.

சில நாட்கள் கழித்து துளசி தன் நண்பரான ஹரியைப் பார்க்கச் சென்ருர். அப்போது ஹரி தட்சிணேசுவரத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார். எங்கேயென்று தெரியாம

லேயே துளசியும் உடன் சென்றார். அவர்கள் தட்சிணேசு வரத்தை அடைந்ததும் பரமஹம்சர் கல்கத்தாவிற்குப் போயி ருப்பதை அறிந்தனர். துளசி குருதேவரின் அறைக்குள் சென்று அங்கு மாட்டியிருந்த படங்களையெல்லாம் பார்த்தார். அவற்றின் நடுவில் குருதேவரின் படமும் இருந்தது. அதைக் கண்டு துணுக்குற்ற துளசி ஹரியிடம் ''இவரை நான் பார்த்திருக்கிறேன்'' என்றார். துளசி பலராம் வீட்டில் அவரைப் பார்த்ததாகக் கூறியதும் ஹரி, ''அப்படியென்றால் நீ பார்த்தவர் ஸ்ரீராமகிருஷ்ணர்தான்'' என்றார்.

அதன் பிறகு ஒருநாள் துளசி தனியாக தட்சிணேசு வரத்திற்கு ஸ்ரீராமகிருஷ்ணரைத் தேடிச் சென்றார். அப் போது ஸ்ரீராமகிருஷ்ணர் தம் அறையில் பகல் உணவு சாப்பிட்டுக் கொண்டிருந்தார். ஒருவர் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் இடத்திற்குப் போவதோ, அப்போது அவரை வணங்குவதோ கூடாது என்பது துளசிக்குத் தெரியவில்லை. குருதேவரும் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. நேராக குருதேவரின் அருகில் சென்று முதல் தடவையாக அவரை வணங்கிவிட்டுத் தரையில் உட்கார்ந்தார். குருதேவரும் தம் சாப்பாட்டை முடித்து விட்டு அவரிடம் பேசத் துவங்கினார். அப்போது யாரும் அறையில் இல்லை. தட்டியால் மூடப்பட்டிருந்த வராந் தாவில் அன்னை சாரதாதேவி மட்டும் இருந்தார். துளசியைப் பற்றி யார் என்னவென்று கேட்டு முடிந்ததும் குருதேவர் திடீரென்று, ''நேற்று உன்னைப் போலவே ஒரு பையன் இங்கே வந்தான். என்னிடம் உதவிபுரிபவனாக இருக்கச் சொன்னான்'' என்றார். துளசிக்கு ஒன்றும் புரியவில்லை. பேசாமல் இருந்தார். குருதேவரே தொடர்ந்து, ''அப்படி என்றால் என்ன தெரியுமா? பக்தனையும் கடவுளையும் சேர்த்து வைப்பது. அதற்கே உதவி கோரினான். உதவி புரிபவரே குரு குருவிற்கும் கடவுளுக்கும் வித்தியாசமே இல்லை'' என்றார். பிறகு துளசியின் தோளில் கையை வைத்தபடி அவரை அழைத் துக்கொண்டு பஞ்சவடிக்குச் சென்றார். அங்கே சென்ற தும் தாம் முன்பு தவம் செய்த இடத்தில் கட்டப்பட்ட மேடையைத் தொட்டு வணங்கி அதன் கீழ்ப்படியில் அமர்ந் தார். பிறகு பரவசநிலையில் அன்னையுடன் பேச ஆரம்பித்து விட்டார். அவர் பேசியதில் 'அம்மா' 'அம்மா' என்ற சொற்களைத் தவிர துளசிக்கு வேறு எதுவும் புரியவில்லை. சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் அறைக்குத் திரும் பினார். துளசி வீட்டிற்குப் புறப்படும்போது மிகுந்த

அன்போடு குருதேவர் அவரை மீண்டும் வருமாறு கூறி ஞர். குருதேவரின் மறைவிற்குப் பிறகு துளசி ஸ்ரீராம கிருஷ்ண இயக்கத்தில் சுவாமி நிர்மலானந்தர் என்ற பெயரில் துறவியாஞர்.

பெல்கேரியாவைச் சேர்ந்த ஹரிபிரசன்ஞ 1883-ஆம் ஆண்டில், கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது குருதேவரைச் சந்தித்தார். அவருடைய கல்லூரி நண்பர் களான சசியும் சரத்தும் அவரை குருதேவருக்கு அறிமுகப் படுத்தினர். ஹரிபிரசன்ஞ அதன் பிறகு பலமுறை குரு தேவரைச் சந்தித்தார். அவரது வீடு தட்சிணேசுவரத்தி லேயே இருந்தது. குருதேவர் அவரிடம் மிகுந்த அன்பு கொண்டு ஆன்மிகச் சாதனையில் அவரை ஈடுபடுத்தத் துவங்கிஞர். அடிக்கடி வந்து கொண்டிருந்த ஹரிபிரசன்ஞ சிறிது காலம் வராமலே நின்றுவிட்டார். குருதேவர் சரத்தின் மூலம் அவரை வரும்படிச் சொல்லி அனுப்பிஞர். ஆஞல் ஹரிபிரசன்ஞவால் வரமுடியவில்லை. இதைக் கேட்ட குரு தேவர், ''ஆமாம் அவன் வரமாட்டான். இப்போது அவன் வரமாட்டான் என்று அன்னை எனக்குச் சொன்ஞள்'' என்ருர். இதை நம்பாத சரத் பலமுறை ஹரிபிரசன் ஞவை குருதேவரிடம் வரும்படி வற்புறுத்தி அழைத்துக் கொண்டே இருந்தார். ஆஞல் பல்வேறு தடைகள் ஏற்பட்டு அவரால் வர முடியாமலே போய்விட்டது.

குருதேவர் ஹரிபிரசன்ஞவுக்குப் பல உபதேசங்கள் செய்தார். அவைகளில் மிகவும் முக்கியமானது 'ஒரு பெண், பொன்னைப் போல் தூயவளாக இருந்தாலும், அளவற்ற பக்தியால் உலகையே மறந்து பூமியில் விழுந்து புரண்டு கொண்டிருந்தாலும் கூட அவளைப் பார்ப்பது ஆபத்தானது' என்பதாகும். ஒருநாள் குருதேவர் அவரிடம், 'வீடு வீடாகச் சென்று பிச்சையெடுத் துச் சாப்பிடுவாயா?' என்று கேட்டார். 'சாப்பிடுவேன்' என்று பதிலளித்தார் ஹரிபிரசன்ஞ. குருதேவர் ஹரிபிரசன்ஞ வின் எதிர் காலத்தைப் பற்றித் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். அதஞல்தான் அவரிடம் துறவு மனப்பான் மையைத் தூண்டி வளர்த்தார். பிற்காலத்தில் இவர் சுவாமி விஞ்ஞாஞனந்தர் என்ற பெயரில் துறவியாஞர்.

## 43. காளியும் சுபோதும்

காளி என்று அழைக்கப்படும் காளிபிரசாத் 1883-ஆம் ஆண்டின் இறுதியில் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் வந்தார். அவரது தந்தை கல்கத்தாவில் பள்ளி ஆசிரியராக இருந்தார். இளமையிலேயே மிகுந்த கடவுள் பக்தி உடையவராக இருந்த காளி அப்போதே கீதை முதலான நூல்களைப் படிப்பார். குறிப்பிட்ட வயது வந்ததும் பள்ளிக்கு அனுப்பப்பட்டார். பாபுராம் அவருடைய வகுப்புத் தோழர். பள்ளியில் படிக்கும்போது காளி மிக அழகாக ஓவியம் வரைவார். இதைக் கண்ட அவருடைய ஓவிய ஆசிரியர் எதிர்காலத்தில் அவர் ஒரு சிறந்த ஓவியக் கலைஞனாக வருவார் என்று பாராட்டினார். அதைக் கேட்ட காளி, 'நான் எதிர்காலத்தில் ஓவியனாக விரும்பவில்லை' என்றார். ஆசிரியர் காரணம் கேட்டபோது, ''ஓவியன் ஒரு பொருளின் புற அழகை மட்டுமே காண்கிறான். ஆனால் தத்துவாசிரியனோ அத்துடன் நிற்காமல் பொருளின் அடிப்படையையே ஆராய்ந்து உண்மையை அறிய முற்படு கிறான். நான் தத்துவாசிரியனாக ஆவேனே தவிர ஓவியனாக மாட்டேன்'' என்றார்

இந்து சாஸ்திரங்களில் உள்ளதை அறிந்து கொள்ளும் ஆவலால் பலவகையான நூல்களை இரவும் பகலும் படித் தார். யோக சாஸ்திரங்களே காளியின் மனத்தை மிகவும் கவர்ந்தன. குரு இல்லாமல் ஒருவர் யோகியாக முடியாது என்று ஒருநாள் புத்தகம் ஒன்றில் படித்தார். அதனால் தனக்கும் ஒரு குரு வேண்டும் என்று விரும்பிய அவர் இந்த விஷயத்தைப் பற்றித் தன் வகுப்புத் தோழன் ஒருவனிடம் பேசிக் கொண்டிருந்தபோது ஸ்ரீராமகிருஷ்ண ரைப் பற்றிய பல விஷயங்களை அவன் சொல்லக் கேட்டார். சில நாட்களுக்குப் பிறகு காளி பிரசாத் குரு தேவரைக் காணச் சென்றார். காலையில் கல்கத்தாவி லிருந்து புறப்பட்ட அவர் வழி தெரியாததால் பல இடங் களில் அலைந்து பசியோடும் களைப்போடும் மிகுந்த துன்பப் பட்டுத் தட்சிணேசுவரத்தை அடைந்தார். அங்கே இந்தத் துன்பத்திற்கு மேல் துன்பமாக ஏமாற்றமே காத்திருந்தது. ஏனெனில் அப்போது குருதேவர் கல்கத்தாவிற்குச்

சென்றிருந்தார். இதை அறிந்ததும் என்ன செய்வதென்று தோன்றுதவராய் அங்கு அப்படியே உட்கார்ந்துவிட்டார். அவரிடம் ஏதாவது வாங்கிச் சாப்பிடவோ, கல்கத்தா திரும்பவோ பணம் ஏதும் இல்லை. அந்த நேரத்தில் அதிர்ஷ்டவசமாக மற்றொரு இளைஞர் அங்கே வந்து அவரை விசாரித்தார். அது சசிபூஷண். காளி தன்னுடைய சோகமான அலைச்சலைக் கூறி கல்கத்தாவிற்குத் திரும்பிப் போவதாகக் கூறினார். சசி அவருக்குச் சாப்பிட உணவு தந்து களைப்பை எல்லாம் போக்கி, இரவு குருதேவர் வந்ததும் அவரைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று அங்கேயே தங்கச் செய்தார்.

இருவரும் ஒன்றாகக் கோயிலைச் சுற்றிப் பார்ப்பதிலும் பேசுவதிலும் பொழுதைக் கழித்தனர். காளி பிரசாத் ஆவலோடு குருதேவரின் வருகையை நோக்கிக் காத்திருந்தார். இரவு வந்தது. அப்போது குருதேவரின் காலடியும், 'காளி, 'காளி' என்று மும்முறை அன்னை பவதாரிணியை அழைத்த அவருடைய குரலும் கேட்டது. சில நிமிடங்களில் தன் அறைக்குள் நுழைந்த குருதேவரிடம் சசி, காளி பிரசாத் வந்திருப்பதைக் கூறியதும் குருதேவர் அவரை அழைத்து வரும்படிக் கூறினார். மிகுந்த பயபக்தியோடு கைகால்கள் நடுங்க காளி அறைக்குள் நுழைந்தார். சடை முடியும் இளைத்துப் போன உடலுமாக அங்கே ஒருவர் இருப்பார் என்று காளி நினைத்ததற்கு மாறாக நடுத்தர வயதில் சிரித்த முகத்தோடு சாதாரண மனிதர் ஒருவர் உட்கார்ந்திருப்பதைக் கண்டதும் மிகுந்த ஆச்சரியமடைந்தார். குருதேவர் காளி பிரசாத்தைச் சில கேள்விகள் கேட்டுவிட்டு காலையில் மீண்டும் பார்க்கலாம் என்று கூறினார். காளி பிரசாத் குருதேவரின் அறையை அடுத்த வராந்தாவில் இரவு உறங்கினார். காலையில் குருதேவரைச் சந்தித்தார். காளிபிரசாத்திடம் பேசிக் கொண்டே வந்த குருதேவர் அவருக்குத் திருமணமாகி விட்டதா என்று கேட்டார். இல்லையென்று சொல்லிய காளிபிரசாத் தன் பெற்றோர் திருமணம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்துவதாகச் சொன்னார். குருதேவர் அவரை அங்கிருந்து வடக்கே உள்ள வராந்தாவிற்கு அழைத்துச் சென்று அங்கிருந்த மரக் கட்டிலில் உட்கார வைத்து, மெல்லத் தொட்டார். காளி பிரசாத்திற்குத் தன் உடம்பிற்குள் ஏதோ ஒரு சக்தி புகுவதுபோல் தோன்றியது. பிறகு அவருக்குத் தியானம் செய்யவேண்டிய முறைகளைக் கூறி, காளி கோயி

லுக்குச் சென்று சிறிது நேரம் தியானம் செய்யும்படி அவரைக் குருதேவர் அனுப்பிவைத்தார். காளி பிரசாத் மிகுந்த மகிழ்ச்சியோடு கல்கத்தா புறப்பட்டபோது மீண்டும் வருமாறு குருதேவர் அன்புடன் அழைத்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் காளி பிரசாத்தைப் பற்றிய பல செய்திகளைக் கூறினார். அவருடைய புருவங்கள் ஸ்ரீகிருஷ்ணனை நினைவுபடுத்துகிறது என்றும் ஸ்ரீகிருஷ்ணனின் அம்சங்கள் பல காளியிடம் இருப்பதாகவும் கூறினார். காளி தனக்கு யோகத்தில் இருக்கும் ஆர்வத்தைப் பற்றிக் கூறியதும் குருதேவர், ''நீ சென்ற பிறவியில் யோகியாக இருந்தாய். அதனால்தான் இவ்வளவு சிறிய வயதில் உனக்கு யோகத்தில் மிகுந்த நாட்டம் இருக்கிறது'' என்றார். ஆரம்பத்தி லிருந்து காளியின் ஒழுங்கும் தூய்மையும் குருதேவரின் கவனத்தைக் கவர்ந்தன. எதையும் திட்டமிட்டு முறை தவறாமல் செய்யும் காளியை குருதேவர் எப்போதும் புகழ் வார்.

காளி குருதேவரின் மேற்பார்வையில் சாதனைகள் பயிலத் துவங்கினார். குருதேவரின் அருளால் பலவகையான வியக்கத் தக்க தெய்வீகக் காட்சிகளைக் கண்டார். ஒருநாள் தெய்வீகக் காட்சி ஒன்றில், இதற்கு முன்பு தோன்றிய அவதார புருஷர்களோடு குருதேவரும் ஒன்றாக இருக்கக் கண்டார். அந்தப் பழைய அவதார புருஷர்கள் ஒவ்வொருவராக ஸ்ரீராமகிருஷ்ணரின் உடம்பிற்குள் புகுந்து மறைவதையும், பிறகு வெளி வருவதையும் கண்டார். இக்காட்சி, முன்பு தோன்றிய எல்லா அவதார புருஷர் களாகவும் வந்தவர் ஸ்ரீராமகிருஷ்ணரே என்று காளியை உணரச் செய்தது. காளி எல்லாவிதமான சாதனைகளையும் எளிதில் தனதாக்கிக் கொள்ளும் மனம் படைத்தவராக இருந் தார். தியானத்தின்போது எப்போதும் தேவ, தேவியர் களின் காட்சியைக் காண்பார். ஒருநாள் எல்லாத் தெய் வங்களும் ஒளிமயமான ஒரு வடிவத்தில் மறைவதைக் கண்டார். இந்தக் காட்சியை குருதேவரிடம் கூறினார். அதைக் கேட்ட குருதேவர், ''ஆ! நீ வைகுந்தத்தைப் பார்த்திருக்கிறாய், இனிமேல் உனக்கு இதுபோன்ற காட்சி கள் எல்லாம் தோன்றாது. அந்த நிலையைக் கடந்து மேலே சென்றுவிட்டாய்'' என்று கூறினார். இது முற்றிலும் உண்மையாகிவிட்டது. அதன் பிறகு காளியின் தியா னத்தில் முன்னைப்போல் தெய்வீகக் காட்சிகள் தோன்று வதில்லை. அதற்கு பதிலாகப் உருவமற்ற பிரம்மத்துடன்

தொடர்பான எல்லையற்ற பரந்த வெளி முதலியன தோன்ற ஆரம்பித்தன.

காளி ஸ்ரீராமகிருஷ்ணரின் அந்தரங்க பக்தர்களில் ஒருவராவார். அவர் அடிக்கடி குருதேவரைச் சந்தித்தார். சில நாட்களில் இரவிலும் குருதேவரோடு தங்குவார். அவர் தூண்டில் போட்டு மீன்பிடிப்பதில் திறமை வாய்ந்தவர். எனவே கோயில் தோட்டத்துக் குளத்தில் அடிக்கடி மீன் பிடிப்பார். ஒரு நாள் மிகப் பெரிய மீன்கள் மூன்று நான்கைப் பிடித்தார். இதை அறிந்த குருதேவர் அவரிடம், ''ஏன் இப்படிப்பட்ட வேலைகளைச் செய்கிறாய்?'' என்று கேட்டார். இதைக் கேட்ட காளி உடனே, ''நான் செய்ததில் என்ன தவறு இருக்கிறது? உலகில் உள்ளது அனைத்தும் ஆத்மாதான். ஆத்மா என்பது அழியாதது. எனவே உண்மையில் நான் மீன்களைக் கொல்லவே இல்லை'' என்றார். இதைக் கேட்டு அவருடைய அறியாமைக்கு இரக்கம் கொண்டு குருதேவர், ''மகனே! நீ பேசுவது தவறான தத்துவம். உலகில் உள்ள எல்லாவற்றையும் ஆத்மாவாகக் கண்டவனுக்கு எந்த உயிருக்கும் தீங்கு செய்யவே தோன்றாது. அது அவனுடைய இயல்புக்கு விரோதமானதாகும். பிழையான எதையும் அவன் மனம் எண்ணவே செய்யாது. இதை ஆழ்ந்து சிந்தித்துப் பார்'' என்றார்.* காளி மௌனமாக அவ்விடத்தை விட்டு அகன்றார். மூன்று நாட்கள் குருதேவர் சொன்னதையே ஆழ்ந்து. சிந்தித்துக் கடைசியில் அந்த உண்மையை அறிந்து கொண்டார். இவர் பிற்காலத்தில் சுவாமி அபேதானந்தர் என்ற பெயருடன் துறவியானார்.

சுபோத் குருதேவரைச் சந்திக்கும்போது பதினேழு வயது இளைஞர். உயர்நிலைப்பள்ளியில் படித்துக் கொண்டிருந்தார். கல்கத்தாவில் தான்தானியா என்ற இடத்தில் காளிகோயிலைக் கட்டிய பக்தி மிகுந்த சங்கர்கோஷ் குடும்பத்தைச் சேர்ந்த சுபோதிற்குப் பள்ளிக்கூட படிப்பை விட ஆன்மிக வாழ்வுக்கான கல்வியிலேயே கவனம் சென்றது. ஒருநாள் அவரது தந்தை ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள் என்ற நூலை அவரிடம் தந்தார். அந்த

---

*குருதேவர் யோகினுக்கும் பலராமுக்கும் உயிர்களைக் கொல்வதில் தவறில்லை என்று கூறிய அறிவுரைகளை இங்கே நினைவுகூர வேண்டும். யார் யாருக்கு எந்த அறிவுரை தேவையோ அவற்றை அவரவர்களுக்குக் கொடுப்பது குருதேவரின் இயல்பு.

நூலால் மிகவும் கவரப்பட்ட சுபோத் ஸ்ரீராமகிருஷ்ண ரைப் பார்க்கப் பெரிதும் விரும்பினார். இதையறிந்த சுபோதின் தந்தை குடும்பத்தோடு ஒருநாள் தட்சிணேசு வரம் சென்று அவரைக் காணலாம் என்றார். சுபோதால் அவ்வளவு நாட்கள் காத்திருக்க முடியவில்லை. ஒருநாள் தன் நண்பன் க்ஷிரோதோடு தட்சிணேசுவரம் புறப்பட் டார். இது 1885-ஆம் ஆண்டில் நடந்தது.

குருதேவர் ஒரு மாயமந்திரக்காரனைப் போல் இருப்பார் என்று சுபோத் நினைத்தார். இதற்கு முன் அவர் எந்த சாதுவோடும் பேசியதே இல்லை. எனவே தன் நண்பரிடம், ''நான் இதற்கு முன் எந்தச் சாதுக்களோடும் பேசிய தில்லை. எனவே அவர்ளோடு எப்படிப் பழகுவது, பேசு வது என்ற முறைகள் எனக்குத் தெரியாது. நீ முன்னால் சென்று அவருடன் பேசு'' என்றார். நண்பரும் ஏற்றுக் கொண்டார். இருவரும் குருதேவரின் அறைக்குள் நுழைந்து அவரை வணங்கினார்கள். ''எங்கிருந்து வருகிறீர்கள்?'' என்று குருதேவர் கேட்டதற்கு, ''கல்கத்தாவிலிருந்து வருகிறோம்'' என்றார்கள். சுபோத் தொலைவிலேயே நின்று கொண்டிருப்பதைக் கண்ட ஸ்ரீராமகிருஷ்ணர், ''ஏன் அவ்வளவு தொலைவில் நிற்கிறாய்? அருகில் வா'' என்றார். சுபோத் அருகில் வந்ததும், ''நீ சங்கர் கோஷ் குடும்பத்தைச் சேர்ந்தவனா?'' என்று கேட்டார். சுபோத் ஆச்சரியமடைந்தவராய், ஆமாம் என்று கூறி குருதேவ ருக்கு அது எப்படித் தெரிந்தது என்று கேட்டார். ''நான் ஜமாபுகூரில் தங்கியிருந்தபோது உங்கள் வீட்டிற்கும் உங்கள் குடும்பத்தார் கட்டியுள்ள தான்தானியா காளி கோயி லுக்கும் அடிக்கடி வருவேன். அப்போது நீ பிறக்கவே இல்லை. ஆனால் நீ இங்கே வருவாய் என்பது எனக்கு முன்பே தெரியும். யாரெல்லாம் தெய்வீகத்தை அடைய வேண்டுமோ அவர்களை எல்லாம் அன்னை காளி இங்கே அனுப்புகிறாள். இன்னும் ஏன் தொலைவிலேயே நிற்கிறாய்? அருகில் வா'' என்றார். அருகில் வந்த சுபோதின் கையைப் பிடித்தபடி சிறிது நேரம் கண்களை மூடி ஆழ்ந்த சிந்தனை யில் இருந்தார். பிறகு, ''நீ உன் இலட்சியத்தை அடை வாய், அன்னை அப்படிச் சொல்கிறாள்'' என்றார்.

குருதேவர் அவர்களைப் பாயின்மீது அமரச் சொல்லி, ''கல்கத்தாவிலிருந்து எப்படி வந்தீர்கள்'' என்று கேட்டார். இதற்குள் குருதேவரின் அன்பால் தயக்கமெல்லாம் தீர்ந்து போன சுபோத், ''ஏன், நடந்து வந்தோம்'' என்றார். இதைக்

கேட்ட குருதேவர், அவ்வளவு தொலைவா நடந்து வந்தீர்கள்?'' என்று ஆச்சரியப்பட்டார். பிறகு ''என்னைப் பற்றி எப்படித் தெரிந்து கொண்டீர்கள்?'' என்று கேட்டார். ''நான் உங்களுடைய உபதேசங்களைப் படித்தேன். அது அவ்வளவு நன்றாக இருந்தது. நீங்கள் பெரிய மகான். புகழ் வாய்ந்தவர் எனவே உங்களைப் பார்க்க வந்தோம்'' என்றார்.

சுபோதின் இந்தப் பேச்சால் குருதேவரின் முக பாவம், திடீரென்று மாறியது. அவர் மிகவும் பணிவோடு, ''ஆ! நான் புழுவைக் காட்டிலும் கீழானவன். எனக்குப் பேரும் புகழுமா? பரிகாசமாயிருக்கிறது! நான் உண்மையில் புழுவுக்கும் கீழானவன்'' என்றார். இது அந்த இளைஞர்களைப் பெரிதும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. சற்று நேரம் கழித்து, குருதேவர் சுபோத்திடம் ''யாரெல்லாம் தன் அருளைப் பெற வேண்டுமோ அவர்களையெல்லாம் அன்னை இங்கே அனுப்புகிறாள். செவ்வாய் அல்லது சனிக்கிழமைகளில் இங்கு வா. நீ இருக்கும் இடத்திலிருந்து பலர் அந்த நாட்களில் இங்கே வருகிறார்கள். அவர்களோடு வா'' என்றார். உடனே சுபோத், ''அந்த நாட்களில் என்னால் வரமுடியாது. என் உறவினர்கள் யாராவது நான் இங்கு வருவதை என் வீட்டில் சொல்லி விடுவார்கள். என்ன சொல்ல விரும்புகிறீர்களோ அதையெல்லாம் இப்போதே சொல்லி விடுங்கள்'' என்றார். அதற்கு குருதேவர், ''ஒருமுறை என் வாயிலிருந்து என்ன வார்த்தை வருகிறதோ அதை என்னால் மாற்றவே முடியாது. இப்போது நான் ஓர் இடத்திற்குப் போவதாகச் சொல்லிவிடுகிறேன் என்று வைத்துக்கொள். என்ன ஆனாலும் நான் அங்கே போயாக வேண்டும். எனக்கு விருப்பமில்லையானாலும் போய்விட வேண்டும். இல்லையென்றால் அன்னை என்னைப் பிடித்து அந்த இடத்துக்கு இழுத்துக் கொண்டு போவாள். உங்களை நான் செவ்வாய்க்கிழமையும் சனிக்கிழமையும் வரச் சொல்லியிருக்கிறேன். அன்றைக்கு வாருங்கள்'' என்றார். சுபோத் இணங்கினார். பொழுதாகிவிடவே வீடு செல்லுவதற்கு இருவரும் விடை கேட்டனர். ஸ்ரீராமகிருஷ்ணர் அன்போடு அவர்களுக்கு இனிப்புகள் தந்து கல்கத்தா செல்லப் பணமும் கொடுத்தார். பணம் வேண்டாமென்று மறுத்துவிட்டு இருவரும் மீண்டும் நடந்தே கல்கத்தாவுக்குத் திரும்பினர்.

அடுத்த சனிக்கிழமையன்று சுபோத் பள்ளியிலிருந்து திருட்டுத்தனமாகத் தன் நண்பனுடன் தட்சிணேசுவரத்திற்கு அவசர அவசரமாக வந்தார். குருதேவரின் அறையில் மிகுந்த கூட்டம் இருந்தது. வெளியிலும் சிலர் நின்றிருந்தனர். வெளியில் இருந்தபடியே உள்ளே எட்டிப் பார்த்து இருவரும் குருதேவரை வணங்கினார்கள். குருதேவர் அவர்களைப் பார்த்து வெளியிலேயே இருக்கும்படி சைகை காட்டினார். பிறகு அறையில் இருந்தவர்களைக் கொஞ்ச நேரம் அங்கேயே இருக்கும்படிச் சொல்லிவிட்டு வெளியே வந்து இருவரையும் வரவேற்றார்.

மாலை மூன்று மணி இருக்கும், ஸ்ரீராமகிருஷ்ணர் ராக்காலிடம் கங்கை நீரைக் கொண்டு வரச் சொல்லிக் கைகளைக் கழுவிக் கொண்டார். பிறகு சிவாலயங்களுக்கு ஏறிச் செல்லும் படிகளில் அமர்ந்து கொண்டு இரண்டு இளைஞர்களையும் உடன் உட்காரச் சொன்னார். பிறகு க்ஷிரோதிடம் நாக்கை நீட்டச் சொல்லித் தம் விரலால் என்னவோ எழுதித் தொப்புளில் இருந்துத் தொண்டை வரையில் தடவினார். சுபோதுக்கும் அப்படிச் செய்தவாறே, ''தாயே! எழுந்திரு'' என்றார். பிறகு இருவரையும் தியானம் செய்யச் சொன்னார்.

குருதேவரின் கைபட்டதும் சுபோதிடம் மறைந்திருந்த தெய்வீக உணர்வுகள் விழித்தெழுந்தன. தியானம் செய்ய உட்கார்ந்தாரோ இல்லையோ உடல் நடுங்கியது. முதுகுத் தண்டின் வழியாக மூளைக்கு மின்சாரம் போன்ற உணர்ச்சி பாய்ந்து ஓடியது. அளவிட முடியாத ஆனந்தம் அவர் மனத்தில் பெருகியது. தனக்குள்ளே வினோதமான ஓர் ஒளி தோன்றுவதையும் அதில் கணக்கற்ற தெய்வங்களும் தேவதைகளும் தோன்றுவதையும் கண்டார். சிறிது நேரத்தில் தியானத்தில் மிகவும் ஆழ்ந்தவராய் நினைவையும் இழந்துவிட்டார். சுபோதுக்கு நினைவு திரும்பிய போது குருதேவர் தன் உடம்பைத் தொண்டையிலிருந்து தொப்புள் வரை மேலிருந்து கீழாகத் தடவிக் கொண்டிருப்பதைக் கண்டார். நினைவு பெற்ற சுபோதிடம் குருதேவர், ''வீட்டில் தியானம் செய்வதுண்டா?'' என்று கேட்டார். ''ஏதோ கொஞ்சம் செய்வேன். அப்போதெல்லாம் என் தாயிடமிருந்து கேட்டறிந்த தெய்வங்களையும் தேவதைகளையும் பற்றி நினைப்பேன்''' என்றார் சுபோத். ''ஓஹோ! அதனால்தான் இவ்வளவு எளிதாக உன் மனம் தியானத்தில் ஆழ்ந்துவிட்டது'' என்றார் குருதேவர். க்ஷிரோதிடம்

''ஏதாவது காட்சியைக் கண்டாயா?'' என்று கேட்டார். தனக்கு ஒன்றும் தோன்றவில்லை என்று அவன் சொல்லியதும் 'உனக்குப் பின்னால் கிடைக்கும்' என்றார்.

பிறகு குருதேவர் அங்கிருந்து எழுந்தார். இருவரையும் பஞ்சவடிக்குச் சென்று தியானம் செய்யச் சொல்லி விட்டுத் தம் அறைக்குத் திரும்பினார். மாலையில் அவர்கள் வீட்டிற்குப் புறப்பட்டபோது, குருதேவர் அவர்களுக்கு அன்போடு இனிப்புகள் வழங்கி படகில் செல்ல வற்புறுத்திப் பணமும் கொடுத்தார். இருவரும் முன்புபோலவே மறுத்துவிட்டுப் புறப்பட ஆயத்தமானார்கள். அப்போது குருதேவர் சுபோதிடம், ''உன் வீட்டிற்கு அருகே மகேந்திரநாத் குப்தா என்றொரு ஆசிரியர் இருக்கிறார். அவர் மிகவும் நல்லவர்; இங்கு அடிக்கடி வருவார். அடிக்கடி அவரைப் போய்ப்பார். இங்கேயும் வா'' என்றார். குருதேவர் சொல்லியது போல் தன்னால் செய்ய முடியுமா என்று சந்தேகப்பட்ட சுபோத் அவருக்கு எந்தப் பதிலும் சொல்லவில்லை.

இந்தச் சந்திப்பிற்குப் பிறகு தியானம் செய்யும் போது சுபோத் அடிக்கடிப் புருவங்களுக்கு நடுவே ஒளியைக் கண்டார். சுபோத் அதைப் பற்றித் தன் தாயிடம் கூறியதும் அவர், ''நீ அதிர்ஷ்ட சாலி. அதனால்தான் இது தோன்றுகிறது. ஆனால் யாரிடமும் சொல்லாதே. சொன்னால் அந்த அதிர்ஷ்டத்தை இழந்து விடுவாய்'' என்றார். ''இதனால் எனக்கு ஏதாவது தீங்கு ஏற்படுமா, அம்மா'' என்று தன் தாயிடம் கேட்ட சுபோத், ''இந்த ஒளி எனக்குத் தேவையில்லை. இது எங்கிருந்து வருகிறதோ அதுதான் எனக்கு வேண்டும்.'' என்று சொன்னார்.

சுபோதிற்குப் படிப்பிலிருந்த ஆர்வம் முழுதும் போய்விட்டது. அவர் எப்போதும் ஸ்ரீராமகிருஷ்ணரோடு இருக்கவும், பிரார்த்தனை, ஜபம், தியானம் இவற்றில் பொழுதைக் கழிக்கவுமே விரும்பினார். குருதேவர் தன்னிடம் கூறியபடி மகேந்திரர் அடிக்கடி சுபோதைத் தன் வீட்டிற்கு வரும்படி அழைத்தார். ஆனால் சுபோதோ இல்லறத்தார் ஒருரிடம் ஆன்மீக உபதேசத்தைக் கேட்பது சரியானதல்ல என்று எண்ணி அவரிடம் போவதே இல்லை. அடுத்த முறை சுபோத் தட்சிணேசுவரம் சென்ற போது குருதேவர் அவரை சசிக்கும் சரத்துக்கும் அறிமுகப்படுத்தினார். நரேனையும் போய்ப் பார்க்கச் சொன்னார். மகேந்

திரரை ஏன் போய்ப் பார்க்கவில்லை என்று குருதேவர் கேட்ட தற்கு, ''அவர் இல்லறத்தில் ஈடுபட்டு மனைவியோடும் பிள்ளை களோடும் வாழ்கிறார். அவரிடத்தில் எனக்கென்ன வேலை?'' என்றார் சுபோத். இதைக் கேட்டுச் சிரித்த குருதேவர், சுபோதின் துறவு மனப்பான்மையைப் பாராட்டிய வராய், ''அவர் என்னைத் தவிர வேறு ஒன்றைப் பற்றியும் பேசமாட்டார். எனவே அவரிடம் தயங்காமல் போ'' என்றார். சில நாட்கள் கழித்து சுபோத், மகேந்திரரின் வீட்டிற்குச் சென்றார். மகேந்திரர் அவரை அன்புடன் வரவேற்று இவ்வளவு நாட்களாக வராததைப் பற்றிக் கேட்டார். சுபோத் உடனே தம் மனத்தில் உள்ளதை அப்படியே வெளிப்படையாக, ''நீங்கள் இல்லறத்திலிருப்ப தால் நான் உங்களிடம் முன்பு வர விரும்பவில்லை. ஆனால் நீங்கள் குருதேவரைப் பற்றி மட்டுமே பேசுவீர்கள் என்று குருதேவரே சொன்னார். அதனால் இப்போது வந்தேன்'' என்றார். இதைக் கேட்ட மகேந்திரர், ''குருதேவர் சொல்லியது முற்றிலும் உண்மை. நானோ ஒன்றும் தெரியாதவன். ஆனால் ஒரு கடலின் பக்கத்தில் நான் வாழ்கிறேன். அந்தக் கடலிலிருந்து கொஞ்சம் தண்ணீரை எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறேன். யாராவது என்னிடம் வந்தால் அந்தக் கொண்டு அவர்களுக்கு விருந்து படைக் கிறேன். அவருடைய வார்த்தைகளைத் தவிர வேறு எதை என்னால் பேச முடியும்?'' என்றார். சிறிது நேரம் மகிழ்ச்சி யோடு பேசிக் கொண்டிருந்த சுபோத், மகேந்திரடமிருந்து விடை பெற்றார். குருதேவர் இப்படித் தம் சீடர் களிடையே ஆழ்ந்த அன்பையும் பிணைப்பையும் ஏற்படுத் தினார். சுபோத் பிற்காலத்தில் சுவாமி சுபோதானந்தர் என்ற பெயருடன் துறவியானார்.

## 44. பக்தைகள்

ஸ்ரீராமகிருஷ்ணர் ஆண்களுக்கு மட்டுமல்லாமல் பெண்களுக்கும் சிறந்த குருவாகவும் வழி காட்டியாகவும், அவர்களின் துயரங்களை எல்லாம் தீர்க்கும் தாயாகவும் விளங்கினார். பெண்கள் அவரை ஓர் ஆணாகக் கருதியதைவிட தங்களைப் போன்ற பெண்ணாகவே கருதினார்கள். இதைப்பற்றி ஒரு பக்தை கூறும்போது, ''நாங்கள் பெரும்பாலும் ஸ்ரீராமகிருஷ்ணரை ஓர் ஆணாகவே நினைப்பதில்லை; எங்களில் ஒருவராகவே அவரைக் கருதினோம். எனவே மற்ற ஆடவர்கள் முன் நாங்கள் கொள்ளும் அச்சமும் நாணமும் எங்களுக்கு அவரிடம் ஏற்படுவதில்லை. அவர் எங்களுடைய மிகச் சிறந்த அந்தரங்க நம்பிக்கையாளராக விளங்கினார்.'' இது குருதேவருடைய பக்தைகள் பலரின் பொதுவான கருத்தாகும். அவரைக் காண வந்த எல்லாப் பெண்களும் அவரிடம் தூய பக்தி கொண்டனர். சிலர் அவரிடம் தீட்சை பெற்று அவருடைய சிஷ்யைகளாகும் பேறும் பெற்றனர். அவரை எல்லா பக்தைகளும் தங்களுடைய நெருங்கிய உறவினராகவே எண்ணினர். அதனால் வீட்டில் செய்யும் சுவையான தின்பண்டங்களில் ஒரு பகுதியைப் பிரித்து குருதேவருக்காக தட்சிணேசுவரத்துக்கு அனுப்பி வைப்பார்கள். சில நேரங்களில் வங்காள முறைப்படி வீட்டைவிட்டு வெளியே செல்லும் வழக்கமில்லாத மிக உயர்ந்த குடும்பத்துப் பெண்களும் அவருக்காக நெடுந் தொலைவு நடந்துவரவும் கடைகளுக்குப் போகவும் கூடச் செய்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் தமது பக்தைகளில் மனமோகன் மித்ராவின் தாய்க்கு மிகச் சிறந்த இடத்தைக் கொடுத்திருந்தார். உண்மையில் அவர் பல அரிய குணங்கள் நிறைந்தவராக இருந்தார். கணவரோடு வாழும் போது எல்லோரும் பின்பற்றி நடக்கக் கூடிய ஓர் எடுத்துக் காட்டான இந்து மனைவியாக விளங்கிக் கணவரின் எல்லாப் பொறுப்புகளுக்கும் கை கொடுத்து, குடும்பத்துக்கே ஒளி விளக்காக விளங்கினார். கணவர் இறந்ததும் உலகமே தமக்கு இல்லையென்று முற்றிலும் துறந்து ஒரு சந்நியா

சினி போலவே ஆகிவிட்டார். ஒருநாள் அவர் மற்ற பக்தைகளோடு ஸ்ரீராமகிருஷ்ணரின் அறையில் உட்கார்ந் திருந்தார். பெண்ணின் ஒரே கடமை, கணவனுக்கு உண்மையான சேவை செய்வதுதான் என்று ஸ்ரீராமகிருஷ் ணர் சொல்லிக் கொண்டிருந்தார். ''கற்புள்ள மனைவி தன் கணவனை கடவுளின் வடிவமாகவே நினைத்துப் போற்ற வேண்டும். சில மனைவிகள் தங்கள் கணவர் இறந்த பிறகும் அவர்களைக் கடவுளாகப் போற்றுகிறார்கள்'' என்று கூறி தொடர்ந்து ஒரு கதை சொல்லலானார்: ''ஒரு ராணி தன் கணவன் உயிரோடு இருந்தபோது இரும்பால் செய்யப்பட்ட இரண்டு வளையல்களை மட்டுமே அணிந்தி ருந்தாள். உறவினர்கள் வற்புறுத்தியும் ஒரே ஒரு தங்க நகையைக்கூட அவள் அணிந்து கொள்ளவில்லை. அரசன் ஒருநாள் இறந்து விட்டான். உடனே ராணி தான் அணிந் திருந்த இரும்பு வளையல்களை உடைத்தெறிந்துவிட்டு இவ்வளவு நாட்கள் தான் போட்டுக்கொள்ளாமல் இருந்த தங்க நகைகள் முழுவதையும் அணிந்து கொண்டாள். இதைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். ராணிக்கு நெருக்கமான ஒருத்தி இதைப் பற்றிக் கேட்டதும் ராணி,'என் கணவர் அழிந்து போகின்ற இந்தச் சாதாரண உடம்பிற்குள் இருந்தபோது நான் மிக மோசமான இரும்பு வளையல்களை அணிந்து கொண்டிருந்தேன். இப்போது அவர் கடவுளோடு கடவுளாக, அழியாதவரராக, மாறாதவராக இருக்கிறார். எனவே தங்க நகைகளையும் தங்க வளையல்களையும் அணிந்திருக் கிறேன்' என்றாள்.'' இதனைக் கூறிய குருதேவர் எதிரில், அமர்ந்திருந்த மனமோகனின் தாயைக் காட்டி, அவர் அணிந் திருக்கும் தங்க வளையல்களையும் சுட்டிக்காட்டி, ''அந்தக் காரணத்தால்தான் இவரும் தன் கணவர் இறந்த பிறகும் தங்க வளையல்களை அணிந்திருக்கிறார். தன் கணவரைப் பற்றி அத்தகைய உயர்வான எண்ணத்தை இவர் கொண் டிருக்கிறார்'' என்றார். அவருடைய மருமகனான ராக்கால் குருதேவரிடம் மிகுந்த அன்பு கொண்டு அவரோடு தங்கி விட்டதைக் கண்ட எல்லோரும், ''உன் மருமகன் சந்நியாசி யாகி விடப்போகிறான்'' என்று கவலையோடு கூறினார்கள். இதைக்கேட்ட மனமோகனின் தாயோ, ''என் மருமகன் இந்த உலக வாழ்வைத் துறந்து சந்நியாசியாகி, சாதுக்களுக் கும் மகாத்மாக்களுக்கும் சேவை செய்பவராக மாறினால் உண்மையில் அந்த நாளே என் வாழ்நாளில் மிகமிகப் புண்ணியமான நாளாகும்'' என்றார். குருதேவரிடம் அவருக் கிருந்த மரியாதையும் பக்தியும் அளவிட முடியாத

தாகும். சம்பிரதாயங்களை மிகவும் மதித்துப் போற்றும் அவர் குருதேவர் விரும்புகிறார் என்றால் அவைகளை எல்லாம் விட்டுவிட்டு அவர் கூறுவதுபோல் நடந்து கொள்வார்.

குருதேவரின் மற்றொரு சிறந்த பக்தை யோகின்மா. அவர் ஒரு பணக்காரருக்கு வாழ்க்கைப் பட்டவர். ஆனால் குடும்பத்தில் நிலவிய துன்பங்களால் பெரும் வேதனையை அனுபவித்துக் கொண்டிருந்தார். தன் உறவினரான பலராமின் மூலம் குருதேவரைப் பற்றிக் கேள்விப்பட்டுத் தட்சிணேசுவரம் சென்றார். குரு தேவரைப் பார்த்ததும் அவருடைய துன்பங்களும் துயரங் களும் மறைந்துவிட்டன. குருதேவரும் அவரைச் சந்தித் ததில் மிகுந்த மகிழ்ச்சி கொண்டு அன்னை சாரதா தேவிக்கு அவரை அறிமுகப்படுத்தினார். அது முதல் யோகின்மா குருதேவரின் திருவடிகளில் சரண்புகுந்தார். அடிக்கடி அவர் தட்சிணேசுவரம் வந்து குருதேவரைக் காண்பார். இரவில் அன்னையாருடன் தங்குவார். குரு தேவரால் மந்திர தீட்சை செய்விக்கப் பெற்ற அவர் நாளின் பெரும்பொழுதைப் பலவேறு சாதனைகளில் கழிப் பார். இவரைப் பற்றிக் குருதேவர் கூறும்போது, "இவ ரிடம் அபூர்வமான ஆன்மிகச் செல்வம் இருக்கிறது. அது முழுமையாக வெளிப்படும்போது மக்கள் இவரைக் கண்டு ஆச்சரியப்படுவார்கள்" என்றார். சிறிது காலம் அவர் சாதனை பழகியதுமே குருதேவர் கூறிய வார்த்தைகளின் உண்மை தெரிந்தது. தியானம் செய்து கொண்டிருக்கும் போது அடிக்கடி ஆழ்ந்த சமாதியில் மூழ்கினார். பிற் காலத்தில் தூய அன்னையாருக்கு நிலையான துணையாக இருந்தார்.

குருதேவரின் மற்றொரு பக்தை நடுத்தர வயதுடைய விதவையான கோலாப்மா என்பவர். தன் பாசத்திற்குரிய ஒரே மகளின் மரணத்தால் அளவற்ற துயரத்தில் மூழ்கி யிருந்த அவர் யோகின்மாவின் மூலமாக குருதேவரைப்பற்றிக் கேள்விப்பட்டார். உடனே தட்சிணேசுவரம் சென்று குருதேவரிடம் தன் நெஞ்சைப் பிளக்கும் சோகத்தைக் கூறி அழுதார். அதைக் கேட்டபடியே பாதி உணர்வை இழந்து பாவநிலையில் மூழ்கிய குருதேவர், "நீ அதிர்ஷ்ட சாலி. இந்த உலகத்தில் தனக்குச் சொந்தமென்று ஒருவரும் யாருக்கு இல்லையோ அவர்களுக்குக் கடவுள் தாமே வந்து உதவி செய்கிறார்" என்றார். குருதேவரின்

இந்த வார்த்தைகள் கோலாப்மாவிற்குப் புத்துயிரளித்தது. ஸ்ரீராமகிருஷ்ணர் அவரைத் தம்முடைய நெருக்கமான சிஷ்யையாக ஏற்றுக் கொண்டார். கோலாப்மா தன் துன்பங்கள் நீங்கிப் பேரின்பத்தை அடைந்தார். குரு தேவர் ஒருமுறை பக்தர்களோடு அவருடைய வீட்டிற்கும் சென்றார். அதைக் கண்டு கோலாப்மாவின் மகிழ்ச்சி எல்லை யற்றதாகியது.

ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தைகளில் மிகச் சிறந்த மற்றொருவர் தேவேந்திரநாத் மஜூம்தாரின் தாய் ஆவார். அவர் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தன் சொந்த மகனாகவே கருதினார். ஒருநாள் அவர் தன் மகனோடும் மற்றவர் களோடும் தட்சிணேசுவரக் கோயிலுக்கு வந்தார். வரும் போது யாருக்கும் தெரியாமல் காளிக்குப் படைப்பதற்காகச் சர்க்கரையும் பொரியும் கலந்து செய்யப்பட்ட இனிப்பை எடுத்து வந்தார். பகல் நேரத்தில் கோயிலுக்கு வந்த அவர்கள் குருதேவர் தம் அறையில் சிறிய கட்டிலின் மீது உட்கார்ந்திருப்பதைக் கண்டனர். வயதான மஜூம் தாரின் தாயைத் தவிர மற்ற எல்லோரும் குருதேவர் முன் வீழ்ந்து வணங்கினார்கள். அவர் ஸ்ரீராமகிருஷ்ண ரைத் தன் மகனாகக் கருதினார். தாய் மகனை வீழ்ந்து வணங்கக் கூடாது என்பதால் வணங்குவதில்லை. குரு தேவர் அவரைக் கட்டிலின்மீது தம் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டார். இருவரும் அன்பான தாயும் மகனும் போல நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். இதனால் அளவற்ற மகிழ்ச்சி அடைந்த மஜூம்தாரின் தாய் தான் கொண்டுவந்த இனிப்பைப் பற்றி மறந்தே போனார். பிறகு சிறிது நேரத்திற்கெல்லாம் குருதேவர் அவரிடம் அவர் கொண்டு வந்திருக்கும் குறிப்பிட்ட இனிப் பின் பெயரைச் சொல்லி அது வேண்டும் என்றார். மஜூம்தார் அந்த இனிப்பை வாங்கி வரும்படிக் கடைக்கு ஆள் அனுப்பினார். ஆனால் குருதேவர் உடனடியாக அந்த இனிப்பு வேண்டுமென்று குழந்தையைப்போல் அவ சரமும் ஆத்திரமும் நிறைந்தவராய் மஜூம்தாரின் தாயின் துணியைப் பிடித்து இழுக்க ஆரம்பித்தார். அப்போது அவர் மடியிலிருந்த இனிப்புப் பொட்டலம் கீழே விழுந் தது. குருதேவர் சிறிய குழந்தையைப் போல் உற்சாகத்தோடு அதை எடுத்துச் சுவைத்துச் சாப்பிட்டார். இந்தக் காட்சி அந்த அம்மையாரின் கண்களில் கண்ணீரை வர வழைத்துவிட்டது.

யதுநாத் மல்லிக்கின் உறவினரான ஒரு வயதான அம்மையாரும் குருதேவரிடம் மிகுந்த பக்தி கொண்டிருந்தார். காளி கோயிலுக்கு அருகே யதுநாத்தின் வீட்டில் வாழ்ந்து வந்த அவர் அடிக்கடி குருதேவரைத் தன் வீட்டிற்கு வரவழைப்பார். ஒருநாள் அவர் தன் அறையில் தான் வணங்கும் கடவுள்முன் பலவகையான நைவேத்தியங்களை வைத்துவிட்டு தியானம் செய்வதற்கு அமர்ந்தார். அப்போது தம் அறையில் சில பக்தர்களோடு பேசிக் கொண்டிருந்த குருதேவர், பாவசமாதியில் ஆழ்ந்தவராய், காளி கோயிலிலிருந்து புறப்பட்டு அந்த வயதான அம்மையார் தியானம் செய்து கொண்டிருக்கும் அறைக்குள் நுழைந்தார். தியானத்தில் மூழ்கியிருந்த அந்த அம்மையார் கண்களைத் திறந்தபோது குருதேவர் அங்கே கடவுளுக்குமுன் வைக்கப்பட்டிருந்த நைவேத்தியங்களை எல்லாம் சாப்பிட்டுக் கொண்டிருப்பதைக் கண்டார். தான் யாரைத் தன் இஷ்ட தெய்வமாகக் கொண்டிருக்கிறாரோ - யாரை இவ்வளவு நேரம் தியானத்தில் வணங்கினாரோ அவரே வந்து எதிர்பாராத வகையில் நைவேத்தியத்தைச் சாப்பிடுவதைக் கண்டதும் கடவுள் தனக்கு அருள் புரிந்துவிட்டார் என்று நினைத்து அந்த அம்மையார் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தார். கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் வடிந்தது. ஸ்ரீராமகிருஷ்ணர் தம் காலால் அவருடைய தலையைத் தொட்டார். இந்தப் பேற்றினால் இதுவரை உணர்ந்தறியாத பேரானந்தத்தில் அவர் மூழ்கினார்.

பிரம்ம சமாஜ பக்தரான மணிலால் மல்லிக்கின் மகள் மிகவும் தூய்மையான வாழ்க்கை உடையவர். குருதேவரிடத்தில் மிகுந்த பக்தி உடையவர். தியானத்தின்போது அவர் மனம் மிகவும் அலைபாயத் துவங்கியது. ஸ்ரீராமகிருஷ்ணரிடம் இதுபற்றி அவர் ஒருநாள் கூறினார். எந்த நினைவு வந்து அவருடைய தியானத்தைக் கலக்கிறது என்று குருதேவர் கேட்டார். தான் மிகுந்த அன்பு செலுத்தும் தன் சகோதரரின் குழந்தையின் நினைவே அடிக்கடித் தோன்றுகிறது என்றார் அவர். உடனே ஸ்ரீராமகிருஷ்ணர் அந்தக் குழந்தையையே பாலகிருஷ்ணனாக மனதில் நினைத்து அவனையே தியானம் செய்யும்படிக் கூறினார். அந்தப் பெண் குருதேவர் கூறிய புதுமையான வழியில் தியானத்தைத் துவங்கினார். குறைந்த நாட்களிலேயே தியானத்தில் மிகுந்த வெற்றி பெற்ற அவருக்குப் பல தெய்விகக் காட்சிகள் கிடைத்தன.

கௌர் தாசி என்றும் கௌரிமா என்றும் ஸ்ரீராம கிருஷ்ணரின் பக்தர்களால் அழைக்கப்பட்ட கௌரிமா குரு தேவரின் மிகச் சிறந்த் பக்தையாவார். அவர் சிறந்த பக்தை மட்டுமல்லாமல் சந்நியாசினியும் ஆவார். இளம் வயதிலேயே சந்நியாசினி ஆகிவிட்ட அவர் பிருந்தா வனத்தில் வைஷ்ணவ சம்பிரதாயப்படி சாதனைகளைச் செய்து வந்தார். பலராம் மூலமாக குருதேவரைப்பற்றிக் கேள் விப்பட்ட அவர் கல்கத்தாவிற்கு வந்து தட்சிணேசுவரம் சென்றார். முதல் பார்வையிலேயே குருதேவர் கௌராங் கரின் அவதாரம் என்னும் திடநம்பிக்கை அவருக்கு ஏற் பட்டுவிட்டது. பிற்காலத்தில் இவர் தூயஅன்னையாருக்குத் துணையாக இருந்ததோடு, பெண்களுக்காகத் தனி மடமும் பள்ளிக்கூடமும் ஆரம்பித்து பெரும் சேவை செய்தார்.

குருதேவருடைய பக்தர்களில் அவரிடம் அதிசயமான பக்தியும் உறவும் கொண்டிருந்தவர். கோபாலேர்மா எனப்படும் அகோரமணி தேவியாவார். அவர் குருதேவரிடம் கொண்டிருந்த பக்தி, உலகத்தின் ஆன்மிக வரலாற்றிலேயே புதுமையானதும் எங்கும் காணப்படாததும் ஆகும். இவர் வைதீக பிராமண குலத்தில் பிறந்தவர். சிறுவயதிலேயே விதவையான இவர் தட்சிணேசுவரத்துக்கு மூன்று மைல் தொலைவில் இருக்கும் கமார்ஹாடி என்னும் இடத்தில் கோவிந்தசந்திர தத்தா என்பவர் கட்டிய கிருஷ்ணன் கோயிலில், கோவிந்த சந்திரரின் விதவை மனைவியோடு வசித்து வந்தார். இருவரும் நெருங்கிய தோழிகள். இருவருமே எளிமையோடும் கட்டுப்பாட்டுடனும் வாழ்ந்து வந்தார்கள். அகோரமணி தன் கணவருடைய சொத்தின் மூலம் கிடைத்த பணத்தைக் கொண்டு யாரையும் சார்ந் திராமல் சுதந்திரமாக வாழ்ந்து வந்தார். ஆழ்ந்த வைஷ்ணவ மனநிலையோடு பிறந்த அவர் வைஷ்ணவ மந்திர தீட்சை செய்து வைக்கப்பட்டார். பாலகோபாலனே அவருடைய இஷ்ட தெய்வம். அந்தக் கிருஷ்ணனைத் தன் குழந்தையாகவும் தம்மை அவருடைய தாயாகவும் கொண்டு வாத்சல்ய பாவத்தில் அவர் கிருஷ்ணரிடம் பக்தி செலுத்தி வந்தார். அவர் தங்கியிருந்தது கங்கைக் கரையில் இருந்த ஒரு சின்னஞ்சிறு அறை. எந்த விதமான வசதியும் இல்லை. மழைக் காலத்திலும் வெயில் காலத்திலும் தரையிலேயே படுத்துக் கொள்வார். தினந் தோறும் கங்கை நீரைக் கொண்டு வந்து அறையைக் கழுவுவார். சமையல் செய்து தன்னிடமிருந்த கிருஷ்ணருக்

குப் படைத்துவிட்டு அதையே பிரசாதமாக உண்பார். இரவும் பகலும் எந்த நேரமும் ஜப மாலையைக் கையில் வைத்துக் கொண்டு தன்னை மறந்து மணிக்கணக்காக தியானம் செய்வார். முப்பது ஆண்டுகளாக அவரது வாழ்க்கை இப்படியே நடந்து வந்தது.

1884-ஆம் ஆண்டு ஒருநாள் பிற்பகல் இரண்டு பெண் களோடு குருதேவரைக் காண அவர் தட்சிணேசுவரம் வந்தார். அப்போது அவருக்கு வயது அறுபது இருக்கும். குருதேவர் அவர்களை அன்போடு அழைத்து, பக்தியைப் பற்றிப் பேசி இனிமையான சில பாடல்களைப் பாடினார். அடிக்கடி அங்கே வரும்படியும் கூறினார். குருதேவரால் அகோரமணி மிகவும் கவரப்பட்டார். அதன் பிறகு சிறிது நாட்களுக் கெல்லாம் மிகச் சாதாரணமான இரண்டு மூன்று இனிப்புக ளோடு மறுபடியும் குருதேவரைப் பார்க்கச் சென்றார். மிகவும் தயக்கத்தோடு குருதேவரின் முன் அந்த இனிப்புகளை வைத்தார். குருதேவர் மகிழ்ச்சியோடு அனுபவித்துச் சாப் பிட்டார். அவர் அவைகளைக் கடையில் வாங்கி வந்தார் என்பதை அறிந்ததும், வீணாகப் பணத்தைச் செலவழிக்க வேண்டாமென்றும் சமைப்பதில் கொஞ்சம் எடுத்து வருவதே தமக்குப் போதுமானது என்றும் கூறினார். சில நாட்களில் அகோரமணி தேவி குருதேவரையே கோபாலனாக எண்ணி, பலவிதமான இனிப்புகளும் வெண்ணெயும் கொண்டுவந்து ஊட்டுவார்.

இப்படிக் குருதேவர் கோபாலராகவும் அகோரமணி அவர் தாய் யசோதையாகவும் ஆன்மீக வரலாற்றில் ஒரு புதிய சகாப்தம் துவங்கியது. கோபாலேர்மா, குருதேவர் உயிரோடு இருந்தவரை அவருடைய தாயாகவும், அன்னை சாரதாதேவிக்கு மாமியாராகவும் விளங்கினார். நூல் நூற்று சம்பாதிக்கும் சிறு பணத்தில் தன் கோபாலனான ஸ்ரீராம கிருஷ்ணருக்கு இனிப்புகளும் வெண்ணெயும் அடிக்கடி வாங்கி வருவார். தெய்விகக் காட்சியைக் காண்பது முதலியவை பைத்தியக்காரத்தனமென்று ஆரம்பத்தில் நினைத்த நரேந்திரர்கூட அவரது பக்தியையும் உயர்ந்த ஆன்மிக நிலையையும் கண்டு ஆச்சரியப்பட்டார்.

# 45. தட்சிணேசுவரத்திற்கு விடை

காலையில் இளம் கதிர்களோடு உதயமாகும் கதிரவனிடம் தளதளத்த ஓர் அழகு மிளிர்கிறது. தகிக்கும் நடுப்பகல் வெயிலில் ஆதவன் அரசனுக்குரிய சிறப்போடு காட்சியளிக்கிருன். மறையும் செந்நிறச் சூரியனிடம் மனத்தை மயக்கும் எழிலுடன் அருளும் இருக்கிறது. மகான்களின் வாழ்விலும் நாம் இந்த மூன்று அழகையும் காண்கிருேம். உலகமென்னும் இந்த நாடக அரங்கில், அவர்களுடைய குழந்தைப் பருவத்திலும் வாலிபத்திலும் இனிமை தவழ்கிறது. வளர்ந்த பருவத்தில் பிரகாசித்து எங்கும் வீசுகிறது. மறைகின்ற காலத்தில் காட்சி முடிந்து திரை விழும்போது, ஆழ்ந்த இரக்கமுண்டாக்கும் துயரமும் ஒருவித நீண்ட அமைதியும் மனத்தை மூடுகிறது. நாம் இப்போது நாடகம் முடிந்து திரை விழ இருக்கும் கடைசிக் காட்சிக்கு வந்திருக்கிருேம்.

1885-ஆம் ஆண்டு கோடை மாதங்களில் குருதேவர் அந்த வெயிலின் கடுமையைப் பொறுக்கமாட்டாமல் சிரமப்பட்டார். பக்தர்கள் நாள்தோறும் கொண்டுவரும் ஐஸ் அவருடைய தொண்டை வறட்சியையும் வெப்பத்தையும் ஓரளவு தணித்தது. ஆனல் குருதேவர் நிறைய ஐஸை உட்கொண்டது அவருடைய தொண்டையைப் பாதித்து வலிக்கத் துவங்கியது. ஆரம்பத்தில் இந்த வலி மிகவும் குறைவாக இருந்ததால் யாரும் அதைப்பற்றிக் கவனிக்காமல் இருந்துவிட்டார்கள். ஆனல் ஒரு மாதத்திற்குப் பிறகு இந்த வலி மிகவும் அதிகமாகிவிட்டது. குறிப்பாக, பேசும்பொழுதும் சமாதியிலிருந்து உலக நினைவைப் பெறும் பொழுதும் நிலைமை மிகவும் மோசமாகியது. சீடர்கள் மிகுந்த அச்சம் கொண்டவர்களாய்த் தொண்டை நோய்களில் தனித்திறமை பெற்ற டாக்டர் ராக்கால் சந்திர ஹல்தார் என்பவரை அழைத்து வந்தார்கள். அவர் சில மருந்துகளைக் கொடுத்து, குருதேவர் அதிகம் பேச வேண்டாமென்றும் பரவசமோ சமாதியோ அடையக் கூடாது என்றும் சொன்னர். குருதேவருக்கு இந்தக் கட்டளைகளைக் கடைப் பிடிப்பது மிகவும் கடினமாக இருந்தது.

குருதேவர் தம் சாதனைக் காலத்தில் ஒருமுறை தட்சிணேசுவரத்துக்கு அருகே உள்ளே பானிஹாட்டி என்னும் இடத்தில் நடந்த வைஷ்ணவத் திருவிழாவிற்குச் சென்று, அங்கே ஆடிப்பாடி அடிக்கடிப் பரவசத்திலும் சமாதியிலும் மூழ்கினார். இந்த ஆண்டும் பானிஹாட்டியில் நடக்கும் விழாவுக்கு அவரே கூறுகிறபடி 'அந்த ஆனந்த உலகையும் ஒலிக்கின்ற கடவுள் பெயரையும்' அனுபவிக்கத் தம் சீடர்களுடன் போக அவர் முடிவு செய்தார். இது டாக்டர் கொடுத்த அறிவுரைக்கு முற்றிலும் மாறானதாகும். எனவே வயதான பக்தர்கள் பலர் அவரை அங்கே போக வேண்டாமென்று தடுத்தனர். அவரோ, ''காலையில் சாப்பிட்ட பிறகு போவோம். ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் இருந்துவிட்டுத் திரும்பி விடுவோம். அதனால் ஆபத்து ஒன்றும் வந்துவிடாது. அத்துடன் சமாதியில் மூழ்காமல் நான் எச்சரிக்கையாகவே இருப்பேன்'' என்று கூறி அவர்களை மேலே பேச விடாமல் செய்துவிட்டார்.

விழாவன்று கல்கத்தாவிலிருந்து இரண்டு படகுகளில் ஏறக்குறைய இருபத்தைந்து பக்தர்கள் விழாவிற்குச் செல்லத் தட்சிணேசுவரத்துக்கு வந்தனர். குருதேவருக்குத் தனியாக ஒரு படகு ஏற்பாடு செய்யப்பட்டது. சில பக்தைகளும் அந்தக் கூட்டத்தில் இருந்தனர். தாமும் உடன் செல்ல விரும்பி குருதேவரிடம் அனுமதி கோரினார் தூய அன்னை. அவருக்கு விருப்பமானால் வரலாம் என்று குருதேவர் சொல்லி அனுப்பினார். அந்த வார்த்தைகள் மூலம் தான் வருவதைக் குருதேவர் விரும்பவில்லை என்பதை அறிந்து கொண்டு அன்னையார் போகாமல் நின்றுவிட்டார்.

நண்பகலில் படகுகள் பாணிஹாட்டியை அடைந்தன. கங்கைக் கரையில் இருந்த புராதனமான அரச மரத்தின் அடியில் ஆண்களும், பெண்களுமாக வைஷ்ணவர்கள் மிகப் பெரிய கூட்டமாகக் கூடியிருந்தனர். இங்கும் அங்குமாகச் சிலர் கீர்த்தனை செய்து கொண்டிருந்தனர். நரேந்திரர், பலராம், கிரீஷ், இராமசந்திரர், மகேந்திரர் முதலான பக்தர்கள் குருதேவரிடம் மீண்டும் மீண்டும் பஜனைக் கூட்டத்திற்கு அருகே செல்ல வேண்டாமென்று கெஞ்சினர். குருதேவர் தன் பக்தர்களோடு அந்த ஊரின் ஜமீன்தாரான மணிபாபுவின் வீட்டிற்குச் சென்றார். அவர் குருதேவரையும் மற்றவர்களையும் மிகுந்த அன்போடு வரவேற்றார்.

பானிஹாட்டியில் மிகவும் முக்கியமான இடம் இரண்டு. ஒன்று, மணிபாபுவின் வீட்டிற்கு அருகில் இருந்த ராதா காந்தரின் கோயில். மற்றொன்று அங்கிருந்து சற்றுத் தொலைவில் இருந்த சைதன்யரின் சிறந்த பக்தரான இராகவ பண்டிதரின் வீடு. இந்தப் பானிஹாட்டி விழா ஸ்சைதன் யரின் புகழ்வாய்ந்த சீடரான ரகுநாததாஸ் என்பவர் சைதன்யரின் தலைமைச் சீடரான நித்தியானந்தருக்கும், இதர சீடர்களுக்கும் கொடுத்த விருந்தின் நினை வாகவே கொண்டாடப்பட்டு வந்தது. இங்குதான் பெரும் பணக்காரராகவும் சிறந்த பக்திமானுகவும், நல்ல குணங்களை உடையவராகவும் இருந்த ரகுநாததாஸ், நித்தியானந்தரால் சந்நியாசம் கொடுக்கப்பட்டு, பூரியிலிருந்த கௌராங்கரின் திருவடிகளை நாடிச் சென்றடைந்தார்.

சிறிது நேர ஓய்விற்குப் பிறகு குருதேவரும் பக்தர் களும் அருகில் இருந்த கோயிலுக்குள் சென்று சுவாமியைத் தரிசனம் செய்தார்கள். கோயிலின் முற்றத்தில் பக்தர் களின் கூட்டம் சங்கீர்த்தனம் செய்து கொண்டிருந்தது. அப்போது ஒரு மனிதன் மிகச் சிறந்த வைஷ்ணவன் போல் வேடம் அணிந்துகொண்டு கையில் ஜபமாலையுடன் கூட்டத் துக்குள் நுழைந்து பெரியதாகச் சத்தம் போட்டுக் கொண்டு தெய்விகப் பரவசத்தில் இருக்கும் உண்மையான பக்தன் போல் மேளங்களின் ஓசையோடு நடனம் ஆட ஆரம்பித்தான். ஸ்ரீராமகிருஷ்ணர் உடனே அவனுடைய திருட்டுத்தனத்தை அறிந்து கொண்டார். உள்ளத்தே எழும் உணர்ச்சிகள் அனைத்தையும் முழுமையாக அடக்கிக் கொண்டே நின்றிருந்தார். ஆனுல் கண் இமைக்கும் நேரத்தில் சுற்றியிருந்த பக்தர்களை எல்லாம் தள்ளிவிட்டு கீர்த்தனம் பாடிக் கொண்டிருந்த அந்தக் கூட்டத்தின் நடுவே போய் நின்று, சமாதியில் மூழ்கிவிட்டார். நரேந் திரரும் மற்றவர்களும் அவசரம் அவசரமாக ஓடி அவரை வளையம்போல் சுற்றி நின்று கொண்டார்கள். சமாதி யிலிருந்து மீண்ட குருதேவர் எல்லையற்ற ஆனந்தப் பரவ சத்தில் நடனம் ஆடத் துவங்கினுர். மறுபடியும் சமாதி யில் மூழ்கிச் சிலையைப்போல் அப்படியே நின்றுவிட்டார். நடனம் ஆடும்பொழுது இசைக்கு ஏற்ப முன்னும் பின்னு மாக பின்வாங்கி இசைக்கு ஏற்ப வேகமாகவும் சுழன்று சுழன்றும் ஆடினுர். அவர் ஆட்டத்தின் அழகும் அவர் முகத்தில் பொங்கி எழுந்த தெய்விகக் களையும் ஈடு இணை யற்றதாக இருந்தன. குருதேவரின் தெய்விகப் பரவசம்,

இசை முழக்கிய கலைஞர்களின் ஆர்வத்தை ஆயிரம் மடங்காக அதிகமாக்கிவிட்டன. அவர்கள் பெருங் கூட்டமாக உரத்த குரலில் கடவுளின் பெயரை முழக்கிக் கொண்டு மிகமிக வேகமாக இசைக் கருவிகளை முழக்க ஆரம்பித்தார்கள். குருதேவர் அந்த இசைக்கு ஏற்ப மெய்ம்மறந்து ஆடினார். அரை மணி நேரம் கழிந்தது. குருதேவருக்கு உலக நினைவு திரும்பியது. பக்தர்கள் அவரை இசைக் குழுவிலிருந்து அப்புறப்படுத்தி ராகவ பண்டிதரின் வீட்டுக்கு அழைத்துச் செல்லப் பெரிதும் முயன்றார்கள். அதன் பிறகுதான் அவர் தட்சிணேசுவரம் திரும்ப முடியும். ஆனால் குருதேவரால் விரைந்து நடக்க முடியவில்லை. சில அடிகள் எடுத்து வைப்பதும், சமாதியில் மூழ்குவதும் மறுபடியும் சில அடிகள் நடப்பதும் பின்னர் சமாதியில் மூழ்குவதுமாக இப்படியே சென்றார்.

அன்று ஸ்ரீராமகிருஷ்ணர் சமாதியில் மூழ்கியபோதெல்லாம் அவரிடம் தோன்றிய தெய்விக அழகு வார்த்தைகளால் வருணிக்க முடியாததாக இருந்தது. சமாதியில் மூழ்கும் போதெல்லாம் அவர் வழக்கத்தைவிட மேலும் மேலும் உயரமாகிக் கொண்டே போவதுபோல் இருந்தது. அவருடைய உடம்பின் நிறமும் சற்றுப் பிரகாசமாகவே காணப்பட்டது. அவருடைய அழகிய முகத்தில் தெய்விக ஒளி வீசியது. கம்பீரம், கருணை, அமைதி, ஆனந்தம் இவை யாவும் அவர் முகத்தின் தோற்றத்தில் வெளிப்பட்டது. அவருடைய புன்னகையைப் பார்த்தவர்கள் மந்திரத்தால் கட்டுண்டவர்கள்போல் தங்களையே மறந்தனர். அவர் அணிந்திருந்த மென்மையான ஆரஞ்சு நிறப் பட்டுத் துணி அவருடைய அழகுக்கு அழகு செய்தது. அவரோடு எப்போதும் இருந்து அவருக்குச் சேவை செய்து அவருடைய பல்வேறு பாவநிலைகளைக் கண்டறிவர்களும் கூட குருதேவரின் இப்போதைய அழகைப் பார்த்து அதிசயித்தனர். சிறிது சிறிதாக இங்கும் அங்கும் இருந்த இசைக் குழு முழுவதும் குருதேவரை வந்து சூழ்ந்து கொண்டன. உணர்ச்சி வசப்பட்ட அவர்கள் தங்களை மறந்தவர்களாக இசையை எழுப்பத் துவங்கினார்கள். குருதேவர் சமாதியில் மூழ்குவதும் பரவசநிலைக்குத் திரும்புவதும் நடனம் ஆடுவதும் பிறகு சில அடிகள் போவதும், பிறகு சமாதியில் மூழ்கி அங்கேயே நின்று விடுவதுமாகப் பெருங்கூட்டத்தோடு பெரிய ஊர்வலம்போல் மிக நிதானமாக ராகவ பண்டிதரின் வீட்டை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணரும் அவருடன் வந்த கூட்டமும் ராகவ பண்டிதரின் வீட்டை அடைவதற்குமுன் ஒரு முக்கிய மான நிகழ்ச்சி நடந்தது. குருதேவரின் கூட்டத்தில் இருந்த பக்தைகள் குருதேவருக்குத் தருவதற்காக ஒரு பானையில் கொஞ்சம் பிரசாதத்தை அவரிடம் கொண்டு சென்றனர். அப்போது இராதாகாந்தர் கோயில் முன் ஆடிய அந்த வைணவ வேடதாரி எங் கிருந்தோ திடீரென்று ஓடி வந்தான். பக்தையின் கையி லிருந்த பானையைப் பிடுங்கிக் கொண்டு மிகுந்த தெய்விக ஆவேசம் வந்தவன்போல் நடித்தபடியே சமாதியில் இருந்த குருதேவரின் வாயில் கொஞ்சம் பிரசாதத்தைப் போட்டான். தூய்மையற்றவனுன அவனுடைய கை பட்ட தும் குருதேவர் உடம்பு முழுவதும் நடுங்கியது. அவ ருடைய சமாதி சட்டென்று கலைந்தது. வாயில் போடப் பட்ட பிரசாதத்தை வெறுப்போடு துப்பிவிட்டு, வாயைக் கழுவிக் கொப்பளித்துக் கொண்டார். பிறகு மற்ளுெரு பானையிலிருந்து கொஞ்சம் பிரசாதத்தை எடுத்து வாயில் போட்டுக்கொண்டார். மீதி அங்கிருந்த பக்தர்களுக்கு விநியோகிக்கப்பட்டது. அந்தக் கபட வேடதாரி கூட்டத்தி லிருந்து நழுவி ஓடிவிட்டான்.

அரை மைல் தொலைவே இருந்த அந்த வீட்டை அடைய மூன்று மணி நேரம் பிடித்தது. உள்ளே சென்ற குரு தேவர் அங்கிருந்த கோயிலில் வணங்கிவிட்டுச் சிறிது ஒய்வு எடுத்துக் கொண்டார். கொஞ்சம் கொஞ்சமாகக் கூட்டம் முழுவதும் கலைந்து சென்றது. எல்லோரும் தட்சிணேசுவரம் திரும்பத் தயாராஞர்கள். அப்போது குருதேவரின் பக்தரான நபாய் சைதன்யர் என்பவர் குரு தேவரிடம் வேகமாக ஓடி வருவதைப் பார்த்தனர். குருதேவர் திருவிழாவிற்கு வந்திருப்பதைப் பற்றி அவர் கேள்விப்பட்டிருந்தார். நெடு நேரமாக விழா முழுவதும் அவரைத் தேடித் தேடி அலைந்து கொண்டிருந்தார். குருதேவர் படகில் ஏறிப் புறப்படத் தயாராக இருந்ததைக் கண்டதும் ஓடி வந்து அவருடைய கால் களைப் பிடித்துக் கொண்டு தன்னை ஆசீர்வதிக்கும்படிப் பரிதாபமாகத் தேம்பித் தேம்பி அழுதார். அவருடைய ஆர்வமும் பக்தியும் குருதேவருக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தந்தன. சமாதியில் மூழ்கியபடியே அவரை மெல்லத் தொட்டார். உடனே நபாய் பேரின்பத்தில் மூழ்கியவராக தன்னை மறந்து நடனம் ஆடத் துவங்கிஞர். மறுபடியும் மறு

படியும் ஸ்ரீராமகிருஷ்ணரை வீழ்ந்து வணங்கினுர். நபாயின் முதுகை மெல்ல வருடினுர் குருதேவர். சிறிது நேரத்தில் நபாய் சாதாரண நிலையை அடைந்தார். குருதேவர் அவருக்கு அறிவுரைகள் தந்தார். அன்றையிலிருந்து நபாயின் வாழ்க்கையே மாறிவிட்டது. தன் குடும்பப் பொறுப்பு முழுவதையும் தன் மகனிடம் ஒப்படைத்து விட்டார். கங்கைக் கரையில் தனிமையான இடத்தில் ஒரு குடிசையை அமைத்துக் கொண்டு வாழ்நாள் முழுவதையும் பிரார்த்தனை, தியானம், ஜபம் என்று கழித்தார். இதன் பிறகு சங்கீர்த்தனங்களைக் கேட்டதும் பரவசமடைந்து உயர்ந்த தெய்விக நிலையை அடைந்தார். அவருடைய வாழ்க்கை மற்ற பக்தர்களுக்கு ஊக்க மூட்டுவதாகவும் சிறந்த வழி காட்டுதலாகவும் இருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணரும் பக்தர்களும் அன்று மாலையில் தட்சிணேசுவரம் வந்து சேர்ந்தனர். பக்தர்கள் அவரிடம் விடைபெற்றுக் கல்கத்தா திரும்பினுர்கள். மறுநாள் 'ஸ்நான யாத்திரை' என்னும் திருவிழா இருந்ததால் பக்தைகள் எல்லோரும் அன்னை சாரதாதேவியுடன் தங்கினுர்கள். இரவு சாப்பிடும்போது குருதேவர் ஒரு பக்தையிடம், ''அவள் (சாரதா தேவி), நம்முடன் வராமல் போனதே நல்லதாகிவிட்டது. அவ்வளவு பெரிய கூட்டத்தில் பாவ சமாதியில் மூழ்கி நடனமாடியபடி நான் போக, என்னுடன் வரும் இவளைப் பார்க்கும் போக்கிரிகள் 'அதோ ஹம்சன் போகிருன். இதோ ஹம்சி போகிருள்' என்று கேலி செய்திருப்பார்கள். இது எல்லோருக்கும் வருத்தத்தைத் தந்திருக்கும். அவள் புத்திசாலி, அதனுல்தான் வரவில்லை'' என்ருர். அன்னை சாரதா தேவியின் நுட்பமான அறிவை விளக்கும் மற்ருெரு நிகழ்ச்சியையும் குருதேவர் அப்போது கூறினுர்: ''மார்வாரி பக்தன் லட்சுமிநாராயணன் எனக்குப் பத்தாயிரம் ரூபாய் அன்பளிப்பாகத் தர வந்தான். அதைக் கேட்டதும் என் தலையையே வாளால் அறுப்பது போல் இருந்தது. அன்னை காளியிடம், ''இவ்வளவு காலத்துக்குப் பிறகு இப்போது மறுபடியும் என்னைச் சோதிக்க வந்தாயா?'' என்று பிரார்த்தனை செய்தேன். பிறகு அவளுடைய (சாரதா தேவியின்) மனத்தைச் சோதிப்பதற்காக அவளிடம், ''இதோ பார். இவன் பத்தாயிரம் ரூபாய் கொடுக்க விரும்புகிருன். நான் மறுத்துவிட்டேன். அவன் உனக்குத் தர விரும்புகிருன். நீ ஏன் வாங்கிக் கொள்ளக் கூடாது?'' என்றேன். உடனே அவள், ''என்ருலும் அதை வாங்கிக்கொள்ள முடியாது.

நான் வாங்கிக் கொள்வதும் நீங்கள் வாங்கிக் கொள்வதும் ஒன்றுதான். நான் வாங்கிக் கொண்டால் அதை உங்களுக்காகத் தான் செலவழிப்பேன். அப்போது உண்மையில் நீங்கள்தான் அதன் சொந்தக்காரராக இருப்பீர்கள்'' என்ருள். நர்ன் நிம்மதிப் பெருமூச்சுவிட்டேன்.''

அன்று இரவு உடம்பு முழுதும் குருதேவருக்குச் சொல்ல முடியாத எரிச்சல் உண்டாகியது. அவரால் சிறிது நேரம்கூடத் தூங்க முடியவில்லை. இது பெரும்பாலும் தூய்மையில்லாத மக்கள் பலர் அவரைத் தொட்டதால் ஏற்பட்டிருக்கக் கூடும். மறுநாள் மிகவும் புண்ணிய நாளாகையால் அவரைக் காண ஆண்களும் பெண்களும் கூட்டம் கூட்டமாக வந்தனர். அவர்களில் தன் குடும்ப விஷயமாக அறிவுரையைக் கேட்க வந்த பெண் ஒருத்தி தன் பிடிவாதத்தாலும் முரட்டுத்தனத்தாலும் எல்லோருக்கும் மிகுந்த சிரமத்தையும் வெறுப்பையும் உண்டாக்கி விட்டாள். பகல் உணவின்போது குருதேவரால் மற்ற நாள்போல் நன்ருகச் சாப்பிட முடியவில்லை. மற்ற பக்தர்களோடு பேசவும் முடியவில்லை; இதைப்பற்றிக் குருதேவர் பிறகு சொல்லும்போது, ''மற்ற ஆண்டுகளில் இந்த நாளில் நான் அடிக்கடி பாவசமாதியில் மூழ்கி விடுவேன். அன்றைக்குப் பெறும் ஆனந்தம் இரண்டு மூன்று நாட்கள் தொடர்ந்து நீடிக்கும். இன்றைக்கு அதுபோன்று எதுவுமே எனக்கு ஏற்படவில்லை. தூய்மையில்லாத எண்ணங்கள் கொண்ட மனிதக்கூட்டம் இங்கு திரண்டு வந்ததால் இந்த நிலை ஏற்பட்டது. என் மனம் மேலே செல்ல முடியாமலேயே தடுக்கப்பட்டது'' என்ருர்.

பானிஹாட்டி விழாவில் குருதேவர் கலந்து கொண்டது அவருடைய தொண்டை நோயை மிகவும் அதிகமாக்கிவிட்டது. எந்த நேரமும் பேசிக் கொண்டிருப்பதாலும் அடிக்கடி ஏற்படும் பாவசமாதியாலும் நோய் மிகவும் கடுமையாகி மோசமான நிலைக்குச் சென்றுவிட்டதாகவும் எச்சரிக்கையாக இல்லாவிட்டால் நோய் இன்னும் முற்றிவிடும் என்றும் தொண்டையைப் பரிசோதித்த டாக்டர் கூறினர். பக்தர்கள் குருதேவரை இனிமேல் மிகுந்த எச்சரிக்கையுடன் பார்த்துக் கொள்ள முடிவு செய்தார்கள். குருதேவரோ ஒரு சிறிய குழந்தையைப் போல் இதற்கான பழியை எல்லாம் இராமசந்திரரின் மேலும் மற்றும் பல வயதான பக்தர்கள் மேலும் போட்டு, வருவார் போவாரிடமெல்லாம், ''இவர்கள் என்னைப் போகவிடாமல்

'இங்கேயே இரு' என்று தடுத்திருந்தால் நான் இங்கேயே இருந்திருப்பேன்'' என்று சொல்லிக்கொண்டிருந்தார்.

இத்தகைய சூழ்நிலையில் ஒருநாள் ஒரு பக்தர் தட்சிணேசுவரம் வந்தபோது குருதேவர் தொண்டையில் மருந்து போட்டுக் கொண்டு தன்னுடைய சிறிய கட்டிலில் அமைதியாக உட்கார்ந்திருந்தார். 'வெளியே போகாதே. அசையாமல் ஒரே இடத்தில் இரு' என்று கட்டளையிட்டு உட்காரவைக்கப்பட்ட பையனைப்போல் குருதேவரும் உற்சாகம் இழந்து காணப்பட்டார். குருதேவரிடம் அதற்கான காரணம் கேட்டபொழுது, ''தொண்டை அதிகமாக வலிக்கிறது. டாக்டர் 'யாரிடமும் பேசக் கூடாது' என்று கூறியுள்ளார்'' என்றார். உடனே பக்தர், ''நீங்கள் பானிஹாட்டித் திருவிழாவிற்குப் போனதாகக் கேள்விப்பட்டேன். அதனால்தான் நோய் இவ்வளவு அதிகமாகிவிட்டது'' என்றார். 'ஆமாம்' என்று கூறிய குருதேவர் எரிச்சலோடு, ''மழை வேறு பெய்து கொண்டிருந்தது. தெருவெல்லாம் சேறு. இருந்தும்கூட இந்த ராம் என்னை அழைத்துக் கொண்டு போனான்; நாள் முழுவதும் இங்கும் அங்கும் நடனம் ஆட வைத்துவிட்டான்'' என்றார். அந்த பக்தர் அவரிடம் ஆறுதலாக, இன்னும் சில நாட்களில் எல்லாம் சரியாகிவிடும் என்று சொல்லி சமாதானப்படுத்தினார். குருதேவர் அதைக் கேட்டுத் திருப்தி அடைந்தவராய், ''அது சரி. இப்போது நான் யாரிடமும் பேசாமல் எப்படி மௌனமாக இருப்பது? நீ எவ்வளவு தூரத்திலிருந்து வந்திருக்கிறாய்! உன்னுடன் ஒன்றிரண்டு வார்த்தைகள்கூடப் பேசாமல் இருக்க முடியுமா?'' என்றார். பக்தர் அதற்கு, ''பரவாயில்லை ஐயா. தாங்கள் குணம் அடைந்த உடன் வேண்டியமட்டும் பேசலாம்'' என்று பதிலளித்தார். ஆனால் குருதேவர் டாக்டரின் அறிவுரையையும் தம் நோயையும் மறந்தவராக பக்தர்களுடன் தொடர்ந்து வழக்கம்போல் பேசிக் கொண்டிருந்தார்.

ஒரு மாதம் கழிந்தது. குருதேவரின் உடல் நிலையில் முன்னேற்றம் இல்லை. அமாவாசை, பௌர்ணமி முதலிய நாட்களில் தொண்டை வலி பொறுக்க முடியாததாக இருந்தது. நீராகாரம் தவிர, சாதம் முதலான எதையும் அவரால் சாப்பிடவே முடியவில்லை. டாக்டர்கள் அவருடைய நோயைத் 'தொண்டைப்புண்' (Clergyman's sore throat) என்று கண்டுபிடித்தார்கள். அதற்கு முறையான மருந்தும்

பத்தியமும் சொல்லப்பட்டன. குருதேவர் அவைகளில் இரண்டைத் தவிர மற்றவைகளை முறையாகக் கடைப் பிடித்தார். அந்த இரண்டு, பாவசமாதி அடைவதும் பக்தர்களோடு பேசுவதுமாகும். கடவுளைப் பற்றிப் பேச ஆரம்பித்த உடனே வெளி நினைவையெல்லாம் இழந்து சமாதியில் மூழ்கிவிடுவார். உலகத் துன்பங்களால் வேதனைப் பட்டுத் தம்மிடம் அமைதி தேடி வரும் மக்களிடம் அவரால் பேசாமலிருக்க முடியவில்லை. அவ்வாறு வரும் பக்தர்களின் எண்ணிக்கையும் அதிகரித்துக்கொண்டே வந்தது. கேசவ சந்திரரை குருதேவர் சந்தித்த 1875-ஆம் ஆண்டிலிருந்து கொஞ்சமும் நிறுத்தாமல் உலகத்திற்கு அவர் தம் உபதேசங்களைக் கொடுத்துக் கொண்டே தான் வந்தார். குறிப்பிட்ட வேளையில் சாப்பிடவோ தேவை யான ஓய்வைப் பெறவோ அவரால் முடியவே இல்லை, அவரால் தூங்கவும் முடியவில்லை. அடிக்கடி யாராவது வந்து கொண்டிருந்தார்கள். இரவில் பலமுறை படுக்கையிலிருந்து எழுந்து போவார் அவர். தவிரவும் நாள்தோறும் விடியற் காலை நான்கு மணிக்கே எழுந்து பகவானின் திருப்பெயரைப் பாடவும் தியானம் செய்யவும் ஆரம்பித்துவிடுவார். எனவே அவருடைய உடல்நிலை சீர்குலைந்ததில் ஆச்சரியம் எதுவும் இல்லை.

இதை அவர் வெளிப்படையாக யாரிடமும் சொல்ல வில்லை என்றாலும் அவ்வப்போது அன்னை காளியிடம் முறை யிடுவதிலிருந்து சுலபமாகத் தெரிந்துகொள்ள முடிந்தது. உதாரணமாக இந்தத் தொண்டைவலி வருவதற்கு முன்பு ஒருமுறை அவர் பரவசநிலையில் அன்னை காளியிடம், ''ஒரு சேர் பாலில் ஐந்து சேர் தண்ணீரைக் கலந்ததுபோல் இருக்கும் இந்த உபயோகமில்லாதவர்களை எல்லாம் ஏன் இங்கே அழைத்து வருகிறாய்? புகையும் அடுப்பை ஊதி ஊதிப் பற்றவைத்துத் தண்ணீரைச் சுண்டவைப்பதற்குள் என் கண் களே போய்விட்டன; என் உடல் நலமே கெட்டுவிட்டது. இதெல்லாம் என் சக்திக்கு மீறிய விஷயம். உனக்கு ஆசை இருந்தால் நீயே வந்து செய். அல்லது கொஞ்சம் சொன்னா லேயே தெய்விகம் பெறக் கூடிய நல்ல மனிதர்களையாவது அழைத்துவா'' என்று கூறியதை அருகில் இருந்தவர்கள் கேட்டார்கள். புதிதாக வருபவர்களின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே போவதைக் கண்டு குருதேவர் மற் றொரு நாள் காளியிடம், ''என்ன இது? எதற்கு இவ்வளவு கூட்டத்தை நீ இங்கே அழைத்துக் கொண்டு வருகிறாய்?

எனக்குத் தூங்கவோ குளிக்கவோ கூட நேரமில்லை. இது (தம் உடம்பைக் காட்டியபடி) பொத்தல் விழுந்த முரசு. இரவும் பகலும் இரு புறமும் அடித்தால் எத்தனை நாட்களுக்குத்தான் தாங்கும் என்று நினைக்கிறாய்?'' என்று முறையிட்டார்.

மற்றொரு நாள், புதிதாக வருபவர்களுக்கு முதலில் ஓரளவு பயிற்சிதர, விஜய் முதலான பலருக்குச் சக்தி கொடுக்கும்படிக் காளியிடம் குருதேவர் பிரார்த்தித்ததை முன்பே கண்டோம்.

1884-ஆம் ஆண்டின் பிற்பகுதியில் ஸ்ரீராமகிருஷ்ணர் என்ற பெயரைக் கல்கத்தாவாசிகள் நன்கு அறிந்து விட்டனர். அதனால் நூற்றுக்கணக்கான மக்கள் அவரைக் காண ஆவலோடு வந்தார்கள். குருதேவர், தம் உடல் நோயைப் பற்றிக் கவலையே படாமல், கடவுளைக் காண்பதில் ஆர்வம் கொண்டு வருபவர்களுக்கு, அவரவர் மனநிலையைத் தம் உள்ளுணர்வால் புரிந்து கொண்டு அவர்களுக்கு ஏற்ற அறிவுரைகள் வழங்கியோ, தொடுவதன் மூலமோ ஆன்மிக விழிப்பை ஏற்படுத்தினார். குருதேவரின் வழிகாட்டுதலால் அப்படிப் பட்டவர்கள் எளிதாகக் கடவுளை அடைந்தனர். சாஸ்திரங்களில் மனிதகுலத்துக்குச் செய்யும் சேவை மகத்தானதாகவும் மிகவும் புனிதமானதாகவும் கூறப்பட்டுள்ளது. குருதேவர் தம் வாழ்வின் கடைசி விநாடி வரை அந்தச் சேவையைச் சுயநலமில்லாமலும் முழுமனத்தோடும் செய்தார்.

மற்றொரு மாதம் கழிந்தது. அந்த நோய் மேலும் கடுமையாயிற்றே தவிரக் குறையவில்லை. பக்தர்கள் என்ன செய்வது என்று தெரியாமல் தவித்தார்கள். அப்போது நடந்த நிகழ்ச்சியொன்று குருதேவரின் நோயைக் குணப்படுத்துவதில் புதிய திருப்பத்தை உண்டாக்கியது. ஒரு நாள் குருதேவரின் பக்தை ஒருத்தி குருதேவரின் பக்தர்களை இரவு உணவுக்காக அழைத்திருந்தாள். எல்லோரும் வந்து சேர்ந்து விட்டனர். குருதேவர் வரமாட்டார் என்று தெரிந்தும் ஓரிரு நிமிடங்களாவது அங்கு வந்து செல்லும்படி அவள் குருதேவரை அழைத்தாள். அழைக்கச் சென்றவர் திரும்பி வந்து ஸ்ரீராமகிருஷ்ணரின் தொண்டையிலிருந்து இரத்தம் கொட்டுவதால் அவர் வரவில்லை என்று சொன்னார். இச் செய்தியைக் கேட்டு அங்கு வந்திருந்த நரேந்திரர், ராம், கிரீஷ், மகேந்திரர் முதலான பக்தர்கள் பயந்து போய், அனைவரும் தங்களுக்குள் இது விஷயமாக ஆலோசனை செய்தார்கள். முடிவில் கல்கத்தாவில் ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்தி, குருதேவரைச் சிகிச்சைக்காக அங்கே அழைத்துச்

செல்வது என்று முடிவு செய்தார்கள். மிகுந்த மனச்சோர் வோடு சாப்பிட்டுக் கொண்டிருந்த நரேந்திரரிடம் அவரு டைய கலக்கத்திற்கான காரணத்தைக் கேட்ட ஒரு நண்ப ரிடம் அவர், ''யாரை மையமாகக் கொண்டு நாம் மகிழ்ச்சி யாக இருக்கிறோமோ, அவர் நம்மை விட்டுப் போய் விடுவார் போல் தோன்றுகிறது. நான் என் மருத்துவ நண்பர்களி டம் குருதேவருடைய நோயைப் பற்றிக் கேட்டேன். மருத் துவ நூல்களையும் படித்தேன். அவருக்கு வந்துள்ள நோய் மிகக் கொடியது என்றும் அதைத் தீர்க்க இன்னும் மருந்து கண்டுபிடிக்க வில்லை என்றும் தெரிகிறது'' என்றார்.

மறுநாள் குருதேவரின் சில வயதில் மூத்த பக்தர்கள் குருதேவரிடம் சென்று அவர் கல்கத்தாவிற்கு வந்து சிகிச்சை பெற வேண்டுமென்று கூறினார்கள். அவரும் அதற்கு இணங்கினார். கல்கத்தாவின் பாக் பஜார் பகுதியில் துர்காசரண் முகர்ஜி தெருவில் கங்கையைப் பார்த்தவாறு இருக்கும் ஒரு சிறிய மாடி வீடு குருதேவருக்காக வாடகைக்கு எடுக்கப்பட்டது. மூன்று நாள் கழித்து குருதேவர் கல்கத்தா விற்குப் புறப்பட்டார். மிகவும் விசாலமான காற்றோட்ட மான தோட்டப்பகுதியில் இருந்து பழகிய குருதேவர் அந்தச் சிறிய வீட்டைப் பார்த்ததும், 'அவர்கள் என்ன, சாகப் போகி றவர்களைக் கடைசிக் காலத்தில் அழைத்துச் செல்வார்களே அதுபோல் என்னையும் இந்தச் சிறிய வீட்டிற்கு அழைத்து வந் திருக்கிறார்களா?' என்று கேட்டு விட்டு அந்த வீட்டிற்குள் நுழையவும் செய்யாமல் நடந்தே நேராக பலராம் போஸ் வீட்டிற்குப் போய் விட்டார். பலராம் மிகுந்த அன்போடு அவரை வரவேற்று நல்ல வீடு கிடைக்கும் வரை அங்கேயே தங்கி இருக்கும்படிக் கூறினார். குருதேவரும் சம்மதித்தார்.

பக்தர்கள் குருதேவருக்காக நல்ல வசதியான வீடு ஒன்றைத் தேட ஆரம்பித்தார்கள். அதற்கிடையில் திறமை வாய்ந்த சில நாட்டு வைத்தியர்களை அழைத்து வந்து குரு தேவரைக் காட்டினர். அவர்கள் குருதேவருக்கு வந்துள்ள நோய், ரோகிணி அல்லது புற்று நோய் என்று கண்டு பிடித்துக் கூறினர். நாட்டு வைத்தியர்களின் மருத்துவத்தால் குணம் தெரியாமல் போகவே, ஹோமியோபதி வைத்தியத்துக்கு பக்தர்கள் ஏற்பாடு செய்தனர்.

இதற்குள் குருதேவர் கல்கத்தாவிற்கு வந்துள்ள செய்தி எல்லா இடங்களிலும் பரவியது. மிகுந்த எண்ணிக்கையில் மக்கள் அவரைக் காண பலராமின் வீட்டிற்கு வந்தனர். பக்தர்களின் வேண்டுகோளையும் டாக்டர்களின் எச்சரிக்கை

யையும் மறந்து குருதேவர் அவர்களை எல்லாம் சந்தித்துப் பேசி அவர்களின் பிரச்சினைகளைத் தீர்த்தார். தம்மிடம் வந்த பக்தர்களிடம் ஆன்மிகம் பற்றி அவர் உற்சாகத்தோடு பேசிய காட்சி தம்மைத்தேடி தட்சிணேசுவரம் வர முடியாத கல்கத்தா மக்களுக்கு ஆன்மிகத்தைப் போதிக்க இப்படி உடல் நலமில்லை என்கிற சாக்கில் வந்திருக்கிருரோ என்று எண்ணத் தோன்றியது. காலையிலிருந்து இரவு படுக்கைக்குச் செல்லும்வரையிலும் பகலில் இரண்டு மணி நேரம் ஓய்வு கொள்வதைத் தவிர மற்ற நேரமெல்லாம் தம்மைக் காண வந்தவர்களிடம் அவர் பேசிக் கொண்டே இருந்தார்; கேள்விகளுக்குப் பதில் சொல்லிக் கொண்டேஇருந்தார்; அடிக்கடி மூழ்கும் சமாதிக் காட்சியின் மூலம் பலருக்கு ஆன்ம ஒளியை அளித்துக் கொண்டு இருந்தார். குருதேவர் பலராம் வீட்டில் ஒருவார காலம்தான் தங்கினுர். அந்த ஒருவார காலமும் கோலாகலமான ஆன்மிகப் பெருவிழாவாக விளங்கியது.

சில நாட்களில் சியாம்புகூர் தெருவில் கோகுல் சந்திர பட்டாச்சார்யா என்பவரின் வீடு குருதேவருக்காக வாடகைக்கு அமர்த்தப்பட்டது. புகழ் பெற்ற மகேந்திரலால் சர்க்கார் என்னும் டாக்டர் அவருக்குச் சிகிச்சை செய்யவும் ஏற்பாடாகியது.

## 46. சியாம்புகூர்

ஸ்ரீராமகிருஷ்ணர் 1885-ஆம் ஆண்டு அக்டோபர் மாதத் துவக்கத்தில் சியாம்புகூர் வீட்டிற்குச் சென்றார். அந்த வீட்டில் இரண்டு பெரிய அறைகளும் இரண்டு சிறிய அறைகளும் இருந்தன. இரண்டு பெரிய அறைகளில் ஒன்று வரவேற்பறையாகவும் மற்றொன்று குருதேவர் வசிக்கும் அறையாகவும் பயன்படுத்தப்பட்டது. மற்ற இரண்டு சிறிய அறைகளில் ஒன்றில் பக்தர்கள் தங்கவும் மற்றொன்றில் குருதேவரைக் கவனித்துக் கொள்ள சாரதாதேவியார் வரும்பொழுது அவர் தங்கவும் ஏற்பாடு செய்யப்பட்டது.

டாக்டர் மகேந்திரலால் சர்க்கார் குருதேவருக்கு சிகிச்சை அளிக்கத் துவங்கினார். மதுர் உயிரோடு இருந்தபோது காளி கோயிலுக்கு வந்த டாக்டர் சர்க்கார் குருதேவரைச் சந்தித்திருக்கிறார். குருதேவரைப் பொறுமையாக நெடுநேரம் மிகுந்த கவனத்தோடு சோதித்த சர்க்கார், மருந்தைக் கொடுத்து அங்கிருந்த பக்தர்களிடம் தினந்தோறும் காலையில் குருதேவரின் உடல்நிலையைப் பற்றித் தம்மிடம் வந்து தெரிவிக்குமாறு கூறினார். குருதேவருக்காகும் எல்லாச் செலவுகளையும் பக்தர்களே ஏற்றுக் கொள்வதை அறிந்த சர்க்கார் மிக அதிகமாகப் பணம் வாங்கும் மருத்துவராக இருந்தும் குருதேவருக்குப் பணம் வாங்காமலே மருத்துவம் செய்வதாகக் கூறிவிட்டார்.

தங்குவதற்கு நல்ல இடமும் நல்ல மருத்துவரும் கிடைத்த பிறகு குருதேவருக்குப் பத்திய உணவு சமைக்கும் சிக்கல் எழுந்தது. தூய அன்னை சாரதாதேவியைத் தவிர அதற்குப் பொருத்தமானவர் எவரும் இருப்பதாக பக்தர்களுக்குத் தெரியவில்லை. ஆனால் மிகவும் நாணமும் கூச்சமும் உடைய அன்னையார் தங்குவதற்கு அந்த வீட்டில் இடம் எதுவும் இல்லை. பக்தர்கள் குருதேவரிடம் இந்த நிலையைச் சொன்னார்கள். அவர் அன்னையிடம் இதைத் தெரிவிக்கச் சொன்னார். பக்தை ஒருவர் மூலம் இந்தச் செய்தியை அறிந்த அன்னையார் தம் வசதிகளையெல்லாம் பற்றி ஒரு நிமிடம்கூடச் சிந்திக்காமல் குருதேவருக்குச் சேவை செய்ய சியாம்புகூர் வீட்டில் குடியேறினார். பகல் நேரத்தில் அவர்

தங்கவும் சமையல் செய்யவும் மாடியில் ஓரிடம் ஒதுக்கப் பட்டது. அன்னையார் அதில் மிகவும் சிரமத்துடன் தங்கிக் குருதேவரைக் கவனித்துக் கொண்டார்.

இடம், மருத்துவர் கவனிப்பு முதலியவை பற்றிய ஏற் பாடுகள் முடிந்ததும் குருதேவரை இரவும் பகலும் கண் விழித்துக் கவனித்துக் கொள்ளும் பிரச்சினை எழுந்தது. இல்லற பக்தர்களால் இரவும் பகலும் உடன் தங்குவதும் குரு தேவருக்கு வேண்டிய சிறு சிறு பணிவிடைகள் செய்வதும் முடி யாததாக இருந்தது. இளம் சீடர்களோ தங்கள் பெற்றோர்கள் என்ன சொல்வார்களோ என்று தயங்கினார்கள். அந்த நேரத் தில் நரேந்திரர் குருதேவரைக் கவனித்துக் கொள்ளும் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டார். இரவில் குருதேவரு டனே தங்கினார். நரேந்திரரின் உறுதிவாய்ந்த இந்தச் செயல் மற்றச் சில இளைஞர்களுக்கு இரவில் குருதேவருடன் தங்கவும் அவருக்குச் சேவை செய்யவுமான உற்சாகத்தையும் உறுதியை யும் தந்தது. காளி, சசி, இளையகோபால் முதலியோர் இந்தப் பணியை மேற்கொண்டனர். குருதேவருக்காக நரேன் தன் படிப்பு, குடும்பம் இவைகளையெல்லாம் தியாகம் செய்தது, அவருடைய வீர வார்த்தைகள், அன்பு, முதலிய எல்லாம் இந்த இளைஞர்கள் மனதைத் தொட்டன. அதனால் தங்களையும் தங்கள் குடும்பத்தையும் பற்றிய எல்லா நினைவுகளையும் துறந்துவிட்டு குருதேவருக்குச் சேவை செய்யவும் அதன் வழியாகக் கடவுளைக் காணவும் தங்கள் வாழ்க்கையை அர்ப் பணித்து விட்டனர். சில நாட்கள் வரை இந்த இளைஞர்கள் குருதேவருடன் தங்கிச் சேவை செய்வது அவர்களுடைய பெற் றோர்களுக்கும் பொறுப்பாளர்களுக்கும் தெரியவில்லை. ஆனால் குருதேவரின் நோய் அதிகமானதும் இவர்கள் தங்கள் படிப் பையும் துறந்து பள்ளிக்கும் கல்லூரிக்கும் போகாமல் எந்த நேரமும் குருதேவருடனேயே இருந்து அவருக்குச் சேவை செய்ய ஆரம்பித்ததும் அவர்கள் மிகவும் பயந்து போனார்கள். நயமாகவும் பயமுறுத்தியும் அவர்களைத் தங்கள் வீட்டிற்கு அழைத்துச் செல்லவும் படிப்பைத் தொடரச் செய்யவும் பலவாறு முயன்றனர். ஆனால் இந்த இளைஞர்கள் தங்களுக்கு முன்னோடியாயிருக்கும் நரேந்திரனின் உறுதியைப் பார்த்துத் தங்கள் லட்சியத்தில் சிறிதும் அசையாது நின்றார்கள். ஆரம்பத்தில் இந்தச் சேவைக்குத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டது நான்கு அல்லது ஐந்து இளைஞர்கள்தாம். ஆனால் நாளாக நாளாக இவர்களின் எண்ணிக்கை அதிகரித்தது. இறுதியில் நான்கு மடங்காகிவிட்டது.

பக்தர்களின் கவலை இன்னும் தீரவில்லை. அவர்கள், திறமை வாய்ந்த பல டாக்டர்களை அணுகிக் குருதேவரின் நோயைப் பற்றிக் கேட்டார்கள். குருதேவரின் உடல் நிலையை நன்கு ஆராய்ந்த அவர்கள் நோய் கடினமானது என்றும் குணமாகக் கூடியது என்றும், ஆனால் அதற்கு நீண்ட காலம் மிகுந்த செலவில் மருத்துவம் செய்ய வேண்டும் என்றும் கூறினார்கள். இது பக்தர்களை மிகுந்த அச்சத்திற்குள்ளாக்கியது. நீண்ட நாட்கள் குருதேவருக்கு மருத்துவம் செய்யப் பணத்திற்கு எங்கே போவது? குருதேவரை மருத்துவத்திற்காகக் கல்கத்தாவிற்கு அழைத்து வந்த இல்லற பக்தர்கள் அனைவருக்கும் தங்கள் குடும்பங்களையும் கவனித்துக் கொண்டு குருதேவருடைய மருத்துவச் செலவையும் ஏற்றுக் கொள்ளும் வசதி இல்லை. பக்தர்களுக்கு குருதேவரின் ஈடு இணையற்ற தெய்விகச் சக்தியில் இருந்த பெரும் நம்பிக்கையே அவர்களை இது வரை இவ்வளவு செலவையும் தாங்கிக்கொள்ளும்படிச் செய்தது. அப்படி என்றால் தங்கள் துன்பங்களையும் துயரங்களையும் பெரிதாக எடுத்துக் கொண்டு குருதேவரைக் கைவிட்டு விடுவதா? இது போன்ற மனத்தளர்ச்சி ஏற்படுகிற நேரங்களில் எல்லாம் குருதேவரின் இணையற்ற தெய்விக ஆற்றல் அவர்களுக்கு வலிமையையும் உற்சாகத்தையும் கொடுத்துத் தங்கள் தளர்ச்சிகளை எல்லாம் தெறித்து ஓடச் செய்வதை அவர்கள் அனுபவத்தில் கண்டிருக்கிறார்கள். இப்போதும் அத்தகைய அனுபவம் ஏற்பட்டது. எப்படியும் குருதேவருக்கு ஆகும் செலவை, அது எவ்வளவு ஆனாலும் ஏற்போம் என்று முன் வந்தார்கள். தாங்கள் யாருக்குச் சேவை செய்கிறார்களோ அவர் கடவுளைத் தவிர வேறில்லை என்ற உறுதியான நம்பிக்கை அவர்களுக்கு உண்டாக்கியது. தாங்கள் அவருக்குச் சேவை செய்து புண்ணியம் பெறவே அவர் தமக்கு நோயை வரவழைத்துக் கொண்டதாகவும் நினைத்தார்கள். அண்ட சராசரங்கள் அனைத்துக்கும் சொந்தமானவர் ஸ்ரீராமகிருஷ்ணர்; அவருடைய மருத்துவச் செலவிற்குப் பணமில்லாமலா போய்விடும்? அதற்கான வழியை அவரே ஏற்படுத்தித் தா மாட்டாரா?

எல்லா பக்தர்களும் ஒன்று கூடிப் பேசினார்கள். ஒருவர் தன் வீட்டையே அடகு வைத்து குருதேவரின் சேவைக்குப் பணம் தர முனைந்தார். 'நம் சொந்தக்காரர்களுக்கு நோய் வந்து பணம் இல்லாமல் போனால் என்ன செய்வோம்? வீட்டில் உள்ள நகைகளை எல்லாம் அடகுவைக்க மாட்டோமா? ஸ்ரீராமகிருஷ்ணரைவிட நமக்கு நெருங்கிய

சொந்தக்காரர்கள் யார்?' என்று அடுத்தவர் தன் வீட்டு நகைகளை எல்லாம் அடகு வைக்க முன்வந்தார். மூன்றுமவர் தன் பெரிய குடும்பத்தின் செலவைப் பாதிக்குமேல் குறைத்துக் கொண்டு யாருக்கும் அது பற்றிச் சொல்லாமல் குருதேவரின் சேவைக்குப் பணம் தந்தார். இத்தகைய உற்சாகத்தால் உந்தப்பட்டு சுரேந்திரர், குருதேவர் தங்கியிருக்கும் வீட்டிற்கான வாடகையைத் தரும் முழுப்பொறுப்பையும் தாமே ஏற்றுக் கொண்டார். பலராம், ராமசந்திரர், மகேந்திரர், கிரீஷ் முதலானவர்கள் குருதேவருக்கும் அவரைக் கவனித்துக் கொள்பவர்களுக்கும் ஆகும் மொத்தச் செலவைத் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டார்கள். இந்தச் சுயநலமற்ற சேவையும் தியாகமும் குருதேவரின் பொருட்டு அனைவருக்கும் ஏற்பட்டன. தட்சிணேசுவரத்தில் ஆரம்பமாகிய ஸ்ரீராமகிருஷ்ண சகோதரத்துவம் மேலும் வளர குருதேவரிடம் அவர்கள் கொண்ட உறுதியான, எல்லையற்ற பக்தி பெரிதும் துணை செய்தது. சியாம்புகூரிலும் அதன் பின்னர் காசிப்பூரிலும் எல்லோரும் நாள் தோறும் குருதேவரைச் சுற்றி ஒன்று கூடினர். அவரை மையமாக வைத்துக் கொண்டு தங்களுக்குள் நீங்காத அன்பையும் சகோதர பாசத்தையும் வளர்த்துக் கொண்டார்கள். அவர்களில் பலர் தங்களிடையே இத்தகைய உறவை வளர்க்கவே குருதேவர் இப்படி நோயை உண்டாக்கிக் கொண்டாரோ என்றும் நினைத்தார்கள்.

எல்லாவகையான தெய்விக ஆற்றலும் எதையும் செய்து முடிக்கும் திறனும் பெற்ற குருதேவர் இப்போது நோயால் வருந்துவதைக் கண்ட பக்தர்கள் தாங்கள் குருதேவரைப் புரிந்து கொண்டதற்கு ஏற்ப நோய்க்கான காரணங்களைப் பல விதமாகக் கூறினர். முதல் வகையினர் முன்பே கூறப்பட்டவர்கள். தங்களை ஒன்று சேர்க்க குருதேவர் நோயைத் தாமே வரவழைத்துக் கொண்டு திருவிளையாடல் புரிகிறார் என்று நினைத்தவர்கள். கிரீஷ் சந்திர கோஷ் இவர்களின் தலைவர். இரண்டாவது வகையினரின் கருத்து; குருதேவர் அன்னை காளியின் கையில் உள்ள ஒரு கருவி. அன்னை காளியே யாராலும் அறிந்து கொள்ள முடியாத ஒரு காரியத்தை நடத்த குருதேவரை இந்த நிலையில் வைத்திருக்கிறாள். எனவே ஸ்ரீராமகிருஷ்ணருக்கே கூடக் காளியின் எண்ணம் தெரியாது, என்பதாகும். மூன்றாவது வகையினர், ஸ்ரீராமகிருஷ்ணர் கடவுளின் அவதாரம் என்றாலும் இப்போது அவர் மனித உடம்பில் இருக்கிறார். எனவே எல்லா

மனித உடம்பிற்கும் உரிய வளர்ச்சி, நோய், அழிவு என்பது அவருடைய உடம்பிற்கும் உண்டு. அவருடைய உடல் நோய்க் குக் கற்பித்துக் கொள்ளும் மற்ற அனைத்துக் காரணங்களும் சரியில்லை. எனவே அவர் குணமடைய எல்லாக் காரியங்களை யும் செய்வோம். அதே நேரத்தில் அவர் உயிரோடு இருக்கும் போதே அவர்கள் எதிரிலேயே அவர் சொற்படி சாதனைகளைத் தீவிரமாகக் கடைப்பிடித்து அவர் காட்டிய லட்சியமான கடவுளைக் காண்போம், என்று கூறினர். நரேந்திரரும் அவருடைய இளம் தோழர்களான குருதேவரின் ஏனைய சீடர்களும் இந்தக் கருத்தையே மேற்கொண்டிருந்தனர். குருதேவரின் நோயைப் பற்றி இவ்வாறு வெவ்வேறான கருத்துக்களை பக்தர்கள் கொண்டிருந்தாலும் குருதேவ ருக்குச் சேவை செய்ய வேண்டும் என்பதில் எல்லோரும் ஒரே நினைப்பாக இருந்தனர். அவருடைய கட்டளையைச் சிறிதும் மீறாமல் நிறைவேற்றுவதிலும், அதன்மூலம் அவருடைய அருளைப் பெறுவதிலும் கண்ணும் கருத்துமாக இருந்தார்கள்.

டாக்டர் மகேந்திரலால் சர்க்கார் குருதேவருக்கு மருத் துவம் செய்யும் பொறுப்பை மேற்கொண்டதை முன்பே கண்டோம். முதலில் சில நாட்கள் அவர் குருதேவரின் நோயைப் பற்றி ஆராயத் தினமும் மூன்று முறை வந்து பரிசோதித்தார். இந்தப் பரிசோதனை முடிந்ததும் மணிக் கணக்காக குருதேவருடன் அமர்ந்து கொண்டு பல்வேறு செய் திகளைப் பற்றிப் பேசுவார். அதன் விளைவாக விரைவிலேயே அவர் குருதேவரின் ஆன்மிக உயர்வை அறிந்து கொண்டார்; குருதேவருடன் இருப்பதைப் பெரும் பேறாகக் கருதினார். ஒரு நாள் டாக்டர் தம்மிடம் காட்டும் அன்பிற்காக குரு தேவர் நன்றி கூறினார். இதைக் கேட்ட சர்க்கார், ''நான் இங்கே இவ்வளவு நேரம் செலவு செய்வது உங்களுக்காக மட்டும் என்றா நினைக்கிறீர்கள்? எனக்கும் தனிப்பட்ட முறை யில் அதனால் பலன் இருக்கிறது. நான் எப்போதும் தொழி லில் மூழ்கிக் கிடப்பவன். இதற்கு முன்னால் உங்களோடு பழகும் வாய்ப்பு எனக்குக் கிடைக்கவில்லை. வெளிப்படை யாகச் சொல்லுவது என்றால் சத்தியத்திடம் உங்களுக்கு இருக்கின்ற அசைக்க முடியாத நம்பிக்கையை நான் மிகவும் விரும்புகிறேன். மனிதர்களெல்லாம் பேசுவது ஒன்றும் செய்வது ஒன்றுமாக எப்படியெல்லாமோ வாழ்கிறார்கள். நீங்கள் சொல்லும் செயலும் ஒன்றாக இணைந்து இருக்கிறீர்கள். உங்களை நான் பாராட்டுவதாக நினைக்க வேண்டாம்.

மனிதன் என்ற வகையில் எனக்கு யாரிடமும் மரியாதை கிடையாது. என் தந்தையே தவறு செய்தாலும் நேருக்கு நேராகக் காறித் துப்புவேன். முரட்டுத் தனத்திற்குப் பெயர் போனவன் நான்'' என்றார். இதைக் கேட்ட குருதேவர் சிரித்தபடியே, ''ஆமாம். நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் இவ்வளவு நாட்களாக நீங்கள் இங்கே வந்து கொண்டிருக்கிறீர்கள். அப்படிப்பட்ட முரட்டுத்தனம் எதையும் நான் பார்க்கவில்லையே'' என்றார். டாக்டர் சிரித்தபடியே, ''நம் இரண்டு பேர் ராசியும் ஒன்றாக இருக்கிறது. அதனால் தான் அப்படியெல்லாம் ஒன்றும் நடக்கவில்லை. உங்களிடத்தில் ஏமாற்று வேலை எதையும் நான் பார்க்கவில்லை. பார்த்திருந்தால் என் முரட்டுத்தனத்தை நீங்கள் பார்த்திருப்பீர்கள்'' என்றார்.

ஒரு நாள் பேச்சின் இடையில் டாக்டர், கடவுளை ஓர் வரையறைக்குள் அடக்கி, அவர் அப்படிப்பட்டவர் மட்டுமே, இப்படிப்பட்டவர் மட்டுமே என்று கூறுபவர்கள்மீது தனக்குள்ள கோபத்தையும் வெறுப்பையும் கூறினார். அதைக் கேட்டு குருதேவர் மகிழ்ச்சி அடைந்து, ''நீங்கள் சொல்வது மிகவும் உண்மை. என்னாலும் அப்படிப்பட்ட முட்டாள்தனமான கருத்துக்களைப் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை. என்றார். பிறகு அருகில் இருந்த பக்தரிடம், பக்தர் இராம் பிரசாதர் பாடிய பாடல் ஒன்றைப் பாடி அதன் கருத்தை டாக்டருக்கு விளக்கச் சொன்னார். பக்தர் விளக்கம் சொல்லி வரும் போது குருதேவர் குறுக்கிட்டு, ''இல்லை. நீ தவறாகச் சொல்லுகிறாய். அந்த வரியின் பொருள் அதுவல்ல- 'என் மனம் தெளிவாக அதைக் காண்கிறது. ஆனால் அந்தோ, என் இதயமோ திருப்தி அடைய மறுக்கிறது, என்பதுதான் சரியான பொருள். மனம் கடவுளைப் புரிந்து கொள்ள முயல்கிறது. சீக்கிரத்திலேயே அது ஆற்றலுக்கு அப்பாற்பட்டது என்பதை உணர்ந்து கொள்கிறது. இதயமோ அதை ஏற்றுக்கொள்ள மறுக்கிறது. போ போய் கடவுளைப் புரிந்துக் கொள் என்று மனத்தைத் துரத்துகிறது. அவரை அடைய முடியாமல் துடிக்கிறது'' என்றார். குருதேவரின் இந்த விளக்கம் டாக்டரின் மனத்தை மிகவும் கவர்ந்தது. மிகுந்த மகிழ்ச்சியோடு, ''ஆமாம். மனம் மட்டமான ஒன்று. தான் கடவுளைக் காண்பதில் ஏதாவது சிறு துன்பம் நேரிட்டாலும் விட்டு விட்டு ஓடிவந்து விடுகிறது. இதயமோ எவ்வளவு துன்பம் வந்தாலும் சளைப்பதில்லை. மேலும் மேலும் கடவுளைத் தேடியே செல்கிறது'' என்றார்.

பாடலைக் கேட்டுக் கொண்டிருந்தபோது ஒன்றிரண்டு இளைஞர்கள் தெய்விகப் பரவசத்தில் மூழ்கிச் சமாதியில் ஆழ்ந்தார்கள். டாக்டர் உடனே அவர்களின் நாடித் துடிப்பைப் பரிசோதித்து, ''அவர்களுக்கு உலக நினைவு இருப்பதாகவே தெரியவில்லை'' என்றார். அப்போது குரு தேவர் தம் கையை அவர்கள் மார்பின்மீது லேசாகத் தடவிய படியே காதில் கடவுளின் திருப்பெயரைச் சொன்னார். இது உடனே அவர்களை நினைவு பெறும்படிச் செய்தது. இதைக் கண்ட டாக்டர், ''இதெல்லாம் உங்களுக்கு ஒரு விளையாட்டுப் போல் இருக்கிறதே'' என்றார். குருதேவர் சிரித்தபடி, ''இல்லை; எல்லாம் கடவுளின் கருணை. இந்த இளைஞர்களின் மனம் மனைவி, மக்கள், பேர், புகழ், பணம் இவற்றின் மேல் இன்னும் சிதறிப் போகவில்லை. எனவே அவர்களால் கடவுள் மீது மனத்தைக் குவித்து உலகை மறக்க முடிகிறது.'' என்றார். டாக்டர் தொடர்ந்து ''அரை குறைப் படிப்பு மிகவும் ஆபத்தானது. நிறைந்த அறிவு ஒருவனைப் பணிவுள்ளவனுக்கு கிறது'' என்றார். இதைக் கேட்ட குருதேவர், ''ஆமாம், உலகைப் பற்றிய அறிவு ஒருவனை இப்படி இறுமாப்புள்ளவனாக ஆக்குகிறது. மனிதனைக் கட்டுகின்ற தளைகளில் படிப்பைப் பற்றிய கர்வமும் ஒன்று. பல துறைகளில் உங்களுக்கு இவ்வளவு ஞானம் இருந்தும் நீங்கள் இத்தகைய பந்தம் இல்லாமல் இருப்பது கடவுளின் கருணையினால்தான்'' என்று கூறினார். இதைக் கேட்ட டாக்டர் உணர்ச்சிவசப்பட்டவராய்,'' அப்படியா! எனக்கு ஒன்றும் தெரியாது. மற்றவர்களிடமிருந்து ஒன்றைக் கற்றுக் கொள்வதில் எனக்கு வெட்கம் ஒன்றும் கிடையாது. இந்த இளைஞர்களிடத்தில் நல்லது இருந்தால் கூட நான் கற்றுக் கொள்வேன். அவர்களுடைய கால்களையும் தொட்டு வணங்குவேன்'' என்றார். உடனே குருதேவர், "நானும் எல்லோரிடமும் இதைத்தான் சொல்கிறேன். எவ்வளவு காலம் நான் உயிரோடு இருக்கிறேனோ அவ்வளவு காலமும் நான் மற்றவர்களிடமிருந்து நல்லதைக் கற்றுக் கொண்டே இருப்பேன்'' என்று கூறினார். டாக்டர் சென்ற பிறகு மற்றவர்களிடம் அவர் பேசியதைக் குறிப்பிட்டு, ''அவருடைய பணிவைப் பார். அவர் உண்மையிலேயே பெரியவர் என்பதை இது காட்டுகிறது'' என்றார்.

படிப்படியாக டாக்டர் சர்க்கார் குருதேவரிடம் மிகுந்த பற்றுக் கொண்டார். குருதேவரும் அவருக்குக் கடவுள் காட்சி கிடைக்கச் செய்வதில் பெரிதும் ஆர்வம் கொண்டார். தமது மிகச் சிறந்த சீடர்களான மகேந்திரர், கிரீஷ்,

நரேந்திரர் முதலானவர்களை அவரோடு நெருங்கிப் பழகும் படிக் கூறினார். அதன் விளைவாக டாக்டர் கிரீஷின் படைப் பான 'புத்தரின் வாழ்க்கை' முதலான பல சமய நாடகங்களைப் பார்த்தார். நரேந்திரரின் பேச்சில் மிகுந்த மகிழ்ச்சி அடைந்து அவரை ஒரு நாள் தம்மோடு விருந்துண்ண அழைத்தார். அதன் பிறகு ஒரு நாள் குருதேவரோடு இருக்கும்போது டாக்டர் நரேந்திரரைப் பாடும்படிக் கேட்டுக் கொண்டார். நரேனின் குரலும் பாடலும் உணர்வும் அவரைப் புல்லரிக்கச் செய்தன. நரேனை அப்படியே கட்டித் தழுவிக் கொண்டு மனம் நிறைந்து ஆசீர்வாதம் செய்தார். பிறகு குருதேவரி டம், ''இவ்வளவு ஆற்றல் நிறைந்த இளைஞன் கடவுளுக் காகத் தன் வாழ்க்கையைத் அர்ப்பணிப்பது குறித்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். இவன் ஒரு மாணிக்கம். எதிர்காலத்தில் எந்தத் துறையைத் தேர்ந்தெடுத்தாலும் இவன் நிச்சயம் ஒளிமயமாக விளங்குவான்'' என்றார். அதைக் கேட்ட குருதேவர் மிகுந்த மகிழ்ச்சியோடு, ''அத்வைத கோசுவாமியின் உளம்கனிந்த பிரார்த்தனையே இறைவனை கௌராங்கராக அவதாரம் செய்ய வைத்தது. என்று கூறுகிறார்கள். அதுபோல இங்கு நீங்கள் காண்பதெல் லாம் (அதாவது தாம் பிறந்தது) அவனுக்காகத் (நரேந்திரருக் காக) தான்'' என்றார்.

இரண்டு மாதங்கள் கழிந்தன. குருதேவரின் நோய் குறையவே இல்லை. மருந்துகளால் ஒன்றும் பலனில்லை. இது டாக்டரைக் கவலைக்குள்ளாக்கியது. இதனால் அவர் சில நேரங் களில் உணவில் மிகக் கடுமையான பத்தியங்களை வைத்தார்; குருதேவரின் நோயைக் குணப்படுத்துவ தில் சராசரியான ஒரு டாக்டர் காட்டும் அக்கறையைவிட மிகுந்த ஆர்வமும் அக்கறையும் எடுத்துக் கொண்டார். அவர் குருதேவரிடம் பேசும் ஒவ்வொரு வார்த்தையும் அவருக்குச் செய்யும் ஒவ்வொரு செயலும் அவர் குருதேவரிடம் வைத் திருக்கும் அளவற்ற மதிப்பையும் அன்பையும் காட்டின. குரு தேவரின் அன்பு, இனிமை, தெய்விகம் இவற்றால் முழுக்க முழுக்கக் கவரப்பட்ட டாக்டருக்கு குருதேவரி டம் மட்டுமல்லாமல் அவரிடம் தூய பக்தி கொண்ட பக்தர் களிடமும் மிகுந்த அன்பு ஏற்பட்டது. ஆனால் அவர்கள் குரு தேவரைக் கடவுளாகவே நினைத்து அவரை வழிபடுவதும் வணங்குவதுமான காரியங்களை அவரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. மனிதனை மனிதன் வணங்குவதையும் கடவுள் அவதாரமாகவே இருந்தாலும் மனிதன் ஒருவனை வழிபடுவதை

யும் அவர் மிகவும் வெறுத்தார். தன்னுடைய இந்தக் கருத்தை ஒரு நாள் அவர் குருதேவரிடம் நேராகக் கூறினர்: ''என்னல் கடவுளிடம் செலுத்தப்படும் பக்தி, அன்பு முதலியவற்றைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனல் எல்லேயற்ற கடவுள் ஓர் எல்லேக்குட்பட்ட மனித உடம்பில் வருகிருர், என்னும் கருத்தை ஏற்றுக்கொள்ள முடியவில்லே. அவர் யசோதை, அல்லது சசிதேவியின் குழந்தைகளாக* அவர்கள் எப்படி வந்தார்கள் என்பதைப் புரிந்து கொள்வதுதான் கடினமாக இருக்கிறது. இது தான் எல்லாக் குழப்பங்களுக்கும் காரணம்.'' இதைக் கேட்டுச் சிரித்த குருதேவர் சுற்றிலும் இருந்தவர்களிடம், ''அவர் கூறுவதைக் கேளுங்கள். இது பொருளற்ற பேச்சு. ஆனுலும் சில முட்டாள்கள் தங்கள் சமயமும் கடவுளும்தான் உயர்ந்தவை என்று உலகில் சண்டைச் சச்சரவை உண்டாக்குகிருர்கள். கடவுளின் அவதாரம் பற்றிய உண்மையான கருத்து அதனல் அழிந்துவிடாது.'' என்ருர்.

இது போன்று பல கருத்துக்களேப்பற்றி டாக்டருக்கும் குருதேவருக்கும் விவாதம் நடக்கும். டாக்டர் தன் கருத்துக்களேயும் அதற்கு ஆதாரமானவற்றையும் கூறுவார். டாக்டர் கூறும் கருத்துக்கள் சரியில்லே என்ருல் அதைக் காரண காரியங்களோடு மிகவும் எளிமையாக அன்போடு விளக்குவார் குருதேவர். சில நேரங்களில் பக்தர்களும் இந்த உரையாடலில் கலந்து கொள்வார்கள்.** உறுதி வாய்ந்த டாக்டரின் அறிவு, குருதேவர் கூறும் வார்த்தைகளே ஏற்றுக் கொள்ள மறுத்த போது குருதேவரின் அளவற்ற அன்பும் இனிமையும் அடிக்கடி அவரிடம் தோன்றும் தெய்விக ஆற்றலும் அவர் மனத்தைக் கவர்ந்தன. இதனல் அவருடைய கருத்துக்கள் சிறிது சிறிதாக மாறுதலடைந்தன. டாக்டரின் மனத்தில் மிகுந்த மாறுதலே ஏற்படுத்திய நிகழ்ச்சி ஒன்றைக் காண்போம்.

அது துர்கா பூஜை சமயம். சுரேந்திரர் தன் வீட்டில் மிகுந்த வருத்தத்தோடு இந்த விழாவைக் கொண்டாடிக் கொண்டிருந்தார். குருதேவர் கல்கத்தாவில் இருந்தும் நோயின் காரணமாகத் தன் வீட்டிற்கு வர இயலவில்லேயே என்பதே அவருடைய கவலேக்குக் காரணம். துர்கா

---

*ஸ்ரீகிருஷ்ணர், ஸ்ரீசைதன்யர் முதலியவர்களே இங்கே குறிப்பிடுகிருர்.

**இந்த உரையாடல்களே எமது வெளியீடான 'ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்' என்னும் நூலில் விரிவாகக் காணலாம்.

பூஜையின் இரண்டாம் நாள் விழாவன்று மாலையில் நரேந்திரர், டாக்டர் சர்க்கார் முதலான பலர் தட்சிணேசுவரத்தில் குருதேவரின் அறையில் கூடியிருந்தார்கள். நரேன் பாடிக் கொண்டிருந்தார். எல்லோரும் அதைக் கேட்டு மெய்ம்மறந்திருந்தனர். குருதேவர் திரும்பத் திரும்ப சமாதியில் மூழ்கியவாறே இருந்தார். அப்போது அறையில் இருந்த கடிகாரம் மணி அடித்தது. மணி ஏழரை. காளி பூஜையின் மிகச்சிறந்த புண்ணிய நேரமான சந்தி வேளை. டாக்டர் தமது வீட்டிற்குப் புறப்பட்டார். அவரை வழியனுப்ப குருதேவர் எழுந்தார்; நின்றவாறே ஆழ்ந்த சமாதியில் மூழ்கிவிட்டார். அது சந்தி வேளையானதால் குருதேவருக்கு இப்படி ஆழ்ந்த சமாதி ஏற்பட்டதாக பக்தர்கள் பேசிக் கொண்டனர். டாக்டரும் தொடர்ந்து என்ன நடக்கிறது என்று பார்க்க அறையிலேயே உட்கார்ந்து கொண்டார்.

அரை மணி நேரம் கழிந்தது. குருதேவர் உலக நினைவு பெற்றார். உடனே இவ்வளவு நேரம் சமாதியில் தாம் கண்டவற்றையெல்லாம் சொல்ல ஆரம்பித்தார்: ''இங்கேயிருந்து சுரேந்திரரின் வீடு வரையிலும் ஒளிமயமான ஒரு பாதைதெரிந்தது. சுரேந்திரன் வழிபடும் திருவுருவில் அன்னை காளி எழுந்தருளியிருக்கிறாள். அவளுடைய நெற்றிக் கண்கள் தெய்விக ஒளிவீசிக் கொண்டிருக்கின்றன. வழக்கமான விளக்கு வரிசைகள் அவள் முன்னால் எரிந்து கொண்டிருக்கின்றன. சுரேந்திரன் வீட்டின் முற்றத்தில் உட்கார்ந்து தேம்பித் தேம்பி அழுது கொண்டிருக்கிறான். நீங்கள் யாராவது அவன் வீட்டிற்குப் போய் ஆறுதல் சொல்லுங்கள்'' என்றார். உடனே நரேந்திரரும் மற்றும் சில பக்தர்களும் சுரேந்திரரின் வீட்டிற்குச் சென்றார்கள். குருதேவர் சொல்லிய எல்லாமே அப்படியே இருப்பதைக் கண்டார்கள்.

இந்த சமாதியின்போது குருதேவரை டாக்டர் சர்க்காரும் அவருடன் வந்திருந்த மற்றொரு டாக்டரும் 'ஸ்டெதஸ்கோப்' மூலம் ஆராய்ந்தார்கள். இதயத்துடிப்பே இல்லை, முழுவதுமாக நின்று போயிருந்தது. குருதேவரின் கண்மணிகளைத் தொட்டு அசைத்துப் பார்த்தார்கள். எந்த விதமான உணர்ச்சியோ, மாறுதலோ இல்லை; கண்மணிகள் அப்படியே அசைவற்று இருந்தன. இதையெல்லாம் மேலும் கூர்ந்து ஆராய்ந்த இரண்டு டாக்டர்களும் ஆச்சரியமடைந்து விஞ்ஞானம் இதற்கு விளக்கம் தர முடியாது'' என்றார்கள்.

மூன்று வாரங்கள் கடந்தன. குருதேவரின் உடல்நிலையில் எந்தவித மாற்றமும் இல்லை. பலவீனமாக இருந்த போதும்

குருதேவர் உற்சாகமாகவே இருந்தார். அப்போது குருதேவருக்கு மிகவும் விருப்பமான காளி பூஜை நாள் வந்தது. தேவேந்திரர் என்னும் பக்தர் குருதேவரின் முன்னிலேயில் காளி பூஜையை நடத்தலாம் என்ருர். உடனே பல பக்தர்கள் அது குருதேவரை மிகவும் பரவசமடையச் செய்து அவரது நோயை அதிகமாக்கி விடும் என்று கூறி வேண்டாமென்று தடுத்தனர். தேவேந்திரரும் சரி என்று விட்டு விட்டார். காளி பூஜைக்கான நாள் நெருங்கிக் கொண்டே இருந்தது. ஒன்றிரண்டு நாட்களே இருந்தன. அப்போது குருதேவர் சில பக்தர்களிடம் சிறிய அளவில் காளி பூஜையைச் செய்யலாம் என்றும் அதற்கான ஏற்பாட்டைச் செய்யும்படியும் கூறினுர். பக்தர்கள் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தனர். குருதேவர் கூறியதுபோல் சிறிய அளவில் அதற்கான பொருள்களேச் சேகரித்தனர். காளி பூஜை நாள் வந்தது. காலேயும் மத்தியானமும், கழிந்து மாலே வந்தது. முப்பதுக்கும் மேற்பட்ட பக்தர்கள் குருதேவரின் அறையில் கூடினர். குருதேவரோ இந்தப் பூஜையைப் பற்றி ஒன்றுமே பேசவில்லே. அமைதியாக இருந்தார். மணி ஏழு அடித்தது. பக்தர்கள் தாங்களாகவே பூஜைக்குச் சேர்த்த பொருள்களே குருதேவரின் முன் கொண்டு வந்து அவர் படுக்கை அருகே வைத்தார்கள். முன்பு இது போன்ற ஒருகாளி பூஜை நாளில் அவர் தம் கழுத்தில் தாமே மாலேகளே அணிந்து கொண்டு தம்மையே வழிபட்டுக் கொள்வதைப் பார்த்திருந்தனர். எனவே இப்போதும் அப்படிச் செய்வார் என்று எதிர்பார்த்தனர். ஆனுல் குருதேவர் ஒன்றுமே பேசவில்லே; அறையில் நடக்கும் எதைப் பற்றியும் அக்கறை கொள்ளவில்லே. விழாவிற்காக விளக்குகள் ஏற்றப்பட்டன. படுக்கையின் அமர்ந்திருந்த குருதேவர் அமர்ந்தபடியே இருந்தார். சிலர் அவருடைய கட்டளேக்காகக் காத்து நின்ருர்கள். சிலர் காளியை நினேத்துத் தியானத்தில் ஆழ்ந்தார்கள். அறை ஒரே அமைதியாக இருந்தது. யாரும் எதுவும் பேசவில்லே. குருதேவரின் அமைதி அவர்களுக்கு வியப்பைத் தந்தது.

அந்தக் கூட்டத்தில் கிரீஷூம் இருந்தார். அவரும் மற்றவர்களேப் போலவே குருதேவரின் நடவடிக்கையைக் கண்டு வியப்படைந்தார். திடீரென்று அவர் மனத்தில் ஓர் எண்ணம் எழுந்தது. ‘குருதேவர் ஏன் பூஜை செய்ய வேண்டும்? தமக்காக அவர் அன்னே காளியை வழிபட வேண்டிய தேவையே இல்லே. தூய்மையான பக்திக்காகவே அவர் காளியை வணங்குகிருர். அப்படிப்பட்டவர் இப்போது ஏன் அமைதியாக இருக்கிருர்? ஒரு வேளே பக்தர்கள்

தம்மூலம் காளியை வணங்க ஒரு வாய்ப்பை இப்போது தருகிருரா?' என்று நினைத்தார். உடனே எழுந்து சென்று மிகுந்த மகிழ்ச்சியோடு அங்கு தட்டிலிருந்து கொஞ்சம் பூவையும் சந்தனத்தையும் எடுத்து ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவடிகளில் சமர்ப்பித்து 'ஜெய் காளி' என்று முழங்கினுர். இதைக் கேட்டதும் குருதேவரின் உடம்பு லேசாக நடுங்கியது. உணர்ச்சி பெருகி மயிர்க்கால்கள் சிலிர்த்து நிற்க ஆழ்ந்த சமாதியில் மூழ்கிவிட்டார். அவரை அடுத்து மகேந்திரர் வழிபட்டார். அடுத்து ராக்கால், இப்படியே அறையில் இருந்த அனைவரும் குருதேவரை வழிபட்டனர். இந்த நேரத்தில் குருதேவரின் உடம்பு முழுவதுமே பெரிய மாற்றத்தை அடைந்தது. முகத்தில் ஒளி தோன்றி அந்த ஒளிவீசும் முகத்தில் தெய்விகப் புன்னகை மலர்ந்தது. அவருடைய கைகளில் ஒன்று மேலெழுந்தது; மற்ருெரு கை காளியின் வரம் தரும் கைபோல் கீழ் நோக்கி நின்றது. அண்ட சராசரங்களை ஆளும் காளி குருதேவரின் உடலில் அப்போது தோன்றி நின்ருள். பக்தர்கள் அனைவரும் பேரானந்தப் பரவசமுற்றனர். அறை முழுவதும் மகிழ்ச்சி ஒலி நிரம்பியது. குருதேவர் உலக நினைவைப் பெற்றதும் எதிரே வைக்கப்பட்டிருந்த இனிப்பிலும் பழத்திலும் சிறிது எடுத்துக் கொண்டார். மற்றவை பிரசாதமாக எல்லோருக்கும் வழங்கப்பட்டது. இரவு நெடுநேரம் அன்னை காளியின் புகழை பக்தர்கள் அந்த அறையில் பாடியபடியே இருந்தனர். அன்று மாலையில் நோயின் அடையாளம் சிறிது கூட இல்லாமல் ஆனந்தமயமான நிலையில் பக்தர்கள் குருதேவரைக் கண்டனர்; குருதேவர் என்றும் தங்களோடு இருந்து எப்போதும் தங்களைக் காப்பார் என்ற நம்பிக்கை பக்தர்களிடம் ஏற்பட்டது.

குருதேவரின் நோய் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே இருந்தது. அவரைக் காண வரும் கூட்டமும் நாள் தோறும் பெருகிக்கொண்டே வந்தது. பலர் குருதேவரிடம் ஆன்மிக ஞானம் வேண்டி இந்த நேரத்தில் அவரிடம் வந்தனர். இல்லறத்தார்களும் பிரம்மச்சாரிகளும் வயதானவர்களும் இளைஞர்களும் ஆண்களும் பெண்களுமாகக் கூட்டம் கூட்டமாக அவரிடம் வந்தனர். குருதேவர் எல்லோருடைய துயரையும் தேவையையும் கேட்டு அவர்களுக்கு ஆறுதல் கூறினுர். கடவுளைக் காணும் ஆர்வத்தோடு வந்தவர்களுக்கு அதற்கான வழிகளை காட்டினுர்.

சியாம்புகூரிலிருக்கும் போது ஒரு நாள் குருதேவருக்கு ஒரு காட்சி தோன்றியது. அவருடைய உடம்பிலிருந்து நுண் உடம்பு (Subtle body) தனியாகப் பிரிந்து வெளியே

வந்து அறையில் நடமாடுவதைக் கண்டார். அதனுடைய கழுத்தின் பின்புறத்தில் நிறையப் புண்கள் இருந்தன. அதைக் கண்டு குருதேவர் திகைப்படைந்தார். அவையெல்லாம் தூய்மையில்லாத மக்கள் அவரைத் தொட்டதால் ஏற்றபட்டவையாகும், என்பது குருதேவருக்குத் தெளிவாகியது. அதனல் அவர்கள் தூய்மையைப் பெற்றுப் புண்ணியம் அடைந்தார்கள். குருதேவரோ அவர்களின் பாவத்தைத் தாம் ஏற்று கொடிய புற்று நோய்க்கு ஆளானர். குருதேவர் தட்சிணேசுவரத்தில் இருந்தபோது பல முறை, ''மனித குலத்தின் நன்மைக்காக லட்சம் முறை பிறந்து வேதனைப்படவும் தயார்'' என்று கூறியிருந்தார். இப்போது தாம் கண்ட இந்தக் காட்சியை அவர் கூறியதும் மனித குலத்திடம் அவருக்கிருந்த எல்லையற்ற கருணையையும் அன்பையும் கண்டு பக்தர்கள் உள்ளம் நெகிழ்ந்து உருகினர். இனி உடல் நலம் பெறும்வரையில் குருதேவரை யாரும் தொடாமல் பாதுகாத்து மேலும் நோயால் அவர் துன்பப் படாமல் பார்த்துக் கொள்ள உறுதி கொண்டனர்.

குருதேவரின் இந்தக் காட்சிக்குப் பிறகு பக்தர்கள், குருதேவரிடம் புதியவர்கள் வருவதைத் தடுக்க கடுமையான காவலை ஏற்படுத்தினர். இதைக் கண்ட கிரீஷ், ''நீங்கள் பக்தர்களை குருதேவரிடம் வராமல் தடுக்கலாம். ஆனல் உங்களால் அந்த முயற்சியில் வெற்றி பெற முடியாது. ஏனென்றல் மற்றவர்களுடைய பாவங்களைச் சுமக்க விரும்பியே அவர் வந்திருக்கிறர்'' என்றர். இந்தக் கட்டுப் பாட்டின்படி பக்தர்களால் அங்குவரும் முன்பின் தெரியாதவர்களை மட்டுமே கட்டுப்படுத்த முடிந்தது. ஆனல் குருதேவருக்குத் தெரிந்தவர்களைக் கட்டுப்படுத்த முடியவில்லை. எனவே யாரையும் நன்றக விசாரிக்காமல் குருதேவர் முன் அனுப்பக்கூடாது என்றும், அப்படி அனுப்பப் படுபவர்களும், குருதேவரின் திருப்பாதங்களைத் தொடக்கூடாது என்றும் விதி செய்யப்பட்டது. இந்த விதிகள் பல நேரங்களில் புதிதாக வருபவர்களின் பக்தி ஆவேசத்தால் தகர்ந்து போயின.

குருதேவரோடு எப்போதும் இருந்ததும் அவருக்கு மனமாரச் சேவைகள் செய்ததும் பக்தர்களின் பக்தியையும் நம்பிக்கையையும் பெருக்கியது. இது மிகவும் ஆபத்தான எதிர் விளைவையும் உண்டாக்கியது. பெரும்பாலானவர்கள் துறவு, சுயக்கட்டுப்பாடு இவைகளைவிட வெறும் உணர்ச்சிப் பரவசமே தேவை என எண்ணி குருதேவரைப் போலவே ஆடுவதும் பாடுவதும் ஆனந்தப் பரவசம் அடைவதுமாக மாற முயற்சி செய்தார்கள். ஆழ்ந்த துறவு, மனக்கட்டுப்பாடு

முதலியவை இல்லாமல் ஆடுவதும் பாடுவதும் ஆனந்தப் பரவசம் அடைவதும் பயனில்லாதது என்பதை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. இது தங்களைக் கீழான நிலைக்கு இழுத்துச் சென்று கேவலமான காரியங்களைச் செய்ய வைத்துவிடும் என்பதையும் அவர்கள் உணர வில்லை. முன்பு இராமராகவும் கிருஷ்ணராகவும், சைதன்யராகவும் வந்த குருதேவர் இப்போது ஸ்ரீராமகிருஷ்ணராக வந்திருக்கிறார்; ஆதலால், இப்போது அவருடைய பக்தர்களாக உடன் இருக்கும் தாங்கள் முன் அவதாரங்களில் யாராக இருந்திருப்போம் என்ற ஆராய்ச்சியைத் துவங்கி 'அவராக இருந்தோம், இவராக இருந்தோம்' என்று உரிமை கொண்டாட ஆரம்பித்தார்கள். எதாவது ஒரு சிறு நிகழ்ச்சி நடந்தாலும் அழுவதும் பரவசம் கொள்வதுமாக ஆனார்கள். இதுவரைத் தாங்கள் பழகிவந்த கடினமான சாதனைகளை விட்டு விட்டார்கள். இந்த நிலையைக் கண்ட நரேந்திரர் அவர்களுக்கு அறிவுரை வாயிலாகவும் தருக்கத்தின் மூலமாகவும் சில நேரங்களில் அவர்கள் மேலெழுந்தவாரியாக உணர்ச்சி வசப்படுவதைப் பரிகசித்தும் அவர்களுடைய மனத்தை மாற்றி சரியான பயிற்சி அளித்து வந்தார். 'அத்வைத ஞானத்தை உங்கள் வேட்டியின் முனையில் முடிந்து கொள்ளுங்கள். பிறகு உலகத்தில் செயல் புரியுங்கள்' என்னும் குருதேவரின் உபதேசத்தை அவர்களுக்கு நினைவு படுத்தினர். குருதேவரின் உணர்ச்சிகள் ஞானனுபூதியை அடைப்படையாக்க் கொண்டது. அதனல் அவர்கள் வெறும் உணர்ச்சி வசப்படுவதில் ஈடுபடாமல் ஞானத்தை அடைய முயற்சி செய்ய வேண்டுமென்பதையும் விளக்கிக் கூறினர்.

நரேந்திரர் இவ்வாறு பக்தர்களுக்கும் சீடர்களுக்கும் ஒரு பக்கம் பயிற்சி தந்துகொண்டே வர மறுபக்கம் குருதேவரின் உடல் நாளுக்குநாள் மோசமாகிக் கொண்டே வந்தது. செய்யும் மருத்துவம் பலன் தராமல் போகவே நகரத்துக்கு வெளியே காற்ரோட்டமும் மரங்களும் நிறைந்த பெரிய வீடு ஒன்றுக்கு குருதேவரை மாற்றும்படி டாக்டர் சர்க்கார் கூறினர். அத்தகைய வீட்டைத் தேடும் வேலை மும்முரமாகத் துவங்கியது. கல்கத்தாவிற்கு வெளியே உள்ள காசிப்பூர் என்னும் இடத்தில் கோபால் சந்திரகோஷ் என்பவருடைய பெரிய மாளிகை மாதம் எண்பது ரூபாய்க்கு வாடகைக்கு அமர்த்தப்பட்டது. 1885-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் பதினென்றும் நாள் பிற்பகலில் ஸ்ரீராமகிருஷ்ணர் புதிய வீட்டிற்கு அழைத்துச் செல்லப்பட்டார்.

# 47. காசிப்பூர்த் தோட்டமும் மகா சமாதியும்

நாம் இப்போது ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்வில் கடைசிப் பகுதிக்கு வந்து விட்டோம். இதோ, இங்கே தான் இந்தப் பூமியில் அவர் இதுவரை இயற்றிவந்தச் செயல்களுக்கு முடிவு ஏற்பட்டது. அவர் நடத்தி வந்த நாடகத்தின் இறுதியான திரை இங்கேதான் விழுந் தது. இங்கேதான் அவர் தம்முடைய தெய்விக ஆற்ற லின் உச்சத்தை உலகிற்குக் காட்டினுர். இங்கேதான் நரேந்திரரைத் தலைவராக உருவாக்கித் தமக்குப் பின்னுல் தம் கொள்கைகளை உலகெங்கும் பரப்பி, தம்மைப் பின் பற்றுபவர்களுடைய பொறுப்பை ஏற்கும் கருவியாக மாற்றி ஞர். எந்த நோக்கத்துக்காக உடலை எடுத்து வந்தாரோ இந்த உலகத்தில் அதை நிறைவேற்றிய பின் அவ்வுடலைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைத்துக் கொண்டதும் இங்கு தான். இங்கேதான் அவருடைய ஆன்மிகத்தின் கம்பீரம், அதே நேரத்தில் உடலின் வேதனை இரண்டும் ஒன்ருேடு ஒன்று கலந்து உடன் இருந்தவர்களை உயர்த்தவும் வருத் தவும் செய்தது. அந்த உணர்வின் முழுமையை ஒருவர் உணரவே முடியும்; எழுத்தில் விவரிக்க இயலாததாகும்.

காசிப்பூர் தோட்டம் மிக அழகான இடம். ஐந்து ஏக்கர் பரப்பில் பழமரங்களோடு மலர்ச் செடிகளும், பசுமையான புல்வெளியும், நீர்நிறைந்த குளங்களுமாக அமைந்திருந்தது. கல்கத்தாவிலிருந்து வடக்கே வரநகர் செல்லும் சாலையின் வலது புறத்தில் அது இருந்தது. குரு தேவருக்கு இந்த இடம் மிகுந்த மகிழ்ச்சியைத் தந்தது. எட்டு மாதங்களுக்கு மேலாக குருதேவர் இங்கே தங்கினுர். பெரிய வீடாகவும் தோட்டமும் குளமுமாக இடம் பரந்து கிடந்ததால் அதைக் கவனித்துக் கொள்ள ஆட்கள் அதிக மாகத் தேவைப் படுவதை நரேந்திரர் கண்டார். அந்த வீடு கல்கத்தாவில் இருந்து நெடுந் தொலைவில் இருந்ததால் குரு தேவரைக் கவனித்துக் கொள்பவர்களும் சியாம்புகூரில் இருந்ததுபோல் தங்கள் வீடுகளுக்குச் செல்லவோ அங்கே போய்ச் சாப்பிட்டுவிட்டு வரவோ முடியாது. அவர்களும் மாளிகையிலேயேதான் தங்கவேண்டும். அவர்களுக்கான உணவிற்கும் ஏற்பாடு செய்யவேண்டும். இதற்குச் செலவுகள்

மிகுதியாக ஆகும். பணத்தைப் பற்றிய பொறுப்பை வயதில் பெரியவர்களான பக்தர்கள் மேற்கொண்டார்கள். நரேந்திரர் காசிப்பூர் மாளிகைக்கு வந்ததுமே முன்புபோல் அல்லாமல் ஒருநாளின் பெரும் பகுதியை மாளிகை யிலேயே கழித்தாக வேண்டும் என்பதை உணர்ந்தார். அப்போதுதான் கல்லூரிக்கும் அலுவலகங்களுக்கும் போகா மல் தங்கள் பெற்றோர்களுடைய எதிர்ப்புக்களை எல்லாம் தாங்கிக் கொண்டு, குருதேவருக்குச் சேவை செய்யும் மற்ற இளைஞர்கள் ஊக்கத்தோடும் உற்சாகத்தோடும் செயல்படு வார்கள் என்பதையும் அறிந்தார்.

நரேந்திரர் அப்போது சட்டத் தேர்வுக்குப் படித்துக் கொண்டிருந்தார். அந்தப் படிப்பும், அவருடைய வீட்டு விஷயமாக நீதி மன்றத்தில் நடந்து வந்த வழக்கும் அவரைப் பெரும்பாலான நேரம் கல்கத்தாவில் இருக்க வைத்தன; என்றாலும் சட்டத் தேர்வுக்கான புத்தகங் களைக் காசிப்பூர் மாளிகைக்குக் கொண்டு வந்து ஓய்வு நேரத்தில் படித்தபடி பெரும்பாலான நேரம் அங்கேயே இருக்க முடிவு செய்தார். இன்னும் ஒன்றிரண்டு வருடங் களில் தன் தாய்க்கும் தம்பிகளுக்கும் போதுமான பணத் தைச் சம்பாதித்து வைத்துவிட்டு, அதன் பிறகு இல்லறத் தளைகளிலிருந்து முழுமையாக விடுபட நினைத்தார். ஆனால் விதி அவருக்கு வேறு வழியை வைத்திருந்தது.

கல்கத்தாவிலும் காசிப்பூரிலும் தமக்குச் சிகிச்சை செய்ய பக்தர்கள் பணத்திற்காகப் படும் துன்பம் முழுவதையும் ஸ்ரீராமகிருஷ்ணர் உணர்ந்துதான் இருந்தார். பொதுவாக யாரிடத்திலிருந்தும் தமக்கென்று பணமோ பொருளோ சிறிதும் வாங்காதவர் அவர். ஆனால் இப் போது நடந்து கொண்டிருக்கும் தம் வாழ்க்கையின் முக்கியத்துவத்தையும், அதோடு பணத்தாலும் உடல் உழைப்பாலும் தனக்குச் சேவை செய்யும் பக்தர்கள் பெறப்போகும் எதிர்கால உயர்வையும் இன்பத்தையும் முன்னரே குருதேவர் அறிந்திருந்தாலோ என்னவோ அவர்களின் சேவையையும் பண உதவியையும் ஏற்றுக் கொண்டார். என்றாலும் பலரிடமிருந்து பணம் வாங்கித் தமக்குச் சிகிச்சையும் சேவையும் நடைபெறுவதை அவர் விரும்பவில்லை என்பதைக் கீழ்வரும் நிகழ்ச்சியால் அறி யலாம்.

கல்கத்தாவிற்குச் சிகிச்சைக்காக வருமுன்பு ஒரு நாள் குருதேவர் பலராமிடம், ''இதோ பார், பலராம்.

கல்கத்தாவில் என் சிகிச்சைக்காகப் பணம் வசூல் செய்யப் போகிருர்களாம். இதெல்லாம் எனக்குப் பிடிக்கா தவை. இங்கே நான் தட்சிணேசுவரத்தில் இருக்கும் விதம் வேருனது. நான் இந்தக் கோயிலில் இருக்கும் வரை எனக்கு மாதம் ஏழு ரூபாய் சம்பளம் தரும்படி ராணி ராசமணி ஏற்பாடு செய்திருக்கிருர். உண்மையில் இங்கே நான் அந்தப் பணத்தைக் கொண்டுதான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். தட்சிணேசுவரத்தை விட்டுக் கல் கத்தாவிற்கு வந்தால் தயவுசெய்து நீ என் செலவு முழு வதையும் ஏற்றுக் கொள்'' என்ருர்.

பின்னர் காசிப்பூரில் வாடகை மிகமிக அதிகமான வீட்டை அமர்த்தியதைக் கேள்விப்பட்டதும் குருதேவர், அவ்வளவு அதிகமான வாடகையை பக்தர்கள் எப்படி ஒவ்வொரு மாதமும் கொடுப்பார்கள் என்று ஆச்சரிய மும் கவலையும் கொண்டார். சுரேந்திரரை அருகில் அழைத்து, ''இந்தப் பக்தர்கள் பெரும்பாலும் ஏழைகள். குறைந்த சம்பளம் வாங்குபவர்கள். பெரிய குடும்பத்தை வைத் ருக்கும் இவர்களால் இவ்வளவு பெரிய தொகையை வாடகையாகக் கொடுப்பது மிகவும் கடினம். எனவே நீ ஒருவனே வாடகை முழுவதையும் கொடுத்துவிடு'' என்ருர். சுரேந்திரரும் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண் டார்.

படிப்படியாகக் காசிப்பூர் வாழ்க்கை மிகவும் ஒழுங்காக அமைந்துவிட்டது. குருதேவரின் இளம் சீடர்கள் இப் போது பகலிலும் இரவிலும் பெரும்பாலான நேரம் அவருடன் தங்கினுர்கள். அவரவர்களுக்கு விதிக்கப்பட்ட வேலைகளை அவர்கள் செய்து முடித்ததும் குருதேவர் அவர்களை ஒன்ருகச் சேர்த்துத் தியானத்திலும் சாஸ்திரப் படிப்பிலும் விவாதத்திலும் பாடுவதிலும் ஈடுபடுத்துவார். இவ்வாறு அவர்கள் எப்போதும் மகிழ்ச்சியான சூழலிலேயே வாழ்ந்தனர். நேரம் போவதே அவர்களுக்குத் தெரிவதில்லை. ஒரு பக்கம் ஸ்ரீராமகிருஷ்ணரின் சுயநலமற்ற தூய்மையான அன்பாலும் மற்ருெரு பக்கம் நரேந்திரரின் எதையும் தாங்கி நடத்தும் இயல்பாலும் சகோதரப் பாசத்தாலும் கவரப்பட்ட இளம் பக்தர்கள் தங்களுக்குள் ஒரு குடும்பத்தைச் சேர்ந்த வர்களைவிட மிக ஒற்றுமையாக வாழ்ந்தனர். இந்த இளைஞர் களின்மொத்த எண்ணிக்கை பன்னிரண்டைத் தாண்டாவிட் டாலும் அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் வாழ்வை குரு

வின் சேவைக்கு அர்ப்பணித்து அளவற்ற ஆற்றல் உடைய வர்களாக விளங்கினார்கள்.*

காசிப்பூருக்கு வந்த சில நாட்களில் குருதேவர் தோட்டத்தில் சிறிது தூரம் உலவ ஆரம்பித்தார். இவ்வாறு உலவுவது குருதேவரின் உடம்புக்கு வலிமையைத் தரும் என்று பக்தர்கள் மகிழ்ந்தார்கள். ஆனால் சில நாட்களுக்குள் அதன் விளைவு நேர்மாறாகி விட்டது. பலவீனம் அதிகமாகி விட்டது. பல நாட்கள்வரையில் வெளியே வரவே முடியவில்லை. சத்துள்ள உணவைச் சாப்பிடும்படி டாக்டர் கூறினார். சில நாட்களில் குருதேவர் வலிமையும் சிறிது உடல் நலமும் பெற்றார். இந்த முன்னேற்றம் சிறிதுசிறிதாக அதிகமாகிக் கொண்டேவந்தது. டாக்டர் சர்க்கார் மகிழ்ச்சி அடைந்தார்.

தினந்தோறும் இரண்டு இளம் பக்தர்கள் காய்கறிகள் வாங்கிவரவும், குருதேவரின் உடல் நிலையை டாக்டரிடம் கூறவும் போவார்கள். மற்ற வேலைகளை மீதியுள்ள இளைஞர்கள் பகிர்ந்து கொள்வார்கள். தூய அன்னை சாரதா தேவி குருதேவருக்கு உணவு சமைக்கும் வேலையையும் அவரைச் உண்ணச் செய்யும் வேலையையும் கவனித்தார். குருதேவரின் அண்ணன ராமேசுவரின் மகள் லட்சுமி தேவி தூய அன்னைக்குத் துணையாக இருந்தார். சில நேரங்களில் குருதேவரின் பக்தைகள் வந்து ஒன்றிரண்டு நாட்கள் தங்குவார்கள். செலவிற்கான பணத்தைப் பணக்கார பக்தர்கள் கொடுத்தார்கள். அத்துடன் ஓய்வு நேரங்களில் குருதேவருக்குச் சேவையும் செய்தார்கள். எல்லா வேலைகளையும் செய்து முடித்துவிட்டு பிறகு இளம் பக்தர்கள் மிகவும் அவசியமாக இருந்தால் சில மணி நேரம் வீட்டிற்குப் போய்விட்டுத் திரும்பி விடுவார்கள். குருதேவர் உடல் நலம் பெறும்வரை தங்களால் வீட்டைக் கவனிக்கவோ படிப்பைத் தொடரவோ முடியாது என்

---

*பன்னிருவரின் பெயர்கள்: நரேந்திரர், ராக்கால், பாபுராம், நிரஞ்ஜன், யோகின், லாட்டு, தாரக், மூத்த கோபால், காளி, சசி, சரத், இளைய கோபால். சாரதா தன் தந்தையின் கோபத்திற்கும் சண்டைக்கும் அஞ்சி அவ்வப்போது வந்து ஒன்று அல்லது இரண்டு நாட்கள் தங்கிச் செல்வார். ஹரீஷ் சில நாட்களே தங்கியிருந்தார். அதன் பிறகு அவருக்கு மனம் திரிந்து பைத்தியமாகிவிட்டது. எனவே வீட்டிற்குப் போய்விட்டார். ஹரியும் கங்காதரும் எப்போதாவது இடையிடையே வருவார்கள். தங்கள் வீட்டிலேயே தவமும் பழகி வந்தார்கள்.

பதை அவர்கள் தங்கள் பெற்றோரிடம் தெளிவாகச் சொல்லிவிட்டார்கள். என்ன முயன்றும் அவர்களது மனத்தை மாற்ற முடியாத பெற்றோர்கள் வேறு வழியில்லாமல் அவர்கள் சொன்னதை ஏற்றுக் கொண்டார்கள்.

இவ்வாறு வயதான பக்தர்களும் இளம் சீடர்களும் ஒருமித்து ஆற்றிய உழைப்பாலும் சேவையாலும் குருதேவரின் காசிப்பூர் வாழ்க்கை கடினமேதும் இல்லாமல் போய்க் கொண்டிருந்தது. நரேந்திரருக்கு ஓய்வே இல்லை. எப்போதாவது ஒருநாள் அல்லது இரண்டுநாள் கல்கத்தா போய் குடும்ப விவகாரங்களைக் கவனித்துவிட்டு உடனே திரும்பி விடுவார். ஒருநாள் இரவு தம் சகோதரச் சீடர்களிடம், மறுநாள் கல்கத்தா போவதாகச் சொல்லி விட்டு உறங்கச் சென்றார். உறங்க முடியவில்லை. எழுந் திருந்தார். உறங்காமல் இருந்த இளைய கோபால், சரத் மற்றும் சிலரை அழைத்துக் கொண்டு தோட்டத்திற்குள் உலவச் சென்றார். உலவிக் கொண்டே தம் சகோதரச் சீடர்களிடம், ''குருதேவரின் நோய் மிகவும் கடுமை யானது. விரைவில் அவர் உடம்பைத் துறந்துவிட நினைக்க லாம். நேரம் இருக்கும்போதே அவருக்குச் சேவை செய்வதன் மூலமும் தியானம், பிரார்த்தனை, ஜபம் மூலமும், ஆன்மிக முன்னேற்றத்தை அடையப் பாடுபடுங்கள். இல்லையென்றால், அவர் போன பின், உங்கள் தவறுக்காக நீங்கள் முடிவேயில்லாது வருந்த வேண்டியிருக்கும். 'நம் வேலைகளை எல்லாம் முடித்த பிறகு கடவுளைக் காணும் முயற்சியில் இறங்கலாம்' என்று நாம் முட்டாள்தனமாக நினைத்து நேரத்தை வீணாக்கிக் கொண்டிருக்கிறோம்; ஆசை என்னும் விலங்குகளை நம்மேல் நாமே பூட்டிக் கொண்டிருக் கிறோம். ஆசை என்பதே மரணமாகும். அதை உடனடியாக அழித்துவிட வேண்டும்'' என்றார்.

அது குளிர்காலம். நட்சத்திரங்கள் நிறைந்த வானத் தோடு கூடிய அந்த இரவில் எங்கும் முழுமையான அமைதி குடிகொண்டிருந்தது. எப்போதும் உள்முகமாகவே இருக்கும் நரேனின் மனம் அந்த நேரத்தில் தியானத்தை நாடியது. ஒரு மரத்தின் அடியில் அமர்ந்தார். அங்கே உலர்ந்த புல்லும் இலைகளும் கம்புகளும் கிடந்தன. அவைகளைத் திரட்டி வரச் சொன்னார். ''இது தியானத்திற்கு மிகச் சிறந்த நேரம். சந்நியாசிகள் 'துனி' என்னும் நெருப்பை இந்த நேரத்தில் எழுப்பி அருகில் அமர்ந்து தியானம் செய்வார்கள். நாமும் அப்படியே செய்து நம் ஆசைகளை

எல்லாம் எரிப்போம்'' என்ருர். நெருப்பு மூட்டப்பட்டது. இளஞ்சீடர்கள் விறகுகளை அதில் இட்டனர். அத்துடன் தங்கள் ஆசைகளையும் இட்டு எரித்து தியானத்தில் அமர்ந் தார்கள். அவர்கள் மனம் பேரானந்தத்தில் மூழ்கியது. இரண்டு மூன்று மணி நேரம் கழிந்தது. நெருப்பை அணைத்துவிட்டு உறங்கச் சென்ருர்கள். மறுநாள் காலையில் நரேன் கல்கத்தா சென்று வீட்டு வேலைகளைக் கவனித்து விட்டு இரண்டு நாட்களில் காசிப்பூர் திரும்பினுர்.

இந்த நேரத்தில் பண்டித சசதர் குருதேவரைக் காண வந்தார். அவர் குருதேவரிடம், ''ஐயா! சாஸ் திரங்களில் உங்களைப் போன்ற மகான்கள் நினைத்தால் தங்கள் மனவலிமையின் மூலமே எந்த நோயையும் குணப் படுத்திக் கொள்ளலாம், என்று கூறப்பட்டிருக்கிறது. நீங்கள் ஏன் அப்படிச் செய்து நோயைத் தீர்த்துக் கொள்ளக் கூடாது?'' என்று கேட்டார். சற்றும் தாமதியாமல் குரு தேவர், ''நீங்கள் மிகவும் படித்தவர். இருந்தாலும் இப்படி யோசனை இல்லாமல் பேசுகிறீர்கள். என் மனம் முழு வதையும் கடவுளுக்குக் கொடுத்துவிட்டேன். பிறகு எப்படி அவரிடமிருந்து அதைத் திருப்பி இந்தப் பயனற்ற உடம்பின்மேல் செலுத்திக் குணப்படுத்த முடியும்?'' என்ருர். அந்தக் கொடிய துன்பத்திலும் குருதேவரின் மனம் கடவுளை மட்டுமே நாடிச் சென்றது. பண்டிதர் மௌனமாகி விட்டார். ஆனுல் நரேந்திரர் முதலான சீடர்களோ அதைப் பற்றிப் பேசத் துவங்கினர். சசதர் சென்றதும் அவர்கள் குருதேவரைத் தங்களுக்காக வாவது நோயைக் குணப்படுத்திக் கொள்ளும்படி மிகவும் வற்புறுத்தினுர்கள். இறுதியில் குருதேவர் அவர்களுடைய வற்புறுத்தலைத் தாங்க முடியாமல் அன்னை காளியிடம் அது குறித்துக் கேட்பதாக வாக்களித்தார். அதன்படி அன்னை காளியிடம் தம்மால் எதுவும் சாப்பிட முடிய வில்லை என்றும், கொஞ்சம் சாப்பிடும்படிச் செய்ய வேண்டு மென்றும் வேண்டினுர். பிறகு சில மணி நேரம் கழித்து நரேந்திரர் அது பற்றிக் கேட்டபோது, ''அவளிடம் கேட்டேன். அதற்கு அவள் உங்கள் எல்லோரையும் காட்டி, 'நீ இத்தனை பேரின் வாய் மூலமாகவும் சாப்பிடு கிருயே' என்று கேட்டாள். எனக்கு அவமானமாகப் போய் விட்டது'' என்ருர். அவருக்குத்தான் தன் உடம்பைப் பற்றிக் எத்தகைய கவலையற்ற நிலை! எந்த நேரமும், தாம் பிரம்மத்தோடு ஒன்றியிருப்பது பற்றி எவ்வளவு உறுதியான ஞானம்!

இப்போது டாக்டர் சர்க்காரின் நண்பர் டாக்டர் ராஜேந்திர லால், டாக்டர் சர்க்காரின் அனுமதியோடு தானுகவே வேறு ஒரு மருத்துவ முறையின் மூலம் குரு தேவருக்கு மருத்துவம் செய்யத் துவங்கினுர். சில நாட்களில் குருதேவரின் உடல் நிலையில் முன்னேற்றம் ஏற்பட்டது. பக்தர்கள் உற்சாகம் அடைந்தனர். ஆனுல் அது ஒரு தற்காலிக முன்னேற்றமாகவே இருந்தது.

1885-ஆம் ஆண்டு டிசம்பர் இருபத்துமூன்றும் தேதி காலை யில் குருதேவர் மிகுந்த மகிழ்ச்சியோடும் உற்சாகத்தோடும் இருந்தார். நிரஞ்ஜனிடம், ''நீ என் தந்தை. நான் உன் மடியில் உட்கார்ந்து கொள்கிறேன்'' என்ருர். காளி பாதரின் மார்பைத் தொட்டு, 'ஞான ஒளி அடைக' என்ருர். இரண்டு பக்தைகளும்கூட அன்று காலையில் அவருடைய அருளைப் பெற்ருர்கள். சமாதியில் இருக்கும் போது தம்முடைய பாதத்தால் அவர்களைத் தொட்டார். அவர்களில் ஒருவர் அளவற்ற ஆனந்தத்தால் அழுதபடி, 'ஓ! நீங்கள் மிகவும் கருணை வாய்ந்தவர்' என்று கூறினுள். மூத்த கோபாலையும் அழைத்து ஆசீர்வாதம் செய்தார்.

அன்று மாலையில் மகேந்திரரிடம், ''மக்களுக்கு உப தேசிக்கும் என்னுடைய வேலை ஏறக்குறைய முடிந்து விட்டது. இனிமேல் மக்களுக்கு உபதேசம் செய்ய மாட்டேன். இந்த உலகம் முழுவதிலும் கடவுளைத் தவிர நான் வேறு எதையும் பார்க்கவில்லை. உலகம் முழுவதுமே கடவுளாக இருக்கும்போது நான் யாருக்கு உபதேசிப்பது என்று சில நேரங்களில் நினைக்கிறேன்'' என்ருர். இவ்வாறு பேசிக் கொண்டிருந்தபோது தம் வீட்டிற்குச் சென்றிருந்த நிரஞ்ஜன் அங்கே வந்தார். அவரைப் பார்த் ததும், ''என்னிடம் உனக்கு எப்படிப்பட்ட அன்பு இருக் கிறது?'' என்று கேட்டார். அதற்கு நிரஞ்ஜன், ''ஐயா! முன்பு உங்களிடம் அன்பு கொண்டிருந்தேன். இப்போதோ உங்களைப் பிரிந்து இருப்பது முடியாத காரியமாகி விட்டது'' என்ருர். இதைத் தொடர்ந்து மகேந்திரரிடம் பேசிக் கொண்டிருந்த குருதேவர்,''எனக்கு வந்த நோயானது பக்தர்களில் உள் வட்டத்தைச் சேர்ந்தவர்கள் யார், வெளி வட்டத்தைச் சேர்ந்தவர்கள் யார் என்பதைப் பிரித்துக் காட்டிவிட்டது. யார் உலகத்தைத் துறந்து இங்கே என்னுடனே வாழ்கிருர்களோ அவர்கள் உள் வட்டத்தைச் சேர்ந்தவர்கள். யார் எப்போதாவது வந்து என் நோயைப்பற்றிக் கேட்டுவிட்டுச் செல்லுகிருர்களோ அவர்கள் வெளி வட்டத்தைச் சேர்ந்தவர்கள்'' என்ருர்.

நாம் இப்போது குருதேவர் பக்தர்களிடம் கொண்ட அளவற்ற அன்பையும் அவருடைய தெய்விகத்தின் மிக உயர்ந்த நிலையையும் காட்டும் ஒரு நிகழ்ச்சிக்கு வந்திருக்கிறோம். அது 1886-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல்நாள். ஸ்ரீராமகிருஷ்ணர் நோயின் வேதனையில்லாமல் மகிழ்ச்சியோடும் உற்சாகத்தோடும் இருந்தார். மாலை நேரம் மணி மூன்று இருக்கும். தோட்டத்தில் உலாவலாம் என்று மாடியிலிருந்து இறங்கி வந்தார். அன்று விடுமுறை நாளானதால் ஏறக்குறைய முப்பது இல்லறச் சீடர்கள் வந்திருந்தார்கள். அவர்களில் சிலர் தோட்டத்தில் மரங்களின் நிழலிலும் சிலர் மாளிகையிலும் இருந்தார்கள். மாளிகையில் இருந்தவர்கள் அவரை வணங்கி அவருடன் நடந்தபடியே தோட்டத்து வாயிற்படிவரை வந்தார்கள். மரத்தின் அடியில் நின்று கொண்டு பேசிக் கொண்டிருந்த கிரீஷ், ராம், அதுல் முதலானோர் குருதேவரிடம் வந்து அவரை வணங்கினார்கள். குருதேவர் திடீரென்று கிரீஷைப் பார்த்து, ''ஆமாம் கிரீஷ், என்னை அவதார புருஷர் என்று ஊரெல்லாம் சொல்லிக் கொண்டிருக்கிறாயே. அப்படி என்ன அதிசயத்தை என்னிடம் கண்டுவிட்டாய்?'' என்றார். சட்டென்று கேட்கப்பட்ட இந்தக் கேள்வியால் சிறிதுகூட நிலை குலையாத கிரீஷ் குருதேவரின் திருமுன்னர் மண்டியிட்டுக் கைகள் இரண்டையும் கூப்பியபடி உணர்ச்சிப் பெருக்கால் குரல் நடுங்க, ''வியாசராலும் வால்மீகியாலும் கூடச் சொல்ல முடியாத உங்கள் பெருமையைப் பற்றி ஒன்றும் தெரியாத முட்டாளாகிய நான் என்ன சொல்வேன்?'' என்று கூறினார்.

மனமார்ந்த உணர்ச்சியோடு கூறப்பட்ட இந்த வார்த்தைகளைக் கேட்டதும் குருதேவர் மனம் உருகிப்போனவராய், ''நான் இன்னும் என்ன சொல்ல இருக்கிறது! நான் உங்கள் எல்லோரையும் ஆசிர்வதிக்கிறேன். எல்லோரும் ஞானத்தை அடையுங்கள்'' என்று கூறியபடியே பாவ சமாதியில் மூழ்கிவிட்டார். பக்தர்கள் இந்தப் புனிதமான வார்த்தைகளைக் கேட்டதும் ஆனந்தத்தால் பித்துப் பிடித்தவர்கள் போல் ஆனார்கள். குருதேவரைத் தொடக்கூடாது என்ற விதியையும் மறந்தார்கள். உணர்ச்சி மேலிட்டவர்களாய் அவர்முன் வீழ்ந்து வணங்கி அவரது பாதத் தூளியைத் தலையில் இட்டுக் கொண்டார்கள். ஒருவர்பின் ஒருவராக எல்லோரும் இப்படியே செய்தார்கள். பக்தர்களின் ஆழ்ந்த பக்தியைக் கண்டு தம்மை மறந்தவராய் ஒவ்வொருவரையும் குருதேவர் தொட்டு ஆசிர்வதித்தார். குருதேவரின் இந்த

ஆற்றல் மயமான தொடுதல் பக்தர்கள் மனத்தில் மகத்தான மாற்றத்தை ஏற்படுத்தியது. சிலர் சிரித்தார்கள், சிலர் அழுதார்கள்; சிலர் தியானம் செய்யத் தரையில் அமர்ந்தார்கள்; சிலர் தொலைவில் இருந்த பலரை குருதேவரை வணங்கக் கூவி அழைத்தார்கள்.* நரேந்திரரும் மற்ற இளம் சீடர்களும் அன்றைய முன்னிரவில் பக்திப் பாடல்களைப் பாடிக் கொண்டும், குருதேவருக்குச் சேவை செய்தபடியும் நெடுநேரம் விழித்திருந்ததால் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அந்த நேரத்தில் குருதேவரின் அறையைப் பெருக்கிக் கொண்டும் படுக்கையை வெயிலில் காய வைத்துக்கொண்டும் இருந்த சரத்தும், லாட்டுவும் மேல்மாடியில் இருந்தபடியே இந்தக் காட்சியைப் பார்த்தார்கள். தங்கள் வேலையில் கவனமாக இருந்ததால் அவர்கள் கீழே இறங்கி வரவில்லை.

குருதேவர் சிறிது சிறிதாக உலக நினைவைப் பெற்றார். தம் அறைக்குத் திரும்பினார். அமைதி அடைந்த பக்தர்கள் குருதேவர் அன்று இவர், அவர் என்று இல்லாமல் எல்லோருக்கும் அருள் பொழிந்திருப்பதை அறிந்தனர். குருதேவரின் தொடுதலால் ஏற்பட்ட அனுபவத்தைப் பற்றிக் கேட்டபோது சிலர் தாங்க முடியாத ஆனந்தம் தங்களுக்கு ஏற்பட்டதாகக் கூறினார்கள். மற்றவர்கள் முன்பு எப்போதையும்விடத் தங்கள் இஷ்டதெய்வத்தின் காட்சி மிகத் தெளிவாகத் தெரிந்ததாகச் சொன்னார்கள். சிலர் ஒளியைக் கண்டதாகக் கூறினார்கள். சிலர் ஒரு விசித்திரமான உணர்ச்சி உடல் முழுதும் பாய்ந்ததாகக் கூறினார்கள். எல்லோரும் வார்த்தைகளால் சொல்ல முடியாத பேரானந்தத்தைத் தாங்கள் அனுபவித்ததாகக் கூறினார்கள்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு குருதேவரின் உடம்பெங்கும் பற்றி எரிவது போன்ற எரிச்சல் உண்டாயிற்று. கங்கை நீரைக் கொண்டுவரச் சொல்லி மேலே தெளித்துக் கொண்டார். இந்த எரிச்சல் பாவம் நிறைந்தவர்களை அவர் தொட்டதால் ஏற்பட்டிருக்கலாம்.

இந்த நேரத்தில் நரேந்திரர் கடவுளைக் காண வேண்டும் என்னும் அடங்கா ஆவல்கொண்டவராக இருந்தார்.

---

*கேட்டதைக் கொடுக்கும் கற்பக மரம் போல் குருதேவர் பக்தர்களுக்கு அருள் புரிந்த இந்த நாளே ஆண்டுதோறும் ஜனவரி முதல் தேதி ஸ்ரீராமகிருஷ்ண மடங்களில் 'கல்ப தரு நாள்' என்று கொண்டாடப்பட்டு வருகிறது.

ஒருநாள் தியானம் செய்து கொண்டிருந்த போது அவர் மார்பில் ஒரு விசித்திரமான உணர்ச்சியை உணர்ந்தார். அது குண்டலினி சக்தியின் விழிப்பு என்று மகேந்திரர் கூறினார். அதற்கு முந்தினநாள் ஜனவரி மாதம் முதல் தேதி நரேந்திரர் குருதேவரிடம் சென்று, ''தங்கள் அருளால் எல்லோரும் ஏதேனும் ஒரு அனுபூதியைப் பெற்றுவிட்டார்கள். எனக்கும் தெய்வானுபூதி கிடைக்க அருள் புரியுங்கள். எல்லோரும் பெற்ற பிறகு நான் மட்டும் ஒன்றும் இல்லாமல் இருக்க வேண்டுமா?'' என்று கேட்டார். அதற்குக் குருதேவர், ''உன் குடும்பத்திற்குச் செய்ய வேண்டியதைச் செய்துவிட்டு என்னிடம் வா. ஆமாம், உனக்கு என்ன வேண்டும்?'' என்றார். அதைக் கேட்டு நரேந்திரர், ''நான் மூன்று நான்கு நாட்கள் ஒரேயடியாக சமாதியில் மூழ்கி இருக்க வேண்டும். சாப்பிடமட்டும் நினைவு திரும்ப வேண்டும். அப்படி ஒரு நிலையை அருளுங்கள்.'' என்று கேட்டார். அதற்குக் குருதேவர், ''நீ ஒரு முட்டாள். நீ கேட்ட நிலையைவிட உயர்ந்தநிலை ஒன்றிருக்கிறது. உன் குடும்பத்திற்கு வேண்டிய ஏற்பாடு செய்துவிட்டு வா. சமாதியைவிட மிக உயர்ந்த நிலையை நீ அடையலாம்'' என்றார்.

மறுநாள் காலையில் நரேந்திரர் தமது வீட்டுக்குச் சென்றார். வீட்டில் இருந்தவர்கள் தேர்வு நெருங்கிய பிறகும் படிக்காமல் அலைந்து கொண்டிருப்பது பற்றிக் அவரைக் கடிந்து கொண்டார்கள். பாட்டியின் வீட்டில் இருந்த தன் படிக்கும் அறைக்கு அவர் சென்றார். படிக்கப் புத்தகத்தை எடுத்தார். அவ்வளவுதான், படிப்பது என்பது மிகப் பயங்கரமான ஒரு காரியம் போன்று சொல்ல முடியாத பயம் அவரைப் பிடித்துக் கொண்டது. அவரால் படிக்கவே முடியவில்லை; என்றாலும் குடும்பத்தின் நலனுக்காகப் படிக்க சென்றார். படிக்காதே என்று அச்சுறுத்தும் இனம் தெரியாத பயங்கர நடுக்கம். படிக்க வேண்டுமா, வேண்டாமா என்னும் மனப் போராட்டத்தின் மத்தியில் தவித்தார். என்ன செய்ய வேண்டுமென்று புரியாதவராய் இதயமே வெடித்து விடும்படி அழுதார். அவர் வாழ்நாளில் இதற்கு முன் எப்போதும் அவர் அழுததில்லை. அதன் பிறகு என்ன நடந்தது? அவரே சொல்கிறார்:

''என் புத்தகம் முதலிய எல்லாவற்றையும் அங்கேயே விட்டுவிட்டு, காசிப்பூருக்குக் குருதேவரைத் தேடி வெறி பிடித்தவனைப் போல் ஓடி வந்தேன். வழியில் என்

செருப்பு பாதையிலேயே நழுவி எங்கேயோ விழுந்து விட்டது. வரும் வேகத்தில் வைக்கோல் போரில் மோதிக் கொண்டேன். வைக்கோல் என் உடம்பில் ஒட்டிக் கொண் டன. அதனோடு நான் இங்கு வந்து சேரும்வரை மிக வேகமாக ஓடினேன், ஓடினேன், கடைசிவரை அப்படி ஓடி வந்தேன்.''

அது ஜனவரி மாதம் நான்காம் தேதி. காலை மணி ஒன்பது. நிரஞ்ஜன், சசி, மகேந்திரர் முதலியோர் குரு தேவரின் அருகே அமர்ந்திருந்தனர். அப்போது குரு தேவரின் நோய் மிகவும் கடுமையாகி வலியின் மிகுதியால் அவர் துடித்துக் கொண்டிருந்தார். அப்போதும் சுற்றி இருந்தவர்களிடம் மிகவும் மெதுவான குரலில் நரேந்திரனைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். ''நரேந் திரன் இப்போது அடைந்துள்ள அற்புதமான நிலையைப் பாருங்கள். ஒருகாலத்தில் அவன் இறைவனின் பல வடிவங்களை ஏற்றுக் கொள்வதே இல்லை. இப் போது அந்தக் கடவுளை அடைய அவன் எவ்வளவு துடிக்கிறான் பாருங்கள்!'' என்றார். பிறகு அவர்களிடம் நரேந் திரன் தன் இலட்சியத்தைக் கூடிய விரைவிலேயே அடை வான் என்பதைக் குறிப்பால் கூறினார்.

குருதேவரிடம் ஓடிவந்து சரணடைந்த நரேந்திரர் அன்று இரவில் தியானம் செய்வதற்காகக் காசிப் பூரிலிருந்து தட்சிணேசுவரத்துக்குச் சென்றார். ஓரிரு சகோதரச் சீடர்களும் உடன் சென்றனர். அங்கிருந்து காசிப்பூர் திரும்பினர். குருதேவரின் அறிவுரைப்படி நரேன் பலவகையான ஆன்மிகச் சாதனைகளைப் பழகி ஆச்சரியப்படும் வகையில் எல்லாவற்றிலும் மிகச் சிறந்த வெற்றி கண்டார். குருதேவர் தமது தலைமைச் சீடனை எதிர்காலத்தில் அவருக்காகக் காத்திருந்த மகத்தான வேலைக்காகத் தயார் செய்தார். ஒருநாள் அவர் நரேனை அழைத்து அவருடன் சேர்ந்த மற்றச் சீடர்களை எல்லாம் காட்டி, ''நான் இவர்களையெல்லாம் உன் பொறுப்பில் விட்டுச் செல்கிறேன். அவர்கள் எப்போதும் ஆன்மிகச் சாதனைகளைப் பழகும்படியும் வீட்டிற்குப் போய்விடாமலும் பார்த்துக் கொள்'' என்று கூறினார். நரேனையும் மற்ற எல்லா இளைஞர்களையுமே குருதேவர் சந்நியாசிகளாக்கு வதற்காக மிக அமைதியாகப் பயிற்சி தந்து வந்தார். ஒருநாள் அவர்களிடம் தெருத் தெருவாகச் சென்று பிச்சை எடுத்து வரும்படிக் கூறினார். அவர்கள் எல்லோருமே மிகவும் பணக்கார வீட்டுப் பிள்ளைகள்; செல்வச் செழிப்

பில் வளர்ந்தவர்கள். என்றாலும் குருதேவரின் இந்தக் கட்டளையை நிறைவேற்ற மிகுந்த மகிழ்ச்சியோடு புறப் பட்டார்கள். பிச்சையெடுத்துக் கிடைத்த அரிசியையும் காய் கறிகளையும் சமைத்து குருதேவரிடம் கொண்டுவந்தார்கள். அதிலிருந்து சிறிது எடுத்துத் தம் வாயில் போட்டுக் கொண்ட குருதேவர், ''நல்ல காரியம் செய்தீர்கள். இந்த உணவு மிகவும் தூய்மையானது'' என்றார். இன்னும் சிறிது காலத்தில் இந்த இளைஞர்கள் அனைவரும் காவி உடை அணிந்தவர்களாய் வீடு வீடாகப் பிச்சை எடுத்து உணவு உண்டும் உலக மக்களுக்கு உயர்ந்த உண்மைகளை போதித்து நன்மை செய்யப் போகிறார்கள் என்பதை எண்ணி மகிழ்ந் தார்; அவருக்கு மிகுந்த திருப்தியும் ஏற்பட்டது.

சில நாட்களில் குருதேவரின் வலி பொறுக்க முடியாத தாக அதிகரித்தது. அந்த நேரத்திலும் புன்னகையோடு மெதுவான குரலில், ''மனமே! நோயும் உடம்பும் ஒன்றை ஒன்று கவனித்துக் கொள்ளட்டும். நீ எப்போதும் ஆனந் தத்தில் ஆழ்ந்திரு'' என்பார் அவர். இந்த நேரத்திலும் பக்தர்களிடம் அவர் கொண்ட அன்பு குறையவே இல்லை. ஒருநாள் அவர் மகேந்திரரிடம், ''இதோ பார், பொறுக்க முடியாத இந்த நோயின் துயரத்தை நான் உங்களுக் காகத்தான் மகிழ்ச்சியோடு பொறுத்துக் கொண்டு இருக் கிறேன். நீங்கள் எல்லோரும் 'இந்தக் கொடியச் சித்ர வதை வேண்டாம். உடம்பை விட்டுவிடுங்கள்' என்று சொல்வீர்களாகில் நான் மகிழ்ச்சியோடு இந்த உடம்பை விட்டுவிடுவேன்'' என்றார். அந்த அளவிற்கு அன்று இரவு நோயின் கடுமை இருந்தது. அவரால் இரவு முழுவதும் தூங்கவே முடியவில்லை.

பொழுது விடிகின்ற நேரத்தில் கிரீஷ், டாக்டர்களான உபேந்திரருடனும் கவிராஜ் நவகோபாலருடனும் வந்தார். அவர்கள் குருதேவரின் உடல்நிலையைக் கவனித்து மருந்து கள் கொடுத்தனர். குருதேவரின் உடல்நிலையும் கொஞ்சம் சுமாராகியது. தம் பக்கத்தில் இருந்த பக்தர்களிடம். ''இது உடம்பிற்கு வந்த நோய், உடம்பு என்று இருந் தால் நோய் என்பது நிச்சயமாக வரும். அது இயற்கை. இந்த உடம்பு சிறுசிறு அணுக்களால் ஆக்கப்பட்டிருப்பதை நான் காண்கிறேன்'' என்றார். பிறகு கிரீஷின் பக்கம் திரும்பி, ''நான் கடவுளின் பல்வேறு வடிவங்களைப் பார்க் கிறேன். அதில் இதுவும் (தாமும்) ஒன்றாக இருக்கிறது'' என்றார்.

மறுநாள் காலையில் உடல் இன்னும் சற்றுத் தேறியது. என்றாலும் சில நாட்களுக்குள் நோய் மறுபடியும் அதி கரித்தது. பல்வேறு மருத்துவர்களைக் கொண்டு பலவகை யான மருத்துவம் பார்த்தும் பயனில்லை. இறுதியில் தூய அன்னை சாரதாதேவி தெய்விக சக்தியின் மூலம் குருதேவரின் உயிரைக்காக்க முடிவு செய்தார். கேட்போர்க்கெல்லாம் வரம் அருளும் தாரகேசுவரச் சிவபெருமான் கோயிலுக்குச் சென்று தம் கணவரைக் காப்பாற்ற ஒரு வழி கிடைக் கும்வரை உணவையே தொடுவதில்லை, என்று விரதம் பூண்டு சன்னிதியில் பட்டினியாக வீழ்ந்து கிடந்தார். முதல் நாள் கழிந்தது. இரண்டாம் நாள் பகலும் கழிந்தது. இரவு வந்தது. இரவில் அதிசயமான அனுபவம் ஒன்று அவருக்கு ஏற்பட்டது. ஏராளமான மண் பானைகளைச் சேர்த்து யாரோ அடித்து நொறுக்குவதைப் போன்று ஓசை ஒன்று கேட்டது. இது அவரிடம் மிக ஆழ்ந்த துறவு மனப் பான்மையை ஏற்படுத்தியது. 'இந்த உலகத்தில் உறவு என்பது என்ன? அவையெல்லாம் இப்பானைகளைப் போல உடைந்து போகும் வெறும் கனவுகள்' என்ற எண்ணம் அவரிடம் நிலைத்தது. காசிப்பூர் திரும் பினார். குருதேவர் அவரைப் பார்த்ததும், ''நல்லது, நீ போய் வந்த பயணத்தின் முடிவு என்ன?'' என்று கேட் டார். அன்னையார் நடந்ததைக் கூறினார். குருதேவர் புன்சிரிப்புடன் அதைக் கேட்டுக் கொண்டார்.

ஒருநாள் மூத்த கோபால் சில காவி உடைகளையும் உருத்திராட்ச மாலைகளையும் மூட்டையாகக் கட்டி குரு தேவரிடம் கொண்டு வந்தார். அவைகளைச் சிறந்த சந் நியாசிகளுக்குத் தானம் செய்யப் போவதாகக் கூறினார். குருதேவர் தம்முன் இருந்த இளம் சீடர்களைக் காட்டி, ''இவர்களை விடச் சிறந்த சந்நியாசிகள் யாரும் இருக்க மாட்டார்கள். இவர்களுக்கே அவைகளைக் கொடு'' என்றார். கோபால் மூட்டையைக் கொண்டு வந்து குரு தேவர் முன்வைத்தார். குருதேவர் தம் சீடர்களுக்கு அவற்றைக் கொடுத்தார். ஒரு காவித்துணியும் ஓர் உருத் திராட்ச மாலையும் எஞ்சின. அதை கிரீஷுக்காக எடுத்து வைக்கும்படிக் குருதேவர் கூறினார். ''துறவில் இந்த இளை ஞர்கள் யாருக்கும் சளைத்தவர் அல்ல கிரீஷ்'' என்றார். ஒருநாள் மாலை குருதேவர் சந்நியாசத்திற்கான சடங் கொன்றைச் செய்யச் சொன்னார். பிறகு அவர்களிடம் ஊருக்குள் சென்று பிச்சையெடுத்து வரச் சொன்னார்.

இவ்வாறு குருதேவரே தம் சீடர்களுக்குச் சந்நியாசம் வழங்கி ஸ்ரீராமகிருஷ்ண இயக்கத்தை ஆரம்பித்துவைத்தார்.

நரேந்திரர் உண்மையை அடைவதில் அளவற்ற ஆவல் கொண்டிருந்ததையும் அதற்காக அல்லும் பகலும் அவர் எவ்வாறு உழைத்து வந்தார் என்பதையும் முன்பு கண்டோம். ஒருநாள் மாலை அவர் தியானம் செய்து கொண்டிருந்தபோது திடீரென்று எதிர்பாராத நிலையில் அவருக்கு அந்நிலை கிடைத்தது. முதலில் அவருடைய தலைக் குப் பின்புறம் ஒளி ஒன்று தோன்றியது. பின்னர் சிறிது சிறிதாகத் தன் நினைவையும் உலக நினைவை யும் இழந்து அவர் ஆழ்ந்த சமாதியில் மூழ்கிவிட்டார். புலன்களை- மனத்தை உலகங்களை எல்லாவற்றையுமே கடந்து உணர்வு மயமான நிர்விகல்ப சமாதியில் அவர் மூழ்கி விட்டார். நெடுநேரம் கழித்துச் சமாதியிலிருந்து திரும் பியதும் அவருக்குத் தலை இருக்கும் உணர்ச்சி மட்டுமே தோன்றியது. உடல் இருப்பது தெரியவே இல்லை. எனவே, 'என் உடம்பு எங்கே? உடம்பு எங்கே?' என்று அலறினார். அவருடைய கதறலைக் கேட்டு, விரைந்து வந்த மூத்த கோபால் அவர் உடம்பைக் காட்டி, ''இதோ இருக்கிறது நரேன். இதோ இருக்கிறது'' என்றார். நரேனுக்குக் கோபாலின் வார்த்தைகள் காதில் விழுந்ததாகத் தெரிய வில்லை. மேலும் மேலும் முன்புபோலவே கூச்சலிட்டார். பயந்துபோன கோபால் மாடிக்கு ஓடி, குருதேவரிடம் இந்தச் செய்தியைக் கூறினார். கோபால் சொல்வதை அமைதியாகக் கேட்ட குருதேவர், ''அதே நிலையில் அவன் இன்னும் கொஞ்ச நேரம் இருக்கட்டும். இந்த நிலைக்காக அவன் நெடுங்காலம் என்னை மிகவும் தொந்தரவு செய் தான்'' என்றார்.

நெடுநேரத்திற்குப் பிறகு நரேந்திரருக்கு உலக நினைவு திரும்பியது. கண்விழித்த அவர் தம்மைச் சுற்றிலும் சகோ தரச் சீடர்கள் கவலையோடு அமர்ந்திருப்பதைக் கண்டார். இத்தனை நாட்கள் அவர் மனத்தில் வீசிக் கொண்டிருந்த புயல் முழுதும் நீங்கி இனிமை மயமான ஆழ்ந்த அமைதி தவழ்ந்தது. பிறகு குருதேவரிடம் சென்றார். குருதேவர் மகிழ்ச்சியோடு அவரைப் பார்த்து, ''சமாதி என்றால் என்ன என்பதை அன்னை காளி இப்போது உனக்குக் காட்டி விட்டாள். ஆனால் இந்த சமாதி அனுபவம் தற்காலிக மாக பூட்டி வைக்கப் பட்டிருக்கிறது. அதனுடைய சாவி என்னிடம்தான் இருக்கும். நீ எப்போது அன்னையின்

பணிகளைச் செய்து முடிக்கிறாயோ அப்பொழுதுதான் இந் தப் புதையல் உனக்கு மறுபடியும் கிடைக்கும்'' என்றார்.

ஏப்ரல், மே, ஜூன், ஜூலை மாதங்கள் கழிந்தன. ஸ்ரீராமகிருஷ்ணரின் உடல்நிலை மிகவும் மோசமாகியது. ஒருநாள் குருதேவர் நரேந்திரருக்குத் தம்து இஷ்ட தெய்வ மாகிய ராமநாமத்தில் தீட்சை தந்தார். நரேந்திரர் பரவ சத்தில் தம்மை மறந்து, 'ராமா, ராமா' என்று கூவிய படியே அந்த மாளிகையைச் சுற்றிச் சுற்றி வந்தார். அவருடைய முகத்தையும் உயர்ந்த பரவச நிலையையும் கண்டவர்கள் அவரது அருகில் செல்வதற்கே அஞ்சினார்கள். ராமா என்று கூறியவாறே மணிக் கணக்காகச் சுற்றும் அவருடைய இந்த நிலையைக் கண்டு அஞ்சிய மற்றவர்கள் குரு தேவரிடம் சென்று செய்தியைக் கூறினார்கள். குருதேவர், ''அவன் அந்த நிலையிலேயே இருக்கட்டும். கொஞ்சம் கொஞ்சமாகச் சரியாகி விடுவான்'' என்றார். ஆனால் பல மணி நேரங்கள் அதே நிலையில் நரேந்திரர் இருந்தார். பிறகு படிப்படியாகச் சுயநிலையை அடைந்தார்.

குருதேவர் காசிப்பூரில் இருந்தபோது நாகமகாசயர் சிலமுறை அங்கு வந்து குருதேவரைத் தரிசித்தார். குரு தேவரிடம் அளவற்ற அன்பு கொண்ட அவரால் குருதேவர் படும் துன்பத்தைப் பார்க்கவே முடியவில்லை. அதனால் அவர் அடிக்கடி வருவதையே விட்டுவிட்டார். ஒருசமயம் மகாசயர் வந்ததும் குருதேவர் அவரைத் தம் கட்டிலுக்கு அருகே அழைத்தார். ''இதோ பார், துர்காசரண், இந்த நோயைத் தீர்க்கத் தங்களால் முடியாது என்று டாக்டர்கள் கூறிவிட்டார்கள். நீ ஏதாவது செய்ய முடியுமா? உன்னால் இந்த நோயைத் தீர்க்க முடியுமா?'' என்று கேட்டார். மகாசயர் சிறிது நேரம் ஆழ்ந்து சிந்தித்தார். பிறகு குருதேவரின் நோயைத் தம்முடைய யோக சக்தியால் தமது உடம்பிற்கு மாற்றிக் கொள்ளத் தீர்மானித்தவராய், குருதேவரிடம் பணிவான குரலில், ''உங்கள் நோயை எப்படித் தீர்ப்பது என்பது எனக்குத் தெரியும். தங்களுடைய கருணையினால் அதை இப்போதே நான் செய்து முடிக்கிறேன்'' என்று சொல்லி விட்டு மெல்ல அவரை நோக்கிச் சென்றார். ஸ்ரீராமகிருஷ்ணர் மகாசயரின் எண்ணத்தைப் புரிந்து கொண்டார். தம்மை நெருங்கிய மகாசயரைப் பிடித்து அப்பால் தள்ளிவிட்டு, ''உன்னால் முடியும். எனக்குத் தெரியும். உன்னால் இந்த நோயைத் தீர்க்க முடியும்'' என்றார்.

நாட்கள் மெல்லமெல்ல நகர்ந்து கொண்டே சென்றன. ஒரு நாள் குருதேவர் யோகினை அழைத்துப் பஞ்சாங்கம் கொண்டு வரச் சொன்னார். ஆகஸ்டு மாதம் ஒன்பதாம் தேதியிலிருந்து வரிசையாக நாட்களையும், நட்சத்திரங்களையும் அதன் பலன்களையும் படித்துக் கொண்டே போகும்படிக் கூறினார். யோகின், ஆகஸ்டு மாதம் முப்பத்து ஒன்றும் தேதிவரையில் படித்ததும் மேலும் படிக்க வேண்டாமென்று சைகை காட்டினார்.

இந்த நிகழ்ச்சி நடந்து நாலைந்து நாட்கள் கழிந்தன. ஒருநாள் குருதேவர் நரேந்திரரைத் தம் அருகே அழைத்தார். அப்போது அறையில் யாரும் இல்லை. அவர்கள் இருவர் மட்டுமே இருந்தனர். குருதேவர் நரேந்திரரைத் தம் எதிரே உட்காரச் சொல்லி அவரை உற்றுப் பார்த்தபடியே ஆழ்ந்த சமாதியில் மூழ்கிவிட்டார். சிறிது நேரத்திற்குள் நரேந்திரர் தம் உடம்பில் மின்சாரம் போன்று ஒரு சக்தி பாய்ந்து செல்வதை உணர்ந்தார். சிறிது சிறிதாக அவரும் உலக நினைவை இழந்தார். தாம் எவ்வளவு நேரம் இப்படிச் சமாதியில் மூழ்கியிருந்தோம் என்பது நரேந்திரருக்குத் தெரியவில்லை. உணர்வு திரும்பிக் கண்களைத் திறந்து பார்த்தபோது ஸ்ரீராமகிருஷ்ணர் அழுது கொண்டிருப்பதைக் கண்டார். நரேந்திரர் காரணம் கேட்டபோது, ''என்னிடமிருந்த எல்லாவற்றையும் இன்று உனக்குக் கொடுத்துவிட்டு நான் பக்கிரியாகிவிட்டேன். இந்த ஆற்றல்கள் மூலம் நீ உலகிற்கு மிகுந்த நன்மையைச் செய்வாய். அதன் பிறகுதான் நீ வந்த இடத்திற்குத் திரும்புவாய்'' என்று குருதேவர் கூறினார். இவ்வாறு ஸ்ரீராமகிருஷ்ணர் தம்மிடமிருந்த ஆற்றலையெல்லாம் நரேந்திரரிடம் செலுத்தி, இருவரும் ஒரே ஆத்மாவாக இணைந்தனர். இந்த இணைப்பின் காரணமாக உலகம் பெற்ற நன்மைகளை நிகழ்கால வரலாறு சொல்லிக் கொண்டிருக்கிறது; எதிர்கால வரலாறு இன்னும் சொல்ல இருக்கிறது.

இரண்டு நாட்கள் கழிந்தன. தம்மை அவதாரம் என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்லிக் கொள்வதைச் சோதனைச் செய்து பார்க்கவேண்டும் என்னும் எண்ணம் நரேந்திரருக்குத் தோன்றியது. அன்று மிகக் கடுமையான வலியால் குருதேவர் துடித்துக் கொண்டிருந்தார். அவருடைய நிலை எல்லோருக்கும் வேதனையை ஊட்டியது 'உடம்பின் நோயால் இப்படித் துடிக்கும் இந்த நிலையிலும் அவர் தம்மை அவதாரபுருஷர் என்று கூறுவாரானால்

அவர் உண்மையில் அவதார புருஷர் என்பதை நம்பு வேன்' என்று நினைத்தார். நோயால் துடித்தபடி படுக்கை யில் படுத்திருந்த குருதேவர் அந்த விநாடியே தம் ஆற்றல் முழுவதையும் திரட்டி எழுந்து உட்கார்ந்து மிகத் தெளிவான குரலில், ''நரேன், முன்பு யார் ராம ராகவும் கிருஷ்ணராகவும் வந்தாரோ அவரே இப்போது ராமகிருஷ்ணராக இந்த உடம்பிற்குள் இருக்கிறார்: உன் வேதாந்தத்தின் கருத்துப்படி அல்ல'' என்றார். குரு தேவரின் தெய்விகத் தன்மையில் சந்தேகப்பட்டதற்காகவும் எவ்வளவோ தெய்விகக் காட்சிகளையும் ஆற்றலையும் அவரிடம் கண்ட பிறகும் தனக்கு இன்னும் சந்தேகம் நீங்காததற்காகவும் நரேந்திரர் வெட்கமும் அவமானமும் அடைந்தார்.

ஆகஸ்டு மாதம் பதினைந்தாம்நாள். எந்த நாள் வரக் கூடாதென்று பக்தர்கள் வேண்டினார்களோ, அந்த நாள்- பக்தர்களின் மனத்தில் ஆற்ற முடியாத துன்பத்தை ஏற்றி வைத்த நாள் வந்தது. அன்று ஞாயிற்றுக்கிழமை. குரு தேவரின் உடல் நோய் இதுவரை இல்லாத அளவு மிகவும் பயங்கரமாக இருந்தது. படுக்கையில் இப்படியும் அப்படி யும் புரண்ட அவரது நாடி முறையில்லாமல் துடிக்க ஆரம் பித்தது. யாருடைய நாடி பார்த்துச் சொல்லும் திறமை யைப் பற்றிக் குருதேவர் பெரிதும் புகழ்வாரோ அந்த பக்தர் அதுல் குருதேவரின் நாடியைப் பார்த்து அவரது உடல் நிலை மோசமாகி விட்டதை அறிந்தார். சுற்றியிருந்தவர் களிடம் குருதேவர் இனிப் பிழைப்பது அரிது என்று கூறி மிகவும் எச்சரிக்கையோடு இருக்குமாறு கூறினார். சூரியன் மறைவதற்குச் சிறிது நேரம் இருந்தது. குருதேவரால் சீராக மூச்சுவிட முடியவில்லை. மூச்சு இழுக்க ஆரம் பித்தது. பக்தர்கள் தேம்பித் தேம்பி அழத் துவங்கினர். தங்களுடைய வாழ்வில் இதுவரை எந்த ஒளி இன்பத்தை நிறைத்து வந்ததோ அது அணைந்து விடப் போகிறது. என்பதை உணர்ந்த எல்லோரும் குருதேவரைச் சூழ்ந்து கொண்டார்கள். சிறிது நேரத்திற்குப் பிறகு குருதேவர் தமக்குப் பசிப்பதாகக் கூறினார். சிறிது நீராகாரம் கொடுக்கப் பட்டது. அவரால் விழுங்க முடியவில்லை. மிகவும் துன்பப்பட்டுச் சிறிதுமட்டுமே குடித்தார். அவருடைய வாயைக் கழுவி மெல்ல அவரைப் படுக்க வைத்தனர். இரண்டு கால்களையும் நீட்டித் தலையணையின்மேல் வைத்தனர். இரண்டு பேர் விசிறியால் விசிறினர். அப்படியே படுத்துக் கொண்

டிருந்தவர் சிறிது நேரத்திற்குள் திடீரென்று சமாதியில் மூழ்கிவிட்டார். உடம்பு அசைவற்றுச் சிலைபோல் ஆகி விட்டது. மூச்சு நின்றுவிட்டது. இத்தனை நாட்களாக இரவும் பகலும் உடன் இருந்து சேவை செய்து வந்த சசிக்கு இந்தச் சமாதிநிலை வழக்கமாக அவருக்கு வரும் சமாதிபோல் தோன்றவில்லை. ஏதோ பெரிய மாறுதல் இருப்பதுபோல் தோன்றவே அழ ஆரம்பித்துவிட்டார். கல்கத்தாவிலிருந்து கிரீஷையும் ராமசந்திரரையும் அழைத்து வர ஆட்கள் விரைந்தனர்.

நடு இரவுக்குப் பிறகு குருதேவருக்கு நினைவு திரும்பியது. மிகவும் பசியாக இருப்பதாகக் கூறினர். மற்றவர்களின் உதவியோடு எழுந்து உட்கார்ந்தார். ஒரு கோப்பை நிறையக் கஞ்சி கொடுக்கப்பட்டது. எல்லோரும் ஆச்சரியப் படும்படிக் கஞ்சி முழுவதையும் மிக எளிதாக குடித்து முடித்தார் குருதேவர். இவ்வாறு அவர் கஞ்சி சாப்பிட்டு எத்தனையோ நாட்களாகி விட்டன. சாப்பிட்டு முடிந்ததும் உடம்பு தெம்பாக இருப்பதாகச் சொன்னர். குருதேவர் தூங்குவது நல்லது என்று நரேந்திரர் கூறினர். நெடுநாட்களாகத் தொண்டைப் புண்ணின் காரணமாக அருகில் இருப்பவரும் கேட்க முடியாதபடி மிக மெதுவாகப் பேசுபவர், உரத்த குரலில், ''அம்மா, காளி!'' என்று மூன்று முறை உரக்க அழைத்தார். பிறகு மெல்லப் படுத்துக் கொண்டார். குருதேவர் வசதியாகப் படுத்துக் கொண்டதைக் கண்டதும் நரேந்திரர் கீழே ஓய்வெடுப்பதற்காகச் சென்றார்.

இரவு ஒருமணி ஆயிற்று. மேலும் இரண்டு நிமிடங்கள் கழிந்தன. கட்டிலில் படுத்துக் கொண்டிருந்த குருதேவர் உடம்பில் திடீரென்று பரவச உணர்ச்சி பாய்ந்தது. மயிர்கள் சிலிர்த்து நின்றன. கண்கள் மூக்கின் நுனியின்மீது நிலைக்குத்தி நின்றன. உதடுகளில் புன்னகை அரும்பியது. குருதேவர் சமாதியில் மூழ்கி விட்டார். இது அவர் இத்தனை நாட்கள் இத்தனை ஆண்டுகள் மூழ்கி எழுந்திருந்த சாதாரண சமாதி அல்ல மகா சமாதி. இந்தச் சமாதிக்குப் பிறகு அவரது உயிர் உடலுக்குள் திரும்பவே இல்லை. அது 1886-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பதினறும் தேதி. தம் பக்தர்களும் சீடர்களும் துன்பத்தில் மூழ்க இந்த உலகத்தைவிட்டுச் சென்று விட்டார் அவர். பத்தொன்பதாம் நூற்றாண்டு தோற்றுவித்த மகத்தான மனிதர் எங்கிருந்து வந்தாரோ அந்த இடத்திற்குச்

சென்று விட்டார். வீட்டிற்கு வெளியே வானத்தில் ஒளிமயமாக நிலவு காய்ந்து கொண்டிருந்தது. பக்தர்களின் மனமோ வேதனையாலும் துயரத்தாலும் இருண்டிருந்தது. படுக்கையில் இருந்த அமைதி நிறைந்த அவர் முகத்தைப் பார்க்கப் பார்க்கத் தாங்கள் எவ்வளவு அநாதைகளாக - ஆதரவற்றவர்களாக ஆகிவிட்டோம் என்பதை பக்தர்கள் உணர்ந்தார்கள். இனி யார் அவர்களுடைய துன்பங்களையும் துயரங்களையும் சந்தேகங்களையும் தீர்ப்பார்கள்?

சிறிது நேரத்திற்கெல்லாம் கிரீஷும் ராமும் வந்து சேர்ந்தனர். இந்தச் சோகச் செய்தி கல்கத்தா முழுவதும் பரவியது. மக்கள் எல்லாத் திசைகளில் இருந்தும் கூட்டம் கூட்டமாகக் குருதேவரின் முகத்தைக் கடைசியாகப் பார்க்க ஒருவரை ஒருவர் நெருக்கித் தள்ளியபடியே காசிப்பூர் மாளிகைக்குள் நுழைந்தனர். காலை எட்டு மணிக்குக் கர்னல் விசுவநாத் வந்தார். யோக முறைகளை நன்றாகப் பயின்ற அவர் குருதேவரின் உடல் விறைப்பாக இருப்பதைப் பார்த்து, 'உடம்பில் சிறிது சூடு இருக்கிறது' என்று கூறி முதுகுத் தண்டை நன்றாகத் தேய்த்துவிட்டார். இன்னும் எல்லாம் முடிந்துவிடவில்லை, குருதேவர் சமாதியில்தான் இருக்கிறார் என்றும் இறுதிச் சடங்கை உடனடியாக ஆரம்பிக்க வேண்டாம் என்றும் கூறினார்.

நண்பகலில் டாக்டர் மகேந்திரலால் சர்க்கார் வந்தார். குருதேவரின் உடலை மிகவும் ஆழ்ந்து சோதனை செய்து பார்த்து அரைமணி நேரத்திற்கு முன்புதான் உயிர் பிரிந்ததாகக் கூறினார். அவருடைய கருத்து முடிவானதாக ஒப்புக் கொள்ளப்பட்டது. இறுதிச் சடங்கிற்கான காரியங்கள் துவங்கின.

மாலை ஐந்து மணி. குருதேவரின் புனிதமான பூத உடல் மாடியிலிருந்து கீழே கொண்டுவரப்பட்டுக் கட்டிலின் மேல் வைக்கப்பட்டது. காவி உடை போர்த்தப்பட்டு, சந்தனத்தாலும் மலராலும் உடல் அலங்கரிக்கப்பட்டது. ஆறுமணிக்குக் குருதேவரின் உடல் காசிப்பூர் மயானத்திற்கு பக்திப் பாடல்கள் பாடியபடி எடுத்துச் செல்லப்பட்டது. ஊர்வலத்தை வழி முழுவதும் நின்று பார்த்த மக்கள் கண்ணீர்விட்டு அழுதனர். மயானத்தை அடைந்ததும் அங்கு அடுக்கி வைக்கப்பட்டிருந்த சிதை மீது உடல் வைக்கப்பட்டது திரைலோக்யநாத் சன்யால் உள்ளத்தை உருக்கும் பாடல்கள் சிலவற்றைப் பாடினார். சிதைக்கு

நெருப்பு மூட்டப்பட்டது. இரண்டு மணி நேரத்திற்குள் எல்லாம் முடிந்துவிட்டது.

பக்தர்களின் மனத்தில் ஓர் ஆழ்ந்த அமைதி குடி கொண்டது. அவர்களின் துயருற்ற உள்ளங்கள் மென்மை அடைந்தன; 'குருதேவர் மறைந்துவிடவில்லை. தங்கள் ஆத்மா விலேயே ஒன்றி விட்டார்' என்ற ஆழ்ந்த நம்பிக்கை தோன்றி யது. பூதவுடல் மறைந்த பிறகும் அழியாமல் அவர்களின் உள்ளத்தில் இருக்கிறார். குருதேவரின் புனித எலும்புகளையும் சாம்பலையும் ஒரு பித்தளைப் பாத்திரத்தில் சேர்த்து எடுத் துக்கொண்டு அவரைப் பற்றிய ஆயிரம் இனிய நினைவுகள் பொங்கும் காசிப்பூர் மாளிகைக்கு, 'பகவான் ஸ்ரீராமகிருஷ் ணருக்கு ஜெய்!' என்று கூறியபடியே வந்தனர்.

இப்போது அவர்களுக்கு எழுந்த பெரும் பிரச்சினை குருதேவரின் அஸ்தியை எங்கு வைத்து வழிபடுவது என்பது தான். பல கருத்துக்களுக்குப் பிறகு இல்லற பக்தர்கள் கல்கத்தாவிற்கு வெளியே காங்குர்காச்சி என்னுமிடத்தில் ராமசந்திரருக்குச் சொந்தமான தோட்டத்தில் குருதேவரின் அஸ்தியை வைத்துக் கோயில் எழுப்ப முடிவு செய்தனர். குருதேவர் ஒருமுறை இந்தத் தோட்டத்திற்கு வருகை தந்திருந்தது அவர்களின் இந்த முடிவிற்கு வர ஒரு காரணமாக அமைந்தது. ஆனால் குருதேவரின் சந்நியாசச் சீடர்கள் இதை விரும்பவில்லை. அவர்கள் அதில் பெரும்பகுதியைப் பாத்திரத்தி லிருந்து பலராம் வீட்டிற்கு அனுப்பி அங்கே முறைப்படி வழி பாடு செய்துவரும்படிச் செய்தனர். இவர்களின் நோக்கம் பிற் காலத்தில் கங்கைக்கரையில் நிலம் வாங்கி அங்கே குரு தேவருக்கான கோயிலை எழுப்ப வேண்டுமென்பதாகும். மீதமுள்ள அஸ்தி ஸ்ரீகிருஷ்ணர் பிறந்த புனிதநாளன்று உரிய சடங்குகளோடு முறைப்படி காங்குர்காச்சிக்கு எடுத் துச் செல்லப்பட்டது. சசி இந்தச் அஸ்திக் கலசத்தைத் தம் தலையில் சுமந்து சென்றார். எல்லாச் சந்நியாசச் சீடர் களும் பக்தர்களும் உடன் சென்றனர். காங்குர் காச்சியில் அதனை வைத்து கோயில்க் கட்டி முறைப்படி நாள் தோறும் வழிபாடுகள் நடைபெற ராம் ஏற்பாடு செய்தார்.

தூய அன்னை சாரதாதேவி இன்னும் காசிப்பூர்த் தோட்டத்திலேயே இருந்தார். வாடகை வீடான அதில் இன்னும் சில நாட்களே தங்க முடியும். குருதேவர் இருக்கும் போது சில சீடர்கள் நிலையாக அவரோடு காசிப்பூர் மாளி கையிலேயே தங்கிவிட்டனர். மற்றவர்கள் தினமும் வீட்டி லிருந்து வந்து கொண்டிருந்தார்கள். குருதேவருக்குப் பிறகு

வாடகை கொடுக்க முடியாத நிலையில் அந்தச் சில சீடர்களுக்கு எங்குச் செல்வது என்று புரியவில்லை. குருதேவருக்குப் பிறகு இல்லற பக்தர்கள் எல்லோருமே அவருடைய சீடர்களுக்காகப் பணம் செலவு செய்யத் தயாராக இல்லை. சிலர், எல்லா இளைஞர்களிடமும், அவர்கள் தங்கள் வீடுகளுக்குச் சென்று படிப்பைத் தொடர்ந்து நல்ல பக்தர்களாக வாழுமாறு அறிவுரை கூறினர். ஆனால் துறவின் உருவமாக வாழ்ந்த குருதேவரிடம் பயிற்சி பெற்ற அந்த இளஞ்சீடர்களின் மனம் மீண்டும் உலக வாழ்க்கையை நாடவில்லை. அவ்வேளையில் குருதேவரின் பக்தரான சுரேந்திரநாத் மித்ரா அவர்களது துணைக்கு வந்தார்.

அவரது உதவியால் வரநகர் என்னுமிடத்தில் பாழடைந்த வீடு ஒன்று வாடகைக்கு அமர்த்தப்பட்டது. அதில் தங்கி, குருதேவரின் அருட்துணை ஒன்றையே பெருந்துணையாகக் கொண்டு அவ்விளஞ் சீடர்கள் பெருந் தவம் இயற்றினர்.* அதுவே ஸ்ரீராமகிருஷ்ண இயக்கத்தின் முதல் மடமாகியது. அதுவே இன்று வானளாவி வளர்ந்து பாரெங்கும் தனது பசும் கிளைகளைப் பரப்பி, ஆன்மிக தாகமுற்றோர்க்கும், வாழ்வெனும் தீயில் வெந்துழல்பவர்களுக்கும் அருள் நிழலைப் பரப்பிக் கொண்டிருக்கிறது.

**⁑ ஓம் தத் ஸத் ! ⁑**

---

*இப்பகுதி விரிவாக 'ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுத மொழிகள்' என்னும் நூலில் கொடுக்கப்பட்டுள்ளது.

## அஞ்சலி

ஜனனீம் சாரதாம் தேவீம்
ராமக்ருஷ்ணம் ஜதத் குரும் ।
பாத–பத்மே தயோ: ச்ரித்வா
ப்ரணமாமி முஹுர்முஹு: ॥

தாயே, சாரதா தேவீ! ஜகத்குருவே, ஸ்ரீராமகிருஷ்ண! உங்கள் பாதத் தாமரைகளைச் சரணடைந்து, மீண்டும் மீண்டும் வணங்குகிறேன்.

# சொல்லடைவு

## ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்

(மூன்று பகுதிகள்)

அவதார புருஷர் ஒருவரின் வாய்மொழிகளை அவர் வாழ்ந்த நாட்களிலேயே குறித்து வைத்துப் பின்னர் பக்தர்களுக்கு அங்ஙனமே அதனை நூல் வடிவில் அவற்றை வழங்கியிருப்பது ஆன்மிக வரலாற்றில் இதுவே முதன்முறையாகும்.

இந்நாட்டார்க்கு, இச்சமயத்தார்க்கு, இம் மொழி பேசும் மக்கட்கு என்றில்லாமல் மனித இனம் முழுமைக்கும் ஏற்றதாக விளங்கும் பெருமை ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்களுக்கு உண்டு.

நடமாடும் கோயிலாக இம்மண்ணுலகில் வாழ்ந்த ஸ்ரீராமகிருஷ்ண தேவரின் அறிவுரைகள் அடங்கிய ஆன்மிகப்பேழை தான் ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுத மொழிகள்.

அனைவரும் படிக்க வேண்டிய அருமையான நூல்.

தற்போது மூன்று பகுதிகளாக வெளிவந்துள்ளது!

ஒவ்வொரு பகுதியிலும் சுமார் 650 பக்கங்கள்!

டெம்மி சைஸ்! அழகிய படங்கள்!

**ஸ்ரீராமகிருஷ்ண மடம்**

மயிலாப்பூர் :: சென்னை-600 004.

ஏழை, பணக்காரர்; பண்டிதர், பாமரர் அனைவரையும் கடைத்தேற்றுவதற்காகவே ஸ்ரீராமகிருஷ்ணர் தோன்றியுள்ளார். சாதக மான காற்று வீசுகிறது! வாழ்வெனும் பாய்மரத்தின் பாய்களை விரித்துக் கொள் ளுங்கள். ஸ்ரீராமகிருஷ்ணரின் தாமரைப் பாதங்களைத் தஞ்சமடையுங்கள். எதற்கும் அஞ்ச வேண்டாம்.

—தூய அன்னை ஸ்ரீசாரதா தேவியார்

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் இறைவனின் திருவவதாரம் என்பதில் எனக்கு எள்ளள வும் சந்தேகமில்லை. அவரது வாழ்வைப் படிக்காமல் வேத வேதாந்தங்களையும் புராணங்களையும் ஒருவரால் புரிந்து கொள்ள முடியாது; ஏனெனில் அவரது வாழ்வே இவற்றுக்கெல்லாம் விளக்கமாக அமைந்துள்ளது.

—சுவாமி விவேகானந்தர்

